உ

கணபதி துணை.

அதிவீரராம பாண்டியர் இயற்றிய

# கூர்ம புராண மூலம்

## உத்தர காண்டம்



இஃது

பல பிரதிகளைக் கொண்டு பரிசோதித்துப் பதித்தவர்


பண்டித வித்துவான் திரு. இராம. கோவிந்தசாமி பிள்ளை,

முன்னாள் தமிழ்ப்பேராசிரியர், சரசுவதிமால் நூல் நிலையம்.





பதிப்பித்தவர் :

ஷை நூல்நிலையக் கமிட்டியினருக்காக கௌரவ காரியதரிசி

உயர்திரு. சே. கோபாலன் பி. ஏ. பி எல். அவர்கள்.



பதிப்பகம்

வெற்றிவேல் அச்சகம், தஞ்சாவூர்.



சுபகிருது,

1963.

சகம் 1885.

விலை ரூ




# கூர்மபுராணம் உத்தரகாண்டம்



## உள்ளுறை





உ
கணபதி துணை

# கூர்ம புராணம்

# உத்தரகாண்ட அத்தியாய அட்டவணை.

ஆக கூடுதல் 988

உத்தரகாண்ட முற்றிற்று.

---

பாயிர முட்பட காண்டம் 2க்கு அத்தியாயம் 97க்கு திருவிருத்தம் 3717

கூர்மபுராணம் முற்றிற்று.

# முகவுரை.

"வேதம் ஓதும் விரிசடை யண்ணலார்
பூதம் பாடநின்று ஆடும் புனிதனூர்
ஏதந் தீர்க்கும் இடைமரு தாவென்று
பாதம் ஏத்தப் பறையும்நம் பாவமே"

திருநாவுக்கரசர்.

**கூர்மபுராணம் உத்தரகாண்டம்:-** இஃது வடமொழியில்உள்ள கூர்மபுராண மொழி பெயர்ப்பாகும். இருபத்தெட்டாவது வியாசமாமுனிவரால் இயற்றப்பட்ட புராணங்கள் பதினெட்டாகும். இப்பதினெட்டனுள் சைவபுராணங்கள் பத்தாகும். அப்பத்துப் புராணங்களுள் ஒன்றாகிய கூர்மபுராணத்தை வடமொழியினின்றும் தமிழில் மொழி பெயர்த்தவர் கொற்கையை யாண்ட அதிவீரராமபாண்டியனூர் ஆவர். இதனைப்பற்றிப் பூருவகாண்ட முகவுரையில் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றது.

இந்த உத்தரகாண்டமாகிய பிற்பகுதி மூலமும் அரும்பத உரையும் செய்யுள் முதற் குறிப்பகராதியும் செவ்வனே அச்சிடப்பட்டுள்ளன. புராண மென்பது பஞ்சலட்சணங்களுடன் கூடியது ஆகும் எனல் முன்னர்த் தெரிவிக்கப்பட்டுளது. இப்பகுதியில், மக்கள் தக்கபடி வாழ்க்கை புரிவதற்கேற்ற இல்லற துறவற நெறிகளும், எல்லாம்வல்ல முழுமுதற் கடவுள் பார்வதி பரமேசுவரன் என்பதும், பரமேசுவரனே பத்திமை பூண்டொழுகுவார்க்கு அருளுந் திறனும் திருவைந்தெழுத்தின் சிறப்பும், திரிபுரசங்காரம், சலந்தராசுரன்வதம் முதலிய பராக்கிரமச் செயல்களும், பிறவும்

நன்கு விளக்கப்பட்டுள்ளன. பூருவகாண்டம் போல இவ்வுத்தரகாண்டமும் நன்கு ஆராய்ந்து அச்சிடப்பட்டிருக்கின்றது. நைடத காவியம் இயற்றிய புலவராகிய அதிவீரராமபாண்டியரே, இந்தக் கூர்மபுராணத்தையும் மொழி பெயர்த்து இயற்றியிருக்கின்றனர். இப்புராணப் பாடல்கள் எளிமையில் பொருள் விளங்கக் கூடியனவாகவே அமையப் பெற்றிருக்கின்றன. வைதீக மார்க்கமும், சைவ மார்க்கமும் நன்கு செறிந்திருக்கின்றன என்பது பயில்வார்க்கு நன்கு புலப்படும்.

ஓலைச்சுவடிகளாகிய ஏட்டுப் பிரதிகளைக் காகிதப் பிரதி செய்வதும் பலபிரதிகளை யொத்துப் பார்த்துச் செப்பஞ் செய்வதும் ஒருகடினமான அலுவலாகும். எங்கள் சரசுவதி மால் நூல்நிலையத்திலுள்ள பல மொழிகளிலும் வரையப் பெற்ற சுவடிகளிற் பெரும்பாலானவற்றினைக் காகிதப் பிரதி செய்து தொகுத்தும் வைக்கப்பட்டிருக்கின்றன. இவ்வகையில் கூர்மபுராணமானது காகிதப் பிரதி செய்யப் பெறாத தாகும். இந்தப் பிரதிகளுள் செப்பமாகவுள்ளன மூன்றாகும். இதனைப்போலச் சைவத் திருமுறைகளும் பிறவும் இருக்கின்றன. கூர்மபுராணப் பிற்பகுதியாகிய உத்தரகாண்டத்தினையும், நன்கு ஆராய்ச்சி புரிந்து, அச்சிற் பதிக்கப் பெரு முயற்சி கொடு உழைத்தவர் திருமுறைச்செல்வர், சித்தாந்தச் செம்மணி சைவத்திரு பண்டித வித்துவான், **இராம. கோவிந்தசாமி பிள்ளை** அவர்கள் ஆவர். இவர்கள் தமிழ்நூல்களை யாய்ந்து பதிக்குந் திறன் பெரிதும் பாராட்டற் பாலதாகும். இதற்குப் பேருதவி புரிந்த மத்திய அரசாங்கத்தாருக்குத் தமிழுலகம் நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளதாகும்.

தஞ்சாவூர்<br>9—3—63

இங்ஙனம்,<br>**S. கோபாலன்**<br>கௌரவ காரியதரிசி.

உ

சிவமயம்

# உத்தரகாண்ட முன்னுரை.

## காப்பு

விழைவொடு தந்தை சென்னி மிலைத்தகூன் பிறையை நோக்கி
முழுமதிச் செய்து மென்றோர் கோட்டினை முறித்துத் தாங்கித்
தொழுதகு மன்பர் உள்ளத் தறியினிற் றுவக்குண் டோங்கு
மழைமதக் களிற்றின் செய்ய மலரடி வணங்கல் செய்வாம்

## சிவபெருமான்

சீர்கெழு மமிர்தந் தெய்வ மடந்தையர் நாக லோகத்து
ஏர்கெழு மகளிர்க் கீயப் பணுமணி யிமையோர் நாட்டு
வார்முலை யவர்க்கு நாக மடந்தையர் வழங்கச் செம்பொன்
மேருவிற் குழைய வாங்கும் விண்ணவற் போற்றல் செய்வாம்

வேதாகமத்தின் விளைவாய் நாதாந்தமேயாய் நடிக்கும் நம்பன்றிருவடி மறவாச் செம்மை நிறைந்த திருவுளச் சீரியர்களே! நவகண்டத்துட் சிறந்த பரத கண்டத்தில் தென்னாடாகிய வட வேங்கடந் தென்குமரி யாயிடைத் தமிழ் கூறுஞ் செந்தமிழ் நாட்டிடைத் தொல்காப்பியர் வள்ளுவர், கம்பர், கச்சியப்பர், வில்லி, அதிவீரராமபாண்டியர் முதலானோர் அவதரித்து இயலும், இலக்கியமும், இதிகாசமும், புராணமும், பெருங் காப்பியமும், சிறு காப்பியமும், சாத்திரமும் தோத்திரமும் திருமுறையு மாகியனவற்றினை யாத்துள்ளனர்.

வியாசர் வரலாறுரைத்த பகுதியில் இருபத்தெட்டாவது வியாசர் என்பவரே வேதங்களைச் சுருக்கி வகுத்தும், இதிகாசங்களை யாத்தும் பதினெண் புராணங்களைப் பகுத்தும் தோற்றுவித்தனர் எனக் காணப்படுகின்றது. வியாசர்

வடமொழியில் வகுத்த பதினெண் புராணங்களில் பத்துப் புராணங்கள் சிவ புராணம் எனல் பூர்வ காண்ட முகவுரையிற் கூறியுள்ளமை யறிதல் வேண்டும். அப் பத்துப் புராணங்களுள் கூர்ம புராணமும் ஒன்ருகும். இதனைத் தமிழில் மொழி பெயர்த்துச் செந்தமிழ் இலக்கண வரம்பு பிறழாமலும், இலக்கியச் செறிவு மிகவும், அணிகளின் நயம் மீக்கூரவும், சந்தவின்பம் பெருகவும், மநுவாதிய நெறிகளையுள்ளடக்கியும் செய்தருளிய புலவர் அதிவீரராம பாண்டியனுராவர். இரண்டாவது காண்டமாகிய உத்தர காண்டமானது வெதிரிகாச்சிரமத்தில் மகேசன் ருேன்றிய வத்தியாய முதல் பிராகிருதப் பிரளயமுரைத்தவத்தியாய மீருக நாற்பத்தாறு அத்தியாயங்களையுடையதாகும். இறைவன் இறைவி (சத்தி-சிவம்) இவர்களுடைய இலக்கணங்களும், பத்திமையால் வழிபாடு புரிபவர்கட் கருளுந் திறனும், நால்வகையாச்சிரம நெறியும், கொடை, சிராத்தம் வழங்கு முறையும், வயிரவன் பலியிரந்த வகையும், நித்திய கன்ம நெறியுரைத்த வகையும், தென்புலத்தார்க் கூட்டு முறையும் சிவன்றிரு நாமம் அறியாதுரைத்தோர் பெறும்பேறும், திரிபுரசங்காரம் புரிந்த வீரமும் முதலிய பகுதிகள் படித்துப் படித்தின் புறற் பாலனவாகும்.

இவ் வதிவீரராமபாண்டிய ரருளிய காசி காண்டத்திடை எங்ஙனம் விதி விலக்குகள் வகுத்துரைக்கப் பட்டனவோ அங்ஙனம் இங்குக் காணப் பெறுகின்றன. மக்களாயினோர் அறிந்தும் அறியாமலும் வழுவிப் போதலியற்கை. அங்ஙனம் வழுவிய பாவச் செயல்களைப் போக்கற்குக் கழுவாய் (பிராயச்சித்தம்) உரைத்திருப்பது மிகவும் இன்றியமையாததாகும். இப் பெற்றிவாய்ந்த புராண விலக்கியத்தின் பெருமை யறிந்தே அறுபத்தெட்டாண்டுகட்கு முன்னர் இப்புராணப் பகுதியிற் சில வத்தியாயங்களைத் தொகுத்துக் கல்லூரிகளில் இன்டர்மீடியட்டுத் தேர்விற்குப் பல்கலைக் கழகத்தார் பாடமாகவும் அமைத்துள்ளனர்.

கூர்மாவதாரப் பெருமாள், நாரதன், இந்திரன் முதலிய வர்கட்குப் பரசிவத்தின் பரத்துவங் கூறும் பெருமை மிகவும் பாராட்டற்படுவதாகும். இந் நூலைப் பயின்றவர் கடவுள் துவேடம் சிறிதும் உறூர் என்பது திண்ணம். யோக நெறி யும் அதனைப் புரியும் வகையும், புரிந்துறும் பேராவியற்கைப் பெற்றியும், முழு மனதுடன் ஆதரித்தின்புறற்பாலன. இல்லற துறவற நெறி இப்படித்தான் இருத்தல் வேண்டு மென வியப்பப் பெற்றிருப்பது கண்டு தெளிந்தின்புறற்பால தாகும்.

இன்னோரன்ன சிறப்புடைய இப் புராணத்தை எங்கள் சரபோசி மன்னர் சரசுவதி மால் நூல் நிலைய ஓலைச் சுவடிகளையும் மரவச்சிற் பதிப்பிக்கப் பெற்ற தொண்ணூ ருண்டுகட்கு முற்பட்ட பழம் பிரதியொன்றினையும் வைத்துக் கொண்டு படியெடுத்துச் செப்பஞ் செய்தேன். அதன்பின்னர் அச்சிடல் வேண்டுமென கௌரவ காரியதரிசி உயர்திரு. சே. **கோபாலையர்** அவர்கட்கு விண்ணப்பித்தேன். அவர்கள் மனமுவந்து, யூநியன் கவர்ன்மெண்டாரின் ஆணைபெற்று அச்சிடற்குத்தரவிட்டருளினர். இப் புராணத்திற்குச் சிறு குறிப்பாகிய அரும்பதவுரை யொன்றிருத்தல் வேண்டுமெனப் பணித்தபடி அரும்பதவுரை யொன்று வரைந்து அச்சிட நேர்ந்தது. இதனிடை அயர்வால் வழுக்களும் நேர்ந்திருத் தல் கூடும். கலை யறிஞர்களும், புலவர்களும் இதனைக் கண் ணுற்றறிவிப்பார்களாயின் தலைமேற்கொண்டு யடுத்த பதிப்பில் இணைத்துக் கொள்வேன். "குற்றங்களைந்து குறைபெய்து வாசித்தல், கற்றறிந்த மாந்தர் கடன்'' எனலைக் கடைப் பிடிக்க வேண்டுமென வேண்டிக் கொள்கின்றேன். வழக்கம் போல் இந் நூலை யச்சிடுங் காலத்து ஒப்பு நோக்குதல், அரும் பதவுரை யாய்வு, செய்யுண் முதற் குறிப்பகராதி முதலிய வரைந்து நல்லுதவி புரிந்த திருவையாறு சீநிவாச ராவ் உயர் நிலைப்பள்ளித் தமிழாசிரியை வித்துவான் திரு. கோ. **நீலகவதி** அவர்கட்கு எல்லாம் வல்ல வள்ளிமணாளன் திருவருள்

புரிவாராக. இதனை விரைந்தச் சிட்டு முடித்தல் வேண்டு மெனத் தூண்டிய எல்லா அன்பர்கட்கும் என் பணிவார்ந்த நன்றியுரித்தாகுக.

இதனை நல்ல முறையிலச்சிட்டுதவிய வெற்றிவேல் அச்சக முதல்வர் திருமுறைச் சைவசீலர் பக்கிரிசாமி பிள்ளை யவர்கட்கு நன்றியும் வணக்கமுமுரித்தாகுக.

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்கதீய தெலாமர னுமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே

இங்ஙனம்,
பண்டித வித்துவான்,
தஞ்சாவூர்
சுபகிருது தை
**இராம. கோவிந்தசாமி பிள்ளை,**
முன்னாள் தமிழ்ப்பேராசிரியர்.



உ

# நூலாசிரியர் விளக்கம்.



தாருகன் உடலம்போழ்ந்து தடிசுவைத்து உதிரமாந்தி
ஈருள்வாய்ப் பெய்துபுன்றோல் என்பொடு குதட்டிமூளை
வார்குடர் விழுங்கிமாறாப் பசியொடுங் கடைவாய்நக்கும்
போர்கெழு சுடர்வே லெந்தை பொன்னடி சென்னிசேர்ப்பாம்



இக்கூர்ம புராண நூலாசிரியர் அதிவீரராம பாண்டியர் என்பதும், இவர் வரலாறும், பூர்வ காண்டத்தின் முகவுரையிற் காணப்பெறும். பூருவ காண்டத்தில் தசரதகுமாரனாகிய தாசரதியின் வரலாறு முதலியனவும், சந்திர வமிசத்து பலராமன் வரலாறு முதலியனவுங் காணப்பெறுகின்றன. சூரிய வமிசத்துத் தோன்றிப் பிதுர்வாக்கிய பரிபாலனம் புரிந்த எந்த இராமபிரானே அவனுடைய திருப் பெயரினைச் சூட்டிக்கொண்டவர் பாண்டி நாடாண்ட அதிவீரராமபாண்டியனார் ஆவர். பாண்டிநாட்டுச் சிவதிருப்பதிகளாவன, திருஆலவாய், திருவாப்பனூர், திருப்பரங்குன்றம், திருப்பூவணம், திருக்கானப்பேர், திருவாடானை, திருக்குற்றாலம், திருநெல்வேலி, திருக்கொடுங்குன்றம், திருவேடகம், திருஇராமேச்சுரம், திருப்புனவாயில், திருச்சுழியல், திருப்புத்தூர்என்பனவாம். இவற்றுள் திரு இராபேச்சுரத்தினைப் பற்றிப் பின் வரும் தேவாரப்பாடல் அறிவிப்பதாவது.

கோடிமா தவங்கள் செய்து குன்றினார் தம்மை யெல்லாம்
வீடவே சக்கரத்தால் எறிந்துபின் அன்பு கொண்டு
தேடிமால் செய்த கோயில் திருவிரா மேச்சுரத்தை
நாடிவாழ் நெஞ்ச மேநீ நன்னெறி யாகுமன்றே, என்பதாம்.

ஆகவே பாண்டி நாட்டுச் சிவதிருப்பதிகளுள் ஒன்றாகவுள்ளது இராமபிரானால் பிரதிட்டை பண்ணிய இராமேசுரத் திருப்பதியாகும். இத்திருப்பதியில் சிவலிங்கப் பிரதிட்டை பண்ணிப் பூசனையாற்றிய பின்னரே அயோத்தி சென்று நாடாண்ட விவரத்தினைப் பூருவ காண்டம் புகலா நிற்கும். சிவபக்தி மேலிட்ட அவ்விராமபிரானுடைய பெயரினை அண்ணனும் தானும் சூட்டிக்கொண்டனர் போலும். அவரே வரதுங்கராமபாண்டியனும் அதிவீரராமபாண்டியனும் ஆவர்.

பிரமோத்தர காண்டமெனும் நூலை வரதுங்கராமபாண்டியனார் கண்டார். இவர் காசிகாண்டம் இயற்றினர் இலிங்க புராணமும் யாத்தார். இராமன் கண்டவர் உள்ளத்தைக் கவர்பவன் எனப் பொருள் கொள்வர். இவரைக் கொற்கையாளி எனவும் அழைப்பதுண்டு. நைடதமாகிய ஒரு இலக்கிய நூலையும் யாத்துள்ளனர். மன்னர் மன்னன் வரலாற்றினைப் பகர்ந்ததுபற்றி வேறு வகையான எண்ணங் கொண்டு, முக்திப்பேற்றிற் கேதுவாகிய சிவபுராணம் பாடல் நன்றெனத் திண்ணங்கொண்டு இலிங்க புராணம், கூர்ம புராணம் முதலியன பாடியருளினார். நாடாண்டதோடமையாது சிவபூசனை முற்றிப் பவப்பிணி யறுக்கும் தவப்பணி பூண்டனர் என்பது சாங்கியயோக முரைத்த வகையில் நன்கறியக் கிடக்கும். இப்புவிராய ராகிய கவிராயர் அதிவீரராம பாண்டியர் இயற்றிய வெற்றிவேற்கையாகிய நறுந்தொகையும், நள சரிதமாகிய நைடதமும் எத்துணைச் சிறப்புடைத் தென்பதை கற்றறிந்தார் நன்கறிவர். காசி காண்டத்தில் ஆடவர் மகளிர் இயலுரைத்த பகுதி மிகமிகப் பாராட்டும் சாமுத்திரிகா லட்சணத்தை விளக்குவதாயுள்ளது.

இவர் வழிவந்தவர்களே அரசகேசரி, பரராசகேசரி என்னும் மன்னவர்கள் போலும். இரகுவமிசம், பரராசசேகரம் முதலிய நூல்களைப் பாடினவர். இவர்கள் ஈழத்தை வென்ற

வர்கள் என்பர். தம்முனும் தானும் பெரும்புலவர் பெரு மக்களாக விளங்கின ரென்பதொருதலை. இவர்கள் தம் வாழ் நாளை வீழ்நாளாக்காது உலகத்தினுக்கும் தமக்கும் அரும் பாடுபட்டவர்களே. பழங்காலத்து முற்றத்துறந்த முனி புங்கவர்களே காப்பியம், இதிகாசம், புராணம், மிருதி முத லியவற்றினைப் பாடியுள்ளனர். இவர்களோ எண்குணத் தான்றனை வணங்கி யுலோகோபகார நூல்களையும் புனைந் துள்ளனர். புறநானூறு முதலிய நூல்களில் புலவராகவுள்ள அரசர்களும், சிற்றரசர்களும், வள்ளலும் உண்டென்பதை யும் அறிகின்றோம். இவர்கள் இயலும், மறையும், ஆகம மும் நன்குணர்ந்த பெரியார்கள் எனப் புலப்படுகின்றது. இவரை யொப்பாரும் மிக்காரும் முன்னரும் பின்னருமில்லை. இவர் தம் வரலாறு புலவர்புராணம், அபிதான சிந்தாமணி முதலிய நூல்களிற் காண்க.

இதற்கு ஒரு விரிவான வரலாறு விரைவில் வெளிவரும்.

இங்ஙனம்,
பண்டித வித்துவான்,
**இராம. கோவிந்தசாமி பிள்ளை.**



உ

# கூர்ம புராண உத்தரகாண்டம் பதிப்புரை.

---

திருவுங் கல்வியுஞ் சீருந் தழைக்கவும்
கருணை பூக்கவுந் தீமையைக் காய்க்கவும்
பருவ மாய்நம துள்ளம் பழுக்கவும்
பெருகு மாழத்துப் பிள்ளையைப் பேணுவாம்:

இந்நானில வளாகத்துள் மேனிலையுற்ற பிறப்பு, மக்கட் பிறப்பென்பது, அனைத்துப் புலவருங் கண்ட வுண்மை. சுவை யொளி ஊறுஓசை நாற்றமெனும் ஐந்தறிவுடன் மன வுணர்வாகிய பகுத்தறிவுற்றுத் திகழப் பெறுதலானும், விதித்தனவற்றைச் செய்தலும், விலக்கியனவற்றை யொழி தலும் ஆகிய அறத்தைப் புரிதலும் அறத்தாறு பொருளை யீட்டலும், இப்பொருள் கொண்டு இன்பந் துய்த்தலும் இம்மூன்றும் விட்டுப்பற்றறத் துறந்து பேரின்ப வீடெய்து தற்குரியர் மக்களே யாவர். இதனாலன்றோ நாற்பொருளுக் கும் புருடார்த்தமென வடமொழியிலும், உறுதிப்பொருள் எனத் தமிழ்மொழியிலும் வழங்கலாயினர்.

இம் மக்கட் பிறப்பினர் உடலால், உறுப்பால் ஆண், பெண் ணெனப் பகுக்கப்பட்டுள்ளனர். இவ்விருபாலாரும் பண்டை வினையால் புண்ணிய மேலீட்டால் புண்ணியம் பயக் கும் நற் பூமியில் பிறக்கும் பேறெய்திடின் அவர் தமக்காவன வாயுள்ளனவே நூல்களாம். அந்நூல் முதனூலும், வழி நூலும், சார்பு நூலுமென மூவகைத்தாய்த் தொகையும் வகை யும், விரியும், தொகை விரியுமாகித் திகழும். இங்ஙனமாகிய நூல்களைப் பலவகைப் படுத்தினும் தமிழில் இயற்றமிழ்

நாடகத்தமிழ், இசைத்தமிழ் என மூவகைப்படுப்பர். வட மொழியில் வேதங்கள் முதல்வேதமும், உபவேதமும், மூலா கமமும், உபாகமமும், புராணமும், உபபுராணமும் எனப் பகுக் கின்றனர். மறை நான்கு, அங்கம் ஆறு, புராணம், தரும சாத்திரம், இதிகாசம், நியாயம், மீமாஞ்சைமுதலியவற்றை அட்டாதச வித்தையெனவுங் கூறுவர். இவற்றுள், புரா ணமும் கூறப்படுகின்றது. புராணம்—பழங்கதை எனப் பொருள்படும். எல்லாம்வல்ல விறைவனுக்குப் பூரணன் என்றும் புராணன் என்றும் நாமங்கள் வழங்கப்பெறும். இராசபாரம்பரியம், மன்வந்தரம், உலகத்தோற்ற வொடுக்கங் களாகிய ஐந்தினை விளக்குவதெனவும் அறைவர். இந்நெறி யுற்ற கூர்மபுராணத்தை வடமொழியினின்றும் தமிழினில் பூருவகாண்டம் உத்தரகாண்ட மென இருபெரும்பகுதித் தாய்த் தொண்ணூற்றேழு அத்தியாயங்களாய் மூவாயிரத் தெழுநூற்றுப்பதினேழு செய்யுட்களையுடைத்தாய் இயற் றினர் அதிவீரராம பாண்டியர்.

இப்புராணம் வடமொழியில் இருபத்தெட்டாவது வியாச ரால் யாக்கப்பெற்றது. இந்நூலை முதன்முதலில் தமிழில் யாத்தவர் இப்பாண்டியனுரே யாவர். வடமொழியிலுள்ள வாறே மொழி பெயர்க்கப்பட்டிருத்தலை வடமொழிப் புரா ணம் வல்லார்வாய்க்கேட்டுணர்தற் பாலதாகும். செப்புப் பட் டயங்களிலும், ஓலைச்சுவடிகளிலும், கல்வெட்டுக்களிலும் வரையவும், செதுக்கவும், கீறவும் பண்டைக்காலங்களிற் கண்டனர். இச்செய்தி சிலாசாசனம், செப்பேடு, ஓலைச்சுவடி யென்பனகொண்டு துணிதல் வேண்டும்.

பல்லவர் காலத்தும், சோழர் காலத்தும், பாண்டியர் காலத்தும் சேரர் முதலினோர் காலத்தும் இந்நெறிகள் கையாளப்பட்டு வந்துள்ளன. இந்நெறியில் ஆரியமொழியி லும் தமிழ் மொழியிலும் மராட்டிய மொழியிலும், தெலுங்கு மொழியிலும் உள்ள பல பனையோலைச் சுவடிகளையும் எவ்

வாற்ருனும் அழியாத மையால் தீட்டிய, சுருங்காத மடிக்காத காகிதப் பிரதிகளையும் ஒருங்கு திரட்டிப் பாதுகாக்கப்பட்டுவருவது தஞ்சைச் சரபோசிமன்னர் சரசுவதிமால் நூல்நிலையம் என்பது உலகமறிந்ததே. இந்நூல் நிலையத்தில், திருவையாற்று அரசர் கல்லூரியிற் றமிழ்ப் பணிபுரியும் பேராசிரியர் பதவியினின்றும் தமியேன் ஓய்வுபெற்று, 1957ம் ஆண்டில் தமிழ்ப்பணிபுரியும்அலுவலில் அமர்ந்தேன். மதுரைச் தமிழ்ச் சங்கத்திற் பயின்றகாலத்திற் சுவடிபார்க்கும் பயிற்சியு முடைமையினுல் அந் நூல் நிலையத்திலுள்ள சுவடிகளைக் கூர்ந்து படித்துப் பிரதிசெய்யும் வன்மையு முண்டாயிற்று. அதன் பயனுல் முதன்முதலிற் கண்டு பிரதி செய்தது மறைஞான சம்பந்த நாயனுரருளிய சங்கற்ப நிராகாரண ஓலைச்சுவடி ஆகும். இந்நூல் சிறந்த சித்தாந்தக் கலையாகும் எனல் ஆராய்வார்க்கினிது புலனும். அதன் பின்னர் பிரதி செய்யப்பட்டவை தத்துவவிளக்கம், திருநெறிவிளக்கம், ஞானசாரம், சுவாமிநாதம் என்னும் இயல்நூல் என்பனவாம். பின்னர் சுவடிகளையெல்லாம் ஒத்துப்பார்க்கும்போது கூர்மபுராணம் நல்ல சுவடியாய்ப் பல பிரதிகளுடன் காணப்பட்டது. இச்சைவபுராணம் வெளிவரின் தமிழுலகுக்குப் பெரிதும் பயன்படும் எனக்கருதிப் படியெடுத்தேன். பிரதிகளிலிருந்துபடியெடுக்குஞ் சிரமங்களில்ஒருசிலவருமாறு:-தக்கனை மணந்தான் எனக்காணப்பெறுகின்றது. வடமொழியில் தட்சன் என்னுநாமம் தமிழில், தக்கன் எனத் தற்பவமாகிவரும். தட்சணு என்ற வடமொழியில் உள்ள பெண்பாற் பெயர் தமிழில் ஆவீறையும் என்ற விதிப்படி தக்கணை யெனவரும். இதனை ஏட்டில் தக்கனை மணந்தான் எனக் காணப்பெறுகின்றது. தக்கணை யென்பது முதல் வேற்றுமையாகிய பெண்பாலாகும். தக்கனை எனவரின் இரண்டாம் வேற்றுமையுருபேற்ற ஆண்பாற் பெயராகும். வடமொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டு வரும் பெயர்கள்

"வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே" எனவும்

"சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்" எனவும்

வரும் சொல்லதிகாரச் சூத்திரங்கொடு ஆராய்கின்றுழி வடசொற்கள் தமிழில் தற்சம தத்பவ மாகிவரும். இச் சூத்திரப்பொருள் வடசொல்லாகிய சொல் உரப்பியும் எடுத்துங் கனைத்துங் கூறும் வடவெழுத்துக்களினீங்கி, இருவர் மொழிக்கும் பொதுவாகிய வெழுத்தானியன்ற சொல்லாம் எனவும், பொதுவெழுத்தான் இயன்றனவேயன்றி வடவெழுத்தான் இயன்ற வடசொற் சிதைந்து வரினும் பொருத்தமுடையன செய்யுளிடத்து நீக்கார் எனவும், ஆம்

இவற்றின் உதாரணங்கள் வாரி, மேரு. குங்குமம், மணி மானம், வீரம் வேணு, யூபம், காரணம், காரியம், நிமித்தம். காரகம் என்றுற் போல்வனவும், கமலம், அமலம், மூலம், கோபம், ஞானம், ஞேயம், தமாலம், தாரம், திலகம், நாமம், யானம், யோனி, உற்பலம் என்பனவும், அரமியம், தசம், இராமன், சீதை சருமம் என்பனவும், தந்திரம், சூத்திரம், விருத்தி, அருத்தாபத்தி, உத்தி, என்பனவும், பங்கயம், இடபம், விசயம், இருடிகள், மேகம் பந்தம், மயானம், விடம், துங்கம், பலம், பாரம், சர்ச்சரை, சாதி, சேனை, சித்தி, சாதனம், அயன், அரி, அரன், ஆரம், அருகம், சிங்கம், மோக்கம், காமம், பக்கம், சூலம் சதம், போதகம், யோகம், சுத்தம், கலம், மோகம், யோகம், வந்தனை, வேலை, சாலை, மாலை, உவமை, வனிதை, புரி, மேதினி, குமரி, நதி, அரங்கம், இலங்கை. இயக்கன், உலோபம், உலோகம், நிருத்தம், கீதம், வாச்சியம், வச்சிரம், அருத்தம். கருமம், கருப்பம், காப்பியம், பருப்பதம் என்பனவும், பிறவுமாம். தொல்காப்பியச் சொல்லதிகார எச்சவியலில் காணப்பட்டவை யாகும். இவை;

சங்ககாலத்து நூல்களில், வடமொழிச் சொற்கள் மிகப் பல்கில, பிற்றைக்கால நூல்களில், புராண இதிகாச காவ்விய, சாத்திர, தோத்திர நூல்களில் மிகவும் மலிந்துள்ளன,

தமிழில் அறுவகைச் சொற்கள் என ஆளப்பட்டுவிட்டன. பெயர் வினை இடை உரி திரி வடசொற்கள் என,

இங்ஙனமாக வருதலை வடமொழிநூற் பயிற்சி சிறிதே னும் இலாதார் செய்யின் பெரிதும் முரணுதல் ஒருதலையென் பது கூறுமலே அமையும்.

இங்ஙனமாகப் பல சொற்கள் தமிழில் ஆளப்பட்டு வரு தலைக்கண்டு ஆய்ந்து கொள்ள வேண்டியது இன்றியமையா தாயிற்று,

தமிழிலேயே உள்ள ஏட்டின் நிலைவருமாறு:— தக்கன் வேள்வியழித்த அத்தியாயத்தில் (9) பாடல்,

"மன்பெருஞ் சிறப்பு வாய்ந்த
மலரயன் முதலி னோர்தம்
என்பணிந் தீமத் தாடி
யேறிவர்ந் தைய மேற்கும்
கொன்படு சூல வேற்கைக்
கூத்தனுங் கருத்தன் கொல்லோ
பொன்புனை யறுவை யார்த்த
பூவைமே னியனை யல்லால்" என்பதாம்

ததீசிமுனிவர் தக்கனைப் பார்த்து நீ சிவத்தினையிகழின் மிகமிகத்துன்புறுவை! அருநிரயத்தின்பாற்படுவை, மறைகள் சிவத்தினை விட்டு வேள்விபுரிதல் கூடாது எனலை மறந் தியோ! சிவநிந்தனை செய்யற்க வென்றபோது, தக்கனு னவன் பலவாறுகச் சிவநிந்தனை புரிந்தனன். பிரம விட்டுணுக்களுடைய எலும்புகளையணிந்து சுடுகாட்டினில் நடனம் புரிந்து காளை மாட்டிலேறி பிச்சையேற்றுண்ணும் பெருமை பொருந்திய சூலவேலைத் தாங்கி யாடுபவனும் வேள்வித்தலைவனுகுவன் கொல்லோ, பீதாம்பரதாரியாகிய பூவைப்பூவண்ணமுடைய திருமாலேயல்லாமல் சிவபெரு மான் தலைவனுகமாட்டான், என்று நிந்தனை புரிந்த விடத்து

ஏறிவர்ந்து ஐயமேற்கும் எனற்பாலது எரிவரந்தையமேற்கும் எனக் காணப் பெறுகின்றது. இதன் உண்மைப் பாடாந்தரங் கொண்டு ஏறிவர்ந்து ஐயமேற்கும் எனத் திருத்தஞ் செய்யப்பெற்றது ஆகும். இங்ஙனம் பலவுளவாம்.

இராமபிரான் வரலாறும், சீதாபிராட்டியாரை இலங்கேசன் கொணரமாட்டாது மாயாசீதையைக் கொண்டு சென்ற வரலாறும் பிறவும் இனிதாக வெடுத்தோதப்பெற்றுள்ளது. கைகேசியானவள் மன்னர் மன்னவனாகிய தன்றலைவனுடைய சொற்கிணங்காமல் மறுத்ததனைப்பற்றிக் கற்பித்துரைப்பது மிகவும் வியக்கத்தக்கதாயுள்ளது. கைகேசியானவள் இயற்கையில் மயற்கையளாயினும் பரம்பரை நல்லதல்லவென்றும், அதுகாரணமாகப் புருடனுக்கிரங்காமல் நின்று வரங் கேட்டனள் என்றும் கூறப்பட்டுள்ளது

அவைவருமாறு:—

கல்லும்வல் லிரும்பும் வெண்ணெயென் றுரைக்கப்
காழ்படு மனத்த கைகேசி
மல்லடு திணிதோட் பரதனுக் குலகம்
வழங்கிநீ யேழிரு பருவம்
கொல்புலி வழங்கும் கானிடைத் திரியக்
கூறின னுந்தையென் றுரைப்பக்
வில்விழுங் குயர்தோட் செம்மல்நீ பணித்தல்
விலக்கல னெனத்தொழு தகன்றான்.

கோசலை யுறையுங் கோயிலுள் எய்திக்
கொற்றவன் பணியுரைத் துள்ளம்
மாசறத் தேற்றிச் சுமத்திரை யோடு
மன்னுமை போகெனக் கூறிப்
பூசல்வண் டறைதா ரிளையவ னோடும்
புரிநரம் பிரங்குதீங் குதலைத்
தேசுகண் படுக்குஞ் சீதைபின் றொடரத்
தயரதன் மருங்குசென் றடைந்தான்

தயரதன் வருத்த நோக்கியுள் ளழிந்து
சுமந்திரன் றவர்வொடு மாழ்கி
யயர்வொடுங் கலுழ்ந்து கொடியகை கேசி
முகத்தினை நோக்கியீ தறைவான்
செயிரறு கடவுண் முனிவனல் லருளாற்
றிருலளர் கேகயத் தரசன்
உயிருடை யெவற்றின் பாடையு முணர்ந்தாங்
கொழுகுநா டன்னின்மற் றொருநாள்

மற்றடந் தோளான் மனைவியோ டினிதின்
வைகிய மலரணைப் புறத்திற்
சிற்றெறும் பொழுங்கிற் சேரலு மரசன்
சேவடி கடக்கரி தென்ன
உற்றயல் மேவு மெறும்புமற் றயலோ
ரெறும்புடன் வெகுண்டுரைத் திடுதல்
கொற்றவேன் மன்ன னுணர்ந்தன னகைப்பக்
கோற்றொடி நகைத்ததெ னென்றாள்

ஈங்கிது நுவலின் முடியுமென் னுவி
யியம்பல னென்னவு மறுத்துக்
கோங்கிள முலையாள் கூறுகென் றுரைத்து
முனிதலுங் கோவடு வேலான்
தீங்குறு முள்ளத் தரிவைதோ ணலத்திற்
றீதுவே றின்றெறன விடுத்தான்
ஆங்கவள் குலத்திற் றோன்றிய வுனக்கும்
அருளுறு மோவென அறைந்தான்

இப்பாடல்கள் கூர்ந்து ஆய்ந்தறிதற்பாலன வன்றோ! கம்பன் கவியிற் காணப் பெறாக் காட்சியாகும். இவை, இங்ஙனம் அதிவீரராம பாண்டிய மன்னன் வடமொழிக்கணுள்ள பல்வேறு வரலாறுகளைத் துருவித் துருவிச் செறித்துள்ளான் என்பது வெள்ளிடை. வியாசபாரதத்துக் கண்ணபிரான் சிவ பூசை புரிந்த செயல் கூறப்பெறுகின்றதுபோல இப்புராணத்

தும் கண்ணன் சிவபூசனை செய்த செயல் விரித்துரைக்கப் பெற்றுள்ளது. ஆகவே இப் பெற்றியுற்ற புராணமானது அனைவராலும் படித்தின் புறற்பாலதாகும்.

இதற்குப் பெரிதும் உதவி புரிந்தவர் நூல் நிலையத்தில் கையழுத்துப்பிரதி செய்யும் தமிழறிவு சான்ற திரு. ப. இராச ரத்தினம் அவர்கள் ஆவர். இப்புராணத்தில்வரும் வடமொழி ஐயங்களை யகற்றியவர் வித்துவ சிரோன்மணி உ. வே. தேவ நாதாச்சாரிய சுவாமிகள் அவர்கள் ஆவர். இவர்கட்கு என் நன்றி யுரித்தாகுக. ஆங்கிலம், ஆரியம் அருந்தமிழ் மொழிக ளிற் புலமை மீக்கூர்ந்தவரும், சட்டகலா வல்லுநரும், எம் மொழியினரிடத்தும் பெருமதிப்புடையவரும், நூல்நிலையக் கௌரவ காரியதரிசியுமாகிய பெருந்திருவாளர் **சே. கோபாலையர்** அவர்கள் (பீ. ஏ,. பி. எல்.) இந் நூல்களை அச்சிட்டு வருதற்கான நிலைகளை யாக்கித் தந்தனர். இவர்கள் செய்த பேருதவிக்கு எழுமையும் கடமைப் பட்டவனுவேன். இந்நூலினை நல்ல முறையில் அச்சிட்டுதவிய வெற்றிவேல் அச்சக முதல்வருக்கும் நன்றி செலுத்துகின்றேன். இந்நூ லினை அச்சிட்டு வருங்காலத்துத் தோன்ருத் துணையாயிருந்து திருவருள் பாலித்த திருவையாற்றீசன் கழலிணைகளை வாழ்த்தி வணங்குகின்றேன்.

## சத்திரபதி சரபோசி மன்னர் சிறப்பு

(அகவற்பா)

மண்ணீர் தீவளி மன்னிய காயம்
ஆய வைந்தின் அகிலந் தன்னை
நவகண் டம்மா நாவலர் வகுத்தனர்
அவற்றுள் பரத கண்ட மளவில்
புண்ணியப் புவியெனப் புகன்றனர் புலவோர்
அக்கண் டத்திற் றக்கிண நாடே
செப்பருஞ் சீருடைத் திப்பிய முடைத்தாம்
தென்று டுடைய சிவனே யென்நாட்
டவர்க்கு மிறையென வறைந்தனர் வாதவூர்
அண்ணல் வாக்கே திண்ணிதின் விளக்கும் 10

மூர்த்தி தீர்த்தம் தலமெனும் மூன்றும்
முறையாய்த் தொடங்கினர் மும்மை மலமொரீஇ
இறைவ னடிமல மெய்துவ ரென்பதைத்
திருமுறை யாதிய செப்பு மன்றோ !
அட்டவீ ரட்ட மாகிய தலங்களும்
சத்த விடங்கத் தலங்களும் ஏழ்பெருங்
கோயிலும் யாறுங் குலாவுறுஞ் சோழ
மண்டல மாண்ட மன்னர் மன்னன்
தஞ்சைப் பெருவுடை யார்தளித் திருத்தளி
மன்னி நிலவும் நன்னகர் தன்னுள் (2)
மாநிலம் போற்றும் மராத்திய மன்னன்
பன்மொழிப் பல்கலைப் பயின்ற பண்பினன்
கண்ணுதற் பரமன் கவினுறு பூசை
யாற்றும் அண்ணல் அகில மதனிடை
எழுவகை யாகிய பழுதில் சீர்த்தியுள்
பிரபஞ்சத்தே பிரபந் தங்களைத்
தொகுத்துவைத் திடலும் தொன்மைத் தாமென
சரசுவதி மால்நூல் நிலையம் சதுர்பட
அண்டரும் போற்ற மண்டபம் வகுத்து
நிலைபெற வைத்த அலகில் புகழ்சால் (3)
சீர்சர போசி திருப்பெயர் பூண்டவன்
சிவக்கொழுந் தென்னுந் தேசிகன் றன்னால்
பாடப் பெற்ற பீடுடைப் பெருமான்
றன்பெயர் தன்னால் வைத்தருள் தருமக்
கல்விச் சாலையும் பல்வளச் சத்திர
மாதிய நிலையமும் அகில லோகமும்
போற்றும் ஏற்றம் பொருந்திய சரசுவதி
மால்நூல்நிலையமும் மன்னி வாழியவே ''

---

பேணித் தொழுமவர் பொன்னுலகாளப் பிறங்கருளால்
ஏணிப் படிநெறி யிட்டுக் கொடுத்திமை யோர்முடிமேல்
மாணிக்க மொத்து மரகதம் போன்று வயிரமன்னி
ஆணிக் கனகமும் ஒக்கும் ஐயாற னடித்தலமே.

தஞ்சாவூர்
12—3—63.

இங்ஙனம்,
பண்டித வித்துவான்,
**இராம. கோவிந்தசாமி பிள்ளை,**



உ

சிவமயம்.

# கூர்மபுராணம்.



## உத்தரகாண்டம்.

### கடவுள் வாழ்த்து.

விழைவொடு தந்தை சென்னி
    மிலைத்தகூன் பிறையை நோக்கி
முழுமதிச் செய்து மென்றேர்
    * கோட்டினை முரித்துத் தாங்கித்
தொழுதகு மன்ப ருள்ளத்
    தறியினிற் றுவக்குண் டோங்கு
மழைமதக் களிற்றின் செய்ய
    மலரடி வணங்கல் செய்வாம் (1)

சீர்கெழு மமிர்தம் *தெய்வ
    மடந்தையர் நாக லோகத்(து)
ஏர்கெழு மகளிர்க் கீயப்
    பணிமணி யிமையோர் நாட்டு
வார்முலை யவர்க்கு நாக
    மடந்தையர் வழங்கச் செம்பொன்
மேருவிற் குழைய வாங்கும்
    விண்ணவற் போற்றல் செய்வாம் (2)

திங்கண்மா மணியிற் செய்த
    நிலத்தினிற் றெய்வ நன்னீர்க்
கங்கைமென் றிவலை மாந்திக்
    கண்கவ ரழகு பூத்துக்

---

* கோட்டினை முறித்துத் தாங்கி (பா. பே.)
* தெய்வ மங்கையர் நாகலோகத்து (பா. பே.)

கொங்குகொப் புளிக்கும் பொன்னங்
கொடிநிக ரிமய வல்லி
பங்கய மருட்டுஞ் செய்ய
பதமலர் சென்னி வைப்பாம் (3)

தாருக னுடலம் போழ்ந்து
தடிசுவைத் துதிர மாந்தி
யீருள்வாய்ப் பெய்து புன்றோ
லென்பொடு குதட்டி மூளை
வார்குடர் விழுங்கி மாறாப்
பசியொடுங் கடைவாய் நக்கும்
போர்கெழு சுடர்வே லெந்தை
*பொன்னடி சென்னி வைப்பாம் (4)

(கடவுள் வாழ்த்து முற்றிற்று)

உ

## முதலாவது
## வெதிரி காச்சிரமத்தில்
## மகேசன் றோன்றிய வத்தியாயம்.

---

குவிமுகி ழெருக்கங் கண்ணிக்
குழகனே கடவு ளென்று
யவனெவ னவன்றுள் சேர்க்கும்
ஞானம்யா தறைதி யென்னப்
பவமறக் கனிவாய் விள்ளுஞ்
சூதமா முனிவற் பாராச்
சவுனக ராதி யாய
முனிவரர் சாற்றி னரால் (1)

---

* பொன்னடி சென்னி சேர்ப்பாம் (பா. பே.)

சாற்றிய முனிவ ரோடுந்
தவத்துறை போய சூதன்
ஆற்றருந் தவத்தின் மிக்க
வருமறை வியாதன் வைகுந
தாற்றிளம் பூக வேலிச்
சாலையி னண்ணி யேத்தத்
தோற்றிய முனிவன் செய்ய
துணையடி வழுத்திச் சொல்வான் (2)

நயிமிசா ரணிய மேவு
நற்றவ முனிவற் கெந்தாய்
வயிரவாட் படையோன் வீணை
நாரத னுணர மாயோன்
செயிரற வுரைத்த ஞான
மெனக்குநீ தெரித்த வண்ணம்
பயில்வுற வுரைத்தி யென்னப்
பணிதலு முனிவன் சொல்வான் (3)

ஆய்மலர்க் கொன்றை வேணி
யந்தணர்ப் போற்றி யீசன்
பாயமும் மலங்கள் செற்ற
சனகனை முதலாம் பண்பின்
ஏயநன் முனிவர்க் கோது
மிருளெறி ஞானந் தன்னைத்
தூயமா முனிவர் கேட்ப
வியாதமா முனிவன் சொல்வான் (4)

ஈண்டுநும் போல வையுற்
றிருந்தவக் கிழமை பூண்ட
மாண்டகு சனகன் வெய்ய
வசிட்டனை முதலா யுள்ளோர்

*வேண்டின ராகித் தூய
வெதிரிகாச் சிரமத் தன்பு
பூண்டருந் தவஞ்செய் காலை
நரனுநா ரணனும் போந்தார் (5)

போந்தநா ரணனை வேள்வி
முனிவரர் போற்றல் செய்ய
வாய்ந்தநூன் முனிவ ருள்ளங்
குறித்தவை யறைதி ரென்னப்
பூந்துழாய் முடியோன் கேட்பப்
பொங்கொளிக் கதிர்க ணீட்டுங்
காந்தெரி யூட்டி யுண்ணுங்
கடவுண்மா முனிவர் சொல்வார் (6)

அருந்தவ ஞான பாத
மறிந்திட வறைதி ரென்னப்
பொருந்திய முனிவன் செங்கேழ்ப்
பொழிகதிர் நேமி சங்க
மிருங்கதை சிலைவா ளாங்கி
வானவர்க் கமுத மீவான்
கருங்கடல் கடைந்த ஞானக்
கடவுளாய்த் தோன்றக் கண்டார் (7)

சேகெறி தவத்தின் மிக்க
நரனெனு முனிவன் றீதில்
நாகிளந் திங்கட் கண்ணி
வேணியு நாட்ட மூன்று
மாகிவெம் புலித்தோ லாடை
யசைத்திடும் பவளக் குன்றும்
ஏகனு யகனீற் றோன்றி
நிற்பது மினிது கண்டார் (8)

---

* வேண்டின ராகித் தாழ (பா. பே.)

காண்டலு முவகை பொங்கிக்
கடலிடைக் கவிழ்த்துப் பன்னாள்
தேண்டிய நிதிய முன்னம்
வந்தெனத் திருமா லாதி
மாண்டகு முனிவர் யாரு
மனமகிழ் தூங்கி யேத்த
ஈண்டிவர் புகுந்த தென்னை
முனிவநீ யிசைத்தி யென்றார் (9)

என்றலுங் குடந்தம் பட்டு
நாரண னிருகை கூப்பி
நன்றறி முனிவர் யாரும்
ஞானபா தத்தி னுண்மை
மன்ற வென்னோடு கேட்பான்
போந்தனர் மனுவாக் கெய்தாத்
துன்றிரு ஞான நின்னை
யன்றியார் சொல்லற் பாலார் (10)

பங்கயத் தவிசின் மேவும்
பண்ணவ னரன்மா லென்ன
எங்களோ டொருவ னாக
விருந்துமுன் னெம்மை யீன்றுந்
தங்குமோ ரொளியாய் வெய்ய
தழற்பிழம் பாகி நின்ற
புங்கவ முனிவர்க் கந்த
வுண்மையைப் புகறி யென்றான் (11)

மையவாய்க் கிடந்து நீண்ட
மதர்நெடுங் கண்ணி பங்கன்
செய்தவ முனிவர் யார்க்குஞ்
சிற்பொரு ளுரைக்கு மேல்வை

பையராச் சுடிகை நெற்றிப்
 பருமணி முகடு வேய்ந்த
வையபூந் தவிசொன் றுங்கு
 விசும்பினின் றணைந்த தன்றே (12)

சேட்டிளம் பருதி யென்னத்
 திருமணி முகடு வேய்ந்த
மோட்டிளஞ் சிங்கப் பொற்றுட்
 டவிசினின் முகிழ்த்து வீங்குங்
கோட்டிள முலைய பொன்னங்
 கொடிவளர் பவளக் குன்று(ம்)
நாட்டமூன் றுடைய பெம்மா
 *னன்குவந் திருந்தா னன்றே (13)

இருந்தபின் முகுந்தன் றன்னை
 முனிவரர் தம்மை யெல்லாம்
பொருந்திய நோக்காற் றாய
 பரிசத்தாற் புகலும் வாக்காற்
றிருந்துபா வனையா லென்றுந்
 திகழுவுத் திரியா னுளும்
விரிந்தவெம் பாச நீக்கி
 மெய்ப்பொரு ளுரைக்க லுற்றான் (14)

முதலாவது
வெதிரிகாச்சிரமத்தில் மகேசன் றோன்றிய
வத்தியாய முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 18

---

* நன்குவீற் றிருந்தா னன்றே (பா. பே.)

உ

# இரண்டாவது
## சாங்கிய யோக முரைத்த வத்தியாயம்

---

விண்ணவ ரியக்கர் சித்தர் முனிவர ரேனும் வெய்தா
யெண்ணுதற் கரிய தாகி யினிதினி னுணர்ந்தோர் யார்க்கும்
நண்ணும்வெம் பிறவிதீர்க்கு ஞானத்தை நவையில் கேள்விப்
புண்ணியர்க் கல்லா னெஞ்சம் புலப்படப் புகலொ ணுதால் (1)

தெண்டிரைக் கடலிற் றுஞ்சுஞ் செங்கண்மான் முடியிற்சூடுந்
தண்டுழாய்க் கமழும் பொற்றுட் டமல்படு நுதற்சு
[ணெம்மா
னண்டரு மின்னுந் தேரு வருமறைப் பொருளை நீவிர்
தொண்டரா னமையா னன்கிற் சொல்வமென் றுரைக்
[லுற்றுன் (2)

சொச்சமாய்ச் சாந்தமாகிச் சூக்கமா யொன்றுய் நாளும்
நிச்சமாய்ஞான மாகியெங்கணு நிறைந்த தாகி
யச்சமி றமத்துக் கப்பா லாயகே வலமா யென்று
மெச்சமி லான்மா வென்றுென் றினிதுள தென்பர்
[மேலோர் (3)

அந்தரி யாமி யாக வுறைவது மதுவே யாகு
நந்தலில் புருடன் கால நற்றழ லவ்வி யத்த
மைந்துடைப் பிராண னீச னனைத்துமற் றிதுவே யென்னச்
சுந்தர மறைகள் யாவுந் தொகுத்தெடுத் துரைக்கு மன்றே
(4)

உரைத்திடு மான்மா மாயைச் சிமிழ்ப்புற வுலப்பில் காலம்
வரைத்திட வரிய யாக்கை மருவிடு மருவி னலும்
பரித்திடு முடலந் தன்னை யெடுப்பது பழிப்பில் யாக்கை
தரித்திடப் பண்ணு வோனு மன்றெனச் சாற்று வாரால் (5)

பஞ்சபூ தங்க ளென்று பகருஞா னேந்தி யங்க
ளஞ்சுமன் றுரைத்த கன்மேந் தியங்களோ ரைந்து மன்று
மெஞ்சலில் சத்த மாதி வாக்காதி யிவைக ளென்று
செஞ்சவே மனுதி யன்று திகழுமவ் வியத்த மன்றே (6)

உழிதரு பிராண னன்று கருத்தனன் றுண்போ னன்று
தீஞ்முபிர கிருதி யன்று புருடனு மன்று சால
விழைவுறு மாயை யன்று விளங்கிய வான்மா யாருந்
தொழுதரு மறைக ளேத்துஞ் சுத்தசை தலிய மாமால் (7)

வெயிலுநன் னிழலும் போல விளங்கிய சகத்தி னேடும்
பயிறரு மான்மா வென்றும் பகர்ந்ததற் குபாதி யின்றித்
*துயின்மன முண்மைத் தென்னிற் சொல்லுதற் கரிய வாய
மயர்வறு சன்ம கோடி மருவினு முத்தி யின்றே (8)

முத்தரா முனிவ ரான்மா முற்றிய விகார மின்றி
தத்துவங் கடந்து நின்ற தனிப்பொரு ளாகி யொன்றய்
நித்தமா யசல மாகி யெங்கணு நிறைந்து நின்ற
மைத்தவா ணவத்தை நீங்கும் பொருளென மனக்கொள்
வாரால் (9)

யானுயர் கருத்த னென்மே லிளைத்தது தடித்த தென்று
நோன்மையேன் வெகுளி மிக்கே னெனநனி நுவலு கின்ற
பான்மையா ணவத்தின் செய்தி யதனெடும் பயின்ற வாற்ற
லீனமி லான்மா மற்றை யிவைகடன் செயல தென்றும் (10)

பொருவில்வே தாந்தத் துண்மை
யறிந்தவர் புகன்ற வான்மா
விரிதரு வியாபி யென்று
மேவுதத் துவங்கட் கெல்லாங்

* துயின்மல மூண்மைத் தென்னிற் (பா. பே.)

கரியது வென்று மூலப்
பகுதியுங் கடந்து நின்ற
துரியமத தாகுஞ் சுத்த
வெளியென்றுஞ் சொல்லு வாரால் (11)

யாக்கையிற் சிமிழ்ப்புண் டெல்லா
வுருவமாய்க் கருவி னெய்திப்
போக்கொடு வரவு செய்தல்
பொருந்துமஞ் ஞானத் தாகும்
ஆக்குமஞ் ஞான மேதென்
றமைந்திடிற் பகுதி யோடு
நீக்கருந் தத்து வத்தை
வேறென்றாய் நினைத லாகும் (12)

நித்திய மாகி யொன்றாய்
வியாபியாய் நிறைந்து நின்ற
சுத்தமாய்ப் பரம மாகிச்
சுயம்பிர காச மாகித்
தத்துவங் கடந்து நின்ற
புருடனுங் காரந் தன்னோ(டு)
ஒத்துத்தான் வேறென் றெண்ணான்
கருத்தன்யா னென்ன வோதும் (13)

விரிந்தகா ரணத்தி னோடு
காரிய மாகி மேவித்
திருந்திய சகத்துக் கெல்லாங்
காரண மாகித் தீதில்
அரும்பிர கிருதி யாகிப்
பிரதான மவ்வி யத்தம்
பொருந்தலா லான்மாத் தன்னைப்
பரமெனப் புலப்ப டாதால் (14)

தன்னைத்தா னென்று தேற
*வுணர்கல தாகித் தாழ்ந்த
பின்னல்வெண் டிரைசேர் நீரிற்
பிறந்தழி குமிழி போல
மன்னிய யாக்கை தன்னைத்
தானென மயங்கி மாழ்கித்
துன்னிய வின்ப துன்ப
வல்லியிற் றுவக்குண் பானால் (:5)

வருந்துசெய் காம மாதி
யுடற்பகை வயங்கு மான்மாப்
பொருந்திய வியல்ப தன்று
மயக்கத்திற் புணர்ந்த தாகும்
விரிந்தவெம் பிறவி நோய்க்குக்
காரணம் விளங்க முன்னம்
பரிந்துதா னிழைக்கப் பட்டப்
புண்ணிய பாவ மாமால் (16)

நித்திய மாகு மான்மா
வேகமாய் நிகழ்த்து மாயாச்
சந்தியா யளப்பில் பேத
மாமுறு பேதஞ் சாற்றில்
வைத்தநீர்க் குடங்க டோறுந்
தோன்றிடு மதியம் போல
வுய்த்திடு முபாதி தன்னாற்
பற்பல வுருவந் தோன்றும் (17)

காழ்படு தேக்கு வெந்த
கரும்புகை கழுமப் பற்ற
வேழ்பக லூட்டினாலு
மிருவிசும் பழுக்கு றுதால்

---

* உணர்கிலனாகி (பா. பே.)

வாழிமற் றதுபோ லான்மாக்
கரணங்கண் மருவி நின்றுந்
தாழ்தரு மவற்றின் பண்பு
சார்ந்திடா தொழுகு மன்றே (18)

வெளிற்றறி வெறிந்த மெய்ம்மை
முதுக்குறை வுடைய மேலோர்
தளிர்த்தவிச் சகத்தை யெல்லாம்
தற்பர மாகக் காண்பர்
அளிக்குலம் வீழுங் கண்ணி
யரவென மருளு மாபோற்
களித்தபுல் லறிவி னோரிச்
சகத்தினைச் சகமாய்ச் காண்பார் (19)

விகாரமுங் குணமு மின்றி
வியாபியாய்ச் சித்தா யொன்றாய்
மகானெனுந் தத்து வத்தைக்
கடந்துயர் மாயை யூகு
புகாதொளிர் சோதி தன்னைப்
புன்மையோர் சகமாய்க் காண்பர்
தகாததீ வினைகள் செற்றோர்
தற்பர மாகக் காண்பார் (20)

அடுத்தது காட்டுந் தூயப்
பளிங்குபோ லான்மா முன்னர்த்
தொடுத்தது காட்டு மிந்தச்
சுடரினை மறையாற் கேட்டும்
எடுத்தநூல் லுத்தி தன்னு
ளளவையா லெண்ணி நெஞ்சிற்
படுத்திய வுருவந் தானாய்ப்
பாவிக்கிற் பரம தாவான் (21)

தன்னுள்ளே சகத்து மந்தச்
சகத்துளே தானு மாகப்
பின்னம தன்றி யென்று
காண்குவன் பிரமந் தன்னின்
மன்னிய தானல் லாமை
மற்றென்றுங் காண்க லானென்(று)
அன்னகா லத்தின் முத்த
னுகுவன் யோகி யன்றே (22)

உளத்துறை காம மாதி
யொழிவதென் றுலப்பில் பூதந்
துளக்கற வொன்றில் வைகு
மெனவொன்று தொகுத்து நோக்கும்
விளக்குறு மான்மா நித்தம்
வெறுஞ்சக மனித்த மென்னத்
தெளிக்குமென் றன்றே முத்த
னுகுவன் சிறந்த யோகி (23)

கங்கையை முதல வாய
பற்பல நதியுங் கல்லென்
பொங்குதெண் டிரைய வாரி
புகுதிலொன் றுகு மாபோற்
றங்கிய ஞான பாதஞ்
சார்ந்திடு லான்மா யாவுஞ்
சிங்கலில் பிரமந் தன்னிற்
பிறிதின்றி யொன்றுச் சேரும் (24)

ஆதலாற் பிரம மொன்றே
நித்திய மலகைத் தேரிற்
பேதுறத் தோன்று நீரிற்
பிரபஞ்ச மருண்டு தோன்றுங்

தீதுறு மனத்தர் தீய
பிரபஞ்சம் பிரமம் வேறென்
றோதுவ ரொக்க நோக்கும்
யோகிய ரொன்றாய்க் காண்பர் (25)

நிருமல மாகி யொன்றாய்
நித்திய மாகித் தூய்தாய்
மருவிடு ஞானம் ஞான
மொழிந்தது மம்மர் பூத்து
விரியுமஞ் ஞான மென்றுஞ்
சடமென்று மெய்ம்மை பூண்டோர்
ஒருவிடு மாயை யென்று
மோதுவ ருணர்ந்த தக்கோர் (26)

இன்னணம் பிரம மாகுஞ்
சாங்கிய மிசைத்தோ மீதின்
மன்னுற மனத்தைச் சேர்த்தன்
மாண்புடை யோக மாகும்
பன்னரும் ஞானம் யோக
காரணம் பழிப்பில் யோகந்
துன்னுதற் கரிய ஞான
காரண மாகித் தோன்றும் (27)

யோகிய ரடைந்த முத்திச்
சாங்கிய ருற்று வாழ்வர்
சே[illegible]யாகத் தோடு
சாங்கியத் தெளிவு தன்னை
யோகமா யெண்ணி னோரைத்
தத்துவ மறிந்தோ ரென்னச்
சோகமோ கங்கள் செற்ற
தொல்லைமா முனிவர் சொல்வார் (28)

அரும்பெறல் யோக நான்கிற்
கைவந்தோர வவற்றின் போகம்
விரும்புறின் முத்தி யெய்தார்
வெறுவெளி யதனிற் றேன்றும்
பரம்பொரு ளாகு மென்னைப்
பாவித்தோர் முத்தி சேர்வர்
விரிந்திடும் பிரமம் யானே
யெனமறை விளம்பு மன்றே (29)

உலகெலாம் யானே யாகி
யுள்ளுமாய்ப் புறம்பு மாகி
யலகறு முயிர்க ணல்கி
யளித்தவை துடைத்தல் செய்யும்
*நிலையுறும் விச்சைக் சென்றுங்
கரியதாய் நிற்றல் ஞானக்
கலையுணர் முனிவர் காண்ப
ரேனையோர் காண்டல் செய்யார் (30)

பற்பல கந்த மாகி
யிரசமா யுருவாய்ப் பாய
வற்புதப் பரிச மாகி
யனைத்துள வொலியு மாகிச்
சிற்பர மாகி யொன்றாய்ச்
சிறந்தநித் தியமாய் வேதம்
பொற்பொடு பலவாய்க் கூறு
முருவமாய்ப் புருட ளுகி (31)

எங்கணு நிறைந்து நின்ற
வென்னையே டணக ணீத்துப்
பொங்கிய காம மாதி
யுடற்பகை யானும் போக்கித்

* நிலையுறும் விச்சைக் கென்றும் (பா. பே.)

தங்குமுக் குற்ற நீக்கி
முக்குணந் தடிந்து நின்ற
சிங்கலில் கேள்வி மிக்க
முனிவரர் தெளிந்து காண்பர் (32)

மாயையைக் கடிந்த வான்மா
மாயையாஞ் சகத்தை நாளும்
ஒய்வற நடந்தே னென்னை
யின்றிமற் றதுவு மொல்லா
தாயவை யென்கொ லென்னிற்
காந்தமுன் னுடு மூசி
யேயுற வென்மு னீந்த
விருஞ்சக நடக்கு மன்றே (33)

தன்னைத்தான் றெளிய நோக்கித்
தன்னிடைத் தணப்பி லாத
வென்னுரு வதனிற் சேர்ந்தோ
னிருவினைச் சிமிழ்ப்பி னெய்தி
மன்னிய திகிரி போலும்
பவத்தினின் மயங்கா னாகி
யுன்னரு முத்தி வீட்டி
னுவந்தினி திருப்ப னன்றே (34)

பொருவில்சாங் கியயோ கத்திற்
பொருந்திய ஞானந் தன்னை
யரில்கெட விரிந்த கேள்வி
யுடையமா னுக்கர்க் கன்பின்
விரிதரு மைந்தர்க் குண்மை
மேவும்யோ கியர்க்கு நன்கிற்
பரிவுட னுரைக்க வேனை
யவர்கட்குப் பகரோ ணாதால் (35)

சாங்கிய யோக முரைத்தவத்தியாய முற்றிற்று
ஆகத்திருவிருத்தம் 53

---

உ

# மூன்றுவது
# சம்பிர தாய வத்தியாயம்

அவ்வியத்தந் தனிற்காலம் பிரதானம்
புருடனிவை யமையத் தோன்றும்
செவ்விபெறு மிவைகடமிற் சிறந்தசகந்
தோன்றியிடு மதனு லந்த
வெவ்வமறும் பிரமத்தி னுருவாகுஞ்
சகமிதனைச் சகமென் றெண்ணல்
நொவ்வுறுமென் சிப்பியினை வெள்ளியென
மருண்டெண்ணு நோன்மைத் தாமால் (1)

இந்தியங்க ளன்றிநின்று மிந்தியத்தை
யறிவித்தே யியக்கல் செய்யும்
அந்திலுறு மாதாரந் தனிக்கின்றிச்
சகத்தினுக்கா தார மாகு
முந்தியொன்றிற் றேன்றியதன் றெவற்றினையு
முறைமுறையே தோற்று விக்கும்
பந்தமுறு தொடர்ச்சியின்றிப் பற்றும
லெல்விடனும் பற்றி நிற்கும் (2)

பின்னமின்றிப் பின்னமாய் நித்தியா
னந்தமாய்ப் பிரம மாகி
மன்னியிடுங் காட்சிமுத லளவைகளி
னறியாத மாண்பிற் றாகித்
துன்னியிடும் விகற்பமில்லாத் தற்பரத்தைக்
கேள்விகளாற் றெருடக்கப் பட்ட
நன்னிலையஞ் செவியுடைய தக்கோர்மற்
றறிவரென நவிலும் வேதம் (3)

உள்ளுமாய்ப் புறம்புமா யுலகனைத்து
நிறைந்திருக்கு முண்மை யானுந்
தள்ளரிய பரம்பொருள்யான் சகமனைத்தும்
படைத்ததனைத் தரித்து நிற்கும்
வள்ளலும்யா னுபநிடதக் கோயிற்றும்
வீற்றிருந்தம் மறைக்கு மெட்டாத்
தெள்ளரிய ஞானத்தின் றெளிவும்யா
னெனவெதிக டெரிப்ப ரன்றே (4)

புருடனுட னமர்தான மிதுனமா
மீங்கிவற்றைப் பொருந்தக் கூட்டு
மரிதின்வருங் காலமுமற் றவைபோல
விளம்பரிய வநாதி யேனுந்
தெரிவருமவ் வியத்தத்துக் க்நியமா
மவ்வியத்தஞ் சிறந்த வென்றன்
உருவமா மாதலா லிவைமூன்று
மாங்கதனோ டொன்று வன்றே (5)

புருடனென தருளினொடும் பிரகிருதி
தனைப்பார்க்கப் பொறப்பி னோடு
மருவுமகான் முதலாக விசேடாந்த
மரமெவையும் வந்து தோன்றும்
பிரகிருதி யொடுங்கூடிப் புருடனதன்
குணமனைத்தும் பெட்பி னுய்ந்திட்
டொருவரிதாய்ப் பொசிக்குமென வுபநிடதப்
பொருளனைத்து முரைக்கு மன்றே (6)

சொல்லுமகான் றத்துவத்தைப் பிரகிருதி
விகாரமெனச் சொல்லுமா போற்
புல்லும்விக்கி ஞாதாவை விக்கிஞான
சத்தியெனப் புகல்வர் மேலோர்

மல்லன்மகான் றத்துவத்தி ஞங்காரந்
தோன்றுமகான் மறைக்குமான்மாத்
தொல்லையவாங் காரத்திற் றுவக்குண்ட
வான்மாவுஞ் சொல்லினென்றே (7)

ஆங்கதுவே சீவனுமிம் மனங்கரண
மாகவழி பவங்க டோறு
நீங்கரிய சுகதுக்கம் பொசிக்குமந்தக்
கரணத்தி னிகழ்ச்சி தன்மேற்
ருங்குதலா லுயர்சன்மந் தனிலுமுழலும்
பிரகிருதி யோடு சார்ந்து
வாங்கரிய காலத்தாற் றேகியா
மெனத்தெளிந்தோர் வகுப்பர் மாதோ (8)

காலமே யுலகனைத்தும் படைத்தளித்துத்
துடைப்பதுவுங் கருது கின்ற
காலமே நரகசொர்க்கத் திருத்துவதுங்
கடவுளராந் தேவ ரேனுங்
காலமே தன்செயலி னடத்துவது
மென்றக்காற் கணிக்கொ ணுத
காலம்வே றொருவர்செயன் மருவாமற்
றன்செயலோ காட்டு மன்றே (9)

இந்தியங்கள் யாவையினும் சிறந்ததுமன்
மனமதனிற் சிறந்ததென்னில்
அந்தமறு மாங்கார மாங்கதனி
லுயர்ந்ததுமா னதனி னேங்கு
நந்தலறு மவ்வியத்த மதிற்சிறந்த
துறுசிவ னதனி னுளும்
பந்தமறச் சிறந்ததுயர் பிராணனதிற்
சிறந்ததுநீள் பரமா காயம் (10)

உரைத்தபர மாகாயந் தனைக்கடந்தோங்
கொளியினுக்கு மொளியா யோதும்
பரத்தினுக்கும் பரமாகும் பராபரம்யா
னெனைக்கடந்தோ ரில்லை யானே
வரைத்திடுமிச் சகமதனுண் மருவாமற்
காலத்தால் வருவிப் பேனென்
னிரைத்தபொலங் கழல்சேர்ந்தோ ரல்லாதார்
முத்தியெனு நெறியிற் சேரார் (11)

சம்பிரதாய வத்தியாய முற்றும்.
ஆகத்திருவிருத்தம் 64

---

உ

## நான்காவது
## பத்திமையுரைத்த வத்தியாயம்

---

மகமுத லுயர்கன்ம மருவிமை யறுதானந்
தகைபெறு மதியோர்பா லருளொடு தனிநல்கிப்
புகைபடு தழலெய்தித் நவநனி புரிவோரும்
பகருமென் னடியெண்ணு ரெனிலுயர் பதமெய்தார் (1)

உலகெவ னுழையெய்து முலகினு ளெவனெய்தும்
அலகறு முயிர்தோறு முயிரென வமர்வுற்றே
நிலைபெறு கரியாகி நின்றவ னெவனன்றேன்
மலைவரும் யானுமென் றுணர்பவர் மதிவல்லோர் (2)

இந்திரன் முதல்வானோ ரிருடிகண் மனுவாதி
யந்தமி லுயிர்யாவு மின்னமு மருமாயைப்
பந்தம துறவென்னைப் பரிவுட னறியாவா
னந்தலின் மறையொன்றே யென்னி லைதனிறுடும் (3)

அருமக நுகர்வோனு மகமுமம் மகப்யாவும்
புரிதரு தொழிலோரும் யானுயர் புவிநீர்கால்
எரியுயர் நெடுவான மிவையிவை தொறுமேவும்
பரவரு முயர்ஞானம் பசுபதி யெனும்வேதம் (4)

எவரெவர் தமைநாளு மிறைய்வ ரிவரென்னக்
குவிகையி னுடனுளுங் கும்பிடும் வழிபாடா
மவையென தடிதன்னி லடைதரு மெனிலென்போற்
பவமற வருடெய்வ மிலையென மறைபாடும் (5)

அலைகட னடுவெய்தா வறிதுயி லமர்வோனும்
மலர்தலை யுலகெல்லாம் வகைபட வருள்வோனும்
கலைபயில் முனிவோருங் கடவுளரெவர்தாமும்
நிலைபெற வெனைநாளு மடிதொழு நெறியோரே (6)

ஆறறி மறையோரு மலர்கதிர் வடிவேலான்
மாறெறி திறல்வண்கை மன்னரு நாளுளும்
வீறுயர் பொருள்செய்யும் வணிகரும் விதியாகக்
கூறுத னிலைநின்றேற் றொழினுயர் கதிகூடும் (7)

மன்னிய மகமாதித் தொழிலிவை மருவாத
பின்னவர் முதலாகு மிழிதொழி லினர்பெட்பி
னென்னடி தொழுதென்றுந் தங்நிலை யிடைநிற்பின்
மென்மெல மறையோதும் வீடினி தடைவாரால் (8)

மூசிள வரிவண்டார் முகையவிழ் கமலத்தண்
பாசடை மிசைதெண்ணீர் பற்றறு மதுபோல
மாசற வெனைநாளும் வழிபட வவர்செய்யும்
ஆசற வுயர்பாவ மவர்தமை யடையாவால் (9)

என்னிணை யடிதத்தம் மிதயமென் மலர்வைப்போர்
பொன்னடி யினைநாளும் பூசனை புரிகிற்போர்
பன்னக வணைமேவும் பரமன்மென் மலரோன்மற்
றன்னவர் தொழுநாளு மமருல கடைகிற்பார் (10)

மெல்லிலை யுயர்வில்வம் வீழ்சரு கலர்தொட்டுப்
புல்லொடு தளிரேனுங் கைந்நிறை புனலேனு
மல்கிய மகிழ்வாலென் மலரடி மிசை பெய்தோர்
அல்லல தடையாரென் னடியிணை யடைவாரால் (11)

தாமரை யுறைவோனைத் தந்தரு மறையாவும்
யாமுன மருள்செய்தே மிகவொடு மகிழ்வில்லா
மாமுனி வரரென்னைக் குருவென மகிழ்செய்வார்
காமுறு மறமென்றன் கற்பனைதனி னிற்கும் (12)

இராசத குணமாகு மென்னொரு கலைபைந்தேன்
விராயமென் மலரோனாய் மேவரு முலகீனும்
தராதல மகிழ்வெய்துஞ் சத்துவ குணசத்தி
பராவரு மரியாகிப் பல்லுயிர் தனிகாக்கும் (13)

தாமச குணமேவித் தகைபெறு முயர்சத்திக்
காமனை யெரிசெய்யுங் கண்ணுத லுருவாகித்
தேமல ரயனாதி திகழ்தரு வீறுக
வேமுறு முயர்யாவும் வீறுசெய் திடுமன்றே (14)

பத்தியி னுயர்தன்மைப் பான்மையி னருள்யோகச்
சித்தியி னுயர்ஞானத் தெளிவினி னெனையன்பின்
வித்தகர் பணிகிற்பா ரிவர்களின் விழைஞான
தத்துவ நிலைநின்றே பணிபவர் தலைநின்றார் (15)

அலர்கதிர் முனமெல்லென் ருமரை யெனுமந்தண்
மலரவிழ் வதுபோல வெனமுன மகிழ்வோடு
முலகுறு காலத்தி னுற்பவ முறுமென்னு
நிலைபெற வுணர்கிற்போ ரருமறை நெறிகண்டோர் (16)

யோகமு மவைபேணும் யோகியு மெனவேதஞ்
சேகற வுரைசெய்யுந் தெளிபொரு ளெனுமீசன்
மாகமொள் ளெரிதண்ணீர் மண்வளி முதல்யாவும்
ஏகம தாய்நிற்கும் யானென வறிவீரால் (17)

மன்னிய வுயிர்யாவு மருவும கத்துவமுந்
துன்னரு மிறைமேவுந் துகளில்ப ரத்துவமும்
முன்னரி தாய்நிற்கும் பிரமமு முலைவில்லா
வென்னுரு வெனநன்கி னெண்ணின ரறிவுற்ருேர் (18)

வருபர மானந்தக் களியுற மகிழ்வோடும்
பொருவரு நடம்யானே புரிகுவ னெனயாரே
யுருகிமென் மலர்தாய்மெய் யுணர்வொடு தன்னெஞ்சிற்
கருதின ரவர்கண்டீர் கடவுள ரெனவாழ்வார் (19)

தகவொடு மறைகூறு மிப்பொரு டனைநன்கின்
மகவினை புரிகுற்றே மாசெறி மனனேடு
மிகலொடு நட்பின்றிப் புகலிருவினையற்றே
துகனறு முனிவோர்பாற் சொல்லுத லியல்பாமால் (20)

பத்திமை யுரைத்த வத்தியாய முற்றும்.
ஆகத்திருவிருத்தம் 84.

உ

## 5-வது விச்சுவரூப வத்தியாம்

ஐயகம லத்தெழில்செ யானன மனந்தம்
பையரவ கங்கண மணிந்துபடை பற்றும்
கைகளு மனந்தமுயர் கால்களு மனந்த
மெய்களு மனந்தமுயர் மென்முடி யனந்தம் (1)

ஆகியுய ரண்டமவை முற்றுபுனல் சூழப்
போகுயர் சுடர்க்கனலி மற்றது புதைத்தே
யேகியுழல் காலிவைகள் யாவையு மறைக்கு
மாகவெளி யெங்குமெய் வயங்கொளி புதைப்ப (2)

கருந்துள வணிந்தமுகில் கஞ்சமலர் மேலோன்
புரந்தரன் வசுக்களுயர் புங்கவர்கள் யாரும்
விரிந்தகம லத்தினிடை வீழுமிசை வண்டிற்
றிருந்துமறை பாடியுயர் சேவடியின் வீழ (3)

நிற்பன நடப்பனகள் யாவையு நிறைந்த
பற்பல தொகைப்பட விரிந்தபகி ரண்ட
மெற்கதி ரிடைப்படு மணுத்தொகைக ளென்ன
வற்புத வுயிற்பினலம் வந்திடை வழங்க (4)

வெங்கதிர் சுரந்தொழுகு வெய்யவன் வெதுப்பு
மங்கியமிர் தூறியுமி ழாய்கதிர் விரிக்குந்
திங்களொனு முக்கணு முகத்திடை சிறந்தே
தங்கியவ லோகவிரு ளுந்தனி துரப்ப (5)

கொங்குலவு கொன்றைபுனை கோலமுடி தோறும்
கங்கைநதி வீழருவி கல்லென வொலிப்ப
திங்களூறு கண்ணியமிர் தத்துளிகள் சிந்த
மங்குலெனு முத்தரிக மார்பிடை வயங்க (6)

ஆற்றலுறு நீள்புவன கோடியரி பெய்த
மாற்றரிய நூபுரம் வயங்கொளி யெயிற்றுக்
கூற்றுயிர் குடித்தகழ ரேறுமொலி செய்யச்
சீற்றவரி வேங்கையதண் மெல்லுடை சிறப்ப (7)

கையிலனல் நெற்றிவிழி காலுமனல் சூலம்
பெய்யுமன லீறுபொதி பேரழல் கடுக்கு
மெய்யிலன லெங்கணும் விரிந்துசுடர் மண்டப்
பையரவ முப்புரிய நூலொளி பரக்க

ஒளியிெனொளி யாமறை யுணர்ந்தவ ரருந்துந்
தெளியுமமு தாய்ப்பிறவி தீர்த்திடு மருந்தாய்
வெளியில்வெளி யாகியிடு விண்ணவன்மெய்ஞ் ஞானக்
களியுட னடம்புரிதல் கண்டுள மகிழ்ந்தார் (9)

வேறு

அண்ணல்சே வடியி லேத்து
மருந்தவ முனிவ ரோடுந்
தண்ணறுந் துளவோன் வீழ்ந்து
தயாவொடுந் தொழுது போற்றிக்
கண்மணி குளிர்ப்ப வையன்
கதிருமிழ் மேனி நோக்கி
யெண்ணரு மறைகள் பாடி
யெந்தையைப் பழிச்ச லுற்றான் (10)

என்னுடைத் தோழ னுக்கு
நானென வெண்ணி நின்னைச்
சொன்னவை யனைத்து மின்னே
பொறுத்தருள் சுரத்தி யீன்ற

வன்னையும் பிதாவுங் கேடில்
சுற்றமு மறிவு நெஞ்சு
நின்னையே யன்றி வேறு
காண்கிலே னிமல மூர்த்தி (11)

விண்ணவர் இயக்கர் சித்தர்
முனிவர்மென் கமலப் போதிற்
பண்ணவர் முதலா யுள்ளோ
ரனைவரும் பரவை நாப்ப
ணண்ணிய குமிழி போல
வெழுந்துட னுசை மெய்திக்
கண்ணக னுலகத் தோடுந்
தோன்றுத லின்பாற் கண்டேன் (12)

கற்பமோர் கணம தாகிக்
கணமொரு கற்ப மாகு
மற்புதக் கால மியாவு
மையநின் பாலிற் கண்டேன்
சிற்பர மாகி யொன்றாய்த்
தேவர்க்குந் தேவ னாகு
மற்படு தோளா யுன்றன்
மாயையை யறிகி லேனால் (13)

பங்கயன் மால்முக் கண்ண
னென்னுமுப் பகுதி யாகி
யெங்களி லொருவ னாகி
யிருந்தனை யொருகா லத்தின்
எங்களை யொருகா லத்தி
னீன்றளித் தனையோர் காலும்
எங்களி லறியொணாதுன் மாயையி
னியற்கை யெந்தாய் (14)

அண்ணலின் பரமா னந்த
நடத்தினை யன்பி னோக்குங்
கண்ணெனுங் குடங்கை தன்னாற்
களியொடு மள்ளி யள்ளி
யுண்ணவுந் தெவிட்டா தாகி
யுடலெலாந் தித்திக் கின்ற
தெண்ணருந் தேனே யென்னு
விணையடி மலரின் வீழ்ந்தான் (15)

## வேறு

வீழுமெழு மெய்ம்மயிர் சிலிர்க்குமிக மீட்டுந்
தாழுமிறை நின்றுபுரி தாண்டவம் வியக்குங்
காழ்படு மனத்தினொடு கண்கலுழ நின்றே
யூழ்முறை வணங்குமுயர் யோகினி லுறங்கும் (16)

இன்னபுரி நாரணனை யெந்தைமுக நோக்கி
யுன்னுருவ மென்னுருவ மென்னுருவ நீயே
பின்னமிலை யென்றுதழு வப்பெரிய மாயன்
றன்னிகரி விசனுரு வீற்றனி கரந்தான் (17)

கார்நிற முகுந்தனொடு கங்கைபுனை யெந்தை
யோருருவ மாகியவ னுடுத லுவந்தே
பேரறிவு சேர்முனிவர் பிஞ்ஞகன் மலர்த்தாள்
வார்சடை முடித்தலையின் வைத்தனர் பணிந்தார் (18)

## வேறு

வேதாக மங்க ளுரைசெய்ய நின்ற
தெளிவாகி மேவு முலகுக்
காதார மாகி யணுவாகி யாரு
மறியாத ஞான வுருவாய்ப்

பேதாதி பேத வுருவாகி யேக
வுருவாய் நிறைந்த பெரியோய்
பாதார விந்த மொருநாளு நெஞ்ச
மறவாத பான்மை யருள்வாய் (19)

வண்டாகி வேத மறைபாட வென்று
மலர்கின்ற பாத மலரோய்
தொண்டாகி நின்னை யடைவோர்க ளன்றி
யெவரேதொல் வீடு புகுவார்
தண்டாது நின்ற சுகமா யதற்குண்
மருவாதி யக்கு நினையாங்
கண்டாத ரிக்க வெளிநின்ற தென்கொல்
கலைகண்ண தாகு முதலே (20)

சேணாட ராகி மதியாகி வெய்ய
கதிர்சிந்து தூய ரவியா
மாணாடு கோப மதயானை கொன்ற
வரியாகி யாதி யயனு
யூணாகி யுண்ணு மவனாகி யெங்கு
முள்ளாகி நின்ற வொருநீ
காணாது நின்ற வருமாய மென்கொல்
கலைகண்ண தாய பெரியோய் (21)

அணுவா மெவைக்கு மணுவா யிருத்தி
யகிலங்கண் மூடி யொளிருந்
தணியாத வண்ட வுருவா யிருத்தி
தருபஞ்ச பூத மதிவான்
மணியா மருக்கன் உயர்சோம யாசி
வடிவா யிருத்தி மறையுங்
கணியா திருத்தி நினையார் கணிப்பர்
கலைகண்ண தாய பெரியோர் (22)

உருவாகி மற்றை யருவாகி நீடு
முருவோ டியைந்த வருவாய்
மருவா யதற்குண் மணமா யொளிக்கு
ளொளியாய் மறைக்குண் மறையும்
பொருளாய் வழுத்து மடியா ருளத்து
ளுறைகின்ற போத வுருவாய்
கரியாய் கருத்தி லினையார் குணிப்பர்
களைகண்ண தாய பெரியோய் (23)

ஓங்கார மாகி விபுவாகி மேவு
முயிர்தோறு நின்ற கரியா
யாங்கார மின்றி யடிபேணு கின்ற
வறவோர்த நெஞ்ச முறைவோய்
நீங்காம லெங்கும் வெளியூ டமர்ந்து
மறைகின்ற கள்வ நினையாம்
பாங்காக வுன்ற னடியாரி னின்று
பணிகின்ற தென்று பகர்வாய் (24)

அயனாகி முந்தை யுலகங் கடந்து
மரியா யளித்து மிளிரும்
வெயில்கோடி கக்கும் மழுவாளனாகி
விரகோ டழித்து மவையூ
டியலாதெ வைக்கு நடுவாகி நின்ற
விறைவாநின் மாயை புரியுஞ்
செயலார்தெ ரிப்பர் வடமேரு வெற்போர்
சிலையாய் வளைத்த திறலோய் (25)

இதுவன்று நின்ற திதுவன்று நின்ற
தெனவோத லன்றி மறையும்
இதுவென்று ரைக்க முடியாது நின்ற
வெரிதும்மும் வெய்ய மழுவோய்

பதியாகு நின்னை யடைகின்ற தூய
பசுமாயை தீர வருள்வோய்
முதலீற தன்றி யுறைவோய்நின் மாயை
யெவரேகொன் முற்று மறிவார் (26)

மின்கோடி கோடி தவழ்கின்ற தென்ன
வெளிமூடி நின்ற வுருவ
மன்பொடு காண முடியாது கண்க
ளயர்கின்ற துள்ள மறவோய்
முன்போ லுருக்கொ டெமையாடி யென்று
முனிவோர்க ணின்று பணியப்
பொன்போ லலர்ந்த மலர்மாரி சிந்தி
யிமையோர் வணங்கு பொழுதின் (27)

## வேறு

மலர்தலை யுலகம் யாவும்
பொதிந்தமா னுருவ நீங்கி
யிலகொளி கணிச்சிப் புத்தேண்
மடங்கலா சனத்தி னெய்தக்
கலையுணர் முனிவ ரீசன்
கழலிணை வழுத்தி நின்றார்
அலர்கதிர் நேமி யோனும்
தன்னுரு வமைந்து தாழ்ந்தான் (28)

தாழ்ந்துமென் மலர்க டூவித்
தழைத்தபே ரன்பி னோடுஞ்
சூழ்ந்தனர் மீட்டு மீட்டுந்
துணையடி வணங்கி யேத்தி
வாழ்ந்தன மென்ன நின்ற
முகுந்தனை மறையோர் தம்மை
யாழ்ந்தபே ரன்பி னோக்கி
யையனீ தறைய லுற்றான் (29)

விச்சுவரூப வத்தியாய முற்றிற்று
ஆகத்திருவிருத்தம் 113

---

உ

## ஆறுவது
## சிவசக்தியின் செயலுரைத்த வத்தியயாம்

---

உலகெலா மளித்துங் காத்து
    மொடுக்கியு மீட்டு மீட்டும்
அலகறு முறையி னிவ்வா
    றியற்றுவான் யானே யம்பொன்
மலரயன் றன்னை முன்னர்
    வகுத்தவன் றனக்கு ஞானக்
கலைமுழு துணர்த்தி யாக்குந்
    தொழிலையுங் கற்பித் தேனால் (1)

கடல்வயி றுளைந்து பெற்ற
    கவுத்துவங் கதிக ணீட்டி
விடுசுடர்ப் பருதி யோட்டி
    வெயில்கிடந் திமைக்கு மார்பின்
உடல்சினத் திகிரி யோய்மற்
    றுனையளித் துலக மியாவு
மிடர்கெட வுவந்து காக்குந்
    தலைமையு மினிதி னிந்தோம் (2)

கரைக்குறும் பெறியுந் தெண்ணீர்க்
    கடல்விட முண்டு விண்ணோர்ப்
புரக்கும்வெண் ணீற்று மேனிப்
    புரிசடைப் பவளக் குன்று
முருத்திர னாகி யெல்லா
    வுயிர்களும் பிறந்துஞ் செத்தும்
வருத்தமுற் றிடாம னன்கின்
    மாய்த்திளைப் பாற்றுவே மால் (3)

செந்தழற் கடவு டேவர்
தென்புலத் தவர்கட் கூட்டு
நந்தலி லவியு மற்றைப்
பலிகளும் பரித்தெந் நாளும்
அந்தமி லுணர்வு நன்கி
னடுதலுண் டவைய றுத்தல்
பந்தமி லெமது சத்தி
பண்ணிய செயல தாமால் (4)

ஆழகடற் கிறைவ னென்றன்
சத்தியா லலர்ந்து தோன்றும்
பாழிமா லுலக மெல்லாங்
குளிர்விக்கும் பவன வேந்து
மூழ்முறை பிறழா துள்ளும்
புறமுமா யுலவி யாகம்
வாழிய பரிக்கு மாறு
மென்செய லாகு மன்றே (5)

இந்திர னுலகு காத்தன்
மறலியெவ் வுயிருங் கோறல்
சந்திர னமர ருய்ய
வமுதினை யளித்த ருவில்
வெந்திற லருக்கன் வெய்ய
கதிர்மழை விடுத்த னாளு
மந்தமி னிதியத் தோடு
மளகைவேந் தரசு செய்தல் (6)

நிருதிகொ ளெயிற்றுப் பேழ்வா
யரக்கரைப் பரித்த னெய்தோய்ந்
துருகெழு சூல மேந்து
முருத்திர னுலறு குஞ்சித்

திருகுவெஞ் சினத்த பூத
பதியெனச் சிறந்து நிற்றன்
முருகவே டேவர் சேனு
பதியென முதன்மை யெய்தல் (7)

ஐயங்கரன் கணங்கட் கெல்லா
முதல்வனு யமர்தல் சேடன்
தங்குமிவ் வுலகந் தாங்க
றகைபெறு மரீசி யாதி
புங்கவ ருலகம் பூத்தல்
பூமக டிருவி னெய்தல்
மங்கல வாணி நான்கு
வாக்கினை யினிது நல்கல் (8)

கரைக்குறும் பெறியா தொல்லென்
கடலினை வடவை யுண்டல்
விரைத்துழாய் முகுந்த னுதி
விண்ணவ ரியக்கர் சித்தர்
உரைத்திடு கருடர் பூதர்
மனுக்கள் சாரணர்க ளோதுங்
கருத்துறு காட்டை யாதி
பரார்த்தமீ ருய காலம் (9)

நால்வகைத் தோற்றத் துள்ள
சராசர புவன நான்கிற்
சால்வுறு பஞ்ச பூத
மனமுதற் கரணந் தாவின்
ஏல்பிர கிருதி யெய்துஞ்
சகத்தின்கா ரணமா மாயை
பால்படு தொழிலி னீற்றல்
பகுதியைப் புருடன் பார்த்தல் (10)

ஈங்கிவை யனைத்து மென்றன்
சத்திக ளியற்று கின்ற
தீங்கில்கா ரியங்க ளாகுஞ்
செகத்தினைச் சேர்ந்து நின்று
நீங்கியு நீங்கா துற்ற
வென்னிலை நிகழ்த்தல் செய்தேம்
பாங்குற விதனை யோர்ந்தோர்
பவக்கடல் படிந்து மாயார் (11)

சிவசத்தியின் செயலுரைத்த வத்தியாயம்
முற்றும்.
ஆகத்திருவிருத்தம் 124

---

எ

## ஏழாவது விபூதியுரைத்த வத்தியாயம்

---

மனம்வாக்குக் காயத்துக்குக் கெட்டாது மாயையெனுங்
கனையிருட்பாழ் கடந்துநின்ற துரியம்யான் கடவுளரு
நினைவரிய பிரமும்யான் நித்தியம்யான் நிட்களம்யான்
றனையுணர்ந்தோ ருளமதனி லகலாத தத்துவம்யான் (1)

பிரமர்களி னன்முகன்யான் பெட்புறுமா யாவிகளிற்
பொருவரிய நாரணன்யான் போதமுறும் யோகிகளின்
மருவரிய சம்புவும்யான் மடந்தையரி லம்பிகையான்
எரிகதிரா தித்தியரி லேத்தரிய விட்டுணுயான் (2)

உருத்திரரிற் சங்கரன்யா னுடுக்கடமி னுடுபதியான்
பரித்தபுகழ் வசுக்கடமிற் பாவகன்யான் பறவைகளின்
விரித்தசிறைக் கலுழன்யான் விண்ணவரி லிந்திரன்யான்
றரித்தவரி வில்லிகளிற் ரூழ்தடக்கை யிராமனுநான் (3)

ஆனைகளிற் றிறலயிரா வணம்யான்வா ளசுரர்தமின்
ஞானமுழு துணர்ந்தருளு நற்பிரக லாதனன்யான்
மோனமுறு மிருடிகளில் வசிட்டன்யான் முனிவரரில்
ஈனமறு வியாதன்யான் கணங்கடமில் விநாயகன்யான் (4)

பொருவரிய வீரர்தமிற் புகல்வீர பத்திரன்யான்
ஒருவரிய விரதத்திற் சத்தியம்யான் ஒப்பரிதாம்
வெருவருநற் றொழிலோரின் விச்சுவகன் மாவும்யான்
றெரிவருநூற் சித்தர்தமிற் சிறப்புடைய கபிலனும்யான் (5)

வரைகளிற்பொன் மேருவும்யான் பொருபடையில்
[வச்சிரம்யான்
றெரிவரிய சாமத்திற் றிகழ்சேட்ட சாமம்யான்
கருதியறி மனுக்கடமிற் சுவாயம்பு மனுவும்யான்
*றெரிவரிய தேயத்திற் றிகழ்பிரம வர்த்தம்யான் (6)

நதிகடமிற் கங்கையான் நகரிகளிற் காசியான்
றுதியுறுநல் விஞ்சைகளிற் சொல்பிரம விஞ்சையான்
அதிகமுறு ஞானத்திற் சிவஞான மாவேனன்
விதியுறுமைம் பூதத்தில் விளங்கியவா காயம்யான் (7)

அக்கரங்க டமிற்சிறந்த வகரம்யான் றருக்கடமிற்
றெருக்குயரைந் தருவும்யான் சுரபிகளிற் றேனுவும்யான்
றக்கவுயர் கதிகடமின் முத்தியும்யான் சாற்றரிய
மக்கடமிற் பகையொறுக்கும் வாட்டடக்கை மன்னவன்யான்
(8)

பரம்பொருளாங் கடவுளரிற் பகர்பரமேச் சுரனும்யான்
மரங்கடமி லரசும்யான் வகுப்பவற்றிற் காலமும்யான்
அரந்தைகெடு மியக்கர்தமிற் குபேரன்யா னலைபுனலின்
இரங்குகடல் யான்றேவ விருடிகளி னாரதன்யான் (9)

* தெய்வத்திற் றிகழ்பிரம வர்த்தம் (பா. பே.)

நச்செயிற்ற சர்ப்பத்தில் வாசுகிநா ளுகத்தின்
அச்சணங்கா ரனந்தன்யா னரும்பெறற்றென் புலத்தோரின்
இச்சையுறு மரியமான் யானீர்வா ழினமயவரிற்
செச்சைபுனை வருணன்யான் றிகழ்மீனின் மகரம்யான் (10)

திரிதருகந் தருவர்தமிற் சித்திரத்தே ரவனும்யான்
பொருவரிய விந்தியத்தின் மனமும்யான் பூதத்தின்
மருவுறுநற் சேதனம்யான் மாமறையிற் சாமம்யான்
அரிதுணரும் யாகத்திற் செபயாக மாவேனுன் (11)

எழிலுடையோ ரெவர்களினும் வேனில்வேள் யான்புனிதந்
தழைபவரிற் கலையூருந் தலைவன்யான் கொல்வோரின்
விழைவுறுநற் கூற்றும்யான் வெல்வார்பால் வெற்றியான்
பழுதறுநற் சந்தச்சிற் பழிப்பறுகா யத்திரியான் (12)

இருதுவினி லிளவேனிற் றிங்களின்மார் கழித்திங்கள்
பொருவரிய வஞ்சகத்திற் பொருசூது புரோகிதரின்
* மருவரிய வியாழமுயர் வாகவியில் வெள்ளியென
வுரைசெயிவை யனைத்தும்யா னுரையாத பொருளும்யான்
(13)

என்றென்னை யறிமின்க ளியம்பிடுமான் மாவெல்லம்
பொன்றவரும் பசுவாகும் யான்பதியாம் புகல்கின்ற
மன்றவுயர் பசுக்கடமை மாயையினாற் பிணிப்பானும்
துன்றுபிணி விடுவானும் யானென்னத் துணிவீரால் (14)

மனம்புத்தி யாங்காரம் வருபஞ்ச பூதமிக
நினைந்திடுஞா னேந்தியம்பின் னிகழ்த்துறுகன் மேந்தியஞ்சீர்
புனைந்திடுஞா னேந்தியத்தின் விடயங்கள் புகலரிதா
முனம்புகலும் பிரகிருதி சம்பந்த மெனமொழிவார் (15)

* மருவரிய வியாழமுயர் வரகவியல் வெள்ளி (பா. பே.)

சாற்றரிய விருபத்து நான்காய தத்துவமும்
போற்றுபிர தானத்திற் பொருந்தியிடு மவ்வியத்த
மாற்றலுற வமைந்தோங்கி வருசகத்தின் காரணமென்
றாற்றமுறு மறையாவு மொழியாம லுரைத்திடுமால் (16)

முக்குணத்தின் சமத்துவத்தை மொழிந்தபிர தானமென்றுந்
தக்கபிர கிருதியென்றுஞ் சாற்றுவர்கண் மதிவல்லோர்
மிக்கபுகழ் சாத்துவித குணம்ஞான மிகுதமத்தின்
மெுக்கருணந் தனைமேலோ ரஞ்ஞான மெனச்சொல்வார் (17)

சாத்துவித குணத்தோடுந் தாமதமாங் குணந்தழுவி
னேத்தரிய ரசோகுணமா மீங்கிவையும் யாவருக்குங்
காத்தலரு நல்வினையுந் தீவினையுங் கனன்றுயிரை
யார்த்திடுதாம் பாகுமென வறிவுடையோ ரிசைத்திடுவார் (18)

பொருந்தவிச்சை யறவுமிதம் புகலாசை துவேசமிக
வருந்தபிணி வேசமென விவையைந்தும் *வளைத்துயிரைத்
திருந்துறக்கட் டுறுபாசஞ் செப்புமிவை யனைத்தினுக்கும்
விரிந்திடுமா மாயைதனைக் காரணமாய் விளம்புவார் (19)

**வேறு**

மூலமாம் பிரகிருதி புருடன்மகா
 னுதிகண்மொய் விகாரம் யாவும்
காலமுட னிகழ்கட்டுக் கட்டுவிப்போ
 னுயர்பாசம் பசுக்க ளியாவும்
சால்புடையோர் யானென்பர் தற்பரமாம்
 பிரமம்யா னென்று தேர்ந்தோர்
சீலமுடன் யாவருக்குஞ் கெலவரிதா
 முயர்வீட்டிற் சேர்வர் மாதோ (20)

**விபூதியுரைத்த வத்தியாயம் முற்றிற்று**
**ஆக திருவிருத்தம் 144.**

---

* வளைந்துயிரை (பா. பே.)

உ

# 8-வது பிரபஞ்சத் தோற்முறைத்த வத்தியாயம்

ஒருமுதலா மெனக்கெங்கு முயர்மூல
மாயைதனை யோனி யென்பர்
மருவியதிற் கருவைப்பப் பிரதான
முதலெவையும் வந்து தோன்றும்
விரிஃதிர்கா லெரிபசும்பொ னண்டமவற்
றினிற்றோன்றும் மதனுள் வெய்தின்
முருகுவிரிச் செழுந்தோட்டு முண்டகத்து
வீற்றிருக்கு முதல்வன் றோன்றும் (1)

உரைத்தமல ரயனிடத்திற் சராசரங்க
ளுதிக்குமிவை யனைத்து முன்னம்
வருத்தமற வீன்றவெனைத் தந்தையென
வறியாமன் மறைக்கு மாயை
நிறைத்திடும்யோ னிகடோறு முதித்திடுவோற்
கியான்றந்தை நிலவு மாயை
யருத்தியுட னீன்றெடுத்த வன்னையென
வறிந்தோரே யறிவுள் ளோரே (2)

என்னையுயர் தந்தையென வறிந்தோர்க
ளிரும்பிறவிக் கடலின் வீழ்க்கு
முன்னைவினை தனைநீக்கு முதுக்குறைந்தோ
ரென்னையன்றி மற்றோர் தெய்வந்
தன்னையளித் தவனென்ன வுரைத்திடுவோர்
*தன்றந்தை யகத்துண் மேவ
அன்னியனைத் தந்தையெனும் விலைமாத
ரருள்புதல்வ ரனையர் மாதோ (3)

* தந்தை தாயகத்துண் மேவ அன்னையெனும் (பா. பே.)

அழிவதுல கெஞ்ஞான்று மழியாத
 பரம்பொருள்யா னென்ன நெஞ்சின்
விழைவிஞட ேனக்குநர்யா ரவர்கடம
 துயிர்குறையா மேலோ ரன்னோர்
பழையதுவா யொன்ருகிப் பரம்பொருளாந்
 தற்பரத்திற் சேர்வ ரென்ன
எழுதரிய மறையனைத்துந் துயிலாமற்
 கிடந்தலறி யிசைக்கு மன்றே (4)

சூக்குமங்க டமைமிகவுஞ் சொல்லரிய
 சடங்கத்தை மகேசன் றன்னை
நீக்கரிய பிராணத்தின் விநியோகந்
 தனையறிந்தோர் நிமல மாகி
வாக்கினுக்கு மனத்தினுக்கு மெட்டாத
 பரம்பொருளாய் வைகு மென்றன்
ருக்கணங்கார் பதமலரி னிழறன்னை
 யெந்நாளுஞ் சார்ந்து வாழ்வார் (5)

சடங்கமெலா மறிதன்மிக வருதிருதி
 சாற்றரிய வநாதி போத
மடங்கலருஞ் சுதந்திருதை குறையாமல்
 வளர்சக்தி யனந்த சத்தி
யடங்குமனத் தொடுஞ்சகல தத்துவத்தின்
 மயமாகி யமர்ந்து நின்ற
வொடுங்கருந்தன் மாத்திரையைச் சூக்குமமென்
 றறிவுடையோ ருரைப்ப ரன்றே (6)

அலகிறந்த வான்மாவை யருமாயை
 பிணித்தல்விநி யோக மாகும்
உலகினுக்குங் காரணமாஞ் சத்திதனைக்
 கடந்துசத்தி யோடும் வைகும்

நிலவுபுகழ்க் கடவுடனை மகேசனெனை
நிகழ்த்திடுவ ரவன்யா னென்னைப்
பலவெனவு மொன்றெனவும் பதியெனவும்
விபுவெனவும் பகரும் வேதம் (7)

பிரபஞ்சத்தோற்ற முரைத்த வத்தியாயம் முற்றிற்று
ஆகத்திருவிருத்தம் 151

---

௳

## ஒன்பதாவது
## மாயா விகார முரைத்தவத்தியாயம்

---

என்னுமுழு முதலாகிய விறைகூறலு மகிழ்வுற்
றுன்னுமுள முருகாமயிர் பொடியாவுரை குழறு
பொன்னுரடி பணியாவிழி பனியாமறை புகலாப்
பைங்நாகணை யுறைவோன்முதன் முனிவோரிவை பகர்வார் (1)

அருவாய்வெறு வெளியாய்மல மணையாதுய ரொருநீ
யுருவாகிய சகமாயதை யுரைநீயென மொழிய
நரைமால்விடை யிவருந்தனி நாதன்மறை கமழுந்
திருவாய்மலர் மலராமுகிழ் நகையோடிவை செப்பும் (2)

சகம்யானல னெனையின்றியவ் வுலகின்றுத யங்கும்
புகுமாயைநி மித்தத்தது புகலாயுல குளதாந்
தருமாயையு மென்முன்னுழி தரின்மற்றது சடமாம்
பகரென்செயல் கொடுமாயையு முலகந்தனி பரிக்கும் (3)

உருவத்துறு சகம்யாவையு முறுமாயையு முதவித்
தருகாரணம் யானுதலி னென்னைப்புக றக்கோர்
விரிவிச்சுவ வுருவத்தின னென்பாருயர் வேதம்
இருளற்றறு பலவென்பது மொன்றென்பது மெனையே (4)

ஒன்ருகியும் பலவாகியு முளதாயில தாயு
நின்றேனையிவ் வுலகத்துட னிகழ்காரண மென்று
மன்றென்று முரைப்பாருல கழிவுற்றிடு காலும்
பொன்ருதுயர் வுறுமாயையு காதேபுரி கிற்பேன் (5)

**வேறு**

உரைப்பரிய வவ்வியத்த மூடுபல சத்தி
நிரைத்தெழு மவற்றுளொரு சத்திநிக ரற்றே
*வரைத்தபுரு டன்செயன் மறைக்குமொரு சத்தி
தெருப்பரு மபேதமுறு பேதமுறல் செய்யும் (6)

பின்னுமொரு சத்திபெறு முத்தியை யளிக்கும்
மன்னியமம தின்றியழி வின்றியலை வின்றி
மூன்னெடுபின் னீன்றிமுத லாகியொளி யாகி
மன்னியிடு தற்பரம தென்னுருவ மாதோ (7)

காயமனம் வாக்கிவை கடந்துதனி நிற்ப
தாயபிர மத்திடை படத்திலமர் நூலின்
†ஏயவுல கங்களெனி னும்மவையி னெய்தேன்
மாயையி னியற்றுவன் மறைந்துமறை யாதே (8)

அணுவிலணு வாயசல மாய்மறைகள் யாவுந்
துணிபொருள தாயொளிசெய் சோதிமய மாகுந்
தணிவரிய தத்துவம றிந்தவர்க டாமே
பிணியுறுது யர்க்கடல் கடந்தபெரி யோரே (9)

பரம்பரம தற்றுயர் பராபரம தாகிப்
பிரமவொளி யாயொளியு ணின்ருெளி பிறங்கு
மிரண்மயம தாயொளிரு மென்றனைமென் மெல்லத்
திரமுடைய நெஞ்சினிடை யன்றியுறை யாதால் (10)

---

* வரைத்தபொரு டன்செயல் (பா. பே.)

† ஏயுமுல கங்கள் (பா. பே.)

ஏகவுரு வாயுயிர்க ளெங்கணு நிறைந்தே
யோகையொழி யாதுறையு ஞானவொளி யோதுஞ்
சோகமொடு மோகமெறி தொன்முனிவ ராகும்
யோகியரு ளத்திலிடை யன்றியுறை யாதால் (11)

பயன்விழைக லாதுகரு மம்பல வியற்றின்
மயலறும தற்றிடின் வயங்கறிவு சேரும்
இயலுமறி வெய்திலுறு மிருவினைகள் பாறிச்
செயலொடு மெனைக்கருது சிந்தைவரு மன்றே (12)

உரையுமன முந்தலரியி றப்பவரும் யோகம்
புரிபவரு நாடரிய தாம்புனித ஞானம்
அருளினுரை செய்தனமு மக்கிதனை யற்பிற்
றெருளுடையர் பாலலது செப்பியிட லாகா (13)

மாயா விகார முரைத்த வத்தியாய முற்றிற்று
ஆகத்திருவிருத்தம் 164

---

௰

## பத்தாவது தத்துவ தரிசனமுரைத்த வத்தியாயம்

---

அலிங்கமவ் வியத்த மாகு
மாய்சுடர்ப் பிழம்பாய் நின்ற
விலிங்கமே பிரம மாகு
மியன்றகா ரணமா யென்றுங்
கலங்கலில் பொருளா யொன்றுய்க்
கணித்திடும் பிரமந் தன்னைப்
புலன்கெட வினிதி னேற்ற
புண்ணியப் * புலவர் காண்பர் (1)

---

* புதல்வர் காண்பர் (பா. பே.)

மின்படு மேகந் துஞ்சும்
வரைகளின் கானின் மேவி
யென்பெழ வினிதி ஞேற்றுத்
தீர்த்தங்க ளவையு மாடித்
தன்புல னவித்து வெய்யத்
தழலிடைத் தவஞ்செய் தாலும்
அன்பினு லன்றி யெம்மைக்
காண்குத லரிய தாமல் (2)

மைத்தகு மாயை யென்று
மதுநுகர்ந் தறிவி லோர்கண்
மெய்த்தகும் பிரபஞ் சத்தை
வேறுவே ருகக் காண்பார்
சுத்தராய் ஞானு னந்தச்
செழுங்கட லதனிற் ருேய்ந்து
தத்துவ மறிந்தோ ரொன்ருய்த்
தம்முளே சகத்தைக் காண்பார் (3)

எண்ணுறு மெண்ணெய் போல
வெங்கணு நிரம்பி நிற்கு
நண்ணரும் பிரமந் தன்னி
னண்ணிய சீவன் முத்தர்
விண்முத லாய பூத
மெவற்றினு மேவி யென்போற்
பண்ணருந் திருட்டி யாதி
பண்ணினும் பண்ணு வாரால் (4)

பிரமமே யன்றி வேறு
பிரித்துரைத் திடிலி ரண்டாம்
அரியநற் பொருளி லாத
வாற்றினு லறிவுக் கெட்டா

வொருவனு மீசன் யானே
யுளனெனு வைய மின்றித்
தெருளுற வுணர்ந்து நாளுஞ்
சிந்தையு ளிருத்து விரால் (5)

கண்மலர் திங்க ளங்கி
கனைகதிர்ப் பருதி யின்றி
நண்ணிய பொருளைத் தன்ன
தொளியினு ளுட மாட்டா
தண்ணலம் பிரமந் தன்னைச்
சுடர்களா லறிய வொண்ணு
தெண்ணரும் பிரமந் தன்னுற்
காணலாஞ் சுடர்கள் யாவும் (6)

நித்தியா னந்த மாகி
நிமலமாம் பிரமந் தன்னை
தத்துவ வித்தா யுள்ளோர்
பிரணவந் தன்னு லென்றும்
உத்தம தியானஞ் செய்யா
வுளமுவந் தெனது தாளிற்
பத்திசெய் தென்பால் பாலிற்
பால்கலந் தென்னச் சேர்வார் (7)

பாருமன் றழலு மன்று
பகலுமன் றிரவு மன்று
நீருமன் றகல்வா னன்று
நிகழ்வளி மண்ணு மன்று
யாருமன் றுகி யொன்றும்
யானென்றே பரமா காயஞ்
சேர்வரும் பிரமந் தன்னை
முனிவரர் தேர்வ ரன்றே (8)

வச்சிரப் படைக டம்மால்
வலியினுற் செகுத்த லொண்ணு
தச்சணங் கெரியா லென்று
மெரிக்கொணு தலைகொ ணீரா
லிச்சையி னிரக்க வொண்ணு
தென்றுமோர் தகுதி யாகி
நிச்சய மாகி நிற்கு
நிருமல மாகுஞ் சோதி (9)

இன்னண மறைகள் யாவுந்
தெளிந்தெடுத் தியம்பு கின்ற
பன்னரு ஞான மென்று
மமிர்தத்தைப் பரிவு கூர்ந்து
நன்னயத் தோடுஞ் சொன்ன
நாரணன் முதலா நீவிர்
மன்னுமென் றொண்ட ராகி
வாழ்மின்க ளென்று சொன்னுன் (10)

என்றலும் விழிநீர் சோர
வீதயநெக் குருக மேனி
துன்றிய மயிர்கள் யாவுங்
குச்சென நிரைத்துத் தோன்ற
மன்றலந் துளவோ ஞதி
முனிவரர் வணங்கி யேத்திப்
பொன்றிகழ் கணிச்சி யானே
டின்னவை புகல லுற்ருர் (11)

தத்துவ தரிசனமுரைத்த வத்தியாயமுற்றும்
ஆகத்திருவிருத்தம் 175

---

௨

## பதினொன்றாவது

## யோகமுரைத்த வத்தியாயம்

---

கோங்கிள முகிழை வென்று
குலவரை யெட்டு முட்க
வீங்கிய தடமென் கொங்கை
வேற்றடங் கண்ணி பங்கர்
சாங்கிய மனைத்து நின்பாற்
கேட்டனந் தவத்தின் மேலோர்
நீங்கரும் யோகந் தன்னை
நிகழ்த்தென நிகழ்த்த லுற்றான் (1)

மன்னிய யோகந் தன்னால்
ஞானம்வந் தெய்து மந்த
வுன்னரு ஞானந் தன்னால்
யோகம்வந் தினிதி னெய்தும்
இன்னவை யிரண்டுங் கைவந்
திறைஞ்சினோன் றனக்கி யான்மற்
றன்னிய னல்ல னன்னோன்
றன்னுட னொருவ னாவேன் (2)

சூனிய மாகித் தோற்றாத்
தன்மையாஞ் சொரூப மேந்த
மோனமாம் யோகந் தன்னாற்
சிந்திப்பா ரதனை முற்று
மானவர் பாவ யோக
மென்பரென் றேடுங் கூட்டும்
ஈனமில் யோகந் தன்னை
மகாயோக மென்று சொல்வார் (3)

எமையுளத் திருத்தும் யோகந்
 தனக்குமற் றேனைத் தேவர்
தமையுளத் திருத்தும் யோக
 நிகரெனச் சாற்ற லாமே
யனமவுற வென்னை யுள்ளத்
 திருத்தியஞ் செழுத்து மோர்ந்தோர்
இமையவ ராகி வாழ்வா
 ரென்பதற் கைய மின்றே (4)

என்னரு டன்று லென்னை
 யிதயத்துட் காண்ப தல்லால்
என்னரு ளில்லோர் கோடி
 யிவுளிமா மகங்க ளாற்றிக்
கன்முக டேறிப் பன்னாட்
 காய்கிழங் கருந்தி யெய்தா
வுன்னருந் தவஞ்செய் தாலு
 மென்னிலை யுணரொ ணாதால் (5)

இயமநன் னியம மேத்து
 மாசனம் பிராணா யாமம்
உயர்புல னுளத்தில் வாங்கும்
 பிரத்தியா கார மோங்கு
தயையுடன் சித்தஞ் சேர்த்துந்
 தாரணை தியான மென்று
மயர்வறு சமாதி யெட்டும்
 வகுத்தநல் யோகத் தங்கம் (6)

ஆங்கவை களிற்கொல் லாமை
 மெய்ம்மைகள் ளாமை யன்பி
னோங்குமிந் தியம டக்க
 லொருவர்பா லேற்றி டாமை

யீங்கிவை யியம மாகு
 மிருந்தவ மறைக டோதல்
தாங்கரு மகிழ்ச்சி பூசை
 சவுசநன் னியம மாகும் (7)

இருகுறங் கதனிற் பொற்ற
 ளிரண்டையு மாறி யேற்றி
மருளற விருத்தல் பத்மா
 சனமென வகுத்துச் சொல்வார்
பொருவரு முழங்காற் சந்திக்
 குட்புறந் தன்னுண் மாறி
விரிமலர்ப் பாதஞ் சேர்த்தல்
 சோத்திக மென்பர் மேலோர் (8)

இவைமுத லாக நூலோர்
 இயம்புமா சனங்க டம்மில்
உவகைகூ ராச னத்தி
 லிருந்துயர் யோகஞ் செய்தல்
நவையிலா தாகும் யாக்கை
 நண்ணிய வளிபி ராணன்
றவலற வதைநி றுத்த
 றன்னையா யாம மென்பார் (9)

சிறந்திடு செபத்தோ டேய்தல்
 சகற்பமாஞ் செபத்தை நீங்கு
மறங்கிளர் பிராணு யாமம்
 கற்பமோங் காரத் தோடு
உறைந்துயர் கின்ற காயத்
 திரியினை யுயிர்ப்ப வித்துப்
பிறங்கிட முக்கா னன்கிற்
 சபித்தலும் பிராணு யாமம் (10)

போற்றிரே சகநன் மூச்சை
விடுக்குதல் புகன்ற வாவி
யேற்றுத றன்னை மிக்க
பூரக மாகு மென்பர்
ஆற்றலி னிறுத்த றன்னைக்
கும்பக மாகு மென்பர்
சாற்றரும் பிராணு யாமங்
கைவருந் தகைமை யோரே (11)

இந்தியம் விடயந் தன்னி
னியன்றிடா தடக்க றன்னைப்
பந்தமுற் றுயர்ந்தோர் பார்க்கிற்
பிரத்தியா கார மென்பர்
உந்தியி னிதயந் தன்னி
னுச்சியிற் சித்தந் தன்னை
மைந்துற நிறுத்த றன்னைத்
தாரணை யென்பர் மாதோ (12)

எரியுமிழ் மழுவோர் கையின்
மானொரு கரத்தி னேந்தும்
உருவமா யென்னை யுள்ளத்
திருத்துத றியான மாகும்
அருவமா யிடங்க ளின்றி
மந்திர மின்றித் தன்னைத்
தெரிவுற வெங்கு நோக்கல்
சிறந்திடுஞ் சமாதி யாமால் (13)

பன்னிரு பிராணு யாமம்
பயின்றிடு கால மோதிற்
பின்னமாம் புலன்கண் மீட்கும்
பிரத்தியா கார காலங்

அன்னது பன்னி ரண்டு
முறைசெயுங் கால மாயின்
மன்னிய யோக மாட்சி
மருவுதா ரணையின் காலம் (14)

தாரணை பன்னி ரண்டு
செய்திடுங் காலந் தாவில்
சீர்கெழு தியான காலந்
தியானமோர் பன்னி ரண்டாங்
கேர்பெற வியற்றுங் காலஞ்
சமாதியின் கால மென்ன
வாரணந் தெளிந்த யோக
நிலைநின்றோ ரறைந்தா ரன்றே (15)

சருகுநீர் புல்லு புற்றுத்
தழல்புறங் காடு சந்தி
வெருவர கொசுகி யானின்
றெழுவுமி கரிவெண் சாம்பர்
மருவிய தலத்தின் மாந்தர்
தொக்குழி வருத்த மெய்திற்
பொருவற வுயர்ந்த யோகம்
புரிந்திட நீதா மன்றே (16)

வேறு

நதிக்கரையின் வெற்பின்முழை யிற்பலரு நண்ணு
மதித்திடுத லங்கடமில் வஞ்சின கரத்தின்
விதித்திடுத லங்கணிநி ருந்துமிக யோக
முதுக்குறைவி னோடினிதி யற்றல்முறை யாமால் (17)

என்னையுய ரைங்கரனை யெண்ணரிய யோகி
நன்னிலையு ணர்ந்தவரை நற்குரவர் தம்மை
முன்னியுயர் சோத்திக முதற்பல மொழிந்த
தன்னிகரி லாசன முறத்தனி யிருந்தே (18)

மூக்குநுனி தன்னையிரு கண்கள் முகிழாதே
நோக்கியுயர் மாயைகள் விடுத்துநுவன் ஞானந்
தேக்கியெனை யன்பினொடு சிந்தையி லிருத்தி
யேக்கறவி னோடுபணி வோர்க்கெளிய னாவேன் (19)

சென்னிமிசை பன்னிரு விரற்குமிசை சேர்ந்த
நன்னரற மூலமதில் ஞானநெடு நாள
மன்னவணு வாமுதல வெட்டிதழ் வயங்கி
யுன்னரிய சித்தினுரு வாமுயர் பொகுட்டின் (20)

இலங்குகதி ராயிர மெழுந்தன வெறித்துத்
துலங்கிடு மெனக்குடிலை சொல்லுமொழி தன்னைப்
புலங்கொள நினைந்துவரு புற்கலனை யாங்கே
கலந்துவிபு வாதல்களி கூர்தரு தியானம் (21)

ஓதுகம லத்தினிடை யொள்ளொளி விரிக்குஞ்
சோதிமய மாயொளிசெய் தொம்பத மதற்குள்
ஆதிநடு வீறிவைக ளின்றி யருளாகுந்
தீதொருவு தற்பத மிருத்தல்சிவ ஞானம் (22)

தத்துவம னைத்துமருள் சார்பிரண வத்தாற்
சுத்திசெய்து தன்னுருவ மென்னுருவு தோய
வைத்துயர்மெய்ஞ் ஞானமெனும் வான்புனலி னாடி
யுத்தமவெண் ணீறணிதல் பாசுபத யோகம் (23)

பிரமசரி யம்பொறை தவம்பெரு மகிழ்ச்சி
மருவரிய வுண்மைதவம் வன்கொலைசெய் யாமை
பொருவில்சமம் வேதமொழி யுண்மையெனல் பொய்தீ
ரரியவிர தாங்கமென வாரிய ருரைப்பார் (24)

இன்னவையி னென்றுகுறை யாதினி தியற்றின்
மன்னியிடு மிவ்விரத மாதலின் மனத்தி
னுன்னியெனை வேறற வுணர்ந்துமறை யுண்மை
பன்னியிடின் முற்றுமுயர் பாசுபத யோகம் (25)

எவ்வள வருத்தியுட னென்னைவழி பட்டார்
அவ்வளவி னுயபலன் யாமினி தளிப்பேம்
பவ்வமிக ராசைக ளொழிந்துபலி கொண்டு
துவ்வுறல் புரிந்தவர்கள் வீட்டுலகு தோய்வார் (26)

இழவினொடு பேறுமிக ராகவுள மெண்ணி
விழைவொடு வெறுப்பிவைகள் விட்டிகழ்த றம்மைத்
தொழூதுற வழுத்தினிக ரென்றுதுணி குற்ற
பழுதறு குணத்தரென தன்பர்பவ மில்லார் (27)

பெற்றவைகள் கொண்டுள மகிழ்ந்துபெற லாகா
மற்றவைகண் மேன்மனம் விடுத்துமரு ணீங்கிப்
பற்றிகலொ டற்றொரு பதிக்கணுறை யாத
நற்றவரு மென்னடியி னண்ணுவர்க ளன்றே (28)

நல்வினைகள் பற்பல நடத்திறுமென் மேலன்(பு)
இல்லையெனி லத்தொழில்க டீவினையி னெய்தும்
எல்லையறு தீவினை புரிந்திடினு மென்மேல்
அல்லலெறி யன்புசெயி னல்வினைக ளாமால் (29)

வெம்மையொடு தண்மைசுக துக்கமினி மேவின்
அம்மவிவை நேருற நினைந்தரிய கன்மஞ்
செம்மையுடன் யான்மகிழ வன்பினொடு செய்வார்
தம்மையவர் செய்கரும மேதலைமை செய்யும் (30)

என்னிடை மனத்தினை யிருத்தியுயர் கன்மந்
தன்னவல வென்றுபுரி தக்கவன் மனத்தின்
மன்னியிடு மாயையிருண் மாயமறை நான்கு
முன்னரிய ஞானவொளி யாலதை யொழிப்பேம் (31)

பெற்றமிவ ரென்னடிகள் பேணுதல்செய் யாதே
மற்றையதெய் வங்களைவ ழுத்தியிடு வோர்கள்
குற்றமுறு பேர்க்கதி கூட்டுவதை யல்லால்
முற்றுணர்வி னோர்கள்பெறு முத்தியடை யாரால் (32)

வானவர்கள் யாரையும் வழுத்தியிடு போழ்தின்
யானெனவ ழுத்தினர்க ளென்னிலுறு முத்தி
யானவர்க டத்தமுரு வாயுருவ ழுத்தின்
மோனமுனி வோரடையு முத்தியடை யாரால் (33)

கறங்குதிரி கின்றதென வேகருவி னெய்திப்
பிறந்துட னிறந்துபல பேதமுறு தேவர்க்
கறந்திகழு முத்தியரு ளச்செயலு முண்டோ
மறந்தவரை யெற்றொழுது வீடடைதிர் மாதோ (34)

மக்களொடு சுற்றமனை வாழ்க்கைவிவை விட்டே
தொக்கபுலன் வென்றெனை வழுத்தினர்து திக்கும்
தக்கவர்க ளப்பிறவி தன்னிலழி வின்றி
மிக்ககதி யாகியநல் வீடடைவ ரன்றே (35)

கருமிக ளெனைத்தழலி னேற்றுவர்கள் கற்றோர்
விரிபுனலி னுதவனில் விண்ணில்வழி படுவார்
தெருளொடு தெளிந்தமதி யில்லவர்கள் செம்பிற்
றருவினுயர் கல்லின்மலர் சாத்திவழி படுவார் (36)

கற்றுயரு ஞானமில ராய்க்கருணை யெய்திப்
பெற்றுயர்வி ரத்திநனி பெட்பினுட னுற்றோர்
உற்றசத ருத்திரிய மோமெனு மெழுத்துத்
தெற்றென வுணர்ந்திவை செவிக்கினெனை யடைவார்
(37)

தத்தமவொ ழுக்கினிடை சார்ந்தெமைவ ழுத்தும்
உத்தமரு நற்கதியி னொன்றுவ ரொழுக்க
மெய்த்தகுத வங்குலம்வி டுத்தவரு மென்மேற்
பத்தியுள ரென்னிலுயர் முத்திபடர் கிற்பார் (38)

யோகமிடை விட்டுயிரு லந்தவர்வி சும்பிற்
சோகமறு மின்பநனி துய்த்தவைதொ லைந்தால்
வாகைபுனை மன்னர்மறை யோர்மரபி னெய்திச்
சேகறுமவ் வியோகமுற முத்தியிடை சேர்வார் (39)

ஓவறுநல் யோகமிடை யூறினிடை விட்டோர்
மேவுடல்வ லித்துணையின் மென்மெலவி யற்றிற்
பாவமறு மற்றுழி வரும்பரம ஞானந்
தாவிலுயர் ஞானமுறின் முத்திதனிற் சார்வார் (40)

புன்றொழிலி யற்றிழிகு லப்புலைய ரேனும்
நன்றறிவு கல்விபொறை ஞானமில ரேனும்
மன்றல்கம ழுந்துளவ மாலையெனை வுள்ளத்
*தொன்றென நினைந்தவர் தமைக்கதியி னுய்ப்போம் (41)

என்றுமுனி வோருடன் இயம்புமிறை யோனை
மன்றல்கம ழுந்துளவ மாலுமுனி வோரும்
பொன்றவழ்ம லர்ப்பதம் வணங்கிநனி போற்றக்
குன்றவரி வெஞ்சிலை குழைத்தவன் மறைந்தான் (42)

* ஒன்றென வுணர்ந்தவர் தமைக்கதியின் (பா. பே.)

பையரவ கங்கண மணிந்தபர மன்றன்
ஐயகம லப்பத மகத்தினு ளிருத்திப்
பொய்யில்முனி வோரையருள் செய்துலகு பூத்து
வையகம ளந்தமுகில் வண்ணனு மறைந்தான் (43)

## வேறு

மையணி மிடற்றிறை வண்டு மூய்முகி
லொய்யென மறைந்தபின் மறையி னுண்மையைக்
கையுறு நெல்லியின் கனியிற் கண்டருள்
* மெய்யருந் தவர்க்குயர் வியாதன் கூறுவான் (44)

மலர்தலை யுலகெலாம் வயிறு வாய்த்தருள்
அலர்முலைப் பாகனீங் கறைந்த ஞானத்தைக்
கலைமுழு துணர்சனற் குமாரன் காதலின்
உலைவில்சங் கவர்த்தவற்கோதி னனரோ (45)

அன்னவன் சத்திய விரத னுய்ந்திடப்
பன்னினன் சத்திய விரதன் பண்பொடு
முன்னரும் புலகனுக் கோதி னனவன்
றன்னிலை யுணர்ந்தகோ தமற்குச் சாற்றினன் (46)

அங்கிராப் பரத்துவற் கருளி னேதினன்
பங்கமில் கபிலர்சை கிடவன் பன்னுவான்
சிங்கலின் றுணர்ந்திடச் செப்பி னரரு
டங்கிய சனகனென் றந்தைக் கோதினன் (47)

எண்ணருந் தவமுடை யியற்ப ராசரன்
அண்ணல்வான் மீகிதேர்ந் தறிய வோதினன்
மண்ணளந் தோன்மறு பவத்தின் வண்டுமூய்க்
கண்ணனு யருச்சுனன் களிப்ப வோதினன் (48)

---

* மெய்யருந் தவர்க்ககுள் வியாதன் (பா. பே.)

பண்டரு தேமொழிப் பங்கன் கூறிய
தண்டலில் ஞானமென் செவியிற் றுக்கலும்
விண்டன வெவ்வினை யானு மெம்பிரான்
றெண்டர்தந் தொண்டரிற் றாய ணுயினேன் (49)

**வேறு**

காதல் கூர்மெய்ப் புதல்வரொடுங்
கிளைஞ ரோடுங் கடிமனைவாழ்
மாத ரோடுந் தோழமைகொண்
முனிவ ரோடும் மகிழ்ந்துரைத்த
நீதின் ஞானப் பொருளென்னுந்
தீந்தே னருந்தி யகங்குளிர்ந்து
நாதன் றனது சீர்பாடி
யாடி யுய்ம்மி னமரங்காள் (50)

கண்ணே வாயா யிறையழகைக்
களித்து நோக்கிப் பருகுமின்கள்
வண்ண மூக்கே வாயாக
வையன் மேனி மணநுகர்மின்
எண்ணு மனனே வாயாக
வெழுத்தோ ரைந்து முரைமின்கள்
அண்ண ஞமஞ் செவிவாயா
யருந்தி யுய்ம்மி னமரங்காள் (51)

என்று கூறும் வியாதன்மொழி
கேட்டு முனிவ ரெல்லோருந்
துன்று முவகை மீதூரக்
கண்ணீர் சோர மயிர்பொடிப்பப்
பொன்றல் செல்லா மெய்ஞ்ஞானப்
பொருளைக் கருணைப் பெருங்கடலை
யொன்ற வுள்ளந் தனிமெண்ணி
யுவப்பி னேடு மிவையுரைப்பார் (52)

திருவே நினது பேரருளா
　　லுய்ந்தேந் திவவி யாழ்முனிக்கும்
பொருவெங் குலிசப் படையோற்கும்
　　புவியேழ் பரிக்கு மோட்டாமை
யுருவி னமைந்த நாகணையா
　　னுரைத்த கரும நல்லொழுக்கின்
விரிவை யுரைத்தி யெனமுனிவர்
　　கேட்ப வியாத னினிதுரைப்பான் (53)

இனிதி னுரைத்த சிவகீதை
　　கேட்போர் படிப்போ ரெழுதினோர்
புனிதக் கேள்வி மறையோர்பாற்
　　றுகடீர் பொருளின் வகையுணர்ந்தோர்
வினையி னீங்கி வெறுவெளியாய்
　　விமல மாகி விபுவாகித்
தனியோர் பொருளாஞ் சதாசிவன்றன்
　　கமல பாதந் தனிற்சேர்வார் (54)

யோகமுரைத்தவத்தியாய முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம். 229

---

௨

## பன்னிரண்டாவது
## வியாதர்-கருமமுரைத்த வத்தியாயம்

---

பழுத்த கேள்வி சுவாயம்பு
　　மனுமுன் றெளிந்துத் தனிபகர்ந்த
வொழுக்கங் கேட்டீ ரழற்கூட்டி
　　யுன்னுமறையோ ரெழிற் புதல்வர்க்
கிழைத்த முன்னூ லையாண்டி
　　லிடுக வன்றே யிருநான்காய்த்
தழைத்த பருவந் தனிலிடுக
　　விட்டாற் றத்த மறைபயில்க (1)

முன்னூற் கரும முடிந்ததற்பின்
முஞ்சி தண்டந்தோல் தரித்துக்
கொன்னே யைய மேற்றருந்திக்
குருவின் வதனந் தனிநோக்கி
நன்னர் மறைக ணனிகற்க
கற்றோ யறுவை கலையுரிவைத்
தன்னே ரில்லாக் கோவணமேற்
றரித்துக் கலைத்தோ லுரிபுனைக (2)

கலையி னுரிவை யின்றென்னிற்
கலப்பால் கறக்குங் கற்றாவின்
புலவு சீவாப் புதுப்போர்வை
புள்ளி மானின் றோல்புனைக
வலமென் றடக்கை மேலெடுத்துப்
புனைதல் வயங்கு முபவீதம்
இலகு மிடக்கை யெடுத்திடுநூ
லிலங்கும் பிராசீ னுவீதம் (3)

புரிநூ லிடமிட் டுயர்கருமஞ்
செய்தல் புகன்ற தென்புலத்தோர்
*கரிதி னூட்டு மமைதியினி
னன்றி யாகா வலமிட்டு
மருவு கருமஞ் செய்தல்சுபக்
கரும மெவைக்கும் வழக்காகுந்
தெரியு முஞ்சி யின்றென்னிற்
குசைப்புல் லேனுஞ் சிறப்பாமால் (4)

வில்லம் பலாச முயர்தண்டங்
கோடல் விழுமி தாமன்றேல்
மல்லல் மகத்துக் கமைத்திட்ட
மரங்க ளனைத்து மாமதற்குச்

* கருதி னூட்டு மமையின் (பா. பே.)

சொல்லு நீள மடிதொட்டுத்
துகடீர் நுதன்மேன் மயிரளவாம்
புல்லுங் கணுக்கொண் டோல்வழன்ற
லாகா தென்னப் புகலுவார் (5)

சாலவழலுக் கூட்டி யல்லாற்
றண்பாழ் வயிற்றுக் கிடலாகா
காலை மாலை நன்பகலிற்
கடவ கழித்த லியல்பாகும்
ஏலவி வைகள் புரிந்திலரே
லிழிந்தோ ராவர் மறைக்கிழவர்
ஞாலம் புரக்கும் வாள்வேந்தர்
நாய்க ரென்னு மூவருமே (6)

தெண்ணீர் மூழ்கித் தேவர்க்கு
முனிவர் தமக்குந் தென்புலத்தோர்க்
கொண்ணீ ரதனுற் றர்ப்பணஞ்செய்
தொழுகு தேனி னறுமலர்தூய்ப்
பெண்ணோர் பாகன் சேவடியை
வணங்கிப் பெரியோர் தாள்வணங்கல்
நண்ணற் கரிய வில்வாழ்வோர்
கடனென் றெவரு நவின்றிடுவார் (7)

அபிவா தனத்தாற் பெரியோரை
வணங்க லழகி தாமென்பர்
தபுத லில்லா வுயர்ஞானந்
தந்த குரவன் றனைநாளும்
விபுவா மீச னெனத்தொழுது
பழிச்சல் வேண்டும் வேதியரைக்
கபிலப் பசுவை மன்னவரைக்
காணிற் றொழுத லியல்பாமால் (8)

மறையோர் மறையோர் தமைக்காணி
னன்மை கொல்லோ வென்கமகிழ்ந்
தெறிவே லரசர் தமைக்காணிற்
பிடை யிலதோ வெனவுரைக்க
முறையே வணிகர்க் காணினிதி
குறைத லிலவோ வெனமொழிக
வறையும் பின்னோர்க் காணிறுமக்
காரோக் கியமோ வென்கமகிழ்ந்து (9)

அருமா மறைக ளோதுவித்தோர்
தந்தை தமைய னடல்வேந்தன்
உரிய வம்மான் மாதுலன்றான்
உய்யப் பரித்தோன் றுய்தந்தை
மருவுந் தந்தை தனையீன்றோன்
வருணச் சேட்டன் றந்தைக்குப்
பொருவின் முன்னோன் பின்னோன்மற்
றின்னோர் குரவ ரெனப்புகல்வார் (10)

தாயைப் பயந்தா டாய்க்கிளையா
டாயின் மூத்தா டவ்வைதனக்
கேய தந்தை தனையீன்றாள்
வளர்த்தா ளத்தை குருபன்னி
காயும் வடிவேன் மன்னவர்தங்
கடிமா மனைவாழ் மடந்தையர்க
ணேயத் தோடு தனையீன்ற
வன்னை யனைய ரெனநினைக (11)

இன்ன வோர்பத் தன்னையர்க்கு
மியல்முக் கரணந் தனிற்பிழைத்தோ
றன்ன துடலிற் றசைநுகர்ந்து
தழல்வாய் நரகத் தெய்துவரான்

பன்னூ ருநற் குணமுளரே
யெனினுந் தந்தை தாய்பாதஞ்
சென்னி சூடா ரெனிற்கொடிய
தீய்வாய் நரகிற் சேர்ந்திடுவார் (12)

## வேறு

தாயினிற் சிறந்த தெய்வ
மிலையுயர் தந்தை தன்னி
னேயநற் குருவு மில்லை
யென்னின்மற் றிவர்க டாளிற்
றூய்மலர் தூவி நாளுந்
தொழுதிடு மறிஞர் தாமே
யாய்கதிர் பரப்பும் பொன்னாட்
டமரரா யினிது வாழ்வார் (13)

தந்தைதா யருள்பெ றுமற்
றுன்புரி கரும மியாவு
மந்தில்நற் பலன்க ணல்கா
தழிந்திடுங் கருத்தன் முன்ன
முந்திய சமரி லாவி
முடிந்தவ ரெவரு நாளும்
இந்திர திருவ ராகி
வானிடை யினிது வாழ்வார் (14)

நந்தலில் குருவின் மைந்தன்
நன்மகம் புரிவிப் போர்கள்
தந்தைதன் றம்பி யம்மா
னிவர்தமக் கிளைய ராகில்
வந்திடில் வணங்க லாகா
வெழுதனல் வழக்க தாகு
மந்தில் வேந்திளைய னேனு
மடிதொழல் வழக்க தாமால் (15)

சீர்கெழு வேள்வி யாற்றுந்
திருவினோ னிளைய னேனும்
பேர்சொலி யழைக்க வொண்ணு
திருபிறப் பாளர் தம்மை
யேர்கெழு மரசர் நாய்கர்
பின்னவ ரிறைஞ்சல் வேண்டும்
பார்புகழ் மறையோர் வேந்த
ராயினும் பணியொ ணுதால் (16)

பாழியந் தடந்தோள் வேந்தன்
வணிகர்சீர் படைத்தா ரேனும்
வாழிய ரென்ப தல்லால்
மறையவர் வணங்க லாகா
வேழையர்க் கன்பன் றெய்வ
மிருபிறப் பாளர் தெய்வ
மாழ்சுட ரங்கி யெல்லா
வுயிர்கட்கு மதிதி தெய்வம் (17)

வித்தைநற் கரும மாயுள்
வியன்கிளை நிதிய மைந்து
மொத்துளோ னுயர்ந்தோன் விஞ்சை
கருமத்தி னுயர்ந்த தாகும்
மெய்த்தகு கருமி யாயுண்
மேவினோர்க் குயர்ந்தோ னாயுட்
சித்திபெற் றுடையோன் சுற்ற
முடையரிற் சிறந்தோ னென்பார் (18)

மேதகு சுற்ற முள்ளோன்
பொருள்படைத் தவனின் மேலோன்
தீதறு மறையோர் வேந்தர்
தெரிவையர் கிழவர் கண்ணி

லாதவர் நோயோர் தம்மை
யருநெறி தன்னிற் காணிற்
போதரு கின்றோர் யாரும்
விலங்குதல் புலமைத் தாமால் (19)

அந்தணர் பவதி பிட்சாந்
தேகியென் றறைந்து மன்றற்
பைந்தொடை யரசர் பிட்சாம்
பவதிநற் றேகி யென்றும்
எந்திர வணிகர் பிட்சாந்
தேகிநற் பவதி யென்று
நந்தலி லைய மேற்றல்
நான்மறை வழக்க மாமால் (20)

தாயவட் கிளையா ளத்தை
தன்னுடன் பிறந்தா ரெள்ளார்
மேயதன் வருணத் துள்ளார்
வீடுதோ றைய மேற்றல்
தூயன வாகுந் தாயத்
தார்தொழு குரவ ரில்லின்
ஏயநற் பிச்சை யேற்ற
லிழிபுவே றிலையே யாகும் (21)

ஐயமேற் புழிமற் றொன்றின்
மனம்விடா துரையா டாமற்
பையென வேற்ற வையம்
*பயிற்புரு துண்டல் பண்பாம்
எய்தின்மற் றொருவன் வீட்டி
னுகர்ந்திட லாகா தென்றும்
ஒய்யென வடக்கு நோக்கி
யுண்டலுந் தீதா மன்றே (22)

---

* பயிர்ப்புரு துண்டல் (ப. பே.)

செந்தளிர் பொருவுங் கால்கை
முகமெனச் சிறந்து தோன்று
மைந்தினு மீரத் தோடு
மருந்துக வருந்து முன்னும்
நந்துற வயின்ற பின்னும்
நன்கினு சமனஞ் செய்து
சிந்தையி லீசன் பாதம்
சிந்தனை செய்க மாதோ (23)

வியாதர்-கருமமுரைத்த வத்தியாயம் முற்றிற்று
ஆகத்திருவிருத்தம் 252.

---

உ

## பதின்மூன்றுவது
## சுத்தாசமன முரைத்த வத்தியாயம்

---

உண்ணினீர் நுகரிற் றும்மி
னுறங்கினீர் மூழ்கின் வீதி
நண்ணின்மெல் லறுவை சுற்றி
னங்கையர் முலையிற் றோயின்
எண்ணரு மறைக ளோதி
லிருமலம் விடுக்கி லீமங்
கண்ணுறி லிருகாற் றூய்மை
கருதியா சமனஞ் செய்க (1)

இழிகுலத் தினர்மி லேச்சர்
சூத்தியர் மிச்சி லேய்ந்தோர்
பழிதில்பின் னவரைத் திண்டி
லவரொடும் பகரிற் கண்ணீர்
விழினுடற் புண்ணீர் சோரின்
விதித்தவா சமன மோர்காற்
றெழுதகப் பண்ணல் வேண்டு
மென்றனர் சுருதி நூலோர் (2)

புனிதமி லாடை மாந்தர்
மயிர்புனை கோவணந் தீ
*வனிதையர் பசுக்கன் மேனி
மற்றிவை தீண்டில் வன்புல்
இனியநீர் பூமி தீண்டிற்
புனிதமென் றிசைப்பர் வெந்நீர்
தனிலுறைப் புனலிற் சுத்தா
சமனமாற் றுதறீ தாமால் (3)

சென்னியிற் கழுத்திற் றாசு
சேர்ந்திடி லுடுத்த சோமன்
மன்னிய விருபான் முந்தி
குடுமிமற் றவிழி னிற்பிற்
றன்னிரு கால்கை நீர்தோய்ந்
திலவெனில் மழைத்தண் ணீரி
லின்னகை புரியிற் சுத்தா
சமனநன் கியற்ற லாகா (4)

அடியினிற் கழல்கள் சேர்த்தும்
ஆசனத் திருந்தும் பாயிற்
படியினிற் கிடந்தும் வார்த்தை
பகர்ந்துமெண் டிசையும் பார்த்து
மடிமையிற் குனிந்து நின்று
மார்பினூற் றுறந்துந் தூய்மை
விடுநுரைப் புழுக்க ளங்கும்
விரவுநீர் நோக்கா தேயும் (5)

பின்னவன் புனித மில்லான்
கொணர்ந்தநீர் தனிலும் பெட்பி
னுன்னரு மூவர்க லங்க
லுற்றநீர் தனிலு மோங்கி

* வனிதையர் பசுத்த மேனி (பா. பே.)

மன்னுமேல் விரல்க ளானும்
வயங்குமா சமனஞ் செய்தல்
நன்னெறி வழக்கன் றென்ன
நான்மறை யுரைத்த வன்றே (6)

அந்தண ரிதயங் காறும்
புனல்செல வரசர் வெய்ய
நந்துறழ் களத்தின் காறும்
நனையநல் வணிகர் நாமட்
டுந்துநீர் தோயச் சுத்தா
சமனநன் குவந்து செய்க
புந்திகூர் பின்னோர் நீர்தொட்
டிதழ்தொடிற் புனித மாகும் (7)

## வேறு

அங்குட்ட மூலவரை யொழுகுபுன
லரும்பிரம தீர்த்த மாகும்
தங்குற்ற தர்ச்சனிக்கும் பெருவிரற்கு
நடுவொழுகு தண்ணீர் தூய்திற்
பொங்குற்ற பிதிர்தீர்த்தங் கனிட்டிகைமூ
லத்தின்மேற் பொழியுந் தெண்ணீ
ரெங்குற்ற மாதவரும் பிரசாபத்
தியதீர்த்த மென்பர் மாதோ (8)

*விரனுனியிற் பொழிதெண்ணீர் தனைத்தெய்வ
தீர்த்தமென்றும் விளங்கு கேள்வி
யிருடிகடந் தீர்த்தமென்று மியம்பிடுவர்
விரன்மூலத் திருந்த நீரும்
உரைசெயினப் பெயரதா முள்ளங்கைப்
புனலதனைச் சோம தீர்த்த
மருவருமக் கினிதீர்த்த மெனவுரைப்பர்
முழுதுணர்ந்த மதிவல் லோரே (9)

---

* விரனுதியிற் பொழி தெண்ணீர் (பா. பே.)

அருள்பிரம தீர்த்தத்தை மும்முறைகொண்
டங்குட்ட மூலந் தன்னால்
இருமுறைவா யிணைத்துடைத்துப் பெருவிரலை
யநாமிகையோ டியையக் கூட்டி
மருவுமிரு கண்ணிலொற்றி யங்குட்டந்
தர்ச்சனியின் மருவக் கூட்டிப்
பொருவரிய கொடிமூக்கிற் புனிதமுற
முறையினிரு புறமும் நீவி (10)

சிறுவிரலி னங்குட்டஞ் சேர்த்தியிருங்
கேள்விபெறு செவியி னீவி
நெறியினடு விரலோடு மங்குட்ட
மமைத்திருதோ ணிலவ வொற்றி
யுறுவிரலைந் தையுங்குவியா வுரத்தமைத்துச்
சென்னியிலு மொற்ற நூலின்
முறைதலையிற் பெருவிரலி னுனியிணைச்சேர்த்
தலுநெறியாய் மொழிவர் மாதோ (11)

மும்முறைநீ ரருந்துவதற் கனந்தரனுயர்
வானவர்கள் மும்மைத் தேவ
ரம்மவென வியக்குவர்வா யிருமுறைதை
வந்ததனு லலைநீர்க் கங்கை
செம்மைபெறுங் காளிந்தி யுவக்குமிரு
கண்டொடலாற் பருதி திங்க
டம்முளமன் புறுமூக்குத் தைவரலான்
மருத்துவர்க ளுவப்ப ரன்றே (12)

செவிதொடலா லங்கிவளி யுவக்குமித
யந்தொடலாற் றேவர் யாரும்
உவகைபுரி குவர்சென்னி யொற்றுதலாற்
புருடனுள மகிழ்ச்சி கூரு

நவையறுசுத் தாசமனஞ் செய்போதில்
வாயினின்று நழுவும் தெண்ணீர்த்
துவலைதனை மிச்சிலென விகழற்க
மெய்யினிடைத் தோய்த லாகா (13)

மதுவற்க நுகர்ந்திடினு முயர்சோம
பானத்தும் வளர்பூங் கன்னல்
சிதைவற்ற கனிகிழங்கு தின்றிடினு
நூறடைகாய் தின்ற பின்றும்
வதியுற்ற வாசமனம் புரியாம
லொழிந்திடினும் விதியா மென்னக்
கதிர்முத்த வடங்கிடக்கு மிருதடந்தோண்
மனுமுன்னங் கழறி னனல் (14)

வெண்கலந்தாம் பிரங்கையி லிருப்பநீர்
விடின்மிச்சில் மேவி லாங்குப்
பண்பினவற் றினைக்கீழ்வைத் தாசமனம்
பண்ணிநீர்ப் படுத்திக் கொள்க
உண்கலங்கை யகத்திருப்ப மிச்சிலுறி
னதுதரையி னுய்த்தி டாது
தண்புனலி னசமனந் தான்புரியிற்
பாத்திரமும் புனித மாமால் (15)

## வேறு

ஆறலை கள்வர் வெய்ய
புலிவழக் கருது தூய
வூறுநீ ரிலாத கானத்
துள்ளிருட் பிழம்பி னேகின்
வீறுயர் பொருள்கள் கைக்கொண்
டிருமலம் விட்டா னேனுங்
கூறிய பொருள்கள் யாவும்
புனிதத்திற் குறையுறுவால் (16)

முப்புரி நூலைத் தூய
வலச்செவி மூலத் தேற்றி
செப்பிய பகல்வ டக்குத்
திசையினை யினிது நோக்கி
மைப்படு கங்குற் போதிற்
றென்புல மருங்கு நோக்கி
யிப்படி தரையிற் புல்வைத்
திருமலங் கழித்தல் வேண்டும் (17)

தருநிழ றன்னி னூற்றிற்
சந்தியிற் கிணற்றிற் றூழ்வில்
வரைநெடுங் குடுமி தன்னில்
வயங்குதேர் மறுகிற் புற்றி
னெரியினீ மத்திற் பைம்புற்
றரையினில் வயலின் விட்பிற்
கரியினி லுமியி னுவின்
கோட்டத்திற் கபாலந் தன்னில் (18)

உழுதமென் புழுதி தன்னி
லுவர்நிலத் துயர்பூங் காவில்
முழுகுதண் டுறையிற் கோயின்
மறைப்பவர் மாதர் முன்னர்
வழியினி னடக்கும் போதின்
வண்டுகி லின்றிக் காலிற்
கழல் செரீஇக் குடைகை பற்றிக்
கதிர்மதி யுடுக்க ணோக்கி (19)

நின்றுழி யிடிந்த கோயின்
மருங்கினீள் குழியின் மிச்சில்
துன்றநீண் மலர்கள் முன்னர்
விட்டுழித் தொறுக்கண் முன்னர்

நன்றறி குரவர் முன்ன
　　ரிருமலம் விட்டோர் நாளு
மொன்றுதற் கரிய தீய
　　நரகின்வீழ்ந் துழப்ப ரன்றே (20)

கலங்கனீர்க் குழியிற் சேர்ந்த
　　சேற்றுமண் கடவுள் வைகும்
இலங்கொளி விரிக்குங் கோயி
　　லிடத்துமண் கரியிற் காலின்
அலங்குநீர்க் கயத்துட் டூய
　　வழியினி னமைந்த மண்ணாற்
றுலங்கிடச் சவுசம் பண்ண
　　றகாதெனச் சொல்வர் மேலோர் (21)

கால்களிற் குளனி லாற்றிற்
　　கரையுறு மண்ணை வவ்விச்
சால்வரும் பாத்திரத்திற் றண்புனற்
　　கொணர்ந்து போதந்
தேல்வுற நூல்கள் சொன்ன
　　முறையினில் மண்க ளிட்டுப்
பால்படு சவுசம் பண்ணிப்
　　பண்பிணு சமனஞ் செய்க (22)

சுத்தாசமன முரைத்த வத்தியாய முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 274

---

## பதினுன்காவது
## பிரமசரிய முரைத்த வத்தியாயம்

---

குரவன்முன் பாத நீட்டல்
　　குறுநகை புரித லன்றேன்
மருவிய நாமங் கூறல்
　　மற்றவன் போலச் செம்மாந்

துரைபகர்ந் திடுத லன்றேன்
நடத்தல்போ லொதுங்கல் வெய்தின்
வெருவர முனியிற் றானும்
வெகுண்டுரை யாட லாகா (1)

அருளுடைக் குரவன் பன்னி
யடிமலர் பணிய வேண்டின்
இருவிர லகல நின்றாங்
கிறைஞ்சிட வேண்டு மன்றேன்
றிருவளர் கமல பாதஞ்
சேய்மையி னின்று தாழ்ந்து
பரிவொடும் வழுத்த லாகா
தெனமறை பகரு மன்றே (2)

ஏதிலார் குருவை யெள்ளிற்
செவிபுதைத் தகல வன்றேன்
பாதமென் மலர்கள் மேனி
பரிவுடன் னறவந் தென்றும்
காதலா லேவு முன்னர்க்
கருதிய வெவையுஞ் செய்க
மேதகு குரவன் றாய
நிழலினை மிதிக்கொ ணாதால் (3)

அன்புடைக் குரவ னூர்ந்த
மரவடி மிதித்த லாகா
பொன்புனை யமளி தன்னிற்
பொருவிலா சனத்திற் றானும்
இன்புற விருத்த லாகா
பணித்தன்றி யேக லாகா
முன்புறக் கிடந்தி யாவுங்
கேட்டிடன் முறைமை யன்றே (4)

சந்தநீண் மாலை மாதர்
தடமுலை நயத்த லாகா
மைந்துடைக் கோபஞ் சூது
மையிட லெண்ணெ யாடல்
சுந்தர மகளிர் கூத்துப்
பாட்டினை விழைத றுஞ்சல்
முந்திய வுப்பு நெய்யோ
டயின்றிடல் முனிந்து கோறல் (5)

பற்கறை யெறித லாடி
நோக்குதல் பழைய துண்டல்
பொற்புற வணிதல் மேனி
பொலிவுறத் திமிரி யாட
லற்புடைக் குருவை யெள்ளன்
மகளிரோ டசதி யாடன்
முற்படு பிரம சாரி
யொழுக்கினின் முறைய தன்றே (6)

சுடுமண்வேய்ந் துயர்ந்த மாடச்
சூழலி லறையி னேங்குங்
கொடிநெடுந் தேரின் வெற்பிற்
குரவனோ டிருக்க வன்னோன்
கடிதினி னடக்கிற் பின்னே
நடக்கக்கால் விசையி னோடிற்
றொடருமெய்ந் நிழலே போலத்
தானும்பின் றொடர்ந்து செல்க (7)

அல்லன புரியு மேல்வை
யிடித்துரை யாடு கின்றோர்
நல்லவை புரிகிற் போர்கள்
குருவி னற்புதல்வன் பார்க்கிற்

பல்பக லிளைஞ ரேனும்
வழிபடல் பண்பே யன்றி
மெல்லடி வருடல் மிச்சி
லருந்துதல் விழுமி தன்றே (8)

பொருந்திய குருவின் மிச்சில்
பொங்கிய விழைவி னன்றி
மருந்தென நுகர்தல் வேண்டும்
குரவன் வைதிகத்தி னீங்கித்
திருந்திய வொழுக்கந் தன்னைத்
திறம்பிடி னவனை நீங்கி
யருந்தவம் பழுத்த நீதிக்
குரவனை யடைதல் வேண்டும் (9)

குரவன்றன் குரவன் றன்னைக்
குரவனில் வழுத்தல் வேண்டும்
குரவன்பால் வைகு மேல்வைத்
தாய்தந்தை குறுகி னூரேற்
குரவன தருளி னாலே
கும்பிடல் வேண்டுங் மற்றைக்
குரவன்றன் பன்னி மக்கள்
குரவனில் வழுத்தத் தக்கோர் (10)

குருவினன் குலத்தி லுற்ற
பன்னியைக் குருவைப் போல
வெருவொடும் பணிதல் வேண்டும்
*வேற்றுவன் னத்தி லுற்று
மருவுயிற் கிழமை பூண்ட
மங்கையர் தம்மை யேத்திப்
பரவுத லொழுக்க மென்ன
நீதிநூல் பகரு மன்றே (11)

---

* வேற்றுவன்னம்—வேற்றுச்சாதி (பா. பே)

நெரிசுரி கருமென் கூந்த
லுளர்தல்கால் பிடித்து நீவல்
பொருவரு மெண்ணெய் வாக்கிப்
பூம்புன லினிதி னூட்டல்
அரிறப மேனி சுண்ணத்
தரில்பெறத் திமிரி யாட்டல்
குருவினன் மனையாட் கென்று
மியற்றுதல் குற்றமா மால் (12)

குருவினன் மைந்தன் றன்சேய்
பொருணனி கொடுப்போன் கோதி
லரசிளங் குமரன் சுத்தன்
அன்பினேன் வழிபா டுள்ளோன்
தருமேற் சிந்தை வைத்தோன்
சாற்றுமுன் பொருள்க டேர்வோன்
திருவின லிவர்க்கு விஞ்சை
செப்புதல் சீர்மைத் தாமால் (13)

வேதமோர் நான்குங் கற்றோர்
விழைந்துவே தாங்கங் கற்றோர்
தீதறு மிதிகா சங்கள்
புராணங்க டெளிந்த மேலோர்
காதலி னிவுளி யெச்சங்
கணக்கறப் புரிந்தோ ரெய்து
மேதகு முத்தி வீட்டின்
மேவிவீற் றிருப்ப ரன்றே (14)

வைகறைப் போதி னூற்றின்
மருவிநீர் படிந்து நாளும்
செய்கடன் முற்றி காயத்
திரியோரா யிரந்தெ ளிந்து

மைகெடச் செபித்த றன்னைச்
செபவெச்ச மென்ன வாய்ந்த
பைகெழு சுடிகைப் பாந்தண்
பரித்தபார் பகரு மன்றே (15)

ஏதமில் மறைகள் காயத்
திரிக்கிணை யாங்கொ லென்னப்
போதவிழ் கமலப் புத்தே
ளுயர்புலக் கோலாற் றாக்கி
மேதக வுடைத்துக் காயத்
திரியென வியந்தா னென்றாற்
றீதறு மதற்கு நேரா
யாதினைச் செப்ப லாமே (16)

ஆவணித் திங்க டன்னிற்
கன்னிமா தத்தி னுதல்
மேவுபூ ரணையில் வேதம்
விளம்புத றுடங்கி யோதித்
தாவருந் தைமா தத்திற்
பூரணை தன்னின் முற்றி
யோவில்மா சியினில் மீட்டும்
வளர்பிறைக் கோதல் வேண்டும் (17)

தேய்பிறை தனிற்பு ராணம்
திகழிதி காச மங்கம்
ஆயுநற் றருமநூல்க
ளற்பொடும் பயிறல் வேண்டும்
காய்கனற் சூறை மாரி
மின்னிடி கலும்தல் தன்னூர்
மேயின வாசி மிக்கால்
விழுமறை யோத லாகா (18)

ஊர்வயிற் சவங்கி டப்பிற்
பூசையோ டெலியூ டாடிற்
பார்நடுக் கெய்தி னுங்குப்
பலசன மிடையின் மேவி
யேர்கெழு கிரக மொன்றோ
டொன் றுறி னரையா மத்திற்
சீர்கெழு பருதி யத்தஞ்
சேர்வுழி யோத லாகா (19)

மன்னவ ரிறப்பிற் றூய
வான்சுட ரரவு தீண்டில்
உன்னரு மேகோ திட்ட
முண்ணிலோர் மூன்று நாளப்
பன்னரு மறைக ளோத
றீதெண்ணெய் பரிவி னுடிற்
றன்னமர் தலையி னீங்கா
தெனினு நூல் சாற்றுே றுதால் (20)

சூதக முடையார் வீட்டிற்
றுய்த்தநாட் புகையின் மூடிச்
சீதவெம் பனிப்பெய் யுற்ற
காலையிற் றிறல்கொள் வேந்தர்
மேதக வமர்செய் நாளி
னுவாக்களின் விருப்ப மெய்தி
யாதர வோடு செய்யும்
அட்டகச் சிரார்த்த நாளின் (21)

ஏழிலம் பாலை வெள்ளின்
நறுவிலி யிலவி ருப்பை
நீழலிற் குரவன் றேழு
வீனுயி ருலந்த நாளின்

வாழிய மறைதொ டுப்பின்
முடிப்பினோர் மூன்று வைகல்
வீழ்மறை யோத லாகா
வோதிடி னுயுள் வீவார் (22)

சந்திவந் தனையே யாதி
கருமங்கட் குரைக்கத் தக்க
சுந்தர மறைகட் கீண்டுச்
சொல்லிய தோடம் யாவும்
வந்துறு தரும நூல்வண்
புராணம்வே தாங்கம் யாவும்
நந்துமீ ருவாவி னன்றி
நாடொறு நவிற லாமால் (23)

வேதமும் வேத மார்க்கம்
மேவிய நூலு மின்றித்
தீதுறு நூல்கள் யாவன்
றெரித்தன னவனைப் பஞ்ச
பாதக னென்னச் சொல்வர்
பழமறை தெரிந்த மேலோர்
ஈதுயர் பிரமசாரிக் கியம்பிய
வொழுக்க மாமால் (24)

நூல்பல கற்றோ னேனும்
பொருணுனித் தறியா னென்னில்
மாலொடும் வாளா கத்து
மானிறக் காகம் போல்வன்
ஏலுறக் கற்ற நூலின்
பொருடெரிந் திருநூல் சொன்ன
சீலமே யொழுகு கின்றோன்
சிவனடி நீழல் சேர்வான் (25)

ஈண்டு யாமுரைக்கப் பட்ட
வொழுகத்தி லிசைந்து நின்றோர்
வேண்டுரு வாகி யொன்றாய்
விமலமா யருவா யென்று
மாண்டகு குணக்குன் றாகி
மதிவகிர்க் கண்ணி சூடு
மாண்டகை பாத நீழ
லடைந்துவீற் றிருப்ப ரன்றே (26)

பிரமசரிய முரைத்த வத்தியாயம் முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 300

---

உ

## பதினோங்காவது
## இல்லற முரைத்த வத்தியாயம்

---

அரிய மறைக ளொன்றெனினு
மிரண்டா யினுமூன் றாயினுஞ்சீர்
விரவு மறைக ணான்கெனினும்
வெளிறின் றாகக் கற்றருள்செய்
குரவன் மகிழப் பொருள்வழங்கி
யவன்றன் னருளிற் குழைகிழிக்கு
முருவ வொண்கண் மடந்தையரை
வேட்பா னுஞற்ற வேண்டுமால் (1)

விரத மாற்றி யருமறைகள்
விதித்த சமாவர்த் தனஞ்செய்து
பரிவால் வளர்த்த மயிர்நகங்கள்
எறிந்து கடவுட் பசுஞ்சாந்தம்
முருகு கமழு நறுந்தெரியல்
முளரி யலர்த்துங் கதிரனைய
குருமா மணிக்குண் டலமணிந்து
கழைத்தண் டூன்றிக் குடையேந்தி (2)

தண்ணங் கதிர்கால் மதியனைய
வேண்டு சணிந்து தடந்தோளில்
வண்ணம் வாய்ந்த வுத்தரியம்
போர்த்துச் சென்னி தனில்வயங்க
நுண்ணூல் வனைந்த வெண்பட்டுச்
சுற்றி நோன்றாள் கழல்செருகித்
தெண்ணீ ரமைந்த கமண்டலங்கை
சேர்த்துப் புனித மாயொழுகி (3)

தனது மரபி னிழிபுயர்ச்சி
யின்றி யொத்த மரபுதனிற்
கனியி னறிய தெள்ளமிர்திற்
கன்னற் பாகிற் கோற்றேனில்
இனிய மழலை யந்தீஞ்சொ
லுடையா ளாகி யிலகொளிய
பனிவெண் டிங்கண் முகத்தினளாய்ப்
பயந்தாள் மரபிற் பிறந்திலளாய் (4)

மதியி னமைச்சர் யேவற்குச்
சிலதி யாகி வனப்பினுக்குப்
புதுமென் மலரிற் றுக்கணங்காய்ப்
பொறையிற் பூமி தேவியாய்
முதிரு மன்பிற் றுயாகி
முயங்கு மின்பங் கலவிதனக்
கிதய முருக்குங் கூத்தியென
வீறி லின்பம் பயந்தாளாய் (5)

கற்பிற் கினிய வருந்ததியாய்க்
கண்ணு மனமுந் தனிகவரும்
பொற்பிற் குயர்வா னுருப்பசியாய்ப்
புனித வொழுக்க முடையவளாய்

வெற்போ ரணுவா மெனப்புடைத்துச்
செம்மாந் தெழுந்து வீங்குமுலை
யற்போ ருருவு கொண்டனைய
வணங்கை விழைவின் மணம்புரிக (6)

தழுமுற் றெய்தா தண்ணுந்து
தரளங் கிடந்து வெயிலெறிப்ப
முழுமுற் ருகந் தனிகவர்ந்த
முகிண்மென் முலையார் பூப்பெய்தி
யிழுமென் றிரைநீர் படிந்தநா
டொட்டுப் புணர்தற் கியம்பியிடும்
வழுவி ஞளின் மகப்பெறுதல்
தலைக்கி டாக மணந்திடுக (7)

பிறந்த நாளி லட்டமியிற்
பேசு மாரும் பக்கத்திற்
சிறந்த பதினன் காந்திதியிற்
பருவந் தன்னிற் றுவாதசியின்
மறந்து மாதர் முகிண்முலையிற்
றழுவ லாகா தெனவகுத்தார் (8)
*அறங்கூர் தரும நூல்வகுத்த
மனுவை முதலா மறிவினரே

அருமா மகஞ்செய் தழற்கரும
மொழியா தியற்ற லருமறைகள்
உரைசெய் ஒழுக்கந் தனிலொழுகல்
பஞ்ச வெச்ச மியற்றறமக்
கரும மிழுக்கா தன்னுட்டு
வேந்தை யோர்காற் கணடிருத்தல்
பொருவில் தேவா லயந்தொழுதல்
புகன்ற வில்வாழ்நர்கடனே (9)

* அறங்கூர் தரும நூலுணர்ந்த (பா. பே.)

புரிந்த பாவம் மறையாது
புகறல் வேண்டும் யாவருக்கும்
வருந்தின் றாக வினைவனகள்
செய்ய வேண்டு மகிழ்தந்தை
திருந்து மொழுக்கந் திறம்பாம
ஸிற்றல் வேண்டும் அமிழ்தெனினும்
விருந்தி னேடு நுகர்வதால்
வாளா நுகர்தல் விடல்வேண்டும் (10)

காம வெகுளி மயக்கமுதல்
தீமை யெவையுங் கடிந்திடுதல்
ஓமச் செந்தீ யூட்டியன்றி
யுண்ணு தொழில் தாய்தந்தை
தோமில் பசுநான் மறைக்கிழவர்
போற்றித் தொழுதல் றுய்ப்பனகள்
பாமாண் கிளைஞர் மகிழ்சிறப்ப
வரையா தென்றும் பாத்தருந்தல் (11)

தரும மாற்ற னன்னெறியில்
பொருள்க ளீட்டல் தம்மொழுக்கின்
மருவுங் காமந் துய்த்தறம்சூர்
வாழ்த்த வாழ்தலிகழ்வனகள்
புரிதல் செய்யா துவப்பனவே
புரித லுலகத் தொடுமொழுகல்
கருணை யொடுயில் லறம்புரிவோர்
கடனென் றெவருங் கட்டுரைத்தார் (12)

அயலோர் துன்ப முறிற்றுமு
மழுங்க லன்பர் முதுக்குறைவிற்
பயிலும் விஞ்சை பதினுன்குங்
கற்றல் ஞானம் பகர்ஞானத்

தெயில்மூன் றெரித்த குறுமூர
லெந்தை யுவக்கு மெஞ்ஞான்றுஞ்
செயிர்தீர் மெய்ம்மை யிழுக்காதோர்
துறக்க மதனிற் சேர்குவரால் (13)

அல்லல் புரிந்து பொருளீட்டல்
காமந் துய்த்த லிவையாகா
*வொல்லும் வகையி னறமியற்றுங்
காலை துன்ப முற்றிடினும்
புல்லுந் தருமம் விடாதொழுகப்
புகலு முயிர்க ளனைத்தினுக்கு
நல்ல செய்யக் கடவுளரை
மறையை யிகழ்தல் நவையாமால் (14)

இன்ன தரும வொழுக்கநூல்
பயின்றோர் கேட்டோ ரெழுதினோர்
மன்னு பொருளின் வகையுணர்ந்தோர்
வழுக்கா ததனின் வழிநின்றோர்
பொன்னங் குடுமி நெடுவரையிற்
கமலப் பொகுட்டி னினிதுறையும்
அன்ன மூர்ந்த மறைக்கிழவ
னுலகத் தினிதி னடைந்திடுவார் (15)

பதினைந்தாவது
இல்லற முரைத்த வத்தியாயம் முற்றிற்று
ஆகத்திருவிருத்தம் 315

---

*வகையின் றவ மியற்றுங்காலை (பா. பே)

உ

# பதினாறுவது
# பொது விதியுரைத்த வத்தியாயம்

---

பூத மெவைக்குந் துன்ப மியற்றும் பொல்லாரும்
தீது பயக்கும் பொய்ம்மொழி பேசுந் தீயோரும்
காதலின் மற்றோ ரேதிலார் நன்பொன் கவர்வோரும்
பாதக ராகித் தீநர கத்திற் படிவாரால் (1)

சேடன் விரிக்கு மாயிர வாயிற் றிகழ்நஞ்சும்
ஓடு கடற்கு ளூற்றிடு நஞ்சும் விடமன்றே
பாடமை வுற்ற தேவர் பொருட்பன் மறையாளர்
தேடிய பொன்னே நஞ்சிவை கொள்ளிற் றீதாமால் (2)

மன்னவர் செம்பொன் வேதியர் பைம்பொன்
[வளர்தேவர்
நன்னிதி யோர்சற் றாயினும் வவ்வ நசையுற்றாற்
றன்னுடை முன்னைக் கைப்பொருளும்போய்த் தாழ்வாகி
யின்ன லுழக்கு மாருயி ருக்கு மீறாமால் (3)

புல்லொடு மெல்லென் றண்மலர் மூலம் புனல்காட்ட
மெல்லட கோடு நன்கனி விண்ணோர் கடனாற்றற்
கெல்லைகொ லென்னி னேகுந ரற்றாற் கேளாதும்
வல்லை கவர்ந்தும் பூசனை செய்தன் மரபாமால் (4)

இருநிதி யீட்டற் கேதிலர் போற்றுஞ் சமயத்தின்
மருவி யுவப்பி னன்னிதி யெய்தி மறித்தேயும்
பொருவரு முன்னைத் தஞ்சம யத்திற் புக்கோர்க
ளருநர கத்திற் பற்பல துன்ப மடைகிற்பார் (5)

வேத மிகழ்ந்தோர் வேதியர் தம்மை யிகழ்வுற்றோர்
தீதுறு பஞ்ச விராத்திர மெய்துந் திறலில்லோர்
மேதகு தத்தங் கன்மம் விடுத்தோர் பாசண்டத்
தோதிய கன்மத் துற்றவர் பாவத் துழல்கிற்பார் (6)

குரவுரை யெள்ளுந் தீமையின் மிக்க புறங்கூறக்
கருதுதல் பாவ மற்றது தன்னிற் களைகண்ணும்
பரமனை யில்லென் றோதுதல் பாவ மெனவெண்ணி
மருவரு மீசன் சேவடி யெண்ணல் வழக்காமல் (7)

வடித்த செழும்பொருண் நான்மறை தேரு
[மறையோரின்
விடைக்கொடி வேதியனன் பரைநாளும்
[வெகுண்டோர்கள்
உடுப்பு முகத்தின் கூன்கொழு வானி னுழுகின்றோர்
கிடைப்பரி தாகிய தங்குல மேன்மை கெடுத்தோரே (8)

தம்மி னிழிந்த குலத்தினின் வேட்டவர் தக்கோரா
மெய்ம்மையி னோரை விடுத்து வெளிற்றறி
[வுள்ளோரை
யம்ம வெனத்தனி மெச்சி யளித்தவ ரயலார்தஞ்
செம்மை யிறூர மணந்தவர் நன்னெறி சேராரே (9)

பின்னவ ராணை செலுத்திய நாட்டிடை பேய்பூத
மின்னல்செய் நோய்கள் வருத்திய நாட்டினில்
[யாதேனும்
நன்னெறி யின்றிய நாட்டினில் *மூத்திய திலதென்னும்
புன்னெறி யோருறை நாட்டினில் வைகுதல்
[புன்மைத்தே (10)

இமய நெடுங்கிரி விந்திய வெற்பின திடமேவுங்
கமைகொள் பெரும்புவி புண்ணிய பூமி கலித்தோங்கும்
இமிழ்திரை நன்கட லெய்திய நன்னதி யிரவைப்போத்
தமைவுறு நன்னிலம் விட்டய லேகுத லாகாதே (11)

*மூத்திய தில் லென்னும் (பா. பே)

புண்ணிய நன்னதி யின்கரை வைகுநர் பொற்போடு
மண்ணிய தாயு மகன்று முறைந்திட லாகாதால்
எண்ணி முனிந்தவர் தம்மை முனிந்திட லியல்பாகுந்
தண்ணளி யுற்றவர் தம்மை முனிந்திட றவருமா (12)

*வடுக ரிழிந்த குலத்தினர் புற்கசர் மயிர்கொல்லோர்
படுகொலை செய்குநர் பதிதர் களித்தவர் கருணுடர்
உடனொரு பந்தியி னுண்டிட லோர்மனை யிடைவைகல்
நடைபயில் நூல்கள் பயின்றிட னட்புற னவயாமால் (13)

ஈங்கிவ ரோருழை யெய்திடின் வார்புன லெரிசாம்பர்
ஓங்குயர் தூணுடை வாயி லிடைப்பட வுறைகுற்றோற்
பாங்கவ ரோடுறை பாவம கன்றிடு மயலார்தந்
தீங்குறு வெம்பதி குறளை பகர்ந்திட றீதாமால் (14)

வேறொரு வன்கழ லிப்பயி ரானின மேய்குற்றார்
சீறிய வர்க்குரை செய்தறி கைப்புடை நோயாளர்
ஊறுற வைகுதல் பூப்புறு மாதரோ டுரையாடல்
ஆறறி வோர்பெற லீதல் விலக்குத லாகாதே (15)

இந்திர விற்பரி வேட மழன்றெழு மீமத்தீ
யந்தில் பிறர்க்கெதிர் சுட்டி யுரைத்திட லறிவன்றால்
மைந்துறு பலசன முள்ளவர் தம்மொடு மாறுகா
சிந்தை யுவந்து தனைப்புகழ் கின்றது தீதாமல் (16)

மாத வரைக்குர வன்றனை மேதகு வானோரை
வேதி யரைச்சது மாமறை யைப்புகன் மெய்ந்நூலை
யேத முரைத்தவ ரிம்மையின் வெந்துய ரிடைமூழ்கிப்
பாதக ருற்றிடு பாழ்நர கத்திடை படிவாரால் (17)

* புற்கசர் மயிர் (பா. பே.)

சொல்ல வொணுதென நூல்க ளுரைத்தவை
[சொல்லறக
புல்லிய வுட்பகை கொள்ளுத னன்மை பொருந்தாதால்
அல்லல் புரிந்தவன் வெம்பழி சொல்லுத லாகாதால்
நல்ல வரைப்படு பாவி யெனச்சொல னன்றன்றே (18)

ஆடியி னீரி னுதித்தெழு மேல்வையி லத்ததிற்
கூடுறு காலையில் வெய்யவ ராவெதிர் கொள்போதின்
மூடி முகத்தினை நுண்டுகி லான்முழு மதிதன்னைச்
*சேடமை செங்கதி ரைத்தனி நோக்குத றிதாமால் (19)

வெண்டுகி னீங்கிய மாதரை மைந்தரை மெய்யூனங்
கொண்டவர் தம்மை யிழிந்த குலத்துறு கீழோரைத்
தண்ட விறங்குதல் முற்றிடு மேன்மை தணந்தோரை
கண்டிட றீதென மூதறி வாளர் கரைந்தாரால் (20)

எண்ணெயி னீரிடை தன்னிழ ஞேக்குத லில்வாழ்வாள்
உண்ணல் புரிந்தெதிர் நோக்குதன் மிச்சிலோ
[டுரையாடல்
நண்ணுறு பேயர் பிணிப்புறு மாவின் முன்னண்ணல்
புண்ணிய நன்மனை யாரொளா டருந்தல் பொருந்தவால்
(21)

†பின்னவ ருக்குயர் ஞான முரைத்திடல் பேட்பொடு
மன்னம் வழங்கல் கருங்கலை யீருரி யான்பா னெய்
கன்ன னறுஞ்சுவை தேனறு வெண்டயிர் காரெள்ளோ
டின்னவை மாமறை யாள ரளிக்குத லேலாதே (22)

**வேறு**

வெகுளுந ரோடு மாற்றிடைச் செல்லின்
வெந்துய ருறுவர்தா மளித்த
மகவினை விஞ்சை கற்பதற் காக
வருத்துதல் வேண்டுறுங் கீழைத்

---

* சேடமை வெங்கதிர் (பா. பே.)
† இன்னவருக் குயர் ஷை

தகுதியார் சேவை புரிகுத லாகா
முனிவனுற் பொருள்கொள றகாதாற்
றெருமனைக் கிழத்தி குணத்தினைப் பிறர்க்குச்
சொல்லுநர் தோமுறு மவரே (23)

தன்பழி யுரைத்தல் குறங்கின்வைத் தன்ன
மருந்துத றன்னுயிர் மெலித்தல்
வன்புடை நகத்தாற் புவியினைக் கீறல்
வருநதி யிடைநதி தொட்டல்
என்பெழ வறுமைப் பசியி னுெந்திடினு
மேற்றவர்க் களித்திடா தருந்தல்
புன்புலால் நுகர்தல் புனைதுகி லின்றிப்
புனலிடை யிறங்குத லாகா (24)

தீயினைக் கடத்தல் சென்னியின் வாக்கி
மீகுந்தநல் லெண்ணெய் மெய்தேய்த்தல்
பாயபை யரவ மாட்டுதல் பிடித்தல்
பஞ்சவிந் தியங்களுந் தொடுத்தல்
ஆயுமந் திரத்தைப் பிறரொடு முரைத்த
லநுதினம் விழைவினேற் றருந்தல்
ஏயவெவ் விடனுந் திரிகுத லெவையு
முரைக்குத லெவைகளு மருந்தல் (25)

அளவற வருந்த லொழிந்திடா தென்று
மந்நலார் முலைநல நுகர்தல்
கிளைநரம் புள்ளு மின்மிசை யமிர்தங்
கேட்பதை யன்றி மெய்ஞ்ஞானம்
வளர்செவிக் குளிரக் கேட்டிடா தொழிதல்
புருவனல் காலினு லுழக்கல்
தளர்வுறு மிலேச்சர் பாடைகள் கற்றல்
தவறெனு வுரைப்பர்கற் றுணர்ந்தோர் (26)

இருந்தவா சனத்தைக் காலினு லுதைத்தல்
காரண மின்றியே யுடலைப்
பொருந்துறச் சேட்டை புரிகுதல் வாளா
புன்னகை புரிதல்வா ளுகிரைத்
திருந்துநீண் மயிரைப் பல்லினாற் கடித்தல்
தீம்புன லீந்தல்பொய் யுரைத்தல்
அருந்துயி லெழுப்ப விளவெயிற் காய்த
லழலிடை யிருபதங் காய்ச்சல் (27)

காலினாற் றனது காலினைத் தேய்த்துக்
கழுவுதல் பாழ்மனைத் துயிறல்
மாலொடுந் தன்னின் மூத்தவ டன்னை
மருவுத லுண்கலத் துமிழ்தல்
சால்வுறு மீமப் புகையிடை நிற்றல்
சலத்திடை மும்மலம் விடுத்தல்
கோலிய வோட மொருவனுய்க் கடத்தல்
குற்றமென் றுரைப்பர்கற் றுணர்ந்தோர் (28)

இடக்கையா லேனுந் துகிலினைத் றேய்த்து
மிரும்புன லருந்துத லாகா
சுடர்த்தொடி மாதர் தங்களைப் புனலுட்
டோய்த நீதுயர்சதுக் கத்தில்
வடுப்படா தோங்குந் தருவினைக் குறைத்தல்
மயிர்கரி யென்புவெண் சாம்பர்
முடைத்தலை கூர்முட் புனலிடைச் சேர்த்தன்
முறையல வென்பர்மூ துணர்ந்தோர் (29)

தீயினை யுந்திக் கீழுறத் தாங்க
றீக்கெதிர் தனதுதா ணீட்டல்
வாயினா லூதல் தீயொடுந் தீயைக்
கூட்டலீர் வார்த்தஃ தவித்தல்

மேயவா டையினுல் முறத்தினுற் கையால்
வீசிமூட் டுதல்மனை வளர்க்கு
மேயமுத்தீயுங் கருமகா லத்தி
னன்றியே தொடுதறீ தென்பார் (30)

தன்றமர் விளிதல் தான்பிறர்க் குரைத்தல்
தவறிலான் றனைத்தவ றுரைத்தல்
மன்றவே ஞெருவன் றனையவ ஞட்டல்
கனைகணீ யென்னவந் தடைந்தோர்க்(கு
ஒன்றிய துயர மியற்றுதல் பறவை
விலங்கின மொன்ஞெடொன் றிகலிப்
பொன்றிட விடுத்தல் பிறர்மனை நயத்தல்
பொறிவழி யொழுகுத லாகா (31)

உரைநவீ பகர்ந்து நகைத்துநின் றுலவி
யுண்குதல் புனலிடை வாளா
மருவியே கிடத்தன் மகவினைக் குரிய
ரல்லரை மகம்பு ரிவித்தல்
இருளிடை யேனுந் தமியனு யேனுந்
தொடுகழ லின்றியும் வேடர்
தருமமொன் றறியார் தம்மொடு நெறியிற்
போதரல் தருமமன் ருமால் (32)

அந்தணர் நிழலைச் சினகரத் தோங்கு
மவிரொளிச் சிகரநன் னிழலை
நிந்தையிற் கடத்தல் யோகியை யதியை
நிகரறு முனிவரை யிகழ்தல்
வெந்தொழிக் கரியிற் சாம்பரின் மயிரின்
மிதித்திடல் விளங்கிய தூளி
வந்துமே லடைய நிற்றல்தோய் துகில்நீர்
மேற்பட வதிந்திடல் தீதாம் (33)

நிறைகுடப் புனலை யெடுத்துநீராட
 லித்தவை குடித்திட லருந்தல்
உறுபிணி யாளனிழிந்தவ னிவரோ
 டுயர்மர னீழலி னிருத்த
லறைபுன னிறைத்த கமண்டலங்கையி
 னின்றியே யருநெறியேகன்
முறையல வென்று மநுமுத லாய
 மூதறி வாளர்கட் டுரைத்தார் (34)

பதினாறுவது
பொதுவிதி யுரைத்த வத்தியாய முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 349

---

உ

## பதினேழாவது
## அல்லவை யொழித்தலுரைத்த வத்தியாயம்

---

பின்னவர் மறுமை யில்லெனுஞ் சிதடர்
 கள்ளுணர் பித்தர்மட் பகைஞர்
கன்னலிற் கனிந்த தேமொழி யரங்கக்
 கூத்தியர் கடவுளை யிகழ்வோர்
மன்னிய சோம நன்கொடி பகர்வோர்
 மருத்துவர் மகளிர்சொற் கேட்போர்
இன்னர்பாற் செங்கெ லரிசியேற் றுண்ட
 விழிதக வெனமறை யியம்பும் (1)

*ஆண்குறி யொழிந்த வேத்திரக் கரத்த
 ரெதிகள்வா ளாவழு கின்றோர்
மாண்பிகந் தறத்தின் வழியினோ ரழிந்தோர்
 யாவரு மிகழவாழ் கின்றோர்

---

*ஆண்குறி யொழிந்தோர் (பா. பே.)

நாண்கெட வரையா தருந்துநர் மறையோர்
நன்குலத்துதித்தும்வாட் டொழிலாற்
காண்டக வுய்யுந் திருவிலி யிவர்பா
லேற்றிடல் கழிமட னுமால் (2)

அந்தணர் சிறந்த கடவுளர் போந்த
வதிதியர்க் களித்திடா ரடிசில்
சிந்தையில் வெகுண்டு பரிவிலா தளிப்போ
ரடிசில்வெஞ் சினப்படை பகர்வோர்
தந்தரு ளடிசில் மாமனன் களிக்கு
மடிசில்தங் குரவனல் லடிசில்
வெந்துயர் விளைக்கும் பசியினு லருந்தல்
வெவ்வினைத் துயரடைந் திடுமால் (3)

தன்னெடும் பைங்கூழ் விளைக்குந ராயர்
தன்னுடை யடியர்நா விதர்கள்
முன்னரே தொன்று தொட்டுநல் லன்பி
னெழுகுவோர் களைகளுய் முழுதும்
இன்னருள் புரிகென் றிரந்துவந் தடைந்தோர்
தன்பயி ரிடுகுந ரளித்த
மன்னிய பைங்கூ ழிடுக்கண்வந் தெய்தின்
வாங்கினு மாமென வுரைத்தார் (4)

வெண்டயிர் நெய்பா லெண்ணெ யெண்ணெயினல்
வெந்தவை விரவுபிண் ணுக்குக்
கொண்டவல் பொரிமாப் பின்னவ ரளிக்கிற்
கோடலு மாகும்வெள் ளுள்ளி
தண்டவில் கரிய செய்யவாய் முள்ளி
தவிர்ந்திடும் பிசின்பழை யனகள்
உண்டிட லாகா முட்டைநீள் சுரைக்காய்
ஒழித்திட னன்கென வுரைத்தார்
(5)

பா லுடன் கலந்த மோர்மிகு வெண்ணெய்
பற்றறப் பிழிந்தபின் ணுக்குச்
சால்புறு முள்ள மயக்குறு மவைகள்
கங்குலில் வெண்டயி ரெண்ணெய்
ஓலிடு விலங்கு கொன்றுவிற் றருந்த
லூன்றினல் கழிமயிர் புழுவோ
டேல்புறு மன்னம் பூத்தவ டொட்ட
சோறிவை யருந்துத றீதாம் (6)

வள்ளுகிர் ஞமலி யானினங் கோழி
மானுடர் காக்கைமோந் தவைகள்
கொள்ளுத லாகா மறித்துமட் டனகள்
கும்பின குட்டநோ யாளர்
எள்ளுற விழிந்தோர் தொட்டவையாக
வொட்டக மாடிவற் றுறுபால்
துள்ளுகன் றின்றிக் கைவலங் கறந்த
பாலிவை துய்த்திட லாகா (7)

ஈன்றநாட் பத்திற் கறந்தபால் கன்று
கொளுத்திய பாலிவை யாகா
தோன்றிய வன்றில் பைங்கிளி யெருவை
தோலடிப் புள்ளுநாய் கோழி
வான்றிரி காக்கை பன்றியே முதலா
மண்புனல் விசும்பினுள் ளவையின்
ஊன்றின வுள்ளங் குறிப்பினு நரகத்
துலப்பினுள் கிடந்தழுந் துவரால் (8)

குறுமுய லுடும்பே டாமைமுட் பன்றி
யழுங்கிவை கொண்டருந் தினுமாம்
நறியமீன் புள்ளி மானிவை யதிதிக்
களித்தபி னயத்தலு மாகும்

உறுபிணி யாளர் மருந்தெனப் புலவூ
றுண்கினு மாமக முதலா
யறைதரு கருமத் தருந்திட விதித்த
புலாலருந் தார்நர கடைவார் (9)

கள்விலே பக வ கள்ளினே நுகர்ந்தோர்
கள்ளருந் துதற்குடன் படுவோர்
கள்ளருந் தினரை மகிழுநர் நரகிற்
கற்பகா லங்கிடந் தழுந்தி
யெள்ளுறுந் தீய மலப்புழு வாகி
மலத்தினே நுகர்ந்துபின் னிறந்து
வீள்ளருங் கொடிய ரவுரவ நரகின்
மீட்டுமீட் டுழன்றுநாள் கழிப்பார் (10)

சொல்லிய வேள்வி முதலிய கருமத்
தருந்துத லன்றியூன் சுவையா
தொல்லேயின் விடுநர் தினந்தொறு மிவுளி
மகம்புரி பலத்தினே யுறுவார்
அல்லலுற் றழுங்க வுயிர்த்தொகை யனைத்து
மருள்புறங்கொடுத்திட நசையிற்
கொல்லுநர் தாமே தமதுமெய்த் தசைதின்
றருநர கிடைக்குடி யிருப்பார் (11)

பதினேழாவது
அல்லவை யொழித்தலுரைத்த வத்தியாய முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 360

உ

# பதினெட்டாவது
# நித்தியகன்ம முரைத்த வத்தியாயம்

முட்டா ளரத்தச் செழுஞ்சூட்டுக்
கோழி கூவு முணந்துயில்தீர்ந்
தொட்டார் புரமூன் றெரித்தோன்றுள்
தரும நீதி யுவந்தெண்ணி
மட்டார் சோலை விளிம புடுத்த
வருபே ராற்றங் கரைநண்ணிச்
சிட்டா மலநீக் குழியுரைத்த
தரும மியாவுஞ் செய்தியற்றி (1)

வருபால் மரத்தின் முண்மரத்தின்
வகுத்த நடுவு விரற்பருமத்
துரைசெ யீரா றங்குலத்தில்
வடுவில் சினையி னொடித்துரைத்த
பொருவி னுளிற் பற்கறைக
ளெறிந்த கொம்பைப் புனறேய்த்து
விரியக் கீறு தெறிந்திடுக
விரலால் விளக்க நீதென்பார் (2)

புனீத மாகத் தெண்ணீரின்
மூழ்க வதுவும் புரைதீர்ந்த
மனுவா தியரோ ரெழுவகையாய்
வகுத்தார் வகுத்த படியுரைப்பின்
இனிய தருப்பை நீர்தோய்த்திட்
டிலங்கு மேனி தைவருதல்
முனிவர் பிரம தீர்த்தமென
விதனை யெடுத்து மொழிகுவரால் (3)

பால்வெண் ணீற்றின் மெய்முழுது
மாட லுயர்பா வகதீர்த்தம்
சாலப் பசுவின் காற்றூளி
யாடல் தனிமா ருததீர்த்தம்
நீல முகில்வெங் கதிரெறிக்கும்
காலை பெய்யு நீராடல்
நூலோ ருயர்திவ் வியதீர்த்த
மென்ன முன்ன நுவன்றனரால் (4)

தெண்ணீர் படிந்து துளைந்தாடல்
சிறப்பி னுயர்வா ருணதீர்த்தம்
உண்ணீர் மையின்மெய்ஞ் ஞானத்தின்
மூழ்க லுயர்மா னததீர்த்தம்
அண்ணல் யோகந் தனிலிருத்த
லழிவி லான்ம தீர்த்தமென
வெண்ணு மிவற்றி னுடலினுக்காங்
கியன்ற தீர்த்த மாகுகவே. (5)

தேவர் முனிவர் தென்புலத்தோர்க்
கினிதி னூட்டி யாசமனம்
மேவ வியற்றித் தெண்ணீரின்
மீட்டும் படிந்து தருப்பை நுனி
தாவு புலன்மந்தி ரத்தான்மெய்
தெளித்துச் சந்தி வந்தனைசெய்
தோவில் காயத் திரிசெவியா
வுபத்தா னத்தின் றெழில் முடிக்க (6)

உள்ளத் திருளும் புறத்திருளு
மொழிக்குங் கதிராய்ச் சனாதனமாய்
தள்ளற் கரிய சோதியா
யசல மாகித் தனிய மிர்தாய்ப்

பிள்ளைப் பிறைசேர் முடியோனுய்க்
குடிலை யாகிப் பிரமமாய்த்
தெள்ளு மறைதேர் புருடனுஞ்
செங்கேழ்ப் பருதி தாடொழுவாம் (7)

மதுகை யுருவாய்க் கபர்த்தியாய்
வயங்கும் விச்சு வேசுவரனுய்
முதிரு மறையாய் நித்தியனுய்
முக்கட் சுடராய்ப் பிஞகியாய்
விதியாய் நீல கண்டனுய்க்
கண்ணு யிரங்கொள் மெய்ப்பொருளாய்
பதும மலரின் முகையவிழ்க்கும்
*பர்க்கன் பாதம் பணிந்திடுவாம் (8)

அழிவில் பாவ நாசனுய்ப்
பரமே சுரனு யனைத் துயிராய்
ஒழிவில் பரம சோதியா
யுயிர்கட் கெல்லா முள்ளுயிராய்த்
தழுவு முலகா யுலகினுக்குப்
பதியாய்த் தையல் பங்கினனுய்
விழைவி னைவையுந் தனிநுகரும்
விண்ணேன் செய்ய தாடொழுவாம் (9)

என்று வேதன் மறையனைத்துந்
தெளித்துப் புகலா தவவிதியை
யொன்று முளத்தோ டுரைம்பா
னுருவேற் றிடின்மே லெய்துகுட்டந்
துன்று முயனேய் முதலாய
நோய்க ளகற்றுந் துயர்நீங்கும்
வென்றி யரசர் பூதத்தாற்
கோளாற் றுன்ப மேவாதால் (10)

* பர்ச்சன் பாதம் (பா. பே.)

இனைய நியமத் தொழின்முடித்து
மனையி னெய்தி யாசமனம்
புனித நெறியிற் றனியியற்றிப்
பொங்கு தழற்கா ரியமுடித்து
வனைபொற் கொன்றை முடியோனைத்
திருமா றன்னை வழிபட்டு
நினைதற் கரிதா மருங்கேள்விக்
குரவர் பாத நினைந்தேத்தி (11)

அரிய செழுமா மறையோதி
யன்பி னடைந்தோர்க் கோதுவித்துத்
தரும நூல்கள் பலதேர்ந்து
பொருளீட் டுதற்காய்த் தாவருஞ்சீர்
நிருபர் கோயில் மருங் கெய்தி
நிகழ்த்து மாசி பலகூறி
மருவு மில்வாழ் விறுக்குரிய
பொருள்கள் மதியி னுலீட்டி (12)

வெய்ய கதிர்கா னண்பகலிற்
றருப்பை யெட்கோ மயம் விரைதேன்
பெய்யுமலர்மண் ணரிசி கையிற்
கொடுபோய் பெருகு நதிக்கரையின்
எய்தி மண்கோமய மெய்யி
லிலிதிற் பூசி மறையோதி
பைய புனலிற் ப்படிந்தாடி
யாச மனத்தின் றொழில்முடித்தே (13)

தேவர் முனிவர் தென்புலத் தோர்
உவப்பச் சிறந்த தர்ப்பணஞ்செய்
தோவா துச்சிக் கடன்கழிப்பி
னொளிர் கண்டிகைநன் படிகமணி

தாவி றண்டா மரைமணிகை
தாங்கித் தோய்ந்த துகிலெனனில்
மேவு புனலுட் புலர்ந்ததுகி
லெனனிற் கரையின் மிசை செபிக்க (14)

உச்சிக் கடவ·கடன்கழிப்பின்
மனையி னெய்தி யுயர்கொன்றைச்
செச்சைக் கண்ணி யந்தணன்றுள்
ஏத்திப் பஞ்சாக் கரஞ்செபியா
இச்சை யோடுங் தியானித்துப்
பஞ்சப் பிரம மினிதேத்திப்
பச்சைப் பரியே மூடைத்தேரோற்
பழிச்சி யெச்ச மைந்தாற்றி (15)

மறுகி னின்றோர் பசுக்கறக்கு
மமைதி யதிதி வரனோக்கிக்
குறுகு மதிதி தனையெதிர்ந்து
பூசை யாற்றிக் கொடி பதிதர்
உறுநோ யாள ரிழிகுலத்தோர்க்
கடிசில் தரையி னிடையுய்த்தாங்(கு)
அறையும் படிதென் புலர்தோர்க்காய்
மறையோ· னொருவற் கமுதூட்டி (16)

அருந்தக் கவள மொன்றிடுதல்
பிச்சை யதினுன் கினிதளித்தல்
பொருந்தி யிடுமக் கிரமாகும்
புகலு மவைநான் மடங் களித்தல்
திருந்து மந்த காரமென்ப
விவற்றி வியன்ற தினந்தோறும்
வருந்தின் ருகத் துறந்தோர்க்கு
மேற்றோ ரெவர்க்கும் வழங்கிடுக (17)

ஏற்போ ரின்றேற் பசுவின்முன
மிடுகப் பஞ்ச மாவெச்ச
மாற்றல் செய்யா தருந்துகின்றோர்
விலங்கு பறவை யாய்ப்பிறப்பர்
போற்ற வுரிய கடவுளரைப்
போற்று தருந்தும் பொறியில்லோர்
*மாற்ற வருந்தீ வினைப்பயத்தாற்
பன்றி யாகி மலநுகர்வார் (18)

கிழ்பா னோக்கி யமுதுண்டோர்க்
†காயுள் நிறையும் கிளர்நிதியந்
தாழ்வின் றுயரும் குடதிசையே நோக்கி
யருந்திற் றணப் பருஞ்சீர்
ஊழிற் பெருகுந் தென்றிசையை
நோக்கி யருந்தி லொருகாலும்
வாழி மாந்தர் வடதிசையை
நோக்கிய ருந்தல் மாண்பன்றே (19)

**வேறு**

காழ்பழுத்து மணங்கமழும் பொரியரைய
நறுஞ்சாந்தக் கலவை பூசி
யூழினருந் துதற்கிசைத்த திசைநோக்கிப்
புனிதமா யுண்ணல் வேண்டும்
சூழ்சுடரோ னத்தவரைத் தோய்பொழுது
முதையத்துந் துய்க்க லாகா
வேழ்ப ரித்தேர்க் கதிரவனை யராத்தீண்டு
முனமருந்த லியல்ப தன்றே (20)

திங்களினைப் புவிநிழலோ டராத்தீண்டு
முனமருந்த றீதா மற்றைக்
கங்குலிற்பா ளுள்கழியத் தீண்டியக
லினுமருந்த றீது காமர்

---

* யாற்ற வருந்தீ வினைப்பயத்தால் (பா. பே.)
† ஆயுள் குறையும் ஷை

வெங்கதிர்வெண் மதியரவோ டத்தமிக்கில்
மீட்டுமவை யுதித்தா லன்றித்
துங்கமறை நூலுணர்ந்தோர் அருந்துதறீ
தெனவெடுத்தாச் சொன்னு ரன்றே (21)

விருந்தினர்க்குங் கடவுளர்க்கும் அதிதிகட்கு
மல்லாமல் விரும்பித் தாமே
யருந்துதற்கென் ருக்குநரும் மகவிழைவி
*னன்றியின்ப மருந்து வோரும்
திருந்துமுதுக் குறைவெய்தக் கற்பதன்றித்
திருவெய்தக் கற்கின் ருேரும்
பொருந்த லரிதா மக்கட் பதடியெனக்
கற்றுணர்ந்தோர் புகல்வ ரன்றே (22)

சென்னிதனிற் றுகில்வனைந்து மிருதாளிற்
செருப்பணிந்துஞ் சிரித்து நின்றும்
மன்னும்வட திசைபார்த்துந் தலைசொரிந்து
நனைந்த துகில்வனைந்து வன்பின்
முன்னமயின் றனகளருப் போதத்து
முடைகலத்து மொழிந்துஞ் சாய்ந்துந்
தன்னவிரு கைக்கொண்டு மூர்தியின்மீ
திருந்துமுணல் தரும மன்றே (23)

ஓடிதருமா சனத்திருந்தும் வறிதுநிலத்
திருந்துமிச்சி லுடையோ னுயும்
அடுவனக னனைத்தினையும் உத்தரிய
மன்றியுநல் லன்பு பூண்ட
மடவியர்தம் மொடுங்கரிமேல் வைத்துமுச்சிப்
போதினுமேல் வளர்ந்தகங்குல்
இடையிருள்யா மத்துமுணல் தீதென்ன
நீதிநூ லியம்பு மன்றே (24)

---

* அன்றியமுதருந்துவோரும் (பா. பே.)

இவ்வண்ண மருந்துகவென் றுரைத்தமுறை
விருந்தினொடு மினிதி னுண்டு
மைவண்ணக் களத்தெந்தை யிதிகாச
புராணமுதல் மகிழ்ந்து கேட்டுச்
செவ்வண்ண மருண்மாலைப் போதினுறு
கடன்கழிப்பித் திகழ்மீன் றோன்று
மவ்வளவு தனியிருந்தாங் கரும்பெறற்கா
யத்திரியை யமைவி னோதி (25)

கங்குலிடை விருந்தினொடு மதிதியொடுங்
கிளையினொடுங் களிப்பி னுண்டு
செங்கமல விதழ்பொருவுங் கைகாலி
னீரங்கள் புலர்த்தித் தேங்கொள்
மங்குனிகர் கருங்கூந்தல் வாள்மருட்டு
மேடரிக்கண் மதர்த்து வீங்குந்
துங்கமுலை மனைவியொடு மெல்லணையி
னின்பமுறத் துயிறல் வேண்டும் (26)

வடபுலத்துங் குடக்கினுமென் றலைவைத்துத்
துயின்றிடல் தீதாகு மாண்பின்
ஓடிதரு மஞ்சத்திடையுஞ் சினகரத்து
முறைந்திடு மாசனத்துஞ் செம்பொற்
குடமனைய கொம்மைமுலை மடவியரை
குடங்கையுறத் தழுவிக் கொண்டு
விடலருமன் பினிற்றுயிற நீதென்ன
வருமறைகள் விளம்பு மன்றே (27)

பதினெட்டாவது
நித்தியகன்ம முரைத்த வத்தியாய முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 387

---

உ

## பத்தொன்பதாவது
## சிரார்த்த முறைத்த வத்தியாயம்

தேய்பிறையிற் பதினன்காம் பக்கமொழி
பக்கமெலாஞ் சிறந்த வாகு
நேயமுடன் றென்புலத்தோர்க் கூட்டிடுதற்
கமவாசி நிகழ்த்து கின்ற
தூயதிதி களிற்றாய்தா மயனத்தி
லராச் சுடரைத் தீண்டுநாளி
லாயுதமா தப்பிறப்பிற் பிறந்தநா
டனிலிறந்தோர்க் களித்தல் வேண்டும் (1)

அட்டகையி லிருபத்தே ழெனவறையு
நாட்களிற்றென் புலத்தோர்க் கூட்டல்
சிட்டர்விழு மியதென்பர் குறுமுயலின்
றசையாமைத் தசைக டூதில்
கட்கமிரு கத்தினறுந் தசைகிழட்டாட்
டின்றசைகள் கணக்குந் தெண்ணீர்
உட்டிரியு முலோகிதமீன் றசைகளினீற்
றென்புலத்தோர்க் கூட்ட லாமால் (2)

காரையிலை யுழுந்துபழங் காய்கிழங்கு
குளச்செங்நெற் கன்னற் கட்டி
சீர்கெழுமெண் ணெற்பொரிகோ தும்பையவை
யவம்பயறு செங்நெலான்பால்
ஆர்வமொடு மிவைகளினுற் கங்கைபிர
யாகைமுத லாய தூய
வேர்கெழுபுண் ணியதலத்திற் றென்புலத்தோர்க்
கினிதூட்ட லியல்பா மென்பார் (3)

புரவிநா ளூட்டில்வயப் புரவியெய்தும்
பரணிதனிற் பொங்கு மாயுள்
மருவுகார்த் திகைதன்னிற் றுறக்கமுறு
முரோணிதனில் மைந்த னுண்டாம்
மிருகசீ ரந்தன்னிற் காந்தியுண்டா
மாதிரையில் விசய மெய்துந்
திருவமரும் புனர்பூசத் தூட்டிலிரும்
புவியனைத்துஞ் சேரு மன்றே (4)

பூசநா ளினிதூட்டிற் பொருவரிய
மதர்நெடுங்கண் மகளிர் சேர்வர்
மாசிலா யிலியத்திற் காமமுண்டா
மகத்தினிலூ தியமுண் டாகும்
தேசுறுபூ ரத்தில்வித்தை சேருமுய
ருத்திரத்திற் பாவந் தீரும்
ஓசைபெறு மத்தத்தில் குலமுண்டாந்
தென்புலத்தோர்க் கூட்டி னோர்க்கே (5)

சித்திரையின் மகவுண்டாம் சோதியிலூ
தியஞ்சேரும் விசாகந் தன்னில்
அத்தமுண்டா மநுடத்திற் கிளையுண்டாங்
கேட்டையினீ லவனீ யெய்தும்
வித்தகமா மூலத்தில் விளைபயிர்மெய்
வலியுண்டாம் வியன்பூ ராரடத்
துத்தமமாஞ் சித்தியுண்டாம் தென்புலத்தோர்க்
கினிதாக வூட்டி னோர்க்கே (6)

உத்திரா டந்தன்னிற் காமமுண்டா
மோணத்திற் றலைமை யெய்துஞ்
சத்திபெறு மவிட்டத்தின் விழைந்ததுறுஞ்
சதயத்தின் வலியுண் டாகும்

மெய்த்தகுபூ ரட்டாதி வெள்ளியுறு
முத்திரட்டா தியில்வீ டெய்துஞ்
சித்திபெறு மிரேவதியி லாயுளுண்டாந்
தென்புலத்தோர்க் கூட்டி னோர்க்கே (7)

நந்தையிற்புத் திரலாபந் துதியையிற்கன்
னிகைமூன்றுந் திதியி னன்கின்
உந்துபரி யுறுநான்காந் திதியிலா
னுற்றிடும்பஞ் சமியி னோங்கும்
மைந்தனுண்டா மோராறும் பக்கத்தில்
வாதுவெல்லு மேழாம் பக்கத்
தந்தமில்லைபங் கூழுளவா மன்பினெடுந்
தென்புலத்தோர்க் கருத்தி னோர்க்கே (8)

அட்டமியூ தியங்கிடைக்கும்நவமியினி
லொருகுளம்பா மனைத்து மெய்தும்
இட்டமுறுந் தசமிதனி லிருகுளம்பா
மவையெய்து மரிவா ரத்தின்
னுட்டெளிவாம் வெள்ளியுறுந் துவாதசியிற்
பொன்னுளவாம் பதின்மூன் றென்னச்
சிட்டர்புக ழுந்திதியிற் றென்புலத்தோர்க்
கூட்டின்மிகச் சிறப்புண் டாமால் (9)

பொருந்துமியற் சதுர்த்தசியின் வாளமரி
னுயிர்துறந்து பொன்றி னோர்க்கே
யருந்துறவூட் டினநன்கா மல்லாம
லிறந்தோர்க்கூட் டுதறீ தாகுந்
திருந்தியிடும் பதினைன்காம் பக்கத்தி
னினைத்தவைக ளனைத்துஞ் சேரும்
வருந்தியுள மகிழ்ந்திறந்த தென்புலத்தோர்க்
கினிதூட்டு மாண்பி னோர்க்கே (10)

வெங்கதிரோன் வாரத்திற் றென்புலத்தோர்க்
கூட்டிடிஞேய் மேவா தாகுந்
திங்கள்வா ரத்தூட்டிற் றிருவெய்துஞ்
செவ்வாயில் விசய முண்டாம்
பொங்குபுத வாரத்திற் காமமுண்டாம்
வியாழத்திற் பொருந்தும் விஞ்சை
சுங்கன்வா ரத்தினீதி யுளவாகுஞ்
சனிக்கூட்டிற் றுன்னு மாயுள் (11)

காலமிட மேற்கின்ஞேர் நன்கெய்த
விறந்தோர்தங் கடன்க ளாற்றிற்
சீலமிக வுடைத்தாகுங் கலைமதியை
வாளரவு தீண்டி னல்லாற்
பால்படுகங் குலினிறந்தோர்க் கூட்டறகா
தரும்புதல்வர் பரிவி னீன்ற
வேலையினுந் தென்புலத்தோர்க் கூட்டுதனன்
கெனமறைகள் விளம்பு மன்றே (12)

வெண்ணீறு பூத்தசெழும் பூசனிக்காய்
வழுதுணங்காய் சுரைக்காய் மிக்க
பெண்ணைநறுங் கனியவரை காய்கோவை
வரகரிசி பேழ்வாய் மேதி
நண்ணியபா றயிரொடுதிப் பிலியிவைக
டென்புலத்தோர் தமக்கு நாளுக்
தண்ணளியா லினிதூட்ட லாகாதென்
றருமறைகள் சாற்று மன்றே (13)

தென்புலத்தோர்க் கூட்டினரே வீடடைவ
ரெனமறைகள் தெரித்த வாற்ரு
லன்பினுடன் றென்புலத்தோர்க் கெல்லீருங்
கடனாற்றி யலைநீர்க் கங்கை

மின்பயிலும் புரிசடைய வெண்ணீறு
பூத்தொளிரும் பவளக் குன்றின்
பொன்புரையுஞ் சேவடியே புகலாக
வடைந்தின்பம் பொருந்து வீரே (14)

பத்தொன்பதாவது
சிரார்த்த முரைத்த வத்தியாய முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 401

---

உ

## இருபதாவது

## சிரார்த்த பாத்திர முரைத்த வத்தியாயம்.

---

குலத்தினி லொழுக்கின் ஞானக்
கொள்கையி னறிவின் மிக்க
நலத்தகு கேள்வி தன்னி
லுயர்ந்துளோர் தாமே நண்பாற்
சொலத்தகுஞ் சிரார்த்தந் தன்னில்
வரித்திடுந் தூயோ ரல்லார்
விலக்கருங் கிளையரெக்கோத்
திரனெனும் விடுக்கல் வேண்டும் (1)

தத்துவ முணர்ந்தோ ளுகி
யோகியாய்த் தலைமை பூண்டோன்
உத்தமசி ரார்த்த முண்டற்
குரைத்தவ னவனெய் தானேல்
மெய்த்தடு வேதங் கற்ற
பிரமசா ரிகளே வேண்டும்
அத்தகை யிவரெய் தாரே
லாற்றுமில் லறத்தோர் வேண்டும் (2)

ஈங்கிவ ரடையா ரென்னி
　　லீன்றவட் பயந்தோன் மாமன்
ஆங்குட னுதித்தாண் மைந்தன்
　　மகண்மகன் குரவ னன்பின்
ஓங்கிய விருத்தி யுக்க
　　ளுயர்மகம் புரிவித் தோர்கள்
தீங்கறு சிரார்த்த நன்கி
　　னுண்டிடுந் திறத்தி னோரே (3)

தோழனைச் சிரார்த்தத் தூட்டல்
　　தொன்னெறி வழிய தாகும்
தாழ்கொடும் பகைஞர்க் கூட்ட
　　றகாமறை கல்லாற் கூட்டிற்
பாழிவாய்த் தறுகட் கால
　　படர்தரு சிவையின் மாட்டிக்
காழிரும் பொழுகக் காய்ச்சி
　　வாயிடைக் கவிழ்ப்ப ரன்றே (4)

தன்னெழுக் கிகந்தோன் மூன்று
　　தலைமுறை வேத மோதாப்
பின்னவ ரனையோர் மற்றைப்
　　பின்னவர்க் கேவல் செய்யும்
பன்னரு மறையோர் கொண்ட
　　பார்ப்பனி யுயிர்க்கு முன்னஞ்
சென்னவே ளாளர் மாதர்த்
　　தோய்ந்தரு மகவை யீன்றோர் (5)

வாட்படை பயிற்று விப்போர்
　　மன்னவர் குரவ ரன்பால்
நாட்படக் கிராமங் கட்குப்
　　புரோகித நயந்து செய்வோர்

ஆட்படத் தண்டஞ் செய்வோர்
ராகிய விவர்க டம்மைக்
கோட்படு சிரார்த்தத் துண்ணக்
கூட்டிட றகைமை யன்றே (6)

பஞ்சராத் திரங்க பாலம்
படித்துளோர் பயிலுங் கான
விஞ்சைகற் றவரொ ருத்தன்
வேட்டவ டன்னை வேட்டு
மஞ்சனைப் பெற்றோன் முந்நூல்
மார்பினில் வனையான் றன்னைச்
செஞ்சவே யோது வித்தோன்
சிரார்த்தமுண் டிடுதற் காகார் (7)

சொல்லுமாச் சிரம மொன்றி
விராதவர் தூயோர் போல
வல்லிதின் வேடம் பூண்டோர்
பிணரொடு மருவு மெய்யர்
பல்லுகிர் கெட்டோர் குட்ட
நோயராண் குறியிற் பண்பார்
புல்லுதோல் குறைத்தோர் கள்வர்
கள்ளுண்போர் பொய்ம்மை சொல்வோர் (8)

பூத்தவ டன்னை வேட்டோன்
வேந்தரை யொறுத்தோன் போற்றி
யார்த்தநல் வீடு சுட்டோன்
குழிசியோ டினிதி னுண்டோன்
மூத்தவன் வேட்கு முன்னம்
வேட்டவன் முழுநோ யாளன்
நீத்திடு மொற்றைக் கண்ணன்
நிகழ்த்துபஞ் சாங்கஞ் சொல்வோன் (9)

பூண்டநல் விரதம் விட்டோன்
புரைபட வுறுப்பி லாதோன்
வேண்டிய வங்கந் தன்னின்
மிகுந்தவன் கைம்மை யீன்றோன்
மாண்டகு சிறப்பிற் றீர்ந்த
குண்டகன் குறளோ யார்க்குந்
தூண்டிய சொல்வோன் மாதர்
சொல்லிய மொழியி னிற்போன் (10)

தந்தைதாய் குரவ னில்லாள்
பசித்திடத் தானே யுண்போன்
மைந்தனில் லாதான் பொச்சான்
றுரைப்பவன் மடைய னென்று
முந்துநீர் கடலுட் செல்வோன்
செய்ந்நன்றி கொன்றோ னேது
நந்தலில் வீதி தட்டு
நன்மனை கோலு கின்றோன் (11)

போற்றிய சமய நூல்கள்
அந்தணர் தெய்வம் போற்றான்
வேற்றவன் மனையா டன்னை
விழைபவ னிவர்கள் யாரும்
சாற்றிய பதித ரின்னோர்
தம்முடன் பந்தி யாகா
வேற்றிருந் துண்ண லாகாச்
சிரார்த்தவூ ணிவர்கட் காகா (12)

சிரார்த்த பாத்திர முரைத்த வத்தியாய முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 413

---

உ

## இருபத்தொன்றுவது
## தென்புலத்தோர்க் கூட்டுமுறைமை யுரைத்த
## வத்தியாயம்

---

*உரைத்ததென் புலத்தோர் தங்கட்*
*கூட்டிடு முன்னை நாளின்*
*வரித்திட வேண்டுந் தூய*
*மறைபயில் முனிவர் தம்மை*
*நிரைத்திடும் பிதிர்க்கள் யாரும்*
*நீதியந் தணரைரை யூட்டித்*
*தரைக்கணவ் வந் தவரோ டுண்டு*
*பலநனி தருவ ரன்றே* (1)

**வேறு**

*ஒருவன் கணித்தொ னயலோன்பா*
*லுண்டறிதாஞ் சிரார்த்த முண்டோன்*
*மருவும் வழிச்சென் றிடல்புணர்தல்*
*மறைகளோதல் முனிந்து ரைத்தல்*
*கருதுஞ் செபங்க ளினிதியற்றல்*
*தீதா மென்பர் கற்றுணர்ந்தோர்*
*பொருவில் சிரார்த்த மிட்டோனு*
*மிவ்வா றியற்றல் புன்மைத்தே* (2)

*தனது மனையில் வரைமுகட்டிற்*
*றரங்கம் விரிக்கு நதிக்கரையிற்*
*பனிவெண் டிங்கள் முதுகுரிஞ்சும்*
*பைம்பொற் குடுமி சினகரத்திற்*
*புனித மார்கும் கோமயத்திற்*
*பொற்பின் விளங்க மெழுக்கெறிவித்*
*தனைய மறையோர் தமையினிதி*
*னன்பா லெண்ணெ யாட்டிவித்தே* (3)

எண்ணே யாட்டிப் புகுமறையோர்
　　தம்மை யினிதி னடிவணங்கி
வண்ணக் கலசத் தூநீரா
　　லன்னோர் வனசத் தாள்விளக்கி
நண்ணற் கரிய வருக்கியமே
　　முதல யாவு நன்கியற்றி
யண்ணல் மறைவிச் சுவதேவர்
　　பிதிர்க்க ளிருக்கு மடைவிருத்தி (4)

பொன்னங் கலன்கள் பலபரப்பி
　　முல்லே முகையின் பொற்பமைந்த
வன்னஞ் சொரிந்து கருணைகொட்டி
　　யமைவிற் பல்காற் கைவிப்ப
கன்னற் கட்டி நறுநெயிவை
　　பெய்தான் றீம்பாற் கடல்பெருக்கி
பன்னற் கரிய பழக்குவைகள்
　　பஞ்ச தாரை யொடும்பொழிந்தே (5)

இன்ன வாறு தென்புலத்தார்க்
　　கருத்து மேல்வை யழுதிரங்கல்
தன்ன துடலம் வெயர்வொழுக
　　நிற்றன் முனித றகாதென்பர்
அன்னங் காலாற் றள்ளுதல்தன்
　　கையாற் கறிக ளிடலாகா
முன்னம் வேற்றுப் பிடலாகா
　　பறவை யோட்டன் முறையன்றே (6)

இரும்பா லியன்ற பாத்திரத்தி
　　லிடுத றீது மட்கலத்திற்
பொருந்த வருத்து வித்தோர்கள்
　　பொங்கு மழல்வாய் நரகடைவர்

விரிந்த பொன்னின் வாழ்மானின்
கொம்பி லத்தி வியன்மரத்திற்
றிருந்து சமைத்த பாத்திரத்தி
லளித்தல் மிகவுஞ் சிறப்புடைத்தே (7)

அயிலு மறையோர் அயில்வனகள்
தீது நன்றென் றறையிலவண்
பயிலும் பிதிர்க்க ளகன்றிடுவ
ரதனாற் பகரா திருந்தருந்தல்
இயல்ப தாகு மிறந்தோர்கட்
கருத்து மெவையும் வரையாமற்
றயையோ டருந்தல் நன்காகும்
வரைந்து நுகர்த றகாதென்பர் (8)

இறந்தோர்க் கூட்டு மேல்வைதனில்
வேதம் புராண மிதிகாசஞ்
சிறந்த தரும நூலினிதிற்
கேட்பித் திடுதல் சிறப்பாகும்
அறங்கொண் மறையோ ரினிதருந்திக்
கைபூ சிப்பி னவிரொளிய
நிறங்கொள் மணியா சனத்திருத்தி
நிகழ்த்துஞ் செழும்பிற் கடையுதவி (9)

அனையோ ருள்ள மகிழ்பூப்ப
வறுவை யுயர்தக் கணையுதவி
வினைசெய் தென்னந் திசைநோக்கி
யிறந்தோர்ப் பழிச்சி வரம்வேண்டிப்
புனித மறையோர் தமக்குவிடை
புகன்று விரித்த தருப்பையினில்
வனையும் பிண்ட மொடுமூன்று
மறித்து மறித்து நிரைவைத்தே (10)

கரிசேர் தருப்பை மிசைநூலிக்
கலையி னூலின் மிடைசேர்த்தி
யுரிய தெண்ணீர் மறித்தொழுக்கி
யுவந்து பிதிர்க்க டமையேத்தி
மருவு நடுவு பிண்டத்தை
யிளக்கி மனையா டனக்குதவி
யிருபிண் டமுமான் மறையோர்கட்
களிக்க வன்றேற் புனலிடுக (11)

உரைத்த படியின் னிலமுழுதும்
புனித மாக்கி யொழுக்கநூல்
வரைத்த சுத்தா சமனஞ்செய்
தியன்ற வடிசில் மகிழ்வினொடு
நிரைத்த கிளைஞ ரேவல்செய்வோர்
கருத்தி னிகரின் மைந்தரொடும்
விரைத்தாழ் கூந்தன் மனைவியொடும்
வெவ்வே ருக விருந்தருந்தி (12)

அற்றைக் கங்கு றென்புலத்தோர்க்
கருத்தி னேனு மருந்தினருங்
கற்றைக் குழலார் கதிர்முலையிற்
புல்லா திருத்தல் கடனாகும்
மற்றிங் கிவ்வா றொழுகாது
மடவார் முயக்கம் விரும்பினோர்
கொற்ற மறலி முனிவெய்தக்
கொடிய நரகத் திடைகுளிப்பார் (13)

இறந்தோர்க் கூட்டித் தன்மனையி
னுண்ணு தெரிவெம் பசியினன்
மறந்தும் வேறோர் மனையருந்தி
னழல்வாய் நரகி னிடைவீழ்வன்

அறஞ்சே ரன்ன மேலாவே
லரிசி யேனு மளித்திடுக
சிறந்த தாகும் பின்னவர்க்காங்
கரிசி யதனுற் செய்கடனே (14)

வறுமை யதனுற் புகன்றனக
ளேலா வென்னில் வளர்கனிகாய்
நறிய மூல மெண்ணீரா
லெனினு மிறந்தோர் கடனல்க
அறையுந் தந்தை யுள்ளோர்க
ளாற்ரு ஞதாற் றிடல்வேண்டில்
உறையுந் தந்தை முதலாக
மறையோர்க் கூட்ட லூரித்தாமால் (15)

நல்ல தருமஞ் செய்கின்ருேர்
நந்தி முகராம் பிதிர்கட்குச்
சொல்லுஞ் சிரார்த்தஞ் செய்போழ்திற்
றாய்தா முந்நூல் வலமிட்டுப்
புல்லும் வடக்கு நுனியாக்கிப்
புகன்ருே ரொற்றைப் படாதியன்ற
மல்லல் மறையோ ரிரட்டைபட
வைத்துத் தாய்க்கு முன்னூட்டி (16)

பின்னர்ப் பிதிர்கட் கினிதூட்டிப்
பெட்பி ைேடு மினிதீன்ற
வன்னை தந்தை வருக்கத்துக்
கமைவி ஞூட்ட லியல்பாகும்
இன்னற் கரும மனைத்தினையுங்
கிழக்கு முகமா யினிதியற்ற
நன்ன ரோடு மிவ்வாறு
புரியா தொழுக னவையாமால் (17)

இருபத்திஒன்ருவது
தென்புலத்தோர்க் கூட்டுமுறைமை யுரைத்த
வத்தியாய முற்றிற்று
ஆகத்திருவிருத்தம் (430)

உ

## இருபத்திரண்டாவது
## சூதகாசூச முரைத்த வத்தியாயம்

அருமறையோர் ஞாதிகட்குச் சூதகமோ
டாசவுச மறையுங் காலை
மருவுறுமேழ் தலைமுறைக்கும் பத்துநாள்
மருவியிடு மருவி றன்றுற்
றிருமருவு பூசைமுதல் நல்வினைக
ளனைத்தினையுஞ் செய்த றீதாம்
ஒருவரையுந் தொடலாகா வோமமும்வே
றொருவனைக்கொண் டுஞற்றல் வேண்டும் (1)

பெருந்தேவி பொறையுயிர்த்த சூதகத்திற்
றாய்தந்தை யன்றிப் பெட்பீற்
பொருந்தியிடு ஞாதிகளை மூன்றுநாட்
செலிற்றொடலாம் புனித ஞானந்
திருந்துறக்கை வந்தோனைச் செயற்கரிய
வருமகங்கள் செய்து ளோனை
வருந்தியிடுஞ் சூதகத்தோ டாசவுச
மொருநாளு மருவா தன்றே (2)

### வேறு

முன்னா விடுமுன் னிறந்தொழியின்
மூன்றுநாளா சவுசமுள
அன்ன மூன்னூல் வணைந்ததற்பி
னுவி யொழியில் மறையோர்க்குக்
கொன்னே பத்து நாளைக்கு
முளதாங் கொடிய வாசவுச
மன்னு குரவ னிறந்திடிலா
சவுச மூன்று நாண்மருவும் (3)

முல்லை யரும்பிற் பற்ருேன்றும்
முன்ன பிறப்பின் ஞாதிகட்காங்
கொல்லை நீரிற் படிந்தெழுந்தா
லொழியுஞ் சூழ்ந்த வாசவுசஞ்
சொல்லுந் தந்தை தாயவர்க்குப்
பத்து நாளுந் தொடர்ந்தெய்தும்
நல்ல குரவன் மகனிறப்பின்
நண்ணு மொருநா ளாசவுசம் (4)

குரவன் பன்னி யிறந்தாலு
மொருநா ளுளவாங் கோதின்மைந்தர்ப்
பருவ மிரண்டு சென்றதற்பி
னிறப்பிற் பகருந் தாய்தந்தைக்
கொருப தாகு நாளுளவா
முரைக்குந் தாயத் தார்தமக்கு
மருவுங் கொடிய வாசவுச
மூன்று நாளைக் கெனவகுப்பார் (5)

**வேறு**

மயிர்வினைசெய் முனமிறப்பி னோர்நாள்நீள்
குடுமியினை வைத்த பின்னர்
உயிரழியின் மூன்றுநா ளுபநயனம்
பண்ணியபின் னுலந்து போகிற்
செயிரறுமோர் பத்துநா ளுயிர்ப்புழிவீய்ந்
திடிற்றெண்ணீர் முழுகிற் றீரும்
பயில்வுறுஞா திகடமக்காங் காசவுச
மெனமறைகள் பகர்ந்த வன்றே (6)

பிறந்துழிவீய் வுறிற்ருய்க்குந் தந்தைக்கும்
பத்துநாள் பிடிக்கும் பெட்பிற்
சிறந்தவுடன் பிறந்தவர்க்குத் தெண்ணீர்மூழ்
குழியகலும் பத்தா நாளில்

இறந்திடின்மற் றுடன்பிறந்தார்க் கெய்துமொரு
நாளிசைக்கும் வாத்தி யாரும்
அறிந்திடிலோர் நாளுண்டா மாசவுச
மெனமறைகள் வகுத்த தன்றே (7)

ஒருத்திபொறை யுயிர்த்திட்ட வொன்பதுநாள்
களிலொருத்தி யுயிர்த்தா ளென்னிற்
றிருத்தகுசூ தகமிரண்டு முன்னுயிர்த்தாள்
பத்தாநாட் டீர்ந்து போகும்
வருத்தமொடு பொறையுயிர்த்த பத்தாநாள்
மற்றொருத்தி யுயிர்த்தா ளென்னி
னருத்தியுறு பன்னிரண்டா நாளிருவர்
சூதகமு மகன்று போமால் (8)

தாயத்தா னிறந்தவொன்பா னுள்கடயில்
மற்றுமொரு தாயத் தானு
மேயத்தா னிறந்திடிலப் பத்தாநாள்
களினீங்கும் பத்தா நாளிற்
காயத்தா னுறுபாரம் வேறொருவன்
கழிந்திடிற்பன் னிரண்டா நாளின்
மாய்வுற்ற விருவருக்கு மாசவுசந்
தீங்குமென வகுத்தா ரன்றே (9)

தமரிறந்த வொன்பானுள் ஞாதிகளி
லொருத்திமக வுயிர்ப்பிற் றுழா
தமைவுறுமா சவுசமுமச் சூதகமும்
பத்தாநா ளளவிற் றீருங்
*கமையிகந்து சேட்சென்றோ னிறந்தமையும்
மதியதனிற் கேட்பிற் காதற்
சுமைவுறுமவ் வாசவுச மூன்றுநா
டம்மிலறத் தொலையு மன்றே (10)

---

* கமையிகழ்ந்து (பா. பே.)

ஆறுதிங்க டனிற்கேட்பி னென்றரைநா
டனிற்றொலையு மாறோ டாறு
யேறுதிங்க டனிற்கேட்பி னொருநாளிற்
கழிந்திடுமியாண் டிறந்து கேட்பின்
ஊறுபுன றனிற்படியி னொழிந்திடுமா
சவுசமுயர் மாமன் மாமி
பாறினர்நல் லுயிரென்னின் மூன்றுநா
ளாசவுசம் பற்று மன்றே (11)

வம்பலன்றன் மனையெய்தி மறியிலொரு
மூன்றுநாட் கிராமந் தன்னில்
ஐம்புலன்செற் றோனிறப்பி னொருநாளா
சவுசமரு மறையோர்வேந்தர்
இம்பருறு நல்வணிகர் பின்னவர்க்குச்
சூதகமா சவுச மீரைந்
தும்பருறு பன்னிரண்டு பதினைந்தோர்
முப்பானு ளுறுங்க ளன்றே (12)

அந்தணர்க்குச் சூதகவா சூதமெய்தி
னவன்வேட்ட வரச கன்னி
நந்தலில்வா ணிகமடைந்தை சதுர்த்தகன்னி
யெனுமிவர்கள் நயந்து பெற்ற
மைந்தர்களோர் மூவருக்கும் பத்துநா
ளுறும்வேந்தன் மணந்த நாய்கன்
பைந்தொடிபின் னவர்மாதர் மைந்தருக்கும்
பன்னிருநாட் பற்று மன்றே (13)

வணிகருக்குச் சூதகமா சௌசமெய்தி
னவன்வேட்ட சதுர்த்த மாதர்
பணிவருநன் மைந்தர்க்கு மாங்கவர்போ
லைம்மூன்று நாளும் பற்றும்

தணிவருமுக் குலத்தோர்க்குப் பிறந்திடுபின்
னவர்க்குச்சூ தகமா சவுச
மணுகில்நா யகர்க்கறுநா ளரசர்க்கோர்
மூன்றுநாள் மறையோர்க் கோர்நாள் (14)

அந்தணர்க்கா யினும்வேந்தர்க் காயினும்வந்
தவதரித்துப் பின்னோர் மாதர்
சந்தமுலை மணந்துமக வுயிர்த்தநா
யகர்க்குச்சூ தகமா சவுசம்
வந்திடின்மற் றவரீன்ற பின்னவர்கைம்
மூன்றரசர்க் காறு மற்றை
நந்தலினுன் மறையோர்க்கு மூன்றுநாட்
பற்றுமென நவில்வர் மாதோ (15)

மறையவர்பால் வந்துதித்த வணிகமடந்
தையைச்சதுர்த்தர் மயிலை வேட்ட
விறைவனுக்குச் சூதகமா சவுசமெய்தி
னந்தணர்க்கோ ரறுநா ளெய்தும்
அறைகழன்மன் னவனீன்ற வணிகர்க்குப்
பத்துநா ளரச னீன்ற
நெறியுடைவே ளாளர்க்குப் பன்னிருநா
ளுண்டென்ன நிகழ்த்தி னாரே (16)

தாயமல்லர் மறையோனுக் கிமெத்திற்
றழற்கரும மியற்றி யுண்டோற்
காயவன்று யம்போலப் பத்துநா
ளாசவுச மடுக்கு மீமத்
தேயவன்செய் தவன்மனையி லுண்ணாது
தன்மனையி னெய்தி யுண்டோற்
கோய்வுறுநாள் மூன்றளவு மாசவுச
மெய்துமென வுரைப்பர் மாதோ (17)

தீதிலேழ் தலைமுறைமேற் பதினான்கு
தலைமுறையுஞ் சேர்ந்து ளோரைச்
சோதகரென் றுரைப்பரவர்க் காசவுச
நாண்மூன்றிற் றொலைந்து போகும்
ஏதமறு தாய்கிளைஞ ரிறப்பினு
மொருமூன்று சவுச மெய்து
மாதுலர்க்கி மக்கரும மாற்றினோன்
முழுகியிமு தருந்திற் றீரும் (18)

பொன்விழைவாற் றம்வருணத் தவர்கருமம்
புறங்காட்டிற் புரிந்து ளோர்கட்
கன்னவரு ணர்க்குரைத்த வாசவுச
மெய்துமுயர் குலத்து ளோர்க்கு
மன்றுமிழி குலத்துள்ளோர் புறங்காட்டிற்
கடன்முடிப்பின் மாய்ந்துள் ளோர்க்குச்
சொன்னநா ளளவுமிவர்க் காசவுச
மெய்துமெனச் சொல்வ ரன்றே (19)

இழிகுலத்தோர்க் குயர்குலத்தோர் புறங்காட்டிற்
கடனியற்றி னிறந்துள் ளோர்க்கு
மொழிதருநா ளளவுமிவர்க் காசவுச
மெய்துமுயிர் முடிந்து போன
பழுதறுநான் மறையோன்பின் சென்மறையோன்
மூழ்கிநெய்யுட் பருகு போழ்தின்
ஒழிதருமா சவுசமென வருமறைகண்
முழுதுணர்ந்தோ ருரைத்தா ரன்றே (20)

இறந்திடுமன் னவன்பின்ன ரெய்தினொரு
நாளளவு மெய்து மாவி
மறிந்தவணி கன்பின்னர் சென்றிடினு
மிரண்டெய்து மறிந்த பின்னோன்

புறந்தனிற்பிற் றொடர்ந்தேகின் மூன்றுநா
ளெய்துமா சவுசம் பொற்பிற்
சிறந்தமறை விளையாடுஞ் செந்நாவே
தியர்க்கென்று செப்பு நூவே (21)

பின்னவர்க்குக் காடாற்று முன்மறையோ
னவன்மனையிற் பெட்பி னெய்தின்
மன்னுமொரு மூன்றுநா ளாசவுசங்
காடாற்றி வந்த பின்னர்
அன்னவன்றன் மனையெய்தின் நாளொன்றிற்
றீருமுய ரரசர் நாய்கர்
நன்மனையிற் காடாற்று முனமெய்தி
னுளொன்று நண்ணு மன்றே (22)

சுடலையாற் றியபின்னர் மன்னவர்நா
யகர்மறையோர் துனைவி னெய்தி
*யடைவினுயர் பகற்காணிற் பகற்றீரு
மிரவுறிலவ் விரவிற் றீரும்
கெடலரும்வே தியரிறப்பி னவர்மனைமுக்
குலத்தோரும் கிட்டிற் றெண்ணீர்
படிதரிற்றீர்ந் தொழியுமுய ராசவுச
மெனமறைகள் பகர்ந்த மாதோ (23)

வருணநான் கினுமிறந்தோர் மனையினொரு
நாணசையின் மகிழ்ந்துண் டோர்க்குப்
பொருவருமவ் வருணத்துக் குரைத்தநா
ளாசவுசம் பொருந்து மென்ப
மருவருநல் குரவதனு லருந்தினோர்க்
கருந்தியநா ளளவு மாறு
தொருவருமா சவுசமுறுஞ் சாந்திபண்ணி
னொழிந்திடுமென் றுரைப்பர் மாதோ (24)

---

யடையினுயர் (பா. பே.)

அருமகமாற் றுநரிறப்பிற் புறங்காட்டி
னழற்கரும மாற்று நாடொட்
டொருவருமா சவுசமெய்து மேனையோர்க்
குயிருலந்த நாடொட் டெய்துந்
திருமறையோர்க் கொருமூன்று சாதியினுந்
தீவேட்பி னனையோ ரன்பிற்
றருபுதல்வர்க் கொருமூன்று தலைமுறையும்
பிண்டமிட றக்க தன்றே (25)

வள்ளியோர் சீவன்முத்தர் பன்னூ
மகவினைகள் மகிழ்ந்து செய்வோர்
ஒள்ளொளிய முடிவேந்தர் நீராடி
ஞசவுச மொழியு மெச்சந்
தள்ளரிய விழைவிஞெடுஞ் சாறயர்நாண்
முகில்வறந்த காலந் தாவுந்
தெள்ளுதிரைப் புனலாடி ஞசவுச
மொழியுமெனத் தெரித்தா ரன்றே (26)

மன்னவரா லிடியேற்ருல் வாளரவா
னீரிஞல் நெருப்பான் மற்றுந்
துன்னமராற் பிராயோப வேசத்தா
அந்தணர்க்காய்த் தொறுவுக் காக
வின்னுயிர்விட் டோர்தமக்குந் துறந்தோர்க்கும்
பிரமசா ரியர்க்கு மென்றும்
உன்னரும்வா னப்பிரத்தர் தங்களுக்கு
மாசவுச முற்றி டாவால் (27)

விடநுகர்ந்து நான்றுகொண்டு மாழ்கயத்தின்
வீழ்ந்துமுயிர் வீய்ந்து ளோர்க்கு
மடைவழிய விளிந்தோர்க்கு மீமத்திற்
செய்கடன்கள் முதல பிண்டம்

இடுதலிவை முதலாய யாவுமில்லை
யாவறியா தெதிர்ந்து தீண்ட
முடியுமவர்க் கிங்கிவைக ளனைத்துமுள
வெனமறைகள் மொழிந்த வன்றே (28)

மகவின்று ணன்மனையி னெல்லரிசி
பொன்பசுவான் கரும்பெட் சோறு
தகரிழுது கீரையுப்பு விறகுசருக்
கரைதெண்ணீர் தயிர்பா லெண்ணெய்
புகலருநோய் தீர்மருந்து வாங்குதலா
மகம்புரிந்தோ ருவி பொன்றின்
இகழ்தருநன் மகத்தீயாற் சுடுகபிறர்க்
கெத்தீயு மியைந்த தாமால் (29)

ஒருவனிறந் துழியறியா துடலமுங்கா
ளுதொழியிற் பலாசு தன்னுன்
மருவுமவ னுடல்போல வமைத்தீமக்
கடன்கழித்தல் வழக்க தாகும்
பொருவிலுயி ரிறந்தோர்க்குத் தாயத்தார்
நனைந்ததுகில் புனைந்து வைகி
யிருபொழுது நீருகுத்துப் பிண்டமிட
லொழுக்கென்ன விசைத்தா ரன்றே (30)

இறந்துளோன் மனையிலற்றை நாள்நால்வர்க்
கூட்டிடுக வெதிர்ந்த ஞான்றின்
அறைந்தமயிர் வினைமுடித்துக் காடாற்றி
யைந்தாநா ளொன்பா னுளிற்
சிறந்தபதி னொன்றுநா ளொற்றைபடு
மறையோரைத் தெவிட்ட வூட்டல்
நிறைந்தநவச் சிரார்த்தநாட் பதினொன்றி
னீரப்பிடுக வேகோ திட்டம் (31)

பன்னிருதிங் களுமிவ்வா றியற்றியுயர்
பன்னிரண்டா மாதந் தன்னின்
மன்னியபாத் திரநான்கி னீர்வார்த்தோர்
பாத்திரத்தில் வார்த்த நீரை
முன்னுறுபாத் திரமூன்றி னுடன்கலந்து
வரித்தமறை முனிவர் தம்மைத்
தன்னமரும் பிதிர்க்களென வரிசித்தாங்
கின்னமிர்தந் தகவி னூட்டி (32)

பிண்டநான் கினிதமைத்துப் பிரேதபிண்டந்
தனைமூன்று பிண்டத் தோடுந்
தண்டலில்லா துடன்கூட்டல் சபிண்டியென
வெடுத்துரைப்பர் சபிண்டி செய்தார்
கொண்டவுயி ரிறந்தோரைப் பிரேதமென
வுரைத்திடுதல் குற்ற மாகும்
மண்டுநீர்க் குடமனத்தோ டோர்பருவந்
தினந்தோறும் வழங்கல் வேண்டும் (33)

இவ்வாறு தந்தைக்கு மைந்தர்கடன்
கழித்திடுத லியல்ப தாகுஞ்
செவ்விமைந்த ரிலரென்னின் மனையாளிக்
கடனனைத்துஞ் செய்ய வேண்டும்
அவ்வகையாற் றிடமனைமா ளிலளென்னி
லுடன்பிறந்தோ ராற்றல் வேண்டும்
பவ்வநெடுங் கடல்வலையத் தில்லொழுக்க
மிழுக்காமற் பகர்ந்திட் டேமால் (34)

இருபத்திரண்டாவது
சூதாகாசூச முரைத்த வத்தியாய முற்றிற்று
ஆகத்திருவிருத்தம் 464

---

உ

# இருபத்து மூன்றுவது
# அழற்கரும முரைத்த வத்தியாயம்

---

இல்ல றம்புரி கின்றவர் யாவருங்
கல்லெ ணுழி முகட்டிற் கதிரவன்
புல்லு போழ்திற் புகன்ற வழல்வினை
யல்ல றீர்ந்திட வாற்றிடல் வேண்டுமால் (1)

புதிய செந்நெற் புகுதி னுவாத்தொறும்
விதியி னீட்டி யியற்றல் விழுமிதா
மூதிரு நல்லய னத்தின் முறைமையிற்
கதிர்கொ ணன்பசுப் பண்ணல் கடனதே (2)

மருவு மார்கழி தையொடு மாசியி
லருளி னேடும மரபக் கந்தனிற்
றெருளு மட்டக மென்னுஞ் சிரார்த்தமாங்
கொருவி டாம லுஞற்றிட வேண்டுமால் (3)

பருவ மூன்று பசிகெட வுண்பதற்
குரிய செநெ லுளதெனி லாங்கவர்
அரிய நன்மக மாற்றுதல் வேண்டுமென்
றிரும றைப்பொருள் யாவு மியம்புமால் (4)

சவுத மென்றுஞ் சமர்த்தமென் றும்புகழ்ந்
தெவரு மேத்துந் தரும மிரண்டுள
வவைய றிந்தில னென்னி லறிவுளோர்
தவலி லாநெறி நிற்றல் தகைமையே (5)

பொருவி லாவிதி காச புராணங்கள்
தெருளு மாந்தர் சிறப்பின ராகுவர்
தரும நூலும் புராணத்தின் றன்மையுங்
கருதி யோர்ந்தவ ரேகலை வல்லரே (6)

இருபத்து மூன்றாவது
அழற்கரும முரைத்தவத்தியாய முற்றிற்று
ஆகத்திவிருத்தம் 470

---

உ
## இருபத்துநான்காவது
## இல்லறபேத முரைத்த வத்தியாயம்

---

இல்லறஞ்செய் வோர்தம்மி லிருதிறத்தோ
ருளரவரி லெச்ச மாற்றிப்
பல்கலையும் பயின்றேற்றுப் பைங்கூழ்கள்
விளைவித்தா டியத்தி னீட்டி
வெல்படைகள் பயில்வித்துப் பயின்றுளோன்
சாதகனு மேவு ஞானத்
தல்லுமுயர் நண்பகலு மமர்ந்துளோன்
சாதகனென் றறையு ஞாலம் (1)

சாதகனுக் காறுக்ன்மம் சாதகற்கு
மூன்றுகன்மம் தகைமை வாய்ந்த
வேதமறுஞ் சூரதர னீகற்கியைந்த
விரண்டுகன்ம மீரே ழாய
மூதுலகும் புகழ்கும்ப தரனீகற்கோர்
கருமமென மொழிவ ரென்று
*நீதிசா லறத்திினொடும் பொருளினொடும்
வீட்டின்ப நிகழ்த்தி னோரே (2)

---

* நீதிசொனல் (பா. பே.)

சாதகராய்ப் பொருளீட்டுந் தன்மையோர்
தமையறிந்து தலைமை பூண்ட
மாதவர்க்குங் கடவுளர்க்கு மதிதிகட்குந்
தென்புலத்தின் மருவி னோர்க்கும்
பேதமறப் பார்த்தருந்தி நல்லசெய்து
பொருளீட்டிற் பிழையு றுதென்
றேதமற முழுதுணர்ந்த கலைவல்லோர்
யாருமெடுத் திசைத்தா ரன்றே (3)

இன்னமனை வாழ்க்கையறம் புகன்றோருங்
கேட்டோரும் எழுதி னோரும்
கன்னலிற்பா கினிலமிழ்திற் கோற்றேனிற்
றித்திக்குங் கனிந்த தீஞ்சொல்
அன்னநடை யரம்பையர்தம் மஞ்சுணங்கா
ரிளமுலைதம் மகலந் தாக்கப்
பொன்னுலகி லிந்திரனு மேக்கறவுற்
றிடவினிய போகந் துய்ப்பார் (4)

இருபத்துநான்காவது
இல்லற பேதமுரைத்த வத்தியாயமுற்றிற்று
ஆகத்திருவிருத்தம் 474

---

உ

## இருபத்தைந்தாவது
## தானமுரைத்த வத்தியாயம்

சந்தச்செய்யுள்

ஓராறு தலையிட்ட வீரைந்து
மாதான முதலாயுறுஞ்
சீர்மேவு தானங்கள் கேண்மின்க
ணீரென்று திசையாவையும்
பாரேழும் விண்ணேழு மிணையில்லை
யெனவோது பழமாமறைக்
கார்மேக மெனநின்று மொழிகின்ற
முனிநன்கு கரைவானரோ (1)

## வேறு

உலக மனைத்தும் பொதுநீக்கி
யொருகோ லோச்சி யினிதாளு
நிலவுக் கவிகை முடிவேந்தர்
நிகழ்த்துந் துலைபுக் கிடவேண்டிற்
குலவுப் பலாசு வில்லத்தி
லரசிற் கருங்கா லியற்கோதின்
றிலகு கழையிற் றிக்கயந்தாங்
கெழில்சேர் மணிமண்டபஞ் சமைத்தே (2)

மழைவெண் கடுக்கு நெடுவாயி
ஞன்கு மணித்தோ ரணநிறுவித்
தழுமுற் றெய்தா மணித்தாமந்
தருப்பை மாலை யிடைதூக்கி
யெழில்சேர் விரலீ ராறுயரத்
தியம்பு மோரேழ் முழப்பரப்பிற்
பழுதில் தாளம் விளிம்படுத்த
பைம்பொற் றிண்ணை யினிதமைத்தே (3)

இருந்த திசைக ளோரெட்டுங்
குண்ட மமைத்தீ சானதிக்கும்
பொருந்து மகவான் றிக்கினுக்கு
நடுவ ணுகப் பொற்பமைத்துத்
திருந்தி யுயரும் பிரதான
குண்டம் பிறைபோற் றேருருள்போல்
விரிந்த கமலம் போலிவற்றின்
விளங்க வியன்ற படியமைத்தே (4)

வில்ல மரசு கருங்காலி
பலாச மென்ன விரித்துமறை
சொல்லு மரத்தி லியன்றவற்றிற்
றூக்குந் துலைத்தா ணெமுழத்திற்

புல்லு மிரண்டு நெற்கிடைநீ
ளத்தி னளவை புகலிளம்
வல்லோ ருரைத்த சுற்றுளவோர்
விரலின் முழமொன் றுய்வகுப்பின் (5)

ஒன்றுக் கொன்று நான்குமுழத்
தளவி னிடைவிட் டுறுகுழியிற்
சென்ற முழமோ ரிண்டாக
சிறப்பு வாய்ந்த தூணிறுவி
மன்றற் சதுர மொவ்வொன்று
வகுத்த பத்து விரற்பரப்பிற்
றுன்று முழமோ ராறமைந்த
துகடீர் மணியுத் திரஞ்சேர்த்தி (6)

உரைத்த வெட்டுத் துலாத்தெனினு
மொழியா தாறு துலாத்தெனினு
நிரைத்த சாண்மூன் றரைபரப்பீ
நிகழ்த்தி யிடுமுள் ளகலத்தின்
வரைத்த தராசு தட்டதனில்
வயங்கச் செறிகுண் டலஞ்சேர்த்துப்
பரிக்கும் வல்லித் தோரணநாத்
தண்டம் பகர்ந்த படியமைத்தே (7)

சாற்று மணியுத் திரத்தமைத்தத்
தவளைக் குறங்கின் தராசதனைத்
தோற்றி விளங்கும் படி தூக்கித்
துலங்கச் சமைந்த வேதிகையி
னூற்ற லுடனங் குறமியற்றி
யணிசே ரட்ட மங்கலம்வைத்
தேற்ற வாயி னுன்கினெடு
மியைந்த தனிமண் டலங்கிறி (8)

எழுது முயர்மண் டலனுப்ப
ணிலங்குங் கமலந் தனிவரைந்து
பழுதில் பஞ்ச வன்னத்தி
லதைக எதனின் பாற்கீறி
வழுவில் வயிரப் படைசத்தி
தண்டம் வாள்நீள் பாசமெழி
லொழுகு துவசங் கதைசூல
மூழிற் கிழக்கு முதற்கோட்டி (9)

வடகீழ்த் திசைக்குங் கீழ்த்திசைக்கு
நடுவ ணேமி வரைந்துதென்பா
லொடிவில் கமல மினிதெழுதி
யோர்நா ளுண்டி யிகந்துபின்ன
ரடைவி னுந்தி முகமியற்றி
*யாசா ரியனு தியரைவரைத்
திடர்தீர் காயத் திரியின்முதற்
குண்டத் தோம மினிதியற்றி (10)

வயிரப் படையோன் றிசைமுதலாந்
திசையின் வகுத்த குண்டத்திற்
பயிலத் திசைதோ றுறைதேவர்
மறையாற் பலாசி லன்னத்திற்
செயிர்தீர் நெய்யில் நூற்றெட்டா
குதியி னோமஞ் செய்துமையோ
டுயர்வெண் டிங்கட் பசுங்கண்ணி
யுரவோன் றன்னை நடுவிருத்தி (11)

இடப்பான் மாயன் வலப்பாலிற்
கமலக்கிழவ னெண்டிசையுந்
தொடப்பா லமைத்த விந்திரனே
முதலோர் பழிச்சி மலர்தூவி

* ஆசா ரியனு தியரைவரித்து (பா. பே.)

மடற்பூங் கமல நாயகனே
 வழுத்தி மறையோர்க் கினிதூட்டித்
தடப்பா டமைந்த குணவாயிற்
 புகுந்து சதருத் திரஞ்செபித்தே (12)

கடல்சேப் புறவந் தெழுந்தவெயில்
 கவிழ்க்கு மணிமா மௌலிபுனைந்
தடல்சேர் வேந்தன் கேடகத்தோ
 டலங்கு வடிவாள் கைப்பற்றி
வடபாற் றட்டி னிதிருந்து
 தனது நிறையின் மறுதட்டிற்
சுடர்கால் பசும்பொன் னுயர்குடுமி
 மேரு வென்ன நனிசொரிந்தே (13)

தான மேற்போர் சிவகாயத்
 திரியைச் செபிப்பத் தக்கோர்க
ளானு தரிய மறைபாடல்
 வரச னேற்போர்க் கானுது
பானுண் டுகிலின் மறைப்பவணி
 கலன்வாள் பரிசை யணியாடை
மானத் துலைப்பொன் னெடுநூறு
 கழஞ்சு கூட்டி வழங்குகவே (14)

அரிய மறைதேர் புரோகிதனே
 யாசா ரியனே முதலவர்க்கும்
பொருவில் சென்னி யணிதூசு
 புனையும் பசும்பொற் றூசுகண்மேல்
மருவு கலன்கை வளையாழி
 வயங்கு காதி னிடையணியு
முருவ மணிக்குண் டலமிவைக
 ளுவப்பி னேடும் வழங்குகவே (15)

கூறு மறைதே ரிருத்தியுக்க
ளாசான் கோதில் புரோகிதற்கு
நூறு நூறு கழஞ்சளிக்க
நுவலு மறையோ ரியாவருக்கும்
வேறு வேறோர் கழஞ்சாக
வியப்பி னளிக்க வேத்துநகர்க்கு
மீறில் கடவு ளீசருக்கு
மியன்ற நிதிய மீய்ந்திடுக (16)

## வேறு

ஆயிரம் பசும்பொற் கும்பத்
தமைத்தபால் பிரம கூர்ச்சந்
தோயுநீர் நறுநெய் பஞ்ச
கவ்வியந் துகளி லீர்ந்தேன்
சேயமுக் கனியி வற்றாற்
றிங்களங் கண்ணி யோனை
மேயபே ரன்பின் வேத
விதிமுறை யினிதி னாட்டி (17)

ஆயிர நாம மோதி
யருச்சனை புரிந்து வாச
மேயநற் றூப தீபம்
விருப்புட னினிதி னேந்திப்
பாயபொற் கலன்க டோறும்
பரிவினி னமிழ்த மேற்றி
யேயநூல் வழியி னெந்தை
பூசனை யினிதி னாற்றி (18)

ஆதுல ரிரப்போர் தீரா
வரும்பிணி யுற்றோர் யார்க்கு
மேதகு நிதிய நல்கி
விலாவிற வடிசி லூட்டித்

தாதவிழ் மாலை சாந்த
மளிக்குத றவலில் கேள்வி
மூதறி வுடைய நீரார்
மொழிதுலாப் புருட மென்பார் (19)

இரவியை யரவு தீண்டிற்
பொற்றுலை யேற நன்காம்
விரிகதிர் மதியந் தீண்டில்
வெள்ளியந் துலைவி யப்பா
முருகிய நறுநெய் பெய்த
துலைபுகி னொளியுண் டாகும்
பெருகுதேத் துலையி னேறிற்
பெறலருந் திருவ னுவான் (20)

எண்ணைபெய் துலையி னேறி
னினியநன் மகப்பே றுண்டா
நுண்ணிய வாடை பெய்த
துலைபுகி னூலிற் செய்யா
விண்ணவ ராடை யெய்தும்
வெள்ளுப்புத் துலையி னேறிற்
கண்விளக் குறுசெஞ் சோதி
கவினொடு மிளிது வாழ்வார் (21)

சருக்கரைத் துலையிற் றூங்கி
னேயுருச் செய்ய சாந்தம்
நிரப்பிய துலையி னேறி
னிகழ்த்தரு முருவ முண்டாம்
விருப்பொடு பஞ்ச தாரைத்
துலைபுகின் மேவார் தம்மைச்
செருக்கள மதனில் வெல்வ
னெனமறை தெரித்த தன்றே (22)

குங்குமத் துலையில் வெய்ய
குவிமுலை மகளி ரேறிற்
பங்கமில் கொழுநற் சேர்வர்
பாற்றுலை யதனிற் றூங்கின்
வெங்கொடுந் தாபந் தீரும்
வெண்கலத் துலையிற் றூங்கிற்
றங்குலப் பிதிர்க்கள் யாரும்
தாங்கரு மகிழ்ச்சி பூப்பார் (23)

செம்புபெய் துலையி னேறிற்
றென்புலத் தோர்கள் யாரு
மும்பரு மகிழ்ச்சி கூர்வ
ருவந்திவை யளித்தோர் யாரு
மெம்பிரா னுமையி னோடு
மகிழ்ந்திட வெண்ணில் காலம்
வம்பவிழ் தருவி னீழல்
வாழ்ந்தினி திருப்ப ரன்றே (24)

இரணிய கருப்ப தான
மியம்புது மகிழ்ந்து கேட்டீர்
மருவுமண் டபநற் பூசை
மற்றுள்ள கருமம் யாவும்
பொருவருந் துலைக்குச் சொன்ன
விதிப்படிப் புரிக போற்று
மரியகேழ்க் குழிசி பொன்னோ
ராயிரக் கழஞ்சிற் செய்க (25)

மொழிந்தது தனக்கைஞ் ஞாறு
கழஞ்சினல் மூடிச் செய்தாங்
குழுந்தினு லதனைப் பூசி
யுரைத்தகேழ்க் குழிசி தன்னை

விளைந்திடு மயன்மா லங்கி
யெனவெண்ணி மேலின் மூடிக்
குழந்தைவெண் டிங்கள் வேணிக்
குழகனு யினிதி னெண்ணி (26)

புருடனுய்த் தன்னை யெண்ணிப்
புகன்றவே திகையின் மீது
மருவுபாத் திரத்தை வைத்து
மறையினு லாவி னைந்து
முரியபாத் திரத்தின் வாக்கித்
துலையினுக் குரைத்த வண்ண
மரனுறு பூசை யோமம்
யாவையு மினிதி னுற்றி (27)

இலங்கொளித் தரும ராசப்
பிரதிமை யிடக்கைப் பற்றி
வலம்படும் வலக்கை தன்னின்
மலரயன் விம்ப மேந்தி
யலங்கொளிக் குழசி புக்குக்
குணதிசை யதனை நோக்கி
நலம்படு மீசன் காயத்
திரியினை நவின்று வைகி (28)

அந்தணர் கருப்ப தானஞ்
சீமந்த மாதி யாய
நந்தலில் கருமஞ் சத்தி
பீசத்தால் நயந்து செய்ய
வந்தெழு முயிர்ப்போ ரைந்தி
னளவுமற் றதனுண் மூழ்கி
யுந்துபல் லியங்க ளார்ப்ப
வதனினின் றுதித்த பின்னர் (29)

சிறப்புடைச் சாத கன்ம
முதலிய வனைத்துஞ் செய்தாங்
கறத்துட னலவாய் செய்தற்
கந்தணர் தம்மை யூட்டி
நிறுத்திடு சவுள முந்நூ
லாதிய கரும நீங்கா
மறைப்படி வழுவு றாம
லினிதினின் மகிழ்வி னாற்றி (30)

முப்பதின் கழஞ்சு பொன்னின்
முகிழ்முலைப் பாவை பண்ணித்
தப்பிலா வெட்டுத் திங்கள்
தாழ்சடைக் குருசிற் கீயா
வொப்பறு பசும்பொன் யாவுந்
துலையினுக் குரைத்த வண்ணந்
தப்பற மறையோர் தம்பாற்
றக்கணை யோடு நல்க (31)

உயர்பிர மாண்ட தானஞ்
செய்யின்மண் டபநல் லோம
மயர்வறு மறையோர் தம்மை
வரித்திடல் துலைக்கு முன்னஞ்
செயிரற வுரைத்த வண்ணஞ்
செய்திடல் வேண்டு மென்னப்
பயில்மறை முழுது மாய்ந்த
முனிவரர் பகர்ந்தா ரன்றே (32)

இருபது பலத்தி னெஃகா
தாயிர பலத்தி னீரு
யொருபதிற் றிரட்டி கொண்ட
விரலிழி யுயர்ச்சி நூறாய்

மருவரு செம்பொன் றன்னில்
வாயிலி கும்பம் போலத்
தெரிவரப் பொருத்தி ஞென்றுய்ச்
சேர்ந்திட வினிதிற் செய்தே (33)

தேம்படு மதமா வோரெட்
டெண்டிசைக் காக்குந் தேவர்
காம்பிசைக் குறிக்கு மாயன்
வசுக்களா தவன்முக் கண்ண
ணும்பல்வாய்க் கமலை யெல்லா
வகிலமு மின்ற வேந்தா
யேம்பலிற் கமலத் தோனைச்
சூழ்ந்திட வினிதிற் செய்தே (34)

மலைவறு பிரமாண் டத்தை
வலஞ்செய்து பூசை யாற்றிக்
குலவுமான் பத்து வேத
முனிவரர் கொள்ள நல்கி
யலைவறு மாசா ஞதி
மறையவற் கதனை யன்பிற்
றுலைநிதி யளித்தல் போலத்
தொகுத்தினி தளித்தல் வேண்டும் (35)

உரைத்தவித் தான மீய்ந்தோர்
தீவினை யொல்லை நீங்கி
விரைசெழுங் கமலப் புத்தேள்
வியனுல காதி யாக
நிரைத்திடு முலகத் துள்ள
நிகரறு போகந் துய்த்துப்
பரைக்கொரு பங்கு நல்கும்
பரமன்ரு ளிணையிற் சேர்வர் (36)

ஆயிரக் கழஞ்சு பொன்னிற்
நற்பகத் தருவுண் டாக்கிச்
சேயமென் றளிர்கா யோங்குஞ்
சினைபல மலர்கள் யாவும்
பாய்கதிர் விரிக்கு மொன்பான்
மணியினும் பரிந்து பண்ணித்
தூயமென் பளிங்கிற் செய்த
வேதிகைத் துலங்கச் சேர்த்தி (37)

பன்னிரு விரலி னெட்டுச்
சாகைகள் பரிவிற் செய்த
பொன்னவிர் தருவி னீழல்
புரந்தரன் முதலோர் சூழ்ந்து
துன்னிட விலிங்க மொன்று
சுடர்மணி யதனிற் செய்து
மன்னுபொற் றுலையி னீசற்
பழிச்சல்போல் வழுத்தல் வேண்டும் (38)

அனையபொற் றருவை யீசற்
காயினு மறையோற் கேயுந்
துணைவினி னல்கி யாசான்
முதலதொன் மறையோர் யார்க்கும்
புனைகலன் றாசு செம்பொன்
புகன்றவா றினிதி னல்கும்
வனைகழல் வேந்த னெல்லா
மன்னர்க்கு மன்ன னுவான் (39)

ஆயிரத் தெட்டு நல்லா
னளிக்குமா றுரைப்பன் கேண்மின்
மேயமண் டபநற் பூசை
விளம்பிய வோமம் யாவு

மேய்வுறத் துலைக்குச் சொன்ன
வண்ணமே யினிதி னூற்றித்
தூயபா லருந்தி மூன்று
தினந்தொறு விரத மாற்றி (40)

குடம்புரை செருத்த நல்லா
னாயிரத் தெட்டிற் கோதின்
றடங்குமா னெட்டுந் தூசா
லலங்கரித் தணிகொள் கொம்பின்
மடங்கலில் செம்பொ னோரோர்
கழஞ்சினால் வனைந்து வெள்ளி
சுடந்திடு குளம்பிற் சேர்த்திக்
கழஞ்சினற் பட்டங் கட்டி (41)

மழவிடை யொன்று செம்பொன்
மணியினா லணிந்தோ ரெட்டாம்
விழுமிய பசுக்க ளோடும்
விதிமுறை பூசை யாற்றிக்
குழுமுமா யிரத்தெட் டாய
வானெடுங் குலவு மேற்றை
யழலினுக் கூட்டி யுண்ணு
மந்தணர்க் களித்தல் வேண்டும் (42)

பதின்கழஞ் சேனும் பத்துக்
கழஞ்சினிற் பாதி யேனும்
விதம்படு மறையோர் யார்க்கும்
வீற்றுவீற் றாக நல்கி
யிதம்படு துலைபோன் முக்க
ணிறைவனை யேத்தி னோர்கள்
சதம்படு வேள்வி யாற்றுந்
*தேவெனத் தருவின் வாழ்வார் (43)

---

* தேவெனத் தருக்கின் வாழ்வார் (பா. பே.)

ஆயிரக் கழஞ்சு தொட்டீ
ரைம்பது கழஞ்சீ ருக
வேயின பசும்பொன் றன்னுற்
பெற்றமொன் றினிதிற் செய்து
மேயபொன் பத்தி லொன்றிற்
கன்றினை விதியிற் பண்ணிப்
பாய்கதிர் மணிக டம்மா
லுறுப்பெலாம் பதித்தல் வேண்டும் (44)

துலையினுக் குரைத்த வண்ண
மமைத்துமண் டபத்திற் றாய்தா
யிலகொளி யாலி ளேடுங்
கன்றினை யினிதி னேற்றிக்
கலையிரண் டதற்குச் சுற்றிக்
காய்சன லோமம் பூசை
மலைவறத் துலைக்குஞ் சொன்ன
வாறுபோ லினிதி னுற்றி (45)

முப்பது கழஞ்சு பின்னுந்
தக்கணை முறையிற் கூட்டித்
தப்பற மறையோர்க் கீக
வீங்கிவை தயவி லீந்தோர்
செப்பெனப் பணைத்து வீங்குந்
திரண்முலை யுமையாள் பங்க
னொப்புமை யிலாத பாத
நீழலி னுறைவ ரன்றே (46)

ஆயிரக் கழஞ்சி னுதல்
நூற்றெட்டுக் கழஞ்சி னுதல்
பாய்பரி பொன்னிற் பண்ணிப்
பஞ்சகல் லியாணி யாக

வேயநல் வெள்ளி தன்னு
லிரிரு குளம்பு தம்மிற்
றாயநன் னெற்றி தன்னிற்
றுவக்குற வணிதல்வேண்டும் (47)

இந்திர ஞக மற்றே
ரிருபிறப் பாளன் றன்னைச்
சிந்தையி னினைந்து கீழ்பா
லிருத்திய செம்பொன் வேதி
மைந்துற வமைத்த செம்பொ
னிவ்வுளியை மலர்க்கை தன்னு
லேந்துபொற் கழஞ்சி னேடு
மளித்திட வேண்டு மன்றே (48)

பொன்னெடும் புரவி பூண்ட
பொலன்கொடேர்த் தானஞ் சொல்லின்
மன்னிய சாலை யோம
முனிவரை வரித்த வீசன்
பொன்னடி பூசை'யாற்றல்
பொருள்பகுந் தளித்த முவில்
துன்னருந் துலைக்குச் சொன்ன
வாறெனச் சொல்வர் மேலோர் (49)

பலமொரு மூன்றின் மேலீ
ராயிரம் பலமீ ருகப்
புலமியன் றனகொண் டெட்டுப்
புரவியா யினுநான் கேனு
மலதிரண் டேனும் பூண்ட
வலங்கொளிப் பொற்றேர் பண்ணி
இலங்குமிந் திரநீ லத்தி
னெரிமணிக் கூம்பு சேர்த்தி (50)

இந்திரன் முதல வாய
வெண்டிசைப் பாலர் சூழ
வுந்துபொ றடந்தேர் நாப்ப
ணொருகுழை யொருவர் சேர்த்தி
மைந்துடை யாழி காப்பான்
மருத்துவ ரிருவர் தம்மைக்
கந்துகத் தழகு வாய்ந்த
கவிகுளம் பிவுளி சேர்த்தி (51)

மடங்கலந் துவசம் வீக்கி
வண்டுகில் மாலை சாந்தந்
தொடுங்கழல் கவிகை யுக்கஞ்
சாமரந் துலங்கச் சேர்த்திக்
கடுங்கலை யுரிவை தன்னிற்
கரியவேட் பரப்பிப் பொன்னந்
தடங்கொடே ரதனில் வைத்து
வலம்வந்து தாழ்ந்து போற்றி (52)

மற்றுள கருமம் யாவுந்
துலைக்குமுன் வகுத்த வாறே
தெற்றென வியற்றிக் கால
மிடனிவை தெரிந்து வேதங்
கற்றுணர் முனிவர்க் கீதல்
கடனென நுணங்கு கேள்வி
முற்றுணர்ந் தடங்குந் தூய
முனிவரர் மொழிந்தா ரன்றே (53)

பொற்கரி பூண்ட பொன்னந்
தேருறு தானங் கூறின்
வெற்புறழ் சாலை யோமம்
வேதபா ரகரைக் கூட்ட

லற்புட னவர்க்குச் சொன்ன
மளித்திடல் பூசை யாற்றன்
முற்படுந் துலைக்குச் சொன்ன
வாறென முனிவர் சொன்னுர் (54)

ஒருபலந் தன்னி லஃகா
துரைத்தவோர் பார மீரு
யெரிபசும் பொன்னி ளுன்கு
களிறுதாங் கிரதஞ் செய்து
பொருவிலெண் டிசைக்காப் பாளர்
பூமகள் கொழுநன் வேதா
வரனிவர் தம்மைத் தேர்மே
லழகுற வினிதிற் செய்தே (55)

மலர்மகள் யாழ்கைக் கொண்டாங்
கிருந்திட வகுத்து வெண்பட்
டிலகொளிக் கும்ப ளுன்கு
*சாமரை யினிதி னேற்றி
யலர்சிறைக் கலுழன் றீட்டு
கொடியுமாங் கமைத்து வெய்தாய்க்
கொலைகெழு பிறைவெண் கோட்டுக்
குஞ்சர முகனை வைத்தே (56)

ஆடிவெண் குடைநற் றீபம்
பாதுகை யாங்கு வைத்துப்
பீடுறக் கலைத்தோ றன்னி
லெட்சொரிந் ததனிற் பெட்பா
னீடுபொற் றடந்தேர் லைத்து
மற்றதை நிரலே சூழப்
பாடமைப் பசுவோ ரெட்டு
நிறுவிநன் பூசை பண்ணி (57)

---

* சாமரை யதனி னேற்றி (பா. பே.)

தானிய மீரோன் பானெண்
டிசைதொறுஞ் சொரிந்து தாவில்
மானெடு தேரைச்சூழ் போய்
வகுத்ததக் கணையி னோடு
மீனமில் மறையோர்க் கீய்க
வீந்தவை நான்கு கூறிட்
டானவோர் கூற்றை யாசா
னுவந்திட வளித்தல் வேண்டும் (58)

மற்றைய மூன்று கூறுந்
தொலைக்குமுன் வகுத்த வாறே
நற்றவர்க் களித்தல் வேண்டு
மெனமறை நவிலு மீது
சொற்றன மறைகள் யாவுந்
தொகுத்தெடுத் தியம்பா நின்ற
வற்றமில் குணத்த பஞ்ச
லாங்கல மளித்தல் சொல்வாம் (59)

சந்தன மரத்தி னுதல்
தேக்கினு லாதல் தாவி
லைந்துநீள் கலப்பை பண்ணி
யவிரொளிச் செம்பொன் றன்னுல்
மைந்துறழ்க் கலப்பை யைந்து
வகுத்திமி லேறீ ரைந்து
நந்தலிற் சாலை தன்னிற்
கொணர்ந்தலம் நன்கிற் பூட்டி (60)

கொம்பினிற் செம்பொன் சேர்த்திக்
குளம்பினல் வெள்ளி கட்டிச்
செம்பொனின் பட்ட நெற்றி
திகழுறு விளிதின் வீக்கி

யும்பசேர் ருடுவி னன்ன
வொளிர்கதிர் முத்த மாலை
கிம்புரி வடிவிற் செய்து
வாளொளி கிளரச் சேர்த்தி (61)

சாற்றிய சாலை தன்னிற்
லுருத்திர மறையாற் றுவி
லாற்றசா லோம மாற்றி
யற்றைநாண் முழுதுந் தூய
வேற்றின மனைத்து மாங்க
ணிறுவிவே தியரீ ரைவர்
போற்றுறு வழிநா டன்னி
லவர்க்குறு பூசை யாற்றி (62)

கொடிநெடு மாட வீதி
கோநக ரேனு மின்றே
லொடிவறு சிற்றூ ரேனு
மோர்பசு வுரிவை யெல்லை
புடவிய தேனு மேய்ந்த
தக்கணை யோடும் பொன்னால்
வடிவுசெய் கலப்பை பூண்ட
வேற்றினம் வழங்கல் வேண்டும் (63)

பஞ்சலாங் கலதா னத்தின்
பகுதியைச் சுருக்கிச் சொன்னேஞ்
செஞ்சவே யிதனை யீய்ந்தோர்
பலத்தினைச் செப்பொ ணுதாற்
றுஞ்சலின் மறைகள் யாவுந்
தொகுத்தினி தெடுத்துச் சொன்னே
மெஞ்சலில் சொன்ன பூமித்
தானமீண் டுரைக்க லுற்றும் (64)

அரும்பெறற் றுலைக்குச் சொன்ன
படியகல் சாலை யோமம்
விரும்புமந் தணருக் கூட்டல்
வியனதிக் களவை கூறிற்
பொருந்துமோர் துலாத்தி ஞத
லரைத்துலாம் பொன்னி ஞதல்
திருந்துகாற் றுலாத்தி ஞதல்
சதுரமாய்த் தகடு செய்தே (65)

ஏழ்பெருந் தீவு மேழு
கடலுமேழ் வரையும் வான்ருேய்
வாழிய மேரு வெற்பும்
வருடமால் வரைகண் முற்றுஞ்
சூழ்தரு நதிந தங்கள்
தெய்வதத் தொகைகள் நீண்ட
காழ்படு தருக்கள் யாவுங்
கற்பநல் விதியிற் செய்தே (66)

இளம்பிறை கண்ணி சூடு
மெந்தைநற் பூசை யாற்றி
வளங்கெழு செருத்த னல்லா
ஊைந்திஞல் வனப்பு வாய்ப்பக்
களங்கமொன் றின்றிச் செய்த
புவியினைக் கலச மாட்டித்
துளங்கலின் மறையோர் கொள்ளத்
துலைப்படி யீதல் வேண்டும் (67)

தூயநற் சொன்ன பூமி
வழங்குத ருெகுத்துச் சொன்னேன்
மேயநல் விசுவ நேமி
வழங்குத லிசைப்பன் கேட்டீர்

ஆயிர மன்றே லேஞ்ஞூ
றன்றெனி லிருநூற் றைம்பா
னேயபொன் னிருபத் தெட்டுப்
பலத்தினீற் குறையா தீட்டி (68)

எண்ணிரு கோணந் தன்னுற்
சக்கர மினிதிற் செய்து
நண்ணுற வதனி னுப்ப
னுலிரண் டிதழி னேடும்
வண்ணவான் கமலம் பண்ணி
மற்றதி னுன்கு செங்கைக்
கண்ணனை யமைத்தோ ரெட்டுக்
கன்னிய ரிதழிற் சேர்த்தி (69)

மற்றையா வரணந் தன்னிற்
குணதிசை மருங்கி னீரின்
உற்றறி துயில்கூர் மாய
னுருவமைத் தொழிந்த திக்கிற்
கற்றவத் திரிவ சிட்டன்
பிருகுநற் கசபன் வேந்தன்
சொற்றபீ ஞதி யீரைந்
துருவமு மிலங்கச் செய்தே (70)

மூன்றுமா வரணந் தன்னிற்
சத்தமா தாக்கள் மொய்ம்பி
னுன்றவெண் வசுக்க ளோடுங்
கவுரியை யமைக்க நான்காய்த்
தோன்றுமா வரணந் தன்னிற்
பன்னிரு சுடரி னேடு
மேன்றநல் வேத நான்கு
முருவுற வினிதிற் செய்தே (71)

பஞ்சபூ தத்தோ டீசர்
பதினொரு வரையும் பண்ணி
யஞ்சாமா வாணஞ் சேர்க்க
வாருமா வரணந் தன்னி
லெஞ்சலில் களிறீ ரெட்டு
மெண்டிசைப் பால ரோடு
செஞ்சவே முறைவ மூது
சேர்த்திட வேண்டு மன்றே (72)

வாள்கதை சூலஞ் சத்தி
குந்தமங் குசம்வண் சாப
நீள்குடைச் சங்க முத்தஞ்
சேர்த்திய நிதிய மாடிக்
கோளில்சா மரஞ்செஞ் சாந்தங்
கோரோசனை யிவையி ரெட்டு
மோளியி னுற்ற வேழா
மாவர ணத்தி னுய்க்க (73)

எட்டாமா வாணந் தன்னி
லிரண்டாமா வரணத்தோதப்
பட்டன சேர்த்தி மானேற்
றுரியிலெட் பரப்பி முன்போற்
கட்டிய சாலை தன்னில்
வைத்தமுற் கரும மாற்றி
யுட்டெளி மறைவல் லோர்க்குத்
தக்கணை யோடு நல்க (74)

அற்பொடும் விசுவநேமி
யளித்திடு மடைவு சொன்னோங்
கற்பக லதையை நல்கும்
விதிமுறை கழறு கிற்பே

முற்படு துலைக்குச் சொன்ன
    மண்டப மூதலா யோமம்
பொற்புட னியற்றி யீசன்
    பூசனை புரிதல் வேண்டும் (75)

ஆயிரம் பலந்தொட் டைந்து
    பலமுடி வாகச் செம்பொ
னேயவன் கொண்டு ரைந்துக்
    கற்பக லதைகள் பண்ணிற்
றாயநற் பலங்காய் பைம்பொற்
    றாசிவை தொடுத்தீ ரைந்து
சேயநற் பொன்னாற் செய்த
    கின்னர மிதுனஞ் சேர்த்தி (76)

கற்பக லதையைத் தூய
    வேதிகை கவினச் சேர்த்தி
யற்புடன் பிராமி யோடு
    மனந்தசத் தியையாங் குய்த்த
பொற்புறு கமலஞ் சேர்த்திப்
    பூசனை யினிதி னாற்றி
முற்றுணர் மறையோர் கொள்ள
    முகமனோ டளித்தல் வேண்டும் (77)

கற்பக லதைக நல்கும்
    விதியினைக் கழறல் செய்தேந்
தற்பர மளிக்குஞ் சத்த
    சாகரத் தானஞ் சொல்வாம்
பொற்புறு சாலை யோம
    பூசனை மறையோர்க் கூட்ட
லற்புறு துலைக்குச் சொன்ன
    வண்ணமென் றறைவர் மாதோ (78)

இயைந்த நற்பல மீரைஞ்ஞூ
    றுதியேழ் பலமீ ருக
வயங்குநற் பொன்னு லொட்டை
    யோர்முழத் தளவை வாய்ப்பப்
பயின்றவேழ் குண்டஞ் செய்தெட்
    பரப்புமா னேற்றின் றோலிற்
றயங்கவைத் துப்பு நெய்பா
    றயிர்கன்னல் மதுநீர் வாக்கி (79)

உப்பிலிற் பிரமன் பாலின்
    மானெய்யி லுயர்ம கேசன்
செப்பிய கன்னற் சாற்றி
    லாதவன் றயிரிற் றேவி
யொப்பறு மகவான் றேனிற்
    றிருமக ளுரவு நீரிற்
றுப்புறழ் தொண்டைச் செவ்வாய்
    வரைமக டுலங்கச் சேர்த்தி (80)

குண்டமோ ரேழி னுள்ளுங்
    குலமணி துலங்கச் சேர்த்தித்
தண்டலில் மறையோர் கொள்ளத்
    தக்கணை யோடு நல்கல்
மண்டுமேழ் கடற்று னத்தை
    வகுத்தன மிரத்தின தேனுப்
பண்டைநான் மறையோர்க் கீயு
    முறையிணைப் பகர்த லுற்றும் (81)

துலைக்குமுன் னுரைத்த வண்ண
    மண்டப மோமந் தூய்தாய்
விலக்கரும் பூசை செய்து
    வெள்ளுப்புப் பரப்பி யாங்குப்

புலப்படக் கன்றி னேடும்
பசுவினைப் பொறித்து மூக்கில்
நலத்தகு புருட ராகம்
நூற்றினை நயக்க வைத்தே (82)

முகத்தினிற் பத்ம ராக
மெண்பத்தொன் றமைத்து முத்தின்
வகுப்புற நெற்றி செய்து
வயங்குபொற் பட்டஞ் சேர்த்தி
மிகைப்பட நூறு முத்துக்
கண்களின் விளங்கச் சேர்த்தி
நகைக்குமொள் வயிர நூறு
சென்னியின் நன்கின் வைத்தே (83)

புருவத்திற் பவள நூறு
வைத்துப்பொற் கொம்பு சேர்த்தி
இருசெவி யென்ன முத்துச்
சிப்பியை யிலங்கச் சேர்த்தி
உருவுறு கழுத்திற் கோமே
தகமொரு நூறு சேர்த்தி
வெரிநிடை யிந்திர நீலம்
நூற்றினை விளங்க வைத்தே (84)

ஓரிரு புறமு நூறு
சீவரத் தினத்தை யொட்டிச்
சேருற வயிற்றி னூறு
பளிங்கினைச் சேர்த்தி வாலி
லாரமோர் நூறு சேர்த்தி
யரையில்மா ணிக்க நூறு
சார்வுற வைத்துப் பொன்னாற்
குளம்பினை யினிது சார்த்தி (85)

திங்கள்வெண் மதியி ஞேடுஞ்
செங்கதிர் காந்தக் கல்லைப்
பங்கமில் மூக்கி ஞற்ற
துவாரத்திற் பதிய வைத்துத்
தங்கிய நாபி தன்னை
வெள்ளியாற் சமைத்துச் சாந்தங்
குங்குமங் கருப்பூ ரத்தா
லுரோமகூ பங்கள் பண்ணி (86)

காருடப் பச்சை நூறு
பாதத்தி றகவின் வைத்துச்
சீர்கெழு சந்தி தோறு
நவமணி திகழச் சேர்த்தி
ஏர்கெழு கன்னல் தன்னி
லிலங்குகோ மயம தாக்கி
வார்தரு நறுநெய் தன்னைக்
கோசல மாக வைத்தே (87)

கன்றுமிவ் வாறு பண்ணிக்
கறப்பவெண் கலமும் வைத்துத்
துன்றிய வாலில் மற்றோர்
கவரியு மினிது தூக்கி
மன்றநற் பைங்கூழ் தன்னை
வயின்வயின் குவித்துப் பின்ன
ரொன்றுதக் கணையி ஞேடு
மறையவர்க் குதவல் வேண்டும் (88)

பொருவரு மிரத்ன தேனு
வளிக்குமா புகன்றேம் பொற்பின்
மருவுமா கடதா னத்தை
யளிக்குதல் வகுத்துச் சொல்வாங்

கருதருஞ் சாலை யோமங்
கறைமிடற் றெந்தை பூசை
பரிவொடுந் துலைக்குச் சொன்ன
வாறெனப் பகர்ந்தா ரன்றே (89)

ஒட்டையிற் குறையா தோங்கு
நூறுமேல் விரலி னென்று
மட்டுற வியன்ற பொன்னின்
மாகட மொன்று செய்து
விட்டொளி விரிக்குந் தூய
வயிரத்தா லதனை வேய்ந்து
பெட்பொடு நறுநெய் யான்பால்
கடத்தினிற் பெய்து பின்னர் (90)

கற்பகத் தருமுன் போலச்
செய்தொளிர் கடத்தி னேற்றிப்
பொற்புடைத் தருவி னீழற்
புண்ட ரீகத்தின் மீதே
யற்புடை பிரமன் மாய
னரன்றனை யினிது வைத்து
வெற்புறழ் பனைக்கை வேழ
முகத்தினை விதியிற் செய்தே (91)

கண்டிகை மாலை தாங்கி
முதன்மறை யிருப்பக் காமர்
புண்டரீ கங்கை தாங்கிப்
பொருந்திட யிரண்டாம் வேதம்
பண்டரு வீணை வேணுப்
பரித்துயர் சாம நிற்ப
வெண்டரு நான்காம் வேதந்
தாமரை யினிதி னேந்த (92)

கண்டிகை மாலை யோடு
கமண்டலந் தாங்கி யோர்கை
தண்டலில் வரத மாகப்
புராணதெய் வதமுன் சார
வெண்டரு முருவ மைந்து
மினிதினிற் பண்ணித் தூய
மண்டப மதனிற் பொன்னங்
குடத்திடை மருவ வைத்தே (93)

பொற்குடஞ் சூழப் பைங்கூழ்
சொரிந்துபொற் கலன்க ளாடி
யெற்படு தீபம் பொன்னங்
குடைசெருப் பிருக்கை மஞ்சம்
பற்பல நீர்பெய் கும்பம்
வைத்துப வாசம் பண்ணி
யற்புடை மறையோ ராட்டக்
கும்பநீ ரினிதி னுடி (94)

புகழ்மறைக் குரவ னேடும்
பொற்குடம் வலஞ்செய் தாங்கண்
மகிழ்வொடு மறையோர் கொள்ள
மாகட மதனை யுள்ளத்
தகவொடு மினிதி னல்கி
யாதுலர் விருந்தர் தக்கோர்
நகைபடு நோயர் கொள்ள
நன்னிதி வழங்கல் வேண்டும் (95)

இனையவெண் ணிரண்டு தானம்
விதிப்படி யினிதி னீந்தோர்
கனமது வுறைக்கும் பொன்னங்
கற்பக நீழல் வாழ்ந்து



* கனமது வுறையும் (பா. பே.)

பணையுறழ் தடக்கை நால்வாய்ப்
பகட்டுரி போர்த்த வெந்தை
வனைதருங் கழலிற் சேர்ந்து
பிறந்துழ லாது வாழ்வார் (96)

## வேறு

நித்தி யந்நயி மித்தியங்
காமிய நின்மல மெனநான்காய்ப்
பைத்த பாம்பின்மேற் கிடந்தநீள்
புவியினிற் றானத்தைப் பகர்கிற்பார்
முத்த ராகிய முனிவரர்க்
கருளொடும் பலத்தினை முன்னுது
கைத்த லப்பொரு ளளிப்பது
நித்திய தானமாங் கரைகிற்பார் (97)

பாவ நீங்கிட வேண்டுமென்
றுளத்திடை பரிந்துநான் மறைகற்ற
நாவ லர்க்களித் திடல்நயி
மித்திக நன்மகார் நிதிவேட்டுத்
தாவில் கேள்வியோர்க் குதவுதல்
காமியஞ் சங்கர னுவப்பெய்த
வோவில் ஞானிகட் குதவுதல்
நிருமல மெனவுரைத் தனரன்றே (98)

இடமுங் காலமுங் கொள்பவ
னியற்கையு முணர்ந்தளிப் பதுதான
மடைவிற் றானநன் களிக்குந
ரேநிதி யீட்டிய பொருண்மீதி
லுடைய வன்பரே யுலோபிக
ளளித்திடா தொண்பொருள் புதைக்கின்ற
மடமை நெஞ்சினர் நிதியினி
னசையிலா தழித்திடு ப்வர்மாதோ (99)

ஊசி மென்னுனை யூன்றிட
 மாயினு மந்தணர்க் குவந்தீவோ
ராசி னற்கதி யடைகுவ
 ரென்றிடி லமுதுகு கழைசெந்நெல்
மாசி னல்வள நிறைந்தநற்
 கிராமமொன் றளிப்பவர் பலம்வாயாற்
பேசி லாகுமோ பேசிடி னுன்முகப்
 பிரமற்கு மரிதாமால் (100)

சொன்ன மாயிர மந்தணற்
 கீயினுஞ் சுடிகைவா ளராநெற்றி
மன்னு பூதலம் வலங்கொடு
 திரியினும் வளர்சிகை யழனுப்பட்
டுன்னரி மாதவம் புரியினும்
 பசியினுற் றளர்ந்தவர் துயர்தீர
வன்ன மீபவர் பலத்தினி
 லாயிரத் தொன்றும்வந் தடையாதே (101)

பொருவில் வித்தியா தானநல்
 குனர்மலர் பொகுட்டுறை வேதாவின்
றிருந கர்க்கணி னுறைகுவர்
 பருவமோ ரைந்தினுஞ் சிவபூசைக்
கரிய நன்பொருள் வழங்குந
 ரரனுல கடைவரென் னினையீந்தோர்
கரிய மாயவ னுலகில்வாழ்
 மடந்தையர் தம்மொடு களிப்பாரால் (102)

மாக மாதத்திற் சுக்கில
 பக்கத்திற் றுவாதசி மறுவுற்றுற்
சேகெ றிந்திடும் வெண்டுகி
 லணிந்துயர் திலத்தினு லோமஞ்செய்

தாகம் வாடநோற் றந்தணர்க்
கெள்ளொடு மமுதினை யளிக்கின்றோர்
தோகை பாகனற் றிருவடி
நீழலில் விண்ணவர் தொழவாழ்வார் (103)

செல்வம் வேண்டுன ரிந்திரன்
சேவடி பூசனைசெயல் வேண்டுஞ்
சொல்லு தற்கரு ஞானம்வேண்
டுனரரன்க ழலிணை தொழல்வேண்டு
மல்லல் நோய்கெட வேண்டுனர்
செங்கதி ராதவற் றொழல்வேண்டுங்
கல்வி வேண்டுனர் மலரயன்
சேவடிக் கருத்தொடுந் தொழல்வேண்டும் (104)

தருமம் வேண்டுனர் பாவகன்
சேவடி தயாவொடுந் தொழல்வேண்டுங்
கருமம் வேண்டுனர் கணபதி
செய்யபொற் கழலிணை தொழல் வேண்டு
முரிய போகமே வேண்டுன
ருடுபதி யொண்கழல் தொழல்வேண்டும்
வெருவ ரும்பெலம் வேண்டுனர
வளிக்கிறை மென்பதந் தொழல்வேண்டும் (165)

சிவிகை மெல்லணை மஞ்சநன்
களித்தவர் திரண்முலைப் பணைமென்றோள்
நவையில் கற்புடை மனைவிய
ரிளமுலை நலனுகர்ந் துறைகிற்பார்
கவிகை நல்குநர் வெயிலினு
*லுலர்ந்திடா ரடைந்தவர் தமைக்காப்போர்
குவிகை யோடுநின் றொருவர்பா
லிரந்திட தமரர்கோ னெனவாழ்வார் (106)

* உழந்திடார் (பா. பே.)

அளிப்ப வன்றனை விலக்குனர்
மலப்புழு வாகிவெந் துயர்கூர்வார்
தளிக்க ரும்புயல் வறந்தனுட்
டாலிய மீட்டுநன் றயாவோடுங்
களிப்ப வெம்பசி யுழந்தவர்க்
களித்திடா னென்றிடிற் கழல்வேந்த
ரொளித்த கைப்பொருள் நெல்லுடன்
கவர்ந்தவ னுலைந்திடச் செயல்வேண்டும் (107)

பாவி வெம்பசி யுழப்பினு
மாங்கவர்க் களித்திடல் பழுதாகு
மோவில் நல்லற முடையவர்
கைப்பொரு ளுள்ளவ ராகுலும்
தாவில் நன்பொரு ளளித்திடல்
நன்மையே பயந்திடுந் தயவோடுந்
தேவரா லயங் கட்டுநர்
புதுக்குநர் சிவனடி யடைவாரே (108)

இருபத்தைந்தாவது
தான முரைத்த வத்தியாயம் முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 582

---

உ

## இருபத்தாறுவது
## வானப் பிரத்த முரைத்த வத்தியாயம்

---

ஆயுளி னுலாங் கூற்றினு தியினி
னரைதிரை யடைந்துமூப் பெய்திச்
சேயினற் சேயு மைந்தரையு யிர்த்தாற்
சிறுவர்பான் மனைவியை யிருத்திக்

காயெரி யோடும் போகினும் போக
கடிமனை யோடுபோ கினும்போ
யேய்மதி பக்கத் துத்தரா யணத்திற்
கான்புகுந் திருந்தவம் புரிக (1)

ஊழ்த்தமென் சருகு காய்கிழங் கருந்தி
யதிதிபூ சனையுவந் தாற்றிக்
காழ்த்தநீள் சமிதை கொண்டழற் கருமம்
பஞ்சவெச் சங்கடி தியற்றிச்
சூழ்த்துவண் டரற்றுங் கொன்றைவே ணியனைத்
தொழுதுநீண் மயிர்நக நீட்டிப்
பாழ்த்தவெம் பிறவி யகற்றுவான் மூன்று
காலமும் நீரிடைப் படியா (2)

எட்டுமென் கவள மேற்றயின் றீட்டி
யிருவா யினுநனி யியற்றி
மட்டுநுண் டேற லுகர்தலான் றின்ன
லொழிந்துவெவ் வனத்தினி லேயல்லாற்
பட்டணத் துள்ள யாவையுந் தணந்து
*கங்குலூ ணிகழ்ந்து பார்ப்பதியை
யுட்டெளி வோடு நினைந்திடல் வானப்
பிரத்தர்தம் மொழுக்கமென் றுரைப்பார் (3)

நெடிபடு கானிற் றவம்புரி வோர்க
ணேரிழை மகளிரைக் கலப்பி
னடைவுறு மொழுக்க மழிந்திடு மாங்கண்
மைந்தரை யுயிர்த்திடி னவரை
யொடிவினுன் மறையோர் தீண்டுத லாகா
வோதுவித் திடுதலு மாகா
படியினி லெவரு மாங்கவன் மரபு
பழிபடு மரபென வுரைப்பார் (4)

* கங்கு லூணிகந்து (பா. பே.)

வேந்தரும் வானப் பிரத்தராய் மேவி
லின்னணம் புரிகுதல் வேண்டுங்
காந்துவெம் பாறை பால்படு மிடத்திற்
கண்படை புரிகுதல் வேண்டு
மேய்ந்திடு பருவ மொன்றினுக் கல்லா
லருந்துகூ ழீட்டுத லாகா
சாந்தணி முலையார் தடமுலை புல்லி
னர்கணித் தாமவர் தமக்கே (5)

எற்பெழ நோற்றூ ரைப்பசி யடையி
னீட்டிய வனைத்தையு மளிக்க
வெற்பினை வனநெற் பல்லுர லாக
வுமியொழித் தருந்துதல் வேண்டு
மற்புட னுள்க ளொன்று விட்டேனு
மாறு நாளிடையொழித் தேனும்
பொற்புட னருந்த வேண்டுமற் றென்னப்
புலமைநூல் வல்லவர் புகன்றூர் (6)

புலவு சீவாத தோல்புனைந் ததுவே
போர்வையாய் மெய்யினி லணிந்து
மலைமகள் கேள்வன் றுளிணை வழுத்தி
யாங்கவன் மந்திரஞ் செபித்துக்
கலைகளி னுயர்ந்த வுபநிட தத்தின்
பொருடெரிந் தழல்வினை கருதிப்
புலவுதல் வானப் பிரத்தர்தம் மொழுக்க
மெனமறை முழுவது முரைக்கும் (7)

இருபத்தாறுவது
வானப்பிரத்த வத்தியாய முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 539

உ

# இருபத்தேழாவது
# சன்னியாச முரைத்த வத்தியாயம்

ஆயுளோம் பதினிற் றவம்புரி வானப்
    பிரத்தனு யெழுபத்தஞ் சகன்றுற்
றாயநல் லெதியாய் கீடமே போல
    வொருவயிற் றுஞ்சிடா துழன்று
காயமுந் தானும் வேறெண வுணர்ந்து
    புலன்வழி கருத்தினைச் செலுத்தா
தேயின பருவ நூற்றையுங் கழித்த
    லெதியொழுக் கெனமறை யியம்பும் (1)

ஞானசன் னியாசம் வேதசன் னியாசம்
    கருமசன் னியாசமா னலங்கொ
ளீனமி லெதிக ளொழுக்க மோர்மூன்று
    மிந்திய பந்தனை நீங்கித்
தானது வாக வொழுகுதல் ஞான
    வெதித்திறன் றகுபலன் விழையா
தூனமில் யோகம் பயின்றிடல் வேத
    வெதியொழுக் கெனவுரைத் திடுவார் (2)

தழலினை யான்மா விடையினி லொடுக்கி
    மனத்தினுன் மகந்தனி யியற்றி
மழவிடை யுயர்த்தோன் றனைநினைந் திருத்தல்
    *கருமசன் னியாசமா னெழுக்காம்
பழுதறு மிவரில் ஞானசன் னியாசி
    யுயர்ந்தவன் பற்றிக லின்றி
விழைவொடு பேறு மிழப்புமொன் றாக
    நினைந்திடும் விமலதை யதனால் (3)

---

* கருமசன்னியாசிமா னேக்காம (பா. பே.)

ஆற்றிடைச் செல்லிற் பல்லுயிர் தாளி
    னவிந்திடு மெனவுளத் தெண்ணித்
*தூற்றுபைம் புனல்சேர் திங்களோர் நான்கு
    மோர்நக ரிடைத்தனி துன்னி
யேற்றுணு வருந்தி யல்லசெய் யாம
    லிலகொளிப் பிறையெயிற் றகல்வாய்க்
கூற்றுயிர் குடித்த தாமரைப் பொற்றாள்
    குறித்திட லெதியொழுக் காமால் (4)

**வேறு**

கற்றோ யரத்தத் துகில்புனைந்து
    கழுத்தி னளவு மயிரெறிந்து
பற்றார் புரந்தீ யெழநகைத்த
    பரமன் சரிதை பாராட்டி
மற்றோர் தெய்வ மெண்ணாது
    பசுநா லுளத்தின் மதியாமல்
வெற்றோ ருரைகள் விளம்பாது
    நடத்த லெதிகள் வியனெறியே (5)

முக்கோ ருங்கிச் சிகைதரித்து
    முந்நூ லணிதல் தவிராது
தக்கோ ரேத்தும் வேதாந்த
    முறையி னின்று தம்முளத்தின்
எக்கா லத்துஞ் சிவன்பாத
    மெண்ண லொழியா திருந்தோரு
மைக்கார் மிடற்றுப் புத்தேளின்
    கமல பாத மருங்கடைவார் (6)

இருபத்தேழாவது
சந்நியாச முரைத்த வத்தியாயம் முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 595

---



* தூற்று மைப்புயல்சேர் (பா. பே.)

உ

# இருபத்தெட்டாவது

# முற்றுந் துறந்தோர் பிராயச்சித்த முரைத்த வத்தியாயம்

இல்வாழ் வினர்செய் தொழினீங்கி
யிருந்த காலத் தேழ்மனையின்
மெல்லப் புகுந்தே யுணுவேற்றெண்
பிடியாங் கருந்தல் வியன்மூங்கில்
மல்லற் சுரையின் மெல்லோடு
மரப்பாத் திரமண் பாத்திரமே
சொல்லு மெதிகள் பாத்திரமாஞ்
சுரையோ டிவற்றிற் சிறந்ததுவே (1)

இதய மலரிற் றிருமாலை
யிருத்தித் திருமா லிதயத்திற்
கதவெங் கரியி னதளுரித்த
கண்மூன் றுடையோன் றனையிருத்தி
விதியிற் றியானஞ் செய்வோர்கள்
வீட்டி னடைவா ரறத்துறந்தோர்
முதிருங் கங்குல் பகன்மாலை
முக்க ணானைத் தொழல்வேண்டும் (2)

முற்றுந் துறந்து முதுக்குறைந்தோர்
முகிழ்மென் முலையார் தமைத்தீண்டிற்
பற்றற் றிருந்து கிரிச்சரங்கள்
பண்ணிப் பிராணு யாமஞ்செய்
துற்ற நியமம் பலவியற்றி
யுலவாப் பாவ மொழிப்பதற்கு
வெற்றி மதனை விழித்தெரித்த
விமலன் பாதந் தொழல்வேண்டும் (3)

துறந்தோர் பொய்ம்மை யுரைத்திடுத
ரீது தோமில் மாயையினால்
மறந்தோர் பொய்ம்மை புகன்றுரேல்
வருந்தி யொருநா ளுண்டியொழிந்
தறங்கூர் பிராணு யாமமொரு
நூருற் றிடுக கள்ளுநரேற்
சிறந்த சாந்தி ராயணமோர்
வருடஞ் செய்ய வேண்டுமால் (4)

அறியா தொன்றி னவியினைச்
செகுத்தா னென்னி னுளமஞ்சிச்
செறியுஞ் சாந்தி ராயணங்கள்
செய்து சிவபூ சனைபுரிந்து
நறுமென் குழலார் முலையின்மனம்
நடந்த தென்னி லெண்ணிரண்டிற்
குறைவில் பிராணு யாமங்கள்
*கோதின் றியற்றி லியல்பாமால் (5)

முகிழ்ந்து வீங்கு மிளமுலையார்
முறுவ னோக்கி மனத்தினிடை
மகிழ்ந்து தாதுப் பகல்வீழின்
மூன்று நாளுண் மறுத்துளத்தின்
இகழ்ந்து தன்னை யொருநூறு
பிராணு யாம மியற்றிடுக
நிகழ்ந்த நெறியி னிருந்தோர்கள்
பாவ மனைத்து நீங்கிடுமால் (6)

நலிவெம் பசியின் பிடித்துந்த
நவச்சி ராத்தந் தனினுகரின்
ஒலிவெண் டிரையின் வெள்ளுப்பு
வாளா நுகரி னுனருந்தின்

---

* கோதின்றியற் றலியல்பு (பா. பே.)

அலகில் பிராசா பத்தியமாங்
கிரிச்ச ரங்க ளினிதாற்றிக்
கலைவெண் டிங்கண் முடித்தபெம்மான்
கழற்ருள் வழுத்த வேண்டுமால் (7)

எண்டோண் முக்கட் பெருமானுக்
கிணையாந் தெய்வ முண்டென்போர்
புண்டோய் நரகத் தடைவரென்ருற்
புவிதீ வளிநீர் வெளியாகி
விண்டோய்ந் துலவு மிருசுடராய்
யெச்ச னுகி வேதாந்தந்
தண்டா துறையுந் தனிச்சுடரின்
பாதந் தொழுத றகைமைத்தே (8)

இன்ன வாற்றி னெறிநிலைமை
யுரைத்தே மீது நான்முகத்தோன்
முன்ன முனிவர்க் குரைத்ததிதன்
பொருளை யோக முயன்ருேர்க்கு
மன்னுங் காதற் புதல்வருக்கு
மாணக் கருக்கு மல்லாது
கொன்னே பிறர்க்கு விரித்துரைப்பிற்
குற்றம் பயக்கு மெனவுரைத்தார் (9)

இருபத்தெட்டாவது
முற்றுந் துறந்தோர் பிராயச்சித்த முரைத்த
வத்தியாயம் முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 604

௨

# இருபத்தொன்பதாவது
# பிரமகத்திப் பிராயச்சித்த முரைத்த வத்தியாயம்.

செய்தக்க செய்யா தொழிந்தாரெனிற்
    செய்த லாகா
வெய்துற்ற கன்ம மிழைத்தாரெனில்
    மேன்மை யெய்தி
யைதுற்ற நெஞ்சத் தவர்பாவ
    மகற்றும் வண்ணம்
நொய்திற் புகன்று ரவையானு
    நொடித லுற்றேன்  (1)

கொலைசெய்தல் கள்ளல் குருநிந்தை
    கள்ளுண்ட லின்ன
வலகிற் கொடும்பா தகர்ச்சேருத
    லாக வைந்தா
நிலையென் றியலுங் கொடும்பாவ
    நினைக்க லாது
மலைவின்றிக் கூடுமவர் தன்மை
    வகுக்க லுற்றும்  (2)

கொலையாதி பாவம் புரிந்தோர் கொடும்
    பாவ மெண்ணு
துலையாது வேசி யுடன்வைகிமற்
    றெருக்க வுண்டு
மலையாம லுற்றோர் பருவ
    முடன்வைகி னானே
லலையா திவனு மவர்போற் கொடும்
    பாவி யாவான்  (3)

## வேறு

பஞ்சமா பாதகரென் றவர்தன்மை
யுறிந்திருந்துங் பரிந்து நெஞ்ச
மஞ்சுறு தாங்கவரோ டொருகணமா
யினுங்கூடி யமர்ந்து வாழ்வோர்
செஞ்சவே யவர்போலப் பாதகரென்
றறிவுடையோர் தெளிந்து சொல்வா
*ரஞ்சுபோ மாறவற்குப் பிராச்சித்த
விதிசிறிதீங் கறைது மன்றே (4)

அழலூட்டிப் பின்னுகரு மருந்தவத்தோர்ச்
†செகுத்தோர்கள் குண்டந் தன்னில்
கழிபுலாற் றலைவீக்கி யீராறு
பருவநகர்க் கண்ணு றுது
நிழல்காலு மணிமுடிப்பொற் சினகரத்துஞ்
செல்லாது நீசர் போல
வொழியாது நகர்ப்புறத்தின் மேன்மேற்சென்
றையமேற் றுண்ணல் வேண்டும் (5)

எண்ணரிய கொடும்பாவம் புரிந்தனமென்
றுளத்தினிடை யெண்ணி யெண்ணி
நண்ணரிய கொடுங்கானின் வெவ்வெரியிற்
றவம்புரிந்து நாளு நாளும்
புண்ணியரா மேச்சுரத்தை வலங்கொண்டுஞ்
சேதுவினன் புனலிற் றோய்ந்து
மண்ணலஞ்சேர்க் கங்கைதனி லாடியுமிக்
கொடும்பாவ மகற்றல் வேண்டும் (6)

பற்பலவும் புகன்றென்கொல் காசிநகர்
தனிலெய்திப் பவள வேணி
யற்புதமாம் வயிரவன்றன் கபாலமோ
சனதீர்த்தத் தருளி னுடிற்

---

* ருஞ்சுபோ மற்றவர்க்குப் பிராயசித்த (பா. பே.)
† செகுத்தோர்க டண்டந் தன்னிற் ஷை

சொற்றவரும் பிரமகத்தி தொலையுமெனச்
சுடர்க்கொழுந்தாங் கடவு டன்னை
வற்பினெடும் பிரமகத்தி தொடர்ந்தகதை
யுரைத்தியென வழங்க லுற்றான் (7)

இருபத்தொன்பதாவது
பிரமகத்தி பிராயச்சித்த முரைத்த வத்தியாயம் முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 611

---

உ

## முப்பதாவது
## வயிரவன் பலியிரந்த வத்தியாயம்

---

கொண்டல் தவழ்ந்து விளையாடுங்
குடுமி மேரு வரைச்சாரல்
வண்டுஞ் சுரும்பு மொருகோடி
வழங்கும் கமலப் பொகுட்டுறையும்
அண்டர் பெருமான் முகநோக்கிச்
சனக னாதி யருமுனிவர்
தண்டா வுலக மெவற்றினுக்குந்
தலைவ னெவன்கொல் சாற்றென்றார் (1)

கனைவெண் டிரைசூ ழுலகனைத்தும்
படைத்துக் காத்துக் காய்ந்திடுதல்
நினைவு மெனது விளையாட்டே
லபய வரதம் பிடித்துநெளித்
தெனையொப் பவர்யா ரெனத்திசைதோ
றிருக்குந் தேவ ரெல்லோரு
முனிவீ ரென்னை யிணையொவ்வா
ரானே முதல்வ னெனவுரைத்தான் (2)

என்ன மலரோ னுரைத்திடலும்
பெடைவண் டினஞ்சூன் முதிர்ந்துறங்குங்
கன்னித் துளவந் துயல்வருதோட்
காயா வண்ணன் விரைந்தெய்தி
முன்ன மெனதுந் தியிற்பிறந்த
நீயோ முதல்வன் முறைபிறழச்
சொன்ன தென்ன வெனக்கனன்று
சொல்லாச் சுடுசொற் பலசொன்னான் (3)

இருவர் மொழியுங் கேட்டிகழா
விருக்கு வேத மாங்கெய்திப்
பருவ முகில்போ னீறத்தோயும்
பங்கே ருகமே லுறைவோயும்
விரியும் புவன மனைத்தினுக்குங்
கடவு ளல்லீர் விரிகடலிற்
கருகும் விடமுண் டுமையளித்தக்
கருணைக் கடலே முதலாவான் (4)

என்று விருக்கு மறைபகர
விரண்டாம் வேத மாங்கெய்தி
ஒன்னார் புரமூன் றெருங்கெரிய
முறுவல் கோட்டு மொருமுதலே
முன்னோன் முன்னோ னெனமேற்கோள்
காட்டி முதிர்ந்த முதுக்குறைவாற்
றன்னுத் தழும்ப முறையிட்டுக்
கனம்போ லதிர்ந்து சாற்றியதே (5)

இறந்தும் பிறந்து மெவ்வுயிரு
மொழியா துலவி யெஞ்ஞான்றுங்
கறங்கு போலத் திரியவெவ
ரீயற்றுங் கருணைக் கடல்யாவன்

சிறந்த வந்தச் சங்கரனே
தேவதேவ னென்ப தல்லான்
மறந்தும் பிறரை யெண்ணற்க
வென்று சாமம் வழங்கியதே (6)

ஒன்றாய்ப் பலவா யுயிர்க்குயிரா
யுலக மனைத்துந் தானாகி
நின்றாங் கவற்றிற் பொருந்தாத
நீறு பூத்த செழும்பவளக்
குன்று யன்ப ரிதையமலர்க்
கோயி லேறு மினிதமரும்
பொன்றாழ் சடையோன் முதல்வனென
நான்காம் வேதம் புகன்றதுவே (7)

வேத நான்கு மிவைகூற
வெகுண்டு கமலத் திறைபுகல்வான்
ஆதிப் பிரம னொருபங்கி
*னணங்கை யமைத்து நீராடிப்
பூதத் தொகுதி யொடுங்குளித்துப்
பொறிவா ளரவக் கச்சசைத்துக்
காத லோடு மென்மகவாய்ப்
பிறக்குங் கொல்லோ கழறுதிரால் (8)

என்று கமலத் திறைகூறக்
குடிலை யெழுந்து நகைகோட்டி
நன்று சொன்னா யெனவெள்ளி
நாதன் பரையோ டியைந்திடுதல்
துன்று மாபோ லிருப்பதல்லாற்
றேய்ந்துந் தோயான் பரைகன்னி
குன்ற வில்லி யெஞ்ஞான்றும்
பிரம சாரி யெனக்குறிப்பார் (9)

---

* அணங்கை யமைத்து நீருடி (பா. பே.)

இமிலே றிவர்ந்தா னெனவுரைத்தா
யேறு தரும மாதலினுல்
அமல னதனி னினிதுறைந்தா
னன்றிச் சுடலை யாடியெனக்
கமல யோனி யிகழ்ந்துரைத்தாய்
புவன முழுதுங் கனற்றியநாள்
விமல னுறையப் புறங்காடே
யன்றி வேறு ரிடனுண்டோ (10)

என்னக் குடிலைத் தெருட்டவுளந்
தெருளா தெகினப் பாகனெடுங்
கன்னிப் படலைத் துழாய்மார்பன்
செம்மாந் துறைதல் கண்ணுற்றுங்
குன்னற் கரிய பேரொளியா
முக்கட் பெருமா னொருகோடி
மின்னுக் கதிரெண் டிசையளப்ப
விசும்பூ டறுத்து வெளிநின்றுன் (11)

சுடர்பன் னிரண்டு மின்மினியிற்
றேன்ற வெறிக்கும் பேரொளியும்
படைகள் திரிக்கு மெண்டோளு
முகமோ ரைந்தும் பானிறத்த
வடலை யணிந்த வெழின்மெய்யு
மலங்கு சோதி முக்கண்ணு
முடைய வுருவ னோக்கியய
னஞ்சா முகமீ துரைத்ததுவே (12)

முன்ன மெனது நுதல்நாப்ப
ணுதித்த நீயோ முதல்வனெனப்
பின்னும் வெகுண்டு கூறுதலும்
பிள்ளைப் பிறைதாழ் மணிமௌலிப்

பொன்னங் குடுமி வரைகுழைத்த
புனிதன் காரி முகநோக்க
வன்னே னிடக்கை நகநுதியா
மலரோ னைந்தாந் தலையகழ்ந்தான் (13)

உலகம் பூத்த தனிமுதல்வ
னைந்தாந் தலையை யுயர்காரி
யிலகு முகிரி னகழ்ந்திடலு
மிறத்த லோக்கி யுளமிரங்கிக்
கலவ மஞ்ஞை யொருபாக
ளுவி யளிப்பக் கடிக்கமல
மலரோன் துயிலேற் றவர்போலக்
கடிதி னெழுந்து வாழ்த்திசைத்தான் (14)

மூவா முதலா யெவ்வுலகும்
படைத்தாய் போற்றி முதுக்குறைவாற்
காவாப் புலன்க டனிகாக்கு
முனிவர்க் கருத்தி னடம்புரியுந்
தேவே போற்றி வேடன்மலர்க்
கண்ணுந் திருமால் விழிக்கமலப்
பூவுங் புனைய வருள்பொழியும்
பொன்னே போற்றி போற்றியே (15)

என்னு மிறைஞ்சுஞ் சூழ்போது
மெந்தை கமலச் சேவடிக
டன்ன துளத்தி னீங்காம
லிருந்து மறைநூ றனிற்பழிச்சுங்
கொன்னே தமிய னிழைத்தபிழை
பொறுத்தி யென்னுங் குற்றடியேன்
உன்னை வணங்கு மனந்திரியா
திருப்ப வரநீ யுதவென்னும் (16)

என்றிவ் வாறு மறைக்கிழவ
 னிரந்து கேட்ட வரமருளிப்
பொன்று துலகி னறநிறுத்த
 வுளத்தி னெண்ணிப் புதுநறவங்
கொன்றை துளிப்பப் பண்டரங்கங்
 குனிக்குங் கூத்தப் பிரானயனை
வென்ற காரி முகநோக்கி
 விழைவோ டிதனை விளம்புவான் (17)

தரும வொழுக்கம் யாம்புரிந்த
 வாறே யன்றித் தகுமுறையின்
விரியும் புவனத் துள்ளோர்கள்
 புரியா ரதனால் விதிதலையோட்
டரிதிற் பருவ மீராறு
 மைய மேற்றுப் பிரமகத்தி
விரைவி னொழித்தீண் டடைதியெனத்
 தரும மோர்ந்து விளம்பினான் (18)

காசி நகரந் தனிற்காரி
 யடையு மளவும் பிரமகத்தி
மாசில் மடவா ருருக்கொடவன்
 பின்னே திரிதி யெனவழங்கிப்
பேசு மூலக முழுதீன்ற
 பெரியோ னயற்கும் விடைநல்கி
யோசை யல்லா தணிபுனையா
 வுரவோன் மறைந்து போயினான் (19)

வேறு

மையணி கண்ட னுருவினைக் கண்டோர்
 மாரவே ளுருவினை நோக்கின்
வெய்யநன் குரங்கி னுருவென விகழ்ந்து
 விழிமலர் புதைத்தனர் நகைப்பச்

செய்யதா மரைக்கண் மாலென மாதர்
*நல்லுரு வினிதினிற் சேர்ந்திவ்
வையனைப் புணரத் தவமிழைத் திலமென்
றமரரேக் கறவொடும் வணங்க (20)

கொழுதிவண் டினங்கள் கோடிவிழ்ந் தாற்றுங்
கொழுமலர்க் கொன்றைதாழ் சடையோன்
மழையுறழ் மேனிக் கண்ணனு மயனு
மயனுமோர் கோடி நாள்வருந்தி
யெழுதினு மெழுதற் கரியநல் லுருவந்
தன்னொடு மிருநில வரைப்பிற்
பழுதறும் விண்ணிற் பாதல மதனிற்
பலியிரந் திடவெழுந் தனனால் (21)

தளிமுகில் பைந்தேன் மாரிபெய் தென்னத்
தழல்படு காட்டிடை யுலந்த
முளிசினைத் தருவும் பசுந்தழை குழைப்ப
மூரியே றுயரிய கடவுள்
களியொடுஞ் சாம கீதம்வல் விரும்புங்
கல்லுநின் றுருகிடப் பாடி
யளியொடும் புவியின் மகளிர்பின் றொடர
வணிநக ரெங்கணுந் திரிந்தான் (22)

கொலைக்கரும் புருவ வரிக்குயி லன்னார்
கோமறு கெய்தமெல் லடிதோ
யலத்தகு குழம்பு தோய்ந்தமென் சுவட்டி
னவிழ்ந்துவீழ் கூந்தன்மென் போது
சிலைத்தலைக் குழைத்து வேள்விடுங் கணைக
ளீசனைத் தொடர்ந்துசென் மாதர்
முலைத்தலை யுருவிக் குருதிவாய் மூழ்கி
வயின்வயின் மொய்த்தன கடுக்கும் (23)

---

* நல்லுரு வினிதிற் றேந்திவ் (பா. பே.)

## வேறு

மட்டவிழ் கொன்றை யானைக்
காணிய மறுகிற் செல்வாள்
பட்டிகை யவிழ்ந்து காலிற்
கிடப்பது பசும்பொற் சுண்ணங்
கொட்டிய முலையாற் புல்லர்
கேண்மைபோ ளுளுங் குன்று
மிட்டிடை வருந்து மேக
லென்றடி பிடித்தல் போலும் (24)

அரிக்குரற் சிலம்பு காலி
னணிந்திட வெடுத்த போழ்தின்
விரைக்குழன் மாத ரையன்
வீதியிற் போந்தா னென்ன
வுரைத்தலு மங்கைத் தாங்கி
யோடுதல் விரைவிற் சென்ற
திருக்கிளர் தாளிற் பெய்வ
லெனநலி சேறல் போம் (25)

கறைகெழு சூலத் தானைக்
காணிய விரைவிற் செல்வாள்
பிறைவடங் கிடந்த பொம்ம
லிளமுலை ததும்பல் பேதுற்
றிறுமிறு மென்னத் தேய்ந்த
விடுகிடை தாங்க லாது
பொறையினை யாற்றி யாற்றி
வைப்பது போலு மாதோ (26)

புழுகுநெய் நானஞ் சாந்தங்
குங்குமங் குழைத்துப் பூசா
தழலவிழ் சூலத் தெந்தை
வரவுகேட் டயர்ந்து வைத்து

விழைவொடுஞ் சேறல் கண்டு
மீண்டவ னழகின் வீக்க
மெழுதிட வன்னம் யாவும்
குழைத்துவைத் தேகல் போலும் (27)

மங்கைய ரடியீ டேத்த
மறுகிடைச் செல்லு மாதர்
பொங்கிய வோர்காழ் முத்த
முலையிடைப் புடைத்தற் கஞ்சி
செங்கையா லமைத்த லென்முன்
செல்லலை யிறைபா லென்னத்
தங்கிய வெகுளி யோடு
மனத்தினைத் தடுத்தல் போலும் (28)

## வேறு

வீதிவா யெய்திய விமலற் காணிய
வாதர வொடுமறு கணைந்து செல்லுவாள்
காதினீ லோலைமுன் கழன்று வீழ்வது
சாதன வோலைமுன் விடுத்தல் சாலுமே (29)

ஐயனை மறுகிடைக் கண்ட வங்கலார்
கையினின் மலர்கடுய்த் தொழுதல் கன்னியர்
மெய்துளை பட்டிடக் காமன் வில்வளைத்
தெய்தபூங் கணைகண்முன் னிட்டல் போலுமால் (30)

மழவிடை யுயரிய வரதற் காண்குறும்
விழைவின ளாதலின் விழிகண் முற்றுமை
யெழுதிடி னூழிநா ளிறக்குந் தீட்டலென்
றழுதன டொழுதன ளன்னை தன்னையே (31)

ணையவளம் பாடி யைய
மேற்றிடு நாதற் காண்பான்
*மைவளைத் தாவி யுண்ணு
மதர்விழி யொருப்பா டெண்ணிக்
கைவளை கழற்றி யந்நுண்
கலிங்கமும் நாவும் விக்கித்
தெய்வதம் பராவி யன்னை
விடுத்தன டிகைத்து நின்றாள் (32)

குன்றிடைப் பிறந்த மெல்லென்
குறுநடைப் பயிலு மந்தண்
மன்றலங் குழவித் தென்றல்
வருதொறும் வசந்த காலம்
பொன்றுணர் தாது தூக்கிப்
பூங்கொடி யசைத்தல் போல
வென்றிவேற் கண்ணா ரெந்தை
விழாவணி வீதி புக்கார் (33)

முதுக்குறை வாளர் காணா
முதல்வனை யெளிதிற் காண்பான்
விதிர்ப்புறு நசையா லுள்ள
நீங்கவேற் றுடல மாகிக்
கதுப்பினி லணியுந் தாமங்
கைவளை யாகச் சுற்றி
மதுக்களி மாதர் போல
மலரடி யிடறச் சென்றார் (34)

அலத்தக மணிந்த செம்பொ
னடிச்சுவ டழுந்த லோடு
நிலத்தலைச் சிவந்த தந்த
நிலத்தலத் தழுந்தி மாதர்

* மைவளைந் தாவியுண்ணும் (பா. பே.)

மலர்ப்பதம் பூமி கைம்மா
றளித்தெனச் சிவப்ப வந்தாங்
கிலைத்தலைச் சூல வேற்கை
யெந்தையைத் தொழுகின் ருரும் (35)

மயிற்குலம் வருதல் போல
மறுகிடை மொய்த்த மாதர்
வெயிற்கதிர்ச் சூல வேற்கை
விமலனை யினிது நோக்கித்
துயிற்சுவை மறப்பக் கண்க
ளெம்முடை நாணி னோடு
முயிர்ப்பலி கொளவோ வெந்தை
போந்ததென் றுரைக்கின் ருரும் (36)

பையர வல்கு னல்லார்
பலியொடும் வளைக ணல்கி
மையணி மிடற்றோய் கேட்டி
மறுகிடை யினிது பாடி
யையமேற் றுண்போர்க் கெல்லா
மரிமதர் நெடுங்க ணோர்தங்
கையணி சங்கங் கொல்லோ
கறியமு தென்கின் ருரும் (37)

செய்யனைக் காண்ட லோடு
நாணொடு சேலம் போக்கி
மெய்விளர்த் தாங்கு நிற்குங்
கன்னியை வெகுண்டு நோக்கி
யையனை யணைந்தாய் போலு
மாங்கவ னணிந்த தூசுந்
துய்யவெண் ணீறு நின்மேற்
ரோன்றலா லென்கின் ருரும் (38)

மயர்வொடு மறுகி னெய்து
 மங்கையர் பலியேற் றெய்து
மியவுளைக் காண்ட லோடு
 மாரனை யெரித்த மாற்றம்
பயனில்சொல் லெரிந்தோன் மீட்டும்
 பனிமலர் வாளி தூவி
யயர்வுற மடவ ராவி
 யுண்ணுமோ வறைதி ரென்பார் (39)

அந்தணர்ப் பிழைத்த பாவ
 மகற்ற வோர் பன்னிரண்டு
மெந்தைநீ யைய மேற்றுண்
 டாற்றுவா னிருக்கின் றுயேற்
சுந்தர மடவார் தம்மை
 நாணொடுந் தொலைத்த பாவ
நந்திடும் விரதம் யாதோ
 பயின்றது நம்ப வென்பார் (40)

கண்ணினுன் மதனை முன்னங்
 கனற்றினை யவன்றன் சேனை
வண்ணமே கலையா ரென்ன
 மனத்திடை நினைந்து கொல்லோ
தண்ணளி புரிந்தே யெம்மைத்
 தழுவுறு தாவி வாட்டப்
பண்ணுலாஞ் சாம கீதம்
 பாடிமீண் டகல்வ தென்பார் (41)

இன்னணம் புவியின் மாதர்
 மாலொடுந் தொடர வேகிப்
பன்னக நாட்டி னெய்திப்
 பலியிரந் தெய்த வாங்கண்

மன்னிய மடவார் சூழ்ந்துன்
வனப்பினைக் கேட்ட கண்க
ளென்னநற் றவஞ்செய் தோவுன்
றுருவினைக் கண்ட தென்பார் (42)

வருமுலை யோடுந் தோன்றி
வளர்தொறும் வளர்ந்து மாதர்க்
குரியவா நாணுந் தூசு
மொழிந்திட வளையு நெஞ்சும்
அரியதம் முயிரும் பூணு
மையமோ டளித்து மாழாந்
தெரியுமுத் தலைவே லண்ணல்
பின்றொடர்ந் தேகி னரால் (43)

பாதலத் துறையு மாதர்
விஞ்சையர் மாதர் பண்பிற்
காதல்கொ ளரக்கர் மாதர்
சூழ்வரக் கடிதை யேந்தி
யேதமில் கணங்கள் சூழ
விளம்பிறை முடித்த புத்தேள்
மேதக வமரர் வாழும்
விண்ணுல கெய்தி னானே (44)

நெய்திடாப் பூந்துகில் நெகிழக் கைகளாற்
கொய்திடா மலர்புனை கூந்தல் சோர்ந்திடப்
பையர வல்குலார் பதியி ரந்திடு
மையனைச் சூழ்ந்திவை யறைதன் மேயினர் (45)

எங்குள வுயிர்களு மெரிகொ ளுத்திட
வங்கியை யோர்கரத் தமைத்த கண்ணுதன்
மங்கையர் தமைச்சுட மனத்தி னெண்ணியோ
திங்களங் குழவியைச் சடையிற் சேர்த்ததே (46)

## வேறு

பொரியரை யார நறுங்குற டுரிஞ்சாப்
புண்ணியத் தெய்வையின் மூழ்கி
யிரவுநன் பகலு மிடுகிடை வருந்த
மார்பிடங் கொண்டதை யல்லாற்
பரியவெண் முத்தங் கிடந்தவெம் முலைகாள்
பையர வணிந்திடும் பரமன்
றிருவமா மார்பன் றிளைத்திடத் தவநீர்
செய்திலீ ரெனச்சிலர் துயர்வார் (47)

சேயரி பரந்து கடைக்குழை யெறிந்து
திரைகட லேழினும் பெருத்துப்
பாயகூர் விழிக ளிமைத்திடா திருந்த
பலமடைந் தேம்பசுந் துளவோன்
ஆயிரங் கற்பம் பன்றியா யுலகங்
கீண்டுநா டியுமின மறியாத்
தூயபங் கயத்தா ளெளிதினீற் காணப்
பெற்றதா லெனச்சிலர் தொழுவார் (48)

காந்தளஞ் செவ்வி வீயுகுத் தென்னக்
கைவளை யொடும்பலி யிடுவார்
சாந்தமென் கொங்கை மேருவிற் பெரிதோ
தடக்கையிற் பிடித்திலை யென்பார்
மாந்தளிர் மேனி மகளிரின் னணஞ்சூழ்ந்
திரந்திட வயிரவன் போகிப்
பூந்துழாய் முகுந்த னரசுவீற் றிருக்கும்
புண்ணிய வுலகினி லடைந்தான் (49)

பங்கயன் றலையோ டேந்திய காரி
மாலுமைப் படர்தலுஞ் சினவிச்
சங்கொடு நேமி நாந்தகம் வரிவிற்
றண்டமென் றுரைக்குமைம் படையுஞ்

சிங்கவே றனைய விச்சுவ சேன
 னெடுத்தமர் திளைப்பதற் கெண்ணி
யங்கிகொப் பளிக்குஞ் சக்கரந் திரியா
 வழலின்வீழ் பதங்கமொத் தெதிர்ந்தான் (50)

விச்சுவ சேனன் வெகுண்டுமுன் னெதிர்ந்து
 வெஞ்சமம் புரிதலு நகைத்து
கச்சையங் களிற்றி னீருரி புனைந்த
 கனலும்மிழ் கண்ணுதற் காரி
யச்சணங் கெரிகால் முத்தலைப் படையி
 னுங்கவ னுடலினைக் கோத்துப்
பச்சைமா லுறையு ளெய்தலு மாய
 னெழுந்தடி பணிந்திவை புரிவான் (51)

உரியநற் பலியா னுதவுவ னென்ன
 வுலகமோ ரடியினிற் படுத்த
கரியவ னேமிப் படையினாற் றனது
 கவின்வளர் மத்தகம் பிளந்து
குருதிநீ ரருவி போலநின் றொழுகக்
 காரிகை கொள்கபா லத்திற்
பருவமா யிரமாங் குருக்கவுங் கபாலம்
 பாதியு நிறைந்தில தன்றே (52)

ஆயிரம் பருவஞ் செங்கண் மானுதலி
 னருவிபோலி ரத்தம்வாக் கியதால்
மேயதன் னுடல மெலிந்துமூர்ச் சனையான்
 மெலிதலும் விரைமலர்ப் பொகுட்டு
நாயகி வெருவி யிருகர நெரித்து
 நாட்டனீர் துளித்திடக் கலுழ்ந்து
பாய்புலிப் போத்தி னதள்புனை காரி
 பதமலர்ப் பழிச்சின ளன்றே (53 )

## வேறு

மருவார் செழுங்கூந்தல் வாணிகலன் பூண்டிருப்பத்
தருநீழல் மேவிச் சசிவாழ்வி-ேனுடிருப்ப
திருவோ திருவிழப்பாள் தேவர்சூ ளாமணியே
கரியோ னுயிரளித்தென் மங்கலநாண் காப்பாயே (54)

திங்கண் முடித்தோய் திரிபுரமூன் றீயூட்டு
மெங்கள் பெருமானே யேத்துவார் கண்மணியே
கங்கை மணாளாவென் காதலனை யுய்வித்து
மங்கல நாண்பிச்சை வழங்காய் வழங்காயே (55)

காலன் விழமுன்னங் கஞ்சப் பதம்பணித்துப்
பால னுயிர்காத்தோய் பண்ணவர்கள் வீயாமல்
ஆல விடமயின்ற வாதிப் பரஞ்சுடரே
மாலி னுயிரளித்தென் மங்கலநாண் காப்பாயே (56)

மூவ ரெனவோது முதற்றே வரிலொருவ
னுவி யழித்தா லவுணருனை யேசாரோ
தேவ ரிடர்தீர்ப்போய் சிற்றிடைச்சி மங்கலநாண்
காவல் புரியாயே லென்னுங் கலைகண்ணே (57)

என்று கமலை தொழுதிரப்ப மாமேருக்
குன்றவரி விற்குழைத்த கோமா னருள்பூத்து
மன்றற் றுளவோன் றனையெடுத்து மார்பணைத்துத்
தன்றுணைக்கை யாலவன்றன் மேனி தடவந்தான் (58)

அய்யன் கரத்தாற் றடவரலு மார்கலிசூழ்
வைய மளந்த மணிவண்ணன் மூர்ச்சனைதீர்ந்
துய்யா வெழுந்திட் டுரவோன் மலரடியிற்
கையான் மலர்தூய் பழிச்சியிவை கட்டுரைப்பான் (59)

அன்னையுமா யெவ்வுயிர்க்குந் தந்தையுமா யாண்டருளு
முன்னவனே நின்னைப் பிரமகத்தி முற்றுமே
நின்னகராங் காசிதனி னீயடையிற் பிறேடர்ந்தாங்
கென்னை புரியுங் கொடும்பாவ மெந்தாயே (60)

என்னக் கமலத் தவனோ டுலகின்ற
முன்னோ னுரைப்ப முகிழ்நகைசெய் தெம்பெருமான்
கன்னிரியெயில் சூழ்கிடந்த காசிப் பதியேக
வன்னோன் கரத்திற் கபாலமவண் வீழ்ந்ததுவே (61)

பேராது பின்செல் பிரமகத்தி விண்டோயு
மாராமஞ் சூழு மகன்காசி கண்ணுறலும்
வேரா விதிர்விதிரா மெய்நடுங்கிப் பாதலத்துள்
யாரேனுங் காணாத வண்ணமொளித் தேகியதே (62)

எந்தை யடியீடு போற்றியியற் காசிதனில்
வந்த நெடுமால் மலரோன் றலையெறிந்த
சிந்தா மணிதன்னைத் தேவர்சூ ளாமணியை
நந்தா விளக்கைப் பணிந்து நவில்கின்றான் (63)

சிங்கஞ் சினவிற் றறுகட் டிறல்வேழத்
தங்கம் பிளந்தலைவ தல்லாமற் சிற்றெறும்பைப்
பங்கப் படுத்துமேற் பாற்கடலோர் பாலர்க்குப்
பொங்கு முவகையா லீந்த புராதனனே (64)

என்று திருமா லிரப்பநெடுஞ் சூலத்திற்
பொன்றிக் கிடந்த புயல்போ லிறத்தானைச்
*சென்ற வுயிரளித்துத் தீததும்முஞ் சூலத்தான்
மன்றற் றுளவ மணிவண்ணன் கைக்கொடுத்தான் (65)

* தியுமிமுஞ் சலத்தான் (பா. பே)

உய்வந்த சேனை முதல்வ னெடுமுவந்து
மைவந்த கண்டற் பணிந்தவன் றன் மாணருளால்
நைவந்த வுள்ள நடுக்ககல நாரணன்போய்ப்
பைவந்த வெந்தறுகட் பாப்பணையின் மேவினான் (66)

தண்ணாந் துளவோ னகலத் தணவாத
வண்ணலஞ் சீர்க்காரி யகன்கா சியினமர்ந்தா
னெண்ணருமிக் காதை பயின்றோ ரிரும்பாவ
நண்ணலராய்க் காசிநகர் நண்ணினார் பேறடைவார் (67)

முப்பதாவது
வயிரவன் பலியிரந்த வத்தியாய முற்றிற்று

---

உ

## முப்பத்தொன்றுவது
## மாபாதகப் பிராயச்சித்த முரைத்த வத்தியாயம்

---

அரும்பெறற் சொன்னங் கள்ளுநர் மறையோ
ராயினு மாங்கது தீர்ப்பான்
விரும்பின ரென்னி லிரும்பினான் முசலம்
பண்ணியவ் வியனக ரரச
னிருந்துழி யெய்தித் தன்செய லுரைத்துக்
கதையைமற் றவன்கையி னீயிற்
றிருந்தவோ ரடியம் மன்னவ னடிப்ப
விறந்திடிற் றீருமப் பாவம் (1)

கள்ளுந ரீது புரிந்திடா ரென்னி
லந்தணர்க் கடிந்தவற் குரைத்த
வெள்ளரும் விரத மியற்றுக வன்றே
லிவுளிமா மகம்புரி வேந்தர்

தெள்ளிதி னுடும் தூயநீ ரதினிற்
சென்றுநீர் படிக வொல்லாதே
லொள்ளொளிச் செம்பொன் றன்னிறை மறையோற்
குதவியக் கொடும்பழி கழிக்க (2)

கள்ளென வறியா துண்டவெம் பாவந்
தீர்ந்திட வுளத்திடைக் கருதி
னுள்ளமா மூரந்து தனையிகழ்ந் தீசன்
மலரடி நெஞ்சிடை யுன்னித்
தெள்ளிதின் மறையோர்ச் செகுத்தவர்க் குரைத்த
தீதறு விரதமாற் றியபின்
வள்ளவாய்க் கள்ளைக் காய்ச்சி வாய்ப்பெய்ய
மறிந்திடி லொழியுமப் பாவம் (3)

அன்றெனிற் குடுமி வரைமிசை யேறி
வீழ்ந்துயி ரவிந்திடி லகலுந்
துன்றும்வெந் தழலின் வீழ்ந்துயிர் துறப்பிற்
புண்ணியப் புனலிடை வீழ்ந்து
பொன்றிடி லலதேற் கிரிச்சிர மியற்றிற்
புரவிமா மகமுடித் தரசர்
சென்றுநீ ராடும் புனலிடைத் தோயிற்
றீர்ந்திடுஞ் செய்தபா தகமே (4)

குருவுடைப் பன்னி யெனவறி யாது
குவிமுலை மணந்தவர் பாவ
மரிதினிற் றீர்க்க வேண்டிடி னுருக்கா
லாங்கவ ளுருவினைப் பண்ணி
யெரியெழக் காய்ச்சித் தழீக்கொள வன்றே
லாண்குறி யினையறுத் தேந்தி
வெருவொடு மறலி திசையினி லேகி
வீயினப் பாவம்விட் டகலும் (5)

அந்தணர்ச் செகுத்தோர்க் குரைத்திடும் விரத
மாற்றிடி னழலின்வீழ்ந் திறப்பி
னந்தலில் சாந்தி ராயண விரதங்
கிரிச்சரம் பற்பல நடத்திற்
சுந்தரப் புரவி மகம்புரிந் தோர்க
டிபவிர தத்திடை தோயில்
வந்தனைக் குரிய குருவினைப் பிழைத்தோர்
மாற்றருந் தீவினை யகலும் (6)

ஈங்கிவை நால்வர் தம்மொடு மன்பி
னியைந்தவர் கொடியவெம் பாவ
னீங்கிட வேண்டி லாங்கவர் தமக்கு
நிகழ்த்திய தண்டமே யிவர்க்குந்
தீங்கறு தண்ட மன்றெனிற் சிவனைச்
சிந்தையி லிருத்திவெவ் வழலின்
வீங்குதண் புனலின் வீழ்ந்துதம் மாவி
விடுப்பினும் வெவ்வினை யகலும் (7)

முப்பத்தொன்றாவது
மாபாதகப் பிராயச்சித்த முரைத்த வத்தியாய முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 685

---

உ

## முப்பத்திரண்டாவது
## பிராயச் சித்த முரைத்த வத்தியாயம்

---

தன்னுடன் பிறந்தாள் தன்மகள் மைந்தன்
றனிமனைக் கிழத்தியைக் கலந்தோன்
மன்னிய பாவ மகற்றுற வேண்டின்
மதிமுடி யண்ணலை நினைந்து

துன்னருந் தழல்வீழ்ந் திறந்திடல் வேண்டு
மாமியை யத்தையைத் தோயி
னின்னல்செய் பாவஞ் சாந்திரா யணஞ்செய்
திறந்திடிற் றீருமென் றிசைப்பார் (1)

தன்னுடன் பிறந்தோன் மனைவி தன்னோடு
முதித்தவன் மகண்முலை தழுவின்
பன்னிரு சாந்தி ராயணா மிழைக்கி
னுங்கவன் பாதக மொழியும்
அன்னைமுன் பிறந்தாள் பின்பிறந் தாடன்
மக்களை யணைந்திடின் யார்க்குந்
துன்னருந் தழலின் வீழ்ந்துதன் னாவி
துறந்திடிற் றுறந்திடும் பாவம் (2)

பூத்துநீ ராடு முன்மடந் தையரைப்
புல்லினோர் மூன்றுநா ளன்ன
நீத்திடிற் பாவ மகன்றிடு மிழிந்த
நேரிழை யவர்புணர்ப் பாவ
மேத்துசாந் தபன கிரிச்சரந் தத்த
கிரிச்சர மியற்றிடி னகலுங்
காத்திடா துள்ளங் கன்னியர்ப் புணரின்
சாந்திரா யணஞ்செயிற் கழியும் (3)

கன்னிய ரிடத்தின் மிருகயோ னிகளிற்
றுதுவைக் கழித்தவர் பாவந்
துன்னருஞ் சாந்தி ராயணம் புரியிற்
றொலைந்திடுங் காமமீ தூர
மன்னுநாற் குலத்தும் பிறர்மனைக் குரிய
மடந்தையர்ப் புணர்ந்திடும் பாவம்
வன்னியின் வீழ்ந்து தனதுடற் பொறையை
வலிதின்மாய்த் தொழிந்திடிற் றீரும் (4)

மரபொழுக் கிழுக்கி யழிந்தவர் தம்மைத்
தவம்புரி மகளிரை யெங்குந்
திரிகழாய்க் கூத்தக் கன்னியைத் தேவ
தாசியைச் சிலதியைப் புணர்வோ
ரூரியவெம் பாவஞ் சாந்திரா யணத்தா
லொழிந்திடுந் தூசுதூய் தாக்கு
மரிவையைப் புணரிற் கிரிச்சரம் பத்துச்
செய்திடி னகன்றிடும் பாவம் (5)

இழுதையிற் பிரம சாரிமங் கையர்தம்
மிளமுலை யினிதினிற் றோயிற்
கழுதையின் புன்றோல் மேனியின் போர்த்துக்
காலையு மாலையு மூழ்கிப்
பழுதறத் தான்செய் பாவமாங் குரையா
வேழகத் தேற்றுவெம் பலியுண்
டொழுகியோர் வருடந் திரிந்திடிற் பாவ
மொழியுமென் றுரைப்பர்கற் றுணர்ந்தோர்(6)

மறையவர் முதலோர் மன்னவர்ச் செகுப்பின்
மறையவர்ச் செகுத்தவற் குரைத்த
குறைவறு தண்டம் பண்ணுதல் வேண்டுங்
கோதில்பார்ப் பனிதனைச் செகுப்பி
னறைதரு பிரம கத்திதீர்ப் பதற்காங்
கறைந்தவா றெட்டியாண் டிழைக்க
நிறைபொருள் வணிகர்ச் செகுப்பின்முப் பருவ
நிகழ்த்துநோன் பாற்றிடிற் றீரும் (7)

அரசர்கன் னியரைக் கொன்றிடி னுருண்
டந்தணர்ச் செகுத்தவர்க் குரைத்த
விரதமாற் றிடுக வணிகர் கன்னியரை
வீட்டினோர் விளம்புமவ் விரதம்

புரிகழு வாண்டு பின்னவர் மகளிர்ச்
செகுத்தவர் புகலுமவ் விரதம்
பருவமொன் ருற்றி னரிதினிற் றீரு
மெனமறை பகர்ந்ததை யன்றே (8)

நாயினைச் செகுத்தோ ரெண்ணிரு வைகல்
நகர்ப்புறம் போய்த்தலை யோட்டிற்
றாயவெம் மனையேற் றுண்டிடிற் பாவந்
தொலைந்திடு மென்பிலா தவற்றை
வீயுமா செய்தோர் வியப்பொடும் பிராணு
யாமமாங் கியற்றின்வெவ் வினைபோந்
தாயமென் றவளை யெலியிவை கடியிற்
சாந்திரா யணஞ்செயிற் றீரும் (9)

பன்றிவெம் பூனை குதிரைபைங் கிளி
கொன்றவன் கிரிச்சரம் பண்ணிற்
றுன்றிய பாவந் தொலைந்திடு மரவந்
தொலைத்தவன் வருந்தியோர் திங்கண்
மன்றவோர் குடங்கை பாலினை யருந்தி
வையினை மறைவர்க் களிக்கி
ஞென்றிய பாவ மொழிந்திடுங் கிளியை
யொறுக்கிலா னுதவிடிற் றீரும் (10)

பறவைகள் செகுத்தோர் விரதநன் கியற்றிப்
பழமறை யவர்க்கிரு நிதியங்
கறவையோ டளிப்பிற் றீர்ந்திடும் பாவங்
காய்பழம் பூவினை யுடைத்தாஞ்
செறிமரங் குறைத்தோர் சிலகொடி யறுத்தோர்
தீங்கறு மிருக்குநா ளுறுதி
நறுநெயாங் கருந்தி மூன்றுநா ளேற்பி
னண்ணிய பாவம்விட் டொழியும் (11)

ஆனையை முதலாம் விலங்கினை யொறுத்தோ
ரளப்பறு விரதநன் கியற்றித்
தேனெய்பா லோடு மறையவர்க் கூட்டிற்
றீர்ந்திடும் பாவமென் றுரைப்ப
ரூனுடை யாக்கை யுணர்ந்திடா தொறுத்தோன்
வினையொழிந் திடுமுணர்ந் தொறுத்தோன்
ருனுறு பாவ மளப்பிலு ணரகிற்
றங்கிய லாதொழிந் திடாதால் (12)

## வேறு

ஏதிலர் மனைபொருள் பழன மேரிதங்
காதலின் வவ்வினோர் கவர்ந்த யாவையு
மேதக விழுந்தவர்க் களித்து மெய்ம்மையா
யோதுசாந் திராயண முஞற்றல் வேண்டுமால் (13)

புல்லுநீள் விறகுவெம் புலால்வெண் டூசெலா
மல்லலக் காரந்தோல் வவ்வின் மற்றவை
யொல்லையி லிழந்தவர்க் குதவி யூனொழிந்
தல்லநீர்த் தாவினந் தருந்தல் வேண்டுமால் (14)

காரண்டங் கொக்குவெம் பூனை காக்கைவெங்
கீரிநீர்த் தவளையூர்க் குருவி கிள்ளைபுள்
வார்சிறைப் புறவுதின் றோர்கள் வல்வினை
யீரறு நாளுண விகழிற் றீருமால் (15)

உறுபுலா லுணங்கல் வெண்கோழி முட்டையோ
டறைதரு முருங்கையின் காயொ டத்திக்காய்
செறிசுரைக் காயிவை தின்னி லோர்மதி
முறைகொள் சாந்திராயண முடித்தல் வேண்டுமால்(16)

*கடவுளர்க் கதிதிகட் கன்றிக் காதலா*
*லடிசில்பால் பூபநெய் தனக்கென் றேயமைத்*
**தொடிவில்பாழ் வயிற்றினி லூட்டு பாதக*
*மமைவுடன் கிரிச்சர மாற்றிற் றீருமால்* *(17)*

**வேறு**

*தீயினுக் கூட்டா துண்ணுந்*
*தீமையோ னில்லி னுண்டோ*
*ரேயநற் குலத்தோ ரன்றி*
*யிழிந்துளோர் மனையி லுண்டோர்*
*தூயவர் நவச்சி ராத்தஞ்*
*சூதகா சவுசத் துண்டோர்*
*மேயநற் கிரிச்ச ரங்கள்*
*விதியினிற் செய்ய வேண்டும்* *(18)*

*மானுடர் விலங்கு புள்ளின்*
*வருசல மலங்க டம்மை*
*யூனுடை யாக்கை தம்மிற்*
*றடவியுள் ளருந்தி னோர்கள்*
*மானுத லிலவாஞ் சாந்தி*
*ராயண மகிழ்வி னோடு*
*நூனெறி வழாம லாற்றி*
*னெய்தின்வெம் பாவந் தீரும்* *(19)*

*அருந்துழி மலமோர் மூன்றும்*
*விடுக்குந ரெண்ணெ யாடிப்*
*பொருந்துநீ ராடு முன்ன*
*மீங்கிவை போக்கி னோர்கள்*
*மருந்தினு மினிய வேனு*
*மிச்சிலை மகிழ்வி னுண்டோர்*
*திருந்துசாந் திராய ணங்கள்*
*பற்பல செய்ய வேண்டும்* *(20)*

---

* ஓடிவில்பால் வாயினிலூட்டு பாதகம் (பா. பே.)

தன்னுடை மிச்சி லேனும்
பிறர்நுகர் தண்ணீ ரேனு
மன்னுகட் குடத்திற் பெய்த
வான்புன லேனு முண்ணிற்
றுன்னிய பாவந் தூய
கோசலத் தியவை யாக்கிப்
பன்னிரு வைக லுண்ணிற்
பழிப்பறத் தீரு மன்றே (21)

நெறியில் சண்டாளர் கூபப்
புனலவர் குடத்திற் றெண்ணீ
ரறிவுறு தருந்தி னைந்து
கிரிச்சர மாற்றல் வேண்டு
மறவியின் றுக வுண்ணு
மாண்பிலி தனக்கு வேத
முறையினின் முன்னூல் பின்னுஞ்
சேர்த்திட மொழிந்த தன்றே (22)

பூத்துநீ ராடா துற்ற
மகளிர் சண்டாளர் பொல்லாத்
தீத்தொழி லாளர் தம்மை
யுண்புழித் திருந்தக் காணி
னீத்தொரு மூன்று வைக
லுணவினை நெறியி னேடு
மேத்திடு மாவி னைந்து
மருந்திடி னிரியும் பாவம் (23)

வான்புனல் படியு முன்ன
மறந்துண வருந்தி னேனல்
மூன்றுநா ளுணவு நீத்தல்
முறைமையாம் பழைய துண்ணி

லான்றனி மோந்த துண்ணி
　　லற்றையு ணெழிக வேதஞ்
சான்றவ ரல்லார்க் கோதிற்
　　றவம்புரிந் திடுதல் வேண்டும் (24)

ஏதிலர்க் காபி சார
　　மியற்றினும் வேட்ட வன்றுண்
மேதக வாற்று செந்தீ
　　யவியினும் வேத நூலைத்
தீதறு புலவர் தம்மைத்
　　தேவரை யிகழ்ந்தா ரேனு
மூதறி வோடுந் தத்தக்
　　கிரிச்சர முயற்றல் வேண்டும் (25)

இல்லறம் புரிந்தோர் சந்தி
　　கழித்திடா தருந்தின் யாருஞ்
சொல்லரும் பிரம சாரி
　　சுடுதழற் கூட்டா துண்ணிற்
புல்லிய வொழுக்க நீங்கிற்
　　றுகிலின்றிப் புனலின் மூழ்கின்
மெல்லவா யிரக்காற் காயத்
　　திரியினைச் செவித்தல் வேண்டும் (26)

அந்தணர்க் கருமை செம்மை
　　யாகிய வறுவை சுற்றின்
மைந்துட னற்றை நாளி
　　னுணவின்றி மற்றை நாளி
னுந்துதண் புனலி னாடி
　　யாவினைந் துண்ணல் வேண்டு
மந்தில்மா னுடர்த மென்பு
　　தீண்டினீ ராடல் வேண்டும் (27)

மூவகை யுள்ளி கள்ளுத்
தீண்டிடின் மூன்று நாளைக்
கோவறு முணவு நீங்கிப்
பசுவினை யுண்ணல் வேண்டுந்
தாவிநாய் காலிற் கவ்வின்
மூன்றுநா டனிப்பா லுண்க
மேவருஞ் சிரத்திற் கவ்வின்
விடுகவூண் பத்து நாளே (28)

பூத்துநீ ராடு நாடொட்
டீரறு நாளும் பொற்பின்
வாய்த்ததம் மனைவி யின்ப
மகிழ்ந்திடார் பருவந் தோறு
மேத்திடு மிட்டி பண்ணார்
பொய்ம்மொழி யிசைத்தோர் மேவுந்
தீத்தொழி லொழியத் தத்தக்
கிரிச்சரஞ் செய்ய வேண்டும் (29)

கடவுளர் தம்மை வேத
முனிவரைக் கடவுட் கற்பின்
மடநலார் தம்மைக் கூர்வேல்
மன்னரை முனிந்து சீறிச்
சுடுசொலா லிகழ்வோர் பாவந்
தொலைத்திட வேண்டி நாவைக்
கடியவெங் கொள்ளி தன்னாற்
கருக்கிட வேண்டு மன்றே (30)

திங்களங் கண்ணி வேய்ந்த
செல்வனை யிகழ்ந்த பாவம்
இங்கிது தன்னிற் றீரா
தெண்ணறு விரத மாற்றிப்

பொங்கழ னுப்பண் வைகி
யருந்தவம் புரிந்திட் டாலு
*மங்கவ னருளி லின்ன
றீர்ந்திட வரிய தாமால் (31)

தேவரா லயத்தி னந்த
வனத்தினிற் சிந்தை யோரா
தோவின்மும் மலம்விட் டோர்தம்
மாண்குறி யறுத்திட் டொல்லை
மேவருங் கிரிச்ச ராதி
கிரிச்சரம் விழைந்து செய்யிற்
பாவவெந் தீமை நீங்கிப்
பழிப்பறு புனித னாவான் (32)

கங்குலின் முகத்திற் றிங்கட்
கண்ணியோன் பாதம் போற்றி
லெங்குள நகரும் மெய்திக்
கடவுளர்ப் பழிச்சி யேத்திற்
கங்கையை முதலா யுள்ள
கடவுணீர்த் துறைக ளாடிப்
பொங்குதீ வினைக ணீங்கிப்
புண்ணிய ராகி வாழ்வார் (33)

காதலன் பாவி யேனுந்
தன்னெடுங் கற்பின் மிக்க
மாதர்மென் னோக்கிச் செந்தீப்
புகுந்துயிர் மடிந்தா ளென்னிற்
றுதனோந் தினவண் டோதத்
தண்மலர்த் தருவி னீழல்
மேதகு திருவ னாகி
யினிதுவீற் றிருப்ப னன்றே (34)

---

* அங்கவன் அருளி னன்றித் தீர்ந்திட (பா. பே.)

வெற்பெடுத் துயர்ந்த தின்டோ
　　ளிராவணன் விரகத் தெய்திப்
பொற்புடைச் சீதை நெஞ்ச
　　மேலிவுறப் புன்மை செய்து
கற்பெனுங் கனலி பற்றக்
　　கிளையொடுங் கரிந்தா னென்னி
லற்புடை யவர்க்குத் தீமை
　　புரிவரே னரகின் வீழ்வார் (35)

இன்னநல் லொழுக்கந் தன்னை
　　யியம்பினே ரினிது கேட்டோர்
கன்னலங் குதலைச் செவ்வாய்ப்
　　புதல்வரைக் களிப்பி னீன்று
பன்னக முடியின் வைகும்
　　பார்பொது நீக்கி யாண்டு
பொன்னுல காள்வ ரென்று
　　வியாதமா முனிவன் போனான் (36)

முப்பத்திரண்டாவது
பிராயசித்த வத்தியாய முற்றிற்று
ஆகத்திருவிருத்தம் 721

---

உ

## முப்பத்துமூன்றாவது
## திரிபுர தகன வத்தியாயம்

---

பழமறை யினிது கோத்த
　　பாசரன் புதல்வ னேக
முழுதுணர் முனிவர் யாருஞ்
　　சூதனை முகமன் கூறி

யெழுவுற ழெண்டோ ளெந்தை
திரிபுர மெரித்த காதை
வழுவற வுரைத்தி யென்ன
மனமகிழ்ந் துரைக்க லுற்ருன் (1)

கார்தவழ் மேரு வெற்பைக்
கடவுளர் வெருவி யோட
வேரொடும் பிடுங்கி மீட்டும்
வைத்திடும் விறல்கொ டிண்டோட்
டாருகன் றன்னை வெற்றி
யறுமுகன் சாய்த்த பின்னர்ச்
சீர்கெழு மவன்றன் மைந்தர்
திசைமுகற் பழிச்ச லுற்ருர் (2)

தகைபெறு வித்துன் மாலி
விறல்கெழு தார காக்கன்
கனகமோ ரேழும் வென்ற
கதழ்சினக் கமலக் கண்ணன்
புகையெழுந் துலகம் யாவும்
புழுங்கவேழ் புரவி பொற்றேர்ப்
பகல்கரந் தொளிப்பக் கோடி
பருவம்வெவ் வழலி னின்ருர் (3)

அருந்தவம் புரித னோக்கி
யாய்பிழித் திவலை தூற்றி
விரிந்தசெங் கமலப் புத்தேள்
விண்ணவ ரோடு மெய்தித்
திருந்தநீர் விழைந்த யாவுந்
தருகுவன் செப்பு கென்ன
பொருந்தலர்க் கடந்த சீற்றத்
தாருகன் புதல்வர் சொல்வார் (4)

விண்ணிடைப் பறக்கு மூன்று
வியனக ருலவா வெற்றி
யெண்ணறு மாயு ளெய்தி
யூறுபட் டழியா யாக்கைத்
தண்ணறுந் துளவோ னாதி
யமரர்வெஞ் சமரி னேற்றெங்
கண்ணெதிர்ப் படிறு மஞ்சுங்
கடுந்திற லருள்க வென்றான் (5).

ஆங்கவை யனைத்துந் தந்தே
மாயிரம் பருவஞ் செல்லிற்
*றாங்குறும் மெயில்கண் மூன்று
மொருவயிற் றெருகுமஞ் ஞான்றின்
வாங்குவிற் பகழி யொன்றான்
மாய்த்திடின் மாய்வ தல்லாற்
றீங்குறு வென்ன வோதித்
திசைமுகன் மறைந்து போனான் (6)

தேசுறு செம்பொன் வெள்ளி
யிரும்பினிற் றிசைக டோறும்
யோசனை நூறு கொண்ட
தோரொரு நகர மாகக்
காசுகண் படுத்து வெய்ய
கவின்வளர் மாட முற்று
மாசறு நகர மூன்று
மயனினி தியற்றி னானே (7)

பொன்னெயில் விளிம்பு முற்றும்
பொலிவுடை நகரந் தன்னிற்
கன்னவின் றோங்கு திண்டோட்
கதிர்முடித் தார காக்கன்

* றீங்குறு மெயில்கள் (பா. பே.)

மின்னகு பருதி யொள்வா
ளிந்திரன் வேளை கிட்டித்
தன்னடிப் பரவப் பைம்பொற்
றருவம ருலகின் வாழ்ந்தான் (8)

கண்ணகன் ஞாலத் துள்ளோர்
தொழுங்கம லாக்க னென்போ
னெண்ணலர் முற்று வெள்ளி
யிஞ்சிசூழ் நகரந் தன்னிற்
பண்ணவ ரியக்கர் நாகர்
விஞ்சையர் பருதி யொள்வாள்
விண்ணவர் பணிந்து போற்ற
விசும்பிடை யிருந்து வாழ்ந்தான் (9)

மருப்புடைக் களிற்றே ரெட்டும்
வயிரவாட் படையி னோனும்
வெருக்கொளக் கடைக்கண் சேக்கும்
விறல்கெழு வித்துன் மாலி
யருப்பமென் முலையா ரோடு
மகனில வளாகந் தன்னி
லிருப்பெயி லுடுத்த வெய்ய
காவயி லிருந்து வாழ்ந்தான் (10)

இந்திரன் முதல தேவ
ரினிதினி னேவல் கேட்ப
வந்தலில் புவனம் யாவும்
தனதடிப் படுத்தி நாகர்
வெந்திற லியக்கர் சித்தர்
வெருவொடுந் திறைக ணல்க
சந்திர மவுலி பாதம்
பழிச்சலாற் றருக்கின் வாழ்ந்தார் (11)

பங்கயத் தண்ணல் போலப்
படைப்பினும் படைப்பர் நேமிச்
செங்கண்மால் போல வன்பி
னளிப்பினு மளிப்பர் சீற்றத்
துங்கவெள் விடையி னோன்போற்
றுடைப்பினுந் துடைப்ப ரிந்த
வங்கண்மா லுலக மியாவு
மாங்கவர் நினைப்பின் மாதோ (12)

ஆயிர கோடி வெள்ளக்
களிறவற் றிரட்டி பாய்மாப்
பாய்மதப் புரவித் திண்டேர்ப்
பத்தரைக் கச்ச மாகுங்
காயெரி கவிழ்க்குஞ் செங்கட்
கதழ்சினத் தவுணர் வெள்ள
மாயிரு ஞாலத் துள்ள
கணிதரால் வகுக்கொ ணாதால் (13)

இரணிய னிரணி யாக்கன்
சூரனந் தகனென் றேது
முரண்மிகு மசுர ரின்னோ
ருயிர்ப்பிரின் மொத்துண் டந்துண்
சருகெனப் பறப்ப ரென்னிற்
றழலுமிழ் தறுகட் சீற்றத்
தருவரைத் தோளி னார்கட்
கியாவரை யிணைக்க லாமே (14)

இருநிதி சுரபி சிந்தா
மணிவியன் றருக்கள் யாவும்
பரவிநின் றேவல் கேட்பப்
பண்ணவர் பணிந்து போற்ற

வருவினை விஞ்சை வல்ல
மயனொடு மன்பு பூண்டு
பொருவரு மவுண ரெல்லா
வுலகமும் புரக்கு நாளின் (15)

கொன்படு பருதி வைவே
லவுணர் தங்கொடுமைக் கஞ்சிப்
பொன்பிற ழுலகங் காக்கும்
புரந்தர னியக்கர் விண்ணோர்
தென்புலங் காக்குங் கூற்ற
முதலிய தேவர் சித்தர்
மன்பதைத் தொகுதி யோடும்
வைகுந்த நகரிற் சேர்ந்தார் (16)

மடலவிழ் கமலப் போதிற்
கடவுளை வயிறு வாய்த்த
வடிகள்வெம் புரங்கள் மூன்றின்
வாழ்வுறு மவுணர் தம்மா
லிடைமகன் கொன்ற வின்னு
மரமென விடைந்து நாளும்
உடன்மெலிந் தாவி தேய்ந்தே
முய்யுமா றருள்க வென்றார் (17)

சிலையிடைச் சுடுபொன் னேய்க்குஞ்
செழுமலர்க் கொன்றை சூடும்
பவளவார் சடையோன் பூசை
பண்ணிமேம் பட்டு வாழும்
அவுணரை யெம்ம னோரா
லடர்க்குமா றரிய தென்னப்
புவனமோ ரேழு முண்டப்
புண்ணிய மூர்த்தி சொன்னான் (18)

ஐயநீ யிது கூறி
    னடுதொழி லவுணர்க் காற்றி
*யுய்நினி யிருந்த லொல்லோ
    மென்றுவா னவர்க ளோதச்
செய்யதா மரைக்கண் மாயன்
    றேவர்க ளோடு மேகி
மைதவழ் மேரு வெற்பின்
    வடபுல மதனிற் சார்ந்தான் (19)

மையணி மிடற்றுப் புத்தேள்
    மலரடி மனத்தி னெண்ணி
வெய்யதோர் வேள்வி தன்னை
    யாற்றவெந் தழலி னூடு
செய்யகட் குறுந்தாட் பூத
    மளப்பில திரண்டு தோன்றி
ஐயநீ யழைத்த தென்னை
    யுரைத்தியென் றறைத லோடும் (20)

முப்புரத் திருந்து வாழு
    மவுணரை முதலி னோடுந்
தப்பற முருக்கி யீங்கு
    வருகென மாயன் சாற்றக்
கப்பண முசுண்டி யொள்வாள்
    கனலுமிழ் சூலந் தாங்கி
யப்புறத் தண்டத் தோரு
    மஞ்சவார்த் தெழுந்த தன்றே (21)

எறும்வலிப் பூதம் பாரின்
    விசும்பினிற் றுறக்கத் தெய்திக்
குறுகலர் தம்மை யேற்றுக்
    கொடுஞ்சமம் புரிய வாற்ரு

* உய்தின திருந்த லொலோம் (பா. பே.)

தறைகழ லவுணர்க் கஞ்சி
வெருக்கொடுத் தோடி யம்பொற்
சிறையுடைக் கலுழப் பாகன்
சேவடி யடைந்த வன்றே (22)

அண்டகோ டிகளுந் தத்தங்
குடங்கையி னள்ளி யள்ளி
யுண்டிட வேண்டு மெண்ணி
ஞெருங்குவாய் மடுக்கும் வெய்ய
திண்டிறற் பூதம் யாவு
முடைந்தவா லவுணர் சேர்ந்து
மண்டுவெஞ் சமத்தி னெய்தி
யாவரே மலைய வல்லார் (23)

என்றுதன் றுளத்தி னெண்ணி
முகுந்தனிந் திரனை நோக்கித்
துன்றிய வவுண ரீசன்
றுணையடி யேத்தா வண்ண
மன்றவெம் மாயை தன்னான்
மயக்கியுள் ளறிவு நீக்கிப்
பொன்றவழ் சடையோன் றன்னால்
பொன்றுவித் திடுதல் வேண்டும் (24)

ஈங்கிவை பாணி யாம
லியற்றிடே மென்னி லென்னைப்
பூங்கம லத்தி னோனை
முதலபுத் தேளிர் தம்மைத்
தீங்குறக் கொல்வ ரென்னாச்
செங்கண்மா லினிது கூறி
யாங்கணோர் மாயை தன்னா
லருகர்தம் முருவங் கொண்டான் (25)

சாக்கிய ருருவின் மாய
　　ஞங்கவர் புரத்திற் சார்ந்து
கோக்களிற் றுரிவை போர்த்த
　　கொன்றைவே ணியன்மே லன்பு
நீக்கிய வவுணர் தம்மை
　　நிகழ்த்துபுன் சமயந் தன்னி
லாக்கிநல் லிலிங்க பூசை
　　யறிவொடு மகற்றி ஞனே (26)

ஆங்கண்மா ஞக்க ரோடு
　　நாரத னணுகி யன்பிற்
கோங்குறழ் முலையாள் பங்கன்
　　பூசனைக் குறித்தி டாமற்
றீங்கினைச் செய்யா நிற்குஞ்
　　சமயத்திற் சென்று நாளும்
வாங்குவி லவுணர் நெஞ்ச
　　மருண்டிட மாயை செய்தான் (27)

## வேறு

உலகம் பொதிந்த செங்கனிவா
　　யுரவோன் மாயைச் சிமிழ்ப்பெய்தி
யிலகு மதிதாழ் செஞ்சடையெம்
　　பெருமான் பாத மேத்தாம
லலகி லவுணர் கொலைகளவு
　　கள்ளுண் டயர்த லயன்மனையாள்
கலவி நயத்தல் மனக்கொண்டு
　　நெஞ்ச மயங்கிக் களிப்புற்ருர் (28)

அன்ன காலை யாழ்முனியு
　　மலகை முலைப்பா லயின்ருேனும்
வென்வேல் வயிரப் படைசுமந்த
　　விண்ணேன் முதலாந் தேவரொடும்

பொன்னங் கிரியின் வனப்பழித்த
பொம்மன் முலைச்செங் கனித்துவர்வாய்
கன்னற் குதலை யிடப்பாகன்
கயிலைக் கிரியின் வந்தடைந்தார் (29)

தூண்குற் கொண்ட பெருமடங்கல்
முதல தேவர் தொழுதேத்திப்
பாண்சேர் குதலை யுமைபாகன்
பாத மெமது கண்களிப்பக்
காண்பான் புகுந்த மெம்வரவுக்
கருணைக் கடலுக் குரைத்தியெனச்
சேண்டோய் மவுலி நந்திமுன்போய்
முகம னோடுஞ் செப்பினரால் (30)

ஆலங் கொழிக்கு மாயிரவா
யமளித் துயில்வோன் முதற்றேவர்
சால வருந்த லொழிவீர்நுந்
தரியா ராகு முப்புரத்தோர்
சீலந் திரிந்து புன்சமயஞ்
சேர்ந்தா ரென்னத் தெளிகுற்றேன்
கால மணித்தா கியதவர்கட்
கென்று நந்தி கட்டுரைத்தான் (31)

கங்கை மாலைச் சடைக்கடவுட்
குமது வரவு கட்டுரைத்து
மங்கை பாக னருள்பெற்று
மீளுங் காறு மணிவாயில்
தங்கி யுறைமி னெவோதி
நந்தி தவள நீறணிந்த
செங்கட் பவளக் குன்றனைய
செல்வ னவையிற் புகுந்தனனால் (32)

சுடுபொன் விழுது விட்டனைய
சடையோன் பாதந் தொழுதேத்தி
மடவா ளரவி னறிதுயில்கூர்
தேவன் முதல பண்ணவர்கள்
அடல்கூர் வெய்ய முப்புரத்தோர்க்
காற்று ராகி யையவுன்றன்
கடைவா யடைந்திங் களப்பின
ஞறைந்தா ரென்னக் கட்டுரைத்தான் (33)

நந்தி யுரைத்த வுரைகேட்டு
நகைவெண் டிங்கட் கண்ணிபுனை
யெந்தை தடந்தேர் வரிசிலைகொண்
டெய்த வமரர்க் குரைத்தியெனச்
செந்தா மரைப்பொற் றுள்வணங்கி
மீள்வோன் முகத்தின் செல்விகுறித்
துய்ந்தே மென்னத் திருநெடுமால்
முதல தேவ ருவப்புற்றார் (34)

எழுந்தார் சனகன் முதன்முனிவ
ரிதய மலரி லிடையெண்ணித்
தொழுஞ்சே வடியைத் தமதுதலைக்
கொண்டார் பழிச்சித் துள்ளினர்
விழுந்தார் நந்தி யடிமலரின்
மீட்டு மீட்டு மவுணருயிர்
கழிந்தா ரென்னுந் தேவரொடு
சிலாதன் புதல்வன் கட்டுரைத்தான் (35)

அய்யற் கிசைந்த மணித்தேரு
மம்பொற் சிலையும் வடிக்கணையும்
வய்ய மளந்தோன் முதற்றேவர்
*கொணர்மி னென்ன மகிழ்ந்தேகிச்

* கொணர்மி னெனலு மகிழ்ந்தேத்திச் (பா. பே.)

செய்ய கமலத் தடங்கண்ணன்
*றேவரோடு விரைந் தேகித்
தய்யல் பாக னேறுதற்குத்
தடந்தே ரியற்றத் தொடங்கினர் (36)

கங்குல் பருகி வெயிற்கதிர்கள்
கக்குங் கதிரோ ரீராறுந்
திங்க ளோடு முயர்தடந்தேர்ச்
சில்லி யாக விருத்துக்க
ளங்க ணிலகுஞ் சந்திகளாய்
விசும்பா சனமா யத்தவரை
துங்க வுதய வரைகூம்பாய்த்
துகடீ ரிமயங் கொடிஞ்சியாய் (37)

காட்டை முகுர்த்தங் கணமிலவ
மச்சாய்க் கணக்கில் நதிநதங்க
ளிட்டு கொடியா யுடுக்கணங்கள்
விதானமாக விருந்து றக்கம்
வாட்ட மறுசீர் மேல்விரியாய்
மகங்கள் கிடுகாய் நாட்பக்க
மீட்டும் வருடங் கடுப்பாகப்
பூத மியன்ற வலியாக (38)

நேமி வரையு மந்தரமு
நிகழ்த்து மீள தண்டமாய்த்
தாம வரைகண்டு களாய்த்
தரங்கக் கடல்க ளோரேழுந்
தூமம் புரையு மெழினிகளாய்த்
துலங்கு ஞான விந்தியங்கள்
காமம் வெகுளி மயக்கமிவை
கலன்க ளாகக் கலமுளையாய் (39)

* தேவ ரோடும் விரைந்து. (பா. பே.)

மனமாங் கார மவ்வியத்தம்
வழங்கும் வண்டி யோர்மாய
நினைதற் கரிய தத்துவங்க
ளனைத்து நிகழ்த்துங் குழிசியாய்ப்
புனையா வேத மொருநான்கும்
புரவி யாகப் புராணங்கள்
வனையு மங்கஞ் சாத்திரங்கள்
மனுநூ லிவைகள் மணியாக (40)

சத்த மருத்துக் களும்படியாய்த்
தணப்பில் வையம் வையமா
முத்த முரிஞ்சு முகிழ்முலைய
கங்கை யதிதி முதலாயப்
பைத்த பாம்பி னகலல்குற்
றெய்வ மகளிர் பரிவினெடுந்
தத்தங் கையிற் சாந்தாற்றிக்
கவரி யேந்துந் தரத்தினராய் (41)

உலகம் பூத்த மறைக்கிழவன்
பாக னாக வுயர்குடிலைக்
குலவு வேதப் பரிக்கடவு
முட்கோ லாகக் குளிர்விசும்பில்
அலகி லமர ரெல்லோரு
மம்பொற் சுணங்கார் பொம்மன்முலைக்
கலவ மஞ்ஞைப் பாகனுக்கு
கடிதிற் றடந்தே ரினிதமைத்தார் (42)

பொன்னங் குடுமி மேருவரைச்
சிலையாய்ச் சேடன் புரிநாணாய்க்
கன்னித் துளவத் திருநெடுமால்
கணையாய்த் தூவல் கடுவளியாய்

மின்னு கதிர்கா லல்குலகம்
விழுங்கும் பகுவாய் வெங்கூற்ருய்க்
கொன்னு துதிவெவ் வடவையொடுங்
கூடுங் காலக் கொடுந்தழலாய் (43)

கமலப் பொகுட்டு வட்டவணைக்
கடவு ளுவி லுறைவாணி
திமிர மேயும் பொலங்குடுமிச்
சிலையிற் ருக்கு மணியாக
விமையோர் யாரு மினிதுமையா
வெறிவே லுண்க ணீலமல
ருமையாள் கணவ னினிதுறையுங்
கயிலை மலையி னுய்த்தனரால் (44)

சிறகர் வண்டு துதைந்தாடுஞ்
செழும்பூந் தாமங் கண்படுக்கு
நறவங் கோதை யயிராணி
நயக்குந் தேவர் முதலமரர்
பிறைவெண் டாமம் புனைசடில
நந்தி பிறங்கு கழல்போற்றி
யிறைவர்க் கெமது செயலனைத்து
மியம்பு கென்ன விரைந்துரைத்தார் (45)

விண்ணோர் மொழிகேட் டருள்நந்தி
யவையி னெய்தி விமலனிரு
தண்ணுர் கமலப் பதம்போற்றிப்
புகுந்த வாறு சாற்றுதலு
மண்ணுந் தெழுந்த முலையுமையாள்
பங்க னமரர்த் தருதியெனத்
துண்ணென் றேகி விண்ணோரைத்
தோகை பாகன் முன்னுய்த்தான் (46)

---

* சிலையிற்றாங்குமணி (பா. பே.)

ஞாலம் பூத்த தனிமுளரி
நாரா யணனே முதற்றேவர்
ஆல மயின்றோ னருள்போற்றி
யடியே யிடர்தீர்த் தருள்கென்னக்
கால கால னவைநேர்ந்து
கமலப் புத்தே டோனுன்றி
மாலோன் முதல தேவரொடு
மணிதாழ் வாயிற் புறத்தணைந்தான் (47)

பானு கம்ப னுயிரம்வாய்
தோறும் பணில மெடுத்தூத
வானஞ் செவிடு படவாணன்
மயிர்க்கண் முழவந் தனிதாக்கக்
கானம் பயிலுந் தும்புருவுங்
கலைநா ரதனும் பாட்டயரக்
கூனற் பிறைதாழ் சடைக்கடவுள்
கொடிஞ்சி மான்றேர் கடிதிவர்ந்தான் (48)

எழில்கண் படுக்கும் பொம்மன்முலை
யிந்தி ராணி முதலாய
மழைமா னேக்கி னரமகளி
ரடியீ டேத்தின் வாழ்த்தெடுப்பக்
குழைமென் னடந்து குமிழ்மறியுங்
கொழுங்கட் கயிலை தொழவுலக
முழுது மீன்று டந்தேரின்
முக்கட் பெருமா னெடுமிவர்ந்தாள் (49)

அய்யன் மான்றே ரேறுதலு
மச்சு முறிய வெருவெய்திச்
செய்ய கமலப் பொகுட்டுறைவோன்
வேழ முகன்பூ சனைசெய்யா

நொய்தின் முறிந்த வச்சியற்றி
　　நொறில்வெம் பரித்தேர் மீதேறிக்
கையின் முட்கோல் பற்றிநனி
　　கறங்கு மணித்தேர் கடாஅயினான் (50)

மூன்று கோடி தலையிட்ட
　　முப்பா னமரர் சூழ்போத
நான்ற வருவி யொடுங்கயிலை
　　நடந்த தென்ன முன்செல்லுங்
கான்று கரட மதமொழுகு
　　மயிரா வணத்தி னுயிரங்கட்
டோன்ற லேறிப் பிறைமுடித்த
　　தொல்லோற் றொழுது முன்சென்றான் (51)

பறவைக் குன்றுந் தாருகனு
　　முருவ வடிவேற் பணிகொண்ட
நறவூற் றிருக்கு முருள்பசுந்தார்க்
　　குமர னுலா யிரம்வெள்ள
மறவெங் கதிர்வேற் கணஞ்சூழ
　　விமையாக் கருங்கண் வானோர்கைச்
சிறகர் மயிலின் மேற்கோடி
　　செங்கட் பருதியெனச் சென்றான் (52)

தழல்கட் பேழ்வா யெரிகுஞ்சி
　　வெய்ய குறுந்தாட் பூதகண
மெழுபத் தொண்ணு யிரம்வெள்ளஞ்
　　சூழ வெரிகட் பேரொலிமே
லழிவெம் மதத்த பிறைக்கோட்ட
　　வலைநீர்ப் பருகி யெதிர்வீசும்
புழைவெங் கரத்த வேழமுகன்
　　விண்ணோர் பரவப் போயினனால் (53)

அண்ட முகட்டின் முடியுரிஞ்ச
வம்பொற் றடந்தேர் திசையளப்பச்
சண்டன் மணிமான் விறனந்தி
சங்கு கன்னன் பிருங்கிவிறற்
கண்டா கனனன கோகன்னன்
கதிர்வே றிரிக்குமா காளன்
றிண்டா முண்டி பலகோடி
கணங்கள் சூழச் சென்றனரால் (54)

கொடிய வடவைத் தளிப்புயல்கா
லாலி யென்னக் குளிர்தூங்க
வடுவெஞ் சினத்த நுதற்கண்ணரி
னழன்று காலக் கனலொழுக
வடிவேற் றக்கன் மகமழித்து
*வாகை கொண்ட திறல்வீரன்
விடையூர்ந் தெண்ணு யிரகோடி
வெள்ளஞ் சூழ வெகுண்டெழுந்தான் (55)

இன்னோர் யாரும் புடைசூழப்
பூச நாளி னெம்பெருமான்
ஒன்னூர் புரத்தின் வெகுண்டெய்திப்
புரங்கண் மூன்று மொருங்கெய்தல்
முன்னி நோக்கி வடவரைவிற்
குழையா வுலக முழுதளந்த
மன்னு பகழி நாண்கொளுவித்
தடந்தோள் கழிய வாங்கினான் (56)

அந்தா மரையோன் முதற்றேவ
ரவுணர் புரங்க ளொருமூன்று
மெந்தா யகலிற் கோறலரி
தின்னே பகழி விடுத்தியெனச்

* வாகை கொண்டவிறல் (பா. பே.)

செந்தார்ப் பசிய கிள்ளைமொழிப்
பாகன் சிறிது நகைமுகிழ்ப்ப
வெந்தாங் கவுணர் புரமூன்றும்
விளிந்து சாம்ப ராயினவால் (57)

தண்ணாங் கமலப் பொகுட்டுறைவோ
னெந்தை கமலத் தாள்போற்றி
விண்ணோ ருள்ளம் வெள்காமற்
கோத்த பகழி விடுத்தியென
வண்ணா லுலக முழுதளந்த
வம்பொற் பகழி விடுத்திடலும்
நண்ணா ரவுணர் கிளையோடு
நாமற் றெழிய முருக்கியதே (58)

அய்யன் முகிழ்த்த குறுமூரற்
றிழலி னவி யழிந்ததனல்
வெய்ய வவுண ரெல்லோரும்
விண்ணோ ருலக மேவினர்
பையா டரவி னறிதுயில்கூர்
பைந்தார்த் துளவோன் முதற்றேவர்
தய்யல் பாக னடிபோற்றித்
தண்டிற் பணிந்தாங் கிவைசொல்வார் (59)

உய்ந்தே மடியே நினதடியிற்
பிரியா வரமீண் டுதவென்னத்
தந்தே மென்னக் கடவுளர்க்குத்
தத்தம் பதியின் விடைநல்கிக்
கந்தார் கரடக் கரியுரித்த
கரிய மிடற்றுக் காமாரி
*மந்தா கினிபோன் கொழித்தொழுகுங்
கயிலை வரையின் வந்தடைந்தான் (60)

---

* மந்தாகினி பொன் (பா. பே.)

இன்ன காதை படிக்கின்றோர்
கேட்டோ ரினிதி னெழுதினோர்
மன்று முலகந் தனிகாத்து
மகப்பே றெய்தி மிகவாழ்ந்து
பொன்னஞ் சிகரி கால்வளைத்துப்
புரமுன் றெரித்த புரிசடையெம்
முன்னோ னருளாற் கயிலைவரை
யடைவ ரென்ன மொழிந்தனனால் (61)

முப்பத்திரண்டாவது
திரிபுர தகன வத்தியாய முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 782

உ

## முப்பத்து மூன்றுவது
## சிவபூசைப் பலனுரைத்த வத்தியாயம்

விண்ணவர் தொழுகழன் மகபதியும்
வீணைநல் லிசைதெரி முனிவர னு
முண்மகிழ் வுறமழை முகில்பகருஞ்
சிவகதை தனிலொரு கதைபுகலென்
றெண்ணறு முனிவரர் மொழிகுதலு
*மெழுதரு மறைபயில் முனியடியி
னண்ணிய மனனொடு சூதனெனு
நவையறு முனிவர னறைகுவனால் (1)

ஆதியின் மனுவுய ருலகேழு
மருளொடு புரவுசெய் திடுநாளி
லேதமில் புகழுடை நரவாமம்
னெவ்வுல கமுமொரு குடைநீழற்

* மெழுதரு மறைபுகல்முனி (பா. பே.)

நீதற வறநெறி பிறழாமற்
றிசைதிசை யுயர்புகழ் சென்றேற
மேதக மகிழ்வொடு நனிகாவல்
மேவின னருளொடு முறைவேலை (2)

உருவினில் யாவரு நிகரொவ்வா
ரொருபதி னுயிர மடநல்லார்
வருமுலை தோள்வரை யிடைபுல்லா
மகிழ்வுறு நாளினி னிணையில்லார்
வரிமதர் வாள்விழி யொளிர்செவ்வா
யமிழ்துறழ் சாயலோர் மயிலன்னாள்
திருநல னுல்நர பதியில்வாழ்
தெரிவையர் யாரினும் நலனுற்றாள் (3)

ஆயசு தேவியெ னுங்கோதை
யாலநு கர்ந்த வரன்கோயில்
தூயன செய்து தினந்தோறுந்
தூய்மலர் சந்த நறுந்தூப
மேயின வன்பி னெடும்பேணி
யீர்மலர் மாலை புனைந்தீசன்
வாயி னறுந்துகள் கைநீவா
*மண்ணணி விரும்பினள் செய்நாளில் (4)

## வேறு

வெள்ளக் கமல விதழருந்தி
மலர்ப்பூங் கொட்டை வாய்குதட்டிக்
கள்வா யொழுக மோட்டெருமை
கழுநீர் கறித்துத் துயில்கூரு
மள்ளற் பழனப் பாஞ்சாலத்
தரசன் மனையாண் முகநோக்கித்
தெள்ளு மறைதேர் காலவப்பேர்
முனிவ னிதனைச் செப்புவான் (5)

---

* மன்னிவிரும்பினள் (பா. பே)

வளங்கொ ளுலகம் பொதுநீக்கி
யொருகோ லோச்சும் வாள்வேந்த
னுலங்கொள் மாதர் தமிழ்சிறந்தீங்
குயிர்போ லொழுகு மொண்ணுதலாய்
துளங்கு மதியஞ் சடைக்கணிந்த
தூயோன் கோயி லுள்ளும்
விளங்கத் துடைத்து மெழுக்கெறிந்து
மெலிவ தென்கொல் விளம்பென்றான் (6)

மறையோர் நான்கு மயக்கமொடு
வழங்குஞ் செந்நா முனிகேட்டி
முறையா லுன்றன் சிற்றடிச்சி
முன்னைப் பவத்தி லானுகருஞ்
சிறைய வெருவைப் பெடையுயர்ந்த
செம்பொற் குடுமிக் கிட்கிந்தை
யுறையு மீசற் கேற்றடிசி
லுண்பா னெண்ணிச் சென்றனனால் (7)

செல்லு மேல்வைப் பூசைபுரி
மறையோ னெய்தச் சிந்தைவெரீஇ
வல்லே யெழுந்து வலமாகப்
பறக்கு மெனது சிறைவளியா
லொல்லை யீசன் றிருமுன்னர்த்
துகள்போ யகன்ற துயர்பலத்தா
லெல்லா வுலகுந் தனிபுரக்கும்
வசுவின் மகளா யினிதுதித்தேன் (8)

முன்னைப் பவத்தி னறிவோடும்
பிறந்தேன் பருவ முதிர்ச்சிகண்டு
மின்னுக் கதிர்வே லென்றாதை
*மிடறு விடைத்த சூற்கமுகின்

* மிடறு மிடைந்த (பா. பே.)

கன்னித் தாற்றுக் குலைசிதறக்
கயவாய் வாளைக் கன்றுகளு
மன்னத் தடஞ்சூழ் பாஞ்சாலத்
தரசர்க் கென்னை யளித்தனனல் (9)

கொள்ளை வண்டு பாட்டயரக்
கொழுமென் போதி னறுந்தேறல்
வள்ளி யோரின் முகமலர்ந்து
பரிசி லளிக்கும் வண்கமலத்
தெள்ளா ரமுதத் திருவனைய
பதினா யிரம்பொற் றெரிவையரி
னுள்ள மென்மே லுறவேந்தன்
பன்னா ளுவப்பினெடும்வாழ்ந்தேன் (10)

தவளைப் பகுவாய்க் கிண்கிணிப்பொற்
*சலங்கை புலம்புந் தளர்நடைய
குவளைப் பைந்தார் முருகுறழுங்
குமரர்ப் பயந்து செம்மாந்து
கவளக் களிற்றை நிகரரச
னளப்பில் கருணைக் குறையுளா
யுவரிக் கடல்சூ ழுலகேத்த
வுலவாச் செல்வ மொடுமுயர்ந்தேன் (11)

வேறு

முற்படு பவத்தி னுணர்ந்திடா திழைத்த
நல்வினை மொழிவதற் கரிதாம்
பொற்பொடு மரசர் குலத்தினிற் றோன்றி
யரசரிற் புகுந்தளப் பரிய
வற்புடைச்செல்வம் பெறவளித் தனனா
லறிவொடு சினகரம் புதுக்கிப்
பற்பல மலர்கொண் டிறைஞ்சுவோர் பேற்றை
யாவரே பகர்ந்திட வல்லார் (12)

---

* சதங்கை புலம்பும் (பா. பே.)

என்றலு மறையோ னுளமகிழ்ந் தினிதி
னேந்திழை கேட்டியா ரேனு
மன்றநல்லி லிங்கத் தொருசரு கிடினு
மணிமுடி யவர்தலைக் கணியா
மன்றியு மிறைவ னஞ்செழுத் துணர்ந்தோன்
முத்தியி னடைகுதல் சரதம்
பொன்றிடும் போழ்திற் சிவசிவ வென்னிற்
புலையரு மடைவர்சா ரூபம் (13)

அறிவினு லேனு மருளினு லேனு
மருவிளை யாட்டினு லேனுங்
கிறியினு லேனும் வஞ்சகத் தேனுங்
கிளர்பொரு ணசையினு லேனு
மிறைவனல் லிலிங்க பூசனைசெய்தோ
ரெந்தைதன் பெயரினை நவின்றோர்
குறைவறு துறக்க மடைவது திண்ணங்
கொன்றைவே ணியன்றிரு வாணை (14)

சிவகதை நன்கிற் பயின்றுளோ ரினிதி
னுங்கதன் பொருடெரிந் துணர்ந்தோர்
நவையற வன்பிற் பாடினோ ரீச
னுயிர நாமத்தி னொருபே
ருவகையி னுரைத்தோர் தமையருங் கூற்றும்
வணங்கிடு நான்முக னுவக்குங்
குவலய மவராற் புனிதமா மன்னோர்
கொன்றைவே ணியன்பத மடைவார் (15)

திங்களஞ் சடையோன் சினகரஞ் செய்தோர்
திருவிழா வினிதினி னமைத்தோர்
அங்கவன் றடந்தேர் பண்ணுவித் தோர்கள்
சாறயர் மறுகமைத் திட்டோர்

கொங்கவிழ் தருவி னீழலிற் பன்னாட்
குலிசன்வாழ்த் தெடுப்பவீற் றிருந்து
மங்கையோர் பாக னுலகினி லடைந்து
மலரடி நீழல்வீற் றிருப்பார் (16)

இன்னண மறைதேர் புரோகித னணங்கோ
டிசைத்தன னேகலுஞ் சுதேவி
மன்னவ னோடு மளப்பினாள் வாழ்ந்து
மைந்தனை மணிமுடி சூட்டி
யன்னமன் னவனைத் தணந்திடா தவனோ
டடையலர் புரங்கண்மூன் றெரியப்
பொன்னவிர் குடுமி நெடுவரை குழைத்தோ
னடிநிழல் புக்கன ரென்றான் (17)

முப்பத்து மூன்றாவது
சிவபூசைப் பலனுரைத் வத்தியாயம் முற்றிற்று
ஆகத்திரு விருத்தம் 799

---

உ

## முப்பத்திநான்காவது
## சிவன் றிருநாம மறியா துரைத்தோர் பலனுரைத்த வத்தியாயம்

---

ஈசனன் றுமை மென்றுதம் முளத்தி
னெண்ணிடா தாங்கவ னுமம்
பேசினா ரேனு முயர்கதி யடைவ
ரென்றனைப் பேருல கத்தின்
மாசற விவ்வா றுரைத்துநற் கதியின்
மருவினோர் காதையை யுரைக்கென்
றாசறு முனிவர் கூறலுஞ் சூத
னகமகிழ்ந் தாங்கஃ துரைப்பான் (1)

பழுதற விளங்கு பற்மகற் பத்தின்
முதலுகந் தனிற்படர் சீர்த்தி
வழுதியர் குலத்தி னினிதினிற் றேன்று
மிந்திரத் துய்ம்மனன் மைந்தன்
றெழுதகு வென்றி முருகுழற் தோற்றத்
தோன்றல்சுத் துய்ம்மின னென்போ
னெழுபெருந் தீவுந் தனதடிப் படுத்தி
யிந்திர செல்வமுற் றிருந்தான் (2)

கல்லென வொலித்து வெண்டிரை புரட்டுங்
கங்கையாற் றகன்கரை மருங்கின்
மல்லலம் பிரதிட் டானமா நகரின்
வரிச்சிறைத் தும்பிபாட் டயரு
மெல்லிதழ்க் கொன்றை வேணியோர்ப் பழிச்சி
வேந்தனுங் குறைதரு நாளிற்
றெல்புகழ் திரண விந்துவென் றுரைக்குந்
தோமறு முனிவன்வந் தடைந்தான் (3)

நானநெய் விளக்க நறும்புகை யடிசி
ளுண்மலர் வரன்முறை யேந்திக்
கானமர் கடுக்கை புனைதரு வேணிக்
கடவுடன் பூசனை யாற்றி
மோனமா முனிவர்ப் பணிந்துநீ யீண்டு
புகுந்தமை மொழிதியென் றுரைப்ப
மானவே லிறைநீ முற்பவத் துணர்வி
னுதித்தவை கேட்பவந் தனனால் (4)

என்னலு முனிவன் றளிணை வணங்கி
யெறிதிரைக் கங்கையந் துறையுங்
கன்னியும் புரந்து மேருமால் வரையிற்
கயற்கொடி பொறித்துல களிக்கு

மன்னவர் திலக னெனதுமுற் பவத்தின்
வரன்முறை யினிதுகேட் டென்னத்
தன்னமர் கரத்திற் செய்யவாய் புதைத்துத்
தணப்பில்பே ரன்பொடுஞ் சாற்றும் (5)

பின்னர்வெண் டிரையிற் றுகிற்கொடி வரன்றிப்
பெய்மலர்ப் பூம்பொழில் சாடிக்
கன்னியங் கதலிக் கூன்புறப் பசுங்காய்க்
கவிழ்குலைக் கையரிக் கொண்டு
செங்நெலம் பழன வேலிசாய்த் தொழுகிச்
சிறந்தகோ தாவிரிக் கரையின்
மன்னுமுற் பவத்தி னெயினர்தம் பதியா
யாறலை வாழ்க்கையின் வதிந்தேன் (6)

ஆற்றெதிர் படுநர் பொருளிலா ரேனு
மவருடல் கழுகுதொட் டருந்த
வேற்றெதிர் துணித்தும் வம்பலர் கையி
னிருநிதி யளப்பில கவர்ந்துங்
கூற்றினுங் கொடிய னிவனென வுலகங்
கூறநாள் பற்பல கழிப்பின்
மாற்றருங் கிழவுத் தன்மைவந் தெய்த
மறலியூர் கடிதினிற் புகுந்தேன் (7)

தூதுவர் கொடுபோய் மறலிமுன் னென்னை
விடுத்தலு மாங்கவன் றனைவிற்
றீதுதீர் கேள்வித் துறைபடிந் துயர்ந்த
சித்திர குத்தரை நோக்கி
மாதவர் முனிவர் வரவுகண் டென்ன
வீங்கிவன் மேன்மன மகிழ்ந்த
தியாதிவன் செய்த நல்வினை யெனலு
மிருகரங் கூப்பின ரிசைப்பார் (8)

ஆறலை கள்வர் தம்மொடு மிவன்போ
யரகரப் பிறகர வென்னுச்
சீறியாங் குரைத்த மொழியினை தீற்றி
னரனெனும் பெயர்சிவ னரியதா
லேறிய பாவ மிவனைவிட் டகன்ற
தென்னலு மெந்தைபேர் நாளுங்
கூறிய வாற்றாற் கடவுண்மற் றிவனென்
றென்னைவெங் கூற்றுவன் பணிந்தான் (9)

உருப்பசி யரம்பை திலோத்தமை முதலா
மோடரி பரந்தவாட் டடங்கட்
கருப்புரச் செவ்வா யரம்பைய ரமர்ந்த
கதிர்மணி குயின்றொளி விரிக்குந்
திருத்தகு விமான மவ்வுழிக் கொணர்ந்து
தேவதூ துவரெனை யழைப்ப
வருத்தியின் மறலி பணிதலைக் கொண்டு
விமானமூர்ந் தமருல கடைந்தேன் (10)

உறங்கலா தின்பந் துய்த்திடு முலகி
னொருபதி னாயிரம் பருவம்
நறுங்குற டுரிஞ்சாத் தெய்வமென் சாந்த
நகைமண முலைமுகங் கோட்டி
யறைந்துவண் டிமிராக் கற்பக மாலை
யறல்புரை கருங்குழல் வேய்ந்து
மறங்கொள்வேற் றடங்க ணரம்பையர் முகிழ்த்த
வாணகை விருந்தயின் றிருந்தேன் (11)

தாமரைக் கிழவ னுலகிலோர் கற்பந்
தகைபெற விருந்தபின் விண்ணோர்
கோமகன் மவுலி யுழிபட் டொழியக்
கொழுங்கதிர் மணிக்கொடி பணித்த

நாமவேல் வழுதி தன்குலத் துதித்த
விந்திரத் துய்ம்மின னென்னும்
பூமக டலைவன் செய்தவப் பேற்றுற்
புதல்வனு யீங்குவந் துதித்தேன் (12)

ஏய்வுற மனத்தி னெண்ணுரு தொருபே
ரியம்பிய பலமிவை யென்னிற்
பாய்புலிப் போத்தி னீருரி புனைந்த
பனிமதிக் கண்ணியெம் பெருமான்
ஆயிரம் பெயரு *மறிந்திசைக் குநர்பே
றென்கொலா மெனமனத் தெண்ணி
மாயிரும் புவியி னிலிங்கமற் றெவையும்
வரன்முறை வழிபடா நின்றேன் (13)

என்றலுந் திரண விந்துமா முனிவ
னிறைமகன் பேரறி வதனை
நன்றுநன் றென்ன வியந்துமெய் தழுவி
நற்றவச் சாலையி னடைந்தான்
வென்றிவேல் வழுதிக் கதையினைக் கேட்டோர்
வியந்துளோர் படித்துளோர் யாருங்
கொன்றையஞ் சடையோன் சேவடிநீழல்
குறுகிவீற் றிருப்பரென் றுரைத்தான் (14)

முப்பத்தி னுன்காவது
சிவன் றிருநாம மறியா துரைத்தோர் பலனுரைத்த
வத்தியாயம்
ஆகத்திரு விருத்தம் 813

---

* உணர்ந்துரைக்குநர் (பா. பே.)

உ

# முப்பத்தி நைந்தவாது
# உபமன்னியுப் பேறுபெற்ற வத்தியாயம்

---

## கலி விருத்தம்.

ஓங்குபுக ழுபமன்னிய னென்னுந் திறலுரவோன்
றீங்கில்கதை யிசைநாரத னெடுதேவர்க டேவற்
காங்கண்ணெடு மால்கூறிய படியோதென வருளால்
வீங்கும்முனி வரர் கூறலு மெய்ச்சூத னுரைப்பான் (1)

அலகில்புகழ் புலிக்கான்முனி யருளோடினி தளித்த
உலகம்புக ழுபமன்னியு வென்னுமொரு சிறுவன்
மலமற்றுயர் தவமாற்றிய வசிட்டனுழைக் குறுகி
நலனுற்றுய ரான்பாலினை நன்கினுகர்ந் தனனால் (2)

அற்றைப்பக லொழியத்தவ முனிவனருள் சிறுவன்
முற்றத்தவ முறுதாதைத னகன்மாமனை முடுகி
நற்றாயொடு நுகர்போதினி னன்பாலருள் கெனலுங்
கற்றைக்குழ னென்மாநனி கரையாவினி தீந்தாள் (3)

பாலன்றிது வெனநின்றழு மைந்தன்றுயர் பாரா
வேலங்கமழ் குழலாளிரு கண்மாரி யிறைப்ப
மாலொன்றிய மனனோடுதன் வறுமைக்குள முருகி
யாலந்திகழ் கண்டன்றிரு வருளெண்ணி யிருந்தாள் (4)

யாயுந்தவ முறுதந்தையும் யானின்றுற வழவுந்
தாய்தாகிய பாறந்தில ரென்னத்துயர் சிறுவன்
பாயுந்திறல் விடையோனனி பயிலாலய மருவி
நேயங்கலுழ் வதுபோன்மலர் விழிநீருக நின்றான் (5)

பாலுக்கழு சிறுவன்றுயர் பாராமகிழ் வோடு
மாலைப்பிறை பவளப்புரி சடைமீதணி வள்ள
லாலிற்றுயில் நெடுமாலுறை பாலாழியை யருளால்
வேலைக்கட லகன்ஞாலம் வியப்பெய்த வளித்தான் (6)

தன்முன்றிலி னிடையெய்திய பாலாழி தனைக்கண்
டென்னன்பி னிரங்காவிது தந்தானெனவி லீசன்
பன்னுந்தவ முனிவோர்குறை பகராதன வல்லான்
மன்னும்புரி சடை யண்ணல் வழங்காதவு முளவோ (7)

என்றென்று வியக்குந்தரு பாலாழியை யினிதி
னன்றென்று குடிக்குஞ்சிவ *ஞமம்பல நவிலும்
தன்றந்தை தவத்தின்செய லிதுவென்றடி தாழு
மொன்றும்புக ழுபமன்னியு வென்னுந்திற லுரவோன் (8)

பின்னுந்தவ முயல்வுற்றருள் பெறுவானுள மெண்ணித்
தன்னன்புறு தாய்தந்தைய ரருள்கொண்டு தவத்தோர்
மன்னுந்திர ளருவிப்புன லிமயாசல மருவி
யன்னம்பயி லீர்புக்குயர் தவமன்பொடு செய்தான் (9)

வேறு

பெட்பி னருமா தவம்புரியு
முனிவன் பிரம ரந்திரத்திற்
கொட்பி னெழுந்த புகைப்படலம்
விசும்பு புகைப்பக் குலிசன்மனந்
திட்ப மொருவா வெருவுற்றுச்
செங்கட் கரியோன் முன்னெய்தி
நட்பி னேடுந் தொழுதுமுனி
செய்தி யாவு நவின்றனனால் (10)

* நாமம்பல பகரும் (பா. பே.)

பிள்ளை வண்டு துயில்கூரப்
 பெடைவண் டோடு வரிச்சுரும்பர்
வள்ளை பாடு மகளிரென
 வரிப்பாட் டயர்ந்து தாலாட்டுங்
கள்ளார் கமல மயில்கேள்வன்
 றேவர் சூழக் கடிதேகி
நள்ளார் புரந்தி யெழுநகைக்கு
 நம்பற் றெழுதிங் கிவைபுகல்வான் (11)

தழைவேய் குறுந்தாட் சாலையுறை
 புலிக்கான் முனிவன் றருபுதல்வன்
விழைவ தென்னே புகைப்படலம்
 விசும்பு போர்ப்பச் சுடர்விரிக்கு
மழல்வாய் நாப்ப ணருந்தவமொன்
 ருற்று னின்று னெனலோடு
மழவே றுயர்த்தோன் வரையெறிந்த
 வயிரப் படையோ னுருவெடுத்தான் (12)

கயிலை நெடுமால் வரைநான்கு
 காலி னடந்தா லெனநடக்கு
மயிரா வணத்தின் மீதேறி
 யந்தீங் குதலை வேய்மென்றோண்
மயிலஞ் சாய லயிராணி
 வடிவி னுமையாண் மருங்குவரப்
புயல்வா னளக்கு முயர்குடுமி
 *பொங்கு மிமயப் பொருப்படைந்தான் (13)

மைந்த வுனது தவநோக்கி
 மகிழ்ந்தேம் விழைந்து கேட்டனகள்
சிந்தை யுவந்து தருதுமெனச்
 சிறுவன் சிறிது நகைகோட்டி

* யோங்கு மிமயம் (பா. பே.)

யெந்தை யடியார் வேட்டவர
நீயோ தருதி வெளிறியன்ற
புந்தி யுடையை யினிவாளா
போகி யென்னப் புகன்றனனால் (14)

ஐய மேற்றுச் சுடுகாட்டி
னமர்ந்தாங் கலகை யுடனடிக்குந்
தையல் பாகனொரு மூன்று
தலையிட் டுயர்முப் பதுகோடி
மையி லமரர் தொழுமென்னிற்
சிறந்தான் கொல்லோ மறைச்சிறுவ
வுய்ய வேண்டி *விழைந்தவரங்
கேட்டி யென்ன வுரைத்தனனால் (15)

ஆற்று மாயைப் புணர்ப்பதனா
லரக்கன் மகவா னுருவெய்திக்
கூற்றை யுதைத்த பெருமானை
யிகழ்ந்தா னிவனா ருயிர்குடித்துச்
சாற்றற் கருந்தீ மொழிகேட்டு
†மிறவா வெனையுந் தழற்படுத்தித்
தோற்றும் பாவந் துடைப்பனெனத்
துகடீர் முனிவன் றுணிந்தனனால் (16)

ஆற்ற லுடைய மறைச்சிறுவ
னகோராத் திரத்தை யுளத்தெண்ணி
நீற்றை யள்ளி யெறிந்துதனை
யழற்று ரணையி லின்றெரிப்ப
மாற்று மறைக ணவின்றிறைவ
னழற்று ரணையை மாற்றுதலுந்
தோற்று நந்தி முனிவிட்ட
வகோராத் திரத்தைத் தொலைத்திட்டான்(17)

---

* விழைந்ததுவாம் (பா. பே.)
† இறவா வெனையுந்தழற்படுத்தின் ஷை

அன்ன காலை முனிவனுளத்
தன்பு நோக்கி மகிழ்பூத்துத்
துன்று பருதி யொருகோடி
யெழுந்தா லென்னச் சுடரெறிப்பப்
பொன்னஞ் சடையு மைம்முகமும்
புயமீ ரைந்தும் வந்தெய்தத்
தன்ன துருவா யுமையோடுந்
தனிநா யகன்வந் தெதிர்நின்றான் (18)

கண்டா னுண்மைச் சுடர்க்கொழுந்தைக்
காண்ட லோடுங் களிநறவ
முண்டார் போலக் களிப்பெய்தி
யுவந்தா னிரண்டி னென்றானன்
விண்டான் பவத்தின் வாசனையும்
விட்டான் விடயம் தனிலொழுகல்
பண்டே தொடரா ணவமலத்தின்
பற்று மொழிந்து மகிழ்வுற்றான் (19)

மீட்டு மீட்டுந் தொழுதேத்து
வேத முனிவன் றனையுவந்து
தாட்டா மரையி னெழில்கவர்ந்த
தடக்கை மலரால் புறநீவி
யீட்டும் விழுச்சீர் நாரணற்கும்
வானோ ரிறைக்கு மேக்கறவும்
பூட்டுஞ் செல்வங் கணங்கடொழுந்
தலைமை யளித்துப் போயினான் (20)

இன்ன புலிக்கான் முனிமைந்தன்
காதை கேட்டோ ரெழுதினோர்
மன்னி யுரைத்தோர் நாடோறும்
படித்தோர் படிக்க மனம்வைத்தோர்

முன்னரி யிதனி ளேரெழுத்து
மொழிந்தோர் பவள வேணியன்றன்
பொன்னூர் கமலச் சேவடிக்கீ
ழுடைவ ரென்னப் புகன்றனனல் (21)

முப்பத்தைந்தாவது
உபமன்னியுப் பேறுபெற்ற வத்தியாய முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 834

---

உ

## முப்பத்தாருவது
## சலந்தரன் வதை யுரைத்த வத்தியாயம்

---

சலந்தர ஞுடல மீசன்
போழ்ந்ததுந் தயங்கு மாழி
வலம்புரி தரித்த செங்கை
மாயனுக் களித்த வாறும்
புலங்கொள மகவா ஞேடு
முனிக்குமால் புகன்ற வண்ண
நலங்கொண்மா தவத்தோர் கேட்ப
நவையறு சூதன் சொல்வான் (1)

சீர்கெழு மண்ட முற்றுந்
தெண்புனற் பெருக்கி ஞூடு
நீரிடை வெய்தாத் தோன்று
நெருப்பென விரிது தோன்றி
வார்கழ லவுண ரேத்துஞ்
சலந்தரன் வானோர் யாரும்
போர்முகத் துடைய வென்று
நான்முகன் பதத்திற் புக்கான் (2)

எறும்வலிப் பொருவு திண்டோட்
சலந்தர னிகலி னேற்ற
வெறிமலர்க் கமலப் புத்தேள்
வென்கொடுத் தோட வென்று
பொறியர வணையிற் றுஞ்சும்
புண்ணிய மூர்த்தி வைகு
மறிதிரைப் புரட்டு மந்தண்
பாற்கடன் மருங்கு புக்கான் (3)

புக்கவா ளவுண னேடும்
பூந்துழா யலங்கன் மார்பன்
செக்கர்வா னென்ன வன்னோ
ளீறந்திறந் துதிர மாரித்
தக்கவெம் பகழி தூண்டிக்
கார்முகக் கல்வி காட்டிப்
பக்கமும் விசும்பு மெங்கும்
பாய்கணை பரப்பி னானே (4)

விடுத்தவெம் பகழி யாவு
மவுணர்கோன் விழுங்கி நக்காங்
கடுத்துமா தவனைப் பற்ற
வணுகலு முள்ள மஞ்சிப்
பிடர்த்தலைப் பாதந் தாக்க
விரைவினிற் பெய்துற் றோடிக்
கடுத்திகழ் கண்டன் வாழுங்
கயிலையி னெய்தி னானே (5)

எய்திமுன் னிறைஞ்சி நின்ற
மாயனை யினிது புல்லி
வைதிகர்க் கன்றித் தோன்று
மழுவலா னஞ்ச லென்னக்

கைதலை மீது வைத்துக்
கருணைகூர்ந் திருக்கு மேல்வைப்
பைதலுற் றோடு மாலைப்
பற்றிமா லவுணன் சென்றான் (6)

மீயுயர் புவன மெல்லாம்
விழுங்கினும் விழுங்க வல்லார்
காயெரி கவிழ்க்குங் கண்ணர்
*காலனைக் கையிற் பற்றி
வாய்வழி குருதி கக்கக்
குத்திய வயிரத் தோளா
ராயிர கோடி வெள்ளந்
தானவ ரழன்று செல்ல (7)

விண்டுமுன் புவன முண்ட
வியப்பினைக் கேட்டு நக்காங்
கண்டகோ டிகளுந் தன்னோ
ரங்கையி னள்ளி யள்ளி
யுண்டுமீட் டுமிழ்ந்த வெற்றிச்
சலந்தர னுரப்பி யீசற்
கண்டுளங் கனன்று வெம்பி
யிங்கிவை கழற லுற்றான் (8)

அய்யமேற் றருந்தும் பித்த
கேட்டியான் பிறந்த வன்றே
செய்யதண் கமலத் தோனைப்
பிடித்துவெஞ் சிறையி னுய்த்தேன்
மய்யலங் களிறோ ரெட்டும்
வானவர் முதல்வ னோடேன்
கையினிற் பற்றி மற்றை
யண்டத்திற் காவல் செய்தேன் (9)

---

*காலினைக்கையிற் பற்றி (பா. பே,)

காய்சினத் தறுகட் புள்ளேற்
றரசொடுங் கரியோன் றன்னை
யோசனை நூற்றுக் கப்பால்
வீழ்தர வொல்லை பற்றி
விசிமுன் னெறிந்தேன் விண்ணோர்
மகளிரைப் பற்றி யென்றன்
முசியர் தம்மி னுய்த்தே
னென்னையார் தடுக்கற் பாலார் (10)

இலகுவா னெயிற்ற பேழ்வா
யிராவணன் முதலி னோரை
யுலகெலாம் வெருவி யோட
வொல்லையிற் சிறையி னுய்த்தேன்
மலர்தலை யுலகி னெய்தும்
வானதி யதனைத் தட்டேன்
புலவுநீர்க் கடல்க ளேழும்
*பொரும்புறக் கடலோ டுண்டேன் (11

அஞ்சன மிடற்றோய் வெய்ய
வழிமதக் களிறு வீழும்
வெஞ்சமத் துடைந்து போந்த
மாயனை விடுத்துன் னுவி
யுஞ்சுபோ குதியோ வன்றி
யுடற்றுவெஞ் சமரி னேற்றுத்
துஞ்சுதி கொல்லோ வென்னாத்
தோட்புடை கொட்டி யார்த்தான் (12)

திங்களங் கண்ணிப் புத்தேள்
நுதல்விழி திறப்ப வாங்க
ணங்கியப் பொறியொன் றெய்தி
யாயிர கோடி வெள்ளம்

* பொரும்புறகடலொன் றுண்டேன் (பா. பே.)

வெங்கண்வா ளவுணர் தம்மைச்
சாம்பராய் விளிய நூறப
பொங்குவெஞ் சீற்றத் துப்பி
னவுணர்கோன் போரி னேற்றான் (13)

ஏற்றிக லவுணன் றன்னை
யெம்பிரா னகைத்து நோக்கி
யாற்றலை யெனது வாளிக்
கெனவுரைத் தலங்கு செம்பொற்
காற்றலை விரலாற் கீறிக்
கடுப்பினோர் நேமி பண்ணித்
தோற்றுமீ தெடுக்கி லுன்னோ
டமர்செயத் துணிவ லென்றான் (14)

என்றலு மவுணர் கோமா
னிலங்குவா ளெயிறு தின்று
பொன்றவழ் திகிரிக் கூற்றை
வருந்தொடு மெடுத்துப் பொங்கித்
தன்றலை மீது வைப்பத்
தலைமுத லடியீ றாகக்
குன்றிரு கூறு செய்தா
லெனவுடல் குறைத்த தன்றே (15)

ஆங்கவ னுடலம் போழ்ந்த
வழலுமிழ் நேமிப் புத்தேள்
தீங்கற வீசன் கையிற்
சேர்தலு மவுணன் மெய்யில்
வீங்குநீர் வேலை யென்ன
வரத்தநீர் வெள்ளங் கோத்துத்
தாங்கரு முலகம் யாவுந்
*தரிப்பறப் பரந்த தன்றே (16)

* தணப்பறப் பரந்ததன்றே (பா. பே.)

வெண்ணிண மூளை நெய்த்தோர்
தசைவிழுக் குடர்கள் யாவு
மண்ணலோர் குண்டந் தன்னி
னமைத்து வான் பிலத்தினூடு
நண்ணரு மரக மாக
நாகர்வா ளியக்கர் சித்தர்
பண்ணவர் முதலோர் யாரும்
பனிமலர்த் தூவி யார்த்தார் (17)

சிறைபடு மலரோன் விண்ணோர்
வெந்துதிக் கயங்கள் நாகர்
முறையினிற் றத்தம் வாழ்க்கை
யடைந்தனர் முகுந்தன் முக்கட்
கறைமிடற் றண்ணல் செம்பொற்
கழலிணை யினிது போற்றி
மறையொரு நான்கும் போற்றும்
வைகுந்த மடைந்தா னன்றே (13)

முப்பத்தாறுவது
சலந்தரன்பட்ட வத்தியாய முற்றும்
ஆகத் திருவிருத்தம் 852

---

உ

## முப்பத்தேழாவது
## மாயோ னேமிபெற்ற வத்தியாயம்

---

சலந்தரன் கிளைக ளாய
வவுணருந் தறுகட் பேழ்வாய்
வலங்கெழு வயிரத் திண்டோ
ளரக்கரும் வந்து நந்தங்

குலங்கெட முருக்கு கின்ற
*வமரரைக் கோறு நாமென்
றிலங்கொளி விரிக்கு மாடத்
திந்திர நகரிற் சேந்தார் (1)

கூற்றென வுரறி யார்த்துக்
கொல்சினத் தவுணர் வெம்போ
ரேற்றமர் புரியு மேல்வை
யிந்திரன் முதல தேவ
ராற்றல ராகிநெஞ்ச மழிந்துவெங்
கொடுத்துப் போகி
மாற்றலர் தானை முற்று
வைகுந்த நகரிற் சேர்ந்தார் (2)

பாவடிப் பருமயானை
பரவமுன் வந்து காத்த
தேவர்க டேவ வெய்ய
தீத்தொழி லவுணர் தம்மா
லோவறு துயர முற்றே
முய்திறங் காணே மென்னத்
தாவரும் துதிகள் கூறி
வருந்தலுஞ் சாற்ற லுற்றார் (3)

இலங்குவெண் டிங்கட் கண்ணி
யெம்பிரான் வெகுண்டு முன்னஞ்
சலந்தர னுடலம் போழ்ந்த
சக்கரம் பெற்று யென்னில்
வலங்கெழு மவுணர் தம்மை
மாட்டுத லெளிதா மென்னுப்
புலன்களு மனனும் வேறாய்
விண்ணவர் புகன்று ரன்றே (4)

* கொன்று நாமென் (பா. பே.)

## வேறு

இமையாக் கருங்கண் மூலைதாங்கி
இடுகு மருங்கு லயிராணி
யமையார் தடந்தோ ணலநுகரு
மண்ணன் முதலா நமரங்காள்
உமையாள் கணவன் ருள்போற்றி
நேமி யடைந்தீங் குடற்றவுணர்
தமைமவே ரோடுந் தடிந்திடுவன்
றளரே லென்ன விடையளித்தான் (5)

தண்ணங் கமலத் திறையோடு
மூலகம் பூத்த தனியுந்தி
யண்ண லிமைய வரையெய்தி
யந்தண் சாரற் சினகரமொன்
றெண்ணற் கரிதா யினிதியற்றி
யெந்தை யிலிங்க மாங்கமைத்து
விண்ணோர் போற்றும் பாசுபத
விரதம் பூண்டு வழிபட்டான் (6)

மோட்டா னைந்தி னிலிதாட்டித்
தீப முருகார்ப் புகையடிசில்
வேட்டா தரவி னுடனேந்தி
விரைகொப் பளிக்குந் துழாய்மார்பன்
சூட்டா டரவ கங்கணத்தோன்
பேரா யிரநா டொறுந்துதித்து
தாட்டா மரையா யிரஞ்சாத்தித்
தயாவின் வழிபட் டிடுநாளின் (7)

வைய மளந்த சேவடியுங்
கண்ணு முகமும் வாய்மலருஞ்
செய்ய கரிய திருநெடுமா
லன்பு நோக்கத் தெறுசினத்த

வெய்ய மதவெங் களிறுரித்தோன்
விரைகொப் பளிக்கு நறவுயிர்க்கு
மய்ய கமல மாயிரத்தி
னொருபோ தறியா தகற்றினன் (8)

வெண்ணெய் கமழுஞ் செங்கனிவாய்
விமல னிமிலே றுயர்த்தருளு
மண்ணல் பேரா யிரமோதிப்
பொற்று ளிணையி னருச்சிக்குந்
தண்ணாங் கமல மாயிரத்தி
னொன்று காணு தளர்வெய்திக்
கண்ணொன் றுரைக்குஞ் செய்யமலர்க்
கமலம் பறித்துச் சாத்தினன் (9)

கடவுட் புள்ளே றுயர்த்தருளுங்
காயா மேனித் திருநெடுமா
லுடைய பேரன் பினைநோக்கி
யுள்ளத் துவகை மீதூர
வடைவின் வழிபா டினிதியற்று
மிலிங்கத் திடையா யிரகோடிச்
சுடராங் கெழுந்தா லெனவருட்கட்
டோகை பாகன் றேன்றினன் (10)

கான்ற விடவா ளரவணையிற்
றுயிலுங் காயா மலர்நிறத்தோன்
*மூன்று கண்ணு மெண்டோளுந்
தாங்கி முற்று மதிசூடித்
தோன்றுங் கங்கை வேணியனை
வளங்கொண் டிருதா டொழுதிறைஞ்சி
யான்ற வுவகை மீதூர
வருமா மறையி னேத்தினன் (11)

*சான்ற கண்ணும் (பா. பே.)

வையம் பொதிந்த செங்கனிவாய்
*மாலோ னன்புக் குண்மகிழ்வுற்
றையன் கையாற் புறநீவி
யடியிற் புனைந்த மலர்க்கண்ணு
மெய்த நல்கிச் சுதரிசன
மென்னுஞ் சுடரா ழியுமீந்து
செய்ய கமலக் கண்ணனெனும்
பெயருஞ் சிறப்பி னொடுமளித்தான் (12)

இன்னும் விழைந்த வரங்கேட்டி
யளிப்ப னென்ன விறைகூறக்
கன்னிப் படலைத் துழாயலங்க
லுடுத்த திணிதோட் கடல்வண்ண
னின்ன தடியி னெஞ்ஞான்று
நீங்காப் பேரன் பளித்தியென
வன்ன தளித்து விடையுயர்த்த
வமலன் மறைந்து போயினன் (13)

வடவைக் கவிழ்க்குஞ் சுடர்த்திகிரிப்
படையா லவுண ருயிர்வவ்விக்
கடவு ளயிரா வணப்பாக
னிழந்த வரசு கடிதருளி
யிடர்தீர்ந் துலக முழுதோங்க
வெறிதெண் டிரைநீர்ச் சிவப்பமுனஞ்
சுடர்கான் றெழுந்த கவுத்துவந்தாழ்
மார்பன் சுவேதத் தீவடைந்தான் (14)

மணிவா ருடுத்துச் செம்மாந்து
வளருங் கொம்மை முலைத்திருவிற்
கணியா ரகலங் கொடுத்தருளு
மண்ண னேமி பெற்றகதை

---

*மாயோ னன்புக்குளம் (பா. பே.)

தணியா வுவகை யொடுங்கற்றோர்
கேட்டோர் தமது தடங்கண்ணிற்
பிணியாங் கொழிந்து நனிவாழ்ந்து
மீளா முத்தி பெறுவரென்றான் (15)

முப்பத்தேழாவது
மாயோ னேமி பெற்ற வத்தியாயமுற்றும்
ஆகத் திருவிருத்தம் 867

---

உ

## முப்பத்தெட்டாவது
## சுவேதன் கூற்றினைக் கடந்த வத்தியாயம்

---

விழுத்தகு மகதி நல்லியாழ்
முனியொடும் விசும்பு காக்கு
முழுத்திறல் வயிர வொள்வாட்
புரந்தரன் கேட்ப முன்ன
மழைப்புய லனையான் சொன்ன
வண்புனற் றீர்த்த வண்மை
தொழத்தகு முனிவர் கேட்பச்
சூதமா முனிவன் சொல்வான் (1)

உலகினிற் றீர்த்தம் யாவு
முரைத்திடி னுலப்பின் றாகு
நிலவிய வவற்றிற் காதை
யுள்ளன நிகழ்த்த லுற்றேந்
தலமுழு தேத்த வோங்குஞ்
சத்தசாச் சுவமென் றோது
மலிபுனற் றீர்த்தந் தன்னின்
மங்கண சித்த னென்போன் (2)

தவத்தினிற் செம்மாந் தாடத்
தாணுவந் தாங்க ணெய்திப்
பவத்துய ரகற்று நீறு
கைவழி யொழுகப் பாடி
யுவப்பினே டாட னேக்கி
யாணவ மொருவிச் சித்தன்
குவட்டிள முலையாள் பங்கிற்
குழகனை வழுத்தல் செய்தான் (3)

வழுத்தினின் றினிதி னுடு
மங்கண சித்தன் கேட்பப்
பழிப்பில்மெய்ஞ் ஞானம் யாவும்
பகர்ந்திறை மறந்து போனுன்
தழைத்துயர் வளங்கூர் சத்த
சாச்சுவ தீர்த்தந் தன்னில்
விழுச்சிறப் புரைத்தே மீதி
லாடினோர் விண்ணோ ராவார் (4)

கோடிமா மறையோர் கண்டு
கொழுமலர் தூவி யேத்தக்
கோடிபே ருருவ மீசன்
கொண்டவண் வந்த வாற்று
லோடுநீர்த் தீர்த்தந் தன்னை
யுருத்திர கோடி யென்பர்
நாடொறு மதனிற் றேய்ந்தோர்
நான்முக னுலகின் வாழ்வார் (5)

தெண்டிரை புரட்டுங் காலாஞ்
சரமெனுந் தீர்த்த மாங்கொன்
றுண்டதி னுலகம் யாவு
*மொருகுடை நிழற்றி யாண்ட

*ஒருகுடை நிழற்ற வாண்ட (பா. பே.)

மண்டமர் கடந்த வென்வேற்
சுவேதனென் றுரைக்கு மன்னன்
றண்டலிற் றனது வாணா
டனக்குநா ளணித்தென் றெண்ணி (6)

*மணிமுடி தணந்து தூய
சடைமுடி புனைந்து மன்னன்
றுணிகதிர்த் திங்கட் கண்ணித்
தோன்றறன் பூசை யாற்றிப்
பணிதரு நாளிற் காலப்
பகுதியோர்ந் திணிதிற் கூனிறுங்
கணிதர்முன் சொன்ன வற்ற
மின்றெனக் கருத்தி னெண்ணி (7)

ஒன்னல ருதிர மாந்தி
யூன்சுவைத் தொளிறும் வேற்கை
மன்னவன் சுவேத னென்போன்
மதிவகிர்க் கண்ணி சூடு
முன்னவன் கமலப் பொற்றா
ளிணைந்துகண் முகிழ்த்துத் தூய்தாய்த்
தன்னைமற் றவனு யெண்ணித்
தாழ்ந்தன னிருக்கு மேல்வை (8)

படர்மருப் பெருமை யூர்ந்து
ஃபகிணத் தொய்யில் பூசு
மடல்கெழு சூல மேந்தி
வுருமென வதிர்ந்து பொங்கி
யுடல்சினத் தறுகட் பேழ்வா
யொள்ளெயி றிலங்க நக்குக்
கடல்விட மெழுந்த தென்னக்
கரியகூற் றடைந்த தன்றே (9)

* மணிமுடி துறந்து (பா. பே.)

பாற்றினஞ் சுழலும் வெய்ய
பருப்புடைத் தண்டஞ் சுற்றிக்
கூற்றெதிர்ந் திடவு நெஞ்சம்
வெருவல ஞகிக் கொன்றை
யூற்றிருந் தழிதேன் காலு
மொண்பிறைச் சடையோன் பாதம்
போற்றினுண் மலர்க டூவிப்
பூசனைப் புரிந்தா னன்றே (10)

தண்ணறுந் துளவோன் செய்ய
தாமரைப் பொகுட்டு மேலோன்
விண்ணவ ரியக்கர் சித்தர்
முனிவரர் விஞ்சை வேந்த
ரெண்ணில ரென்கைப் பாசத்
தாருயி ரிறந்தா ரென்னின்
*மண்ணுறை மனித னேவென்
பாசத்தை விலக்க வல்லான் (11)

என்னவெங் கூற்றஞ் சீறி
வருதலுஞ் சுவேத னென்று
மன்னனவ் விலிங்கந் தன்னை
மகிழ்வொடுந் தழுவிக் கொண்டு
பன்முறை சபதங் கூறிப்
பணிந்தறம் புரியா ரேனுந்
தன்னுடை யன்பர்ப் பேணுந்
தாணுவை வழிபட் டானே (12)

வழிபடு சுவேதன் முன்போய்
வாய்மடித் தெயிறு தின்று
கழிபுலால் கமழ நக்குக்
கண்ணிணை வடவை தூங்கப்

* மண்ணுறு மனிதனே (பா. பே.)

பழிபடு மொழிகள் கூறிப்
பாசமோர் கையி னேந்தி
யழலுமிழ் சூலஞ் சுற்றி
யழன்றுநின் றுரப்பி யார்த்தான் (13)

அங்கவ னார்த்த னோக்கிச்
சுவேதனன் பொழுக நின்று
சங்கர மகேச வீச
தாமரைக் கண்ணன் காணாப்
புங்கவ காமற் செற்றோய்
புராரிமுக் கண்ண தூய
மங்கையோர் பங்க வென்ன
மழுவலான் றோன்றி னானே (14)

ஆயிர மவுலி பொற்றோ
ளாயிர மலங்கற் றிண்டோ
ளாயிர மிலகு மேதி
யாயிரந் தாங்கி வெய்யோ
னாயிர மெழுந்த தென்ன
*வலர்கதிர் விரிந்து தோன்றி
யாயிர நாமத் தண்ண
லணிவிடை யிவர்ந்தா னன்றே (15)

மரகத வல்லி யென்ன
மங்கையோர் பங்கிற் றோன்ற
வரகர வென்று தேவ
ரணிமலர் தூவி யார்ப்ப
நரைவிடை கடிதி னூர்ந்து
நாமவேற் சுவேத னென்னும்
புரவல வஞ்ச லென்னாப்
புண்ணிய மூர்த்தி வந்தான் (16)

* வலர்கதிர் விரிந்து தோன்ற (பா. பே.)

ஏறணி மணிக ளார்ப்ப
நடவியே றுயர்த்த தோன்றல்
பாறுதாழ் சூலம் வெய்தாத்
திரிவித்து வருதல் பார்த்துத்
தாறுறுத் தெருமை யோட்டுந்
தடக்கையு முளமுஞ் சோர்ந்து
மாறுசெய் மறலி யாவி
மறிந்துகீழ் விழுந்தா னன்றே (17)

கூற்றுவ னுவி போகக்
கொன்றையஞ் சடிலத் தெந்தை
நீற்ருெளி பழுத்த மேனிச்
சுவேதனை நெடிது நோக்கி
மாற்றருங் கணங்கட் கெல்லா
நாதனுய் மவுலி சூட்டித்
தோற்றரு மளப்பில் செல்வத்
தொகுதியு மளித்தா னன்றே (18)

இலமலர்ச் செவ்வாய்க் கோதை
யீசனை யினிது நோக்கிக்
கொலைபுரி தொழிலி முன்னங்
கொடுத்தனை யதனு லின்னே
னலமிகு சுவேதற் கொல்வா
னடந்தமை பொறுத்து நம்ப
வுலைவிறு மறலிக் காவி
யுதவிட வேண்டு மென்ருள் (19)

மறலியை முனிந்தி லேன்யான்
மறிந்தனன் கொல்லோ வென்ன
விறைவனம் மறலிக் காவி
யினிதினி னளித்துப் போனுன்

கறைகெழு சூல வேற்கைக்
காலனுஞ் சுவேதற் போற்றித்
தெறுசினப் பகட்டி னேறித்
தென்புல மதனிற் புக்கான் (20)

இன்னநற் றீர்த்த துற்ற
காதையை யியம்பி னோருந்
துன்னிய மறலி பாசத்
துவக்கினிற் பிணிப்பு றுமற்
கன்னலங் குதலைப் பாகன்
கயிலையில் கணங்கட் கெல்லா
முன்னவ ராகி நாளு
மொய்ம்பொடும் வாழ்வ ரன்றே (21)

முப்பத்தெட்டாவது
சுவேதன் கூற்றினைக் கடந்த வத்தியாய முற்றும்
ஆகத் திருவிருத்தம் 888

---

உ

## முப்பத் தொன்பதாவது
## தீர்த்த மகிமை யுரைத்த வத்தியாயம்

---

குறைவறு பிரம தீர்த்தங்
குருக்கடூர்த் தங்கோ கன்ன
மறைபுகழ் சித்த வாச
மதுவனங் கன்னி கங்கை
கறையறு சோம தீர்த்தம்
விசுவதீர்த் தங்கா வேரி
நிறைபுனல் விரசை யாறு
மகாகாள நிகரில் வைகை (1)

கனகல தீர்த்தங் கோதா
விரிவயி தரணி காமர்
வினைகெட வொழுகுஞ் சித்திர
நதிதிகழ் வியாத தீர்த்தங்
கனைபுனற் பிருது துங்கங்
கவுசிகங் கனக நந்தை
நினைவரு தெசாச்சுவ மேத
மாதுங்க நிகரில் தீர்த்தம் (2)

சீர்கெழு சுவாமி தீர்த்தஞ்
சுழுமுனை தீர்த்தஞ் சிந்து
வேர்கெழு புண்ட ரீக
*மேகரானனங்குபோ துங்கம்
†பார்நனி புகழும் பஞ்ச
நதிதீர்த்தம் பாவ நாசம்
பேர்கொள்சொன் னவதி தீர்த்தம்
பிலக்காவ தான தீர்த்தம் (3)

மாதீர்த்தங் கால சற்பி
மானச வாவி தீர்த்தங்
கேதார மசுவ தீர்த்தங்
கிட்டிண வேணி யீசன்
பாதம்வைத் திடுமா காள
மொக்கிச பிரிட்டம் பண்பா
ரேதயில் தன்ம தீர்த்தம்
புருடைநீள் யமுனை தீர்த்தம் (4)

சந்திர தீர்த்தஞ் சாளக்
கிராமம்வா ருதியிற் சாரு
மந்தமி னதிந தங்க
ளருவிகள் வாவி யாவு

---

* மேகரானனங்கு போதுங்கம் (பா. பே.)
† பார்தனி புகழும் ஷை

நந்தலில் தீர்த்த மாகும்
நண்ணிமற் றிவற்றி ஞுடிற்
பந்தமில் துறக்க வீட்டிற்
பரிவொடு முறைவர் மாதோ (5)

புண்ணியத் தலங்கள் தூய
நதிநதம் புகலி லிங்கம்
நண்ணரும் வாவி யாவும்
நன்றறி புலவ ராஞே
ரண்ணலந் தீர்த்த மென்ப
ராங்கவை தம்மி லீசன்
றண்ணறுந் துளவோன் வைகுந்
தாருகா வனநன் ருமால் (6)

முப்பத்தொன்பதாவது
தீர்த்த மகிமை யுரைத்த வத்தியாய முற்றும்
ஆகத் திருவிருத்தம் 894

---

உ

## நாற்பதாவது
## சிவன் தாருகா வனத்திற் பலியிரந்த வத்தியாயம்

---

என்னலுஞ் சிறப்பு வாய்ந்த
தாருகா வனத்தி லீசன்
மன்னிமுன் ஊைய மேற்ற
காதைவா சவற்குத் தாய்தா
யின்னிசை முனிக்கு மாயோ
னிினிதினி னுரைத்த வண்ணம்
பன்னுதி யென்னச் சூதன்
பரிவொடு முரைக்க லுற்றான் (1)

கருமமே பலத்தை நல்குங்
கடவுள்வே றில்லை யென்று
மருவருஞ் சமயத் தெய்தி
மாதவர் முனிவர் யாரும்
பெருமய லுழத்தல் தீரப்
பெண்ணொரு பாகம் வைத்தோன்
மருமலி துளவி னோனை
மங்கையாய் வருதி யென்றான் (2)

**வேறு**

ஆடகப் பசும்பொன் னுலையிடை யுருக்கி
யாயிரக் காலமுற் புகுத்தி
யோடவைத் தென்ன மெய்யொளி யெறிப்ப
வொளிர்பொலன் குழைவெயி லெறிப்பச்
சேடமை பருதி வாண்முக மிலங்கச்
செவ்விசேர் தடம்புயஞ் சிறப்ப
வாடவ ரேனும் பெண்ணுரு விரும்பு
மழகுடை மார்பொளி சிறப்ப (3)

கண்வழுக் கெய்து மெழில்களிந் தொழுகக்
கடிஞையோர் கரத்தினி லேந்தி
மண்ணமை துடியோர் கரத்தினி லியக்கி
மணிமிடற் றிடையினுள் ளாளம்
பண்வர வெழுப்பிக் கனிவுறப் பாடிப்
படுமதக் களிறென நடந்து
தண்ணறுங் கடுக்கைத் துயல்வருஞ் சடையான்
தாருகா வனத்திடைச் சார்ந்தான் (4)

கூற்றினை வெய்ய கொலைத்தொழில் பயிற்றிக்
கூறரு மருந்தவக் குறும்பு
மாற்றிவேள் சமய முலகினி னிறுவி
வாளொடுந் தோமமைக் கொண்டு

சேற்றிதழ்க் கமல மலரிடைப் புறழுங்
செழுங்கய லெனக்குழை புரட்டும்
வேற்றடங் கண்கள் துறந்தமா தவரைக்
காமநோய்க் கடலிடை வீழ்ப்ப (5)

வெருவரு முலகத் திருளுல கடைந்து
வெயிற்குறும் பொன்றறப் பருகிக்
கருகிமைந் நூற்ற நூலென நீண்டு
*கடைகுழன றவுநெய்த் திருண்டு
முருகுகொப் பளிப்ப மூசிவண் டரற்று
மொய்ம்மலர் வேய்ந்துபைங் கூந்த
லுருவுகொண் டறவோ ருளத்துமால் காழ்கொண்
டொழுகிடக் கயிற்புறத் தொளிர (6)

**வேறு**

தமரக் கடல்சூழ் நிலவலயந்
தன்னிற் காம நூலொழிய
வமையுஞ் சமய மனைத்துமினி
யழியுந் தரும நூலாதி
நமரங் காளென் றறமாற்றி
நடப்பச் செவ்வி வழிந்தொழுகுங்
கமல முகத்திற் புன்மூரற்
கதிர்வெண் முத்த நிலவெறிப்ப (7)

**வேறு**

வெண்ணிலாக் கற்றை விளிம்புவிட் டெறிக்கு
மணிவடஞ் சுமந்தற வீங்கித்
தண்ணறுங் கலவைச் சேற்றினுள் ளலர்ந்த
தாமரை முகிழ்நலங் கவற்றி
வண்ணம்வீற் றிருந்து சுணங்குபூத் தலர்ந்த
வருமுலை யுலகமோ ரேழு
முண்ணிய வெழுந்த கூற்றிரண் டென்ன
வுத்தரீ கத்திடை யொளிர (8)

---

* கடைகுழன் றறவு (பா. பே.)

வாளெனப் பிறழ்ந்து கடைக்குழை யெறிந்து
மதர்த்தரி பரந்துயிர் பருகி
யாள்வழக் கறுக்கு மதர்விழிக் கூற்ற
மாடவ ரகலுமி னென்னத்
தாளதா மரையிற் பெய்தபொற் சிலம்புந்
தவளவாய்ச் சதங்கையு மரற்ற
நீளிரும் பிடியு மன்னமென் பெடையு
நிகரழிந் திடத்தனி நடந்தே (9)

இன்னண மாயன் மடவர லுருவிற்
பின்செல வெம்மையா ளிறைவன்
கன்னலி னமிழ்தின் விளைந்தகோற் றேனின்
கனியினி னிசைகனிந் தொழுகப்
பன்னருஞ் சாம கீதமா முனிவர்
பன்னியர் மயல்கொளப் பாடி
மென்மெலப் பொருமால் விடையென நடந்து
வியன்மனை தொறும்பலி யிரந்தான் (10)

வெள்ளிவா யிப்பி வெடித்தவெண் முத்த
நிரைத்தன மென்னகைத் துவர்வாய்க்
கள்ளவி ழோதிப் பார்ப்பன மகளிர்
கடிமனையிற் பலியிடு வார்போ
லுள்ளம்வேள் கணைபோம் புழைவழி யொழுக
மதிமருண் டுறுபலி யோடு
வள்ளவாய்க் கமலக் கைவளை யணைத்து
வறுநிலத் துகுத்தனர் நிற்பார் (11)

தொய்யில்வெம் முலையார் முழுமெயும் விளர்ப்பச்
சுடர்விடு கதிர்மணிச் சூட்டுப்
பையுர வல்குன் மேகலை யேடும்
பைந்துகின் மென்மெல நடப்பச்

செய்யபங் கயத்தி னெழினலங் கவற்று
சீறடி சேப்பவந் தெய்தி
*மையனன் றணிந்த வம்பரம் வாங்கி
யணிந்தவர் போலெதிர் நிற்பார் (12)

துளங்கொளி விரிக்கும் வெள்வளைக் கமலத்
துணைமலர்த் தாளினி லணிந்து
விளிம்புவிட் டெறிக்குஞ் செழுஞ்சுடர்க் கற்றைச்
சிலம்புமென் கூந்தலின் மிலைச்சி
யிளம்பிறை நுதன்மே லஞ்சனந் தீட்டி
யிணைவிழி மீதுபொட் டணியா
வுளங்கவர்ந் தேகு மையனைத் தொடர்ந்தெ
முணர்வளித் தேகெனத் தடுப்பார் (13)

குமரிவண் டறைந்து கூட்டுணுந் தெரியல்
கொடிபுரை மருங்கினில் புனைவார்
திமரமேய்ந் தொளிருஞ் செம்மணிக் காஞ்சித்
தேமலர்க் கூந்தலி லணிவார்
கமழ்நறுஞ் சாந்த முலைமுகட் டணியுங்
கதிருமிழ் நித்திலக் கோவை
யமையுறழ் பசிய தோளிடைச் சுற்றி
யாருயி ரலம்வர நிற்பார் (14)

வீங்குகூ லிப்பி வெடித்தவெண் முத்த
மணிவட மென்சுணங் கணிந்த
கோங்கிள முலையி லணிதலும் வேறோர்
வடமெனக் கொப்புளங் கொள்ள
வாங்கவை புரிந்து பலியிரந் துலவு
மழகனைக் கண்மணிக் குளிர்ப்பத்
தீங்குறு காமந் தலைக்கொள நோக்கி
நாணெடுந் தெருத்தலை திரிவார் (15)

* மையனி றணிந்த வம்பரம் (பா. பே.)

இன்னணங் கன்னிக் கற்பினை யன்றிக்
கடவுள்வே றின்றென விருந்த
வன்னலார் யாரும் பின்றொடர்ந் தேக
வஞ்சன மணிமிடற் றெந்தை
பன்னரு மறைகள் பாடுநின் றாடும்
பற்பல விநோதமாங் கியற்றும்
பொன்னடி சார்த்தி முனிவரர் முன்றிற்
றலைதொறும் பொற்புட னுலவும் (16)

அற்பொடுந் தவஞ்செய் முனிவர்பன் னியர்த
மகத்திடை வலிதினிற் பூண்ட
கற்பினை யகற்றிக் காமநோ யூட்டிக்
கங்கையஞ் சடையினோன் றிரிய
வெற்பெழுந் தியங்க நோற்றுயர் காம
மகற்றிய விருந்தவர் குழுவிற்
பொற்புறு மாயோன் மோகினி யுருவாய்ப்
புரிந்தவை யாவையும் புகல்வாம் (17)

## வேறு

தண்டலில் வனப்புடைய மோகினி தயங்குந்
தெண்டிரை யுயிர்ப்பவரு தெள்ளமுத மென்னக்
கண்டவர்கள் கண்டவர்கள் கல்வியொடு நெஞ்ச
முண்டுகயல் போல்விழி முகத்திடை யுலாவ (18)

மல்லலுல கத்துறையு மாமுனிவர் கேண்மின்
கொல்லுமிவள் வெய்யமுலை கூற்றகன்மி னென்னச்
சில்லரிய கிண்கிணி சிலம்பொடு சிலம்ப
மெல்லென நடந்துதவ வேதியர்முன் வந்தாள் (19)

காருறமு மோதிநனி கைசெயுநர் போல
வார்வமுறு மாமுனிவ ராருயிர் முடிக்கும்
வார்முலையி னுண்டுகில் சரிந்திட மறைத்தாங்
கோரிடையி னுணிறெடு மென்மெல வொதுங்கும் (20)

மாதவ மியற்றுநர் மனம்பறை யடிப்பக்
*காதலுற நின்றணிகொள் கந்துக முடிக்கு
மேதமற யாழ்வீசி நரம்பினி தியக்கு
மேதகு முனிக்கணம் விரும்பவிசை பாடும் (21)

கண்வலை யெறிந்துசிலர் காமுற மருட்டும்
பண்மொழி யினிற்சிலர்த மாருயிர் படுக்கும்
வெண்ணகை தனிற்சிலரை வெற்றுடல மாக்கு.
மொண்ணுத றனித்தனி புரிந்தசெய லொன்றோ (22)

மின்னிடை விளைத்தசெயல் கண்டுளம் விரும்பி
முன்னரு மருந்தவ முனித்தலைவர் யாருந்
தன்னிலை திரிந்தெழில்கொள் தாமரை மருட்டும்
பொன்னடியின் வீழ்ந்தறிவு போயிவை யுரைப்பார் (23)

எங்கள்செய் தவப்பய னடைந்தவியை பன்றோ
மங்கையிவண் வந்ததென வாய்குழற வோதிக்
கொங்கையென வெற்பினை சுமந்துகுழை கின்ற
வங்கலுழு மேனியடி போற்றியயர் கிற்பார் (

துப்புறழு மென்சடை நிலத்துசு டுடைப்ப
மெய்ப்படரு முத்தரிக முந்துகிலும் வீழச்
செப்பவரி தாகிய தவத்துறை திறம்பிப்
பொய்ப்படு மருங்குலை விடாதருகு போனார் (25)

இன்னணம் வருந்தியெழின் மாயையுட னேகுந்
துன்னரிய யோகுபுரி தொன்முனிவர் யாருங்
கன்னிமையு நாணுமொழி யக்கலை யிகழ்ந்தே
பன்னியர்க ளீசனிரு பால்வருதல் கண்டார் (26)

* காதலுற நின்றணிகள் (பா. பே.)

காண்டலும் வெகுண்டுவிழி காலவட வைத்தீ
மூண்டெரிய வெண்ணறு முனித்தலைவர் யாரு
மாண்டகையின் மிக்கதிற லையன்முன மெய்தி
யீண்டியுயர் சாபமொழி யெண்ணற விசைத்தார் (27)

மறையவர் வெகுண்டுநனி வைதனகள் யாவு
மிறைவனை யடுத்தில வெனச்சின மிகுத்துத்
தெறுதழலி னையவி செழுங்கறி யுகுத்தாங்
கறைவரிய தீயமறை யாவையு மறைந்தார் (28)

வேறு

மலர்சினைப் பலாசின் பச்சிலைச் சுருக்கி
னறுநெய்மொண் டாரழல் வாக்கி
யலகறு முனிவர் மருவொடுஞ் செய்த
வாவிசா ரத்திடைப் பிறந்த
கொலைவிடப் பாந்தள் பிறையெயிற் றலகை
துடிமழு மான்கொடுஞ் சினத்த
புலியழற் பகுவாய் முயலகன் செந்தீ
யீசன்முன் பொங்கிவந் தனவே (29)

பாந்தளை யணியா வலகையோ டாடிப்
பயில்துடி மழுமறி யேந்திக்
*காந்துவெந் தறுகட் புலியுரித் தசைத்துக்
கனல்விழி முயலகன் முதுகிற்
சேந்தபொற் கமலத் தாளினு லூன்றித்
தெறுதழ லொருகரத் தமைத்தாங்
கேந்திளங் கொங்கை மாயைகண் டுவப்ப
வெம்பிரான் றிருநடம் புரிந்தான் (30)

முனிவர ரழல்வாய்ச் சாபமு மாவி
சாரமு முழுமறைப் பொருளாம்
புனிதன்மேற் செல்லா தொழிதலும் வெருவிப்
புண்ணிய மூர்த்திமுன் னெய்தி

* காந்துறு தழல்கட்புலி (பா. பே.)

யனகநீ யாரை யரும்பிள முறுவ
லணங்கிவ ளாரென வினவக்
கனிமொழி யென்றன் மனைவியான் கயிலைக்
கடவுண்மா முனிவர ருமால் (31)

தாருகா வனத்திற் றவஞ்செயப் புகுந்தே
மெனவிறை சாற்றலு முனிவர்
வேரியங் கூந்தற் கணிகையிற் றிரியும்
வெள்வளைத் தோளியை விடுத்துச்
சீரிய தவநீர் செய்கென நீவிர்
தெரிவைய ருடன்றவம் புரித
லாரிய வொழுக்கே பன்னியர் கற்பீங்
கீதெனி லழகுடைத் தாமால் (32)

என்றுமா முனிவர் தமையிகழ்ந் துரைத்து
வசிட்டனற் சாலையி னெய்தி
மன்றலங் கூந்த லருந்ததிப் பூசை
மகிழ்ந்துவான் றொடர்பொலன் குடுமிக்
குன்றவிற் குழகன் பெண்ணுரு வமைந்த
குளிர்பசுந் துளவினோ னோடு
மன்றனுண் மலர்தூய் வானவ ரேத்த
மகிழ்வொடு மறைந்துபோ யினனால் (33)

எம்பிரான் றன்னைக் கண்ணுறக் கண்டு
மறிந்தினி தேத்தலா மையினால்
வெம்புவெந்நோயிற் பசியினிற் றுயரின்
முனிவரர் மிகவும்மெய் வருந்தி
வம்பவிழ் கமலப் பொகுட்டினி லுறையும்
வானவன் மருங்குசென் றெய்திக்
கம்பமுற் றுடல நடுங்கவாய் புலரக்
கடவுண்மா முனிவர ரிசைப்பார் (34)

எல்லியும் பகலும் வெப்புநோய் முதல
பிணியினு லெண்ணருந் துயரா
னல்குர வதனுன் மெலிந்தன மிதற்குக்
காரண நவிலுதி யெனலுந்
தொல்லைமா மறைக ளின்னமு மறியாத்
தோன்றலைக் கண்ணுறக் கண்டு
மல்லல்செய் தமையா லடைந்ததித் துயரென்
றருமறைக் கிழவனுங் குரைத்தான் (35)

வங்கமேல் நாட்டும் பாய்மர மதனி
லினிதினி லமர்ந்தமாப் பறவைக்
கங்கது வல்லாற் பற்றிலா ததுபோ
லாருயிர்த் தொகையனைத் தினுக்குங்
கங்கைவே ணியன்றன் நல்லரு ளல்லாற்
களைகண்வே றுளதுகொ லதனுற்
றிங்களஞ் சடையோ னிலிங்கபூ சனைநீர்
வைகலுஞ் செய்மி னென்றுரைத்தான் (36)

முண்டகப் பொகுட்டி னரசுவீற் றிருக்கு
முதல்வனல் லருளொடு முனிவர்
கண்டிகை மாலை பூதிமெய் முழுது
மணிந்துறு கங்குலும் பகலும்
வண்டுரு மலர்தூ யீசனஞ் செழுத்தும்
புகன்றவ னடிமலர் வழுத்துந்
தொண்டரை யேத்தி மனைவிய ரோடு
மிலிங்கபூ சனைத்தொழில் புரிந்தார் (37)

நாற்பத்தொன்ருவது
தாருகா வனத்திற் பலியிரந்த வத்தியாய முற்றும்
ஆகத் திருவிருத்தம் 931

---

உ

# நாற்பத்திரண்டாவது தாருகாவனத்து முனிவர்க்குச் சிவனருள் புரிந்த வத்தியாயம்

*அள்ளிலைக் கமல மெல்லிதழ் வாட்டு
மரும்பனிப் பருவநீர்ப் படிந்து
முள்ளூர் பருகும் பங்குனிப் பருவத்
தோங்குமைந் தழலிடை நின்றுந்
துள்ளிநீ ருறைக்குங் கார்படு பருவஞ்
சோனைமா மழையிடை நின்று
மெள்ளரு முனிவர் வளியயின் றினிதி
னிலிங்கபூ சனைபுரிந் திருந்தார் (1)

ஆங்கவர் மம்மர்க் கிழங்கினை யகழ்வா
னுறணி புரிசடைப் பெருமான்
கோங்கெழில் கவற்றிக் கவின்வழிந் தொழுகுங்
குவிமுலைக் கொடியொடும் போந்து
மாங்குயிற் றெழுதி யின்னிசை முழவா
வண்டுபாட் டயர்தரத் தோகை
யாங்கணு நடிக்குந் தாருகா வனத்தி
னெய்திமற் றீங்கிவை புரிவான் (2)

ஓரிடைக் குனிக்கு மோரிடைத் தீந்தே
னுகுத்தென வருமறை பாடு
மோரிடை யைய மேற்குநர் போல
வுலாவரு மோரிடை யெய்திச்
சீர்கெழு வியோகம் பயின்றுவீற் றிருக்கு
மோரிடை வறிதினிற் சிரிக்கு
மேர்கனிந் தொழுகு மிளமுலைக் கோதை
யிணைவிழிக் களிப்பவெம் பெருமான் (3)

* அள்ளிதழ்க் கமல (பா. பே.)

அன்னவை நோக்கி யருந்தவ முனிவர்
பன்னிய ரோடுமாங் கெய்திக்
கன்னலங் குதலை மங்கையோர் பங்கன்
கழலிணை மலர்கடுய்ப் பழிச்ச
வென்னையா ளிறைவ னுயிர கோடி
யெறிகதி ரெறித்தென வயங்கும்
தன்னுருக் காட்டி நிற்றலு மளப்பின்
மறையினாற் றளித்தளி துதித்தார் (4)

மெய்ம்மயிர் சிலிர்ப்பக் கண்கணீர் வாரப்
பழிச்சுமெய்த் தவர்தமை நோக்கி
யம்மநீர் கடவு ளின்றெனக் கருமம்
பண்ணிய வரிறப வோர்ந்து
நும்முன்யா முன்னம் போந்தன மென்ன
நுவன்றுமெய்ஞ் ஞானமு முரையா
வெம்முடை யிலிங்க பூசனை புரிகென்
றிறைவியோ டிறைவனுங் ககன்ருன் (5)

இமயவிற் குருசில் சேவடி போற்றி
யிருந்தவப் பிருகுவை முதலோ
ரமையறு பூசை யளப்பினுட் பண்ணி
யிருத்தலு மாயிர கோடி
யுமிழ்கதிர்ப் பருதி யொருங்குவந் தகல்வா
னுதித்தென விமயவெற் பளித்த
கமழ்நறுங் கூந்த லுமையவள் தோன்றக்
கடவுண்மா முனிவரேத் தெடுத்தார் (6)

அன்னைதா ளிறைஞ்சி முனிவரர் போற்று
மமைதியின் றிருவரும் பொருளா
மென்னையா ளுடைய வோர்குழை முக்க
ணீர்ஞ்சடை யந்தணன் றேன்றி

யுன்னருந் தவத்து முனிவரர் தெளியச்
சாங்கிய யோகமாங் குரைத்துப்
பின்னரும் வேட்ட நல்வர மளித்துப்
பிராட்டியோ டகன்றனன் பெரியோன் (7)

கோசிகன் வசிட்ட னத்திரி பிருகு
முதலிய கோதறு முனிவ
ராசறு மிலிங்க பூசனை யாற்ற
யருவினைத் தொடரறுத் திருதா
ரேசிலிக் காதை படித்தவர் கேட்டோ
ரெழுதினோ ரனைவரு மீசன்
றேசுறு கமலத் தாளினி தடைந்து
சிறப்பொடு மினிதுவீற் றிருப்பார் (8)

நாற்பத்திரண்டாவது
தாருகாவனத்து முனிவர்க்குச் சிவனருள் புரிந்த
வத்தியாய முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 936

---

உ

## நாற்பத்து மூன்றுவது
## நருமதைச் சிறப்புரைத்த வத்தியாயம்

---

தருமன்முன் கேட்ப விழைந்துமார்க் கண்டன்
சாற்றிய நருமதைச் சிறப்பை
யுருவவோ டரிக்கட் புலோமிசை கணவன்
யாழ்முனி யுவந்திட முன்னந்
திருவமர் துளவோ னுரைத்திடும் வண்ணஞ்
சிறப்புட னுரைத்திடு கென்ன
வரிதுணர் கேள்வி முனிவரர் கேட்பச்
சூதமா முனிவர னறைவான் (1)

குடம்புரைச் செருத்தற் குவிமுலைப் பசுவோர்
கோடியோர் கோடிகொய் யுளைமா
வடம்புனை கொங்கைக் கன்னியர் கோடி
மறையவர்க் கிலிதளித் திடினு
மிடைந்தகல் லனைத்து மிலிங்கமாய்த் திகழும்
வியப்புறு நருமதை யாற்றி
னடைந்துநீ ராடப் பெற்றவர் பேற்றி
லாயிரத் தொன்றும்வந் துருதால் (2)

கங்கைமா நதியங் காசியி னெய்திற்
புண்ணிய தீர்த்தமாங் கடவுட்
டுங்கவெண் டிரைசேர் சரச்சொதி குருக்கேத்
திரத்துறிற் றூய்தென வுரைப்பா
ரெங்கணெய் திடினு நருமதை நன்னீர்ச்
சிறப்புறு மென்றுநான் மறையு
மங்கமோ ராறு மறைந்திடு மென்ன
மருந்தவ முனிவர ருரைப்பார் (3)

அமரகண் டத்தி னருமதை யொழுகும்
துறையினி ளுடிய பெரியோர்
கமழ்நறு தூற்றுங் கற்பகத் தருவி
னீழலிற் கரும்புறழ் தீஞ்சொற்
குமரிவண் டரற்றுங் கொழுமலர்க் கூந்த
லரம்பையர் குவிமுலை தோயா
விமயவர் நாட்டி னெண்ணறு பருவ
மிந்திரன் வாழ்த்தவீற் றிருப்பார் (4)

நருமதை யாற்றின் றென்கரை மருங்கிற்
கபிலைமா நதியுள ததனின்
விரிதலைக் கோட்டு மரமுயர் கொடிக
ளரில்வளர் புல்விழுந் தாலுங்

திருவநீ டுறக்கநன்னக ரதனிற்
செஞ்சிலைக் காமனே யனைய
வுருவினை யெடுத்தாங் கரம்பைய ரோடும்
பல்பக லுவந்துவீற் றிருக்கும் (5)

அந்நதிக் கரையில் விசாலிய கரணி
யெனுநதி யுளவதிற் றோய்ந்தோர்
கன்னலங் குதலை யயிலுறழ் நெடுங்கட்
காம்புறழ் பசியமென் றடந்தோள்
வன்னமே கலைசூழ் பைய ரவல்கு
லரம்பையர் வருமுலை புணர்ந்து
பொன்னக ரதனி லிந்திர னுவப்பப்
பொற்பொடு மினிதுவீற் றிருப்பார் (6)

வேறு

உளத்தினைப் புனித மாக்கு
முருத்திர தீர்த்த மாதி
துளக்கறு காளி தீர்த்த
மீறதாய்த் தொகுத்த தீர்த்த
மளப்பில வாகுந் தூய
நருமதை யாற்றி னென்னக்
களித்தபே ரன்பின் மிக்க
கடவுண்மா முனிவர் சொல்வார் (7)

மாயிரு ஞாலத் துள்ள
மன்னுயிர்த் தொகைகட் கெல்லா
மாயிர நாவுண் டாகி
யறையினு மறையொ ணாதாற்
பாய்புலி யுரிவை போர்த்த
பண்ணவ னருளி னோங்குந்
தேய்வறு புகழின் மிக்க
நருமதைச் சிறப்பு மாதோ (8)

அன்னமா நதியிற் றோய்ந்தோ
  ருங்கதன் மருங்கிற் சென்றோன்
றன்னிரு கையாற் றொட்டோன்
  றாளிணை விளக்கு கின்றோன்
பன்னிரு காதத் தேயு
  மிருந்துளம் பாவிக் கின்றோ
னுன்னருந் துறக்க வீட்டி
  னுவப்பொடு மிருப்ப ரன்றே (9)

நருமதைக் கேக வெண்ணி
  யோரடி யிட்டோர் நன்கின்
முருகவிழ் கரிய கூந்தன்
  முகிழ்முலைத் தெய்வ மாதர்
திருநலங் கனியுஞ் செவ்வாய்ச்
  செந்தும்ர்த் தேறன் மாந்தி
இரவுநன் பகலு மின்புற்
  றிமையவர் போல வாழ்வார் (10)

**வேறு**

மாற்றெறிந் தோங்கு நருமதை நதியிற்
  படிந்தவர் வானுல கெய்திக்
கூற்றிருந் தாலுங் கொலைவிழி மகளிர்
  *குங்குமச் சேற்றகம் பொறித்த
தாற்றிடம் பெண்ணைக் குரும்பையிற் சிறந்த
  தடமுலைக் கோடுபாய்ந் துழக்க
ஊற்றிருந் தழிதே னொழுகுமென் மலர்தாள்
  கற்பக நீழலி னுறைவார் (11)

நாற்பத்து மூன்றாவது
நருமதைச் சிறப்புரைத்த வத்தியாய முற்றும்
ஆகத்திருவிருத்தம் 950

---

* குங்குமச் சேதகம் (பா. பே.)

உ

# நாற்பத்துநான்காவது

## நந்திக்கு முடிசூட்டிய வத்தியாயம்

---

என்றலு மகவான் யாழ்முனி யோடும்
வினவமா யவனினி துரைத்த
பொன்றிடா நந்திக் காதையை யெமக்குப்
புகலென முனிவரர் கேட்ப
வொன்றிய வுணர்வின் மெய்ம்மயிர் சிலிர்ப்ப
வுவப்பொடும் வியாதனைத் தொழுது
துன்றுபே ரன்பின் விழிகணீர் வாரச்
சூதமா முனிவர னுரைப்பான் (1)

கண்டுகேட் டுயிர்த்துண் டுற்றறி புலன்கள்
காத்தமெய்க் கடவுண்மா முனிவர்
வண்டுபாட் டயரு முண்டகப் பொகுட்டு
வானவ னுலகினி லெய்தி
விண்டுவு மறியா வீசனைப் போற்றி
விழுத்தவ மினிதினி லாற்ற
வண்டர்நா யகவோர் தலமருள் கென்ன
வடியிணை பரவிநின் றுரைத்தார் (2)

சேற்றினிற் யுறவாச் செழுங்கம லப்பூந்
தவிசினி லினிதுறை செல்வன்
மாற்றருநேமி யினிதினி துருட்டின்
வாய்மடிந் தெகழிதரு மிடத்தி
னூற்றருந் தவநீர் புரிகுதி ரென்ன
வளித்தலு மயன்மொழிப் படியே
தோற்றிய நேமி யுருட்டிவாய் மடிந்த
தலத்தினிற் றொல்தவம் புரிந்தார் (3)

நேமியின் கூர்வாய் மடிந்தவித் தலத்தை
நயிமிசா ரணியநீள் வனமென்
றுமுறை யுணர்ந்தோ ருரைக்குவ ரிந்தப்
புண்ணிய தலத்தினி லமர்ந்து
காமனை யெரித்த கண்ணுதன் மூர்த்தி
கழலிணை மனத்திடை யிருத்தி
யாமமும் பகலு மாயிரம் பருவஞ்
சிலாதனல் விருந்தவம் புரிந்தான் (4)

மனநெறி படரு மைம்பெரும் பூத
மடக்கிய மாதவக் கிழவன்
வினையற வாற்றுந் த்வத்தினை நோக்கி
வெண்ணிறப் பூதிமெய் யணிந்து
கனைகடாஞ் செருக்கிக் கண்படை பெறுத
களிற்றுரி மெய்யினிற் போர்த்த
நனைமலர்க் கொன்றை வேணியம் பெருமா
னரைவிடை யிவர்ந்துமுன் னின்றான் (5)

பொன்னுறை கழித்த புலவருச் சூலப்
புங்கவ னுளமகிழ் பூத்தாங்
குன்னுளம் விழைந்த கேட்டியென் றுரைப்ப
வுவப்பொடு முனிவரன் வணங்கி
யென்னையா ளிறைவ பிறப்பிறப் பின்றி
யெம்பிரான் போலெழி றிகழ்ந்து
தன்னிகர் தன்னை யன்றிவே றில்லாப்
புதல்வனைத் தருதியென் றுரைத்தான் (6)

அன்னநன் மகவு தந்தன மென்ன
வைம்முகக் கடவுளாண் டகலப்
பன்னருஞ் சிறப்பின் சிலாதனுண் மகிழ்ந்து
பழிப்பறு மகமினி தியற்றக்

கொன்றுனைக் கொழுவாய் நடந்தநீள் சாலிற்
குருகுபேர்க் குன்றற வெறிந்த
பொன்னயிற் கரத்த முருகுறழ் சாயற்
புதல்வனல் லெழிலொடு முதித்தான் (7)

உதித்திடுஞ் சிறுவன் றனைக்கடி தெடுத்தாங்
குச்சிமோந் தருந்தவச் சிலாதன்
மதித்திடு முனிவர் குழுவொடுஞ் சாத
கன்மமே முதலமற் றெவையும்
விதிப்படி புரிந்து முப்புரி நூலு
மேதகு விழைவினீற் புனைந்து
முதுக்குறை வுற்ற முனிவரான் மறைகண்
முழுவதும் பயிற்றுவித் தனனால் (8)

அருமறைச் சிலாத முனிவரன் புதல்வ
னருளொடு முருத்திர சமகந்
தெருளொடுங் கோடி யுருவினி தேற்றத்
திங்களங் கண்ணியோன் றோன்றிக்
கருதிய தளித்துங் கேட்டியென் றுரைப்பக்
கண்ணுத லின்னுமோர் கோடி
யுருவுயர் சமகஞ் செபித்திட வாயு
ளுதவுதி யெனவருள் புரிந்தான் (9)

பின்னுமோர் கோடி யுருச்செபித் திடலும்
பிஞ்ஞகன் மீட்டும்வந் தெய்த
வின்னுமோர் கோடி யுருச்செபித் திடுதற்
காயுணீ யருளென வியம்ப
முன்னவன் வழங்கி யேகலும் பின்னு
முறையினீற் சமகமோர் கோடி
பன்னரு மறைதேர் சிலாதனற் புதல்வன்
பரிவொடுஞ் செபித்தினி திருந்தான் (10)

ஆடகப் பசும்பொன் விழுதுவிட் டன்ன
வவிர்சடை யந்தணன் றேன்றி
நீடிருந் தவத்தா லுவந்தனம் விழைந்த
கேளென நிருமல வின்னுங்
கோடிநற் சமக மோதுவான் வாணு
ளருள்கென குன்றவிற் குழக
னேடவிழ் கமலத் தாழ்தடக் கையான்
முதுகுதை வந்திவை யிசைப்பான் (11)

அருமறைச் சிறுவவு ருத்திர சமகஞ்
செபித்திட லொழியள விறந்த
மருமலர்ப் பொகுட்டுப் பிரமர்தங் கற்ப
மல்லலந் திருவொடும் பொலியா
வுருகெழு தோற்றக் கணங்கடம் பதியா
யினிதினி லுறைந்தொளி யெறிக்கும்
பொருவரு ஞானச் சுடர்ப்பிழம் பாகு
மெனதுழைப் பொருந்துதி யென்றுன் (12)

எண்டிசைப் பாலர் தாமரைக் கிழவ
னிருநில மளந்தசே வடியோன்
திண்டிற லவுண ரியக்கர்கந் தருவர்
சித்தர்சா ரணர்புகழ்ந் தேத்தக்
கொண்டலின் முழவந் துவைப்பவெண் சங்கங்
குமிறிட வலம்புரி யார்ப்பப்
பண்டரு குதலைப் படர்முலைத் துவர்வா
யரம்பையர் பதம்பெயர்த் தாட (13)

பொய்யிடைத் துவர்வா யரம்பையர் கையி
னலங்குசா மரைபொதி யவிழ்ப்ப
மையிருள் பருகும் வாண்மதி யன்ன
மணிக்குடை விஞ்சைய ரெடுப்ப

வெய்யசெங் கதிர்கா லருக்கர்பன் னிருவர்
மின்மினி யெனவொளி யெறிப்பச்
செய்யபன் மணியின் முகடுவேய்ந் துயர்ந்த
திருத்தகு மவுலிசூட் டினனால் (14)

விரிகதிர் மவுலி சூட்டிய பின்னர்
விளங்கொளி நித்தில முறுவ
லரிமதர் மழைக்கட் சுயசையைச் சிலாத
னரும்பெறற் புதல்வனுக் கினிதி
னெரியழற் சான்றாய்த் திங்களங் கண்ணி
யெம்பிரான் மணம்புரி வித்துத்
திருமகள் கொழுந னுன்முகன் பெறாத
செல்வமு மினிதளித் தனனால் (15)

இத்தகை நந்திக் காதையைப் படித்தோர்
நயிமிசா ரணியத்தி லீசன்
வித்தக மலர்த்தாள் வழுத்தினோர் வியந்தோர்
விண்ணவ ருலகினி லெய்தி
முத்தக முரிஞ்சும் படர்முலைத் துவர்வா
யரம்பையர் முகிணகை மாந்திப்
பைத்தபாம் பணிந்த கண்ணுதற் சாமி
பதமலர் நீழல்வீற் றிருப்பார் (16)

கங்கைசூழ் கிடந்த காசியை முதலாக்
கருதருஞ் செபேச்சுர மீறாய்த்
துங்கவெள் விடையோ னமர்ந்தநற் றான
மளப்பில சொல்லிடிற் பெருகு
மங்கவை கருதிச் சுருக்கியா முரைத்தே
மறையுமிக் காதையைக் கேட்டோர்
திங்களங் கண்ணி புனைந்தவெம் பெருமான்
சேவடி சேர்வரென் றுரைத்தான் (17)

நாற்பத்து நான்காவது
நந்திக்கு முடிசூட்டின வத்தியாய முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 967

உ

## நாற்பத்தைந்தாவது
## நைமித்திகப் பிரளய முரைத்த வத்தியாயம்

தோற்ற மனைத்தும் விரித்துரைத்தாய்
துகடீ ரொடுக்கப் பகுதியினைச்
சாற்று கென்ன நாரதனும்
தவளக் களிற்றுப் புத்தேளும்
போற்றிக் கேட்பத் திருநெடுமால்
புகன்ற வண்ண முனிவரருக்
காற்றல் சான்ற விருந்தவத்துச்
சூத முனிவ னறைகுவனால் (1)

பேசவரிய நித்தி யஞ்சேர்
நயிமித் தியநீள் பிராகிருத
மேச லருமாத் தியந்திகமென்
றொருநால் வகைத்தா மொடுக்கமென்ப
ராசி லிவற்றி லித்தியமென்
றறைத னடக்குஞ் சாக்காடு
மாசி னயிமித் திகன் பிரமன்
பகற்போ யுலக மடிந்திடுதல் (2)

உரைத்தற் கரிய பிராகிருத
மொண்டா மரைமே லுறைவோற்கு
வரைத்த வாயுள் கழிந்தொழிய
வுலகம் யாவுந் தனிமடிந்து
தரித்தற் கரிதாய்ப் பிரகிருதி
தன்னி லுறலாத் தயந்திகஞ்சேர்
விரித்த ஞானத் தாலான்மா
விளங்கு முத்தி தனினடைதல் (3)

### வேறு

நான்முகக் கிழவன் பகல்முடி வதனில்
நளிர்கதி ரிரவிநூற் றுண்டு
வானுயர் பூமி பாதல மனைத்தும்
வகையறத் தழற்கதிர் பரப்பிக்
கூன்முது காமை முதுகினிற் கிடந்த
குவலய முடுத்தவேழ் கடலு
மேனைய புனலும் பசையறப் பருகி
யெறிகதி ரேழ்சுட ராகி (4)

சுடுபொறி சிதறு மெரிமுகக் கடவுள்
*தன்னெடுஞ் சுடர்விடு கதிர்க
ளடுதொழில் புரியுங் கூற்றின்வெங் கூற்றின்
பணியினாற் காலத்தி னமைத்து
படிபுவ லோக முயர்சுவ லோகம்
பாதலந் திகழ்மக லோக
முடிவுற வுருக்கிச் சராசர மனைத்து
முழங்கெரி யாலெரித் திடுமால் (5)

பருவமோர் நூறு முகிற்குலங் குழுமிப்
பாவடிக் களிற்றனீள் கரம்போல்
மருவுமற் றோரோர் தாரைகள் விடுத்து
வானுரு மேற்றொடு மதிர்ந்தாங்
குருகெழு பருதி வெங்கதிர் செந்தீ
முழுவது மொன்றற வவித்துப்
பெருகுதண் புனலிற் பிரளயங் கோப்ப
வொழிவறச் சோனைபெய் திடுமால் (6)

இன்னண முரைத்த காரணந் தன்னி
லெழுதரு பழமறைக் கிழவ
னுன்றும் யோகத் துறங்குவன் சாத்து
விதத்தொடு மொன்றுமிக் கற்பந்

* சுடருமிழ்கதிர்கள் (பா. பே.)

துன்னரும் வராக கற்பமென் றுரைப்பர்
தூய்மல ருந்தியான் றனையு
மன்னமூர் தியையு மீன்றவ னீச
னெனவுணர்ந் தவர்நர கடையார் (7)

நாற்பத்தைந்தாவது
நைமித்திகப் பிரளய முரைத்த வத்தியாயம் முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 974

உ

## நாற்பத்தாறுவது
## பிராகிருதப் பிரளயமு மாத்தயந்தகப் பிரளயமு முரைத்த வத்தியாயம்

உரைபெறு நயிமித் திகப்பிர ளயத்தை
நவின்றன முயர்பிரா கிருதப்
பிரளய முரைப்பன் கேண்மினீர் பரார்த்த
மிரண்டு சென்றுலுயர் பிரம
னுருகெழு சீற்றத் துருத்திரன் பாதத்
தொடுங்குமவ் வுருத்திரன் கோடி
யிரவிநல் லுருவா யுயர்பிர மாண்ட
மெரிபட நுதற்கணு லெரிக்கும் (1)

ஒள்ளொளிப் பிரம சிரசெனுங் கணையான்
மகேசுர னுலப்பிலு ளமரு
மெள்ளருந் தேவர் தானவர் யாரு
மிறப்பவோர் கணத்தினி லெரித்துத்
தள்ளரும் பிரமர் தலையொடென் பணிந்து
சங்கரி கண்டுகண் களிப்ப
வள்ளிலைச் சூல வேறிரித் தினிதி
னனந்த நடம்புரிந் திடுவான் (2)

*சுடருமிழ் கதிர்கள் (பா. பே.)

உலகெலா மீன்ற வன்னையு மகேச
  னுருவிடை மாலொடுங் காக்கு
மலகிலா விளையாட் டாடிய வெந்தை
  யமலமாய் நிட்கள மாகி
நிலவுதற் பரமாய்ப் பரமமாய்ச் சித்தாய்
  நித்திய மாய்வெறு வெளியாய்
மலைவற நின்ற தன்னுரு வெய்தி
  யெங்கணுஞ் சிறந்தொளி வயங்கும் (3)

மாநிலம் புனலி லொளிக்குமப் புனல்போல்
  வன்னியிற் கரக்குமவ் வன்னி
யூனமில் வளியிற் சேருமவ் வளிபோ
  யுயர்விசும் படையுமவ் விசும்பாங்
கேனைய வாங்கா ரத்திடை யொளிக்கு
  மாங்கது மகானிடை யெய்தும்
மானவம் மகான்போ யுயர்பிர கிருதி
  தன்னிடை யினிதினி னமரும் (4)

ஒளியினி லொளியா யுண்மையாய் நின்ற
  மகேச்சுர னுவப்பிலா தோங்குங்
களியினிற் சிறந்த புருடனைப் பிரதானங்
  கலந்திடா தருளொடும் விரிக்கு
மளியுடைப் பிரதான முதல்விசே டாந்தந்
  துடைத்தவை யாக்கினின் றளித்தல்
வெளியினுள் வெளியாய் விமலமாய் நிறைந்த
  சிவனென வருமறை விளம்பும் (5)

உரைத்திடு முபாதி கடந்தரு மாயைச்
  சிமிழ்ப்புறுத் தைம்புல னொடுக்கிக்
கருத்துறத் தம்மைத் தாமென வுணருங்
  கடவுண்மா முனிவரர்க் கினிதி

னருத்தியிற் றாய்தாய் விளங்குமாத் தியந்த
பிரளய மாக்குவிப் பதுவும்
விரித்துநான் மறையுந் திங்களங் கண்ணி
விமலனென் றினிதெடுத் தியம்பும் (6)

உலகெலா மளந்தோன் மலரயன் மகவா
னுள்ளமுற் கடவுள்வெம் பருதி
நிலவுகொப் புளிக்குந் திங்களஞ் செல்வ
னுதியாய் நிகழ்த்திடுந் தேவ
ரலகறு சீர்த்தி மகேச்சுரன் கூற்றென்
றறைவரெக் கடவுளை யேனு
மலர்கடுப் பழிச்சின் மதிமுடிக் கண்ணி
வானவர்ப் பழிச்சிய தாமால் (7)

சிறந்திடுந் தேவர் யாவரைத் தொழினுஞ்
சிவனடி யிறைஞ்சிய தாமால்
பிறந்திறந் துழலுந் தேவரை யுளத்துப்
பேதுற வான்மதி மருண்டு
மறந்துமேத் திடாமல் மதிதவழ் குடுமி
மாணிக்க மலையினை யேத்திக்
கறங்கெனத் திரியும் பிறவியிற் புகாது
முத்திவீட் டிருந்துளங் களிப்பார் (8)

அன்னநின் மலமா யுறைமயேச் சுரனே
பிரமமா மன்றென மதிக்கிற்
கன்னியம் புரிசை யுடுத்துயர் காசிப்
பதியினிற் கடவுண்முன் னின்று
முன்னவஞ் சவித்தோங் கந்தணர் கேட்ப
முகுந்தனைப் பிரமமென் றறிய
தன்னருஞ் செருக்காற் கையெடுத் துரைத்த
வியாதனெய் தியபயன் சார்வார் (9)

எம்பிரான் பரம வுருவினை யுளத்தி
னெண்ணுதற் கரிதெனிற் பிறைதாழ்
தும்பையஞ் சடையுங் கண்ணொரு மூன்று
நீற்றொளி துதைந்தவெண் டோளும்
வம்புலாங் கொங்கை மலைமக ளிடனு
மாகிய மானுரு வதனை
யைம்புல னடக்கி யுளத்திடை நினைப்பி
னரும்பெறன் முத்திவீ டடைவார் (10)

சீர்கெழு கூர்ம புராணமுற் றுணர்ந்தோர்
சிவனடி நீழலி னுறைவா
ரோர்பதங் கற்றோர் விண்டுவி னுலகி
னுறைகுவ ரோரெழுத் துணர்ந்தோர்
பார்முழு தாண்டு நன்மக வுயிர்த்துப்
பரிவொடு மினிதுவீற் றிருந்தாங்
கேர்கெழு கமலப் பொகுட்டுவீற் றிருக்கு
மிறையொடு முத்திவீ டடைவார் (11)

என்றுயர் கூர்ம ரிந்திரத் துய்ம்மற்
கியம்பிய காதையாழ் முனிக்குந்
துன்றிரு விசும்பு காக்கும்வா சவற்குஞ்
சொல்லிய வண்ணமாய்ந் தினிதிற்
கன்றுவெங் காமக் குறும்பற வெறிந்த
கடவுண்மா முனிவரர் கேட்ப
நன்றறி கேள்வி வியாதனைப் பணிந்து
சூதமா முனிவர னவின்றான் (12)

வாழிநான் மறையோர் வாழியெவ் வுலகு
மழைவள மெங்கணுஞ் சுரக்க
வாழிவாள் வேந்த ரானினம் வாழி
வைதிகச் சைவம்வாழ்ந் திடுக

வாழியிப் புராணங் கற்றவர் கேட்டோ
　　ரினிதென மகிழ்ந்தவர் யாரும்
வாழிநற் றரும மரனடித் தொண்டர்
　　வைகலு மகிழ்ந்துவா ழியவே (13)

எதிர்மலைந் தேற்ற வெஞ்சமத் தரச
　　ரிடுதிறைக் கடையளந் தறியா
மதுரையும் புகாரும் வஞ்சியும் புரக்கு
　　மானவேல் வழுதியர் பெருமான்
அதிர்பொலங் கழற்கா லடலதி வீர
　　னரிறபத் தெரிந்துநன் கிசைத்த
முதுதமிழ் கூர்ம புராணமுற் றுணர்ந்தோர்
　　முத்திவீட் டினிதுவீற் றிருப்பார் (14)

நாற்பத்தாறுவது
பிராகிருதப் பிரளயமு மாத்தியந்தப் பிரளயமு முரைத்த
வத்தியாய முற்றும்
ஆகத் திருவிருத்தம் 988



உத்தரகாண்ட முற்றிற்று
பாயிரமுட்பட காண்டம் 2க்கு அத்தியாயம் 97க்கு
திருவிருத்தம் 3717.
கூர்ம புராணம் முற்றிற்று

உ

# கூர்மபுராண அரும்பதவுரை
## பூருவகாண்டம்

## காப்பு

1. கற்றை—தொகுதி. கான்று—சொரிந்து. கோடு—கொம்பு. ஏகதந்தன் என்னும் பொருளது. பிறைவடிவான கொம்பு. பிடி—பெண்யானை. பிஞ்ஞகன்—இறைவன். (ஒரு வகைக்கூத்தாடுபவன்) அண்ணல்—பெருமை. சென்னி—முடி (தலை)

### பாயிரம்—வரலாறு.

கடவுள்வணக்கம்—கடவுளைவணங்குதல்

### நடேசர்

2. குழவிமதி—இளஞ்சந்திரன். இறைப்ப—சொரிய, திவலை—நீர்த்துளி. தூற்ற—துளிப்ப. பொம்மல்—பூரிப்பு. கௌரி—ஒருவகை நிறமுடையவள், மலைமகள். வானோர்—வானிடத்தவர் (தேவர்) மணிமன்றம் — இரத்தினசபை. முக்கண்—சூரியன், சந்திரன், அக்கினியாகிய மூன்றுகண்கள் மணிமிடறு—நீலகண்டம். கமலமலர்—செந்தாமரைமலர்.

### சிவகாமசுந்தரி

3. புலவி—ஊடல் (கூடலில் உண்டாகும் சிறுசண்டை) சங்கம் — சங்கினாலாகிய வளையல். மலைவுஅற — ஐயம்நீங்க ஏல்வை — பொழுது. மழுவலான் — மழுவாளியாகியஆண்டவன். குறித்து—ஊன்றி. கோட்டி—வளைத்து (சாய்ந்து) நாண்—நாணம். முறுவல்—புன்னகை. கலைநிறைமதி—பூர்ண சந்திரன். இல்—உவமவுருபு

## விநாயகர்

4. கடவுள்—தேவர். இடையூறு—துன்பம். ஒன்று—ஒற்றையெனவாயது. வழுத்தல்-துதித்தல். வழுத்துகின்றோர்—வினையாலணையும்பெயர்) முன்னரியயாவும்-கருதியனவனைத்தும். வாளா—சும்மா (வெறுமனே) பேதைமை-அறியாமை எவன்கொல்—என்பது, என்கொல் எனமருவாயிற்று. மாது ஓ அசைநிலைகள்.

## முருகப்பெருமான்.

5. கள்வாய்மடுத்து—தேனினையருந்தி குமட்டி—ஏக்கரித்து. புள்—வண்டு. நறுந்தெரியல்—நல்லமாலை. புரளும்—அசையும். வரை—மலை. நெடுங்கண் குறத்தி—நீண்டகண்களையுடைய வள்ளிநாயகியார். களிகூரும்-மகிழ்ச்சிமிகும். தள்ளா மதுகை நீங்காவலிமை—முருகன்மணங்கமழ் தெய்வத்திள நலமுடையவன். சரண்—சரணம். திருவடிகள்.

## திருஞானசம்பந்தர்

6. வெள்ளாங்குருகு—வெள்ளையன்னப் பறவை. இளம் பிள்ளை—இளமையாகிய குஞ்சுகள். முகையவிழும்—அரும்புவிரியும். தடம்-தடாகம் (குளம்) நள்ளார்-பகைவர் சமையம்—அமயம். குறும்பு—வீண்செயல். எறிந்து—அறக்களைந்து. தெள் ஆர்—அமுதக் கவிதை. தெய்வீகத் தேவாரப்பாடல். தலைக்கொள்வாம்—தலைக்கணிவாம்.

## திருநாவுக்கரசர்.

7. புல்லார்-பொருந்தார். (பகைவர்) புலையர்-இழிஞர். பொருந்த வீக்கி—நழுவாதபடிகட்டி. கல்லேபுணை—கருங்கல் தெப்பம். கவர்வாய்புள்—கொக்கு (பகாசுரன்) கொல் ஏறு—ஈண்டுத் திருமால். காமாரி—காமனை யழித்தவன். பழிச்சும்-துதிக்கும். சொல்-தேவாரப்பாடல். பவம்-பிறவி.

## திருநாவலூரர்.

8. மலரயன்—மலரிலுள்ள பிரமன். உந்தி-கொப்பூழ். வெண்கேழல்—வெள்ளைப்பன்றி. (சுவேத வராகம்) முருகு உலாவும்—மணம் வீசும். புரம்—முப்புரம். முறுவலான்—இறைவன். (சிறுசிரிப்புடையவன்) பரவை—பரவை நாச்சியார். ஏகல்—செல்லல். பணித்த—வேண்டிக்கொண்ட, நாவலன்—நாவலூரன் ஆகிய நாவல்லவன். பணிதல்-வணங்கல்

## திருவாதவூர்.

9. முதுக்குறைவு—பேரறிவு, ஏற்றெதிர்ந்த-எதிர்த்து வந்த. சாக்கியர்-பௌத்தர். வரைத்தோள்வழுதி-மலைபுரை தோள்களையுடைய அரிமர்த்தன பாண்டியன். வைகை அழைத்து—வைகையாற்றில் பெரு வெள்ளம் வருமாறு செய்து. மணிமன்றில்பரம்—இறைவன். (இரத்தினசபையில் எழுந்தருளியுள்ள பரம்பொருள்.) பரமன்—ஞான வடிவானவன்.

## ஆசிரியர் வணக்கம்.

10. பாழி—பருமை. குடுமி—சிகரம், பொலங்கிரி—மேரு. காழ்பழுத்து—வயிரமுற்றி. சுவாமிதேவன். ஆசிரியர் பெயர்.

பொதிந்த—தங்கின, (நிரம்பின.) பேழ்வயிறு—பெரும் வயிறு. யாமை—கூர்மம், பாகு—பாகன். மழலை—இரீங் காரம். ஓச்சும்—ஓட்டும் வீரபூபதி—வீரபாண்டியன். பூமிக்குப்பதி. மானம்—பெருமை.

## அநுக்ரமணி—பதிகம்.

1. காதை-கதை (புராணம்) கேளா-கேட்டு. ஏர்-அழகு குலாய்—குலாவி பஞ்சவர்—ஐவர் (பாண்டவர்) வேரி-தேன் தொடையல்—தொடுக்கப்பட்டது. வீட்டு இன்பம் – முத்தி நலம். ஆறு—வரலாறு.

2. மகதியாழ்முனிவன்—நாரதமுனிவன். தரு-கற்பகத் தரு. அரசன்-தேவேந்திரன் வருணம்-வகை. ஆச்சிரமம்-நிலை.

3. எள்ள அரும்—எள்ளரும், இகழமுடியாத (புகழுடைய) இயல்—இலக்கணம். மாரி—மழை. வள்ளம்—கிண்ணம், கமலப் புத்தேள்—பிரமன். பள்ளநீர்—கடல்.

4. துறு—மயிர்செறிவுற்றமயிர். நிலவு கால்—நிலவினைப்பரப்பும். சிருட்டி—படைப்பு. பிறங்குஒளி—விளங்கும்ஒளி. வராகம்—பன்றி. பிறைநிகர் எயிறு-பிறைபோலும் வளைவுற்றபல். தமம்—இருள்.

5. துளவினன்—திருத்துழாய்மாலையினையுடைய திருமால் விண்ணவன்—பிரமன் கண்ணுதல்—இறைவன் அட்டமூர்த்தி — எட்டுருக்கொள் இறைவன் மேய — மேவிய. விழைவு—விருப்பம். காலன்—இயமன்.

6. பிதிர்—புள்ளி. கொம்பு — கொம்பர்எனப்போலியாயிற்று ஆற்றி—செய்து. அற்பு—அன்பு. இமயவேந்தன் —பனிமலையரசன். பயந்த—பெற்ற. வெற்பு இளங்கொடி—மலையரையன் பாவை, பார்வதி.

7. வெருவுற—அச்சம்உற. தக்கன்—நவப்பிரமர்களில் ஒருவன். வீரன் வீரபத்திரக்கடவுள் வேள்வி—யாகம்.

8. இரணியன், இரணியாக்கன்—பொன்வடிவினனும் பொன்மயமானகண்ணினனும். அமர்—போர். மரு—மணம் துளவம்—துழாய் (துளசி) சமம்—போர். புராரி—திரிபுரத்தையெரித்தவன். (காரி—என்பதுபாடபேதம்) பொன்றி—அழித்து.

9. பாஅடி—பரந்தஅடி. ஞாலம்—பூமி. கவர்ந்த—பற்றிக்கொண்ட. ஓவில்-ஒழிவில்லாத. புலத்தியன், அகத்தியரோடொத்தவன், மரபு—வழிமுறை

*10.* இருள்குறும்பு—பண்புத்தொகை வெய்யோன்—செஞ்சுடர்ஞாயிறு இராமன்—தசரத குமாரர் நால்வருள் மூத்தவன். அருந்தி—அவா. கான்—காடு (ஆரணியம்) அணங்கு—சீதாபிராட்டியார். வெரு—அச்சம். அரக்கர்கோன்—இராவணன். வேர்—சந்ததி.

*11.* சேது—சிவதலங்களில் ஒன்று இஃது பாண்டிப் பதினுன் கினுளொன்றென்பர். தாது—மகரந்தம். தாழ்ந்து—பணிந்து. ஏதம்—குற்றம். எரிமணி—மாணிக்கம். மௌலி—முடி. தீயோர்—இராவணுதியர்.

*12* வண்துழாய்அலங்கல்தோளான்—இராமன். அலங்கல் — மாலை முகடு — உள்ளிடம், மேல். திங்கள்மரபு—சந்திரவமிசம். திறல்-வலிமை. வேந்தர்-புரூரவா முதலினோர்.

*13.* நாமம்அற—நாமற பெயருந்தொலைய. வீட்டி—அழித்து. தீஞ்சொற்பாவை—நப்பின்னை (நப்பின்னை பிராட்டியார்.) துய்த்த—அநுபவித்த. மடவார் மகளிர்கள்

*14.* வெண்பூதி—வெண்திருநீறு, கண்டிகைமாலை—உருத்திராக்கமாலை, பாம்பன்—சம்புவைவணங்கிப் பெற்ற பிள்ளைக்குச் சாம்பன் என்பது பெயர்போலும். நயப்பு—விருப்பம்.

*15.* இலிங்கோற்பவவடிவம். அஃதாவது அண்ணுமலையார் தோற்ற முரைக்கப் பெறுகின்றது. (அடிமுடிதேடிய வரலாறு வகுக்கப் பெற்றுளது) மலைவு—மலைத்தல். விபரீதம் காதை—வரலாறு

*16.* ஊனமில்வியாதன்—பிறவிப்பெரும் பிணிதவிர்த்த வியாசமுனிவரர் வேனில்வேள் — வேனிற்காலத்திற்குரிய மன்மதன் (காமன்) காசி சிறப்பு—காசிதலத்தின் மேன்மை

*17.* பனிக்குறும்புஎறியும் வெய்யோர்—பன்னிருசூரியர் புனிதம்—தூய்மை. புகர்—குற்றம், சீக்கும்—நீக்கும்

18. ஓர்ந்து—உணர்ந்து வரைத்த—எல்லைப்படுத்தின வண்மைகள்—வளப்பங்கள். பரித்திடுமேரு—பூதரம் பரித்திடல்—தாங்கல். நவகண்டம்—ஒன்பதுவகையான பிரிவுகளை யுடையது. இயற்கை—தன்மைகள்

19. சீலநூல்—வேதம் ஆகமம் மிருதி புராணம் முதலியன. சால்பு—நிறைவு. பால்பட—பகுதி (வகை) பொருந்த மன்வந்தரம்—மனுக்களின் (முடிவு) மூன்றும்உகம்—துவாபரயுகம்

வதரி-பதரி. இலந்தைமரச்செறிவுடைய ஆசிரமம் பதரிசாச்சிரமம். எனப்பொருள்படும் மகேசுரன்—இறைவன் சாங்கியம்-கபிலராற் செய்யப்பட்ட சித்தாந்தம் (யோகநூல்) சம்பிரதாயம்—வழக்கம். பத்திமை—அன்புடைமை.

21. விச்சுவஉருவம்—பேருருவம். விமலன்—தூயவன் இச்சையிற்சத்தி—முச்சத்திகளிலொருவர். பிரவஞ்சம்—பிரபஞ்சம் (உலகு) மிகுதி—மேம்பாடு

22. புணர்ப்பு-கூட்டு. பாய—பரவிய. பாற்பட-இசைத்தல்-வகைப்படுத்தியுரைத்தல். மேய—மேவிய (பொருந்திய)

23. அரில்—குற்றம். தேசு—விளக்கம். மாசு—குற்றம் மாண்பு—பெருமை. பூசுரர்—மறையவர் (பார்ப்பனர்)

24. அல்லவை—நன்றல்லாதவை (தீயவை) நித்திய கருமம்—நாடொறும்செயற்படும் செய்கை. தென்னம் புலத்தினோர். (தென்புலத்தோர்) பிதிரர்கள். நவை—குற்றம் சிரார்த்தம்—அன்புடன் ஆற்றுவது. புல்லியோர்—புன்மைச் செயல்புரிந்தவர் (சாதிச்சண்டாளர்—கர்மச்சண்டாளர் ஆகியோர்)

25. சூதகம்—தீட்டு. ஆசௌசம்—இறப்பு, பிறப்பு இவ்விரண்டிற்கு உரியதீண்டல். நன்கு-நன்மை. பகுதி-பிரிவு (வகை)

(26) எண்ணிரண்டு-பதினாறு. புகர்—வழு எண்ண—நினைத்தற்குரிய. எதி—யதி. துறவுபூண்டவர் (பற்றற்றவர்) ஒழுக்குதீ—ஒழுகல்.

27. கமலப்புத்தேள் — பிரமன். பெட்பு—விருப்பம். உகிர்—நகம். கொய்து—கிள்ளி. மறம்-அஞ்சாமை. தண்டம்-வதை. தொகுத்து—திரட்டி. பிறங்குசீர்ப்புராரி-இறைவன். (சிவபெருமான்) ஐயம்—பிச்சை. பெட்பு—விருப்பம். இஃது வைரவக்கோலம்.

28. நக்கு-சிரித்து (புன்னகைபுரிந்து) மான்மியம் (மகாத்மியம்)-சிறப்பு. கண்மலர் தாமரையாகிய. கண்மலர் (புண்டரீகாட்சம்) துளவப்புத்தேள்-திருமால். பெண்ணொருபாகன்—உமையொருகூறன். திகிரி—சலந்தரனைத்தடிந்த சக்கரம். (சுதரிசனம் எனப் பெயர் பெற்றது) வண்ணம்—அழகு ஈசன் —சிவபெருமான். சீர்த்தி — மிகுபுகழ்.

29 கறைமிடறு — கரியகழுத்து (நீலகண்டம்) கருதலன்—சிந்திக்காதவன். வாளா—சும்மா. புளிஞன்-வேடன்.

30. கடவுள்தீர்த்தம்—தெய்வீகதீர்த்தம். இலவுஇதழ்-இலவம்பூப்போன்ற மெல்லிய உதடுகள். (இலவு—முதலாகு பெயர்) பொம்மல்—பூரிப்பு. வனப்பு—அழகு. நிலவுநாறு—வெள்ளியநாறு. பித்தை—கூந்தல். நெடுந்தவர்—பெருந்தவ முனிவர். மருள—மயக்கங் கொள்ள. பலியிரந்தகோலம்—பிட்சாடனகோலம். பலி—பிட்சை. சிலாதன்—கல்லுண்ட முனிவரர்.

31. முனிவரர்—முனிவருள் மேலானவர். நால்வகையொடுக்கம்-நால்வகை யுகமுடிவு. மெய்த்தவம்-உண்மையான தவம். மைந்தன்—சப்யேசன். நாமம்—திருந்திதேவர். தனது பேருருவு—சாரூப நிலை.

32. பால்புரைநீறு—வெண்மைத்திருநீறு. படர்சடை பரவிய சடாமகுடம். பவளம்குன்று—பவளமலை. சீலம்—ஒழுக்கம். கருணைவாரிதி-அருட்கடல். தெருளுற-விளங்கிட.

## பூருவகாண்டம்-முதற்காண்டம்

1. மணிமார்பு-அழகியமார்பு. திண்தோள்-வலியதோள்கள் முகை—அரும்பு. (குவிந்துளது) மரு-மணம். வயங்கும்-விளங்கும். கதிர்கால்—ஒளியினைச் சொரிவது. ஐம்படை—பஞ்சாயுதம் (கதை வில் வாள் சங்கு சக்கரம்) ஆமையுரு ஏற்று இருந்தோன் — கூர்மாவதாரப்பெருமான். காதை—புராணம்.

2. சீற்றம்—வெகுளி. சிற்றம்—காமமயக்கம். முக்குற்றம். எரிந்து—கெடுத்து. (ஒழித்து) தேர்ந்து-தெளிந்து. அரிய-முடியாத. மறைதேர்-வேதங்களைத் தெளிந்த. புரியும்-செய்யும். அருள்கூர்—கருணைமிக்க.

3. வந்தமுனிவன் — சூதபௌராணிகன். போற்றி—துதித்து. வயங்கும்—விளங்கும். மணி-இரத்தினம். நந்தல்-கேடு. புந்திமகிழ்ந்து—மனங்களித்து.

4. வட்டம்அணைகடவுள்-பிரமன். தமரம்—ஒலி. திரை-அலை. புராணம்—பழையவரலாறு. அமர்குற்றனன்—அமர்ந்தனன். அறையவேண்டி — சொல்லவிரும்பி. ஆணவம் — மும்மலங்களின் ஒன்று (ஆன்மாவினையணவிநிற்பது) திமிரம் —இருள். புணை—தெப்பம்.

5. மம்மர்—மயக்கம். கிழங்கு—மூலம். கிளத்துக—சொல்லுக. முதல்வன்—காத்தற் கடவுள். உலகமுழுதளந்த தாள்தாமரை — வாமனாவதாரத் திருவடித்தாமரை. வேட்டோர்—விரும்பியோர்.

6. மறுமை—மறுபிறப்பு. தவம்—தவச்செயலானது தேயும்-அழியும். (குறையும்) முத்தம்-முத்து மாலை. ஒளிரும் — ஒளிவிட்டுவிசும்

7. தோற்றம்-படைப்பு. ஒடுங்கல்-ஒடுங்குதல் (அழிவு) துகள்—குற்றம். அரசர்மரபு—அரசர்வரலாறு. மன்வந்தரம் முனிவராற்றல் அரசர்மரபு முதலிய வைந்தும் உரைப்பது புராண இலக்கணமாம்

8. பதினெண் புராணங்கள்:— பிரமம், பதுமம், வைணவம், சைவம், பாகவதம், பவுடிகம், நாரதீயர, மார்க்கண்டம், ஆக்கினேயம், பிரமகைவர்த்தம், இலிங்கம், வராகம், காந்தம், வாமனம், கூர்மம், மச்சம், காருடம், வாயு, என்பனவாம்

9. விசும்புதனிபுரக்கும் புத்தேள்—விண்ணுலகினைக் காக்கும் இந்திரன். உபபுராணம்.(18 ஆம்) பதினெட்டாம். புனையும்—அழகுற்றுவளரும்

10. நவை-குற்றம். சனற்குமாரம், நாரசிங்கம், நந்தி துருவம், நாரதீயம், மார்க்கண்டம், ஆக்கினேயம், காபிலம், மானவம், வவுசனம், வாசிட்டலைங்கம், வாருணம், காளிகம், சாம்போசம் சவுமியம், கிரவுஞ்சம் பராசரம், மாரீசம் பார்க்கவம் என்பன.

11. செஞ்சோறு—நற்சோறு. ஊட்டும்—உண்பிக்கும் சிறுஅறுவை—சின்னஆடை. முனிவீர்—விளி. கூர்மம்-கூர்ம புராணத்தினை. நஞ்சார்மிடறு—நஞ்சுண்டு கறுத்தகண்டம் புத்தேள்—பரமேசுரன்.

12. நவிலும்—கூறப்பெறும். குழிசி—பானை. இரங்கும் ஒலிக்கும். கறைஅனல்—நஞ்சாகிய அக்னி. அரவம்—வாசுகி. மதி—மதித்தற்கு (மதி – கடைதல்) தறி—தூண். ஆர்அமுதம் — கிடைத்தரியதேவர்உணவு. வரை—மந்தரமலை. கடைதற்கு ஆதாரமாவிருந்தது. கூர்மத்தின் முதுகு. (கூர்மம் —மாயோன்)

13. படாம்—திரை. அயிராவதப்பாகன் — இந்திரன் தாமரைக்கண்முன்னோன்-திருமால். முளரி—தாமரை திரு—இல்ட்சுமி. இன்னோள்—இவள்.

*14.* நேமி—சக்கரம். கிள்ளை—கிளி. தண்போது—குளிர்ச்சிபொருந்திய. தாமரை — அரும்பு (நாளரும்பு) பார்க்கின்—ஆராயுமிடத்து. அடைவு—முறை.

*15.* பொறி – புள்ளி. உண்டாடும்-பருகியாடும். மேய-மேவிய. இறைவன்—ஈண்டுப்பிரமன். புணர்க்குமாயை—கூட்டுமாயை. மாயச்சிறை—மாயமாகியவலை. இடைப்படுநர்—அகப்படுவோர். தீர்க்குநர்—தீர்ப்பவர். விடுப்பவர். செங்கமலம்விண்டான் — செந்தாமரைமலரனைய திருவாயினைத் திறந்துரைத்தான்.

*16.* புணர்க்குமாயை – கூட்டுவிக்குமாயை. ஏறினோர்—மீண்டோர். நற்காதை-நன்மைதரு புராண காதை. தீங்குஅற-பிறவிக்குற்றநீங்க. யார்க்கும்—எத்திறத்தார்க்கும். சிவனடி நீழல். முத்திப்பேறு

*17.* முன்னைப்பவம்-முற்பிறப்பு. ஆழி-ஆழமுடையது (கடல்) வழுதியர்—பாண்டியர். பாய்ஒளி பருதி—சூரியன்.

வை—கூர்மை. பசுமைதார் – பைந்தார் இயற்கைநலங் குன்று மலர்மாலை. சேய்அன்னான் — முருகனை யொத்த மொய்ம்பினன். சிமிழ்த்தல்—மூடுதல்

*18.* வருபிறப்பு—மறுமை. மம்பர்—மயக்கம். தெருள்—தெளிவு. அகங்கைநெல்லி—அங்கைநெல்லி. (உள்ளங்கை நெல்லிக்கனி யென்பது உலகப்பழமொழி. (கரதலாமலகம் என்பது வடமொழி)

*19.* இருபிறப்பாளன் — பார்ப்பனன். என்உழைப் போந்து—என்னிடம்வந்து. கருதரும் — எண்ணமுடியாத. துகள்—குற்றம். கற்ற—பழகிய.

*20.* வைவச்சுதமன்—மனுக்களில் ஒருவன். மன்னு—அரசே! (விளி) எவ்வம்—துன்பம். ஆணவம்—மூலமலம் (மும்மலங்களினொன்று) துவர்—பவழம். இலவு—இலவம்பூ வாய்—உதடு. குழகன்—பரமேசுரன். தெய்வம்—விளக்கம்.

20. செம் அடி—சேவடி. செவந்ததிருவடிகள். அன்றே—அசைநிலை.

21. வெண்மதிமரபு—சந்திரவமிசம். தென்னு-தென்னவனே (விளி) திறை—வரி. (கப்பம்) பரவல்—போற்றுதல் பைநாகம்—படமுடைய ஆதிசேடன். பாரேழும்—ஏழுலகங்களும். அளிப்பாய்—காப்பாற்றுவாய். (புரப்பாய்) என்னு—செய்யாவென்னும் வாய்பாட்டுவினையெச்சம். எழில்—எழுச்சி புக்கான்—அடைந்தான்.

22. பொதுஅற—பிறர்க்குரிமைநீங்க. நூல்முறை—வேதநெறி. ஓராழி—ஒன்ருகிய ஆணைசக்கரம். அலகு—எண். பரிமாமகம்-அவமேதம். ஆற்றி—முடித்து. நிலவும்-எங்கும் பரவும். கலையின்கடல்கரைகண்டவன் — எண்ணெண்கலைகளின் முடிவு கண்டவன். வாழ்நாள்—ஆயுட்காலம். கரைகாண்டல்—முடிவுஅறிதல். வாழ்நாள்கரைக்காணல்-மாண்டு போதல் (மரணமுறல்) மரித்தல்.

23. தோலாவிறல்—தோற்கலாத. (பின்னிடாத) ஆற்றல். பால்ஆழி-பாற்கடல். தீவு-வைகுண்டம். மாலோன்என—மால்போல. (சாரூபம்) போகம்—நுகர்வு. மகிழ்ந்து—துய்த்துக்களித்து. மேலோன்—இறைவன்.

24. அருமாமகம் — செயற்கரியவேள்வி — நற்பலன் விழையாது-பயன்கருதாது. என்உரு-என்வடிவம். ஒருகலை-ஒருகூறு. எதிர்மன்ன-எதிர்ப்பட. பணியா—வணங்கி. அடையாளம்—சின்னம். மாது – இலக்குமி பிராட்டியார்.

25. மன்றல்—மணம். அற்புதம்—வியப்பு. (ஈண்டு ஞானம்) இறையடியிற் சென்றுற்றவர்—இறையடியிணை மலரையிடையீடின்றி நினைப்பவர். மருளும்படி-மாயையுறும்படி (மயங்கும்படி) உயர்ஞானம்—சிவஞானம். சிவன்அருள் பேரருள்.

26. ஐம்பூதத்தொடுகலந்துங் கலவாதே நிரித்தியங்குந் தனிமுதற்பொருள். சாற்றுதிட கூறுவாய். சொலும் சொல்லும் என்னுமுற்றின். இடைக்குறை. மயில்—மயில் போலும் சாயலினள். அகன்றுள்—நீங்கினள்

27 இப்பாட்டு யோகச்செயல் உணர்த்துவது. அருவத்துறும் ஆன்மா—பரமான்மா' (இறை) மரு—மணம். மன்றுற்றிடுபோழ்தின்—நிலைநிறுத்தி யெண்ணும் சமயத்தில்.

28. முலையானை—உருவகம். எந்தாய்—எமதுபிதாவே! மறையோன்—இந்திரத் துய்ம்மனன். கொந்து—கொத்து தாவா—தூவி.

29. உயர்நெறி-முத்திநெறி. அரனடிப்பூசனை-சிவனடிப் பூசைவேண்டுநர்-விரும்புமவர். ஓர்ந்து-செவ்விதின் உணர்ந்து

30. ஓதிய—(ஓதின) ஒத்துக்களால் ஓதப்பட்ட. நல் ஒழுக்கம்—சீலம். காதல்—அன்பு. சிமிழ்ப்பு — கவரும்வலை (வேட்டுவன்புட் சிமிழ்த்தற்று) வேட்டுவன்—வெம்மை யுடையவன். அனைத்தும்-எல்லாமும். இல்லொழுக்கம்-இல் லறவொழுக்கமும்—துறவறவொழுக்குமென்பன. கைஒரீஇ-கைவிட்டுநீங்கி. ஆதிஅம்பரஞ்சுடர். சிவபெருமான் பாவிப்பாய்—பாவித்தலைப் புரிவாய்.

31. முப்பகுதி — மூன்றுபாகுபாட்டினை யுடைத்து. உருவேற்றல்-செபித்தல். அல்வியக்தம்-வெளிப்பட்டுப்புலனுவது. சிவவோகம்பாவனை. (தற்பரம் மேவரும் பாவனை சிவோகம்) மேலையோர்—பெரியோர்

32. முடிவினில்—வேதசிரகளாகிய உபநிடதத்தினில். மொழிந்தருள்-கூறப்பெறும். பிரமம்-பெரும்பொருள். மால் அயற்கு-பிரமவிட்டுனுக்களுக்கு. அடிமுடிதேடல்-ஆதியந்தம் ஆய்தல். அரியது—முடியாதது. நறுமலர்—நல்மணம்உறு மலர். தூவி — சிந்தி ஒடிவுஅறு—இடையீடின்றி முடிதல்.

33. இந்திரத்துய்மன்-என்பான். ஒருபக்தசிரோன்மணி ஏத்துறு—ஏத்திதனிப்பர. தத்துவம்-விபூதிகாரியம். நினைப்பு—நினைத்தல். அரும்காரணம்-அரியகாரணம். இருத்தி-இருப்பாய். மனக்கு-மனத்திற்கு. உற-பொருந்த. மகிழ்ந்து-களித்து

34. நித்தியானந்தம்—அழிவில் இன்பம். நிமலம்—தூய்மை. அரும்—அரிய. பரதத்துவம்—அயிசுவரியம். (வித்தம்) முனி—இருடி. வரம்—மேலான. வித்தகம்—சதுரப்பாடு.

35. காரியம்—உலகம் (சகம்) அதன் காரணம் தனித்து ஏகும். அவ்வியக்தம்-இறைவன். படைத்து அளித்து நீக்குதல்—படைத்துக் காத்து அழித்தல். ஒண் சுடர்—ஒளி பொருந்திய சோமசூரியாக்கினிகள். யான்—இயமானம்.

36. அரில்—குற்றம். தப—கெட. உயர் யோகமாட்சி—சிவராசயோகமாண்பினால். வன் புலன்—வன்மையான (அடங்காத) புலன்கள். தென்புலம்—தென்றிசை. உயிர்

குடித்தல்—உயிரை நீக்கல். காலசங்காரஞ் செய்த இறைவன். சேவடியிணைகளைக் கருதுக வென்பதாம்.

37. வருணம்-வகை. ஆச்சிரமம். வெம்மை-கொடுமை. வார்சடை—நீண்ட சடை. அத்தன்—பிதா. போற்றுக—அருச்சிக்க. உத்தமம் வருணம்—மேலானவகை. அரோ—அசைநிலை.

38. ஆன்ற—நிறைந்த. அளப்பு அரும்-அளத்தற்கு அரிய. சகம்-உலகம். ஏன்ற-பொருந்திய.

39. ஆசாரம் — ஒழுக்கம். தீர்த்தம்— புனிதமானநீர் நீள்சுடர்—பேரொளி. (சூரியன்முதலிய நவக்கோள்.) எவன் கொல்ஆம்—என்கொலாம் எனவாயது.

40. தீபம்-தீவுகள். வரை-மலை. எழுகடல். சத்தசாகரம் நவதீர்த்தம். ஒன்பது புண்ணியதீர்த்தங்கள். யாணர்—புது வருவாய். வழங்குக—சொல்லுக.

41. கோட்டம் — கோணல். குடந்தம் — வழிபாடு. வேட்டிடு-வேண்டிடு. (விரும்பி)விண்ணவர்-தேவர். துணைத் தாட்டுணை சார்ந்தனம்-(தன்மைப்பன்மை) இரண்டு திருவடிகளை அடைந்தேம்

42 ஆங்குஅவன் — இந்திரத்துய்ம்மனன். துயில் — உறக்கம். நீத்திட்டு—விலக்கி. யான்எனது—யான்என தென்னுஞ்செருக்கு. சீவான்மாவினை பரமான்மாவாகிய இறையோடும் ஒடுக்கி.

43. பருதியஞ்செல்வன்-சூரியன். பதி—நகர். பணிப்ப—கட்டளையிட. மருவிய—மருவின (போலி) வந்துகலந்த யோகமாட்சியால்.-யோகச்சிறப்பால் படர்ந்து செல்போதின்-நன்ருகச்செல்லுஞ்சமயத்தில். விரிகதிர்விமானம்-பேரொளி வானவூர்தி. இவர்ந்து-அதன்மேலேறி இருபுடை-இரண்டு பக்கத்தும் மானசோத்திரமால்வரை-மானசோத்திரம் எனும் பெயர்பெற்றமேருமலை.

44. சகம் எல்லாம்நோக்கி—உலகப்பொருள் அனைத்தையும் (அகக்கண்ணுற்பார்த்து) புகுந்திடாது ஒழுகல்—அதனிடைப் பற்று வையாது ஒழுகுதல். உரைஉணர்வு – வாக்கு மனவுணர்வு இறந்த—கடந்த. பிரவயவனை—பிரமஉபாசனை. மூமுமுதல்—பரம்பொருள். குணம்குறி—பண்பும். பெயரும் (நாமரூபம்) உன்னரும்—கருதற்குமுடியாத. நல்சீவன்—ஆன்மத்தளை கழன்ற அறிவு நீங்கிய. பாசமில்உயிர் முத்தன்-விடுபட்டவன்.

45. அருந்தும்—உண்ணும். பரம்ஒளி — பரவியஒளி மழுங்க—குன்ற. பனிவரைமுகடு—பனிமலையின்உச்சி. தனிச்சுடர் —அம்மையப்பனுகிய தனியொளியாம் சங்கரனை. முன்னுதலும்-எண்ணுதலும் அருவுருவாகுமெய்ப்பொருள்-சச்சிதானந்தமாகிய சிவலிங்கத்தனிவுரு (உண்மையறி வானந்தப் பொருள்) உருவின் எய்தியது—வடிவுற்றதாயிற்று

46. உருவை—வடிவினை. கையினைமுகிழ்ப்ப—இருகைகளும்கூப்ப. ஐயன்—பரமேசுரன். பணிதலும்—வணங்கலும்

மாமறையோன்— இந்திரத்துய்ம்மனன். சூரியரில்—சூரியரைப்போல. பிழம்பு—வடிவு. இரணியம்—பொன். இருணிய கருப்பன்—இரணியமயமான கருவிளையுடையவன். (பிரமதேவன்) யாவரும். யாவும்—உயர்திணைப்பொருளும் அஃறிணைப் பொருளுமாகிய அனைத்தும். முத்தர்—எல்லாப் பற்றுக்களினின்றும் விடுபட்டவர். செழுங்கனல் பிழம்பு—நல்ல அக்னியின் வடிவு. ஈண்டு ஆகுபெயராய் சிவபெருமானை யுணர்த்திற்று. உயர் இன்பம்—உயர்வாகிய நலம் (முத்தி)

48. குழந்தைமதி — பிறைச்சந்திரன். வழங்க—கூற. அருமறையோன்—அரிதற்கரிய வேதங்களையுணர்ந்த நாரத முனிவர். உலகம் பொதிந்த சேவடியினோன்—திருமால் (உலக மளந்த செவந்த பாதங்களையுடையவன்)

49. பயின்றோர்-உயிர்க்குறுதிபயக்கும் உண்மை நூல்களை ஐயந்திரிபு அற நல்லோர் பலருடன் பல்காலும் பயின்றவர். மன்ற—உறுதியாக. கிண்கிணி—காலில் அணியும் சிறு சதங்கை.

## 2-வது வர்ணாச்சிரமம் உரைத்தது

சாதிகள், நிலைகள் இவற்றினைப்பற்றி யுரைப்பது.

1. அமரர்-தேவர், இறவாதவர்களென்பது பொருள், தாழ்ந்து—பணிந்து. பஞ்சாயுதம்—ஐந்துபடைகள், முகம் மலர்ந்து—முகமலர்வுற்று,

2 சித்து—அறிவு. நாராயணன்—திருமால் (நீர்ப்பள்ளியான்) மேலோர்—பேரறிஞர். மகேச்சுரன்—பேரிறைவன். (சிவபெருமான்)

3 பாய்திரை—பரவிய அலைகள். சுருட்டும்-மடங்கும். சூட்டு—உச்சிக்கொண்டை. ஏல்லை—பொழுது. கண்ம தர் நீத்து—துயில் நீங்கி.

4 மல்குஇருள்—நிறையிருள். மாஇருஞாலம்—மிசப் பெரியபூமி. சீக்கும்—நீக்கும். பில்கும்-துளிக்கும், சேஇதழ் கமலம்—செந்தாமரை மலர். செல்வன்—பிரமன். கண் டேன்—செய்தேன். (குறிப்புமொழி)

5 இச்செய்யுள்:— பிரமன் தோற்றத்திற்குப் பின் னர், திருமகள் தோற்றங் குறிக்கப்பெறுகின்றது. பொன் —இலட்சுமி. இளநீர் ஒத்தகொங்கையாள் என்பார், செவ் விளநீருந்தாங்கி என்றார்.

6 இச்செய்யுள்:— திருமகளார் இலக்கணம் செப்பு கின்றது. மங்கலை-மங்கலக்காரியங்களைப் புரிபவள். மாயன் மாயை—திருமாலும் திருமகளும். (உம்மைத்தொகை) பிரகி ருதி—பகுதி (மூலம்) எல்லா உறுப்புகளினுஞ் சிறந்தவை கண்கள் என்பார், கயல் நெடுங்கண் என்றார். திருவினைசெய் விப்பாளை திருவினையென்றது குறிப்பு. பொங்கிய உவகை —மிக்க களிப்பு.

7 படைப்பவை—தோற்றுவிப்பன. மலிதல்—நிறை தல், வான்படுபூதம்—ஆகாயத்தினின்றுந் தோன்றும் ஏனைய பூதங்கள். அவை, மண், நீர், தீ, வளி, விண் என்பன.

"அகலிரு விசும் பென்றும்"

'வானின்றிழிந்த வரம்பிகந்த மாபூத்தத்தின் வைப்பெங்கும்' என வருமவற்று லறியப்படும், மருள் உறுபந்தம்—மயக்கம் என பொருந்திய பாசம். கான்—மணம், கமலை—திருமகள் தாமரையிலுறைதலால், பணித்தி—கட்டளையிடுவாய்.

8 கமலவீடு—தாமரை மலராகிய இருக்கை. இளங் கொடி—இளமையாகிய கொடிபோல் பவளாகிய இலக்குமி (அன்மொழி) வதனம்—முகம். வனைகலம்-பண்ணும்பாண் டம். திகிரி—சக்கரம், தாம்பு—கயிறு. புரிதி—செய். அன்றே —அசைநிலை

9 தத்தமவருணம்-தங்கள் தங்களுடையசாதி. ஓதும் ஒழுக்கு-நூல்களிற்சொல்லப்பட்ட ஆசாரம். சார்ந்து-பற்றி சித்தம்மாசு—மனக்குற்றம். எறிந்து—களைந்து. பொய்யில் தீர்ந்து—பொய்மையினின்றும் விலகி. நான்குமறை-இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பன. தேர்ந்து—தெளிந்து. மைதவழ் மிடற்றுப்புத்தேள்—நீலகண்டன். சிவபூசனைபுரி பவரிடத்துச் செய்யாள் மாயை செய்யாள் என முடிக்கற் பாற்று.

10 நவப்பிரமர்கள்—மரீசி, அங்கிரா, பிருகு, தக்கன், அத்திரி, வசிட்டன், புலத்தியன், இருது என்பவர்கள். வேதன்—வேதங்களையருளிய பிரமன், மானசசிருட்டி-மனத் தினுல் உண்டுபண்ணல். (யோகமாயையால் உதிப்பிப்பது)

11 முகம், தோள், தொடை, பாதம், இவற்றினின்றும் தோன்றினவர் நால்வகை வருணத்தவர். பதுமன்—பிரமன் மகம்—வேள்வி.

12 வேதமும், வேதங்களைச் சார்ந்தனவும் நன்னூல்க ளாம். வேதநெறிபுகலா மாறுபட்ட நூல்கள் தீயநூல்கள். செவ்வியர்—நல்லவர். அல்லர்—நல்லவர் ஆகார்.

13 உயிர்கள் உணர்வுறல் ஒழுக்கத்தினுல் என்றும் இஃது நல்வினைப்பாலது என்றும் நல்லொழுக்க மின்றி யுணர்வின்றித் தீத்தொழில் புரிதல் தீவினைப்பாலதென்றும் குறிப்பிடப்படுகின்றது. புகுதும்—சென்றடையும்-தன்மை முற்றுமாம்.

14 அட்டமா சித்திகளாவன:— அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிரகாமியம், ஈசித்துவம், வசித்துவம் என்பனவாம். புகுந்திடாநெறி—தீ நெறி. தாமதத்தினுய சித்தி— ஞானநெறிபுகாத சித்தி. பொருத்துகாலம்—பக்குவப்பட்டகாலம். (பொருந்துகாலம்) பொன்றிடும்—அழியும். என்ப—என்று கூறுவர், மாது, ஓ அசைநிலைகள்.

15 உடுப்பு — உடும்பு. (வலித்தல் விகாரம்) நாளும் நாளும் எனற்பாலது நாள் நாளும் எனவாயது. கருமத்தொடர்பு—வினைசம்பந்தம். தொகுத்தான் — திரட்டினுன், (ஒன்று கூட்டினுன்) சுவாயம்பு—ஒருமனுவின்பெயர், விடுத்தற்கு அரிய—விடுக்கமுடியாத. முறையின்—வரிசையின்

16 இவனுரைத்த நீதி — மநுநூல், கருமம்—செயல் (காரியம்) பிருகு—நவப்பிரமாக்களில் ஒருவர். அந்தணர்க்குரிய அறுதொழில்கள்—ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பன.

17 புரவிமகம்—அசுவமேதம், அமர்—போர், மன்னர்க்குரிய தொழில்கள்—ஓதல், ஈதல், வேள்விபுரிதல், போர்புரிதல், நாடுகாவல் புரிதல், முதலியன. வணிகர்செயல்—கொடுத்தல், ஓதல், மகமியற்றல், உழவு, வாணிகம் ஆனிரை காத்தல் முதலியன. பின்னோர் செயல்—அடுதல், ஏவல் புரிதல் முதலியன.

18 ஆச்சிரமம்—நிலை. இஃது, பிரமசரியம், கிருகத்தம் வானப்பிரத்தம் சந்நியாசம், என நால்வகைத்து. புலன் வாட்டி—புலன்களை வாடச்செய்து. (மனமுற்றடக்கி)

19 இல்லறவாழ்க்கைக்குரிய செயல்—அறம், அக்கினிகாரியம், அதிதிபூசனை, வேள்வி. இறையடி மறவாதுநிறை பூசனை யாற்றல் முதலியன.

20 முற்றுந்துறத்தல்—இருவகைபற்றுக்களையும் அடியோடுவிடல். முதுக்குறைவு—பேரறிவு. ஐயம் ஏற்றுண்டல்-பிச்சை யெடுத்துண்டல். (தவச்செயல்புரிவோர் செயல்,) பரம்உபாசனை—பரம்பொருளை வழிபடல், தீத்தொழில்—மந்திரபூர்வமாக அக்கினி காரியம் ஆற்றல் பலி—பூசனை குரவன் அடிபணிதல்—ஆசிரியருடைய அடிவணங்கல். அற்றம்—சமயம்.

21 நீத்தபருவம்—விலக்கப்பட்ட நாட்கள். அவை யாவன:— அட்டமி, சட்டி, சதுர்த்தசி, தலையுவா, கடையுவை (அமாவாசியை பௌர்ணமி) என்றுந் திதிகளும், ஆதிரை, ஓணம், சென்மத்திரயம் என்றும் நக்ஷத்திரங்களும் ஆம், சென்மத்திரயமாவது பிறந்த நாளும், அதன் பத்தாவது நாளும் அதன் பத்தாவது நாளும்.

22 அரும்பு—நாளரும்பு, அருப்பு என்பது வலித்தல் விகாரம். பூத்தகாலை புனையிழைமகளிரை, நீராடிய பின் ஈராறு நாளும் கூடல்வேண்டும் என்பது இலக்கணம்.

23 ஔபாசனம்—அக்கினிகாரியம். விருந்தினர்—புதியவர் (புதுமையாளர்) அருத்தல்—புசிப்பித்தல். வேதமுறையுணர்தல்—வேதங்களைக் குரவர்பால் ஒழுங்காகக் கேட்டறிதல். பிதிரர் — தென்புலத்தினர். கற்றோர்—புலவர். கழறுவர்—வற்புறுத்தி யுரைப்பவர்.

24 வீந்தாள்—இறந்து பட்டாள். ஒழிதல்-விலக்கல் (விலகல்) புரியார்—செய்யார்.

" இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றினின்ற துணை " என்னுந் திருக்குறட் கருத்துத் தெரிவிக்கப் பெற்றுளது.

25 மருவற்கு-சேரற்கு. உயர்வீடு-பெருநிலம் (முத்தி) சீர்த்தி—மிகுபுகழ். மல்லல்—வளம், அறச்செயலால் இவற்

றினைப் பெறல் கூடும் ஆகலின், விடலாகாது, தருமச்செயலை விடல்—பெரும் பாவ காரியமாகும். அறம் — சாத்துவித காரியமாகும். பொருள்—இராசத காரியம், இன்பம்—தாமத காரியம். இக்குணங்கள் பற்றி இவையுண்டாகும் எனல் நூல் துணிபு.

26 ஆசு—குற்றம். மேலாங்கதி—மோட்சம். பெட்பு—விருப்பம், மத்திமகதி— சுவர்க்கமுதலிய கதிகள். மாசுபூத்த—குற்றந்தோன்றின. இழிகதி—நிரயம். மன்னுவர்—நிலைபெறுவர்.

27 திறம்பாது — மாறுபாடுறாது. துய்ப்போர்—அநுபவிப்பவர். இவ்வுலகம்—இம்மண்ணுலகம், இச்செய்யுள் அறத்தின்வழிப் பொருளீட்டலும், பொருளின்வழி, இன்பந் துய்த்தலும் வேண்டுமென வற்புறுத்துகின்றது, வானவமகளிர்—தேவபோகமாதர். உறங்கிடாது இன்பந் துய்ப்பது—இமையா நாட்டமுடையவராய் இருந்து நலமநுபவிப்பது.

28 கறங்கு-சுழலல் (காற்றாடி) பிறவி-பிறப்பெனும் பிணி. ஞானத்தாலல்லது—சிவஞானத்தாலன்றி. கடக்கல்—தாண்டல் (மாற்றல்) அறம்பொருள் காரணம், சுவர்க்கவின்பம் காரியம்.

29 சதுமுகக்கிழவன்—நான்முகமுடையவன் (பிரமன்) களைகண்—பற்றுக்கோடு (ஆதாரம்) தருக்கள் — மரங்கள், செறியும்— நெருங்கும், நல்லுலகம் — புண்ணியலோகம், மேய (மேவிய)—பொருந்திய, காமுறல்—விரும்பல்

30 வைதிகதருமமானது, பிரவிருத்தி, நிவிருத்தியென விருவகைப்படும். விடுபடாமை — விடுபட்டமை என்பது பொருள். ஆற்றல்—செய்தல். கடிந்து—விலக்கி, ஆம் ஆல் என்பன அசைகள்

31 பொறை-பொறுத்தல் (சுமத்தல்) கருணை-அருள், தானம்—நீர்வார்த்துக்கொடுப்பது. அழுக்காறு—பொறாமை உட்கரணம்—அந்தக்கரணம், அவை—மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன.

புறக்கரணம்—புறக்கருவி. அவை, மெய், வாய், கண், மூக்கு, செவி யென்பன. இவற்றிற்குப் புலனவன. சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன. குறளை—கோள். முனிவு—சினம். பிறழா — பிறழாத, ஈறுகெட்டவெதிர் மறைப் பெயரெச்சம்.

32 புண்ணியநன்னீராடல்-தீர்த்தமாடல் (முழுகுவது) வேதபாரகர்—வேதங்களை நன்கோதிய வித்தகர். நயவாமை—விரும்பாதிருத்தல், கள்ளாது-களவுத்தொழில் புரியாது-நான்கு குலம்—நால்வகை (சாதி)

33 ஒழுக்கு-ஒழுக்கம் (சீலம்) தெம்முனை-(தெவ் முனை) பகைவர்போர், கற்பகம் நிழல்—கற்பகமர நிழலுடைய விண்ணுலகம், புவனம்—உலகு. இம்மை—இப்பிறப்பு.

34 காழ்த்த — வயிரமுற்ற. செற்று—கெடுத்து. கரணங்கள்—கருவிகள், ஊழ்த்த—உதிர்ந்த. மாந்தி—பருகி (தின்று) யோகிலரில் — யோகநிலையில், உறங்குகின்றோர்—தியானநிலையில் துயில்கொள்பவர், சூழ்ந்து—சுற்றி (சூழ்த் தெனல் வலித்தல் விகாரம்) சுருதி — கேட்கப்பெறுவது (வேதங்கள்)

35 கொல்—ஐயர் (இடைச்சொல்) பைந்துழாய்-பசிய துளசி. முகுந்தன்—கூர்மாவதாரப்பெருமாள்.

36 பிரமசரிய நிலையில் இருவகைப்பிரிவினர் உளர். அவர்கள், உலகுருவாணன், நைட்டிகன் என இருவகைப்படுவர், செவ்வன்—நேர்மை, ஒழுக்கு—ஆசாரம்.

37 நவை—குற்றம், வேட்டுளோன்-விரும்பிமணந்து கொண்டவன். தவல்—நீக்கல். கேள்வி-கேட்டல். ஞானம் முற்றி—அறிவுநிரம்பி. உலக்கும் காறும் — வற்றிப்போம் வரையும். துவர்—பவழம், மடவார்—இளமங்கையர்.

38 இல்லறத்தார் இருவகைப்படுவர், உதாசீனன், சாதகன் என, இவர்க்குரிய மூன்றுகடன்களாவன:— புத்திரப்பேறு, மறையோதல், விருந்துபசரித்தல் என்பன. கழித்தபின்—செய்து முடித்தபின்.

39 வானப்பிரத்தர் — இருவகைப்படுவர், சந்நியாசி, தாபசியென. கானம்—காடு, மோனம்—பேசாமை (உரையாடாமை) தீக்காரியம்—அக்கினி காரியம், உரவோன்—வலியவன்.

40 சந்நியாசி இருவகைப்படுவர், அவர் பரமேட்டி, யோகி யெனப்படுவர். இகலும்—மாறுபடும். உள்ளடக்கல் — உள்ளமடக்குதல் (தன்வயமாக்கல்) கருதும்—எண்ணும், தாணுகி—எல்லாந்தாணுகி, கைவல்லியம்—சித்தி (முத்தி)களிப்போன்—மகிழ்வோன்

41 கனை-ஒலி. இமிரும்-இரீங்காரம் புரியும். தாமரைமேற், கடவுள்—பிரமன் துனைவு—விரைவு.

42 புவனம்—உலகு. சிருட்டி—படைப்பு. நாமென்றது. திருமாலை, கவர்-பிளவு. முத்தலை வேற்படை—சூலாயுதம். துடைத்தல்—அழித்தல். திங்கட்குழவி—பிறைச்சந்திரன், செம்பொற்சடை—கபர்த்தமெனுஞ்சடை, பெருமான்—சிவபெருமான். பிராமி, மயேச்சுவரி, அக்ரபாவனை என மூன்று பாவனைகளுள- காயா —(முதலாகுபெயர்) (பூவினை யுணர்த்திற்று.) இமிழ்—ஆரவாரம்

44 காயாமேனி—காயாம்பூப்போன்ற நீலத்திருமேனி கடல்விட நுகர்ந்த தே—நீலகண்டன். அமைவுற்று—உளம் ஒருங்கியமர்ந்து. ஒருமூவர் பிரமன், திருமால், உருத்திரன்.

45 தூஉய்— தூவி (அருச்சித்து)பழிச்சி — துதித்து இறைஞ்சி—வணங்கி, புனைக-தரிக்க. புராரி-திரிபுரமெரித் தவன் அடியார்—சிவனடியார், புண்டரம்—குழைத்துப் பூசல், சாந்து—சந்தனம்.

46 சின்னம்-அடையாளம். தெருள்-தெளிவு. வாள் -ஒளி. கலைமதிக்கீற்றுருவச்சடை இளம்பிறை தரித்த எழி லுடைச் சடை, உருவம்—அழகு.

அத்தியாயமுற்றும்

---

## மூன்றுவது ஆச்சிரம முறையுரைத்தது

### ஆச்சிரமம்—பற்றிநிற்பது (நிலையென்றுமாம்)

1 செப்புகஎன்—கூறுவாயாக என்று வினவ (அகரந் தொகுத்தல்) தீதுஅற—பாவநீங்க. நல்யாழ் மாதவன்— நல்லமகதியெனும் யாழையுடைய பெருந்தவமுடைய நார தன். வானவன்—இந்திரன் கடவுள்—தேவர். சாற்றும்- கூறுவான், செய்யுமென்னும் முற்று.

2 பிரமசரியம்—மாணவநிலை. கருணை — இரக்கம் (அருள்) மருவரிய—நெருங்கமுடியாத. மாதவம்—செயற்க ரிய நோன்பு. ஒருவி—மூவாசையும் நீங்கி, ஒவ்வோர் ஊரில் ஒருநாள் தங்கல் துறவிக்கட்குரிய செயல். திரிதல்— சஞ்சரித்தல், தெரிக்கின்—ஆராயுமிடத்து.

3 பிறழ்ந்து—மாறுபட்டு. கோங்கு — கோங்கரும்பு. தீங்கு— பிறவிப்பெரும்பிணியாகிய தீங்கு. மெய்ஞ்ஞானம் —சிவஞானம் சிந்தை——மனம்.

4 கடன்—கடப்பாடு. யதி—சந்நியாசி (துறவி) அமர்கிற்பார்—பொருந்துமவராவர். முல்லைநகை—முல்லையரும்பு போன்ற பற்கள், கடிமுற்றிய தினம்—(மணமுடித்த நாள்) விலக்கப்பட்ட நாள். ஒல்லை—விரைவு.

5 மூங்கை—ஊமை, முற்றுநிதியற்றோன் — வறுமையாளன், விங்குபேரறிவு—பேரறிவு. விங்குதல்-பெருகுதல்

6 முதுக்குறைவு—பேரறிவு, ஞானநெறி-அறிவுமார்க்கம், இழுக்குறும்—குற்றமடையும், மதித்து — மேன்மையாகக் கருதி மன்னி-நிலையுற்று, விளிசாறும்—இறந்துபடும் வரை. விதித்தநெறி—நூல்களால் வரையறுக்கப்பட்ட வழி உயர்வீடு—மேலானமுத்தி.

7 கொடுப்பவர்—ஈவோர். கொள்பவர் — ஏற்போர், எடுத்து—மேலானதாகக்கொண்டு, மறை-வேதம் (மறைந்த பொருள்களையுடைமையான்) மந்திரமுமாம். பிரமம்-பெரிய பொருள், விடுத்தவர்—துறந்தவர். அடைவர்—எய்துவர்.

8 உலண்டை—உலண்டம் என்னும் புழு, யாத்திடுதல் -கட்டுதல், கருமம்-செயல்கள். வீக்கியிடும்—கட்டும், வேதனை —துன்பம், உறுத்து—அடையுமாறு செய்து.

9 பலன்-ஊதியம், விழைந்திடுதல்—விரும்பல், மேதக—மேலாக. விஞ்சை—வித்தை, சாதலும், பிறத்தலும், ஒருவருக்குப் பெரும் பிணியாகலின்அவ்விரண்டுமின்றி யென்றார். தவிர்ந்து—நீங்கி, விடம்உண்டோன்—ஆலகாலம் அருந்தினவன் (நீலகண்டன்) கற்பம்—காலம் (அளவுடையது)

10 பலன்—பயன், இயற்றி—செய்து, அலகு—எண்ணிக்கை, பவம்—பிறவி, நிலவிய—உலகியலில் ஈடு பட்ட புனிதம்—வாய்மை, மலைவு—மாறுபாடு.

11 பிஞ்சுமதி—பிறைச்சந்திரன், இம்மதியணிந்தார்க்குச் சந்திரசேகரன் என்று பெயர். நெஞ்சுற-மனம்பொருந்த, வஞ்சம்—கரவு, ஆணவம்—மூமலம், எறிந்து-அறவேவலி கெடுத்து, உஞ்சிடுவர்—கடைத்தேறுவர். (உய்ந்திடுவர் என்பது உஞ்சிடுவர் எனவாயது) என்று மின்ப மெய்தியவர். (பிழைத்தவர்) உணர்கல்லார்—அறியாதவர், இது வினைப் பொருளில் வந்தது.

12 இந்நெறிகள்—ஆச்சிரமநெறிகள். திறம்பினர்-மாறுபட்டவர். அழன்று — கொதித்து (கொதித்து) கக்கும்—சொரியும். வெந்நரகு — கொடியநிரயம். கொடுமையான நரக உலகு.

மூன்றாவது அத்தியாயம் முற்றும்

## 4-வது பிரகிருதித்தோற்ற முரைத்தது

1 இன்னணம்—இவ்வாறு (இவ்விதம்) வழு—குற்றம். கன்னி — அழியாத, படலை—தொகுதி துயல்வரு — அசைகின்ற, கருமுகில்—நீண்டமேகம், திதலை—சுணங்கு (தேமல்) ஒல்கும்—துவளும், புலோமிசை மன்னவர்—இந்திரன்.

2 புவனம்—உலகு, ஒருங்கு—ஒருசேர, அளித்தல்—காத்தல், யாருழை—யாவரிடத்து, உதிக்கும் — தோற்றும். துளக்கற—அசைவற, யார்மாட்டு—யாவரிடத்து, ஒடுங்கும் மறையும், அழிவுறும். நியமனம்—ஆணை, விளம்புதி-விளம்புவாய், களக்கனி—களாம்பழம் (கருமையுடையது) திருமறு மார்பன்—திருமகளை மார்பிலுடையவன்.

3 பொருவுஇல்-உவமை இல்லாத, இச்செய்யுள் இறைவன் இயல் உணர்த்துகின்றது, அவ்வியக்தம்—தெளிவிலது. புனிதம்—தூய்மை, அனந்தம்—முடிவிலது (எண்ணிக்கையற்றது) யார்க்கும்—எத்திறப் பட்டார்க்கும், கருதரும்—நினைக்கமுடியாத, மகேச்சுரன்—பேரிறைவன். சத்தும் அசத்துமாய் இருப்பது சதசத்து, எனப்படும், பிரகிருதி—பகுதி. பிரதானம்—முக்கியம் (இன்றியமையாதது.)

4 சத்தம், பரிசம், உருவம், இரதம், கந்தம் என்பன காரண தன் மாத்திரைகள். பூதகுண தன் மாத்திரையுமாம் சித்தம், மனம், புத்தி, ஆங்காரம், சித்தமோர் நான்காம் என்றார். மெய், வாய், கண், மூக்கு, செவிகள் ஞானேந்திரியம். வாக்கு, பாதம், பாணி பாயு, உபத்தம் கன்மேந்திரியம் வெறும்வெளி—வெட்டைவெளி (சூனியம்)

5 தன்உழை-தன்னிடத்தில். எப்பொருட்கு முன்னிற்பதென்பார் முன்னையதாகு மென்றார். பிரமம்—பெரிது, சிவம்—மங்கலம், முதல்—ஆதி. அந்தம்-முடிவு ஆதியந்தமுமில்லாதவரும், பெருஞ்சோதி—(திருவாசகம்) முக்குணம்—இராசதம், தாமம், சாத்துவதம், முக்காலம்-இறப்பு, எதிர்வு நீகழ்வென்பன. வாக்கு, மனம் கடந்தபொருள்—இறைவன் துன்னுதற்கு—அணுகற்கு (நெருங்குவதற்கு) சோதி—ஒளி.

6 பிரகிருதி-மூலப்பிரகிருதி. தூக்குதல்—நிறுத்துதல். துலைநா-தராசுமுள், நா—நடுவிலிருப்பது. பிராகிருதபிரளயம்—இரவு, சிருட்டி—பகல்எனக் கொள்க. ஆண்டவனுக்கு இரவு பகல் என்பது கிடையாது.

7 கங்குல்—இரவு. புலரி—புலர்வது (வைகறை) விடியற்காலை, ஆதி—முதல், அநாதி—முதலிலாதது, கன்னியர்—மங்கையர், தென்றல்காற்று—வசந்தகாற்று. தைவரல்—தடவல், உள்—(உளம்) மனம், கலங்குதல்—நிலைகுலைதல்,

புருடன்-புருடதத்துவம், மூலப்பகுதியினின்றும் மகத்தத்துவம் தோன்றும்.

9 ஆங்காரம் மூன்றுவன:—தைசதவாங்காரம், வைகரியகங்காரம், பூதாதியகங்காரம் என்பன. சுவை, யொளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன பஞ்சதன் மாத்திரை. பஞ்ச பூதங்கள், மண், நீர், தீ, வளி, விண் என்பன. பஞ்சேந்திரியம். மெய், வாய், கண், மூக்கு, செவி யென்பன. பூதங்கட்குரிய தெய்வங்கள், மண்ணுக்குப் பிரமனும், அப்புவுக்கு-திருமாலும், தீயினுக்கு உருத்திரனும், வாயுவுக்கு மகேச்சுரனும், விண்ணுவுக்கு சதாசிவனும் தெய்வங்களாம். கருத்தா —புருடன், யானெனது—அகங்காரம் மமகாரம், விகாரம்—வேறுபாடு.

10 அதிட்டானம்—அதிட்டித்தல் (கொண்டு செலுத்தல்) வான்முதல்-ஆகாயம் முதல், தன்மாத்திரைகள். காரண தன் மாத்திரையும், பூதகுண தன்மாத்திரையுமென விருவகைத்து, துலங்குதல்—விளங்குதல்.

11 விளம்புஅரிய — சொல்லமுடியாத, பூதம்ஆதி—பூதாதி, விகாரம்—வேறுபாடு, துளங்கல்—அசைதல், களங்கம்—குற்றம். சத்ததன் மாத்திரை—நுண்பூதங்கள் (காரண தன் மாத்திரை யென்று நாமம்) ஆகாயத்தின் குணம் ஓசை —இது பூதகுண தன்மாத்திரையாம். ஆல்—அசை நிலை.

12 பனி—குளிர்ச்சி, பரிசம்—தொடுதல் (ஊறு) அனிலம்—காற்று, இதன்குணம் ஊறு, உருவம்—வடிவம். வளி காற்று. கனல்—தீ.

13 அழல்—அழலுவது. (தீ) இரதம்—சுவை. புனல்-நீர். கந்தம்—நாற்றம், வையம்—மண் (பிருதுவி)

14 ஒலி-சத்தம், சுலவல்-சுழலல் (சுற்றுதல்) உலவை —காற்று உலாவலால், இப்பெயர் பெற்றது. பொதிதல்—மூடல், ஒழிவு—நீக்கல்.

15 தொக்க—திரண்ட, புவி—பூமி, மண்ணினில் ஐந்தும், நீரில் நான்கும், தீயில் மூன்றும், வளியிலிரண்டும், விண்ணிலொன்றும் புலனும்.

16 கருதஅரிய — எண்ணமுடியாத. அவ்வியத்தம்—இன்னதன்மையென்றெண்ண முடியாத இயல்பு. பொருவரிய-உவமையில்லாத. மகத்துவம் விசேடாந்தம் ஏழாவன - வித்தியாதத்துவங்கள் காலம், நியதி, வித்தை, கலை, ராகம், புருடன்மாயை என்பன வான்புனல்-மேகம் பொழிந்த நீர், குமிழி—மொக்குள் (உடனழிவது) பிரமஅண்டம்-பேருலகு உதிக்கும்—தோன்றும்.

17 வடமேரு—எத்திசைக்கும் வடக்கின்கண் இருப்பதால் வடக்கின்கண் உள்ள மேரு எனப்பெயர் பெற்றது. கொப்பூழ்—உந்தி, வரை—மலை, அனைத்தும்—எல்லாமும். ஆழீ—கடல் (ஆழமுடைமையின்) வட்டமுடையதுமாம். கருப்பம்—சூல், மறைநடை—வேதஒழுக்கம், நளினத்தோன் —பிரமதேவன்.

18 முருகு—மணம், அவிழும்—வீசும், முன்னவன்—முதல்வன் (பிரமன்) உருவுடையோர் — வடிவமுடையவர். பிரமனுடைய பரியாயப் பெயர்கள்:— நல்லுருவுடையவன், புருடன், இரணியகருப்பன், மறைக்கிழவன், புவனநாதன், கஞ்சன் என்பனவாம்.

19 தோற்றியிடும்—படைக்கப்பெறும், அண்டத்தின் பதின்மடங்கு நீர் சுற்றியுளது. அத்தீயின் பதின் மடங்குத்

நீ சூழ்ந்துள்ளது. அத்தியின் பதின் மடங்குக் காற்றுச் சுற்றியுளது. அக்காற்றினை விண் சூழ்ந்தடக்கியுளது. போற்று அரிய—புகழ்ந்துரைக்க முடியாத.

20 அகல்விசும்பு—அகன்ற விசும்பு, வினைத்தொகை "அகலிரு விசும்பிற் பாயிருள் பருகி" என்பது பெரும்பாணாற்றுப்படை. ஏனைய பூதங்கள் விரிதற்குக் காரணமாகிய விசும் பென்பார், அகலிரு விசும்பென்றார் (நச்சர்) விண்ணினை மூடியிருப்பது ஆங்காரம் என்னுந் தத்துவம் ஆங்கார தத்துவத்தினை மூடியிருப்பது மகத்தத்துவம். அதனை மூடியிருப்பது அவ்வியத்தம். அவ்வியத்தமாக விருப்பவர் (அல்லது) அவ்வியத்தத்தில் இகலுடன் வீற்றிருப்பவர் சிவமாகிய சித்தர் என்பதாம். அறிவு மயமாகி யிருப்பர் என்பார் சித்தர் என்றார். இகல்—ஆற்றல், இனிது—இன்பவடிவு.

21 எவ்வுயிர்—இயங்குந, இயங்காதன ஆகிய இவ்விரு திறவுயிர்களையும் ஓரறிவாதியன வென்றே, உயர்திணையஃறிணை யென்றே கொள்ளப்பெறும். வித்து-விதை (மூலப்பொருள்) மகேச்சுரன்-பேரிறைவன். செவ்வி—வனப்பு, முக்குணத்தாலாயது—அண்டம். அவற்றுள் மூவராய முதற்கடவுள் அயன், அரி, அரன், எனப்படுவர். திவ்வியம்—மேன்மை (மேலானது)

22 எய்தின் — அடையின், நான்முகன்—திசைமுகன் (பிரமன்) உலகுசனும்-உலகினைப்படைப்பான். சாத்துவிதப் பண்பால் திருமால் காத்தல் புரிவார். உரைபெற்ற-வீரப் புகழ்உற்ற, உருத்திரன்-சங்கரிப்பவன், துடைப்பன்-ஒழிப்பவன், மருவுற்ற — பொருந்தியுள்ள, இச்சை—விழைவு, மகேச்சுரன்-மறைப்பு, அருளல், எனும் இரண்டும் புரிபவன்

23 ஆதி—முதல், அந்தி—அந்தத்தினைச் செய்பவன். அந்தி நிறத்தவன், பிரமன்—மேலானவன் (சிவபெருமான்)

எஞ்ஞான்றும்—எக்காலத்தும், சாதல்—இறப்பு, பிறப்பு—தோன்றல், மேதகு—மேன்மை, வீரம்—ஆற்றல். வீரத் தன்மை—வலிமை, வைராக்கியத்திற்கேதுவாயது—வீரம். விண்டு—வியாபகன் (திருமால்)

24 நாரம்—நீர், மகத்து—பெருமை, சேர்ந்தோர்—தன்னையடைந்தவர். மாயை—மயக்குவது, வேர்முற்றும்—வேர்கள் முழுவதும் அரிந்த—துண்டித்த, களைந்த, ஈன்று காத்து அவை நீக்கும்—படைத்து காத்து அவற்றினை யழிக்கும். இவை இறை திருவிளையாடல்களாம்.

25 இன்னணம்—இத்தன்மை, பிரகிருதி-பகுதி, தோற்றம்—உண்டாதல், இயம்பல்—கூறல், மன்னிய—நிலைத்த, வகுத்த—வகைசெய்து படைத்த யாவும்—அனைத்தும், நாகு இளம் வண்டு—மிக்க இளமையுடைய வண்டுகள், பாடும்—இரீங்காரம் செய்யும், கன்னி—இளமைத்தன்மை.

முற்றும்.

பிரகிருதித் தோற்றமுரைத்த வத்தியாயம்

---

## 5-வது பிரமாவினுடைய காலவளவை யுரைத்தது.

1 தாது—மகரந்தப்பொடி, அளவி—முழுகி, தவிசு—ஆசனம், மேலோன்-பிரமன், ஓதுறு-கூறப்பட்ட, கணிப்பின்—எண்ணினால், அளப்பு—அளத்தல், கழிந்திடல்—சென்றிடல், அறைந்த—கூறப்பட்ட, மூதறிவினோர்—பேரறிஞர்.

2 ஆண்டு—வருடம். பரார்த்தம்—முடிவுளெண் (கடையெண்)வரைத்த-எல்லேப்படுத்தப்பட்ட, பிறழாமல்-தவிராமல், நிகழ்த்தல்—கூறத் துவங்கல். மானத்து — அளவுடைத்து. ஆகும் என்பது ஆம் எனத்திரிந்தது.

3 இமைத்தல்—ஒருமாத்திரை யெனுங் காலவளவை.

"கண்ணிமை நொடியென வவ்வே மாத்திரை
நுண்ணிதி னுணர்ந்தோர் கண்டவாறே"

என்பது தொல்காப்பியம். பதினெட்டு முறை யிமைத்தல் ஒருகாட்டை, காட்டை முப்பது கொண்டதுகலே. கலே முப்பது கொண்டது. முகூர்த்தம், முகூர்த்தம் முப்பது கொண்டது மனிதருக்கொரு நாள், பதினேந்து நாள் ஒருபக்கம், பக்கம் இரண்டு கொண்டது, திங்கள். மாதோ—அசை.

4 ஆறுதிங்கள், ஒரு அயனம். அயனம் இரண்டு கொண்டது ஓராண்டு. உத்தராயணம் பகல். தட்சிணுயனம் —இரவு. இஃது தேவருக்கொருநாள். கணிப்பர்—அளவிடுவர், காலக்கணிதர்.

5 தேவநாள் முந்நூற்றறுபது சேரின் ஓராண்டாம். திவ்வியம் (திப்பியம்) மேன்மை பன்னீராயிரம் ஆண்டுகளின் விவரமாவது, கிருதயுகம் 4000. திரேதாயுகம் 3000. துவாபரயுகம் 2000. கலியுகம் 1000. ஆகப்பதினுயிரம் யாண்டுகள்.

6 கிருதயுகம் சந்தி 400. சந்தியம்சம் 200. கலியுகம் சந்தி 100. சந்தியம்சம் 100. ஆக ஆண்டு 12000.

7 சதுர்யுகம் 71 கடத்தல் மன்வந்தரம், சேகு—அழகு ஆந்தரம்-ஆளுகைக்காலம். தாமரைப் பொகுட்டுப்புத்தேள் —பிரமன், பகற்காலவளவு பகுக்கின்றது.

8 பகற்பொழுதுபோல் இரவுப் பொழுதினுக்குமாம். போழ்து—போதுவெனவாயது. பகற்போது – கற்பமெனப் பெறும். வகைதருகாலத்தளவு—கற்பமெனப்பெறும், ஒரு கற்பம், ஒருமனுவின் காலமாகும். எவன்—யாது எனும் பொருட்டு. குறிப்பு.

9 கற்பமுந்நூற்றறுபதுறின் வேதாவாகிய பிரமற்கு ஓராண்டாம். நூறுண்டு பிரமற்குரிய ஆயுட்காலம். நான் மறையோன்—நான்கு வேதங்களேயும் நவின்ற பிரமன், சரம் —இயங்குவது. அசரம்—இயங்காதது, பிரகிருதி—மூலப் பகுதி, ஒடுங்கும்—அடங்கிவிடும், சர்வசங்காரகாலம் பிரளய காலம்.

10
"யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகியாங்கே
மாதொரு பாகனூர் தாம் வருவர் மற்றத்தெய்வங்கள்
வேதனைப் படுமிறக்கும் பிறக்குமேல் வினையுஞ்செய்யும்
ஆதலாலிவை யிலாதான் அறிந்தருள் செய்வனன்றே"

என்பது (சிவஞானசித்தியார்)

"அந்தண்போதுறை புத்தேண் முதலாமெத்தேவும்
இறந்து பிறந்துழல்வர்.

போற்று .................... பிரம மகேச்சுரன் என்றுரைப்பர் தக்கோர்"

11 போகம்—நுகர்வு (ஆட்சிக்காலம்) நடப்பது எவன் எனில்—நிகழ்வது எப்படி என்றால், பாற்ம கற்பம். 7வது உள்ளது. இயலும்—நிகழும். உலகு—உலகினை. கூர்எயிறு-கூரிய பற்கள். கீண்டு—பிளந்து, சுவேதவராகம்—வெள்ளைப்பன்றி. சுவேதவராககற்பமென்பது நிகழுங் காலமாகும்.

12 தெருள்உற—தெளிய, இலவு—இலவுஇதழ். (முதலாகுபெயர்) செவ்வாய்-சிவந்த உதடுகள் (அதரம்) கோங்கு

மூகை—கோங்கரும்பு, கவற்றும்—கவலுறச்செய்யும், வரி—இரேகை, வீங்குதடதோள்—பருத்த பெரிய தோள்கள். கடவுள்—இந்திரன், மிழற்றும்—ஒலிக்கும், திவவு—முறுக்காணி.

## (சுவேதவராக கற்பமுரைத்த வத்தியாயம்)

1 கரைக்குரம்பு—கரையாகியஎல்லை, (குரம்பு—கரை) மூவுலகு—பாதலம், மண், விண் என்பன. எறிந்து—வீசி, பாய—பரவிய, பரவைநாப்பண்-கடலின் நடுவின்கண், மலர்க்கண்—செந்தாமரைக்கண், முகிழ்த்து—மூடி. துயின்றான்—அறிதுயில் கொண்டான்.

2 பழமறைக்கிழவன் — பிரமன். புலரிக்காலை—விடியற்காலை, ஏல்வை —பொழுது, ஒளித்ததனுக்கு—மறைத்துப் போயினமைக்கு, இரங்கி—இரக்கமுற்று. அயின்ற-உண்ட

3 பழிச்ச—துதிப்ப. ஆய்ச்சியர்—இடைச்சியர், விசித்த -கட்டப்பெற்ற. எறுழ்வலி—மிக்கவன்மை, கூன்— வளைவு, (பிறைபோன்ற கொம்பினால் தாங்கி.)

4 வலையம் — வட்டம், துலங்கல் — விளங்கல், சனபோகம்—மண்உலகு. கறை—உரல், புகர்-புள்ளி, கடகளிறு—கசேந்திர ஆழ்வான். இடர் (முதலையாற்பிணிப்புண்ட) துன்பம். காயா—காயாம்பூ, (ஆகுபெயர்) பனிப்ப-குளிர்ச்சியுடையநீர்த்) துளிப்ப.

5 கோஅரணம்—சிறந்தமதில்கள், கட்டழித்து—நிலைகுலையச்செய்து. நிருதர்—இராக்கதர். குறள்உரு—வாமனவடிவு (வாமனவதாரம்) நசை—விருப்பம் எந்தை—எம்பிதா (விளிப்பெயர்)

6 நாரணன்—நீரிற்றுயில்பவன் (திருமால்) நனந்தலை-பரந்தஇடம். பூரணன்—நிறைந்தவன், பூமேலுறைந்திடும்

புனிதன்—செந்தாமரை மலரிற் றங்கும் புனிதனாகிய படைப்புக் கருத்தன், ஆரணம்—வேதம், அமலன்-அழுக்கற்றவன் (தூயவன்)

## 7-வது பலவகைத் தோற்ற முரைத்தது

அவையெவன்எனற்பாலது-அவையென் எனவந்தது. மதுக் கலுழி — தேன்பெருக்கு. தூங்குதல் — அசைதல், சூழி—கிம்புரியெனும்அணி. யானை-அயிராவதம். பாகன்-இந்திரன் மணி—நீலமணி. வண்ணன்—நிறமுடையவன் (கூர்மாவதாரப் பெருமாள்) தீங்கனி—இனிய மாங்கனி. வாங்குவில்-வளைந்தவில்.

2 வேதன்—பிரமன், முயன்றுன் ஆகி-உள்ளக்கிளர்ச்சியொடு தொடங்கினவன் ஆகி: தமோமயம்—தமோகுணத் தன்மை, (தமம்—இருள்) இதன்காரியம்—சிருட்டி, அதன் வகை ஐந்தாவன:— தமம், மோகம், மாமோகம், தாமிச்சிரமம், ததாமிச்சரம் என்பன.

3 வாயிலிகும்பம் — ஊமைத்தசும்பு (வாயிலில்லாத குடம்) நற்பொருள் —(விளைத்தற்குரிய) வித்து, வேதங்கள் வெற்புக்கள் மேம்பட்டன வென்று விளம்பும் என்பது குறிக்கப்பெறுகின்றது. அன்பு அற்பெனத்திரிந்தது. அறிவின் மிக்கோர்—தபோதனராகிய ஞானிகள்.

4 விலங்கு — திரியக்சாதியாம். குறுக்கு—திரியக்கு எனும் வடமொழிக்கு நேராயது. தேவர், மனிதர் அல்லாப் பிறப்பு எனல் ஓர் மரபு போலும். இதனிடைப் பறவைக் கூட்ட முதலியனவுமடங்கும். ஓங்கிய—உயர்வுற்ற, விண்ணோர்—மேலிடத்தவராய தேவர், கீழ் ஆய்நோக்க—கிழக்கு நோக்க (கீழிடம்) மானுடம்—மனிதப்பண்பு.

5 தணப்பு—நீக்கம், மேவி—பொருந்திய. மாசு—குற்றம், எறிந்து—களைந்து. தேவர்களுடைய உடலங்களில்

இயற்கையொளி யுண்டெனக்குறிப்பிடுகின்றார். மெய்த்தகு, மொழி—பாடை. மானிடவர்க்கத்தலைவர்—இராசத தாமத சத்துவ குணத்தினால் வந்திடப் பெறுவர்.

6 பிழிநுகர்ந்து-தேனருந்தி, அறுகால்-வண்டு. தோடு—பூவிதழ், புங்கவன்—தேவன், கழி—(உரிச்சொல்) மிகல் துன்னிய—நெருங்கிய, பூதப்பேய்களும்—தேவகணம் பதினெட்டனுள் சேர்த்தெண்ணப் பெறும். கல்நவில்திரள் தோள்—கற்போற்றிரண்ட தோள்கள். அன்றே—பலரறி தேற்றச்சொல். அசை நிலையுமாம்

7 ஆதிசிருட்டி—முதற்படைப்பு, மகான்—மான் என்னுந்தத்துவம். 2ம் சிருட்டி—தன் மாத்திரை. இஃது காரண தன் மாத்திரையென்னுந் தத்துவம். ஏதம்—குற்றம், இந்தியச் சிருட்டிப் பிராகிருதம் ஆம்.

8 தாபரம்—தாவரம் (விருட்சவகை) முக்கியம்-மேலானது. வானவர் வகை-வான் சாதிகளாவன, ஐந்து—அஞ்சு எனப்போலியாயிற்று. ஆறுவதுபடைப்பு—தேவர், ஏழாவது படைப்பு மனிதர்-

9. 8-வதுபடைப்பு பிறைபோலும் வளைந்த பற்களையுடைய பூதங்கள். பாசடை—பசிய இலைகள், ஒட்டார்—பகைஞர், கடந்தோர்—வென்றவர் (முனிவரர்கள்)

10 சனகர், சனந்தனர், சனற்குமாரர், சனாதனர், மிருது முதலியவர்கள் சிருட்டித்தலை விடுத்து இறைவன் திருவடிகளைச் சிந்திப்பாராயினர், விச்சை—வித்தையென்பதன்மரூஉ முன்னுதல்—கருதுதல், துனைவு—வருத்தம், துகள்—குற்றம் தீர்ந்த—நீங்கின.

11 வீக்கம்—பெருக்கம், ஏகுதலும்— செல்லுதலும், அந்தில்—அசைநிலை (அவ்விடம்) தெய்வக்கமலம்—தெய்வீகத்தாமரை. அலகு—எண்ணிக்கை, பரிவு—அன்பு, தீர்த்த

னன்—நீங்கச்செய்தான், திருநெடுமால்—இலக்குமி நாராய ணன்.

12 வரம்புஇல்காலம் — எல்லையற்றநாள். வெகுளி—கோபம். கலுழ—அழ, நாப்பண்—நடு. மதிக்கண்ணிச்சடை யோன்-சந்திரனை முடிமாலையாக வணிந்த சடையினையுடைய சிவபெருமான் (சந்திரசேகரன்)

13 சூழ்வந்து இறைஞ்சும்—சுற்றிவந்து (வலம்வந்து) வணங்கும், கூற்றின் உயிர்—இயமன் உயிர், கொழிக்கும்—சேர்க்கும். குனிக்கும்—வணங்குவன், செம்மாக்கும்—இறு மாப்புறுவன், நறவு—தேன், ஊற்றும்—சொரியும். நறிய மலர்—மணமுறுமலர்கள், தூவும்—அருச்சிக்கும். உள்ளத் திருத்தும்—மனத்திடைப்பதிப்பன், ஆல்—அசைநிலை.

14 முனைவன்—முதல்வன் (சிவபெருமான்) கேட்டி—கேட்பாய், இமிரும்—ஆரவாரஞ்செய்யும். படைத்தி-படைப் பாய், இரப்ப—மன்றாடி இரந்து கேட்ப. தனைநேர் ஆகி—தன்னை ஒப்பாகி. பிறப் பிறப்பில்லாக்கணம் — சிவகணம். அறைந்த—கூறப்பட்ட. படைக்கலம்—ஆயுதங்கள், அருள் பூத்தனம்—ஆணைதந்தோம்.

15 பிறவாக்கணம்—சிவகணம். படைப்பது ஒழிந்து —தோற்றுவித்தலை விட்டு. மழுவல்லோன் — மழுவாயுதம் தாங்கிய இறைவன், சகடுஉருள்—வண்டிச்சக்கரம், திரியும் —சுழலும், உறங்கா வென்றிமுத்தலைவேல் ஒருவன்—சிவ பெருமான். கரந்து—மறைந்து

16 ஐம்பூதக்கலப்பாலாகிய உலகம். உந்தி-சுழி. உவரி —கடல். கலை, காட்டை, பகல், இரவு. பகல், பக்கம், திங்கள் அயனம், ஆண்டு. ஆகிய எல்லாவற்றிற்கும். பிரமாணம்—அளவை, இனிதின்—இன்பமாக, இயற்றினான்—உண்டுபண் ணினான்.

17 இப்பாட்டு நவப்பிரமர்களின் தோற்றவகை கூறப் படுகின்றது. பிரமனின், மூக்கினில் தக்கன் கண்களில் மரீசி. சென்னியில் அங்கிரா. உள்ளத்தினிற்பிருகு விழி யில் அத்திரி, விவசாயத்தில் தருமன், சங்கற்பத்தில், சங் கற்பன். உதானந்தன்னில் புலத்தியன். முகத்தில் அருட் புலகன், அபானந்தன்னில் இருது. சமானன்றன்னில்—வசிட் டன். தருமவொழுக்கம் ஆயவற்றினை யுலகில் நிறுவினர்.

18 தக்கன், மரீசி, அங்கிரா, பிருகு, அத்திரி, தருமன், சங்கற்பன், புலத்தியன், புலகன், இருது, வசிட்டன், ஆயவர் களை நிருமித்தனர்.

19 தேவர், அசுரர், தென்புலத்தோர், மனிதர் இவர் களை யுண்டாக்க பிரமன் ஒவ்வோருடலம் தாங்கினன், கங் குல்—இரவு. உறங்கும்—தூங்குதலைச் செய்யும்.

20 வான்முகத்தில்— தேவர்உதித்தனர், அவ்வுடலம் விடுப்ப அதுபகலாகித்தருமம் எவற்றினுக்கும் உடனுயது.

21 சத்துவகுணத்தில் பிதிரர் தோன்றலாயினர். இரா சதத்தில் மக்களுதித்தனர். தண்ணங்கதிர்-சந்திரன். (குளிர்ந்த கிரணங்கள்)

22 தமம், இராசதம் ஆகிய விருகுணமுருவாயபோது அரக்கர், கந்தருவர், இயக்கர், பூதம், அரவங்கள் உண்டாயின வாம். பறவையும் மறியும் மார்பிலுதித்தன. சரபம்—வான் முகத்திற்றோன்றிற்று.

23 இருதாளிடத்தும், களிறு, புலி, கரடி, மரை, ஒட்ட கம், குதிரை, மான், முள்ளம்பன்றி, விலங்கின்கணம் உதித் தன. மயிர்க்கால் தோறும் கனிகளைத்தாங்கும் கொடிவகை கள் உதித்தன.

24 திருமாலுந்தித்தடம்பூத்த தேவன்—பிரமதேவன். இவன்றன் நான்குமுகங்களிடத்தும், வேதங்களும், ஆகமங்

களும், பாக்களும் உதித்தன. பிறழாது—மாறுபாடுறாது. இனிதின் வைகின—நன்றாகத்தங்கின.

25 இருடிகள்—முனிவரர், விரை—மணம், கொப்புளித்தல்—துளித்தல், நறும்தோடு—நல்லஇதழ். தனிமுதல்-படைப்புத்தலைவன் (பிரமன்)

ஆகச் செய்யுள் 219.

(எட்டாவது தமோகுண சிருட்டி யுரைத்தது)

## தமோகுணத்தொடு வடிவுற்று படைத்ததனை யுரைத்தது.

1 சிறகு—(சிறகர்—போலி) இறகுளறிந்த வெட்டின வயிரப்படை—வச்சிராயுதம். கடவுள்—இந்திரன், மன்றல்—மணம், துன்றும்—நெருங்கும், மாயன்—மாயையுடையவன்.

2 வள்ளம்—கிண்ணம், தவிசு—இருக்கை. மறைவிளை நாவலன் — பிரமதேவன். தெள்ளிதிற்றெளித்து—மிக நன்றாகத் தெளிந்தாராய்ந்து. அல்கிடாது-சுருங்காமல், மாழாந்து-மயங்கி, புதைப்ப-மறைப்ப. உரையவிந்திருத்தல்-மௌனமாயிருத்தல், மெள்ள—மெதுவாக. அகன்றது—நீங்கிற்று.

3 வேல்கண்—வேல்போன்றகண் (உவமைத்தொகை) தெரிவை—பெண் வடிவு, புருடனும்—தலைவனும், எய்தின—(எய்தியவாயது) அடைந்துள்ள. ஒண்ணுதல்—ஒளிபொருந்திய நுதலினையுடையாள். (அன்மொழித்தொகை) படுகொலைவடிவும், வெம்பால வுருவும் பிரமனுடைய உடலின்கண் புகுதலும், சுவாயம்பு மனுவும்,சதரூபையெனும் பெண் வடிவும் ஆயது.

4 துதைந்து—நிமிரப்பூசி, சதரூபை யென்பாள் சுவாயம்பு மனுவினுடன் கூடி, பிரியவிரதன், உத்தானபாதன்

என்றும் இரு ஆண் மகவினையும், பிரசூதி ஆகூதியென்று மிருபெண்மகவினையு மீன்றாள். பரவுதல்—போற்றல், அளிக்கும்—காக்கும்.

5 தக்கனுக்குப்பிரசூதியையும், உருசிக்கு ஆகூதியையும் திருமணம் புணர்த்தினன். தட்சனி—தக்கனி, என்பதன் றிரிபு.

6 சிறந்த—எல்லாவற்றினும் மேன்மையுற்ற, அமரர்— இறந்துபடாதவர். விங்குபல்கேள்வி — மிகப்பலவகைப்பட்ட. கேள்விஞானம். தக்கன் மனைவியாகிய பிரசூதி யென்பாள் பேரழகுற்ற விருபானான்கு புதல்வியர் தம்மை யீன்றாள். பயந்தாள்—பெற்றாள்.

7 அனையரில்—அம்மகளிருள்: சிரத்தை, இலக்குமி, திருதி, துட்டி, நற்புட்டி, மேதை, கிரிகை, புத்தி, நாண், வபுசு, சாந்தி, சித்தி, கீர்த்தி, ஆகிய இவர்களைத் தருமற்குத் திருமணம் புரிந்தான். இவர்கள் எழிலுறு மகார்களை (புதல்வர்களைப்) பெற்றனர்.

8 பிருகுவின்மனைவி — சம்பூதியாவள். உருத்திரன் சதியினைக் கூடினன். மரீசியின் மனைவி சம்பூதியாகும்.

9 கன்னி—கட்டழகினையுடையாள், (அழியாதவள்) வசிட்டன்—அருந்ததியினை மணந்தான், அக்கினி—சுவாகையினை மணந்தான். பிதிரர்,— வசுந்தையைப்புணர்ந்தார் சிரத்தை காமத்தையீன்றனள்.

10 இலக்குமி—செருக்கினையும், திருதி—நியமத்தினையும், துட்டி—மகிழ்ச்சியினையும், புட்டி—ஊதியத்தினையும், (இலாபம்) மேதை—சுபத்தினையும், கிரிகை—நற்சமம் நற்றமம் ஆயவற்றினையும்.

11 புத்தி நற்போதம், பிரமாதம், என்னுமிரண்டினை யும், நாள்—நலம் விநயம் ஆகியவற்றினையும், வபுசு—விவ சாயத்தையும் எழிய — சாந்தி, கமனத்தையும், சித்தி—வானகத்தையும், சீர்த்தி—ஓசையும், முன்னவள்—காமத்தினையும், மகிழ்ச்சி—கடவுள் ஆனந்தம் இரண்டையும் பெற்றனர் என்பர்.

12 பாவம், கொலையினை மணந்து, (வஞ்சமென்னுங் கன்னியை மணந்து) பொய்யெனுமகவினை யீன்றது. பொய்ம் மை—வஞ்சனைதனை யணைந்து நரகமென்னுமைந்தரையும், வேதனை மாயையென்றோதும் இருபெண்களையும் பெற்ற தாகும். மாயை மிருத்துவை ஈன்றது.

13 நரகம்வேதனையை யணைந்து அசுபத்தையும் துன் பத்தையும் பெற்றது. மிருத்துவானது, நோய், நரை, துன் பம், கோபம், பட்டிமை, இவற்றினைப் பயந்தது. வாலி சுக்கிரீவன் தமையன், வடிக்கணை — கூரியஅம்பு

---

## ஒன்பதாவது பிரம விட்டுணுக்களுக்குச் சிவன் தோன்றி வரங் கொடுத்தது

1 காலத்துஅளவை—காலஎல்லை, அளந்து—அளவை களால் வரையறுத்து, அறிவுஅரும்பொருள்—அறிவினுல் அறிதற்கரிய பரம்பொருளாகிய சிவபெருமான், மூலம்—கார ணம், கோலம்—அழகு, பசும்பொன் சோலைவாயுறையுங் கட வுள் — இந்திரன் (பஞ்சதருக்கள் சூழ்ந்த இடம் ஆகவின் பசும்பொன் சோலை யென்றார்.)

2 உலகமோர்மூன்று—சுவர்க்க மத்தியபாதலம், பாழ் —சூனியம். ஊழி—யுகமுடிவு, வாரியின் நாப்பண்—கட லின் நடுஇடம், சூட்டு-உச்சிக்கொண்டை, பழுத்து-முதிர்ந்து நேமி—சுதரிசனம்.

3 பாசடை—பசியஇலை. துயல்வரல்—அசைதல், தேசு —ஒளி, எறிக்கும்—வீசும், சேடு — அழகு, மூசுவண்டு — மொய்க்கும் வண்டுகள், முருகு—மணம், முளரி—முள்ளை யரையிலுடையது, (தாமரை) பூத்தது—தோன்றிவிரிந்தது.

4 தடம்-இடம், நாமகள்கொழுநன்-சரசுவதியின்தலைவன் (பிரமன்) மண்அளந்த நளினம்—பூமியினை அளந்த தாமரை மலர்போலும்திருவடி, தோம்—குற்றம், மருளா—மயங்கி (செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம்) ஏமம்-காவல் அலைவாய் — கடலிடம், யாரை—யார், என்னும் வினுப் பொருட்டு, இறையவன்—திருமால்.

5 உலகனைத்தினையும் — உலகமுழுவதையும், அள்ளி —வாரி, கலைவலாய்—பிரமனே. (விளி இகழ்ச்சிக் குறிப்புப் பொருளது.) ஈன்ற—தோற்றுவித்த (படைத்த) மறை வடித்தோய்—வேதங்களை யாய்ந்தவனே, அலகுஇல்சீர்த்தி —அளவற்றமிகுபுகழ், அறிவன்—அறிவேன், அகட்டுள்— —வயிற்றினுள். நோக்குதி—பார்ப்பாய்.

6 எழுகடல்—உப்பு, கருப்பஞ்சாறு, மது, நெய், பால், தயிர், நன்னீர் என்பனவாம். ஏழுபெருந்தீவு—நாவல், இறவி, குசை, கிரவுஞ்சம், இலவம், தெங்கம், புட்கரம் என் பன.

ஏழுவகையுலகு:— (மேல்) பூ, புவர், சுவர், மகர், சனம், தவம், சத்தியம் என்பன. (கீழ்) அதலம், விதலம், சுதலம், தராதலம், இரசாதலம், மகாதலம், பாதலம் என் பன.

இறும்பூது-வியப்பு, துன்னியவாயில் ஒன்பதும்-நெருங் கியவாயில்கள் ஒன்பதும் (செவிகள், கண்கள், நாசித்துவா ரங்கள், வாய், எருவாய், கருவாய் என்பன) நாளம்—தண்டு.

7 போதருநெறிகள்—வெளிவரும்வழிகள், பொதியா—பொதிந்து, (மறைத்து) ஏதம்—குற்றம், தாதை—தந்தை, நிகர்வுறுங்கடவுள்— ஒப்பாந்தேவர், மாதவன்— திருமகளையுடையவன். முறுவல்கோட்டி—சிரித்தலைச்செய்து. அயர்ந்தனன்—செய்தனன், மனக்கொளேல்-மனத்தில்லையாதே.

8 உயிர்த்தாய்—ஈன்றாய், மருவி—பொருந்தி, நேரா-நேர்ந்து (உடன்பட்டு) அறைந்தான்—கூறினான்.

9 பிதற்றல்-வாய்க்குவந்தவாறு பேசல், எவன்-யாது? மத்தம்—ஊமத்தம்பூ. கனி—கொவ்வைக்கனி, துவர்—பவழம். முகிழ்முலை—பார்வதிபிராட்டியார். (ஆகுபெயர்)

10 கனன்று—கொதித்து, கனை—ஒலி, கார்முகில்—திருமால், மத்து—மந்தரமலை.

11 இளநகைகோட்டி—புன்முறுவல்செய்து. கண்ணி-முடிமேற்சூடும்பூமாலை படாம் — திரை, புதைத்திடல்—மறைத்தல், மன்ற—உறுதியாக (நன்றாக)தற்பரன்—சிவபெருமான். எல்லை—சமயம்.

12 இளம்பருதி — இளஞ்சூரியன். உடுக்கள்—நட்சத்திரங்கள், துயல்வர—அசைய, அண்டபித்திகை—அண்டச்சுவர், உருவும் — துளைக்கும், பெயர்த்து—மீண்டு, தனிப்பொருள்—சிவபெருமான்.

13 பொன்தரு — பொன்மயமாகியமரம், நீற்றொளி—திருநீற்றின் பிரகாசம். சங்கக்குழை—சங்கினாலாகியகாதணி உருகெழுசூலம்—அச்சந்தரும் சூலப்படை. தமியன் — தனியன்.

14 ஒருமணி—கவுத்துவமணி, பாம்பணை—சர்ப்பசயனம் (பாம்புப்படுக்கை) மழுவலான்—சிவபெருமான், வேதியன்—பிரமன், ஏத்தி—பலபடியாக ஏத்தி (துதித்து)

15 உலகம்—அண்டம், மற்றெவையும்—பிண்டங்களையும், அளித்து—காத்து, ஒடுக்கல்—அழித்தல். சத்தியானவன் – சத்திமயமானவன். மலை—ஐயம், சங்கரன்—சுகங்கொடுப்பவன், சங்காரகிருத்தியன். பேருணர்வு—மெய்ஞ்ஞானம்.

16 மருங்கு—இடை. இற-ஒடிய. ஆகம்—மார்பிடம், ஒருங்கு — ஒருசேர, நரைவிடை—வெள்ளையெருது. கண்ணீர் வாரலும், மெய்ம்மயிர்ச்சிலிர்த்தலும். நாக்குழறலும், முதலியன உண்மையன்பர் நிலையாம். தேமலர் தூய்—தேன்றுளிக்கும் மணநாறுமலர்களைத்தூவி. (அருச்சித்து)

17 கடவுள் – தேவன், வாள்எயிற்ற-ஒளிபொருந்திய பற்களையுடைய அணங்கு—அச்சம், அசைத்தல்—கட்டுதல், அடியரின்—அடியவர்களைக்காட்டிலும், இணங்கல்—ஒத்தல், (பொருந்தல்) கேட்டி—கேட்பாயாக. பருவரல்—துன்பம், பாலன்—காப்பாற்றுபவன், வருதி—வருவாய்.

18 நேர்ந்து—இசைந்து. இனிதருளி — நன்றுகநல்கி, தேங்கமழ்—வாசனை வீசும், திருமறுமார்பன் — திருமால். விங்குதல்—பூரித்தல், உகந்தேம்—மகிழ்ந்தேம். வேட்டன விரும்பியனவற்றினை (வினையாலணையும் பெயர்)நாளும்நாளும்—நாளுளும். எனவாயது, நாடோறும் என்னும் பொருட்டு.

19 இப்பாட்டு மகாவிட்டுணுவினைச் சத்தியாக வுடையவன் என்பது புலப்படவும், சிவபெருமானின் வேறல்லாதவன் என்பது தோன்றவும் "அரியலாற்றேவியில்லை" யென்பது வெளிப்படவும் அமையப்பெற்றுள்ளது. புருடன்-இயமானன், மனக்கண்ணிற்றோன்றுபவன் ஈசன் ஆவன் என்பதாம்.

20 அரவின் நாண்கொளுவி—வாசுகியை கயிருகப் பொருத்தி, குடுமி—சிகரம், பொன்வரை-மேருமலை, குழைத்து—வளைத்து, முரண்படை-வலிய ஆயுதம், விழியிணைமுகிழ்த்து—இருகண்களையும்மூடி, தன்நிலையுணரும் தக்கவர் சிவயோகியர், மலர்மிசையேகினன் என்பது போதர உள்ளத்தாமரை தடந்தொறும் சார்ந்தோன் என்ருர்.

## 10-வது (அட்டமூர்த்தியியல் புரைத்தது)

1 மரகதவல்லி—உமாதேவியார், மதிக்குடுமி மாணிக்கமலை—சிவபெருமான் .(இவையுருவகம்) இழைத்தனகள்-படைக்கப்பட்டவை. உகுக்கும் — சொரியும், எறிந்த—சுழற்றிக்கடைந்த.

2 மரகதச்செழுங்குன்றம்- திருமால் (உருவகம்) திசைமுகக்கடவுள்—நான்முகன் (பிரமதேவன் )

3 தாமரைக்காடு—செந்தமரை மலர்த்தொகுதி, திருமாலின் கண்களும் கைகளும் சிவப்பாயிருந்தமைபற்றி யிங்ஙன முரைக்கப்பெற்றது. ஆயகாலை—அப்பொழுதின்கண் புாயதெண்டிரை—பரவிய தெளிந்த அலைகளையுடைய திருப்பாற்கடல் கண்வளர்பண்ணவன் — அறிதுயில்கொள்திருமால், திருமாலின் இருசெவிகளிலின்றும் மதுகயிடவர் எனும் அசுரர்கள் தோன்றினர்.

4. மண்டுசெங்கனல்வடவை—நெருங்கிய செவந்த நிறமுடைய வடவாமுகாக்கினியாம், அவிப்பர் — அவியுமாறு செய்வர், தேக்கெறிதல்-தேவிட்டல். மறைமழலைவாய்க்குழவி—வேதங்களை மழலையாகப் பேசும் திருநாவுடைய பிரமன்.

5. வெரீஇ—அச்சமுற்று, சாற்றுதல்கேளா—உரைத்தலைக் கேட்டு விட்டுணு,சிட்டுணு வென்போர் திருமாலால்படைக்

கப்பெற்றவர், வகுத்து—படைத்து, நான்முகத்தோன்கண்—பிரமனிடத்து, அணங்குற—அஞ்சுமாறு, கடிதிர்—அழியுங்கள்.

6 வரைத்தடம்புயங்கள்—மலைபோற்றிரண்ட பெரிய தோள்கள், கரைக்குறும்பு—கரையாகியஅணை, சிரக்குவடு—தலையாகியமலை, எறிந்தார்—வீசியெறிந்தார்.

7. கறங்கென— காற்றாடியினைப்போல, திரித்து—சுழற்றி, சிறந்தமைந்த— (விளி) சீரியபுதல்வ, இறங்குக—இதனைவிட்டு அப்பாற்செல்க, இழிந்தனன் — இறங்கினன், கண்வளர்ந்தான்—துயின்றான்.

8. கள் அயர்வுயிர்க்கும்-தேன் துளிததும்பும், வள்ளல்—பிரமன், பள்ளநீர்—கடல், தொல்லுலகு— (கடலில் மூழ்குண்ட) பழையவுலகு, படைப்பான் படைக்கும்படி.

9 உள்ள—கருத, சனகன்முதலினோர்—சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர்ஆகியநால்வர், நாற்றிதழ்க்கமலத்திறை—பிரமன், நுவலலும்—கூறலும், போற்றிலேம்—ஏற்றுச்செய்கிலோம், ஆற்றருந்தவம்—செயற்கருந்தவம் அரனடிபணிந்தார்—சிவபெருமான் சேவடி தாழ்ந்தனர்.

10 முன்தந்தோன் — முன்னர் ஈன்றவனாகியசிவபெருமான், ஆவல்—ஆகுவேன், சேர்தலும்-இடைவிடாது நினைத்தலும், எந்தை—சிவபெருமான், சிந்தை—மனம்

11 தோன்றி—புலப்பட்டு, சார்ந்தனர்—வந்தடைந்தனர் அன்றே — அசைநிலை.

12 உருத்திரன்முதலெண்மர்-பவன், சருவன், ஈசானன் பசுபதி, வீமன் (பீமன்), மாதேவன், உருத்திரன். மைதிகழ்ந் தொளிர் கண்டன்—நீலகண்டன் (ஆலமுண்டகண்டன்.

13 எண்வடிவம்—சூரியன், சந்திரன், மண், நீர், தீ வளி, வான், இயமானன் (படைப்பவன்).

14 மங்கையர் எண்மர்-சுவாச்சலை, உரோணி, பாசுவை, விகேசி, சுவாகை, எண்டிசை, சிவை, தீக்கை.

15 முகநோக்கி—திருமுகத்தினைப் பார்த்து, மலரயன், பூமேலோனாகிய பிரமன், சமைப்ப—படைத்தலைப்புரிய, அமைத்திடல் — உண்டாக்கல், சிவசிருட்டியால், இறப்பு பிறப்பில்லை யென்பதறிவிக்கப் பெற்றது இச்செய்யுள்-தன்னையொப்புற—தன்னைப்போல.

16 பிரமன்படைப்பு-இறப்புபிறப்புடையது, நிகழ்த்தி —தொடங்குவாய், பனிமலர்பொருட்டண்ணல் — பிரமன் பழிச்சும்—துதிப்பான் (செய்யுமென்முற்று)

17 கொண்டல்— நீருண்டமேகம் (காளமேகம்) குப்புற்று—தலைகீழாக விழ்ந்துமடிந்து, பாழாகியவமையம்—பிரளம (சூனியநிலை) பிரளயகாலத்தில் அம்பிகை கண்டு களிப்ப ஆண்டவன் ஆடுதலைச்செய்தருளுவன் என்பது குறிப்பிடப்பட்டுள்ளது.

18 மாலை—வரிசை மாலைபோலும்வெள்ளிய அருவிப் புனலை மாலை வெள்ளருவியென்றார், கோலும்—வளைக்கும் கடாய்—செலுத்தி, செற்ற — கொன்ற (பொடிபடுத்தின)

19 பருவரல்—துன்பம், உழப்ப—வருந்த, கஞல—நெருங்கிப்பொருந்த, நறுந்துழாய்முகில்கணை — திருமாலாகிய அம்பு, நம்பனே—விரும்பப்படும் இறைவா.

20 நோற்றபாலன்—மார்க்கண்டேயன், ஆற்றல்—வலிமை தோற்றம்—உண்டாதல்.

21 கருதுவார்—எண்ணுபவர், உறைதரும் — எழுந் தருளும், குருதி—உதிரம், கக்கும்—துளிக்கும், குழகனே— என்று மிளையவனே.

22 தாள்பணிந்து—திருவடிகளை வணங்கி, மன்றல் தாழ்மலர்—மணந் தங்கியபூக்கள், தூய்—தூவி (அருச்சித்து பிலிற்ற—துளிப்ப, துணைக்கையால்—இருகைகளால்.

23 புருவநாப்பண் — சுழுமுனை, தோற்றம், நிலை. இறுதியெனு முச்செயலும் என் திருவிளையாடல் ஆகும் எனப்பிரமற் கறிவுறுத்தினர், ஆல்—அசைநிலை.

24 பிரமன் வலப்பாகத்தும், திருமால் இடப்பாகத்தும் உதிப்பித்தனன், இறைவன், இவ்விருவர் தம்மையும் விநாயகப்பெருமானையும், கந்தப்பெருமானையும் ஒப்பீர்கள் எனக்கூறிப் பிரமனை யுச்சி மோந்துரைப்பான், சிவபெரு மான் என்பதாம்.

25 கள்ஆயின்று — தேனினைப்பருகி, "திருமாலின் உந்தியந் தாமரையிற் பூத்தவன் பிரமன் ஆவன்" உள் உவந்து — மனமகிழ்ந்து, நினைப்புழி — தியானஞ்செய்யும் போது, உறுவல் — வந்தடைவேன், உரையா—உரைத்து (கூறி) உபநிடதம்—வேதசிரசு.

25 கனைகரும்கடல் — ஒலிக்கின்ற கரிய பெரிய கடல், உமது — பகுதிப்பொருள் விகுதி, அன்றிவழுவமைதியாக் கொண்டு உம்முடையஎனப்பொருள் கோடலுமாம், முனை வன்-முதல்வன், சதாசிவத்தினின்றும், பிரமன்விட்டுணு, உருத் திரன், தோன்றுவர். எனதெண்ணம் போல்பலவுருக்கொள் வன் ஆயின் எமக்கெனஒருநாமமும் ஒருருவமும் ஒருபண்பும் புலனும் இல்லை என இறைவன் அருள் புரிகின்றான்.

27 கங்கையஞ்சடைக்கண்ணுதல்— கங்காதரராகிய திரிலோசனன், பங்கயத்தவிசுறைதருபண்ணவன் — பூமேலயன் (பிரமன்) மரீசி, அங்கிரா முதலிய மானச புத்திரர்களைப் பிரமன் ஈன்றனன்.

## 11–வது, பார்வதி தோற்றமுரைத்தது.

1 நீதறுமகபதி—சிவசிந்தனை முற்றியஇந்திரன், தேம்படு — தேன்பொருந்திய. பூத்தவை — உண்டாக்கியவை (படைத்தவை)

2 கமலவீட்டுறையும்அந்தணன்—பிரமதேவன், செள்ளிதின்-தெளிவுடன், அமைப்பவை-படைப்பவை, மாழாந்து—மயங்கி, நெட்டுயிர்ப்பு—பெருமூச்சு, எள்ளரும்-இகழாத. ஏல்வையின்—சமயத்தில்.

3 பாடுஅரும்—சொலற்கரிய, பணித்திட்டு — ஆணையிட்டருளி, நாடரும்—நாடற்கரிய (நெருங்கமுடியாத) ஏடவிழ்—இதழ்கள்விரிந்த, ஆடியிற்காட்டியஜயன்— சுந்தரன்.

4 பேர்எழில்அண்ணல்—மிக்கவனப்புடைய அர்த்தநாரீச்சுரன், காதலின்— பேரன்பினால், சேவடி—திருவடிகள். போற்றி—துதித்து.

5 மையறும்இவ்வுரு—நின்மலவடிவு, ஆணும் பெண்ணுமாகிய நிலைகூறிற்று. ஆக்கம்—மேன்மேலுண்டாதல். தையல்—உமாதேவியார், உருவமாக்கி- வடிவமாக்கி.

6 ஆண்உருவமாய் — ஆண்வடிவமாய், அமைத்திட்டான்—செய்தான். (இடதுபுறம் பெண்வடிவு, வலதுபுறம் ஆண்வடிவாயது என்க, அரோ—அசைநிலை,

7 மதியுறவகுத்து — அறிவுபொருந்த வகைசெய்து, மாண்உற—மாட்சிமைபொருந்த, பதினொருகூறு—ஏகாதச

ருத்திரராவார், கதிர்மதிமுடித்த காபாலி—சந்திரசேகரன். மேவினர்—பொருந்தியுள்ளனர்.

8 சத்திவடிவினை (பெண்வடிவினை) எண்ணறும்—அளவற்ற, கண்வழுக்குறும்-கண்ணுற்காணமுடியாத, எழிற்கமலை—அழகுறும்இலக்குமி, ஒள்நுதல் — ஒளிபொருந்திய நெற்றி(யினையுடைய.)

9 இன்னணம்--இப்படி, மன்உயிர் - நிலைபெற்றஆன்மாக்கள். மல்கிடாது—நிறைவுறாது, கல்நெடும்சிலை—மகாமேருகிரியாகியவில், குனித்திடும்—வளைத்திட்ட, முன்னவன் —திரிபுராரி.

10 மின்று—மின்னல், பணி-கட்டளை (ஆணை) தலைக்கொண்டு—சிரமேற்றாங்கி, முற்றிழை — பார்வதிபிராட்டியார். தாழ்சிறை அன்னமூர்கடவுள்—அன்னவாகனன் ஆகிய பிரமதேவன், மேயினுள்—பொருந்தினள்.

11 உலகெலாமீன்றதாய்-பார்வதியம்மையார், இவண்—இவ்விடம். மன்னியதெவன்—வந்தடைந்தது எற்றிற்கு. தொழுது—வணங்கி. தக்கன்நன்புதல்வி-தாட்சாயணி. ஆகுகவென—ஆகுகவென்று வேண்டிக்கொள்ள, தோன்றினுள்—அவதரித்தனள்.

12 தாழ்சடைமுக்கணுர் — கங்கைதாழ் சடையினன் ஆகிய முக்கணன் ஆகியசிவபெருமான், அளித்தனன்—மணம்புரிந்து கொடுத்தனன், ஆர்ப்புஎழ—ஆரவாரம் உண்டாக. மிக்கதன்தந்தை-தீநெறி மிகுந்ததந்தையாகிய தக்கன். தீவினையின்—யாகத்தினுல், மேனை—இமயவரசன் பத்தினி. புதல்வி—பர்வதராசன்குமாரி,

13 தோலடிஎகினம்— தோலடிப்பறவையாகிய அன்னம், இவர்ந்த—ஏறின, கால்உமிழ்—காற்றினை வீசும், கருடப்பாகன்—கருடவாகனனுகிய திருமால், ஆலம்உண்டவன்

ஆலகாலவிடமருந்தியசிவபெருமான். பாலலோசனி—நெற்றிக்கண்ணினையுடையாள், முக்கண்ணியென்னும்பொருளது.

## (12-வது திருக்கலியாணம் உரைத்தது)

1 இவ்வுலகீன்றாள் — இவ்வுலகினைப் பெற்றவளாகிய அம்மையார், உதித்தஇயல்பும் — தோன்றிய வீரலாறும். செம்பொற்குன்றரையன்—இமயபர்வதராசன், மன்றல்கமழ்தரு — நறுமணம் வீசும் கற்பகத்தரு, குணில்—குறுந்தடி, மாமாயன்—கரியதிருமால்.

2 விளம்பலுற்றது—பேசலுற்றது, ஓர்வுஅரிய-உணர்தற்கரிய, பவக்கடல்—பிறவிக்கடல், வீழும் — அமிழும், கரை—முத்தியங்கரை, தெப்பம்—மிதவை, தற்பரம்—முழுமுதற்கடவுள், எவ்வுலகும்பொதிந்து நின்றபூரணம்—எல்லாவுலகினையும் உள்ளடக்கி நின்ற நிறைபொருள், போந்தது—வந்தவதரித்தது.

3 பொருவுஅரிய — உவமையற்ற, சிவை, அநந்தை, ஏகை, புராணை, விமலை என்பன, இறைவியின் பரியாயப் பெயர்களாம், காந்தமணி—காந்தக்கல், ஆண்டவனுடன், படைப்பிற்கும், காப்பிற்கும், அழிப்பிற்கும் இருப்பவள் அம்பிகையென்பது கூறப்பட்டது, சிவம் சத்தியொடுஞ் சேர்ந்திடில் எத்தொழிலும் வல்லதாம் என்பதுநோக்கத்தக்கது.

4 கருவி—காரணம், காரியம்—செயல் (ஆக்கப்பாடு) காலம் ஒரு மூன்றுவன—இறப்பு, எதிர்வு, நிகழ்வென்பன, அணுகா—அணுகி (நெருங்கி) உபாதானம்—முதற்காரணம் பராசக்தி, தனதுருநான்காவன—சாந்தி, வித்தை, நிவிர்த்தி, பிரதிட்டை என்பனவாம், செப்புவர்—புலவோர் புகல்வர், ஆல்—அசைநிலை.

5 இந்நான்குசித்திகளொடுங் கூடலாற் சிவபெருமாற்குச் சதுர்வியூகர் என்னுந் திருப்பெயர் ஆம். பரன்பரையைக் கலந்து உவமையில் ஆனந்தமயமாகியிருப்பர் என மறைகள் நவிலும்.

6 மகேசனோடும் சேரலால், மகேசையெனப்பெறுவள் நீர்முற்றுலகம்—கடலாற் சூழப்பட்ட உலகம், உஞற்றல்—செய்வது, கன்னிமை—கன்னித்தன்மை, செல்வி—குமாரி. சிற்றுதரம்—சிறுவயிறு, ஐங்கரன்—மூத்தபிள்ளையார்.

7 காலம் மகேசன், அரி, பிராணன், உருத்திரன், அரன், வெங்கனலி, என்பன இறைவன் கருவிப்பெயராம். அறிஞர்—புலவர், மாலுறுகால் — மயக்கமுறுஞ்சமயத்து. ஏலுறுது—இசையாது. மாதோ—அசைநிலை.

8 உலககாரணன்—இறைவன், உலகு காரியம் இறைவனது கலைமாயையாகும். தீர்வரும் — நீக்கரும், மாயாவியென்றிறைவற்கொருதிருநாமம், ஆரியன் — பூசிக்கத்தக்கவன், மயக்குறுத்தும் — மயங்கும்படிச்செய்வன். உலகுந்தானாகி அவற்றினைத்தாங்கிப் பிரகாசமொடு வீற்றிருப்பன் எனக்குறித்துள்ளார்.

9 ஞானசத்தி, கிரியாசத்தி, இச்சாசத்தி, எனவொரு மூவகைச்சத்திகளுளர். தொல்லோனாகிய இறைவனுடன் அச்சத்திகள் பொருந்தி நிற்கும். அன்றே—அசைநிலை, வகுத்தான்—ஆக்கினான்.

10 மாயை-அநாதிமாயை. அதனுருவேசத்திகளாகும், தேவதேவர் பேரொளிப்பிழம்பாகும். ஒழியாமாயை—சுத்தமாயை, மாயைபுருடன் பகுதியென மூவகைத்தாம். பிரகிருதி. ஆல்—அசைநிலை.

11 சத்தியொன்றையே நீங்காத துரியா தீதப்பொரு

ளாஞ்சிவமும் ஒன்றேயாகும், சத்திகளும், சத்திமான்களும் ஈசன் மருவு மாயைஅளித்த சத்தியாம்.

12 நுகர்பவன் — அநுபவிப்பவன், நுகர்பொருள்—போகப்பொருள், நற்கலை—சத்தியின்கூறு, நாளும்—எக்காலத்தும், முத்திபுகநினைவோர்—மோட்சமடையக்கருதுபவர் சுணங்கு — தேமல், முகிழ்முலை — அரும்பன்னகொங்கை. முற்றிழைசேவடி—பராசத்தியின் திருவடிகளை. மூன்றுவர் —இடைவிடாது தியானிப்பார், ஆல்—அசைநிலை.

13 நற்றவம் — சிவபுண்ணியம். முத்தவடம்—முத்துமாலை. இமைப்ப-ஒளிவிட, மேனை—இமயவரையன் மனைவி. உயிர்த்து—பெற்று, நனிசெம்மாப்ப—மிகவும் இறுமாப்புற காதலனை—தலைவனை.

14 பராசத்தியினியல், செங்கதிர்போன்ற நிறமும், அட்டமிச் சந்திரனை யொத்த நுதலும், வள்ளைவாட்டுங்காதுகளும், நான்குமுகங்களும் எண்டோளும், வேயினைவென்ற தோளும், பிறையணிசடையும், உடையதிருவுருஎனக்கூறப்பெற்றுளது. நோக்கு—பார்ப்பாயாக, இயம்பலோடும்—கூறவும்.

15 மணிமௌலி—மாணிக்கக்கிரீடம், இலவுஇதழ்—இலவுப்பூப்போன்ற உதடுகள் மழலை—பொருள்விளங்காக்குதலைமொழி, குழைய—வளைய. வரிஅரவம்நாண்-கீற்றுக்களையுடைய பாம்பாகிய கயிறு, கொளுவி—பூட்டி, முன்னம் உலவு— ஆகாயத்திற் பறக்கின்ற, புரம்-திரிபுரங்களை, முதல்வன்பங்கினில்— இறைவன் இடப்பாகத்தில், இனிதுஉறைகுவேன் —யான்இனிமையுறத்தங்குவேன்.

16 மண்பனைஞர் — குலாலர் (குயவர்) இருவினையின் வாய்ப்பட்டு—நல்வினை தீவினையின் வாய்ச்சிக்கி, மம்மர்—மயக்கம், கொட்புறும்—சுழலும். கொடும்பிறவி—கொடிய

பிறவிப்பெரும்பிணி. எனதுகோலம்யாவும் — எனதுவடிவம் முற்றும். கண்புலனில்-உங்கள் ஊனக்கண்களால், கண்டு உவப்ப—தரிசித்துமகிழ, பேரறிவு— மெய்ஞ்ஞானத்தினை நீகாண்டி — நீபார்ப்பாயாக. கோடிகதிர் — கோடிசூரியர் எழுந்தென—தோன்றினாற்போல, வேறுருவம்—குழவிப்பருவங்கடந்த விசுவஉருவம்.

17 அவ்வுரு, சுவர்க்கம், சத்தியம், வைகுண்டம், ஆயவுலகுகளைக்கடந்ததென்பார், திருமாலும், பிரமனும், இந்திரனும் வணங்கிப்போற்ற என்றார். அண்டகோடிகள்— எல்லாஅண்டங்களும், கதை, நேமி, சூலம், சங்கம். கொண்டு நீள் தடக்கையினில்கொண்டு, கொடுவரி—புலி. அதன்— தோல், மெல்குறங்கு—மெல்லியதொடை.

18 வெண்ணிலவு—சந்திரிகை, ஒளிர்வது—பிரகாசிப்பது. மணிமவுலி—இரத்தினமுடி (கிரீடம்) அரியிறபெய்த நூபுரம்—பருக்கையுள்ளடைத்த சிலம்பு, கண்வழுக்குசுடர் மாலை—கண்கள் கூசும்படியான ஒளிமிக்கதார், அழலெறிப்ப — அக்கினிவீசுதலைச்செய்ய. யாவையும்—முற்றும்.

19 உலப்புஅரிய—உலத்தலில்லாத (வற்றாத) உள்ளுமாய்ப்புறமுமாய் — உள்ளிடத்துமாகி வெளியிடத்துமாகி, (அகத்திடத்தும் புறத்திடத்தும்,) உலகம்போர்த்து—உலகினைமூடி, நலத்தகுசீறடி—பேரழகு பெற்ற சிறுமையாகிய திருவடிகள், நளினமலர்—தாமரைமலர்கள், சொலற்கரிய —கூறொண்ணாத. கூறு— ஒருபாதி, முதல்வி—பார்வதி பிராட்டியார்.

20 இச்செய்யுள்முதல். தேவியின் ஆயிரநாமங்களுள் துவக்கமாக ஒருசிலநாமங்கள் 23ம் பாடல்முடிய கூறப்பெற்றுள்ளன. அவையாவன:- சிவை, அநந்தை, பராசத்தி, நிட்களை, கேவலை, மாயாதீதை, சாந்தை, கவுரி, மகேச்சுரி, அமிர்தை, அசலை, சுமங்கலை, நிவர்த்தி, காளி, கங்கை, பவ

கரை, மாதேவி, மகாநந்தை, நாதாக்கியை, பார்வதி, மாமாயை, சுவதை, அதீதை, பிரதானை, பிரகிருதி, துருவை ஏகை

21 சுத்தை, வியாபினி, சாவித்திரி, சூக்குமை, சுக்கிலை, புராணி, நித்தியை, அனுப்பிரவேசி, சுயம்பூதி. மகாரூபை, நிமலை, சோதி, சித்தி, சருவாதாரை, பிரசூதி, தருமவித்தை, சன்மாதீதை, 'சத்தியை, மாலினி, தேவி, தாமசி, மாதவி, மேதை, சுநீதி, நீதி.

22 சுருதி, சருவாணி, சரச்சுவதி, உருத்திராணி, மானசி, சுவாகை, மிருதி, யோகினி, சோபை, சுந்தரி, அம் பிகை, லோபை, விசுவரூபை, விரசை, சோபனை, மகாபலை, காந்தை, விபாவனை, வாக்கியை, பவானி, பிரமவிஞ்சை, புருடமோகினி, சாதரூபதரை, புராணவிஞ்சை.

23 பகவதி, சம்பவை, மகிடவாகனி, அச்சுதை, அநாதி, பரமகலை மகதிசத்தயோனி, பிரதானபுருடேச்சுவரி, மா விஞ்சை, சாந்தை, குகை, சருவசத்திகலை, அவ்வியத்த லக்கணை, நிர்க்குணி, பிராமி, சகன்மாதா, விபாவரி, சின் மயை, அநந்தவிபவை, சராதீதை துர்க்கை.

24 எடுத்துஓதி—சீருடையவென்றுஒலியுறயருச்சித்து, கூப்பி—குவித்து, புவி, புனல், தீ, வளி, விசும்பு, வெங்கதி ரோன், சந்திரன், இயமானன், இவை இறைவனுடைய அட்டமூர்த்தங்களாம். சிவன் உருவின் நீங்காத செல்வி—அபேதசத்தியானவள். செல்வி—மூத்திச்செல்வவடிவினள் சிந்தைசேர்த்தி—மனத்தில்தியானித்து, தவலருஞ்சீர்-நீக்கற் கரிய பெரும்புகழ், மகிழ்பூப்ப—களிப்புத்தோன்ற, மலையரை யன்—இமவான்.

25 குங்குமம்மெழுகிய — குங்குமம் அப்பிய, (பூசிய) கொம்மை—அழகு, மங்கை—தேவி, பேரு—பெரியவடிவு

ஒழித்து—நீக்கி, மாணுற — மாட்சிபெற, எடுத்தி—மேற்கொள்வாய், என்னலும்—என்றுவேண்டுதலும்.

26 கோடு—மலை, அலம்வரும்—சுழலும், செம்மை—செவப்புநிறம், நலம்கவர்ந்து— அழகினைக்கவர்ந்து, ஒளிரும்—ஒளிவிடும், செங்கையும்—நல்லகரங்களும்.

27 குழை—காதணி, அருள்பொழிகுவளையுண்கண்—கருணைசொரியும் நீலோற்பலமலர்போன்ற மையுண்டகண்கள், கழையுறழ்—மூங்கிலையொத்த, கண்கவர்எழில்—கண்டார்தம் கண்களைவேறொன்றினையும் பார்க்கவொண்ணுவாறு தம்வயப்படுத்திய எழுச்சி (அழகு) ஈர்ங்கதிர்—சந்திரன், நித்திலம்—முத்து, பொருவும்—ஒக்கும், மூரல்—பல்,

28 தவளைஅம்கிண்கிணி — தவளையினைப்போல ஒலிக்கின்ற சிறுசதங்கை, (அல்லது) தவளைப்போன்றவடிவினையுடைய அழகியசிறுசதங்கை, மெல்இதழ்குவளையின்மணங்கமழ் கோலமேனி-மெல்லியஇதழ்கள்பொருந்திய நீலோற்பலம் போன்றவாசனைவீசுகின்ற அழகிய திருமேனி, நீலோற்பலாம்பிகை யென்னும்பொருளது, கடிகை—துண்டம், பன்மணிதிவள்கதிர்மேகலை—நவமணிகள் வைத்திழைக்கப்பட்டவிளங்குகின்ற ஒளியினையுடையமேகலாபரணம்.

29 ஆயநல்லுருவினை— அப்பெற்றித்தாய நல்ல அழகியவடிவினை, நோக்குறு—நோக்கி, மீஉயர்பனிவரை—மேலுலகுவரை யுயர்ந்த இமயமலை, வேந்தன்—அரசன் (இமவான்) காதல்—பெரும்பற்று, முழுதுலகு—எல்லாவுலகமும், ஈன்றருள்—பெற்ற, தாய்—உலகமாதா, தாழ்ந்து—வணங்கி.

30 பிரதானம் — சிறப்பு, நற்புருடன்—இயமானன், மாணுற—மாட்சிமைபெற, கான்மலர்க்கடவுள்—நறுமணங்

கமழும் நற்றுமரையில் வீற்றிருக்கும் பிரமன், புங்கவர்—தேவர், அளித்தன—ஈன்றுகாக்கப்பெற்றவை.

31 பேதம்—வேற்றுமை, அபேதம்—ஒற்றுமை, பெந்தம்—கட்டு (தளை) பரித்திடும்—தாங்குதலைச்செய்யும், மகேச்சுரன்—பேரிறைவன் (சிவபெருமான்) கலந்திலான்—சேர்ந்திலான், படைக்கஒண்ணுமோ — உண்டாக்க முடியுமோ. ஓ, எதிர்மறை.

32 இதுமுதலாக 36ம் பாடல்வரை பார்வதிதேவியாரைப் பார்த்து இமவான் கூறும் பரத்துவச்சொற்களாம். தேவீநீ! தேவரிற்சிறந்த இந்திரனுகுவை, பிரமவாதியரிற் குற்றமற்ற பிரமனுகுவை, வலிமையுற்றவரில் விளங்கும் வாயுவாகுவை, யோகசித்தியிற்சிறந்த சனகனுகுவை, பரம் பொருள் ஆய்பவரிற்சிறந்தவசிட்டமாமுனியாகுவை எனவும்

33 வேதபாரகரிற் சிறந்த வியாதனுகுவை, சாங்கியரிற் போற்றும் கபிலமுனியாகுவை, மழுவாளியிற் சிறந்த வுருத்திரரிற் சங்கரனுகுவை, பன்னிருசூரியரில் உபேந்திரனுகுவை, செயற்கரிய செயல்புரியட்டவசுக்களில் பாவகனுகுவை, எனவும்

34 நீக்கற்கரியவேதங்களிற் சிறந்தசாமவேதமாகுவை சந்தசினிற் சிறந்த சாவித்திரியாகுவை. சிறப்பித்தோதப் பெறும்வித்தைகளிற் பிரமவித்தையாகுவை, சத்திகளிற் சொலற்கரிய மாயையாகுவை. வருணங்களில் சிறந்தவேதநூல் ஓதும்விப்பிரனுகுவை, எல்லா ஆச்சிரமங்களினுஞ் சிறந்த இல்லற ஆச்சிரமத்தானுகுவை (கிரகத்தாச்சிரமே மேலானதென்பது புலனுயிற்று)

35 ஈசர்களில் மகேசனுகுவை புருடர்களிற் புருடோத்தமனுகுவை (திருமால்) குற்றமற்றுயர்ந்த கற்பகத்தின் அருளார் ஈசான கற்பகமாகுவை, நால்வகையுகங்களிற் சிறந்த

முதல்யுகம் ஆகுவை (கிருதயுகம்) பிரகாசத்தினிற் கதிரோனாகுவை, மாசில்லாவிகளிற் பாரதியாகுவை (வாக்குதேவி) மாயாவிகளில் மாதவனாகுவை.

36 கற்புடையரில் அருந்ததியாகுவை. பறவைகளில் கருடனாகுவை மலைகளிற் சிறந்தமகாமேருவாகுவை, அரவங்களில் ஆதிசேடனாகுவை, அன்புடனிகழ்பவைகள் அனைத்துமாகுவை சிறப்பும் பெருமையும் செறிந்த பிரமரூபமாகுவை

37 என்னு—என்று, கூப்பி-குவித்து, இதயம்-உளம், கண்பனிப்ப— கண்களில்நீர்ததும்ப, நின்றுஏத்தி — நின்று கொண்டுபலவாறாகப் புகழ்ந்து துதித்து, புவனம்—உலகம், பயந்த—ஈன்றெடுத்த, நிகர் ஆர்—ஒப்புஆர் (ஒருவருமில்லை) பொன் ஆர்கமலம்சேவடிகள்— அழகுநிறைந்த செந்தாமரை மலர்போலும் திருவடிகள்.

38 புரியும்கருமம்— செய்யும்செயல்கள், பலன்விழையாது—ஊதியத்தினை விரும்பாது, புனிதம்—தூய்மை. அரியமகங்கள்—செயற்கருஞ் சிவயாகங்கள், இனிதுஆற்றி—இன்புறச்செய்து, கருதற்கரிதாம்—எண்ணமுடியாததாம், அளிப்பல்—கொடுப்பேன்.

39 அருமாமறைகள் — அறிதற்கரியபெருமைவாய்ந்த வேதங்கள், உந்தித்தடம்பூத்தசெல்வன்—பிரமதேவன், முன்னைப் படைப்பதனில்—பிரமனது முதற் படைப்பினில் நான்குவேதங்களையும் கற்றோருழுகார் முத்தியாகிய வீட்டினையெய்தார். மயக்கநூல்களை கற்று அதன்வழிப்பட்டமையால்.

40 வேதவொழுக்கமிகழ்ந்து புல்லராயினார் போதிக்குந்தீதுநூலின்வழிநின்றோர், நரகிடைப்படுவர் புன்சமயங் கற்றோர்முகத்தின்கண், வேதநன்குணர்ந்த பேரறிஞர்கள் சிறிதும்விழியார் என்பது குறிக்கப்பெறுகின்றது.

41 சாருவாகம், காபாலம், பாஞ்சராத்திரம், வாமம் இவைகள் மனத்தினை மயக்கும். இந்நூலிற்றேறியதன்படிநின்றோர், இவற்றினை யுலகிற்குபதேசித்தோர் கழுகுதொடரும் நரகிடைப்பம்பலகாலம் படிந்து துன்புறுவர்.

42 வேதநூல்களையும் அவற்றினைப்பின்பற்றிய விராட்டெனும் பெயர்பெற்ற சுவாயம்புமனுச்செய்த, மிருதிநூல்களையும், வியாசமாமுனிவரர் செய்தபுராணநூல்களையும், இருடிமார்கள் இயற்றிய உபநிடதங்களையும் நீதிகள் எனத் தெளிந்து அவற்றின்வழிநின்றோர்களாவர்.

43 அங்கமாறுவன:— சிக்ஷை, கற்பம், வியாகரணம், சந்தோபிசிதம், சோதிடம், நிருக்தம் என்பன. மீமாஞ்ஸை, நீதிநூல், புராணநூல், தருமநூல், ஆகப்பதினான்காம். இது பதினான்கு வித்தையெனப்படும். இவற்றினையறிந்தவரே நல்லறிவு படைத்தவராவர்.

44 இருந்தவத்தோர்—பெரியதவக்கிழமைபூண்ட பெரியோர்கள் அன்னம் இவரும் நான்முகன்—அன்னவூர்தியினையுடைய நான்முகனாகிய பிரமன்.

ஒருமூன்றுபாழ்களாவன:— அசுத்தமாயைப்பாழ், சுத்தமாயைப்பாழ், மகாமாயைப்பாழ், என்பன சகம், சிவன் ஈசுவரன் இம்மூன்றுமாம்.

45 அருவும் அறிவும் ஆகியஎன்தன்மையினை மனத்திலிருத்த முடியாதென்னில் உருவநிலையில் நினைப்பாயாக. அவ்வுருவும் அறிதற்கரிதென்னில் உன் உள்ளத்தில் மன்னியவுருவினை நினை. நினைந்தவடிவேவடிவாய்வந்து முத்தி தருவன் என்றார். விபு—மேலானவன்

46 புனிற்றுஇளமான் — மிக்க இளமையினையுடைய மான் (தக்கன்மகளானபோது தாட்சாயணி யெனப்பெயர் பெற்றேன். இனிப்பார்வதி யெனப் பெயர்பெறுகின்றேன் என்பதுங்குறிப்பு) கருணைக்கடலை—அருட்கடலாகிய சிவ

பெருமானை, இகழ்ந்தனன் — பரனெனஙினையாது நிந்தித்தனன், மன்ற—தெளிவாக, மதிக்கண்ணி—சந்திரனைசடாமகுடத்திலிருத்தியோன்; குன்றவில்லிக்கு — மகாமேரு கிரியினை வில்லாகவுடைய பரமேசுவரனுக்கு, உலகம் பூத்த கொடி—உமாதேவியார்.

47 கண்ணி-கண்களையுடையாள், பவளக்கனிமலர்ந்து—பவளத்தினையும் கொவ்வைக்கனியையும் ஒத்த வாயினைத்திறந்து, சில்லென்கிளவி—சில்லென்றவோசையினையுடைய மொழி, உவகைதளிர்க்கும் — மகிழ்ச்சிதழைக்கும், வரைத்தலைவன்—மலையரையனாகியஇமவான், ஆற்றிடும்—புரியும், எல்லை—சமயத்தில்.

48 எகினப்பாகன் — அன்னவூர்தியோனாகிய பிரமன், கவரி—சாமரை, கடல்கடைந்தோன்—திருமால், திமிரம்—இருள், செங்கேழ்ப்பருதி — செவந்தநிறமுடைய சூரியன், குமுதம் — அல்லி, குளிர்கதிரோன் — குளிர்ந்தகிரணங்களையுடையசந்திரன், கொற்றக்கவிகை—வெற்றிக்குடை.

49 அயிராவதப்பாகன்-தேவேந்திரன், உயிருண்ணுங்கூற்றம் — காலனாகிய இயமன், சிவிறி—துருத்தி (நீர்த்திவலைதுவற்றுங் கருவி. கடற்றலைவன்—வருணன், இரலைப்பாகன்—வாயு, இரலை—மான், போந்து—வந்து, சாந்தாற்றி—விசிறி.

50 நிதிக்கிழவன் — சங்கநிதி பதுமநிதிக் கிழவனாகிய குபேரன், பொன்னம்வட்டில் — காளாஞ்சி (படிகம்) செம்மாப்ப—இறுமாப்ப, நிருதி—வடமேற்றிசை காவலன், முத்தலைவேல்—சூலாயுதம், முன்போத — முன்வர.

51 செங்கண்ஏற்றுதகர்—சிவந்தகண்களையுடைய ஆட்டுக்கிடாய், ஊர்வோன்—அக்கினிதேவன், பாதுகை—மிதியடி, ஈசானன்—ஈசானஉருத்திரன், பினாகம் — வில், செலவயர—செல்ல, வியாழன்—பிருகற்பதிபகவான்.

52 நவையில்சித்தர்—எண்வகையானகுற்றமற்ற சித்தர்கள், இவர்கள் பதினெண்தேவ கணத்தவரைச் சார்ந்தவர், மருத்துவர்கள்—அசுவினிதேவர்கள், வரைகள்—ஒவ்வொரு மலைக்குமுரிய அதிதேவதைகள், நதிநதங்களும் அன்னவேயாம். உரகவேந்தர், அரவங்கட்கரசன், துவலை—நீர்த்துளிகள்.

53 சனகமுதல்முனிவரர்—சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர்ஆவர். உலகுதந்தோர்— உலகினைச்சிருட்டித்தவர், கனல்—அக்கினி, சுழல் — சுழலல் (சுற்றுதல்) வெவ்வினை—பாவச்செயல், பின்செல்ல—பின்னேவரவும்.

54 தக்கன்மகம்—வேதநெறிபடராவேள்வி, கக்கும்—உமிழும், முத்தலைவேல்வீரன் — மூன்றுமுனைகளையுடைய சூலந்தாங்கிய வீரபத்திரக்கடவுள், சீற்றம்-சீறுதலைப்புரியும் கோபம், எறும்வலி—மிக்கவலிமை, சண்டன்—தேசச்சண்டன், துவனிச்சண்டன் முதலாயினோர் கணமனைத்தும்—சிவகணங்களாயினோர் அனைவரும்.

55 அண்டமுகடு— அண்டங்களின்உச்சி, மோழைபட—வெடிப்ப, பாணுகம்பன் --சிவபெருமானுக்குச் சங்கநாதஞ் செய்பவன், ஈராயிரங் கைகளையுடையவன், கொண்டல்—நீருண்டகருமேகங்கள், உருமின் — இடியேற்றினைப்போல் வாணன்-சிவபெருமானுக்கு மத்தளங்கொட்டுபவன். முழக்க—ஒலிக்க.

56 ஆள்வழக்குஒழிய—ஆள்நடமாட்டம் நீங்க, நீண்ட—பரந்த, மழைக்கண்—கரியகுளிர்ந்தகண்கள், நாள்இளமதி இளஞ்சந்திரன் (அட்டமிசந்திரன்என்றுமாம்) உருப்பசிமுதலோர்—ஊர்வசி, திலோத்தமை, இரம்பை, மேனகை ஆகிய தேவதாசிகள், சதிமுறைபிறழாது ஆட — தாளமுறைபிறழாது பரதநாட்டியம்புரியவும்

57 கன்னல்—கரும்பு, வாழை, மா, பலாவின்பழங்கள், மகதிவீணை—மகதியெனப்பெயர்பெற்றவீணை, வழாத—வழுவாத (தவருத) மிதுனம்—இரட்டை, உளரும்—தடவும், தும்புரு — வீணைவாசிப்பவர், நாரதரும்தும்புருவும் வீணை வாசிக்கும்வித்தகர்.

58 மருக்கிளர்—வாசனைவீசும், வானவன் — திருமால் அருக்கனில் —சூரியனைப்போல, அவிர்மணிமவுலி—விளங்குகின்ற இரத்தினங்கள்பதித்த மகுடங்கள், மின்—முன்னிலைப் பன்மையேவல்விகுதி, என்று—என்றுகூறி, தருக்கு —இருமாப்பு, நந்தி—அதிகாரநந்தி யெம்பெருமான், தாக்கும் — அடிக்கும், தரணி—பூமி.

59 வேதண்டம்—மலை, தூயபிள்ளைவெண்டிங்கண்ணி வார்சடை முடித்தபெம்மான் — சந்திரனை சடாமகுடத்திற் புனைந்தவன் (சந்திரசேகரன்) வீற்றிருக்கும் — எழுந்தருளியிருக்கும், பேழ்வாய்—பிளந்தவாய், நரைவிடை—வெள்ளையெருது, துனைவினூர்ந்து—விரைவின்நகர்ந்துசென்று, தள்ளருந்தவத்தோர்—நீக்கற்கரியநெடுந்தவத்தினர்.

60 மழவிடை—இளமையானஎருது, இழிந்து-இறங்கி, பொழிகதிர்நேமி-சுதர்சனம் என்னும்சக்ராயுதம், பொருப்புஉறழ்தடகை—மலையினையொத்த பெரியகரம், விழைவு—விருப்பம், மாமன்—மாமனாகிய இமவான், அரியணை—சிங்காதனம்.

61 மருகன்—மாப்பிள்ளை, பருகுவான்போல— அருந்துபவன்போல, பண்ணவர்-தேவர், உள்குழைய—மனமிளக, முகமன்—இன்னுரை (உபசாரமொழி) அருவையிர்—பெண்களே (அரிவை அருவையென) எதுகை நோக்கித் திரிக்கப்பெற்றது.

62 குருதிக்காந்தள் — செங்காந்தள், முகிழ்—அரும்பு

மாதர்நடைக்கு அன்னநடையும் பிடிநடையும் உவமம், அயர்தல்—தளர்தல், மேனை—இமயவரசன் மனைவி, புலம்ப—ஒலிக்க.

63 மைதவழ்கூந்தல்-கரியநிறம்வாய்ந்தகூந்தல். புல்லி—தழுவி, ஐதெழில்—அழகும் எழுச்சியும் (எழில்—தோற்றம்) பொற்பூண்-பொன்னுபரணம், மறைத்திட்டார்—மறையும்படிச்செய்தனர், ஆல்—அசைநிலை.

64 எரிமணி—செம்மணி (மாணிக்கம்) கற்றை—தொகுதி, காலும்—வீசும், கூரொளி—மிக்கவொளி, அரிமதர்—செவ்வரிபரந்தசெழித்த. புலோமிசை—இந்திராணி, வெள்ளடை—வெற்றிலை.

65 ஓசிதல்—துவளல், நுழைநுசுப்பு-நுண்ணிய இடை. வேய்—மூங்கில், நெய்த்து—நெய்பூசப்பெற்று, வாணி—கலைமகளார், நிலவுகாலும்—சந்திரிகைவீசும்.

66 கன்னிஅம்கற்பு—அழியாத அழகிய கற்புடைமை, அருந்ததி—வசிட்டர்மனைவி, கங்கை—கங்காதேவி, பன்னருமறை—கூறற்கரியவேதங்கள், பல்லாண்டுகூற — பல்காலம் வாழ்கவென்று சொல்லிப்பாட, பொன்னகர்க்கிறைவன்—இந்திரன், அதிதியென்பவள் பூப்பொரி சிந்தினள், உலோபாமுத்திரை— அகத்தியர்தம்மனைவி, ஆசிகூற — ஆசீர்வாதம் சொல்ல.

67 செம்பொன்சிவிறி-செம்பொன்மயமாகிய துருத்தி. விழைவிற்றூற்ற— அன்புடன்தெளிப்ப, கேழ்கிளர்—நிறம்விளங்குகின்ற, மயில்அம்சாயல் — மயில்போன்ற அழகிய மென்மையினையுடையவள், திலோத்தமையென்பவள் சாந்தாற்றிகொண்டு வீசினள் என்பதாம்.

68 புல்லிதட்குவளை — புற்கென்ற இதழ்களையுடைய நீலோற்பலமலர், காளி — சத்தி அம்சங்களிலொன்று வீர

மாகாளி யென்றழைக்கப்பெறுவள், பொற்பிரம்புதாங்கி—பொன்னாலாகிய பிரப்பங்கோலினையேந்தி, நடத்தியென்று—நடப்பாயாகஎன்று, புவனம்யாவும்—உலகங்கள் அனைத்தையும், சிற்றுதரவல்லி—சின்னஞ்சிறிய வயிற்றினையுடைய வல்லிக்கொடிபோல்வாள், பல்லியம்—பல்வகைப்பட்ட வாத்தியங்கள், கறங்க—ஒலிக்க, மன்றல்பயிலும்மண்டபம்—திருமணமேடைகமழும்மண்டபம், புக்காள்—வந்தடைந்தாள்.

69 வேய் நெடும்தோளி — மூங்கிலையொத்த நீண்ட தோள்களையுடையவள் (உமாதேவியார்) விண்டுவைமுதல தேவர் — மகாவிட்டுணுவையுள்ளிட்ட அமரர்கள், தூயினர் —வாரிவாரிச்சிந்தினர். உவகைபொங்க—மகிழ்ச்சிமிக, ஆயிர நாமம்—ஆயிரம்பெயர்களையும், பாடி—அருச்சித்து, தாயினைக்காணின்மைந்தர், மகிழ்வது உலகியலாகு மெனல்தெளிவிக்கப்பட்டது, தக்கது அன்றே — தக்கதுஅல்லவா, அன்றே-பலரறிதேற்றத்தினைப்புலப்படுத்துவது.

70 கடிமணம்—விளக்கமுற்றதிருமணம், கருமம்—செயல்கள், நான்முகக்கடவுள்காட்ட — பிரமதேவன் செய்ய, இரங்கல், அலறல், இவைகள் ஒலித்தல்என்னும்பொருளது. ஆர்ப்ப— ஆரவாரிப்ப, ஓடிவில்சீர் — இடையற்றுப்போகா நீண்டபுகழ், வாக்கியஉதகம்—சொரிந்தநீர் (தாரைவார்த்தல்) வடிமலர்க்கண்ணினாள்-அழகியபரந்த கண்களையுடையவளாகிய பார்வதிபிராட்டியார், அருளினான்—கொடுத்தான்.

71 தூயஇக்கதை-தூய்மையான இப்புராணவரலாறு, வீட்டின்பம்துய்ப்பர்-முத்தியின்பத்தினையநுபவிப்பர் (முத்தியெய்துவர்) ஆயிரநாமம்ஓதி — ஆயிரம்பெயர்களையுங்கூறி, ஆர்அழல்கருமம்—அரியஅக்கினிகாரியம் (வேள்வி) மாயிருஞாலம்—மிகப்பெரியவுலகு, வான்தரு—விண்ணிடத்தவாகிய

கற்பகமுதலியமரங்கள், பொன்னாடு—சுவர்க்கஉலகம், மேவி —விரும்பி, யடைந்து வீற்றிருப்பர்—பலரும் பரவஅமர்ந் திருப்பார்,

## 13-வது பிருகுவாதியர் தோற்றமுரைத்த அத்தியாயம்

1 அன்னநற்காதை — அந்தஉமாதேவியார் திருக்கலி யாணச்சிறப்பின்வரலாறு, வேதம் பன்னிய — வேதங்களை கூறிய, பிருகுவாதிமுனிவரர் — பிருகுமுனிவரையுட்ளிட்ட தவச்செல்வர்கள், படைப்பு—தோற்றம், நன்னயத்தியம்புக -சிவம்பெருகச்செப்புக, நாரணன்-கூர்மாவதாரப் பெருமான்.

2 பிணை—பெண்மான், அவ்வளை — அழகியவளையல் கள், குழை—காதணி, சுணங்கு-தேமல், ஆர்ந்து—நிறைந்து செம்மாந்து—இறுமாந்து, செந்துவர்—செம்பவளம், கனி— கோவ்வைக்கனி, வாரொலிமென்கருங் கூந்தல் — நீண்ட தழைத்தமெல்லிய கருமைநிறம்பொருந்தியதலைமயிர், முருகு யிர்க்கும்—நறுமணம்வீசும், கமலப்பொருட்டுறையுர்முதல்வி —செந்தாமரைமலராகிய நடுவிடத்தில் எழுந்தருளியிருக்கும் திருமகளார் (இலக்குமிபிராட்டியார்)

3 தாதாவின்மனைவி — வாயதியும், விதாதாவின்மனை, நியதியும் ஆவர், வாயதியின்பால் தாதாவிற்குப்பிராணனும், நியதியின்பால் விதாதாவிற்கும் மிருகண்டுவும் புதல்வர்களா கத்தோன்றினர். நிரல்நிரைப்பொருள்கோள். பயந்தார்-பெற் றனர், உலந்த—உயர்ந்தோர், பிறங்குகோடு—விளங்குகின்ற சிகரங்கள், பொன்னெடுமால்வரை—மேரு, அன்றே—அசை நிலை.

4 போற்றரியபுனிதன், புரமூன்றும் ஒருங்கெரித்தபுனி தன், சிவபெருமான், போற்றி—அருச்சித்து, ஏற்றெருமைக் கடும்பாகன்—கூற்றுவன், எய்தாவண்ணம்—அடையாதபடி,

மாற்றியிடு—விலக்கும், மார்க்கண்டமுனிவரன்— மார்க்கண்டேயர். மறைதேரும்—வேதங்களையாராயும். வேதசிரசு உபநிடதம், முனி-இருடி உபநிடதப்பெயர்முனிவனை, அளித்தான்—பெற்றான்.

5 மரீசிமுனிவன்பத்தினி—சம்பூதியென்பவள் ஆவள். இவளிடத்தில்பவுரணனும், கிருட்டி முதலிய நான்கு புதல்வியர்களும் உதித்தனர். பவுரணன் புதல்வர்கள் விசயனும் பர்வதனும் ஆவர், இனிதளித்தான்—ஈன்றனன். கோது—குற்றம்.

6 புலத்தியமுனிவனுக்கும் கமை என்பவளுக்கும் கருத்தமன், சயிட்டுணு, கபீவாசன் ஆகிய மூவரும் புதல்வராகத் தோன்றினர். அத்திரிமுனிவனுக்கும் அனுசூயை என்பவளுக்கும், சந்திரனும், தத்தாத்திரியனும், துருவாசனும், குமாரர்களாக உதித்தனர். களிப்பு—மகிழ்ச்சி.

7 அங்கிராஎனும் முனிவரற்கு யங்கை, ஆமிருதி, குருச்சினி, வாலி, இராகை, அநுமதி என்பவர்கள் புதல்வியர்களாகத் தோன்றினர், உயிர்த்து—தோன்றி. உமிழும்—கக்கும், இலங்குவேல்கண் — விளங்குகின்றவேலைப்போன்ற கண்கள், கொங்குசேர்நறும்கூந்தல்—மணமுடைய நல்லகூந்தல், குழை—காதணி, திங்கள்—சந்திரன், ஆர்வப்பற்று—ஆசையாகியபற்று வாள்முகம்—ஒளியையுடையமுகம், சிறுமியர்—பெண்கள்.

8 புலத்தியன், நற்பிரீதியென்பவள்பால் வேதவாகு தம்போளி யென்னும் மைந்தர்களைத் தோற்றுவித்தனன். சந்ததி என்பவளிடத்தில் கிரது என்பவன் கூடியின்புற்று அறுபதினாயிரம் வாலகில்லியர்களைப் பெற்றான்.

9 கற்புஉருவு—கற்பின்வடிவு. அருந்ததி—வசிட்டன் பத்தினி இவ்விருவரும் இரசன், பயன், ஊர்த்தவாகு, சேவ

னன், சுதபாகு, சக்கிரன், இலவன் எனும் ஏழுமக்களைப்பெற்றனர். மேலும் பூவை யென்பவளையும் பெற்றனர். பொற்பு—வனப்பு, இவ்வுலகு—இவ்வுலகமக்கள், உய்ய—கடைத்தேற.

10 வன்ளி—தீக்கடவுள், சுவாகையென்பவள் — அத்தீக்கடவுளின்மனைவி, அன்புகூர்ந்து—அன்புமிகுந்து, இவ்விருவரிடத்தும் பாவகன், பாவமானன், சுசி யென்பவர் தோன்றினர். அரணி - தீக்கடைகோல், அரணிதனிற்பிறந்த அழல் பாவமானன் எனவும் சுசியெனுந்தீ வடவாமுகாக்கினி யெனவும் பெயர்பெறுவர்.

11 மகவு—மக்கள், அக்கினிதேவர் தொகை நாற்பானென்பாகும். பன்னிடுவர்—கூறுவர், சிவநெறி—சைவமார்க்கம். இனிதுஒழுகும் பண்பினோர் — சொன்னவாறு கடைப்பிடித்தொழுகும்நலப்பாடுடையர்.

12 மறைகிடந்து விளையாடும் நல்நாவேதியன் — பிரமதேவன். மகம்புரிந்தோர்—வேள்வியாற்றினோர். புரியார்—செய்யாதவர். மொய்ம்பு—வலிமை. செப்புவர்—கூறுவர். அக்கினிச்சுவத்தர் — வெருகிடதர் எனும்பெயர் இவர்கள் பெறுபவர். செப்புவர்—கூறுவர் ஆல்— அசைநிலை.

13 அக்கினிச்சுவத்தர் — தேவர்கட்குரிய பிதிர்க்கள். வெருகிடதர்—மானுடர் தம்பிதிர்க்கள், உலப்புஇல்சீர்த்தி—உலத்தல் இல்லாதமிகுபுகழ், முருக்கு-புனமுருக்கு. இவர்கள் சுவதையைக்கூடி மேனை, வைதரணி யென்பவர்களைப் பெற்றனர்.

14 மேனையென்பவள் மலையரையனாகிய இமவானோடுங் கூடி மைநாகபர்வதத்தினையும், கங்கைமாநதியையும் உமாதேவியையும் பெற்றாள். கொம்மை—அழகு. குறிப்பின்—குறிக்கோளால்.

15 கொவ்வை — ஆகுபெயர். கொவ்வைகனிபோன்ற உதடு எனபொருள்தரும். மதர்—செழிப்பு. எம்மையாளுடையவள்—பரமேசுவரி. இசைத்தனம்—கூறினேம். மனம் தெரிய — மனமானதுதெளிவுற கேட்பனகள்—கேட்பவைகள். அம்ம—கேட்பிக்கும் என்றும்பொருளது.

16 மன்னவரின் தோற்றம் — இராசபாரம்பரியம் வரலாறு, வழங்குக—கூறுக, புலோமிசை—இந்திராணி, பாகன்—தலைவன் (இந்திரன்) மகதியாழ்முனி—நாரதன், ஆள் அரி-நாரசிங்கம், நெடுமாயன்—கூர்மாவதாரப்பெருமாள், அறைதலுற்றான்—கூறுவானுயினர்.

13-வது சருக்க முற்றிற்று

---

## 14 வது தக்கனைச்சபித்தது

---

1 சுவாயம்பு மனு என்பவன் சதரூபை என்பவளைக் கூடிப் பிரியவிரதன் உத்தானபாதன் என்பவர்களைப் பெற்றனன். உத்தானபாதன் துருவனைப்பெற்றான். துருவன் சம்புவை மணந்து தாளியனையும், சிட்டனையும் பெற்றான். சதரூபை— மிக்கவனப்புவாய்ந்தவள், ஆகம்—மார்பு, மேவி—அணைந்து. வலம்—வெற்றி, துலங்கு—விளக்கம்.

2 தம்பம்—தூண், சயத்தம்பம்—வெற்றித்தூண், நாட்டும்—நிலைபெறச்செய்யும், இலவுஇதழ் -- செவ்விலவமலர் போன்ற உதடு, சிட்டன் என்பவன் சுமதி யென்பவளைப் புணர்ந்து இரிபு, விருகதேசன், விப்பிரன், விருகலன், இரிபுஞ்சயன் என்னும் ஐவர்களையும் பெற்றான். இரிபு என்பவனும் பிருகதி என்பவளைக்கூடி சக்குசனைப் பெற்றான். மட்டு—தேன், பெட்பு—விருப்பம்.

3 தீய்த்து— தீய்ந்துபோமாறுசெய்து, மனமருட்டி—மனத்தைமருளுமாறுசெய்து, சக்குசன் என்பவன் புட்கரணி தனைக்கூடி சாக்குசனைப்பெற்றான். சாக்குசனும் நாட்டுவலை யென்பவளை மணந்தனன். நாக்கிடந்து—நடுவில்தங்கி, ஐது- அழகு, பொலங்கொடி — பொற்கொடி,

4 ஐது—அழகு, மனங்கலந்து—மனம்ஒற்றித்து, நெய் திகழ்வேல் — நெய் பூசி விளங்கும் வேற்படை, சுசி, புரு வக்கினி, உக்கிரன், சுத்துய்ம்மன், சத்துய்ம்மன், அபிமன்யு, முதலியபதின்மரைப் பெற்றனன்.

5 உரு என்பவன் ஆக்கினேயி என்பவளை மணந்து அங்கனை, சுமனசனை, உக்கிரனை, கிரீசனை, சாரனை, சயனை, மகிழ்வொடும் பெற்றனன். அங்கன் வென் என்னும் அரசி னைப் பெற்றனன்.

6 கரைகொன்று இரங்கு — கரைகளை மோதியழித்து ஒலிக்கின்ற, கடல்வலையம்—கடலாற் சூழப்பட்டது, பிருது என்பவன் ஓரரசன், பெரியோன்—பெருமையுடையவன்.

7 அன்னோன்—அவன், காதை—வரலாறு (புராணம்) சூதமுனியாகத்தோன்றினர், முதுக்குறைந்தோர் — பேரறி வுற்றோர், பைந்நாகம்—படமுடையபாம்பு, கதிர்ப்பொழியும் —பிரகாசம்வீசும், பிருதுமாழ்கி—பிருதுமயங்கி.

8 மழலைத்தீஞ்சொல்-மழலையாகிய இனியமொழி, கிண் கிணி — சிறுசதங்கை, மைந்தர்—புதல்வர், விழையேன்—விரும்பேன், அலங்குளை—அசையும் தலையாட்டம் என்னும் அணி, இழிந்து—இறங்கி, மழை—மேகம், மால்வரை—பெரியமலை, கழையால்—புள்ளாங்குழலால், ஆனின்கணம்—பசுநிரை. பழிச்சி—துதித்து.

9 இழுக்கும் — வழுக்கும், தேறல்—தேன், வழுக்கி விழ்ந்து—தடுமாறிவீழ்ந்து, வண்டாமரையாள் — இலக்குமி பிராட்டியார், உருற்றுர்—செய்யும். பான்மை—தன்மை.

10 பாற்றிருடன் — பருந்துகளுடன், கழுது—பேய் பன்னெடுநாள்—பலகாலம், ஊற்றும் — சுரக்கும், சிறுவர் இருவர்—இரண்டுபுதல்வர்கள், கமலை—திருமகள், கொழு நன்—திருமால் (கண்ணபிரான்)

11 மழையின் — மேகம்போல, உதவும்— கைம்மாறு கருதாது கொடுக்கும், இறுகும் — இற்றுப்போம்; பிருது வென்னும் அரசன் ஓரழகிய நங்கையைக் கூடி சிகண்டி விர தத்தன் இருபுதல்வர்களைப் பெற்ருன், நெறியின்—நல்ல முறையின்.

12 ஒன்ஞர் மகளிர் —பகைவருடைய மனைவிமார், கலன்-திருமங்கலநாணுகிய கலன், பொருவில் சுசீலன்-உவமை யில்லாத சுசீலன், அன்னேன்—அவன், இமயவரை—இமய மலை. கதிரோன்மண்டலம்— சூரியமண்டிலம், விருப்பு இல் ஈசன்—விருப்பில்லாத இறைவன், விருப்பின்கண் இறைவன்

13 பாலம்—நெற்றி (நுதல்) மாலோன்—மயக்கம்புரி பவன், திருமால், அரம்பொருதவேலோய்—அரத்தால் அரா வப்பட்ட கூரிய வேலாயுதத்தினையுடையவளே! துறப்பித்து —துறக்கும்படிச் செய்து, விழுமாமறை-சீரியமந்திரம்.

14 உளம்தெருளுற்று—மனந்தெளிந்து. மருள் தீர் கேள்வி—மயக்கந்தீர்ந்த கேள்விஞானம், அவிர்த்தரன், மகிழ்

தூங்க—மகிழ்ச்சிநிரம்ப, பெரியோர் — முற்றத்துறந்த முனீவரர், தெரிவை—பெண்.

15 தவல்அரும்சீர்— நீங்கற்கரியபுகழ் (கெடாதஅரிய புகழ்) அமையார்தடந்தோள்—மூங்கிலொத்தபெரிய தோள்கள், மாரிடை—வடமொழிப்பெயர், வதுவையாற்றி-மணஞ்செய்து, குமுதம்—அல்லி.

16 கடவுள்அரும்கற்பு — தெய்வத்தன்மைபொருந்திய அரியகற்புடைமை, மகவு—குழந்தை, ஈண்டு—இவ்விடம், எவன்—எதன்பொருட்டு, தெளித்து — தெளிவுறச்செய்து, உரைத்தி—உரைப்பாய், திருமால்- கூர்மாவதாரப்பெருமாள்

17 நெடும்கயிலை — நெடுங்காலமாக என்றுமழியாத கயிலைமால்வரை. அக்கண்ணன்-திருமால், முக்கணன்-மூன்று கண்களையுடைய சிவபெருமான், முகமன்—உபசாரம், விடைகொண்டு— உத்திரவுபெற்று, தத்தமதுபதி — தங்கள்தங்களுடைய பதிக்கு.

18 காமன்உடலம்—காமதேவனுடைய உடம்பு, நுதற்கண் — நெற்றிவழியாகிய அக்கினிக்கண், காபாலி—காபாலமென்னுங் கூத்தன் (மண்டையோட்டினைத் தாங்கினவன்) (முழுவெண்புதரித்தவன்) எனலுமாம், உள்ளம்மாழ்கும்—மனம்மயங்கும் (தேன்மன்கூந்தல்) தேமன்கூந்தல்—மணம் நிலைபெற்றகூந்தல், உலகுஈன்றசெல்வி—உமாதேவியாராகிய பார்வதி, தாதைமனை — தந்தையாகியதக்கன் அரண்மனை, தூமம்—புகை. சுடுசொல்--வெகுளிமொழி. பல—பலவற்றினை.

20 உலகம் ஈன்ற பொன்கொடி-உமாதேவியார், உரை கேளா—உரைத்தல்கேட்டு, அலகுஇல்சோதி—எல்லையற்ற சோதி, சீற்றம்—கோபம், அவனிதனின்—பூமண்டலத்தில், மானிடவேந்து—மனிதஅரசன், சபித்தான்— சாபங்கொடுத்தான்.

21 ஈரைந்தரசர்—பதின்மர் அரசர், இழைத்தவைகள்—செய்தவைகள். அயிராவதப்பாகன்—இந்திரன், தெய்வ முனிவன் — நாரதமுனிவன். காரின்—நீருண்டகரியமேகம் போல, கருணைக்கடல்—திருமால், ஆண்டு—அப்பொழுது.

14 வது சருக்கமுற்றிற்று.

## 15-வது தக்கன் வேள்வியழித்த அத்தியாயம்

1 காவலன்—காப்பவன் (அரசன்) உரவுநீர்—கடலகம், அடிப்படுத்தி— கீழ்ப்படுத்தி. ஒன்னார் தருதிறை — பகைவர் கொடுக்கும்வரி, விண்ணோர்— தேவர், அரிஅணை—சிங்காசனம், ஆழி ஒன்றுஉருட்டும்—ஆஞ்ஞா சக்கரத்தைச்செலுத்தும்.

2 அப்பவத்தில்-அப்பிறப்பின்கண், வைதவை-சபித்தவை முன்னி—கருத்திற்கொண்டு, கங்காதுவாரம் (தீரம்)-கங்கை மாநதியின்கரை, பெட்பின்எய்தி-விருப்பினொடும் அடைந்து. வேள்விமற்றொன்று-வேதத்திற்குப்புறம்பாயுள்ள வேள்வி.

3 கோசிகம்—பட்டாடை, இறுமருங்கு—இற்றுப்போம் எனக்கூறும்இடை, அமரர்யாரும்—தேவர்கள் அனைவரும், உறுகஎன-வந்தடைவார்களாக என்று, முடங்கல் போக்க—திருமுகம் அனுப்ப, ஒல்லை—விரைவு.

4 தாக்கணங்கு—இலக்குமி, கோக்களிறு—ஐராவதம் விண்ணோர்கோன் — தேவர்க்கரசனாகிய இந்திரன், தீக்குண அருத்தி—அக்கினியில் அவிசினைக்கொடுத்து, அமரர்—தேவ மாதர்கள்.

5 குவளைநாள்மலர்—நீலோற்பலமலர், குழை-காதணி துவர்—பவளம், கமலை—இலக்குமி, வாணி—சரசுவதி, பழ மறை-மிகப்பழமையான வேதங்கள், தொக்க அவை-கூடிய சபை, தவம் ஒருவடிவு— தவமே ஓர்உருவம்.

6 தொள்ளைபூத்து அலர்ந்த—உள்ளீடில்லாத, கமல விட்டில் அந்தணன் — பிரமதேவன், தருக்கள் — மரங்கள், ஓரறிவுமுதல் ஆறறிவு இறுதியாகவுள்ள எல்லாவுயிர்கட்கும் உயிராய் உறையும் ஆன்மநாயகன் சிவன் எனல் குறிக்கப் பெற்றுள்ளது, இகழ்ந்தது எவன்—தாழ்வுபடுத்திக்கூறியது எற்றிற்கு, உரைத்தி—உரைப்பாய்,

7 தவத்துறைபடிந்த நெஞ்சின் ததீசி — தவநெறிக் கட்டங்கிய மனமுடைய ததீசி முனிவரன், உருத்திரபாகம்— உருத்திரஅம்சம், நிவப்பு—உயர்வு. அவித்துறை—வேள்வி வகை, அறைந்திட்டான்—கூறினான்.

8 பழுது—பயனின்மை, இழுதை—அறிவின்மை, இசைந்தவாறு—மனம் போனவாறு, மழவிடை ஊர்தி— என்றும் இளமைபொருந்திய இடபவாகனமுடையஇறை வன், மகம்புரிந்திடல்—வேள்விவேட்டல், தீது—கேடு.

9 மன்பெரும்சிறப்பு—நிலைபேறுடைய பெருஞ்சிறப்பு, வாய்ந்த—விளக்கமுற்ற, மலரயன்—பிரமதேவன், முதலா னோர் விட்டுணுவாதியர்கள், என்பு—எலும்பு, ஈமம்—சுடு காடு, ஏறுஇவர்ந்து—இடபத்தில்ஏறி, கொன்படு-பெருமை, பொருந்திய, சூலம்—திரிசூலம், கூத்தனும்—கூத்தாடியும், (இகழ்ச்சிக்குறிப்பு) கருத்தன்-தலைவன், பொன்புனைஅறுவை

—பீதாம்பரம், பூவைமேனியன்—காயாம்பூப்போன்ற மேனி யையுடையவன் (திருமால்)

10 இரும்தவமுனிவர்—பெரியதவமுடைய இருடிகள், மணி நிறவண்ணன்—நீல இரத்தினம்போன்ற நிறமுடைய திருமால், யார்க்கும் — எத்திறப்பட்டவர்க்கும், முன்னே யோன்—முதல்வன், முதுக்குறைவு—பேரறிவு, மாழாந்து—மயங்கி,

11 கனன்று— கொதித்து, சீறி—கோபித்து, குன்ற வில்கடவுள்— மகாமேருகிரியாகிய வில்லையுடையசிவபிரான், குற்றம்—சிவாபராதம், பொன்றி— அழிந்து, வெம்நரகு—கொடியநரகம், புகுந்து—போய், நெஞ்சழிதிர்—மனநொந்து வேதனையுறுவீர்கள், சோர்வுற—தளர்வுற.

12 மெல்லியஅணு—நுண்ணியஅணு, இணைத்துநோக்கும்—ஒத்துப்பார்க்கும், புன்மைஅறிவு—புல்லறிவு (இழிந்த அறிவு) பூவைபோன்மேனியான்-திருமால், எல்லையில்குணம்—அநந்தகுணம், கல்வியில்மடமை—கற்றறிவில்லாமை.

13 விழுமியரல்லார்—கீழோர் (கயவர்) வெம்துயர்—கொடுந்துன்பம், வழிமது—வழிந்துஒழுகுந்தேன், மரைமலர்—தாமரைப்பூ, பழமறைக்கிழவன்—பிரமன், சோர்ந்தார்—தளர்ந்தார்.

14 வருவன எண்ணி—வரக்கடவனவற்றைக்கருதி, மனக்கொண்டு—மனத்தின்கட்கொண்டு, வெருவரல்-அச்சம், வேதன்—பிரமன், செஞ்சொல்—நேர்மையானமொழி, கருமிடறு—கரியகழுத்து, கழலிணை—இருதிருவடிகள்.

15— முன்னையபவம்—முற்பிறப்பு, அருமகம்—அரிய வேள்வி (யாகம்) அன்னவன்—அவன் (தக்கன்) ஆற்றும் எச்சம்—செய்யும் வேள்வி, என்னைஆள்அன்னை—உமாதேவியார், அதனைநேர்ந்தான்—அதற்குடன்பட்டான்.

16 செய்ய—செவந்த, அகன்நிலம்-பெரியபூமி, மண்ட—நெருங்க. இப்பாடல் விசுவரூபநிலை கூறுகின்றது.

17 தோமரம்-இருப்புலக்கை, வைவேல்-கூரியவேலாயுதம், எட்டுக்கைகட்கும் எட்டுவகையாயுதங்கள், அவை சக்கரம், சங்கு, கப்பணம், வாள், திரிசூலம், தோமாரம், வேற்படை, பரசு, என்பன. வயங்கி—விளங்கி, முழுமதி—நிறைமதி (சந்திரன்) வகிர்ந்தால்—பிளந்தால்.

18 தீக்கும்—தீயச்செய்யும், புராரி—திரிபுரங்களை யெரித்தவன், சீற்றத்தீயில் கோபாக்கினியில், காய்சினவீரன்-வீரபத்திரக்கடவுள், தீம்சொல்தோகை-இனியமொழியினையுடைய மயிலன்னசாயலையுடைய உமையம்மை, சூழ்போந்து—வலம்வந்து, உவகையின்—மகிழ்ச்சியின்.

19 அலையாழி—அலைகளையுடைய கடல், கொட்புறல்—சுழலல், அடைவு—முறை, மீளவும்—மீண்டும், அளித்திடுவன்—உண்டாக்குவன்.

20 நகைத்து—சிரித்து, உலகம்யாவும்—உலகமுற்றும், அழியேல்-அழியற்க, விரைவிற்கொன்று-விரைவில்அழித்து, போதுக—வருக, விடைகொடுப்ப—உத்திரவுகொடுப்ப, நடந்தனன்—சென்றான், அரோ—அசைநிலை.

21 மாலை—வரிசை, இமயவல்லி — பார்வதிபிராட்டியார், கடிதின்—விரைவின், காலனும்—இமயனும், சமரில்—போரின்கண், காளியையுயிர்த்து — காளிதேவியினையுண்டு பண்ணி, முடைநாறும்—புலால்வீசும், சூலம்நல்க—சூலாயுதத்தினைக்கொடுக்க, ஏகினள்—சென்றாள்.

22 எரிகவிழ்க்கும்அயில்- அக்கினியைக்கக்கும்கூர்மை, நரைவிடை—பெரியஎருது, கதை—தண்டு, நகை-ஒளி, கால்—கக்கும், துடர—பின்பற்றிவர, பருதிவேல்உழவன்—வீரபத்திரன்.

23 சேட்டிளம்பருதி—அழகிய இளமையாகியசூரியன், மோட்டுமாமணி — உயர்ச்சியாகிய கவுத்துவமணி, உயர் சாலை—உயர்ந்தவேள்விச்சாலை, வாள் திறல்குரிசில் — வாட் படைதாங்கியவலியவீரபத்திரக்கடவுள்.

24 எந்தைபூசனை— எந்தையாகியசிவபூசை, வெள்ளை யறிவு—உள்ளீடில்லாத வெள்ளையுணர்வு, நந்துமாமகம்— ஆக்கந்தரும் சிறந்தபெரியவேள்வி, நடத்துதிகொல்-இயற்று வாயோ? நகையா—நகைத்து (சிரித்து) அந்தில்—அவ்வி டம் (அசைநிலையுமாம்) உய்ந்திடாதவழி—கடைதேருதபடி, உரையாடுபொழுதின் —வீண்பேச்சுபேசிக் கொண்டிருக்குஞ் சமயத்தில்.

25 குடிலை—பிரணவம், அரிமுன்வந்து-திருமாலிடத்து வந்து, விடைவலான்—சிவபெருமான், நீ கடவுளோ—நீ வேள்விக்குரிய தெய்வமா? இடமருங்குறையுமங்கை—கவுரி, எவர்—யார்?

26 விண்ணவர்கள்யாரும்—தேவர்கள் அனைவரும், இகழா—இகழ்ந்து, விலாஇற-விலாஒடிய, மிடல்கூர்வீரனும் —வலிமைமிகுந்த வீரபத்திரனும், விழிக்கடை—கடைக்கண் முனியா—முனிந்து, அழல்உண்டிட—அக்னிதேவன் அருந்த அளித்தனன்—கொடுத்தனன்

27 இரும்புகுதட்டி—இரும்பாலாகிய கடிவாளத்தைக் கடித்து (மென்று) விலாழி—நுரை, இவுளிவீக்கும்—குதிரை கட்டும், யூபம்-யாகத்தூண், கருந்தாது-கரும்பொன்' இரும்பு) பெய்குழிசி—பெய்யப்பெற்றபானை, முத்தழல்—ஆகவனீயம் காருகபத்தியம்-தென்றிசையங்கி, சயனமிசை-படுக்கையின் மேல், பருஉத்தாள்—பெரியஅடி.

28 எரிகுஞ்சி—தீயினையொத்த செவந்த தலைமயிர், குறுத்தாள்—குறுகிய கால்கள், திருகுசினத்த—மாறுபட்ட

கோபத்தையுடைய, செரு—போர், ஏற்றெறிந்து—எதிர்த்து, கொட்டி—தட்டி, மகம் ஆற்றும்முனிவர்-வேள்வி இயற்றும் இருடிகள், எறிதிரைய—வீசும் அலைகளையுடைய, விளையாட்டயர்ந்து—விளையாட்டினைச்செய்து.

29 கடவுள்சாலைதனில்-வேள்விமண்டபத்தில், குனிக்கும்—நடனமாடும். உடலும்—வருத்தும், ஒறுக்கும்—தண்டிக்கும். வாய்வெருவி—வாய்விட்டலறிப்பயந்து. குடங்கை—உள்ளங்கை. படர்கூர்ந்து—துன்பமிகுந்து, வயிறுஅதுக்கி—வயிற்றைப்பிசைந்து.

30 அம்சில்ஓதி— அழகியசிலவாகிய கூந்தல், சுவல்—பிடர், வஞ்சி—வஞ்சிக்கொடி, உத்திரிகம் — மேலாடை, பனிப்ப-நடுங்க, படர்தற்கு-நடத்தற்கு, அயர்வார்-தளர்வார்.

31 பாழி-பெருமை, படரவெருவி-செல்வதற்குஅஞ்சி. கடைகாண்பான் — முடிவுகாணும்படி, உலவா—வற்றாத, மாழை—மாவடு, வயவாள்—வெற்றிவாள், புலோமிசை—இந்திராணி, அலம்வந்து—சுழன்று.

32 தண்அம்கமலத்திருவும்-குளிர்ச்சிபொருந்திய அழகிய தாமரைமலரிலிருக்கும் இலக்குமியும். நண்ணும்-நெருங்கி வரும், சினவி—கோபித்து, வடவைக்கனல்—குதிரைமுகத்தீ, (வடவாமுகாக்கினி) அண்ணல்—பெருமை.

33 செருவேட்டு—போரைவிரும்பி, உறங்காப்பகடு—துயின்றறியாத எருமைக்கடாய், உகைக்கும்—செலுத்தும், தறுகண்—அஞ்சாமை, வெருவாத்தானை — அஞ்சுதலுறாத படை, உலவை—வாயு, புட்பகம்—புட்பகமென்னும் வான ஊர்தி (விமானம்) நிதிக்கோன்—குபேரன், கூற்றின்கூற்றம்—வீரபத்திரக்கடவுள்.

34 மண்டுவெம்சமர்-நெருங்கியகொடியபோர், உடற்ற—சண்டைசெய்ய, வந்தனீர்கொலோ — வந்துள்ளீர்களோ?

கொண்டலூர்தி — மேகவாகனனாகிய இந்திரன், அண்ட கோளகை—அண்டகடாகம், மோழைபட—வெடிப்புற, வெகுளா—வெகுண்டு (கோபித்து)

35 கள்உலாம்—தேன்பரந்த, கற்பகநகர்க்கு இறைவன் —இந்திரன், அள்ளி—வாரி, களிற்றொடும்—அயிராவதயானையொடும், உள்ளம் என்புதசை நைந்திட—மனமும் எலும்பும் சதையும் நைந்துபோக. பிலவாய்—பிலம்போன்றவாய்.

36 அகழ்ந்தது—அறுத்தது, ஈருள்—ஈரல், சிந்திட— சிதறுண்ண, எறிந்தது—வீசியது, வாருதிக்கிறை—கடற்கு அரசனாகிய வருணன், வாரியின்—கடல்நீரின்கண், மடுத்தது —அமுக்கியது.

37 கலையுகைத்து—மானைச்செலுத்தி, வளிக்கிறைவன் —வாயுதேவன், கண்தெறித்து — கண்கள்தெறித்து, உயிர் சிதைந்திட— உயிர்சிந்திப்போக, திரித்தது—சுழற்றியது.

38 பாய்ஒளி—பரவியஒளி, விழித்துணை—இருகண்கள் பாய்கதிர்த்தொகை—பன்னிரு சூரியர்கள், பற்றொகை— பற்கள், கடிந்தது—பிடிங்கிற்று.

39 மருத்துவத்தலைவர் — அசுவனித்தேவர், மரிய— இறந்துபட, உருத்து—கோபித்து, மென்கனியின்-மெல்லிய பழம்போல, செருக்களம்—போர்க்களம், வசுக்களிருநால்வர் —அட்டவசுக்கள், நெரித்தது—தூளாமாறு செய்தது

40 இன்னவாறு—இவ்வாறு (இவ்விதம்) திறல்வீரன் வெற்றியுடைய வீரபத்திரக்கடவுள், முன்னி — நினைத்து, ஓரிமை— ஒருஇமைப்பொழுது, ஒடுங்குமுன் — கழியுமுன், அதுகண்டு—அச்செயலினைப்பார்த்து

41 மறிதிரைக்கடல்கள்—மடங்கிச்செல்லும் அலைகளை யுடைய ஏழுகடல்கள், சிறையடித்து — இறகுகளைவீசிக் கொண்டு. ஒருகணம் ஒருகணப்பொழுது, எறும்வலி—மிக்க

வலி (மீமிசைச்சொல்) இனிதுஇவர்ந்து—இனிமையுடன்ஏறி அமர்உடற்றினன்—போர்புரிந்தனன் (அரோஅசை)

42 மாஇரும்புவியருந்தும்-பெரும்புவனத்தை (பூமியை) உண்ணும். வடிவேற்சேய்—கூரியவேற்படைதாங்கியமுருகப் பெருமான், சினவா—சினந்து, ·ஆயிரம்கதிர்—ஆயிரஞ்சூரியர்கள், ஒருங்கு——ஒருசேர. அழல்கால் — தீயினைக் காலும், பருதிவெம்படை—சுக்ராயுதம். செருக்குஅற—இருமாப்புஒழிய, அகற்றினன்—விலக்கினுன்.

44 நிகர்அற்றவிறலோன் — உவமையில்லாத வெற்றியினையுடைய வீரபத்திரன், தாமரைக்கடவுள் — பிரமன், உலகுதந்தமுகில் — திருமால், காமர்மென்சிறை — அழகிய இறகுகள், தூமவெங்கணை துரந்து—ஆக்கினேயாத்திரைத்தைச்செலுத்தி.

45 வரைபெயர்ந்து—மலைகள்அசைந்து (நீங்கி) வளியால்—காற்றினுல், சருகினில்திரிய—சருகினைப்போலச்சுழல தளராச்செருவிளைத்த—தளர்ச்சியுறுமற்சண்டைசெய்த, கணநாதரை—சிவகணநாதரை, வளைவாய் — வளைவுற்றஅலகு, குத்தியிடலும்—குத்துதலைச்செய்யவும்.

46 உடற்றுவதுகண்டு—சண்டைசெய்வதனைப்பார்த்து புள்ளரசு—கருடன், வகுத்து—தோற்றுவித்து, உலகம்யாவையும்உண்டவன்—உலக முண்டபெருவாயனுகியதிருமால், ஊர்தி—வாகனம், மலைக—போர்புரிக, அமர்மலைந்த—போர் புரிந்த.

47 வெம்துப்பின்-கொடியவலியின், அடர்ப்ப-நெருக்கி வருத்த. வெருவந்து—அஞ்சி, ஆற்ருது — பொறுக்காமல், வீழ்த்தி—கீழேகிடத்தி, இரியல்போக—ஓடுதலைச்செய்ய.

48 ஆவி தீர்ந்தான்—உயர்போனவன் (மாண்டவன்) கிடந்திடலும்—மூர்ச்சித்துவீழ்ந்திடலும், நண்ணும்வேள்வி

—பொருந்தும்வேள்வி, நன்றுநன்று—மிகவும்நல்லது, உரையா—உரைத்து, துண்ணென்று — திடுக்கென்று, சுரிமென் குஞ்சி—நெறிப்புடையமெல்லியகூந்தல்

49 பற்றி—பிடித்து, துமிப்பான்-வெட்டும்படி, உறை கழிப்ப-வாள்உறையினின்றும்எடுப்ப, அருமாமறையோன்-பிரமதேவன், வந்துஎய்தி-வந்தடைந்து, அளியேன்—அளிக்கத்தக்கவன், கடியேல்—நீக்காதே, ஏல்வைதனில் — சமயத்தில்.

50 எண்டோள்முக்கண் எம்பெருமான்-எட்டுத்தோள்களையும் மூன்றுகண்களையுமுடைய எம்தலைவனாகிய சிவபெருமான், இமயம் உயிர்த்தவல்லி—இமவான்பெற்ற உமாதேவியம்மையார், தொண்டர்குழு—அடியவர் கூட்டம், சென்னி—தலை, விண்டு—திருமால், விளியாது—இறந்துபடாமல், பங்கி—குடுமி (மயிர்)

51 முத்தலைவேல்-மூன்றுமுனைகளையுடையசூலம், துயிலேற்றவர்—உறங்கினவர், துனைவின்-விரைவில், அரிநெடுங்கண் மயில்—உமாதேவியார் (அன்மொழி) முறையின் வணங்கினர்—செருக்கற்றுவழிபட்டனர்

52 குடந்தம்பட்டு—வழிபட்டு, சூழ்போந்து—வலம் வந்து, குழைந்து—இளகி, இழைத்தபிழை—செய்த தவறுகள் கனிவாய் மடந்தை—பார்வதிதேவியார், மதிக்கண்ணி மறையோன்—சந்திரசேகரன்.

53 செகுத்த—அழித்த, சுடர்நேமியண்ணல்-திருமால், துவர்வாய்ப்பேதை—(விளி) உமை, நவை—குற்றம், அருள்பூத்து—கருணைதோன்றி, விடையளித்தான்—உத்தரவு கொடுத்தான்.

54 மணிமவுலி-இரத்தின கிரீடம், நெடுங்கண்அணங்கு—நெடிய நேத்திரங்களையுடைய பராசத்தியார், எமதுகணம்

—சிவகணம், ஒருவன்—தலைவன், உறைதி—தங்குவாய், வரம் நல்கி—வரங்கொடுத்து.

55 வள்ளம்—கிண்ணம் எள் இல் (எள்ளில்) இகழ்வு அற்ற, உள் இல்—(உள்ளில்) கருதவரிய, ஒருவர் — சிவ பெருமான், திருநெடுமால்-மாயன்சத்தியாம், வெள்ளையறிவு-வெளிற்றறிவு, (தாழ்மையானகுணம்)

56 தனது இற்கிழத்தி—பராசத்தி, சீற்றம்—கோபம் சிறிது இகழ்ந்திடினும்—அற்பமாக இகழ்ச்சி செய்தாலும் பிரித்து ஓதிடுதல் — சிவனினின்றும் வேறாகக்கருதிக்கூறல், கடன் — கடப்பாடு.

57 செழும்கமலப்புத்தேள்—நான்முகக்கடவுள், அடை கிடத்தல்—தங்கல், மன்றல்கமழும்—மணம்வீசும், கொன் றைத்தொடையோன் — கொன்றைமாலையைத்தரித்த சிவ பெருமான், ஒன்றும்உள்ளம்—பொருந்தியமனம்.

58 வைத—சபிக்கப்பட்ட, கலியின் — கலியுகத்தின், நல்குரவு—வறுமை, உடல்நீத்து-உயிர்உடலைவிட்டு, நரகத்து அழுந்தி—நரகின்கண்பட்டு வருந்தி, தெருண்டு—தெளிவுற்று பண்டு—பழமை, பழிச்சினர்—துதித்தார்.

59 புகன்றேன்—கூறினேன், முனம் (முன்னம்) முற் காலத்தில ஈன்ற—பெற்ற, உரைத்தும்என—உரைத்தருளுங் கள் என்று, வயிரப்படை—வச்சிராயுதம், நாகம்—விண்ணு லகு, இமையோர்க்கும்—தேவர்கட்கும், மகிழ்வு—மகிழ்ச்சி.

15-வது தக்கன் வேள்வியழித்தது முற்றிற்று.

## 16வது அந்தகாசூரன் சாரூப மடைந்தது.

1 தாளதாமரை — தாளிணையுடைய செந்தாமரைப்பூ, அந்தணன்—பிரமன், உயிர்கள் அளித்தி—உயிர்கட்குஆதர வானதனுகரணபுவனபோகங்களைஉண்டுபண்ணுவாய், விதித்

தவை — தோற்றுவிக்கப்பட்டவை, மல்கிடல்—தழைத்தல், அம்புஅலைத்து—அம்புகளைவாட்டி, பெறுமகவு—பெற்றமக்கள், உளம்துணிந்தான்—மனவுறுதிகொண்டான்.

2 மாரன்—மன்மதன், மறலி—இயமன். இவ்விருபெயருக்கும் முறையே அழகும், வன்மையும் இயற்கையாம். அப்பிரமன்மகள் அசக்கினியாவாள், இன்னலம்—இனியசுகம், அசக்கினியொடுதக்கன்கலந்து ஆயிரம்புதல்வரைப்பெற்ருன்.

3 ஆயிரமக்களும் நாரதன்புரிந்த மாயைப்படுகுழியில் வீழ்ந்திறந்தனர், வேய்மருள்பசுந்தோள்—மூங்கில்போலும் பசியதோள்கள், மீட்டும்—மீளவும், பூண்சுமந்து—அணிகலன்களைத்தாங்கி, ஒல்கும்—துவளும், கன்னியர்—பெண்கள்

4 தருமதேவதைக்குப்பதின்மரையும், காசிபற்குபதின்மூவரையும், சந்திரனுக்கு இருபத்தேழுவரையும், அரிட்டநேமிக்கு நால்வரையும் பாணிக்கிரகணஞ் செய்துகொடுத்தனன், ஆக 54

5 வெகுபுத்திரற்கு இருவரையும் கிரிச்சுவற்கு இருவரையும் அங்கிராவினுக்கு இருவரையும் மகிழ்ந்துகொடுத்தான் ஆக 6. பொருவு அரும் அவர்—உவமையில்லாத அவர் நாமம்—பெயர்.

6 அருந்ததி, இலம்பை, சியாமி, சங்கற்பை, மருத்துவதி, விசுவை, சாத்தியை, பானு, முகுர்த்தை, வசு, தருமதேவதையினுக்கு மணந்துகொடுத்த பெண்களின் பெயர்களாம். விசுவையின் புதல்வர் விசுவதேவர். சாத்தியையின் புதல்வர் சாத்தியர் எனப்பெறுவர்.

7 அருந்ததிமைந்தர் அருந்ததர். வசுவின் மைந்தர் அட்டவசுக்கள். பானுவின்மைந்தர் பானுக்கள். முகுர்த்தையின் புதல்வர் முகுர்த்தங்கள். இலம்பை புதல்வர் கோடான்மா, சியாமிதன்புதல்வர் நாகவீத்தியர் ஆவர்.

8 மருத்துவதியின் மகார்கள், கோடிகள் பிருதுவியர் சங்கற்பைமைந்தர். சங்கற்பர். அலகு—எண். மலைவு—திரிவு யாவரும் உணர—அனைவரும் அறிந்து கொள்ளுமாறு, இனிது உரைத்தேம்—இனிமையுறக் கூறினேம்.

9 ஆபன், துருபன், சோமன், தரன், நீலன், அனலன் பிரத்தியூடன், பிரபாசன் (திங்களங்கவிகை—வெண்கொற் றக்குடை, ஆபன்றனக்குசிராந்தன், வைதாண்டி முதலினோர் புதல்வர்களாம். பங்கம்—குற்றம்.

10 துருவன் மெய்ப்புதல்வன் உவமையில்லாத சீரினை யுடைய காலனும், சோமன்சேய்-அருள்வர்க்சனும், தரன் மைந்தன் திரவிணன், அணிலன்றன்மகன் விக்கிஞாத தேதி யன். அனலன்மகன் தேவசேனாதிபதியாகும் பிரத்தியூடன் குழந்தை தேவலன். பிரபாசன் மகன் விச்சுவகர்மன்.

11 திதியென்பாளும் அதிதியென்பாளும் கத்துரு' வரிட்டைசுரசை, சுரபி, வீநதை, தாம்பிரை, குரோதை, வசை, பொன், தருமை, என்பவர்களும் காசிபன் மனைவிய ராவர்.

12 அங்கிசன், தாதா, பகன், துவட்டா, மித்திரன், வருணன், அரியமான், விவச்சுவான், சவிதா, பூடா, அஞ்சு மான், விட்டுணு, இவர்கள் அதிதியின் புதல்வராவர்.

13 சாக்குசமன்வந்தரம் என்பது ஒன்று, இம்மன்வந் தரத்திற்றுடிதப் பெயர் பெற்றனராம், விக்கிய—கட்டிய, விறல்கெழு—வெற்றிபொருந்திய வைவச்சுதமன்வந்தரத்தில் அதிதயப்பெயர் பெற்றனர் இவர்கள் போக்கருஞ் செல்வம்- அழிவற்றபொருள்கள், புங்கவர்—தேவர்கள்.

14 கரும்கடல் — பெரியகடல், வல்லவர்—முத்துக் குளிப்பவர், நித்திலம்—முத்து, மருங்குல்—இடை, வீங்கும் —பருக்கும், திதியென்பவள் காசிபனைக்கலந்தின்பந்துய்த்து இரணியன், இரணியாக்கன் என்னுமிருவரைப்பெற்றார்.

15 மறம்களிந்து — மறத்தன்மைமுதிர்ந்து, ஆடல்— வெற்றி, வெள்ளி—அசுரகுருவாகியசுக்கிராச்சாரி, ஐந்தழல் நாப்பண் — பஞ்சாக்கினிநடுவில், தேவன்—பிரமன், நினைவு அரும்—நினைத்தற்கரிய, தவம்புரிந்தான்— தவத்தினைச்செய் தான்.

16 மழகதிர்ப்பருதி — செங்கதிர்க்கடவுள், திங்களஞ் செல்வன், வெண்கதிர்க்கடவுள். உஞற்றல்—செய்தல், பரிவுடன்—அன்புடன், அவுணர்கோன்—இரணியன், விழைவன —விரும்புவன, கரந்து—மறைந்து.

17 ஆயிரம்தோட்டுக்கமலம்-ஆயிரம்இதழ்களையுடைய செந்தாமரை, போத்து—ஆண் (விலங்குகளின்) உருகெழு சீற்றம்—அஞ்சத்தகும்கோபம், பண்ணவர் — தேவர், புரந்திடும்—காப்பாற்றும், வழுத்த – (துதிக்க) போற்ற, ஒன்னலர்—பகைஞர்.

18 கலைமகள்-எல்லாக்கலைகட்குமுரியதேவி, கொம்மை — அழகு, படைப்பு—உண்டாக்கல், வருந்துஅற—வருந்துதல்நீங்க, சிலை —மலை, மாற்றி—விலக்கி, அகற்றி—நீக்கி, அளிக்கும்—காப்பாற்றுவான், அலர்முலைப்பாகன்—உருத்திரன், கையாறல்—இளைப்பாறல்,

19 அராப்போத்து — ஆதிசேடன், சுமை—பாரம், போர்வை— சுற்றல், ஏந்தி—தாங்கி, பொறையிலது—கனமில்லாதது, புகலும்—கூறுவான், கனம்படிந்து — மேகம் தங்கி (சூழ்ந்து) குளப்படி—குளம்பின்அடி, (குளம்புஅழுந்தியகுழி) இனம்— கூட்டம், பொறி—புள்ளி, எறிந்து—வீசி.

20 நள்இருள் —செறிந்தஇருள், வானவன்—தேவன், ஒற்றைஆழி—ஒருசக்கரம் (ஓர்உருள்) ஆதவன்—சூரியன், குவிய—கூம்ப, நெகிழ—அலர, கடி-மணம், பொன்மானம்-பொன்னுலாகியவிமானம், உலவும்—உலாவுவான்.

21 அடிப்படுத்தி — கீழ்ப்படுத்தி (அடிமைகளாக்கி) உயர்விசும்பு — விண்ணுலகு, வயிரவாள்படை உழவன்—

வச்சிராயுதமுடைய இந்திரன், எண்டிசைப்பாலர்—எட்டுத் திக்குகளையும் காப்பவர், தடம்சினை—பெரியகிளை, தேனு—காமதேனு, மணி—இரத்தினம், தொழ—கண்டுவணங்க, முன்றில்—வாயில், துயில்வார்—உறங்குவார்.

22 மேரு, ஏமகூடம், நிடதம், கந்தமாதன முதலிய மலைகள், ஞாலம்—பூமி, அண்ணல்அமர்சேடன்—பாம்பரசனாகிய ஆதிசேடன், (அட்டமாநாகங்களும் நவநிதிகளும்,) பண்ணவர் உருவு—தேவர்தம்வடிவு, அவுணர்கோன்—இரணியன், பணித்தன—கட்டளையிட்டனவற்றை (வினையாலணையும்பெயர்).

23 இன்னணம்—இப்படி, வெருவ—அஞ்ச, எரிகதிர்த் திகிரி—ஆஞ்ஞாசக்கரம், வாட்படையுழவன்—இரணியன், திதலை—தேமல், உறங்கும்—தங்கும், புலோமிசைகொழுநன்—இந்திரன், சார்வுழி—சார்ந்தஇடம் (சத்தியவுலகு).

24 எகினம்—அன்னப்பறவை, பழிச்சி—போற்றி, ஏறு பகடு என்பன ஆணினைக்குறிக்கும், இழைக்கும்-செய்யும் கொடுந்தொழில்—கொடுங்கோலாட்சி, ஆற்ருது—பொறுக்க முடியாமல், அளித்தருள்—காப்பாற்றுக, விரை—மணம், வேதியன்—பிரமன், துயில் கூரும்—உறக்கமிகும்.

25 சுடிகை—உச்சிக்கொண்டை, நாகம்அணை—நாகணை யெனவாயது சர்ப்பசயனம், பசுந்துழாய் முகில்—பசியதுளசி மாலையினைத்தரித்தமுகில்போலும் திருமால், முகில்-நீருண்ட மேகம், பாட்டயர—இரீங்காரஞ்செய்ய, விழிமலர்ந்து—உறக்கநீங்கி,

26 விரைமலர்ப்பண்ணவன்-பிரமதேவன், நீர்வலயம்—நீரால்சூழப்பட்ட நிலவலயம், வகுத்திடும்—படைக்கும், முருகுகொப்புளிக்கும்—வாசனைவீசும், புரந்தரன்—இந்திரன், அடைந்ததுஎவன்கொல் — அடைந்ததுயாதுகாரணமோ?

27 தமனீயம்போர்வை — பீதாம்பரம் (தமனீயம்—பொன்) துளையெயிறு—துவாரம்பொருந்தியபற்கள், தோன்ருல்—புருடோத்தமனுகியதிருமாலே! தஞ்சம்-அடைக்கலம் களைகண் — பற்றுக்கோடு, கண்பனி—கண்ணீர். உகுப்ப—சொரிய.

28 தறுகண்கடாக்களிறு-அஞ்சாமையும்மதமும்உடைய ஆண்யானை, அஞ்சினீர் — பயந்துள்ளீர், வெருவல்—அஞ்சற்க, ஆய்பிழி—அழகியதேன், பிழியப்படுதலின் பிழியெனவாயதுபோலும், மஞ்சு—மேகம், மலர்க்கரம்குவித்தல்—அபயகரம்செய்தல், உஞ்சிடும்-பிழைக்கும், நினையா-நினைத்து,

29 படைக்கடல்—ஆயுதமாகியசமுத்திரம், துடைக்கும்-ஒழிக்கும். சுடர்ப்படைத்திகிரி-சுதரிசனமெனப்பெயரிய சக்கரம், வெண்சங்கம்—பாஞ்சன்னியம்—அடற்கருங்கதை-கௌமோதகியெனும் தண்டாயுதம். வாள்-நாந்தகம், கொடுமரம்—கோதண்டமெனும் வில் பஞ்சாயுதங்களையுடையவன் நாராயணன் என்பதாம் அஞ்சனம்—கருமை, ஓர்புருடன்—மகாபுருடன், உடற்றருஞ்—ண்டைசெய்யமுடியாத. ஆவி—உயிர், உண்டு—பருகி இவண்—இவ்விடம்.

30 குருந்து—குருந்தமரம், ஒசித்து—ஒடித்து, நிரைமேய்த்த கொண்டல்—கண்ணன், கருந்தலை—பெரியசிரம் தடி—ஊன். அலகை—பேய்கள், பருந்துஇனம்—பருந்தின் கூட்டம், தொடர—பின்பற்றிவர, இறுத்தான்—தங்கினன்.

31 திறை—கப்பம் (வரி) ஒன்னார்—பகைஞர்கள், தெவ்—பகை, முருக்க-கொல்ல, உம்பர்-தேவர்கள், பறவை வேந்து—கருடன், பண்ணவன்—தேவன், வாய்புதைத்து—வாயினைப் பொத்திக்கொண்டு, ஒற்றுமவுணன்—ஒற்றன்.

32 விழிபொழிய—கண்களினின்றும் சொரிய, இளக்க அரும்—சொல்லற்குஅரிய, குலிகம்—இங்குலிகம் (சாதிலிங்

கம்) செப்பு—சிமிழ், அண்டமென்—அண்டமென்கின்ற, சுவர்த்தலை—சுவரினிடத்து, (வாள்தலை) வாட்டலை—வாளின் முனையிடத்து, எயிறு அதுக்கி--பற்களைக் கடித்து.

33 போக்கற—செல்லுதல்ஒழிந்த, நிவந்த—உயர்ந்த, பகுவாய்—பிளந்தவாய், கட்செவி—பாம்பு, புவியினும், ஆகாயத்திலும், பாதலத்திலும் சென்று மறையினும் ஆங்குற்று அப்பண்ணவனைக் கயிற்ருற்கட்டிக் கொண்டு வருக என்ருன், வல்லை-விரைவு, கொணர்மின்-கொண்டுவாருங்கள்.

34 ஏங்க—இரங்க, காவலன்—இரணியன், ஆர்ப்ப—ஒலிப்ப, கோளரி—வலியசிங்கம், செகுத்த-வென்ற (கொன்ற) இமில்ஏறு—கொண்டையினையுடையகாளை, உரி—தோல். முரசம்—போர்முரசம், கறங்க—சத்திக்க, சமம்வேட்டு—போரினைவிரும்பி.

35 கடாம்-மதம், கண்படை-உறக்கம், படர்-படர்ந்த, பொதிந்த—தங்கிய, பொருநரை—போர்வீரர்களை, நூழிலாட்டும்-கொன்றுகுவிக்கும், உளுக்க-குலுக்க, முன்செல்ல-முன்னர்ப்போக.

36 பைம்புரவி—பச்சைக்குதிரை, நடவு—செலுத்தும், ஒருகால்—ஒருமுறை, நேமியங்கிரி—சக்கரவானகிரி, கவரி—சாமரை, வாவும்புரவி-வாம்புரவி-(பாயுங்குதிரை) கச்சம்—இலக்கமெனும் எண்,

37 கொடுமரம்—வில், விசைத்தல்-கட்டுதல், இலக்கு-குறி. குரோசம்—ஓரளவு, கிடுகு—பரிசை தழும்பு—வடு-கூம்பு—தேரின்மேல் கட்டும் விரிப்பு, வலவர்—தேர்ச்சாரதி, தூண்டல்—செலுத்தல்.

38 இற—ஒடிய, பற்பறித்தணிந்த வெந்திறலார்—புலிப்பற்றாலியணிந்த வலியவீரர்கள், வலம் வரும் புகழோர்—பிரதக்கணமாக வரும் இசையினையுடையவர் (இசை—புகழ்) ஊழிக்கனல்—யுகமுடிவிற்குக் காரணமாகிய தீ, தொடர—பின்வர.

39 ஆள்வழக்கு அறுத்து—ஆள் நடமாட்டமில்லாதவாறு செய்து. கூத்தியர்—ஆடல் மகளிர், பிணித்த-கட்டின, குருமணி—நிறம் விளங்குகின்ற மாணிக்கம், கொடுஞ்சி—தேர்த்தட்டு, கண்புதைப்ப—கண்மூட, கடிது இவர்ந்தார்—விரைவில் ஏறினர்.

40 மழைமதம்-மழைபோற் சொரியும்மதம் வழங்கல்-நடத்தல், இடந்த-தோண்டின, மருட்டும்-மயங்கப்பண்ணும், உரகம்—பாம்பு. உலகுகொல்—உலகமோ? பராகம்—பொடி மொய்ம்பினர்—வலியுடை வீரர்கள்.

41 கூந்தல்மான்-குதிரை, பண்ணுறுத்தி-அலங்கரித்து (ஆயத்தமாக்கி) நூல்வழி-நூலிற்கூறியமுறை. தானை—சேனை சக்கரவியூகம்—சக்கரவியூகம் என்னும்அணிவகுத்து, பாந்தள்—(படம்) பாம்பு, பயந்த—பெற்ற, வெருவுற—அச்சங் கொள.

42 உரறி—கனைத்து, குருதிநீர்—இரத்தநீர், ஊற்றிருந்து—பெருக்கெடுத்து, நேமியந்தடக்கைவிண்ணவன்—திருமாலாகியதேவன், உம்பர்—தேவர், வாய்மடித்து—வாயினை மடக்கி, எயிறுதின்று—பல்லினைக்கடித்து, இதயம்—மனம்.

43 நறவுகொப்புளிக்கும் — தேன்சிந்தும், தானவர்—அசுரர், ஒருங்குவாய்மடுத்து—ஒருசேரவாயாலஉண்டு, சிறையுடைத்து — இறகுகளால்உடைத்தெறிந்து, வளி—காற்று, கவிழ—குப்புறவிழ,

44 தோட்டி—அங்குசம், மாரிவீழ்கடத்த-மழைபோல் சொரியும் மதத்தினையுடைய, மத்தகம் — தலைப்பகுதி, போழ்ந்து—பிளந்து, தார்—மாலை.

45 மறிய—இறந்துபட, குடுமி—தலை, நாண்கொளுவி-நாணினைப்பொருத்தி (கயிறு), கல்செய்—மலையொத்த, உற வாங்கி— நன்குகவளைத்து, கொடுங்கணை—கொடுமையாகிய அம்புகள், ஞாலம்ஓரேழும்அளந்தவன்-மாவலிபாற்சென்று இரந்தவாமனவதாரப் பெருமாள், வாள்உழவன்—வாள் வீரன்.

46 சேனைத்தலைவர்—சேனாதிபதி, நோக்கினர்-நோக்கி (முற்றெச்சம்) தீப்பொறி — அக்கினிப்பொறி, கட்கடை—கடைக்கண்கள், முரண்—வலிமை, கலினம்—கடிவாளம், வெய்யபகழி—கொடியஅம்புகள், பொழிந்து ஆர்த்தார் —சொரிந்துஆரவாரஞ்செய்தனர்.

47 நிழலொடுகறுவி—தன்னிழலுடன்கோபித்து, இழு மென-இழும்என்னும்ஒலிக்குறிப்புடன், வரையினை-மலையை ஏற்று—எதிர்த்து, முழை—குகை, சீயம்—சிங்கம், இரிதர—ஓட, கடாமலை—யானை, அத்தம்—மறையும், எறிந்து—வீசி.

48 கவர்ந்துஉண்ண — பற்றிப்பிடித்துஅருந்த, விண் ணிடை—ஆகாயத்திடத்து, விரைசெலல் — விரைந்துசெல் லுவது. கப்பணம் முசுண்டி என்பன ஆயுதவகைகள், அண் ணல்—தலைமை, புள்ளேற்றரசு—கருடன், தூவி—சொரிந்து.

49 திடர்பட—மேடுஆக, தரைபிதிர்த்து—பூமியினைத் தகர்த்துத்தூளாக்கி, விலாழி—குதிரைவாயினின்றுஞ்சிந்தும் நுரை, பாழி—பருமை, கலுழன்மேல்—கருடன்மேல், எதிர் படர்தர—எதிரேவந்த, அரவினென்ன-பாம்பினைப்போல, தீ முகப்பகழி—ஆக்கினேயஅத்திரம்.

50 கடம்கவுள்-மதம்கவிழ்க்கும்கன்னம், அயிராவதத்தின்நாற்கோடும் — அயிராவதமென்னும்யானையின் நான்கு கொம்புகளும், மடங்கல்ஏறு—ஆண்சிங்கம், துப்பு-வலிமை, உரும்—இடியேறு, குரவை—ஒருவகைக்கூத்து.

51 இறும்பூதுற—ஆச்சரியமடைய (விம்மிதம்) துயல்வரும் - அசையும், முழவுறழ்தோளான்—மத்தளம்போன்ற தோள்களையுடைய திருமால், புடைப்ப—தெறிப்ப, அண்டகோளகை—அண்டகடாகம், குறைந்தார்—அழிந்தனர்.

52 புற்றுறையரவு-புற்றின்கண்தங்கும்அரவம், ஆவம் -அம்பறுத்தூணி, தமரம்-ஒலி, புள்ளியல்மான்—பலபுள்ளிகளையுடையகுதிரைகள், வெள்ளம்—ஓரெண், சிதர்ந்தன—சிதறுண்டுபோயின, அலகை—பேய்கள்.

53 வென்கொடுத்தல்—புறமுதுகிடல். அம்ம, ஓ வியப்பை -ச்சொல், நகைத்து—சிரித்து, வம்மென-வாருங்களென அறைகூய் — கூவிஅழைத்து, பசுந்துழாய்முகில்—திருமால், சமர்மலைந்தார்—போர்புரிந்தனர்.

54 சூர்மகள் — பேய்மகள், துணங்கை — ஒருவகைக் கூத்து, அஞ்சுவர—அஞ்ச. விண்ணுளோர்—தேவர், விழி புதைப்ப—கண்களைமூட, நான்முகன்வடிக்கணை — பிரமாத்திரம்—(பிரமபாணம்) குனித்து—வளைத்து, பெட்புற—விருப்பம்உற.

55 குடிப்பது-பருகுவது, கிரி-மலை, உருவி-துளைத்துக் கொண்டு, முடை—புலால்நாற்றம், வெம்கணை — நாராயண பாணம், கொற்றம்—வெற்றி, அழன்று-மிகவும்கோபமுற்று விடுத்தனன்—செலுத்தினன்.

56 மங்குல்தாழ்குடுமிவரை—மேகங்கள்படிந்த சிகரங்களையுடையமலைகள், நிகர்த்தது—ஒத்தது, கடவி—செலுத்தி

எதிர்செலா—எதிர்த்துப்போய், உருத்து—கோபித்து, மாநிலம்—மக்கள், அசனி—இடி, முருகன்வெங்கணை—முருகபாணம்.

57 அலாயுதம்—கலப்பை, விற்கிடை-விற்கிடைதூரம், அஞ்சுரு—அஞ்சி, மல்அமர்—மற்போர், முனிவொடும்—கோபத்தோடும், விலாஇறும்படி—விலாவானதுஒடியுமாறு. அங்கிவெம்கணை—அக்கினிபாணம்.

58 புதல்வர்நால்வர்—பிரகலாதன், கிலாதன், சங்கிலாதன், அனுகிலாதன் (ஆயவர்கள்) உவணமூர்த்தியை-கருடவாகனனாகிய திருமாலை, வலம்செய்து-வலமாகவந்து, உள்ளமாழ்கி—உள்ளம்மயங்கி, அயர்வுஎய்தலும் — தளர்வுஅடைதலும், பூவைநிறவண்ணனும்—காயாம்பூமேனியனாகிய நாராயணனும், அள்ளி—எடுத்து.

59 குடங்கை—உள்ளங்கை, ஒருங்குஎடுத்து—ஒருசேரத்தூக்கி, எறிதல்கண்டு — வீசிஎறிதலைப்பார்த்து, அலர்சொரிந்து—பூக்களைச்சொரிந்து, இரியும்—ஓடும்.

60 சொற்றதீமொழி-சொல்லியகடுஞ்சொற்கள், தடவுமுன்னர்—படுமுன்பு, எஃகம்—வேல், நகைசெயா—சிரித்து, பற்றலார்—பகைஞர். மவுலி—மகுடம், பார்குழிப்ப—பூமியிற்பதிய, எதிர்போயினான் —எதிரில்வந்தான்.

61 எங்குளன்கொல் என்பன அடுக்குமொழி. துங்கமால்வரை-உயர்ந்தபெரியமலைகள், சூறை-சூறுவளிக்காற்று (சுழல்காற்று) சிங்கஏறுஅனையகுரிசில் — நாராயணனாகிய (பிரதி)தலைவன், நனிசீறினான்—மிகவும்கோபித்தான்.

62 கருடன்வீழவும்—கருடனானவன் மூர்ச்சித்து வீழ்ந்திடலும், மாட்சியால்—பெருமையால் புருடன்-பிரதியாகிய மாயோன், புவியுண்டமாலுழை-பரந்தாமனிடத்து. எய்துறு-அடைந்து, முரண்—வலிமை, வெய்ய நரசிங்கம்—கொடிய நரசிம்மாவதாரம்.

63 அறைய-மோத, ஆடகக்கிரி-பொன்மலை, இலங்கு வாள் எயிறு—விளங்கும் ஒள்ளியபற்கள் தெறுவடவை—கொல்லும் வடவாமுகாக்கினி வழங்கிட—சொரிய விண்டு—பிளந்து, மானுடமடங்கல் — நாரசிங்கம் வெம்களம்—கொடிய போர்க்களம்.

64 எதிர் அற்றவெற்றி — எதிரியில்லா வெற்றி அவுணர்கோன்—இரணியன். இவண்வருக—இவ்விடம் வருவாயாக, இரணியாக்கன்—உடன்பிறந்தோன், படம்கொள் வாள் அரவு — ஆதிசேடன், உடல்புதைப்ப — உடலானது மறைய.

65 அக்கினிபாணம், வருணன் அம்பு, சூரியன்கணை பாசுபத அத்திரம், ஆயவை நரசிங்கத்தின் மேற்சிந்துதலும், அவை மலைமீதுபோட்ட மட்கலத்தினைப் போல உடைபட்டன, நெஞ்சம் அஞ்சுற—மனம் அஞ்ச, வெரிந்—புறமுதுகு.

66 அமரின்தொலைந்து — போரினின்றும் அழிந்து, தனியிரிதல்—தனியாக ஓடல். விளித்து—அழைத்து, உடற்றுக என்ன—போர்புரிவாயாக என்றுரைப்ப. வரை கொள் மார்பு — மலையொத்தமார்பு, மறுத்திடேல் — மறுக்காதே, இரந்து—மனமிரந்து.

67 பிரகலாதன் தந்தையைப்பார்த்து நான்முகன், நாரணன், சடையாடி, ஆகிய மூவரும் தவமுடையருங்காண்டற்கரியபிரமும் அரியேறுகும் ஆகையால் போர்புரிதல் கூடாது என விலக்கினன், காமுறல்—விரும்பல்.

63 விலக்கிநின்று-தடுத்துநின்று, வெகுண்டு-கோபித்து அலக்கண் — துன்பம், அடர்க்கவும் — நெருக்கிவருத்தவும், குலக்கினுக்கு — குலத்திற்கு, இசைகலாத — பொருந்தாத அழுதிரங்க— அழுது வருந்த, எழுகார்—ஏழுமுகில்கள்.

69 காணிலான்—கண்ணுற்காணப்பெருதவன். இறை-கடவுள், எங்குமுளன்-எவ்விடத்துமுள்ளவன், தூணிடேனும்-தூணிடத்தும், அவணின்மோதுரு—அவ்விடத்தில்மோதி (அறைந்து) ஆள் நில் ஏறு அரி—நரசிங்கம்.

70 மானிடமடங்கல் ஆளியை—நரசிம்மாவதாரத்தை, பிதிர்ந்து — பொடியாகச்சிதறி, உடுக்கள்—நட்சத்திரங்கள். குரைகடல் — ஒலிக்குங்கடல், கரைகொன்று — கரையினை யழித்து, வெற்பு—மலை. இசைபோய—புகழ்சென்ற.

71 அத்தவெற்பு—சூரியன்மறையுமலை, வாலம்-வால், மிசைமுறுக்கி — மேலேசுழற்றி, அழுன்று — கோபித்து, மண்பக—பூமிவெடிப்ப, மைத்தகார்—நீருண்டகரியமேகம், இகலும்—மாறுபடும், மருமம்—மார்பகம்.

72 வெவ்வுரைபகர்ந்து—கொடுமொழி கூறி, வெற்பு-மலை, தோள்புடைத்து—தோள்களைத்தட்டி, அறவெகுண்டு-நன்குகோபித்து, பொற்குவட்டுவரை-இரணியன், ஆகுபெயர். வெள்ளியங்கிரி—நாரசிங்கம், வெம்சமம்—கொடியபோர்.

73 அடர்—நெருக்கி, தாள்பிணித்து—கால்களைக்கட்டி தரை—பூமி, குறங்கு—தொடை, பிடர் இறுக்கி—பிடரினை இறுகப்பிடித்து. வெற்புறழும்நெஞ்சகம் — மலையோத்த மார்பிடம், உகிர்—நகம், அகழ்ந்து—தோண்டி.

74 அண்ணல்—நாராயணமூர்த்தி, உயிர் அருந்தி—ஆவியினைக்குடித்து, உருவு ஒழித்து—வடிவம் நீக்கி, புவனம் யாவும்—எல்லாவுலகங்களும், வெண்டிரை—திருப்பாற்கடல் (ஆகுபெயர்) நாகம்அணை—பாம்புப்படுகை.

75 அமுவம் — போர்க்களம், நீள்இரும்தடக்கை—முழந்தாளளவும் நீண்டுள்ள மிகப்பெரியகைகள், அடல்—வலிமை, கோள்—நவக்கிரகங்கள், தேர்ந்து—ஆராய்ந்து, குருமணிமவுலி—இரத்தினகிரீடம் (முடி)

76 புலோமிசைகொழுநன்—இந்திரன், சுறவம் ஊர்வோன்–வருணன், முதலியதலைவர். அக்கினி, இமயன், நிருதி வாயு குபேரன், ஈசானன் ஆகியவர். குற்றேவல்-சிறியஅலுவல் (காரியம்) தலைமயங்கி—கெட்டு, மாழ்க—மயங்க.

77 அவுணர்கோன் — இரணியாக்கன், மகப்பேறு—புத்திரப்பேறு, பொன்அவிர்கடுக்கை—பொன்போல்விளங்குகின்றகொன்றைப்பூ வேய்ந்த—சூடின, புராரி—திரிபுரமெரித்தவன், கங்குல்—இரவு, வழுவாது—வழாது (தவராது)

78 பொற்கண்ணன்—இரணியாக்கன், விஞ்சையர்—வித்தியாதரர். அலகு—எண், ஆவிசோர—உயிர்தளர, குலாவியஎனற்பாலது குலாய எனமருவிற்று. அகடு—உள்ளிடம் (வயிறு) கவர்ந்து—தன்னகப்பத்தி (பற்றி)

79 அலர்தலை உலகம்—பரந்தஇடத்தினையுடையஉலகு, பூத்த-படைத்த, அந்தணன்—பிரமன், நேமிப்பண்ணவன்—திருமால், வெள்ளைஎறுழ்வலிஏனம்—வெள்ளைநிறம்வாய்ந்தமிக்கவன்மையுடை பன்றி, செங்கண்மாயன்—செந்தாமரைக் கண்ணன்.

80 துறுமயிர்-நெருங்கிய உரோமம். முன்னீர் மணிக் கடல் — பண்புத்தொகை. முழங்க — ஒலியுண்டாமாறு. வன்திறல்அவுணன் — இரணியாக்கன் மார்பம் — மார்பு பிறைமருப்பு — பிறைபோலும்தந்தம் (கொம்பு) நிறுவுற்று —நிலைபெறச்செய்து.

81 வாடாப் புதுமலர் — தெய்வீகமலர் (பொற்பூ எனலுமாம்) மாரி—மழை ஆர்ப்புஎடுத்தல் — ஆரவாரஞ் செய்தல், இளமுறுவல்—புன்சிரிப்பு. கமலைகேள்வன்—இலக்குமிகாந்தன். குரைகடல்பள்ளி — ஒலிக்கின்ற பாற்கடல் படுக்கை.

82 முரண்மிகும் — வலிமிக்க, கடலந்தானை — கடல் போன்ற (பரந்த) சேனைகள் பிரகலாதன்—இரணியன்றன்

புதல்வன், நேரலர்-ஒன்றாதவர் (பகைஞர்) அரியணைப்புறத்து வைகி—சிங்காதனத்தின்மீது வீற்றிருந்து.

83 மணிநிறவண்ணன் — நீலரத்தினம் போன்ற நிறமுடைய திருமால். செய்யமலர்-செந்தாமரை மலர், கவிகை-குடை, பணிமுடி—ஆதிசேடன்தலை, பரிக்குநாள்—தாங்குங் காலம். தணிவருங்கேள்வி—குறைவற்றகேள்வி.

84 வந்தனன்-வினையாலணையும் பெயர், இகழ்தலும்—இகழ்ந்துரைத்தலும், வெகுட்சி—கோபம், படலை—தொகுதி மாலை—திருமாலை, பழிச்சும் ஆற்றல்—துதிப்பதால், செம் மாந்து—இறுமாந்து.

85 மழகதிர்ஞாயிறு—இளஞ்சூரியன், நேமிப்புத்தேள்—சக்கிராயுதந்தாங்கிய திருமால், அன்பு இலன்—அன்பில்லாதவன் சீயம்-சிங்கம், பிழைபட—தவறுதல்செய்ய, வைது வசைமொழிந்து, பெயர்ந்து—திரும்பி

86 மறைவிளையாடும் செந்நா — வேதங்களையுச்சரித்து லாவும் நல்லநாவானது. முனிவரன்—மறையவன், சிறுகரும் துளவோன்—சிறிய கரிய நிறமுடையதுழாயணிந்த திருமால் அவுணர்கொன்ற—தந்தையாரைக்கொன்று அழித்த, ஓர்ந்து—உணர்ந்து.

87 வெகுண்டனன்—வெகுண்டு (முற்றெச்சம்), ஏற்று—எதிர்த்து, இமையவர்—தேவர்கள், கூற்று—இயமன், வைவேல்—கூரியவேலாயுதம். கொலைத்தொழில்பிரகலாதன் என்பது, அவுணர்வமிசத்திற்பிறந்தமைபற்றிப்போலும்.

88 உடைந்தனன் ஆகி—தளர்ச்சியுற்றவனாகி, தாளிணைக்கு-இருதிருவடிகட்கு, தணப்பு—நீக்கல். நீள் இருமாயை—மிகப்பெரியமாயை (மயக்குவது) இவைநீத்து-மண் பொன் பெண்ணாசைகளைவிட்டு நீங்கி, புலன்கள்செற்று—புலன்களை வென்று.

89 மறத்துறை-கொடுமைசெய்யும்வகை, மைந்துடை-வலிமையுடைய, அறத்துறை—தருமநெறி, பேரா—பேராத. (பெயராத) விட்டுநீங்காத, இருள்கூட்டுண்ணும்—இருளினை ஒருசேரப்போக்கும், மவுலி—முடி.

90 பழிபடும் — பாவம்பொருந்தும், வேதமுனிவர்—வேதங்களையோதும்அந்தணர், மாழாந்து—மனமயங்கி, அழிபசி-அனைத்தையும்அழிக்கும்பசிநோய், அகலிகைகொழுநன்-கௌதமமுனிவன், தழைபுனைகுறுங்காற்சாலை—பன்னசாலை,

91 பொதும்பர்—சோலை, அந்தம்இல்பூசை—முடிவில்லாதபூசனை, அழிபசி—பசித்துன்பம், அகன்று—நீங்கி, சிந்தனைமகிழ—மனங்களிப்ப, நல்லூண் — நல்லஉணவு, சிறப்பொடும் — மேம்பாட்டோடும், நல்கினன் — கொடுத்துதவினன்.

92 அகில்-அகிற்புகை, இல்லில்-வீட்டின்கண், அடிசில்-சோறு, மாந்தி-உண்டு, தகவு—தகுதி (தரம்) முகில்-மழை வளம்சுரந்து — வளம்பெருகி, பொழிந்தது — சொரிந்தது, அன்றே—அசை.

93 பன்னிரு பருவம்—பன்னிரண்டு ஆண்டுகள், வெருவியோட-அஞ்சிச்செல்ல, வான்—மேகம் (மழை) எஞ்ஞான்றும்—எப்பொழுதும், மன்னியமுனிவர்—நெருங்கியமறையவர், கபிலை—காராம்பசு, (காரா) மாயைப்புணர்ப்பு—மாயையின்கூட்டினால்.

94 ஊதினும்—வாயினால் ஊதினாலும், பறக்கும்—பறந்துபோகும், கோதுஅறு—குற்றமற்ற, தொறுவை—பசுவினை, பரிவு—அன்பு, அளித்தும்—காப்பாற்றுவம், மெய்தொடலும்—மெய்யினைத் தீண்டலும், மாழ்கி—மயங்கி, வேதனையுழந்து—வேதனைப்பட்டு, உயிர்மறிந்தது—உயிர்விட்டுநீங்கியது.

95 ஆன்—பசு, அழுங்கி—வருந்தி, ஆவுயிர்கடிந்தோர் பசுகத்தி செய்தோர், தீதுதலைப்படும்—பாவச்செயல்வந்து பொருந்தும், தேனமர்பொதும்பர்—வண்டுகள் சூழ்ந்த சோலை

96 ஞானக்கண்—அறிவாகிய கண்கள், குறித்து இனிது உணர்ந்து—முனிவர் சூழ்ச்சியைக்குறித்து நன்கறிந்து இழைத்தது — செய்தது, ஈது—இச்செயல், ஒழுக்கமாறி—ஒழுக்கங்கெட்டு, விடையவன்அன்பு—சிவபக்தி, தீர்ந்து—விட்டு.

97 வெம்சாபம்—கொடியவெகுளிமொழி, ஐதுணர்வு—அழகிய நல்லறிவு, வேதமுதலிய அனைத்தும்-வேதமோதல் ஓதுவித்தல், கூறியனவற்றைப்புரிதல் ஆதியமுற்றும். சிமிழ்ப்புண்டு—பற்றப்பட்டு, இடர்—துன்பம், வீழ்ந்தோர்-அமிழ்ந்தவர்,

98 தீவினையுழக்கும்—தீயவினையினால்வருந்தும், பருமயானை — பரியகசன்என்னும் அசுரன், உரித்தபண்ணவன்—தோலையுரித்துடுத்தியசிவபெருமான். அந்தண்— அழகிய குளிர்ச்சி, பூவைமேனியன்—திருமால், ஓவுஅற-ஒழிவுஇன்றி

99 தழற்கண்பெரியோன்—அக்கினியாகிய நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான், உற்றதீமை-அடைந்தபாவச்செயல், நிரையம்—நரகம், உழப்பின்—வருந்தினால், முற்றுறாது—முடியாது, மதிமருட்ட—அறிவைமயக்க, துவக்குண்டார்—சிக்குண்டார்.

100 ஓதி—கற்று, அஞர்—துன்பம், இன்னல்—துயர், எம்மான்—பரமசிவன், துயர்தீர்ப்பான்—துயரையொழிக்கும்படி, பலியேற்று—பிச்சையேற்று, தலைக்கீடு-காரணமாம், அன்னோர்—அம்முனிவர், மருங்கு—பக்கம்.

101 கடவுள்மணி-தெய்வீகத்தன்மைபொருந்தியகவுத்துவ மணி, மார்பன்—திருமால், அம்மெல்ஓதி—அழகியமெல்லிய கூந்தல், சிலை—வில், சாயல்—மென்மை, மகளிர்—பெண்கள் வரையுயிர்த்தகுயில்—பார்வதிப்பிராட்டியார்.

102 ஆலம்—ஆலகாலவிடம், முத்தலைவேல்—மூன்று தலைகளையுடைய சூலாயுதம், கவிழ்க்கும்—சொரியும், கணங்கள்—சிவகணங்கள், சூழ்போத-சுற்றிவர, படிவம்-உருவம், அண்ணல்—சிவபெருமான், சிற்றுதரம்—சிறியவயிறு.

103 அம்பொற்குடுமி மந்திரம்—அழகிய பொன்மயமாகிய சிகரத்தினையுடைமந்திரமலை, கனைதெண்டிரை—ஒலிக்கின்ற தெளிந்த அலைகள், கிளர்ந்தால்—பொங்கினால், நாற்படை—சதுரங்கசேனை, அடல்அரியின்—வலியசிங்கம் போல.

104 அரில்—பிணக்கம், பூத்துஅலர்ந்த—உண்டாகி விரிந்த, அவுணன்—அந்தகாசூரன், மீதூர—மிக, அணங்கை—பார்வதிதேவியாரை, கவர்வான்—பற்றும்படி, நந்தி—அதிகாரநந்திதேவர், செருவேற்று—சண்டையினையேற்கொண்டு.

105 கிடுகு-பரிசை, உரிவை-தோல், குறங்கு-தொடை, ஒளிகான்று-ஒளியினைக்கக்கி, விதிரா-விதிர்த்து (அசைத்து) இதழ்மடியா - வாயைமடித்து, அல்—இரவு, இருள்பழுத்த—இருட்சிமுதிர்ந்த, அழன்று—கொதித்து.

106 வரிவில்—கட்டமைந்தவில், நாண்கொளுவி-நாணினைப்பூட்டி, எய்தார்—அம்புகளைத்தொடுத்து விட்டனர், இமை—கண்ணிமைகள், பிழிந்தார்-கசக்கிவடித்தனர், குருதி—உதிரம், பில்கி—துளித்து, உரறி—கனைத்து.

107 கூற்றும்வெருவி—இயமனும்அஞ்சி, புதைப்ப—மூடிக்கொள்ள, சீற்றம்கதுவ-கோபம்பற்ற, எயிறுதின்று—பல்லினைக்கடித்து, வெள்ளம்—ஓரெண், ஒருநொடியில்—ஒருநொடிப்பொழுதில்

108 கூர்த்தநோக்கு—அஞ்சத்தகுபார்வை, தொலைதல் காணு—அழிதலைப்பார்த்து, அமரர்—தேவர்கள், எரிதவழ—அக்கினிபற்றிஎரிய, அவனி—பூமி, நெளிய—நெளிப்புண்ண பதம்பெயர்த்தான்—அடியெடுத்துவைத்திட்டான்.

109 உடைந்து—சிதறுண்டு, புறங்கொடுப்ப—புறமுதுகிட்டுப்போக, அணங்கும் — வருத்தும், சத்தி — ஈசுவரி, அமைத்துவிட—உண்டுபண்ணிவிட, அந்தகப்பேரவுணன்—அந்தகாசுரன், நிகர்வோரை-ஒப்பவரை, துணங்கையயர்ந்து—துணங்கைக்கூத்தையாடி, மலைதிர்—சண்டையிடுங்கள்,

110 விளிய—மடிய, அடுத்த—பின்பற்றின, சத்திகள்—விண்டுசத்திகள், அடர்ந்து—கொன்று, வாகை—வெற்றி, கடு—விடம், மிடறு—கழுத்து, கண்ணுதலோன்கணம்—சிவகணம், ஆற்றுது—முன்னிற்கமுடியாமல்,

111 அன்னகாலை—அந்தகாலத்தில், முனிவரர்கள்—இருடிகள், பன்னீராண்டு—பன்னிரண்டு வருடங்கள், பலியேற்று—பிச்சையெடுத்து, வான்புனற்கங்கைமுடித்தபெம்மான்—கங்காதரன், மந்தரமால்வரை—மந்திரமலை.

112 கலுழி—வெள்ளம், வேழமுகன்—யானைமுகக்கடவுள், குருகுபெயர்குன்று—கிரவுஞ்சமலை, குமரன்-முருகப்பெருமான், விறல்நந்தி—வலிமைபொருந்தியதிருநந்தி, இலைவேல்—இலைவடிவாயமைந்த சூலம், வெம்பருதி-சூரியன்.

113 கொங்கு—மணம், மறைக்கிழவன்—பிரமன், அங்கண்விசும்பு—விண்ணுலகு, பொதுநீக்கியளிப்போன்—இந்திரன், தழற்கடவுள்—அக்கினிதேவன், கூற்றம்—இயமன், திங்கட்குழவிவனைந்தசடைத்தே—சந்திரசேகரன்.

114 பணிந்த—வணங்கின, பரிவு-அன்பு, உளம்களிப்ப—மனமகிழ, நோக்கி—அருட்பார்வை செய்து, அளகைக்கு இறை—குபேரன். கணங்கொள்மணி—நவரத்தினங்கள், கூர் இருள்—மிக்க இருள்,

115. கரும்கடல்—பெரிய பாற்கடல், அர மகளிர்—தேவமாதர், பொன்கவரி—அழகியசாமரைகள், புடையிரட்ட—பக்கத்தினின்றும்வீச, வாலுழைய-வெள்ளியபிடரிமயிரினை யுடைய. அரிமா—சிங்கம். சுமந்த—தாங்கின, மலரணையில்—பூக்கள் நிரப்பிய இருக்கையில், அண்ணல்—சிவபெருமான்.

116. தாங்கி—சுமந்து, இடுகும்இடை—சிறியஇடுப்பு அமை—மூங்கில், வளைபுலம்ப-சங்கொலிப்ப. அலற-ஒலிப்ப, உமையாள்-உமாதேவியார், பெண்ணுருவம்-பெண்வடிவம், உவந்து—மகிழ்ந்து தமரம்—ஒலி, விடம்அயின்றதலைவன்—ஆலகாலம்அருந்தின இறைவன், தாழ்ந்தனன்—பணிவுடன் வணங்கினான்.

117 எருத்தங்கோட்டி—தலைகுனிந்து, மாண் இழை உரு—பெண்வடிவு, காண் வர—காட்சிபொருந்த, கவான்—தொடை,வேட்கைஅவா-வேணவா,அன்புடனமைந்த,ஆசை.

118 திருமறுமார்பன்—மகாவிட்டுணு, சிறந்து—மேம்பட்டு, அரியணைப்புயத்து—சிங்காதனத்திலிடத்து, வைகும் அண்ணலை—எழுந்தருளியுள்ள சிவபெருமானை, எரியுமிழ்—தீயினைக்கக்கும், இழைத்தஎல்லாம்—செய்தனஅனைத்தும், வயிரஒள்வாள்—வங்சிராயுதம்.

119 மாயன்—திருமால், ஆண்டுஅளித்த—அவ்விடத்துண்டாக்கிய, நூறுசத்தியும்—நூறுசத்திகளும், தூயநீ—தூய்மையான தேவரீர், யாரை யாரோ? இடமருங்கிலும் வல மருங்கிலும் உறையும் சத்திகள் யாரோ? என்று கேட்ப,

120 தத்துவம்—தத்துவப்பொருள், ஆன்ம, வித்தியா, சிவதத்துவங்கள். தனிப்பொருள்—ஏகமாகியபொருள், சித்தினில்—அறிவினில், பிரமம்—பெரியபொருள், பத்திமை—அன்புடைமை, தம்முள்—தமக்குள், மனமாகியதாமரையில் இருக்கும் பூரணப்பொருள் என்பதாம்.

121 ஈன்றல்—படைத்தல், காவல்—காத்தல், ஒடுக்கல்—அழித்தல், அலகிலா விச்சை—எண்ணில்லாதவித்தை, காரணமாகி—கருவியாகி, இலகுபேர் ஒளி—விளங்குகின்ற பெரியஒளி, ஏற்று—மேற்கொண்டு, நிகரில் சிற்சக்தி—உவமையில்லாத சிற்சக்தியாகும். (ஞானசத்தி)

122 இப்பாடலானது திருமால் சத்தியாய்த்தனக்கு அபின்னமாய் எக்காலத்தும் ஒன்றித்திருத்தலையுணர்த்துகின்றது. கண்படுக்கும்—உறங்கும், காலாதீதம்—காலங்கடந்தது ஒன்ருய்—அபேதமாய், குணக்குன்று—குணமாகிய மலை.

123 படலை — தொகுதி, கவற்றுமேனி — கவலுறும் படிச்செய்யும் உடல், வேருய்—தனியாய், ஓர்ந்து-உணர்ந்து தீர்ந்தவர்—விடுபட்டவர், ஒருவராக—திருமாலையும் என்னையும் ஏகனுகவே, ஆய்ந்துஉணர்கிற்போர்— ஆராய்ந்துஉணர்வோர்- (ஆராய்ந்துதேற்றமாக உணரும் ஆற்றலுடையவர்) சிறந்தார்—மேம்பட்டவர்,

124 அலத்தகம்—செம்பஞ்சு, கரும்புருவம்—கரியபுருவம், வண்தேறல்—வளவியதேன், கக்கும்—பிலிற்றும், அலங்கல்—மாலை, வண்ணனை—நிறமுடைய திருமாலை, இகழ்ந்துளோர்—இகழ்ச்சிசெய்தவர்கள், உலப்பில்நாள்—அநேக நாளாக, நரகிடையுழப்பர்—நரகின்கண்பட்டு வருந்துவர்.

125 வேணி-சடை, இசைத்தல்—கூறல், வயிரவொள்வாள் குரிசில்—வச்சிரவரயுதந்தாங்கிய இந்திரன், மன்றல் நாள்மலர்-நறுமணங்கமழும் அன்றலர்ந்தபூக்கள். (கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ என்பன).

126 முருங்குதல்-அழித்தல். புரத்தில்தீஇட்டமுதல்வன்—சிவபெருமான், குனித்திட்ட—வளைத்திட்ட, கடவுள்—திருமால், மருந்து—தேவரமிர்து, மலைமகள்—பார்வதி. அன்பு பொருந்திட—பக்திபொருந்த, பொலிவு—விளக்கம்.

127 இடைதேய்த்து-இடுப்பின்பாகத்தைத் தேய்வுறச் செய்து, முகிழ்த்து—அரும்பி, மெல்ஓதி—மென்மையாகிய கூந்தல், திருநாயகன்—திருமால், தத்தம்பதி - தங்கள் தங்கள் நகர்.

123 தெவ்வர்—பகைஞர், மழ-இளமை, வெம்சினத்த—கொடிய கோபமுடைய, நிழற்றும்—ஒளிவிடும், மான்றேர்—குதிரைகள்பூட்டப்பட்டதேர், குழுமி—கூடி, ஓரிடம்—சிறிதுஇடம், இன்று என—இல்லையென.

129 தெள்ளமுது—தெளிந்த அமிழ்து, பரிமித்தகூந்தல்பரி-அடர்த்தியான பிடரிமயிரினையுடைய குதிரை, உருமு—இடியேறு, உலம்—திரண்டகல், வெருஅற்றமள்ளர்—அச்சமென்பதில்லாதவீரர்.

130 வயம் வெம்புலிப்போத்து — வலியகொடியஆண்புலி (ஓடாத) ஓடா—பின்னிடாத, அவுணர்க்கிறை — அசுரேசன், வெய்யோன்—அந்தகாசுரன், மொண்டு—முகந்து, மிடல்—வலிமை. போதந்து—வந்து.

131 திறல்—வலிமை, அடுசமம் — கொல்லும்போர், கோலி—வளைத்து. ஒற்றர்—மறையறிந்துரைப்பவர், குன்றவில்அந்தணன்—(குறிப்புமொழி) மகாமேருகிரியை வில்லாக ஏந்திய சிவபெருமான், ஆதிகணங்கள்—முதலியசிவகணங்கள்.

132 முத்தலைப்படை யெம்பிரான்—சூலபாணி, கைதொழா—கைகூப்பிவணங்கி, இவர்ந்து—ஏறி, கன்றுநெஞ்சினர்—கோபமுறுமனமுடையவர், வன்திறல்-வலியவெற்றி வயிரவன்—காலவயிரவக்கடவுள், கடிது—விரைவு.

133 திரித்து — சுழற்றி, ஏறுயர்த்தருள் — இடபம் வரைந்தகொடியினைஉயர்த்திய, பழுத்து—முதிர்ந்து, நேமி—சக்கராயுதம், கலுழன்மேல் வருகொண்டல் — கருடவாகன

ணகிய திருமால், சிறை—இறகுகள், வீழ—முரிய வச்சிரப் படை, அண்ணல்-இந்திரன், அலமர-சுழலுதலைச்செய்ய.

134 கதைசுற்றி — கதாயுதத்தினை சுழற்றி. அந்தகன் தென்றிசைக்காவலன், சிந்த — சிதற. வெம்திறல்அளகை யாளி—குபேரன், புவி—மண்ணுலகம்.

135 இரலையூர்தியும்-மானைவாகனமாகவுடையவனும், (வாயு) ஏழகர்—ஆட்டுக்கிடாய், கடற்கிறை—சமுத்திரரா ணகிய வருணன். மால்விடையூர்தி—ஈசானன்.

136 பகழி—அம்பு, தோமரம்-இருப்புலக்கை, குலிசம் —வச்சிராயுதம். இன்னல்—துன்பம். பொன்னகர்—அமரா வதிப்பட்டினம், வில்குனிதிடு—வில்லைவளைத்து.

137 கார்வரை—முகில்கள்படிந்துள்ளமலை, அரிந்து— வெட்டி, அமரர்கோன்—தேவேந்திரன், வார்மதம்—வடி கின்ற மதம், நூழில்படுத்தினன்—கொன்றுகுவித்தான்.

138 அழற்பொறி—தீப்பொறி, கதுவ—பற்ற, உலாய்— உலாவி, மணிக்கவசம்—மணிகள்வைத்திழைக்கப்பட்ட சட்டை, தெறிப்ப—சிதற.

139 குபேரன், வாயு, தீக்கடவுள், நிருதி. வருணன், ஏகாதசருத்திரர், ஆயவர் களியுடைத்திறல் அவுணன்-இறு மாப்புற்றவலிய அந்தகாசுரன், முகட்டின்—உச்சியில், வான் துளி—மழைத்துளி, முகில்—மேகம்.

140 தூவிநின்று—அம்புமாரிகளைச்சொரிந்து, துள்ளி —கூத்தாடி, வெய்து—கொடுமை, தேவர்காள்-தேவர்களே! எங்ஙன்—எப்படி, உய்குவீர்-தப்பிப்பிழைப்பீர்கள், நீர்கலச (த) நீங்காத, பிழிந்து—வடித்து, எவ்வுழி—எவ்விடத்து.

141 எதிர்புகுந்து—எதிர்த்துப்போய், மருப்புஒசித்து -கொம்புகளையொடித்து, தட—பெரிய, என்பு—எலும்புகள் மோதுற—மோதி, செந்தழற்கிறை—அக்கினிதேவன், கவுள் —கன்னங்கள், விழ்தர—விழுமாறு, எற்றினன்-வீசினன்.

142 வாய்வழி—வாயிடத்து, குருதிகக்க-இரத்தத்தைக் கக்குமாறு, அழன்று—கோபித்து, மலைந்து-சண்டைசெய்து, அஞ்சலை—பயப்படாதே, செருஒழிய—போர்நீங்க, வாகை புனைந்தான்—வெற்றிமாலைசூடினான்.

143 விண்ணுளோர் படை—தேவர்களாகிய சேனை, அண்ணலாகியதிருமார்பினன் என வினைமுடிபுகாண்க, சங்கம்அம்கை — சங்கமங்கையெனவாயது, பண்ணமைத்து—போர்க்குரியஅலங்காரம்பண்ணி, பருதிநாணுற—சூரியனும் நாண.

144 வால்வளை—வெள்ளிய பாஞ்ச சன்னியமென்னும் சங்கு, ஆழிமாமுகில்—(குறிப்புமொழி) திருமால், மோழை பட்டு—பிளவுபட்டு, சிதர்ந்திட-சிதறுண்டுபோக, ஊழிவாய் —யுகாந்தகாலத்தில், திறல்உரகர் — வன்மைபுறுநாகர்கள்

145 கொண்டல்மேனி — நீருண்ட கரியமேகம் போல் மேனியுடையமாயோன், கண்ணுற—கண்ணுற்று (பார்த்து) எண்டிசைக்கிரி — எட்டுதிக்குகளிடத்துமுள்ள யானைகள், உயர்மால்வரைக்குலம்— அட்டகுலபர்வதங்கள்.

146 புழைப்படுதடக்கை — துளைபொருந்திய பெரிய துதிக்கை, வேழம்—யானை, புரவி—குதிரை, இழைபக—நூலும்பிளப்ப, எறும்வலி—மிக்கவலிமை, விழைவு—விருப் பம், அமரர்மாதர்—தேவமகளிர், நுசி—நுண்மை.

147 துணிந்துஎன்ன-வெட்டுண்டாற்போல, வாரணம் கவிழ்ந்த—யானைகள் துண்டுபட்டுவீழ்ந்தன, முன்னீர்—கடல், மறிந்தென்ன—மடங்கினாற்போல, இரவி—சூரியன், மான் றேர்—குதிரைகள்பூட்டிய ஓராழித்தேர்.

148 ஆரொடுகுழிசிகில்லி — ஆர்க்காலும் குடமும் சக்கரமும் பார்—பூமி, துகள்—புழுதி, ஊர்தருபாகர்—இயக்

குநர், சென்னரி—தலை, தீமுகக்கணைகள்—அக்கினிபாணங்கள், பாய—பாய்ந்துதைத்தமையால்,

149 ஊன்—தசை, நெய்த்தோர்—இரத்தம், ஒழுகும்—ஓடும், மதக்கலுழி—மதநீர்வெள்ளம், பானிறக்கவரி—வெண்சாமரை, தூங்கும்—அசையும், நீனிறக்குன்றம்—நீலமலை, முறச்செவி—முறம்போன்ற செவிகள் (காதுகள்)

150 கணிகையர்—பரத்தையர்கள், கடுவிசை—மிக்கவேகம், கலினம்—கடிவாளம், அணிமணித்தார்—அழகிய இரத்தினமாலை, குழை—காதணி, எருத்தம்—கழுத்து, வாவும்பரி—(வாம்பரி) பாயுங்குதிரைகள்.

151 திறந்தன—பிளப்புண்டன, மலைகள்ஏய்க்கும்—மலைகளையொக்கும், துணிந்த—அற்ற, தாட்டுணை—இரண்டு கால்கள், வெய்யதானவர்—கொடிய அசுரர்கள், வீழும்—விரும்பும், பாட்டளி—இரீங்காரஞ்செய்யும் வண்டு.

152 காண்டலோடும் (சேனைகள் சின்னாபின்னப்பட்டமையைப் பார்த்தலும், ஆரழல்—மிக்கதீ, வீங்கியவெகுளி—பெரியகோபம், தூண்ட—முடுக்க, வெந்திறல்அவுணர் கோமான்—அந்தகாசூரன், வாங்கரும்—வளைக்கமுடியாத,

153 திருகு—மாறுபட்ட, செங்கண்மால்—செந்தாமரைக்கண்களையுடையமால். இரணியனையும் இரணியாக்கனையும் வலிகெடுத்து உயிரைப்போக்கிய உன்னை முடித்து அரியபாவத்தினைக்கொள்ளாமற் போவேனாயின் சிவதனு வினையினியெடுக்கமாட்டேனென சூரன்சபதங்கூறினான்.

154 என்றுரையாடி—என்றுசூளுரைகூறி. வேதன்—பிரமன், மனத்தினால் இழைத்தது-மானசசிருட்டி, குன்றவில்—மேருவில், குழைத்து—வளைத்து, ஒன்றிட—பொருந்த, ஏற்சொணாது-ஏற்றமுடியாது, வலத்தது-வன்மையுடையது

155 குடுமியம் பறவைக்குன்றம் — சிகரங்களையுடைய அழகிய கிரவுஞ்சமலை, உருவிட-துளைபட, வடிவேல்தன்னால் —வடிவேலினால், எறிந்திடும்—வீசும், வாளி—அம்பு, ஊழிக் கனல்—உகாந்தகாலத்தீ, கனன்று—சினந்து.

156 மரகதக்குன்றம்—நீலமலை, விரைவுற—விரைந்து செல்ல, எய்தலில்—எய்தலால், பவளமேனி — சிவந்தநிற முடைய திருமேனி, முக்கட்புனிதன்—சிவபெருமான், தோன்றல்—காணப்படல், கரையழிகடல்—கரையினைமோதிக்கரைக்கும்கடல்.

157 நோனாது—பொறுக்காது, அஞ்சனவண்ணன்—கரியநிறமுடையதிருமால், பாங்கமை-பக்கத்துஅமைந்துள்ள குதிரையும்தேரும்காலாட்படையும், நூழிலாட்டி-அழிவுறச் செய்து, தீங்குரு—தீயபாவவடிவு, கவசம்வீழ—கவசம்அற்று வீழ.

158 கார்முகம்——வில், வணக்கி—வளைத்து, செம் பொற்கலன்—பொன்னாற்செய்யப்பட்ட அணிகலன்கள், பார்முழுவதும்அளந்தமாயன்—பூமிமுழுவதையும் ஓரடியால் அளந்த வாமனாவதாரப்பெருமாள், வெம்பகழி—கொடிய அம்புகள், கூர்நுதி—கூரியமுனை, கதிர்ப்பருதி-கிரணங்களை யுடைய சூரியன், திகிரி—சக்கரம்,

159 திகிரிக்கூற்றம்—சக்கரமாகிய இயமன், மின் னெடுமஉரும்முக்கான்று—மின்னலையும் இடியையும்கக்கி, பட்டனன்—இறந்துபட்டான், மாழ்க—மயங்க, எட்டுடன் இரண்டு திக்கும்—பத்துத்திக்கும், இறைக்கும்—வீசும், மடிந்து—மடங்கி.

160 வெகுளிபொங்க—கோபம்மிக, தவழ்ந்து—தாவி, புலவுநாறும்—புலால்நாற்றம் வீசும், பகழி — பாணம், பூவை மேனிவள்ளல்—திருமால், மருமம்—மார்பு, போழ்ந்து— பிளந்து, ஏகிற்றன்று—சென்றது. ஏ—அசைநிலை,

161 குலிகம்—சாதிலிங்கம். மால்நிறம்திறந்து—திருமாலின் மார்பைப்பிளந்து, நெய்த்தோர்சொரிதலும்—உதிரம் ஒழுகலும், மயக்கம்எய்த—மயங்குதலுற, பால்நிறஎருத்தம்—பால்போல் வெள்ளியகழுத்து, வயிரவன்மருங்கு—வயிரவக்கடவுள்பக்கம்.

162 வெய்யகணை—கொடியஅம்பு, மயக்கந்தீர்ந்து—மயக்கம்விலக்கப்பட்டு, வைவேல்—கூரியவேல், கோறல்—கொல்லுதல், அரிது அரிது-மிகவும்முடியாதது, பாணியாது—நீட்டித்தல்செய்யாது, சேறி—செல்வாய். அன்றேல்—அல்லாதுபோனால்.

163 விழிசெந்தீ—கண்களினின்றும் செவந்த அக்கினி, எரிதர—மூள, மூழ்கா—மூழ்கி. மின்னகு—மின்னலைச்சிரிக்கும், மழு—பரசு, அடல்நந்தி—வெற்றியுடையநந்தி, பன்னகம்—பாம்பு, படி—பூமி, நெளிதர—நெளிய, கல்நவில்—கல்லையொத்த. அயல்வர—பக்கத்தே வர.

164 தழல்காலும்—அக்கினியைக்கக்கும், மலையுறழ்கதை—மலையையொத்தகதாயுதம், துரகம்—குதிரை, அந்தம் இல்—முடிவுஇல்லாத, களம்வேள்வி—போர்க்களவேள்வி, செம்தசை—செவந்ததசை, செவிடுற—செவிடுபட.

165 கரியெற்றி—யானையினைவீசி, கால்—காற்று, பரி எற்றி—குதிரையினைவீசி, பார்கிழிதர—பூமியானதுகிழிய, திரிதரு—சுழலும், ஒன்னார்-பகைவர், புறம்இட புறமுதுகிட' எதிர் சென்றான்—நேரில்போனான்!

166 கொடியோனை—அசுரனை, புவியொடு-பூமியோடு திசையாவும் — திக்குமுழுவதும், வென்றவன்—வெற்றியுற்றவன், விசயமும்—வெற்றியும், நகையொடு—சிரிப்புடன், மின்திகழ்கணை—மின்னல்போலும்விளங்கும்அப்பு.

167 காய்கணை—காயும்பாணம், கதழ்எரி—விரைந்ததீ விழி—கண்கள், பிழி—தேன், புனை—தரிக்கும், தீயுமிழ்கதை

—அக்கினியைக்கக்கும் கதாயுதம், மோதினன்—அடித்தான், எரிசிந்த—அக்கினிசிதற.

*168* உயர்நேமி-உயரியசக்கிராயுதம், ஒன்னலர்—பகைவர், உறைபுக—உறையுளுள்வந்தொடுங்க, மேதினி—பூமி, குப்புற்று—குப்புறுதலுற்று, மணிமார்பத்து—அழகியமார்பினிடத்து, எற்றினன்—வீசியடித்தான்.

*169* நந்திதன்அயர்வு—நந்தியினுடையதளர்ச்சி, நாகு இளம்பருதி — மிக்கஇளமைவாய்ந்தசூரியன், அந்தரத்து—ஆகாயத்தினிடத்து, எழுந்தது—உதித்தது, சந்திரமவுலி—சந்திரனையுடையமுடி, சென்றுதாக்க—சென்றுமோத. கந்து அடு—கட்டுத்தறியைமுறிக்கும், கடிதின்—விரைவின்,

*170* ஆலமும் — ஆலகாலவிடமும், கொப்புளிக்கும்—உமிழும், வேலையில்குளித்து-சமுத்திரத்தில்மூழ்கி, தெவ்வர்—பகைவர், காலன்—கூற்றுவன், உருது-உருமல், களித்து-மகிழ்ந்து, சூலம்வேல்—சூலாயுதமாகியவேல், திரிவித்து—சுழற்றி.

*171* நால்வாய்-தொங்குகின்றவாய், அழிபெருங்குருதி அழிந்துபெருகியஉதிரம், இறைஞ்சினர்-இறைஞ்சி(வணங்கி) கொந்து (கொத்து) தொகுதி. மீது—மேல், ஏந்தினன்—தூக்கினன்.

*172* பொருப்பு—மலை, வைந்துதி—கூரியமுனை, பதைய—அழுந்த, அருக்கன்—சூரியன், மண்டலமட்டும்—மண்டிலம்அளவும் (வரையும்) கருக்கலும்-கருகச்செய்தலும் பாவம் நீங்கி—பாவங்கள் தொலைந்து, கண்ணுதற்கடவுள்—இறைவன், இருக்கினைமுதலவாயமறைகள்—நான்குவேதங்கள், ஏத்தலுற்றான்—துதிக்கலுற்றான்.

*173* விருப்பு—வேண்டுதல், வெறுப்பு—வேண்டாமை நீங்கி-இவற்றிலின்றும்விலகி, வெறுவெளி-வெட்டைவெளி

பவளக்குன்றே — பவளமலையே, திருமறு மார்பன் — நாராயணன், கமலம்பொன்தாள்-செந்தாமரையாகியஅழகிய திருவடிகள், பொருப்புவில்-மலையாகியதனுசு, குழைய-வளைய

174 பானல்—நீலோற்பலமலர், கண்ணி—கண்களை யுடையவளாகியஉமையம்மையார், ஈனம்—இழிவு (குற்றம்) தந்தையே—பிதாவே! ஒருவர்க்கேயோ—ஒருவருக்காகவா, தானவர்—அசுரர், இல்லைகொல்—இல்லையா?

175 மறைத்துதிகள்-வேதங்களினுடைய தோத்திரங் கள், கேளா—கேட்டு, மகிழ்ச்சிகூர்ந்து—களிப்புமிக்கு, முகடு —முனை, இறக்கி-கீழேதாழ்த்தி, ஏத்தும்அனையான்—துதிக் கும் அவன், தைவந்து—தடவிக்கொடுத்து. அருட்கடைக் கண்ணின்நோக்கி அருட்கண்பார்வைசெய்துபார்த்து, தனது பேருருவம்—தனது உருத்திரவடிவம், யார்க்கும்—எத்திறப் பட்டார்க்கும்.

176 இப்பாடல்நெற்றிக்கண்ணும் முழுநீறுபூசியமேனி யும் ஒற்றைக்காதணியும் நீலகண்டமும் சந்திரனைத்தரித்த சடையும் சுமந்துதேவர்கள் ஏத்த சிவசாரூபநிலையினை அந்த காசூரன் அடைந்தான் என்பதாம்.

177 தன்னுடைஉருவம்-சிவசாரூபமும், அனைவர்க்கும் இறைமையும் அசுரன்அடைய, இனியகருணைசெய்து—கொ டுக்கும்சிந்தையினுடைய அருளைநோக்கி, திருமாலாதிதேவர் கண்களிகூர பலமலர்களைத் தூவித் துதித்துப் பரமேசுரனை வணங்கிநின்றனர்.

178 வகிர்மதி—பிறைச்சந்திரன், அவுணர்கோன்—சிவ சாரூபம்அடைந்தஅந்தகாசூரன், கணங்கள்—சிவகணங்கள், கடிதின்போந்து—விரைந்துவந்து, சுணங்கு—தேமல், முலை யாள்—உமையாள், பங்கன்—பங்கிலுடையவனாகியபரமனை, சேவடி—செம்மலர்நோன்றுள்.

179 வெற்பு—இமயமலை, உமையொடும்அரனை-உமா தேவியாரோடும் சிவபெருமானை, எந்தை (விளி) எந்தையே! தீமையானவையும் — குற்றங்கள் அனைத்தும், பொறுத்தி— பொறுத்துக்கொள்வாய், அளித்தவண்ணம்—கொடுத்தபடி, நந்தியின்கணம்—சிவகணம்.

180 நீலநிறவண்ணனாகிய திருமாலும் பிரமனும் இந்திரனும் மற்றை எல்லாத்தேவர்களும் தங்கள் தங்கள் ஊருக்குச்செல்ல சடாதாரியாகிய சிவபெருமான் அனைவருக்கும் விடைகொடுத்தனுப்பினன்.

181 இப்பாடல்:— திருமாலினால் படைக்கப்பெற்ற நூறுசத்திகளும் காலவயிரவரும் நாகரும் வாழும் பாதலவுலகுக்கு எய்துக என்றலும் வணங்கித் துதித்து மிக்கபேருவகையுடன் அவ்வுலகு அடைந்தனர்.

182 பாதலத்து—பாதலஉலகின்கண், காலவயிரவனும் கருடனும், நரசிங்கமும், ஒன்றாய்க்கூடியஉருவை நூறுசத்திகளும் நோக்கி மிகவும் வியந்து கூறுவர். அன்றேஅசைநிலை.

183 நீங்கள்ஒன்றாய்க்கூடியநிலைஎதன்பொருட்டுஎன்று வினவவும் அதற்குவிடையாக இராசதத்தால் வேதனாகவும் (பிரமன்) சத்துவத்தால் கரியவண்ணனாகவும், தாமதத்தால் உருத்திரனாகவும் ஆகுவம் என்றனன்.

184 மூவரும்—பிரமவிட்டுணுஉருத்திரர்களும், ஒருவராக—ஏகமாக, வெய்யநரகு—கொடியநரகவுலகு, தீதுஅற— பாவம்நீங்க, மாதவம்—பெரியதவவிரதம், பூண்டு—மேற்கொண்டு, செற்ற—வென்ற, மூதறிவுடையோர்—பேரறிஞர்கள், முத்திவீடு—முத்தியாகியவீடு (மோட்சம்).

185 நீவிரும்—நீங்களும், கொலைகளாதிதீவினை—ஐம்பெரும்பாதகச்செயல், நீத்து—விலக்கி, முழுப்பொருள்—பரிபூரணப்பொருள், காவியங்கண்ணி-கருங்குவளைப்பூப்போலும்

கண்களையுடைகவுரி, மேவு அரிது — அடையமுடியாதது, வீட்டின்பம்—முத்திநலம், அடைதிர்—அடைவீர்களாக.

186 விண்டுசத்தி—திருமால்சிருட்டித்த நூறு சத்திமார்கள், இனிதின்ஏத்தி—மகிழ்வுடன் துதித்து, பொன்னவிர் கடுக்கை—பொன்போல்ஒளிவிட்டுவிளங்கும் கொன்றைப்பூ, புரிசடைப்புனிதன்—செஞ்சடைவானவனாகிய சிவபெருமான் துன்னரும்பிரமம்-அடைதற்கரியபெரும்பொருள், தோய்ந்த—கலந்தன

(16-வது அத்தியாயம் முற்றும்)

## 17-வது, மாவலி மூவடி மண்ணளந்த அத்தியாயம்

1 கடவுளாயபின்-ஈசுரத்தன்மை யெய்தியபிறகு, யார் என—யாரவர்என்று, முந்தை—முற்பட, வாசவன்—இந்திரன், முனிவன்—நாரதமுனிவன், பரமன்—மேலானவனாகிய கூர்மாவதாரப்பெருமாள்.

2 பீனம்—பருமம், வேனல்—வேனிற்காலம், வேள்—மன்மதன், வில்விரோசனன்— விற்படையிற்சிறந்த விரோசனன் என்பவன், தலைவன்—அரசன்.

3 எ.றுழ்வலிப்பகடு — மிக்கவன்மையுடையஅயிராவதயானை, நல்லறன்—செங்கோல்நீதி, இழுக்குறுது—தவிராது, அரசு—அரசுரிமை,

4 ஊடுருவ—துளைத்துக்கொண்டுசெல்ல, (பரவு அரும்) பராவரும்—துதித்தற்கரிய, பரமன்—நாராயணமூர்த்தி, தராதலம்—பூமண்டலம், அருகு—பக்கம்.

5 வந்தமாதவன் — தன்மாட்டுவந்த சனற்குமாரன், வான்சிறப்பு — பெரும்வரிசைகள், அந்தம்இல்லன—எல்லையற்றவைகள், நல்குறு—நல்கி (கொடுத்து)

6 அரிய—பிறரால்அறியமுடியாத, தருமசிந்தை—அற மொன்றனையேசெயல் வேண்டுமெனும் எண்ணம் (மனம்) மருவலார்—பகைஞர்கள், மானவேல்—பெருமைபொருந்திய வேலாயுதம்.

7 தருமம்யாவினும் — முப்பத்திரண்டு அறங்களினும் அரியஞானம்—மேன்மையதாகிய ஞானத்தினை, அருளுவாய் —உபதேசித்தருளுக. கருவின்எய்துறுமுத்தி—மீண்டும் மீண் டும், பிறவினையெய்தாத மோட்சம், தெருள்—தெளிவு.

8 நன்மொழி — ஞானமருளும் மந்திரச்சொல், மலம் இறந்து — பாசங்கள்கெட்டு, உயிரனைத்துமாகி — எல்லா வுயிருந்தானேயாகி, முனிக்குழாம்—முனிவர்கூட்டம், முத் தன்—விடுபட்டவன்.

9 விரோசன்மைந்தன்—மாவலிச்சக்கரவர்த்தி, காவல் செய்கஎன— உலகினைக்காவல்புரிகஎன்று, கதிர்செய்மாமுடி —ஒளிவிடும்மணிகள்வைத்திழைக்கப்பட்ட கிரீடம், ஓவுஇல் —அழிவில்லாத, உண்மையான்—மெய்ஞ்ஞானமானவன்.

10 தவறுஇல்கேள்வியான் — குற்றமில்லாத கேள்வி ஞானமுடையவன், கவனம்—வேகம், தழைய—செழிப்புற, ஆழி—ஆழமுடையது, (கடல்) புவனம்யாவையும்—எல்லா வுலகுகளையும், புரவு—(புரத்தல்) பரிபாலனம்.

11 சூழ்வர-சுற்றிவர, பொன்னகர்க்கிறை-அமராவதி பட்டிலத்துக்குத்தலைவனாகிய இந்திரன், ஏற்றலும்—எதிர்த் தலும், வெந்கிட—புறமுதுகிட, வணக்கினான்-வளைத்தனன்,

12 மந்தரஅசலம் — மந்தரமெனும்பெரியமலை, இழை கொள் — அணிகலன்களைக்கொண்ட, நொந்து — வருந்தி, நோன்மைசால்—வன்மைநிறைந்த, உந்திபூத்துளான்உலகு— திருவுந்தியந்தாமரைபூத்ததிருமால்உலகாகிய வைகுண்டம்.

13 இடர்—துன்பம், செப்பும்ஏல்வை—கூறுஞ்சமயம். பரமனைப்பணிந்து — மகாவிட்டுணுவை வணங்கி, ஐயநுண்ணிடை—அழகிய நுட்பமான இடை.

14 தகுவர்—இராக்கதர்கள், வேரொடும்சிந்திமாய—அடியோடும்சிதறுண்டுஇறந்துபட, வெம்செரு — கொடிய போர், இழைத்திட—புரிய, மார்ப—(விளி) மார்பினனே.

15 மைந்தன்—புதல்வன், வருதும் — வருகின்றோம், சிந்தை செய்திடேல் — மனத்தில்வேறொன்றும்எண்ணாதே, ஓதி—கூறி, வெருவல்—பயப்படாதே, அந்தில்—அவ்விடம், அசைநிலையுமாம்.

16 சால்புறுநன்னகர்—எல்லாச்செல்வங்களும்நிறைந்த நல்லஅமராவதிபட்டணம், தவம்கோலியகாசிபன் — தவச்செயல்முற்றியகாசிபமுனிவரன், மாலினைத்தரித்து—திருமாலைத்தாங்கி, ஆல்இலை—ஆலந்தளிராகிய இலை

17 மைம்முகில்—சூல்கொண்டமேகம், செழுங்கமலம்—செந்தாமரை, மருவலர்வெருக்கொள— பகைஞர்கள்பயப்பட, வயிறுவாய்த்தனள்—பெற்றாள்.

18 உவகை—மகிழ்ச்சி, உம்பர்நாயகன் — இந்திரன், அருமறை—வேதங்கள், கணவர்—தலைவர்கள் (நாயகர்கள்) பாயல்—படுக்கை, புல்லினார்—தழுவினார்.

19 காசிபன்மனை—காசிபமுனிவர்ஆச்சிரமம், விஞ்சையர்—வித்தியாதாரர், அம்கமலவீட்டுறையும்அந்தணன்—அழகியவுந்தியம் தாமரையினுதித்த பிரமதேவன், நாதனை—வாமனாவதாரப்பெருமானை, எண்ணறுந்துதி—முடிவில்லாத துதிகள்.

20 நறவுகொப்புளித்து— தேனினைச்சிந்தி, நளினம்—தாமரை, பெட்பொடு—விருப்பொடு, மாதவன்—பெரியதவமுடையவன், முறையிலின்—வேதநூலிற்கூறியமுறைப்படி

21 கரியபூந்திங்கள்— (இல்பொருள்உவமை) கரிய அழகியசந்திரன், திருந்துகேள்வியோர்—இயல்பாகவேதிருந் தியகேள்விஞானமுடையவர்.

22 புள்ளிடைதட்ப-சகுனக்கேடாகபறவைகள்தடுப்ப, மறுத்திடாது—மறுக்காமல், வள்ளன்மைபூண்டு-கொடைத் தன்மைமேற்கொண்டு, அருமகங்கள்—செயற்கரும்வேள்வி கள். செல்வன்—அளவற்றநிதியினையுடையவன்,

23 பாவவேர்-பாவச்செயலின்மூலம், ஏவலின்—கட்ட ளையினுல், உலகுஎல்லாம்ஈன்ற எம்பிரான்-திருமால். மூவடி —மூன்றுஅடி, இரப்ப—யாசிக்க, மகம்புரிசாலை—வேள்விச் சாலை. மன்னினுன்—அமைத்தான்.

24 தாமரைக்கண்ணினன் — புண்டரீகாட்சனுகிய திரு மால், சடிலன்—சடாமுடியினையுடையவன், வாமனம்—குறு கியதன்மை. பூமகள் —திருமகள், கொழுநன் — நாயகன், தானவன்கோமகன் —அசுரேசனுகியமாவலி.

25 மகிழ்சிறத்தல்—களிப்பின்மேம்படல். தாளினுல் -அடியினுல், வழங்குஎனு-கொடுப்பாயாக வென்று கரகம்— கமண்டலம், களிப்பின் நல்கினுன்—மகிழ்வோடும் தாரை வார்த்துக் கொடுத்தான்.

26 துகள்—பொடி, நாகர்நாட்டொடு-தேவருலகொடு, பொதிந்தது—மூடினது, விரிஞ்சன்—பிரமதேவன், உடைய பிளந்துபட,

27 மலர்ப்பதம் — பூப்போலுந்திருவடி, மோழை— பிளப்பு, துங்கம்—உயர்வு, பொங்கி—பெருகி, ஒழுகியபுனல் —வீழ்கின்றநீர், கங்கையென்று—கங்கையாறுஎன்று, இன் னமும்—இப்பொழுதும், கழறுகின்றது—கூறுகின்றது.

28 இறையவன்—திருமால், அற்புதஇயற்கை—ஆச்ச ரியப்படத்தக்கதன்மை, கண்ணுரு—(கண்ணுற்று)பார்த்து

வானவர் — தேவர்கள், மீட்டும்—மீளவும், குறள் உரு— குறுகியவடிவு, கொண்டல்—மேகம்.

29 வாண்முகம்—ஒளிபொருந்தியமுகம், ஒடுங்குநாள்- ஒடுங்குகின்றகாலம், தருவல்—தருவேன், அவ்வளவும்— அதுவரையும், தாவுஇல்பாதலத்து-கேடில்லாதபாதல வுல கின்கண், சார்குஎன்று—அடைவாயாகஎன்று.

30 திருத்துயில்உலகம் — இலக்குமிபிராட்டியுறைந்து விளங்கும்உலகம், செவ்வன்—செப்பம், அருத்தியின்-ஆசை யொடும், இருக்கு—வேதம், மறையவர்-முனிவர்(அந்தணர்) மரு—மணம்.

31 கோளடுத்து — அரசர்களைக் குத்தியெடுத்து, வார் சடைடதே — நீண்டசடாமகுடமுடைய சிவபெருமான், அடி மலர்சிந்தை செய்து-திருவடிகளைத்தியானஞ்செய்துகொண்டு, தவத்திறுக்கொருவன்—தவமுதல்வன்.

17-வது அத்தியாயம் முற்றும்.

---

## 18-வது வாணசுரன் சாரூபமடைந்தது.

1 இவன்—இந்தமாவலிச்சக்கரவர்த்தி, புகல் — புகல் வாய் (கூறுக) பொன்னாடு—சுவர்க்கஉலகு, புத்தேள்— இந்திரன், பொருஇல்மகதியாழ் — உவமையற்றமகதியென் னும்பெயருடையயாழும், சென்னிதாழ்த்து — தலையினை வணங்கச்செய்து,

2 இப்பாடலானது மாவலிதன்மைந்தர் நூற்றுவரில் முதன்மைந்தன்வாணன் முடிசூட்டிக்கொண்டு உலகினை யெல்லாந்தனியாட்சிபுரிந்து இந்திரன் அரசினையும்பற்றினான் எனக்கூறுகின்றது, தறுகண்—அஞ்சாமை, இனிதுஓச்சி— இனிதாகச்செலுத்தி, சிறகர் (போலி) இறகுஎறிந்தவலி யோன்—இறகுகளைவெட்டிவீசியஇந்திரன்.

3 தவிசு—ஆசனம், கயிலைப்பொருப்பு—கயிலாயமலை, கங்கைமுடிப்பெம்மான்—கங்காதரனாகியசிவபெருமான். எரியூட்டி—அக்கினிதேவனை உண்ணச்செய்து, என்னது ஆணை—என்னுடையஅரசுரிமை, இயம்ப....விண்ணப்பிக்க.

4 நறவுஉயிர்க்கும் — தேன்துளிபிலிற்றும், நறுங்கூந்தல்மங்கை—உமாதேவியார், ஒருகணை-ஒரேஅம்பு, தீமடுப்ப — தீயுண்ண, பொங்கும்உவகை — பெருமகிழ்வு, தினம்பழிச்சி—நாடோறும்துதித்து, மரபு—வமிசம், இலிங்கம்—சதாசிவத்திருவுரு.

5 அவுணர்பெருமான்—வாணாசுரன், வீக்கம்—பெருக்கம், கூர்ந்து—மிகுந்து, அருள்பூத்து-கருணையுண்டாகி, நவை—குற்றம், நாதன்—தலைவன், தவளம்நீறு—வெண்ணீறு, ஒளிபழுத்த — ஒளிமுதிர்ந்த, தனிமுதல் -- சிவபெருமான்,

6 தேன்றோய்த்து — தேனில்தோயச்செய்து, கனி—கொவ்வைக்கனி, காதை—வரலாறு, சான்றோர்—தவநிறைமுனிவரர், முதல்மாதர் — மூத்தமுதல்மனைவியர், வகுத்துரைப்பாம்—வகைப்படுத்திமொழிகுவம்.

7 ஆரம்—முத்துமாலை, அயில்வேல் — கூரியவேலாயுதம், தனுவின்புதல்வர்அறுவராவார், தாரன், கபிலன், விடபருவா, சம்பரன், பானு, சங்கரன் என்பவர்கள். திறவோர்—வலிமையுடையவர்கள்.

8 அரசு—அரசர்கள், அயில்வேல்நெடுங்கண்—கூரியவேலாயுதம்போன்ற நீண்டகண்கள். அம்பணைத்தோள்—அழகிய மூங்கில்போன்றதோள்கள், சுரசை என்பவளுக்கு சற்பரும், சுரும்பூதரும், புதல்வர்கள். இவர்கள் விண்ணோருலகின்கண் சிறப்பினொடு முலாவிவருவார்கள். விரைசெய்மலர்—நறுமணம்கமழும்பூக்கள்.

9 அலறுமருங்குல்—சுழற்சியடையும்இடை., கழை—மூங்கில், சவி—ஒளி, மழுங்க—கெட, வயங்கும்—விளங்கும், வரிட்டை யென்பவளுக்கு ஆயிரமக்கட்குமேலும் கந்தருவ மக்கள் உளர் உண்டாமெனல் குறிப்பிடப்படுகின்றது.

10 கடைந்தமணி — சாணைபிடித்து ஒளிவீசும் அரதனங்கள். கத்துரு வென்பவளுக்கு அனந்தன் முதலிய பாம்புகள் தோன்றினர். அவர்கள் அழிவற்ற குறைவில்லாத செல்வங்களுடன் உயர்ந்து பாதலவுலகின்கண் தங்கினர்.

11 தரளம்—முத்து, தாம்பிரை யென்பவள் காசிப முனிவரைக்கூடி யின்புற்று கிளியையும், பருந்தையும், பசாசக்கூட்டத்தையும், கழுகையும், மயில்களையும், அன்னப்புட்களையும், பெற்றெடுத்தனள். தூமம்—புகை, காமர்—அழகு கங்குல்— ஆகாயம்,

12 பங்கம்—சேறு. பழனம்—மருதநிலம், பதுமம்—தாமரை, எழில்—அழகு (தோற்றம்) கவர்ந்து — பற்றி, கொங்கு—மணம், சுரபி யென்பவள், மான்களையும், எருமைகளையும், பெற்றனள். சிறப்பு—பெருமை, கயவாய்-பெரிய வாய்.

13 வெல்வேல்—வெற்றியுறும்வேல் (வினைத்தொகை) இராவதி யென்பவள் புல், மரம், கொடி, முதலியவைகளைப் பெற்றனள். எதிர்இல்லா — உவமையில்லாத, கிரீடை யென்பவள் வீரம்பொருந்திய இயக்கர்களை இனிதின் ஈன்றனள்.

14 கனி—வாழை, மா, பலா, ஆதிய முக்கனிகள், அம்தீம்சொல் — அழகிய இனியமொழி, முனியென்னுநங்கை பல்வகைஅழகுவாய்ந்த அரம்பையர்களை அமிர்தத்தினை யீன்றதை யொப்பப்பெற்றனள்.

15 குரோதவசையென்பவள் அரக்கர்களைப் பெற்ற னள். விநதை யென்பவள் அருணன், கலுழன், என்னுமிரு வரைப்பெற அவர்கள் சிவபெருமானைப்போற்றி அருணன், சூரியன் சாரதியாகவும், கலுழன், திருமால் ஊர்தியாகவும் ஆயினர் என்பதாம்.

16 பொருவற்று—உவமையின்றி (ஒழிந்து) சந்திரன் மனைவியர் இருபத்தெழுவரும் ஒவ்வொரு புதல்வரைப் பெற் றனர். அருவப்பொருளாகிய விறைவினையுணரும் அரிட்ட நேமியென்பவள் அழகிற் சிறந்த பதினறு புதல்வர்களைப் பெற்றனள்.

17 வெகுபுத்திரன் என்பான் நான்கு புதல்வர்களையும் அங்கிரா வென்பான் நான்கு மைந்தர்களையும் கிரீச்சுவப்பேர் முனிவன் தெய்வீகப்படை யனைத்தையும் பெற்றனர். பெருந் தவத்தினைப் புரிந்து இச்செயல் புரிந்தனர்.

18 காசிபஇருடி பலதவம் புரிந்து, வர்ச்சன். சீதன், எனுமிருமைந்தர்களைப் பெற்றனன் வர்ச்சமுனி, இப்பியனை யும். நயித்துருவனையும் அளித்தனன். தாள்தாமரை—தாட் டாமரை. கோட்டம்—கோணல் (மாறுபாடு) நாட்டம்—கண்

19 பொரு—உவமை, சீர்த்தி—மிகுபுகழ், இப்பியன் — இப்பியர்களை யீன்றான், உலவாக்கேள்வி—வற்றாத கேள்வி ஞானம், நயித்துருவன் சவனர் மகளைக்கூடி குண்டபாயிரைப் பெற்றான். கருத்தை யென்பவள் தேவலனை யீன்றாள்.

18-வது அத்தியாயம் முற்றும்

---

## 19-வது புலத்தியன் மரபுரைத்தது

1 கறைதீர்மரபு—குற்றமற்றவமிசம், ஓது—கூறுவாய் அம்தீம்தொடை — அழகியகட்கினியமாலை, மரு—மணம், ஊற்றிருந்து—பெருக்கெடுத்து, வாசவன்—இந்திரன், மணி —கவுத்துவமணி, செப்பிடுவன்—கூறுவன்,

2 திசைதிரிந்த — திக்கிடமெல்லாஞ் சென்றுபரவிய, புலத்தியன்திரணவிந்து பெற்ற பெண்ணினை மணந்து விச்சிரவா வென்பவனைத் தோற்றுவித்தான், வசை—பழி, வாள்—ஒளி, மிளிரும்—விளங்கும், அவ்விச்சிரவாவானவன் புட்பொற்கடை, காலை, கேகசி, தேவவன்னி, ஆகியவரை மணந்தனன். தேவவன்னி யானவள் அளகேசனைப் பெற்றனள்.

3 கேகசியென்பவள் இராவணன், கும்பகருணன், விபீடணன், சூர்ப்பநகை, ஆயவர்களைப் பெற்றனள். புட்பொற்கடை யானவள் கரன், மகோதரன், மாரீசன், பிரகத்தன், கும்பினசி ஆயவர்களைப் பெற்றாள்.

4 காலை யென்பவள் திரிசிரன், தூடணன், வித்தியுச்சிவுகன் ஆயவர்களைப் நீங்காப் பேரன்புடன் ஈன்றனள். புலகமுனியானவன் விலங்கினம், பேய், பூதம், பாம்பினம், இவற்றினைப் பயந்தான். வைவச்சுத மன்வந்தரத்தில் கிருது வென்பவன் உடல்நலியத்தவஞ் செய்தனனேயன்றிப் புதல்வரை யீன்றிலன்,

5 பிருகுமுனி பார்க்கவனையும், அத்திரிமுனி மூவரையும், பெற்றனர். தக்கன் பெற்ற புதல்வர்தமை நாரதன் பெரியவிடம் பார்த்துச் செல்கெனச்சென்று இறந்தனர் தக்கனுடைய சாபத்தினால் நாரதமுனிவரன் புததிரப்பேறின்றி யிருந்தனன்.

6 வசிட்டன் அருந்ததியைக்கூடி சத்தியனைப்பெற சத்தியன் பாரசரனைப்பெறப் பராசரன் வியாதனைப் பெற வியாதன் சுகமுனிவனைப் பெற சுகமுனியும் கிட்டிணன் பூதிச்சிரவா, சம்பு, கவுரவன், பிரபு, வெனும் புதல்வர்களையும் கீர்த்திமதி யென்பவளையும் பெற்றனன்.

19-வது அத்தியாயம் முற்றும்.

---

## 20-வது சூரியன் மரபுரைத்தது.

1 மூசியளி — நெருங்கிவண்டுகள், முகை—அரும்பு, வாய்விண்டு—விரிந்து, பண்ணவன்—சூரியன், பகர்தி—கூறுவாய், மகவான்—இந்திரன், கடவுளர் — தேவர்கள், துயல்வரும்—அசையும், புகலும்—கூறுவான்.

2 ஆலும்—நிறையும், புரையறுமுனிவரன் — குற்றமற்றமுனிவரருள்மேலானவன், இருட்பிழம்பு — இருட்டொகுதி, கடவிய—செலுத்திய, இரவியஞ்செல்வன்—செங்கதிர்க்கடவுள்.

3 எழில்வாய்ந்து—அழகுவாயப்பெற்று, அரர்பொருது—அரமென்னுங்கருவியால் அராவி, அவிர்சுணங்கு—விளங்குகின்றதேமல், தாங்கும்—சுமக்கும், முருந்து—மயிலிறகின்அடி, கவற்றும்—கவலச்செய்யும், சூரியன்புதல்வன் —வையகச்சுதமனுவாம்

4 இளமுறுவல்—புன்சிரிப்பு, இராக்கினி யென்பவள் இரவியொடுங்கூடிப் பெற்றமக்கள், இயமனும், இளவந்தனும், யமுனையுமாவர். புணர்ந்து—கூடி, முதிராக்கழை—முற்றுதபச்சிளமூங்கில், வாள்எயிறு— ஒளிபொருந்தியபல்.

5 கவின்குழைத்து— அழகினைஒன்றுபடுத்தி, ஓவம்—ஓவியம், பிரபையென்பவள் கதிரவனைக்கலந்தின்பந்துய்த்துப் பிரதாபன்என்பவனைப்பெற்றனள். குவிந்து—கூம்பி. இருநலம்—பெருநலம், ஒளிறுவேல்—விட்டுவிளங்கும்வேற்படை.

6 சிறுபுறம்—பிடரி, அனுக்கிய — கெடுத்த, பிறைநுதல் — பிறைபோன்றநெற்றி, சாயையென்பவள் பெற்றமக்கள் மனுவும், தபந்தி, உசை, ஆகிய பெண்களுமாவர்,

நளினம்— தாமரை, கண்படுக்கும்—துயில்கொளும், அறை கழல்—ஒலிக்கும்வீரக்கழல்.

7 நெடுநிலம்முழுதும் — பூமியின்பரப்புமுற்றும், களை கண்—பற்றுக்கோடு (ஆதரவு) அடிப்படுத்தல் — தன்கீழ் அடக்கிநடத்தல், வைவச்சுதன் தருமைந்தன்-இக்குவாகுவாம், தொடி—வாகுவலயம், சுரும்புஉண்ண—வண்டுகள்அருந்த, இடுதிறை—அளக்கும்கப்பம்.

8 நெய்மிதிகவளம் — நெய்யூற்றிக்கலந்த யானை யுண் டற்கு அமைக்கும்உணவு, சுளித்தல்—கோபித்தல், இறுக் கும்—செலுத்தும், கங்குல்முகம்-இராக்காலத்தில், அரனடி —சிவபெருமான்றிருவடி, வெய்யவன்குலம்-சூரியன்வமிசம் இக்குவாகுவின்குமாரன்—விகுக்கியென்பவன்ஆகும்.

9 தடி—ஊன், கோதை—மலர்மாலை, திங்கள்வாரம் —சோமவாரம், கண்படை—துயில், களிற்றுரிபோர்த்தவன் —அத்தியென்னும் அசுரன்தோலையுரித்துப்போர்த்தவனாகிய சிவபெருமான் (மாதங்காரி) விகுக்குவின்புதல்வன் என்பவ னும்.

10 போழ்ந்து — பிளந்து, பத்தி—வரிசை, பரூஉ— பருமை, அளந்து-வரம்புபடுத்தி, முன்றில் (போலி) வாயில் துளங்கல்—அசைதல், ஆடல்வேல்—வெற்றிவேல், குத்தன் மைந்தன்சுயோதனன் என்னும்சக்கரவர்த்தியாம், மணிமுடி —இரத்தினகிரீடம்.

11 சிலைபயின்று — வில்வித்தைப்பயிற்சிபெற்று, சிறு வன்—புதல்வன், கலி — துன்பம், துரந்து—ஓடச்செய்து, சுயோதனன்புதல்வன் அப்பிருகன் அப்பிருகன் புதல்வன் விச்சுவகன், விச்சுவகன்புதல்வன் அத்திரகன், அடையலர்— பகைவர்,

12 துயல்வரும்—அசையும், தாணு—பரசிவன், மறையினால்—மந்திரங்களினால், வாள்அமர்-வாட்போர், அழுவம்—பரப்பு, இடறி—உராய்ந்து, அத்திரகன்மைந்தன் உவனாச்சுவன் என்பவனும், அண்ணல்—தலைமை,

13 உவவுத்திங்கள்—பூர்ணசந்திரன், கவிகை—குடை, வசை—நிந்தை (பழி) புரக்கும்—பாதுகாக்கும். நசையுநர்—விரும்புமவர், ஆச்சுவன்மைந்தன்—அச்சுவத்தி அவன்மைந்தன் பிருகதச்சுவன், சேய்—பிள்ளை, அடையா-அடைக்காத.

14 முழவுறழ் — மத்தளத்தையொத்த, வரைநிரைத்தனைய — மலைகளை வரிசைபடுத்தினாற்போன்ற, பெட்பு—விருப்பம், பிருகதச்சுவன்மைந்தன் திரிடாச்சுவன், அவன் மைந்தன் அப்பிரமேயன் ஆவன், கண்டுயிலும்—உறங்கும்.

15 தமனீயம்—பொன், தாமம்—மாலை, அநங்கன் (உருவிலி) மன்மதன், அப்பிரமேயன்புதல்வன் அச்சுவன், அச்சுவன்மைந்தன் நிகும்பன்ஆவன். கற்செய்தோள்கள்-மலை போன்றதோள்கள், இமிழ்தல்-ஒலித்தல், ஞாலம்-உலகு.

16 புடைவளைத்து — நாற்பக்கமுஞ்சுற்றி, குடுமி — சிகரம், புரிசை—மதில், குடபுலம்-மேற்குத்திசை, தவழ்ந்து ஊர்ந்து, உணங்கும்—வருந்தும், மடங்கல்ஏறு-ஆண்சிங்கம், மிடல்—வலிமை, நிகும்பன்சேய்சம்பவாச்சுவன் ஆம்,

17 குலீந்துஇருந்து—வளைந்துதங்கி, குழைதல்—இளகுதல், பொதிமலர்—நிறைமலர், வெயில்நுழைந்து—சூரியகிரணம்புகுந்து, அயோத்தி—போர்புரியப்பெறாதது, செயிர்—குற்றம், திங்கள் அம்கண்ணியோன் — சந்திரசேகரன், மயர்வு—மயக்கம், அளித்த—பெற்றெடுத்த, சம்பவாச்சுவன் புத்திரன் அருணாச்சுவனாகும், வாகை—வெற்றி.

18 நெடும்குழை—நீண்டகாதணி, பிடி—பெண்யானை, வாவுமான்—குதிரை, வாவும்—பாயும், அலங்கல்—மாலை

அருணுச்சுவன்தனயன் உவனுச்சுவன் என்பதாம், கோடு—கொம்பு, சேடு—வனப்பு, (அழகு)

19 எறிக்கும்—வீசும், இப்பி — கிளிஞ்சலின் ஓர்வகை, இப்பிவாய்—இப்பியினிடத்து. வார்வடம்-நீண்டமுத்துமாலை திணிதோள்—திண்ணியபுயங்கள், அளித்து—பாதுகாத்து பொன்னுலகு—சுவர்க்கலோகம், வானதி-கங்கை, உவனுச்சுவன் மைந்தன்-மாந்தாதா என்பவனும், குரிசில்-பெருமையிற் சிறந்தவன்.

20—நுண்துகில் — நுண்ணியஆடை, மாழை — மான், பிணி—கட்டு, பொன்னங்குன்று—மகாமேரு, மாந்தாதாவின் புதல்வர், அம்பரீடன் புருகுச்சன், முசுகுந்தன் ஆயவர்களாம் இணை—ஒப்பு, வேனில்வேள்—மன்மதன்.

21 அம்பரீடன்புதல்வன், உவனுச்சுவன் அவன் மைந்தன் இரதன் ஆவர், ஆடகம்—பொன், உத்தரகுரு—வடதேசத்தில் ஒருபகுதி, கவர்ந்த—பற்றின, ஓங்குநீர்—கடல். உலம்பொரு—திரண்டகல்லினையொத்த.

22 கைம்முகந்து—துதிக்கையினுலஅள்ளி, வெட்மை—வேண்டல், தாக்கல்—மோதுதல், இழிந்து—இறங்கி, வீழ்தரும்—சொரியும், கொம்மை—அழகு, சாடலும்—மோதுதலும், குங்குமச்சேதகம்—குங்குமச்சேறு, இரதன்அளித்திடும்புதல்வன் அரிதன் ஆகும், தெவ்—பகை

23 வேய்த்தலை—மூங்கில்இடத்து. தேன் இறால்-தேன்கூடு, பசுநறு—பசுந்தேன், துணர்-கொத்து, கறிக்கொடி-மிளகுக்கொடி, விசும்பு—விணணுலகு. கற்பகக்கோடு—கற்பகமரத்தின்கிளை, சேய்த்து—தூரமுடையது, புருகுச்சன் மைந்தன் திரிசசேத்து என்பவன்ஆம், நெட்டிலை நீண்டஇலை,

24 கற்சிறை — கல்லாலாகியஅணை, சரையுநதியும் கங்கைநதியும்பாயும் நாட்டினையுடையதிரிசசேத்து என்பவன் புதல்வன் சம்பூதியென்பவனும். வெற்பகங்கிழிய—கிரவுஞ்சமலைபிளப்ப, முருகு—முருகப்பெருமான்.

25 நஞ்சணி யிடற்றுச்சாமி — நீலகண்டன். சம்பூதி யாகிய சிவபக்தன் சிவனருளால் மால்விருத்தன் என்பவனைப் பெற்றான். அறுகால்—வண்டுகள், உழவன்-வீரன், ஏழ்இசை எழுவகையான சுரம் (ஒலி).

26 அருவரை—ஏறற்கரியமலை, ஆரம்—சந்தனம், மூரி —வலிமை. குரவை—ஒருவகைக்கூத்து, முத்துயிர்க்கும்— முத்துக்களையீனும், மருதம்—வயல், மால்விருத்தன்மகன் அரண்ணியன் என்னும் காமமுடையவனும்.

27 மாற்றருஞ்சிறப்பு-விளக்கற்கரியசிறப்பு, கொள்ளை —மிகுதி, ஈற்றுளைந்து—பெற்றுவருந்தி, அலறும்-ஒலிக்கும், இனவளை—கூட்டமாகிய சங்குகள், வளங்கூர் — வளப்பம் மிகுந்த, அரண்ணியன்புதல்வன் விடதச்சுவன் அவன் புதல் வன் அரியச்சுவனும்.

28 கரும்புஅறுத்து— கரும்புகளைத்துணித்து, சகடு— வண்டி, பண்டி—வண்டி, வியனகர்—பெரியநகரம். அரியச் சுவன் சேய் அசுமனு ஆவன், இசை—புகழ், ஞாட்பு— போர்க்களம், கூற்று —இயமன், விறல்—வெற்றி.

29 அரக்குஇதழ்முளரி-செந்தாமரை, மல்லல்—மிகுதி அவ்வசுமன் அளித்திடுபுதல்வன், திரிதனுவா என்பவனும். முருக்கு— முள்முருக்கு, ஆம்பல்வாய் — அல்லியினிடத்து (முகம்) விள்ளும்—விரியும்.

30 வசுமனுஎன்னும்அரசன் அசுவமேதம்புரியுமிடத்து இனியமுனிவரை அன்பாற்பார்த்துப்புலன்களையடக்கிய தவம் வேள்வி சந்நியாசம் ஆயவற்றில் விளங்கியது என்னையென்று வினவ அவர்கள் காமியங்கருதாது நிட்காமியமாக விரதம் நோற்க வேண்டுமெனத் தன்மகனுக்கு முடிசூட்டி தவத்தலை நின்றான்

31 நற்றவம்—நிட்காமியமாகிய நோன்பு, மலரோன்—பிரமதேவன். அமலன்—மலமற்றவனாகிய திருமால், வியந்து—வியப்புற்று. ஒளிசெய்பூணான்-ஒளிபொருந்திய அணிகலன்களையணிந்தவன், வசுமனுவென்பவன், பொருவறுகாயத்திரி-உயர்வுறுசிவகாயத்திரியாகிய மந்திரம். வெய்யதீங்கதிர்மண்டலம்—சூரியமண்டலம், முக்கட்டேவின்மலரடி—சிவனடி, சேர்ந்தான்—ஒன்றினான்—அன்றே அசைநிலை,

32 குய்—நறும்புகை, அட்ட—சமைத்த, குரோசம்—இரண்டுமைல் தூரம், இரவலர்—யாசகர், வையகம்—உலகத்தவர், திரிதனுவாவின்மைந்தன் சூரியவண்ணன் என்பவனும்.

33 சுடிகைவாள்அரவு — உச்சிக்கொண்டையினையுடைய ஒளிபொருந்திய ஆதிசேடன், மேய (மேவிய) பொருந்திய, பார்—பூமி, பறவைக்குன்று—கிரவுஞ்சகிரி, தாருகன்கிளை—தாருகாசுரன் சுற்றம், சூரியவண்ணன் புதல்வன் சத்தியாதனன் ஆம்.

34 ஆடகமுளரி—செந்தாமரை, திருமடந்தை—மகாலட்சுமி, அகலம்—மார்பு, பொதுவுஅற-பொதுவாந்தன்மை நீங்க, ஓடை—முகபடாம், ஏடு—இதழ், சத்தியாதனன் புதல்வன் வலிமைவாய்ந்த அரிச்சந்திரமன்னவனும்.

35 வெய்ய—கொடிய, புலம்பு—தனிமை (புலம்பலுமாம்) இனைய—வருந்த, மெய்ம்மை—சத்தியம், அறன்—அறச்செயல், நிறுத்திடும்—நிலைபெறச்செய்யும், செங்கோல்—நேரியகோல், கலுழ்ந்த—அழுதலைச்செய்ய, விதிர்க்கும்—அசைக்கும், அரிச்சந்திரன்புதல்வன் உலோகிதாச்சுவனும்.

36 அகழ்பரப்பு — தோண்டி யெடுக்கப்பட்ட பரப்பு (இடம்). கானவர்—வேடுவர், கோட்படுக்கும்-அகப்படுக்கும் உரோகிதாச்சுவன் மைந்தன் உரோகிதன் என்பவனும், சேல்—மீன், திருந்தலர்—பகைஞர், புலவுவேல்—புலால்நாற்றம் நாறும்வேல்.

37 கபோலம் — கன்னம், மதசலக்கலுழி — மதநீர்ப் பெருக்கு, உவட்டெடுத்து—பெருக்கெடுத்து, பிடியென— பெண்யானை யென்றுரைக்கும்படி, வரைக்குடுமி — மலைச் சிகரம், உரோகிதன்குமாரன்வேல்துந்தன் ஆம், கோடு-முனை.

33 திரைபொருபரவை— கடல், பொருவுற — ஒப்ப, புகழ்நிலா—புகழாகியசந்திரன், தரளம்-முத்து, தென்றலம் பொருப்பு — பொதிகைமலை, பொன்னங்குடுமிமால்வரை— மேரு. (இமயமுமாம்) துந்துவின் மைந்தனவில்திறல்விசயன் ஆம்.

39 மருவலர்— மருவாதவர் (பகைஞர்) மங்கையர்— மனைவியர், வெருவொடும்-அச்சத்தொடும், தெய்வதம்பரவ தெய்வத்தினைவேண்ட, எரியுமிழ் — அக்கினியைக்கக்கும், விசயன்நன்மைந்தன் காருகன் ஆம், தீப்பட-அக்கினிதோன்ற.

40 பொருசமம் — போர்க்களம், காருகன்புதல்வன், விருகனும் அவன் புதல்வன் வாகுவென்பவன் ஆம், வெண் பல்—வெள்ளியநிறமுடையபற்கள், கடைசியர்— மருதநில மள்ளர்பெண்கள், ஆர்ப்பு—ஆரவாரஒலி.

41 கொழுமுகம் —கலப்பையின் இணைத்தகொழுத்துன் னூசியின்முனை, நெக்குடைந்து—நெக்குவிட்டு, உழக்கு— கலக்கு, முத்துயிர்க்கும்—முத்துக்களையீனும், வாகுவின் மைந்தன் சகரன்என்னுமன்னவனும், பெண்மை—பெண் தன்மை.

42 சகரனுக்குமனைவி பிரபையாம் அவள்பெற்றிடு புதல்வர் அறுபதினாயிரவர் ஆவர், அகழ்ந்திடல்—தோண்டல் பானுவதியிடமாக அவ்வாகுவென்பவனுக்குத் தோன்றிய புதல்வன் சமஞ்சதன் ஆவன்.

43 அடங்கலர்—சத்துருக்கள், உணவருத்தும்— உண் டியாக உண்பிக்கும், சமஞ்சதன்புதல்வன் அஞ்சுமான்என்பர்

செருத்தல்—மடு (மடி) குண்டு—பள்ளம், கழுநீர்—நீகோற் பலம், மென்முகை—மெல்லிய அரும்புகள்.

44 அஞ்சுமான்புதல்வன் திலீபன், அவன்மகன் பகீர தன், எஞ்சலில் புகழ்—குறைவிலாப்புகழ், குழையும்-வாடும் முன்னையின்—முன்னையின்விட, உலகுளலாம்—உலகமுற்றும் ஏத்திடும்—புகழ்வுறும், குரிசில்—பெருமையுடையவன்.

45 பேட்டளி—பெண்வண்டு, மருவிய—கூடின, வெம்மயக்கு—கொடியமயக்கம், வருடை—ஆடு, மாலை—வரிசை, பகீரதன் காதன் மைந்தன், குலுதனென்றுரைக்கப் பெறுவன், குன்றினில்—மலையின்கண்.

46 குலுதனுக்குக்குமாரன், சிந்துதீபன் அவன்றன் புதல்வன் அயுதாயுவா என்பவன் ஆம். ஆதுலர்—ஒன்றுமில் லாதவர் (இரவலர்) வெள்ளிக்குன்று—கயிலாயமலை, தெருமரும்—சுழன்றுமயங்கும், வாங்குவில்—வலைந்தவில்,

47 வரிவளை—இரேகைபொருந்தியசங்குகள், மணல் குன்று—மணலாகியமலை, ஊடி—பிணங்கி (புலந்து) குருகு—அன்னப்பறவை, ஒளிக்கும்—மறையும், அயுதாயுவாவென் பவன் புதல்வன் இருதுவணன், அவன்மகன் சுதாசன்ஆவன்.

48 அன்னவன்—அத்தன்மைவாய்ந்த சுதாசன், பிதிர்—சிதறுண்டதூள், சுதாசன்புதல்வன் தமயந்திகணவன் (நளன்) மித்திரசகன் அவன் குமரன் அச்சுமகன், கனைகதிர்—மிகுந்தகிரணம் (ஒளி) அரா—பாம்பு.

49 அச்சுமகன் மகன்நருலன் அவன்புத்திரன் தயரதன் அவன்சேய் அதிரதன் ஆகும், ஆல்—அசைநிலை, எதிர்ந்த—பகைத்து எதிர்த்துவந்த, பூழி—புழுதி, ஒற்றையாழியந்தேர் பண்ணவன்—ஒற்றைச்சக்கரத் தேரையுடைய சூரியதேவன்.

50 அதிரதன்புதல்வன்விச்சுவகன், அவன்தநயன் கட்டு வாங்கன் என்பர். ஆடகம் மதில்—பொன்னாலாகிய மதில், மதியகடு—சந்திரன்உடல், உரிஞ்சும்—உராயும் (தடவும்) உரவோன்—வலியுடையவன்.

51 கவின்—அழகு, சுரும்புவீழ்—வண்டுகள்விழையும், கட்டுவாங்கன் புதல்வன் தீர்க்கவாகுவாம், அவன்சேய் இரகு என்பவன், புரந்தரன்—இந்திரன், பொருந்தலர்—பகைஞர், இரிந்து—ஓடி (சிதறி) அமர்க்கடந்த—போரில்வெற்றிகண்ட

52 வேலுழவன்—வேற்படைவீரன், தழும்பு — வடு, இரகுவின்புதல்வன் சிவபெருமான் அருளாற்றோன்றிய தயரதச்சக்கரவர்த்தியாம், வெண்மை—புகழ் (வெளியநிறம்) தீற்றும்—பூசும், முனைவன்-முதல்வன், முக்கட் புனிதன் மூன்றுகண்களையுடைய தூயோனாகிய சிவபெருமான்.

53 அத்தயரதன் பன்னாட்புத்திரப்பேறின்றி புத்திரகாமேட்டி யென்னும் யாகம்செய்து இராமன் என்னும் எழிலுடைக் குமரனைப் பெற்றனன். மடிய—அழிவெய்த, தீங்கற —உலகத்துன்பமெலாநீங்க, மாட்டி-மாள்வித்து, பூங்கடுக்கை வேணியன்-கொன்றைப்பூமாலைதாங்கிய சடையையுடையசிவ பெருமான், பருவம்—ஆண்டு, உலகுகாத்தான்—உலகினைப் புரந்தான்.

20-வது அத்தியாயம் முற்றிற்று. ஆகச்செய்யுள் (754)

## 21-வது இராமன் அவதரித்தது.

1 வெண்மதிக்கண்ணியிறைவன்—சந்திரசேகரன், சரிதை—சரித்திரம், (வரலாறு) மன்ற—நன்றாக, உரைத்தி—உரைப்பாய், குரிசில்-இந்திரன், குணில்-குறுந்தடி, விளவின் கனி—விளாம்பழம், கழறும்—கூறியருளுவன்,

பூங்குழலி-பூக்களைக்கூந்தலிலேயுடைய பார்வதிப்பிராட்டியார், விளரி—ஒருவகைப்பண், ஆற்றலம்—பொறுக்ககில்லோம், சதுர்முகத்தோன் — நான்குமுகங்களையுடைய பிரமதேவன், கரா—முதலை, கதிர்நேமி — ஒளியினையுடையசக்ராயுதம்.

3 கூறு—பிரிவு, ஞாலமீது—பூமியின்கண், உதிப்ப—தோன்ற, கான்—காடு, வெற்பு—மலை, எண்கு-கரடி, பணித்தல்செய்தான்—கட்டளையிட்டான்.

4 பண்ணவர்—தேவர், ஓட்டி—துரத்தி, அயோத்திவேந்தன்—தயரதன், புலம்பொடும்—தனிமையோடும், இருந்தான்—வருந்தியிருந்தான்.

5 வெளிறு — அறியாமை, அகன்றகேள்வி — விரிந்தகேள்விஞானம், சுமந்திரன்—தயரதன்மந்திரி, துளிமுகில்—துளித்தலையுடையமேகங்கள், வறப்ப — வறண்டுபோக, உரோமபாதன் என்பவன் ஓரரசன், கலைக்கோட்டுஅண்ணல்—கலைகளைக்கொம்பாக முளைக்கப்பெற்ற முனிவன்.

6 அறைதலும்—கூறலும், அந்நல்லார்—அழகிய பெண்கள், ஏவ—கட்டளையிட, போகி—சென்று, பூத்த—தோன்றின, செறிதவம்—மிக்கதவம், மயக்கம்—இன்னதென்று தெரியா நிலைமை, உய்ப்ப—செலுத்த, இரும்புயல்-பெரிய மேகம்.

7 வேந்தர்கோன்—உரோமபாதனாகிய அரசன், மெய்த்தவமுனிவன்—கலைக்கோட்டுமுனிவன், வேட்ப—விருப்பங்கொள, சாந்தை—உரோமபாதன்பெண், ஆங்கண்—அவ்விடம், ஈண்டு—இவ்விடம், நாந்தகவுழவ—விளி, வீரனே

8 இமைப்பினில்—இமைப் பொழுதினில், தனி நகர்—ஒப்பற்றநகர், கொணர—கொண்டு வந்து சேர்ப்ப, பரிமுகமுற்றி — அசுவமேதயாகம் முடிந்து, புத்திரகாமேட்டி—புத்திரர்களைவிரும்பிச் செய்யும் யாகம், மேதக—மேம்பட.

9 ஆற்றிய தழலில்—செய்தவேள்வியக்கினியில், அணங்கனார்க்கு — அணங்கினைப்போன்ற தன்மனைவியர் கட்கு, வீற்று வீற்றாக— தனித்தனியாக, வாலிகூற்று— இராமன், குணப் பெருங்கடல்—பரதன், மாற்றிலா இருவர்— இலக்குவனும் சத்துருக்கனும், வயிறுவாய்த்தாள்—பெற் றாள்

10 பழிப்பறு நாமம்—பாவங்களைப் போக்கும் திருப் பெயர், தராதலம்—பூமி, சவுளம்—குடுமி வைத்தல். விராவு நற்கருமம்—கலந்த நல்லசெயல்கள், விழுமிதின்—சிறப் புடன்.

11 நறைகமழ்—வாசனை வீசும், நம்பியை—இராமனை, பிறை—வளர்பிறைச் சந்திரன், கவுசிகன்—விசுவாமித்திரன், பெட்பு—விருப்பம், போதந்து—வந்து, ஏத்தி—துதித்து, இருக்குக என என்பது இருக்கெனத் தொகுத்தல் ஆயிற்று.

12 அரக்கர்—இராட்சதர். தீவினை—கொடுமை, புரப்ப தற்கு—பாதுகாத்தற்கு. உற்றேன்—வந்தடைந்தேன்—இரத் தலும்—யாசித்தலும், உள்ளமாழ்கி—மனமயங்கி, முனி— விசுவாமித்திரன், வருதி—வருவாய்.

13 என்ன—என்று கூற, யார்க்கும்—எத்திறத்தாருக் கும், பன்னரிய—கூறமுடியாத, பழமறைக்கிழவன்—கௌசி கன், எயிறு—பல், கோளரி—சிங்கம், வழங்கும்—சஞ்சரிக் கும், விஞ்சை—வித்தை, மறை—மந்திரம், அருளினான்—உப தேசஞ் செய்தான்,

14 செடிபடுகான்—சிள் வீடு (ஒருவகை வண்டு) கறங் கும் காடு, விடலை—இராமபிரான், விமலன்—மலமற்றவனா கிய பரமசிவன், வில்வேள்—மன்மதன், ஒடிவறும்—இடை முரியும், அங்கம்—உடலம்,

15 ஏல்வை—சமயம், குன்றென—மலைபோல, மீன்

திகழ்—மின்னல்போல விளங்குகின்ற, பொன்றுதல்செய்த—சாவுமாறுசெய்த, பாவம்போக்கிய—பாவத்தைப் போமாறு செய்த, தலங்கள்—நகரங்கள்.

16 சூர்வளி—அஞ்சத்தகும் காற்று, துணைவு—விரைவு, வேதன்—பிரமன், வார்இற—கச்சு இற்றுப்போக, விங்கு—பருத்த, இனிது—இன்பம் (உற).

17 பணை—மூங்கில், தாடகை—அரக்கி, ஆடல்—வெற்றி. மாரீசன் சுவாகு இருவரும் சுந்தன் மைந்தன் ஆவர். இன்னுயிர் தொலைந்தான்—இறந்துபட்டான்.

18 தமிழ்முனி—அகத்திய முனிவன், பீடுறுதவம்—பெருமையுற்ற நோன்பு, சீறி—கோபித்து, பிறையெயிறு—பிறைபோல்வளைந்தபல், வேழம்—யானை, நிசாசரி—இரவில் உலாவுபவள், வனம்—காடு.

19 அணங்கு என—பெண்ணென்று, எண்ணல்—கருதாதே, தீங்குறும்—துன்பம் வந்தடையும், சிறுவி—மகள், மகவான்—இந்திரன், வெள்ளி—சுக்கிரன், பசுந்துழாய் முகுந்தன்—திருமால், செகுத்தி—கொல்லுவாய்.

20 அத்தலை—அவ்விடம், செறுநர்—பகைஞர், ஆவி—உயிர், எஃகம்—வேல், உரறி—கனைத்து, உளுக்க—அசைய, ஆர்த்து—ஆரவாரித்து, தத்துதல்—தாவல், மன்ஓ—அசைநிலைகள்.

21 கோறி—கொல்வாய், ஐயன்—இராமபிரான், பகழி—பாணம், மாய்த்து—மாயும்படிச்செய்து, நல்கி—கொடுத்து, வெம்கணை—கொடிய அம்புகள், உபசந்தானம்—தொடுத்துவிடல், புரிதல்—செய்தல்.

22 அருநெறி—செலற்கரியவழி, பவ்வம்—கடல், ஓர்பதம்—ஓரடி, பொதிந்தோன்—வாமனன், இவர் தங்கிய இடம் சித்தாச்சிரமமாம்.

23 ஏகி—சென்று, மகம்—வேள்வி, இயம்பலோடும்—சொல்லவும், போய—சென்று முற்றிய, வேள்வியாற்றும் பொழுது மாரீசனும் சுவாகுவும் வந்து சண்டை செய்தனர்.

24 எரிவாயம்பு — அக்கினியைக்கக்கும் வாயினையுடைய அம்பு, கூற்றினுக்கு—இயமனுக்கு, புலவுவேலான்—இராகவன், காற்றின்வெம்பகழி—வாயுவாஸ்திரம்.

25 குமரர் — இராமஇலக்குமணர், பாவடி—பரந்த அடிகள், பனைக்கை —பனைமரம் போன்ற துதிக்கை, யாவுங் கடந்து—அனைத்தையுந் தாண்டி.

26 அவ்வியம் அவித்த—அழுக்காறு முதலியவற்றைக் கெடுத்த, அருந்தவன்—கௌசிகன், தெவ்வரூன்—பகைவர் மாமிசம், மவ்வல்—முல்லை, வேட்டான் —மணந்தான்

27 குசனென்பவனுக்கு நான்கு புதல்வர்களாம், அவருள் மூத்த புதல்வனாகிய குசநாபன் என்னும் அரசன் ஆட்சி புரியும்நகர் மகோதயபுரியாகும், கோலி—வளைத்து, திருவின் —இலக்குமி கடாட்சம் பொருந்த.

23 குசாம்பன் நகரம் கௌசாம்பியாம். இந் நகரை விதிமுறை தவிராது அரசாட்சி புரிந்தான். தூர்த்தசன் என்னும் பெரிய மன்னன் தருமாரணியம் எனவொரு நகரம் சமைத்தான். வசுவென்பவனும் வசுவெனும் பெயர் பெற்ற நாடுங் கண்டான்.

29 இத்தலம்—இந்த நகரம், மகதேயம் என்பது மொன்று, துகிரும் —பவளமும், முருடு—கட்டை, தரங்கம் —அலை, மாநதி யென்பது ஒன்றும் அங்கு ஓடுகின்றதாம்.

30 கன்னல்—கருப்பஞ் சாறு, குசநாபன் மனைவி கிருதாசி, உள்களிப்பு—மனமகிழ்ச்சி, இவர்கட்கு நூறு பெண்கள் புதல்விமாராய்த் தோன்றி மலர் பறித்தனர் என்ப.

31 காற்று இறை—வாயு பகவான், அவரை—அம் மகளிரை, உழந்து—வருந்தி, ஊற்றுறுமின்பம்—பரிச நலம், யாழோர் கூட்டம்—கந்தருவர் புணர்ச்சி, மறுத்த—தடுத்த, நுடங்குகூன்—அசையும் கூனல்.

32 மங்கையர்—நூற்றுவராகிய மகளிர்கள், ஓதலும்—கூறலும், எண்ணி—கருதி, சோமதை யென்பவள் அன்பொடும் சூளியினிடத்துப் பெற்ற பிரமதத்தன் என்பவனுக்கு சங்கொலிப்ப அவர்களைத் திருமணம் புணர்த்தினன்.

33 பாம்புவை—பாம்பின் படம், பாவையர்—பாவையினைப்போல்வராகிய நூற்றுவர், உடற்கூன்—உடலின்கண் ஏற்பட்டகூனல், ஏம்பல்—இன்பக்காவல், மகம்—வேள்வி, இனிதுஆற்றினான்—செவ்வனம் செய்தான்.

34 அருமகம்—செயற்கரும்யாகம், ஆங்கெய்தி—அவ்விடம்அடைந்து, ஒப்பில்புதல்வர்—உவமையில்லாத (தனக்கிணையற்ற மக்கள், பெறுதி—பெறுவாய் (அடைவாய்)வான நாடு—சுவர்க்கவுலகு, குசன்மகன்காதியாம்.

35 அவன்-காதியென்பவன், அணங்கு-பெண், செயிர்—குற்றம், வீங்குநீர்ஆறு—வெள்ளப்பெருக்கினையுடையநதி, மேவினள்—பொருந்தினாள், ஓதி—கூறிவிட்டு, நெடுநதி—பெரியயாறு.

36 வள்ளல் — இராமபிரான், தேர்ந்த—தெளிவுற்ற, இமயவேந்தன்—இமயமலையாகியஅரசன், எள்ளரும்—இகழ்வில்லாத, பயந்தான்—பெற்றான்

37 ஓங்குஒளி—ஓங்குமாறுநிற்கச்செய்தபிரகாசம், இமயவில்—மேருவாகியவில், குழைய—நெகிழ, வாங்கும் ஈசன்-வளைத்த சிவபெருமான், கங்கைமாநதி, விண்ணிலும்பாதலத்திலும் மண்ணிலும் உலவலால் திரிபதகை எனவாயிற்று.

33 திங்கள் அம்கண்ணி—சந்திரனாகிய அழகிய முடியிலணியுமாலே, உலகமீன்ற மங்கை—உமாதேவியார், மருவல்—கூடல், ஒழிதி—நீக்குக, ஐயன்—சிவபெருமான், அங்கி-அக்கினிதேவன், தரித்தி—தாங்குவாய்.

39 தீய்த்தல்—மிகமிகச்சுடல், தரிக்கலாது-சுமக்கமுடியாது, மைந்துடைப்புவி—அனைத்தையும் பொறுக்கும் வலிமையுடைய பூமி, ஆற்ருது—பொறுக்கலாது, உய்த்தலும்-செலுத்தலும் அவ்வீரியத்தினை கங்கையானவள் சுமக்கலாற்ருது சரவணத்தில் (நாணல்.) பொருந்தவிடுத்தாள்.

40 உலகத்தையும் பிரமனையும் பெற்ற சிறியவயிற்றினையுடைய உமாதேவியார், கணிகை—பரத்தையர், ஞாலம் பலர்க்கும் பொதுவெனல் புலப்படுகின்றது, வைது—சாபம் கொடுத்து, பகர்ந்து—கூறி, நலனுறுகடவுளோர்—சுவர்க்க போகந்துய்க்கும்தேவர்.

41 தழல் உமிழ்வடிவேல்-அக்கினியைக் கக்கும் கூரிய வேலாயுதம், முருகவேள்—முருகப்பெருமான், அவுணரை-அசுரரை, இகலின்நூறி — வலிமையினுல் கொன்று, தருநிழல்—கற்பகத்தருவின் நிழலில், அமரர்வைக—தேவர்கள் தங்க. தானையங்காவல்பூண்டான் — தேவ சேனைகட்கதிபனாயினுன்.

42 வரன்முறை—வரலாறு, கேட்டி—கேட்பாய், தீங்கெறி பிருகு—தீயபாவச்செயல்களைப்போக்கிய பிருகுமுனிவரர், குமரன்—புதல்வன்.

43 சகரனின் இல்லக்கிழத்தியர் இருவரில் ஒருத்தி அறுபதினாயிரம் மக்களைப் பெற்றனள், மறுவற-குற்றநீங்க, இறை — மன்னவன், சமஞ்சதன், சிறுவர்களைத்தண்டித்ததனுல் அவனைக் காட்டிற்கனுப்பினுன் என்பதாம்.

44 ஆங்கு—அவ்விடம், சமஞ்சதன் அஞ்சுமான் என்பவனைப்பெற்ருன். வீங்குதோள் —பருத்த புயங்கள், பாங்

கினில்—நன்மையாக, வாம்புரவி வேள்வி—அசுவமேதயாகம், ஒன்றேழிநூறு—தொண்ணூற்றொன்பது.

45 விடுத்த—செலுத்தப்பட்ட, புணர்ப்பின்-உபாயத்தினுல், வெளவுறு-பற்றி, வாட்டம்-வருத்தம், ஈட்டுறுசாலை—செய்யும்ஆச்சிரமம்.

46 தள்ளரும்-நீக்கமுடியாத, எள்ளரும்—இகழ்வில்லாத, எங்கும்—எவ்விடத்தும், பள்ளநீர்வேலை—சமுத்திரம் தொட்டு—தோண்டி, பாதலத்துறை—பாதலஉலகினிடத்து, உறைதல்—தங்கியிருத்தல், கண்ணுற்றூர்—பார்த்தனர்.

47 தெள்ளிதின்—தெளிவாக, காண்டலும்—கண்டதும், சினவும்—கோபிக்கும், முனிமொழி—சாபமொழி, சாம்பர் (சாம்பல்) பொடி, வள்ளல்—சகரன், வரவு—வருகை, உள்ளம்நொந்து—மனம்நோவுற்று, செல்கென்று—போய்வருகவென்று.

48 அணைந்து—சேர்ந்து, மாதவன்—கபிலன், செஞ்சரண்-சேவடி, எஞ்சலில்-குறைவில்லாத, உஞ்சிடஉய்ந்திட—கடைத்தேற, உஞற்றினுன்—செய்தனன், அருந்தவம்—செயற்கரியநோன்பு.

49 ஆற்றிய—செய்த, இருந்தலர்—பகைஞர், திலீபன் என்பவன்அஞ்சுமான் புதல்வனுவன், விசும்பு—விண்ணுலகு மருந்து—தேவரமுது, கேள்வி—கேட்டலால்வருஞ்ஞானம்.

50 அன்னவன்—திலீபன், அளித்த-பெற்ற, பகீரதன்—அஞ்சுமான்பெயரன், பருவம்முப்பானுயிரம்—முப்பதினுயிரம்ஆண்டுகள், பன்னருமறையோன்—வேதங்களையுண்டு பண்ணியபிரமதேவன், விழைந்தது—விரும்பியது, உன்னல்—கருதல்.

51 மைந்தனும்—புதல்வனும், அளித்து—கொடுத்து, வானதி—கங்கை, எந்தை—சிவபெருமான், தரிக்குநர்-தாங்குபவர், நந்தல்—கேடு, நாமவேல்குரிசில்—அஞ்சத்தகும் வேற்படையுடைய பகீரதன், அளப்புஇல்நாள்—அநேககாலம்.

52 நீற்றுஒளிபழுத்தநெற்றிநிமலன்—அக்கினிநேத்திரமுடையநெற்றிக்கடவுள், எய்த— முன்னர்த் தோன்ற, அளித்தி—தாங்குவாய், பெரிதும்—மிகவும், தோற்றமின்றாக—மறையவும்.

53 கங்கையை —மறைப்புண்டகங்கையாற்றினை, கடவுள்—சிவபெருமான் ஓர் திவலை-ஒருதுளிநீர், தரளம்-முத்து சன்னு— சன்னுமுனிவர், சாலை—அருந்தவம்புரியும் ஆச்சிரமம், குடங்கை—உள்ளங்கை.

54 அரசன்வேண்ட—பகீரதன்பிரார்த்திக்க, செவியின் மீட்டும்—காதின்வழியாகமீளவும், கடந்த-வெற்றிகொண்ட, சில்லி—சக்கரம், புக்கதன்று—போய்ச்சேர்ந்தது.

55 வேந்தர்—சகரர்கள், படர்தலும்—சென்றுகங்கை நீர்பாயவும், யாரும்—அனைவரும், துறக்கத்தின்—சுவர்க்கலோகத்தின்கண், மாதவக்கிழமைபூண்டமன்னன்—ஒருவராலும் பல்லாண்டுகள்செய்யமுடியாதபெருந் தவஉரிமைமேற்கொண்டபகீரதன்.

56 துன்ற—வந்தடைய, வெம்சமம்—கொடியபோர், புரிந்து—செய்து, பொன்றலும்—சாதலும் (அழியவும்) பொன்றாமருந்து — சாவாமைக்கேதுவாகிய தேவாமிருதம், வேட்டு—விரும்பி, புணரி—பாற்கடல்.

57 மாயிருஞாலம்—மிகப் பெரிய பூமி, தாழி—மிடா (பானை)மதிதறியா-சந்திரனைத்தூணாக, வாசுகிநாணாக-வாசுகியென்னும்பாம்பினைக்கயிறாகவும்; கடற்புனல்—கடலின்கண்

உள்ளபால், பாய்விடை—பாய்ந்து செல்லும் காளை, பான் மதிக் கண்ணிப் பண்ணவன்—சந்திரசேகரன்.

58 செம்மேனி விமலன்—செவந்த திருமேனியனாகிய சிவபெருமான், செயிர்—குற்றம், பருவரல் துடைத்து — துன்பங்களைப்போக்கி, விடம் அருந்தினன்—ஆல கால மெனும் நஞ்சினை யுண்டான், மயில் இயல் பாகன்—உமா மகேசுவரன்.

59 மந்தரம்தாழ — மந்தர கிரியாகிய மத்தானது தாழ்ந்து போக, ஆமையுரு—கூர்மத்தின் வடிவு, வலியினூற் றூங்கி—வலிமையுடன் ஏற்றுச் சுமந்து, நாடகக் கூத்தியர்—ஆடல் மகளிர், தெள்ளமுது—தெளிந்த தேவாமிருதம்.

60 கொப்புளிக்கும் — வீசும், துவர்வாய் — பவழம் போலும் அதரம், சிலதியர்—தோழியர், அனந்தம்—முடிவின்மை, வளி—காற்று, புரவி—உச்சை சிரவசு என்றுங் குதிரை, கருங் கடல்—பெரிய பாற்கடல், பொலிவு—விளக்கம்.

61 வியன்சினை—பெரிய கிளைகள், தேனு—காமதேனு, நாற்கோட்டு வரை நிகர் அயிராவணம்—நான்கு தந்தங்களை யுடைய மலையினை யொத்த அயிராவத யானை, தௌவை—மூதேவி, உதித்தனள்—தோன்றினள்.

62 பூங் கதிர் —அழகியநிலாக்கதிர், திங்கள்—சந்திரன், சேயிதழ்—செவந்த இதழ்கள், வாங்கு நுண்ணுசுப்பு—வளைந்து அசையும் நுண்ணிய இடை, குயிற்குதலை—குயில்போலு மினியமொழி, திருமகள் — இலக்குமிபிராட்டியார்.

63 வாருணி நறவம்பிறந்தது — கடலில் கள்ளானது தோன்றியது, கவுத்துவ மணியையும் திருமகளாரையும் திருமாலுக் களித்தனர், ஏற்றார்—எதிர்த்தனர்.

64 விலக்கி—நீக்கி, மோகினி—கண்டாரை மயக்கும் பெண், சுரர்தமக்கு—தேவர்களுக்கு, அடல்கெழும் அவுணர்—வன்மையுடன் விளங்கும் அசுரர், ஒறுத்து—தண்டித்து, மகவான்—இந்திரன்.

65 வேரொடுமடிய—அடியோடுமழிய, அதிதி மைந்தர்—தேவர்கள், ஒறுப்ப — தொலைப்பதற்கு, சிறுவன்—பிள்ளை, மன்னி—நிலைபெற்று, புனிதம்—தூய்மை, அறைந்தான்—உபதேசித்தான்.

66 நோற்பவள்—தவஞ் செய்யும் திதியானவள், அலைகுழல்—அசையுங் கூந்தல், நோக்கி—பார்த்து, சேயை—கருவுற்ற பிள்ளையை, அணங்கு—திதியென்பவள், சிதைத்திடேல்—அழிக்காதே, இரந்திட—இரக்க (யாசிக்க) திரிவுற—திரிய.

67 ஆற்றுழி—செய்த இடம், பொருந்தலர் கடந்த—பகைவரை வென்ற, புரவலன்—அரசன், இக்குவாகு—இட்சுவாகு, விசாலனுடையது விசாலையாகும். மருமான்—வழிவந்தோன், புரவு (புரத்தல்) காவல்.

68 கோதறு சுமதி — குற்றமற்ற சுமதி யென்னுமன்னவன், ஆசை—திசை, ஐயனே—விசுவாமித்திரனே, ஏசு—குற்றம், இயற்றிய விருந்து—நடத்திய விருந்து, தம்பி—இலக்குவன், அணைந்தனன்—வந்து சேர்ந்தான்.

69 கூன்—வளைவு, அரம்பை—வாழை, கிழிதர—பிளப்ப, கான்—மணம், கண்கவர் சாலை—கண்களைப் பறிக்கும் அழகிய ஆச்சிரமம்.

70 ஏர்கனிந்து — அழகுமுதிர்ந்து, மருவுதல்—கலத்தல், கோதமன்—கௌதம முனிவர், பலம்—ஆற்றல், சேயிழை — அகலிகை, ஊண்—உணவு, அரூபி—உருவில்லாதவள்.

71 இச்சாபம்—இக்கோப மொழி, ஒழியும்நாள்—நீங்குங் காலம், கழற்றுகள்—பாத தூளி, கதுவின்—பற்றின், வலாரி—இந்திரன், திகழ்தர—விளங்க.

72 செம்மல்—இராமன், போதரு நெறி—வருகின்ற மார்க்கம், ஐயன்—இராமன், கோதமன் பன்னி—கௌதமன் பத்தினி (மனைவி), மாதுரு—பெண் வடிவு, ஆசி வழங்கி—ஆசிகள் கூறி, மகிழ்நர்—தலைவனாகிய கோதமன்.

73 வள்ளலும்இளையகோவும் — இராமனும் இலக்குவனும், ஊறும்—சுரக்கும், கள்ளயின்று—தேனினைப்பருகி, மந்தி—பெண்குரங்கு, கடுவன் — ஆண்குரங்கு

74 நிவந்த—உயர்ந்த, பரிதிப்புத்தேள்—சூரியதேவன், மறைமுனி — கவுசிகன், எய்தல்நோக்கி — வந்தடைதலைப் பார்த்து, தாட்டுணைவீழ்ந்து—இருதிருவடிகளிலும் வீழ்ந்து, பணிந்து—வணங்கி, இருக்கை—ஆசனம்.

75 அருகுஉறை — பக்கத்தில்தங்கின, ஆய்பிழித்தாமமார்பன் — அழகியதேன்றுளிதுளிக்கும் மலர்மாலையினையுடைய சனகன், போந்ததிருவினர்— தங்களுடன்வந்த செல்வர்கள், மதுகைகாண்பான்-வில்லின்வன்மையினை ஆயும்படி.

76 மற்றடந்தோளாய்என்றது இராமபிரானை, பொன்தளிர்பொருவுமேனி — பொன்னுலாய மாந்தளிரையொத்த உடலம், அகலிகையின் புதல்வன்சதானந்தனும்.

77 காதிசேய்-காதியென்பவனின் புதல்வனாயகவுசிகன் திகிரியொன்றுருட்டும் — ஏகசக்கராதிபத்தியம் செலுத்தும், புளினர்—வேடுவர், வேட்டம்—வேட்டையாடல்.

78 அருந்ததிகணவன்—வசிட்டமாமுனிவரர், முகமன்—உபசாரமொழி, விருந்து — புதியநல்லுணவு, அளித்தி—படைத்திடுவாய், தேனு-காமதேனு (பசு)மருந்தினும்-தேவாமிர்தத்தினும், திருந்துநற்றவம்— தானே திருந்தியநோன்பு.

79 மறுப்ப-தடுத்துச்சொல்ல, எதிர்ந்துபற்ற—எதிர்த்துப்பிடிக்க, துன்றிய—நெருங்கிய, யவனர்—ஒருவகைவீரர் தானைமாட்ட — சேனைகளைமாள்விக்க, வெஞ்சமத்தரசன்—காதிசேய், சென்றிட—இறந்துபட, முனிவரன்—வசிட்டன்.

80 வெருவ—அஞ்சுதலுற, கொடும் சிலை—கொடிய வில், ஏற்று—எதிர்த்து, அருமுனிவர்—வசிட்டர், ஆற்ருது — எதிர்க்கமுடியாது, இடைந்தனன் — பின்னிட்டனன், உய்ந்த—பிழைத்த. போற்றுக—புரப்பாயாக, புலனவித்து—புலன்களைக் கெடுத்து.

81 இமையவிற்குரிசில்—சிவபெருமான், விழைந்தமை—விரும்பியவை, வாளி—அப்பு, கமை—பொறுமை, வெங்கணைகள்—கொடிய அம்புகள், திமிரம்—இருள், தண்டம்—பிரமதண்டம், விழுங்கிற்று—உள்ளடக்கிற்று.

82 ஆங்கது கண்ட—அச்செயலைப் பார்த்த, திறல்—பராக்கிரமம். எள்ளி—இகழ்ந்து, முனிவரை—வசிட்ட முனிவரை, தென்புலம்—தென்திசை—தழலின் நாப்பண்—அக்கினியின் நடுவில், ஆயிரம பருவம்—ஆயிரம் வருடம், நோற்ருன்—தவம் புரிந்தனன்.

83 கமலப்புத்தேள்—பிரமதேவன், நொய்தின் வந்து—எளிமையாக எய்தி, மன்னன்—காதி மன்னன், போற்றலும்—துதிக்கலும், இராசமுனிவன்-அரச இருடி, காற்றினை நுகர்ந்து—வாயுவினைப்புசித்து, ஆற்றரும்-செயற்குஅரிய.

84 விழவு—விழா, மழைநிகர் தடக்கை—மேகம் போற் கொடுக்கும் பெரிய கை, திரிசங்கு—அயோத்தி நாட்டு மன்னவன், துறக்கம் — சுவர்க்கம் எச்சம் — வேள்வி, பண்ணுவித்திடுக—செய்வித்திடுக.

85 ஒல்லாது—இயலாது, புதல்வர் — வசிட்டர்தம் புத்திரர்கள், மறுத்தலும் —முடியாதென்றலும், மகம்....

வேள்வி, சீறி—கோபமுற்று, நிலை திரிந்து—ஒழுக்கங்கெட்டு, நீசன்—புலையன், உறைதி—தங்குவாய்

86 களைகண்—ஆதரவு, தலைமை—இறைமை, உற்ற—தானடைந்தசாபத்தன்மையை, கூற—மொழிய, தளரல்—தளர்வுஅடையாதே, உய்ப்பல்—செலுத்துவன், கூவ—அழைப்ப, வைதுகொன்றான்—சபித்துக்கொன்றனன்.

87 தழலிடை—அக்கினியின்கண், நறுநெய்பெய்து—நல்லநெய்யினைவார்த்து, விழைவொடும்—விருப்பமுடன், அவிசு—அவிர்ப்பாகம், வெகுட்சிகூர்ந்து—கோபமிகுந்து, வேந்தனை—திரிசங்குமன்னனை, எய்தல்—எய்தற்க, உம்பர்—தேவர்கள்.

88 சென்னிகீழாக—தலைகீழாக, நில்நில்—நிற்பாய் நிற்பாய், வானில்நிறுவி—ஆகாயத்தேநிறுத்தி, வாசவன்—இந்திரன், ஓர்உலகம்—ஒருசுவர்க்கலோகம், உடுக்கணங்கள் நட்சத்திரக்கணங்கள், சராசரம்—நிலையியற்பொருள் இயங்கியற்பொருள்.

89 படைத்தலும்—உண்டாக்கலும், விண்ணோர்அஞ்சி—தேவர்கள் பயந்து, வலத்தோய்—வன்மை யுடையோய், அமைத்தவை—தோற்றுவிக்கப்பட்டவை, உடு—நட்சத்திரம் பாங்கர்—பக்கம், வதிக—தங்குக.

90 கடவுளர்—தேவர்கள், துனைவின்—விரைவின், குடதிசை—மேலைத்திசை, மகவான்வெளவ—இந்திரன்கவர, வடுவிலா-குற்றமற்ற, சேயை-பிள்ளையை, வான்பொருள்—பெரும்பொருள், கொடுத்துக்கொண்டார்—விலைகொடுத்துப் பெற்றனர்.

91 புருடமேதம்—புருடனைக்கொன்று செய்யும்யாகம், விஞ்சை—வித்தை, நண்ண—வந்தடைய, பற்றறுமுனி—ஒருவகைப்பற்றுமில்லாத விசுவாமித்திரன், பாலகன்-குழந்தைப் பருவமுடையவன். ஏ-அசைநிலை.

92 அகம்குழையும் — மனம் இளகும், இனிதுகூறி— இனியவுரைகளையியம்பி, பழுது—குற்றம், இந்தவிடலையை —இந்தச்சிறுவனை, காமின்—காப்பாற்றுங்கள், தொழுதனர் (முற்றெச்சம்) தொழுது, ஆகெனா—ஆகுகஎன்று.

93 புதல்வன்உய்ய—புதல்வன்பிழைப்ப, செவியினூடு —செவியினிடத்து, விடுப்ப—அனுப்ப, யூபக்கந்து—வேள் வித்தூண் (கட்டுத்தறி) ஓர்ந்தான்—உணர்ந்தான், ஆர்ப்ப— கட்டுவிக்க, எந்திரத்தேர்—மாயத்தேர்.

94 அத்தலை—அவ்விடம், அடைந்தோம்—பெற்றனம், வித்தகம் — ஆற்றல், விடுக்கென—விடுவிப்பீர்களாகஎன்று, பத்தியை—அன்புடைமை, பொய்த்தலைப்புகாத—பொய்யி னிடத்துச்செல்லாத, நெஞ்சப்புண்ணியன்-விசுவாமித்திரன்.

95 காதிசேய் — கவுசிகமுனிவன், மேதக—மேம்பட, மெய்த்தவவிருடி — உண்மையானதவமுனிவர், செற்று— வாட்டி, செய்தவம்—நற்றவம்.

96 முரியும் — இற்றுப்போம், ஒழுகும்— சொரியும், அறவிங்கி — நன்றாகப்பூரித்து, பொறை — பாரம் (சுமை) நூபுரம் —சிலம்பணி, அரற்றின—ஒலிப்ப, வெம்கூற்றம்— கொடியஇயமன், பெட்பு—விருப்பம், அவ்வழி—அவ்விடம்.

97 விளிம்பு—ஓரம், ஒதுங்கி—நடந்து, ஒல்க—துவள, கௌசிகன், தவம்துறந்து—தவத்தினைவிட்டு, அவளோடும் அம்மேனகையொடும், அறிவரிய— அறியமுடியாத, அமர ரின்—தேவர்களினும்.

98 மாயையின் கோட்பால் — மாயையின் கட்டுப்பாட் டால், மருவினன்—கூடினன், இகழா—இகழ்ந்து, ஒல்லையின் விடுத்து—விரைவினில்விலக்கி, பொறியவித்து—ஐம்பொறி களையும் புலன்வழிச் செல்லாவாறு செய்து. மாமுனி— பெரியவிருடி.

99 மூச்சுஅவித்து—மூச்சும்விடாதவாறு, அரம்பையை—அரம்பை மாதரை, பாறையாகென்ன — கல்லாய்மடிய வென்ன, கீழ்த்திசை—கிழக்குத்திக்கிடத்து.

100 தருதி —கொடுப்பாய், அமரர்கோன்—தேவேந்திரன், தயா— (தயை) அன்பு, புருவமத்தி—இலாடத்தானம், அவித்து—கெடுத்து. திரமுறும்— நிலைபெறும்.

101 பேசருந்தவ—ம்சொல்லற்கரியதவம், உச்சி—பிரமரந்திரம் (தலை) புவனம்—உலகம், புகையாய் — தூமமாய், மண்டலும்—புகைந்துநெருங்கலும் மடவனமுகைக்குமீசன்—அன்னவாகனத்தலைவனாகிய பிரமதேவன். பிரமவிருடி—பிரமமுனிவன்.

102 அன்னமாமுனிவன் — அப்பெற்றியுற்றஒப்பிலா பிரமமுனிவன், சனகன்நன்மரபு—சனகனுடையநல்லவம்சம், பருதி—சூரியன், தரளம்—முத்து.

103 எழில்புதல்வர் — அழகியநன்மக்கள், வரைமகள்—பார்வதிதேவியார், கமலை—இலக்குமி, அரிதின்தந்தாள்—அருமையாகக்கொடுத்தனள், வல்லியோர்பாகன் — உமாபாகன், வரிசிலை—கட்டமைந்தவில், இறுத்தல் — ஒடித்தல்.

104 இலங்கும்—விளங்கும், தனிச்சிலை-ஒப்பற்றவில், சகட்டினில்—வண்டியில் முனிக்கிறை — விசுவாமித்திரன், கண்ணிற்றூண்ட—கண்சாடைசெய்ய, முகில்நிறம்-கரியமேகவண்ணம், பருதியின் இழிந்து—சூரியனைப்போலஇறங்கி,

105 அடுத்து — நெருங்கி, நாணிற் செறித்ததும் —நாணிற்பூட்டியதும். செம்பொற்குன்றம்-மகாமேரு, குழைத்ததும் இறுத்ததும்—வளைத்ததும் ஒடித்ததும். ஒன்றிடா இமையா — பொருந்திமூடாத, நாட்டம்—கண்கள், உணரகில்லார்—அறியமாட்டார்கள்.

106 முருகு—முருகப்பெருமான், மூரிவில்—வலியவில் உருகு— இளகுகின்ற, உவட்டெடுத்து — பெருக்கெடுத்து, கருணைகூர்—அருள்மிக்க, கடிமணம்—திருமணம், தருநிகர் —கற்பகத்தருப்போன்ற.

107 விடுத்தஓலை — அனுப்பியதிருமுகம், தூசு—பட்டாடை, தொண்டை கொவ்வைப்பழம், வண்டரற்றும்— வண்டுகள்ஒலிக்கும், முனிவர்சூழ— இருடிகள்சூழ்ந்துவர.

103 குடவளை— குடம்போலுஞ்சங்கு, குணில்—குறுந் தடி. கடலந்தானை—கடல்போன்றசேனை, சனகன்போந்து— சனகராசன்வந்து, தழல்சான்ருக — அக்கினி சாட்சியாக, இராமன் அவதாரபுருடனுகலின் துளவினுன் என்றுர்.

109 அரிக்கண் — செவ்வரிபரந்தகண்கள், ஊர்மிளை யென்றுமாதை-ஊர்மிளாதேவியை, இலக்குவற்குஅளித்து. குசத்துவசன் மக்களிருவரை பரதசத்துருக்கனருக்கு மணஞ் செய்துகொடுத்தான்.

110 மன்னர்கோன் — தசரதசக்கரவர்த்தி, தாற்றுச் செந்நெல் — கதிர்களையுடையசெஞ்சாலி, படப்பை—வயல். அகநகர்—உள்நகர், ஏகுமேல்வை — செல்லும்போது, பரசு ராமன்—மழுவினைத்தரித்தஇராமன். (சமதக்கினிபுதல்வன்)

111 பாற்றினம் — பருந்துக்கூட்டம், குலப்படையினேன் — சிவபெருமான், ஆற்றல்—வலிமை, மூறுவல் கோட்டி — சிரித்து, இந்தவில் — இந்தஎன்னுடையவில், இமைப்பின்—இமைப்பொழுதில், கூற்றுறழ்பகழிக்கு—இயமனையொத்தஅம்புக்கு,

112 ஈட்டியதவம்—செய்ததவம், எய்துகொன்றிடுதி —செலுத்திக்கொல்லுக, பொன்னகர்—அமராவதிபட்டினம் மாற்றி—மாற்றுவித்து, அயோத்திசேர்ந்தான்—அயோத்தி மாநகர்வந்தெய்தினன்.

இராமனவதரித்தது முற்றிற்று. ஆகச்செய்யுள் 867

## 22-வது இராமன் வனம்புகுந்தது.

1 நாகு—இளமை, மிடறு—கழுத்து, விளிம்பு—கரை யோரம், இளவல்—தம்பி (சத்துருக்கனன்) ஓகை—(உவகை) களிப்பு, வைவேல்அரசன்—கூரியவேலையுடைய தசரதன்.

2 ஏக்கறவுஎய்த — ஆசையாற்றாழ்வுஅடைய, அளித் தேம்—புரந்தேம், அற்பு—அன்பு, எற்பு—எலும்பு, அகனி லம்—அகன்றபெரியபூமி,

3 கடகம்—வாகுவலயம், விளம்பி—இனிதுஎடுத்துக் கூறி, புனைக—அலங்கரிக்க, இயம்பும்ஒலி—ஒலிக்கும்ஓசை பாந்தள்—(படம்) பாம்பு, பதைத்து—திகைத்து.

4 மாற்றவள்—சககளத்திரி, ஏற்றுண—பிச்சையுணவு, இழிவுறாது—தாழ்வுபடாது, சூட்டிடுதல்—சூடல் (தரித்தல்) விலக்கு—தடுப்பு, உழை-இடம், முனிவு-வெறுப்பு, (கோபம்

5 தருவல்என்ற — கொடுப்பேன்என்றுகூறின, உதவு கொடுக்க, என்கினும் — என்றுகேட்டாலும், அளிப்பன்— கொடுப்பேன், புகாது—செல்லாது, அரசர்கோன் — தசரத சக்கரவர்த்தி, தருகென்ன—அழைத்துவருகஎன்றுரைப்ப

7 மைம்முகில்—நீருண்டகரியமேகம், குவித்து—இரு கைகளையுங்கூப்பி, இவர்ந்து—ஏறி, தெம்முனைக்கடந்த — பகையோரிடத்துச்சென்று வென்றியுற்ற, காளை — காளை போல்வான் (இராமபிரான்) அயர்ந்து—மனந்தளர்ந்து, சோர்ந்தனன்—உடல்தளர்வுற்றான்.

8 காழ்படுமனத்துகைகேசி —வயிரம்பொருந்திய மன முடையகைகேசியானவள், வழங்கி—கொடுத்து, வழங்கும் —உலாவித்திரியும், உந்தை—உமதுபிதா, பணித்தல்-ஆணை யிடல், விலக்கலன்—மறுக்கமாட்டேன், தொழுது-வணங்கி.

9 கோயிலுள்—அரண்மனையில், கொற்றவன்-தந்தையாகியதயரதன், பணி—கட்டளை, சுமத்திரை—சிறியதாயார், மன்றுழை—அரசனிடத்து, பூசல்—ஒலி, இளையவன்—இலக்குவன், பின்தொடர—பின்பற்றிநடந்துவர.

10 வருத்தம் நோக்கி— நெஞ்சழிந்து ஆவிசோர்ந்த துன்பத்லைதக்கண்டு, மாழ்கி—மயங்கி, கலுழ்ந்து—அழுது, உயிருடைஎவற்றின்பாடை —அனைத்துயிர்களுடையமொழி, ஒழுகுநாள்—அரசுரிமைநடாத்துநாள் (காலம்)

11 மலரணை — பூம்படுக்கை, கடக்கரிது — தாண்டிப் போதல்கூடாது, அயல்மேவும் — பக்கமாகப்பொருந்தும், வெகுண்டுரைத்திடல்— கோபமுடன்மொழிதல், நகைப்பு— சிரிப்பு, கோற்றொடி—சங்கவளையினையுடையஅரசி.

12 இதுநுவலின்—இதனைச்சொல்லின், ஆவிமுடியும் உயிர்போய்விடும், முனிதல்—வெறுத்தல், கோஅடுவேலான் —அரசர்களைக் கொன்றுகுவிக்கும் வேற்படையுடைய கேகய மன்னன்.

13 வயிறு அலைத்து — வயிற்றில்அடித்துக் கொண்டு, ஓதை-சத்தம், ஆர்கலி-கடல், கடாக்களிறு-மதமுடையஆண் யானை, பணிதலைக்கொண்டு— கட்டளையினைச்சிரமேற்றுங்கி, கொடியொடும்இளையகோவொடும்—சீதையுடனும் இலக்குவனுடனும்.

14 கொடிஞ்சி—தேர்த்தட்டு, கோனகர்—அந்நகரிலுள்ளவர்கள், திரை—அலைகள், கொழிக்கும்— ஒதுக்கும், சார்ந்து — அடைந்து, அறிவுறுவண்ணம் — தெரியாதபடி, துன்றுஇருளிடை—நெருங்கியஇருளையுடையஇரவின்கண்.

15 அலத்தகம் — செம்பஞ்சுக்குழம்பு, காவின் — பொழிலின்கண், செல்வுழி—போகின்றஇடத்து, தோழமை

எய்தி—நட்புப்பூண்டு, கங்கையாறகன்று — கங்கைநதியைக் கடந்து, ஒருவி—நீங்கி, தடம்புயத்தண்ணல்—இராமன்.

16 கேட்டி—கேட்பாய், ஏதம்—குற்றம். வேட்டம்—வேட்டை, கங்குலின்—இரவின்கண், மகவை—பிள்ளையை, வீழ்த்திடலும்—விழுமாறுசெய்யவும், காதல்—அன்பு, கைக்கொடுத்து—கரகநீரையும் மகவையுந்தந்து

17 எய்தியது—அடைந்தது, மொழியாம்அத்திரம்—சொல்லாகிய பாணம், மார்பகம்—மார்பிடம் (நெஞ்சகம்) அழுங்கி—வருந்தி, கவிகை—குடை, முடை—புலால்நாற்றம். அகன்று—நீங்கி,

19 மைந்தர்—பரதனும் சத்துருக்கனும், உற்றவை—நிகழ்ந்தவை, உருமுவீழ்அரவென — இடியேறுண்டபாம்பு போல, பெற்ற—ஈன்ற, முனிந்து — கோபித்துக்கொண்டு, பேதுறல்—மயங்கல், தெருட்ட—தெளிவிப்ப

20 உந்தை—உமதுதந்தை, மறுத்தனன்ஆகி-தடுத்துவிட்டு, கயலக்கண்ணன்— செந்தாமரைக்கண்ணனுகிய இராமன், விண்ணடைந்தமை—சுவர்க்கம்புக்கதை, உறுகடன்—செய்யவேண்டியநீர்க்கடன்.

21 புரவு—காத்தல், போற்றல்—அடிபணிந்து துதித்தல், அளித்தி—காப்பாற்றுவாய், பாதுகை-திருவடி, மவுலி—முடி, நந்தியம்பதி—நந்தியென்னும்நகர்,

22 திசைமுகன்—நான்முகனுகியபிரமன், கேண்மை—கேளாந்தன்மை (நட்பு) அனுசூயை—அத்திரிமுனிவன்மனைவியார், சானகிக்கு—சீதாபிராட்டியாருக்கு, தத்துநீர்—தாவிவிழும்நீர்.

23 கழை—மூங்கில், உகுத்த—சொரிந்த, கவையடி—பிளப்புண்டஅடிகள், பெயர்ப்ப— நடப்ப, உழையினம்—

மான்கணம், சிற்றத்தழல்— கோபாக்கினி, ஆயிழையை — சீதையை, வெளவ—பற்ற.

24 அவன்— விராதன்என்பவன், பொங்குசீர்—மிக்க சிறப்பு, போக்கினை—தொலைத்தாய், மீளாத்துங்கநன்முத்தி —பேரின்பமாகியமோட்சம்.

25 மெய்யின்போர்த்து—உடம்பினைமூடி (மறைத்து) நிசாசரர்—வேடர் (அரக்கர்) கோறல்—கொலைபுரிதல், வசி முதல்படை—வாள்முதலிய ஆயுதங்கள்.

26 ஓர்காதை—ஒருவரலாறு, பொன்னகர்க்கிறைவன் சுவர்க்கலோகத்திற்கரசனாகிய இந்திரன், முன்னி—கருதி, அழிக்க—கேடுண்டாக்க.

27 வயிரவாள்—வச்சிரமாகியவாளாயுதம், குறைத்து வெட்டி, ஒறுத்து—கொன்று (தண்டித்து) தீநரகு-கொடிய நிரயம், பருவரல்—துன்பம்.

28 வரிவில்—கட்டமைந்தவில், ஐயன்—இராமபிரான் மாதவர் — பெரியதவமாகியநோன்பினர், பாதகர்—பாதகச் செயல்புரிபவர்.

29 தரிப்பது— வெட்டிவீழ்த்துவது, அறமது—அறச் செயல், மன்றல்—மணம், தென்றமிழ்முனிவன் — அகத்திய முனிவன், அணித்து—அண்மையிலுள்ளது.

30 தாமரைமடு—தாமரைபடர்ந்தகுளம், முழவுஇயம்ப —மத்தளவாத்தியஒலிஒலிப்ப, ஏல்வை—காலம், முனிவன் —வெறுத்தவன்.

31 ஓத்து—வேதங்கள், ஒழிப்ப—போக்க, தெய்வக் கூத்தியர்—தேவநடனமகளிர், ஏவ — கட்டளையிட்டனுப்ப, விழைந்து—விரும்பி, வாவிநீத்தம்—தடாகநீர்.

32 அனுக்கும்-பின்னிடச்செய்யும், நலன்-சுகம் (இன்பம்) சதி—கூத்து, அலையியம்—அலையின்ஒலி, இராகவன்—இரகுகுலத்திற்ருேன்றினவன்.

33 துணைவன்—உடன்பிறந்தவன், வில்வலனும்வாதாபியும் அண்ணனும்தம்பியுமாவர், தகர் — ஆட்டுக்கிடாய், ஊன்புழுக்கல்-ஊனினையவித்தஉணவு, புல்லியமறையோர்—பொருந்தியஅந்தணர், போதுக—வருக, போழ்ந்து—பிளந்து.

34 குறுமுனி—குறுகியமுனிவனுகியஅகத்தியர், வெந்திறல்—கொடியவலிமை, தீயோன்—வில்வலன், தம்பி—வாதாபி, அகடு—வயிறு, அறுத்த—மீண்டுவாராதபடிசெமிக்கச்செய்த, மைந்து—வலிமை, சாலை—இருப்பிடம்.

35 இறைஞ்சலும்-வணங்குதலைச்செய்யவும், தவத்தின் மிக்கோன்—அகத்தியன், தூணி—அம்புக்கூடு, அமையுறழ்தோளி-மூங்கிலையொத்ததோள்களையுடையசீதை, பஞ்சவடி—ஐந்துஆலமரங்களையுடையஇடம், கடிது—விரைவு.

36 எருவை—கழுகு, அணுகல்—வந்துறல், செவ்வி—அழகு, செப்புக—கூறுக, வென்ற—வெற்றியுற்ற, தோழன்—நட்புரிமைபூண்டவன், கவ்வை-துயர், மரபின்செய்தி-வரலாற்றுச்செய்கை, கழறலுற்ருன்—சொல்லத்தொடங்கினுன்

37 ஆசறுதக்கன்—குற்றமற்றதட்சன், ஏசறும்எண்மர்—இழிவற்றஎட்டுபேர்கள், அதிதியென்பவள்—காசிபரைக்கூடிமுப்பத்துமுக்கோடி தேவர்களையும்பெற்றனள். ஆம்

38 தனுவின்புதல்வன் அயக்கிரீவன்ஆம், புனிதம்—தூய்மை, தந்தாள்—பெற்றனள், கனிமொழி — கனிவுற்றசொற்கள், சுகி—சுகமுடையவள்.

39 உவணம்—கருடப்புள், கூகை-கோட்டான், நேமிப்புள்—சக்கரவாகப்பறவை, சீர்த்தி—மிகுபுகழ், தேசு—ஒளி, சிறப்பு—பெருமை.

40 நசை—விருப்பம், மிருகம்—மான், ஈன்றனள்—பெறுதலைச்செய்தாள்.

41 மிருக மந்தையென்பவள் கரடியையும் சவரிகவரி ஆயமான்களையும் உயிர்த்தாள், (உயிர்த்தல்—பெறல்) நிகரில்—உவமையில்லாத, வரைக்குஇணை-மலைக்குஒப்பு, மந்தி—பெண்குரங்கு, அழல்வாய்—அக்கினிபோன்றசெவந்தவாய்

42 மாதங்கம்—யானை, திக்கயம்—திக்குயானை, பன்னகம்-பாம்பு, இனிதுஅளித்தாள்-இனிமையுறப்பெற்றனள்

43 முகத்தில்மறையவரும், மார்பில் மன்னவரும் துடையில்வணிகரும், காலில்வேளாளரும் பிறந்தனர், தருக்கள்—மரங்கள். விநதைஅருணன்கருடன் என்பவரையீன்றனள், துனைவு—விரைவு, துகள்—குற்றம்.

44 அருணன்புதல்வர் சடாயுவும், சம்பாதியும்ஆவர். எருவைவேந்து—கழுகரசன், அயல்வனம்—பக்கத்திலுள்ள காடு, விரிசிறை—விரிந்தஇறகுகள்.

45 சிலைத்தழும்பு—வில்வடு, திண்தோள்குன்றினை—திண்ணியதோள்களாகியமலையினை (இராமபிரானை) ஆசைகூர்ந்து—காதல்மிகுந்து, அரக்கி—இராட்சதப்பெண், உருவம்—வடிவு, மருவி—கூடி, ஆவி—உயிர்.

46 அசதியாடி-பொய்யாயினவற்றைச்செய்து, பாங்கு பக்குவம், இளையவன்—தம்பியாகிய இலக்குவன், வெய்யவள்—கொடியவளாகியசூர்ப்பநகை.

47 உருத்து—கோபித்து, தெவ்வடுகரனும்—பகைவரைக்கொல்லும்கரனும், கடல்தானை—கடல்போன்றசேனை எவ்வெலாத்திசை—நாற்றிசைகள்.

48 ஏற்றவர்—எதிர்த்தவர், ஈருள்—ஈரல், சிலைக்கல்வி—வில்வித்தை, ஊற்றிருந்து-பெருக்கெடுத்து, ஒல்லையெய்தி—விரைவிலடைந்து, குருதி—இரத்தம்.

49 கிளர்ந்து— அதிகரித்து, மாமன் — அம்மான், இருக்கை—வாழுமிடம், தீட்டரும்படிவம்—எழுதுதற்கரிய உருவம், மறுத்து—தடுத்து.

50 மரையுரு—மான்வடிவு, வாள்எயிறு—ஒள்ளியபற்கள், பொன்றல்செய்தார் — இறந்துபட்டனர், வெருவி—அஞ்சி, மேவினேன்—வந்தடைந்தேன்.

51 கத்துருவிநதைஎன்பவர்சகோதரிகள், மகவானுனை—மகவாகஆயினவனை, கருப்பு வெள்ளை யென்பன நிறத்தைக் குறித்ததாம், சூழ்ச்சி—தந்திரம், அன்னை—விநதை, அருஞ்சிறை—நீக்கற்கரியகாவற்கூடம்.

52 மேவிடுநெறி — பொருந்துறும்வழி, மேனி — உருவுடைஉடலம். ஆமை — உறுப்படக்கி யெனும்ஆமை. உகிர்—நகம், அள்ளி — பற்றியெடுத்துக்கொண்டு, பணை—கிளை, பழுமரம்—ஆலமரம், ஆஎன — ஆ ஆ என்றுவியப்ப.

53 நொய்திற்கவ்வி — எளிதாகப்பற்றி, சேறலும்—செல்லுதலும், ஆறறிமுனிவர் — நல்லாற்றினை (ஆறங்கங்களை) அறிந்தஇருடிகள், ஊறமுது—சுரக்கும்தேவாமிருதம். வன்சிறை—கடுங்காவல். தீர்த்தான்—போக்கினன்.

54 வழிந்த—உறைந்த, தீத்தலை—தீயின்கண், நீரேன்—நீக்கேன், சீறி—கோபித்து, விளம்புஞான்றும் —கூறிய பொழுதும், ஈங்குவந்து—இவ்விடம்வந்து.

55 இகல் — வலிமை, வெய்யோன் — இராமபிரான், மங்கை—சீதை, மயக்கிடாயேல் — மயங்குமாறுசெய்யாமல் போனால் கொய்வல்—அறுப்பல். துணுக்கம்—நடுக்கம், பொன்மான்உரு—பொன்போன்றமான்வடிவம்.

56 பிதிர்-சிறுதுகள். வௌவி-பற்றி, அற்பு—அன்பு கற்பினுக்கரசி— தெய்வக்கற்பினையுடையசீதாபிராட்டியார், தொடர்தலும்— பின்பற்றலும். உமிழும்—கக்கும், வெய்ய கணை—கொடியஅம்பு.

57 வீழ்தருபொழுதின்—கீழேசாயும்சமயத்தில், ஆழ்துயர் — ஆழ்ந்ததுன்பம், இளையகோ — இலக்குவன், எம்கோமான்—எமதுதலைவனாகியஇராமன். தாழ்இருந்தடக்கை ஐயன்—தாழ்ந்தபெரிய கைகளையுடைய இலக்குவன், கடிது—விரைவு.

58 அற்றம்—சமயம், மறைபறையும் — வேதங்களை யொலிக்கும், முக்கோற்பகவன்—சந்நியாசி, திருவனாள்-சீதாபிராட்டியார், வேள்வித்தீ-யாகாக்கினி, மருவரும்-மருவுதற்கரிய, வகுத்து-உண்டுபண்ணி, விடுத்தது-விடுக்கப்பட்டது.

59 சீதைஎன்று — உண்மையாகிய சீதாபிராட்டியார் எனக்கருதி, சில்லி—உருளை, போதலும்—செல்லலும், வெம்போர்புரிய-கொடியசண்டையினைச்செய்ய, மூதுஎயில்-பழைமையானமதில்கள், மாதினை—மாயாசீதையை,

60 செய்ய—செவந்த, உற்றவை-நிகழ்ந்தனவற்றினை, வாங்கிய—வளைத்த, ஏங்கி—இரங்கி, வெய்துயிர்த்து—வெப்பமுடன்மூச்சுவிட்டு, எங்கணுந்துருவி—எவ்விடத்துந்தேடி.

61 அறைகழல் — ஒலிக்கின்றவீரக்கழல், அமரர்கோமான்—இந்திரன், திகைத்து—திகைப்புற்று, மறிதலும்—இறந்துபடவும், மன் ஓ—அசைநிலைகள்.

62 நொச்சி—ஒருவகைமரம், விள்ளும்—மலரும் (விரியும்), முகிப்பேர்நச்சுஎயிறுஅரக்கி — அயோமுகியென்னும் பெயருடைய விடம்பொருந்திய பற்களையுடைய இராட்சசி.

63 மையல் — மயக்கம், வயிற்றினூடு — வயிற்றினிடத்து, கையரிக்கொண்டு-கையினால்வாரியெடுத்து, செகுப்ப—கொன்றிட, பணிந்து—வணங்கி, (சவுரியென்பவள் தவப்பெருமூதாட்டியாவள்.)

வணங்குமேனி—வாடியஉடலம், அடகு—கீரை, மூலம்—கிழங்கு, அண்ணல்—இராமனே! மதங்கவெற்பு—மதங்கமெனும்பெயரியமலை, திருந்தலர்—பகைவர், செகுத்தி—கொன்றிடுவாய், நன்முத்தி—பிறவாநெறி. (மோட்சம்)

65 கார்நிறவண்ணன் — கரிய நிறமுடைய இராமன், மணி— இரத்தினங்கள், பொய்யில்வாய்மை — மெய்ம்மையானமொழி, அளவளாய்—உரையாடி, போந்து—வந்து, செய்யதாமரைநாயகன்—சூரியன், மதலை—பிள்ளை.

66 தழல்சான்று-அக்கினிசாட்சி, பிணித்த-கட்டுண்ட, பெட்பு—விருப்பம், வணக்கும்—வளைக்கும், மார்புஉருவ—மார்பினைத்துளைத்துக்கொண்டுசெல்ல, பணித்தி-எய்துவாய் (செலுத்துவாய்) பங்கயம்—தாமரை.

67 வாலி — சுக்கிரீவன் துணைவன், உரைக்குவன் — உரைப்பேன், சீலம்—ஒழுக்கம், ஆலம்—விடம், காலன்—இயமன், கடும்சமர்—கொடியபோர்.

68 பாதலத்தணைந்து — பாதல வுலகினை யடைந்து, வீட்டி—போக்கி, உறுமையின்—அடையாமையினால் மனத்தெண்ணி—மனத்திலிநினைந்து.

69 அமைச்சர் — மந்திரிமார்கள், கோலம் — அழகு, கொடுந்தொழில்—கொடியசெய்கை, பிலம்—மலைத்துவாரம், பருவரல்—துன்பம், விளைத்தான்—உண்டுபண்ணினான்

70 மற்றொழிற்கு—போர்ச்செயலினுக்கு, தொலையா—தொலைத்து, எறிதலும்—வீசுதலும், மதங்கர்—மதங்கமுனிவர், வீழ்ந்தது—வந்துதங்கிற்று.

71 ஆங்கது-அச்செயல், கதங்கொடு—கோபத்துடன், இங்குறின்— இவ்விடம்அடையின், விதம்பட — வகையுற, தெறிக்கென — சிதறுண்டுபோகஎன, அதிர்ந்து—நடுங்கி, அமர்ந்தேன்—விரும்பித்தங்கினேன்.

72 என்புஇது—இதுஎலும்புக்குவியல், அந்தரத்து—ஆகாயத்திடத்து, இரவிசேய்—சுக்கிரீவன், மந்தரகிரி—மந்தரமலை, விரல்தலை—விரல்நுனி, உந்த—தள்ள, ஒல்லையேகியது—விரைந்துபோயிற்று.

73 காழ்கொண்டு — வயிரமுற்றி, உருவிட—துளைத்துக்கொண்டுபோக, ஆற்றல்—வலிமை, சிலைகுனித்து—வில்லினைவளைத்து, பாழி—பெரிய, பணித்தான்—எய்தினன்.

74 ஐயனது—இராமனது, வியந்து-மிகைபடநினைத்து அறைகூவ—அழைப்ப, இவன்—சுக்கிரீவன், தொலைத்தலும்—போக்கலும், மாழாந்து—மயங்கி, மீண்டு—திரும்பி.

75 வேறுகண்டிலன்—அடையாளந் தெரியப்பெற்றிலன், பிணையல்—மாலை, அமர்உடற்ற — சண்டைசெய்ய, சேறி—செல்வாய், ஏறு—இடபம்.

76 ஒன்னலர் — பகைவர், நெய்த்தோர்—உதிரம், உகைப்ப — செலுத்த. கூற்றும்அஞ்சுறும் — கூற்றுவனும் பயப்படும், உயிர்குடித்தது—உயிரைப்பருகிற்று.

77 பருதிவானவன்—சூரியதேவன், புரவுபூண்டிட—புரத்தலைமேற்கொள, மணிமுடி—இரத்தினகிரீடம், கருவிவான்—தொகுதியானமேகங்கள்.

78 மல்லல்—வளம் (மிகுதி) நன்மை—நன்றி, இளவல்— தம்பியாகிய இலக்குவன். அறங்கிடந்தொளிர்நெஞ்சினன்—அறச்செயல்கள் தங்கிவிளங்கும் மனமுடைய (இலக்குவன்.)

79 குணக்கு—கிழக்கு, உத்தரதிசை—வடக்குத்திக்கு, பனிமொழி—குளிர்ந்தவார்த்தை, ஒல்லையின்—விரைவினில், மீள்க—திரும்புக, விடுத்தான்—அனுப்பினன்.

80 அங்கதன்—வாலியின்குமாரன், சாம்பவன்—கரடி, அறையும்—கூறும், சூழ்வர—சுற்றிவர, சுடர்ஆழி—ஒளி பொருந்தியமோதிரம், மங்குல்—மேகம், மடவரற்கு—சீதா பிராட்டியாருக்கு, அளிக்குகஎன—கொடுப்பாயாக என்று.

81 கொடுங்கானமும்வரைகளும் — அணுகற்கரியகாடு களையும்மலைகளையும், நீந்தி—கடந்து, மருங்கு—பக்கம், இடர் —துன்பம், அவுணன்—இராக்கதன், அடல்விளைத்து—போர் செய்து, செகுத்தான்—கொன்றிட்டான்.

82 கங்குல்மேய்ந்து— இருளையொழித்து, கதிர்மணிக் குப்பை—ஒளிவிடும் இரத்தினக்குவியல், துங்கமாநகர்—உய ரியபெரியபட்டினம், தோகையை—மயில்போன்றவளாகிய நங்கையை.

83 இறும்பூதுற— ஆச்சரியமடைய, வணர்இருங்கூந் தல்—நெறிப்புடைய பெரியதலைமயிர், அண்டர்ஊர்—தேவர் நகராகிய அமராவதி பட்டினம், அரும்பவளம்விண்டு-அரிய பவழம்போன்றஉதடுகளையுடைய வாயைத்திறந்து.

84 மயன்—அசுரசிற்பி, வெயில்செய்பொன் — மாற் றற்ற ஒளிவிடும்பொன், விழுநகர்—சிறந்தபட்டணம், பனி மதி—குளிர்ந்த சந்திரன், குயிலை—பெண்ணினை.

85 அச்சணங்குவேல் — அஞ்சுதலுறச்செய்து வருத் தும்வேல், வானவற்கிறை-இந்திரன், செச்சை-ஒருவகைப்பூ ஏமை—ஏமையென்னும் பெயர்பூண்ட பெண், பச்சைமால் உந்திபூத்தவன்—பசியநிறமுடைய திருமாலின் உந்தியந்தாம ரையிலுதித்தவனாகிய பிரமன்.

86 செப்பு—சிமிழ், பணைத்து—பருத்து, என்வயின் அளித்து — என்னிடம்தந்து, காமர்—அழகு, வானுலகு— சுவர்க்கலோகம். கவிகள்-குரங்குகள், தூமவோதி(விளி)புகை போற்கரியகூந்தலையுடையவளே, செல்நெறி—போகும்வழி.

87 அஞ்சனப்புயல்—கரியமேகம்போன்ற நிறமுடைய இராமபிரான், தூதர்—ஒற்றர், செஞ்சவே — நன்ருகவே. புதைக்குகஎன— மூடுகஎன்று. அகன்று—நீங்கி, மஞ்சுகண் படும்-மேகங்கள்வந்துபடியுர், மயேந்திரவரை-மகேந்திரமலே

88 கோங்கம் — கோங்கிலவின்அரும்பு, கொம்பு—கொம்புபோல்பவள், கண்டிலம்—பார்த்தோமில்லே, ஏங்கு மாற்றம்—இரங்குமொழிகள், சம்பாதி—கழுகு.

89 எம்பிவீந்தமை— எனதுதம்பியாகியசடாயுஇறந்து பட்டமை, மனைக்கிழத்தி—மனைவியாகிய சீதாபிராட்டியார், அரக்கன்—இராவணன், விலக்க—தடுப்ப, தும்பைமோலி யான்—சிவபெருமான், துணித்தான்—வெட்டினுன்.

90 மானைநோக்கி-மான்போன்றகண்களை யுடையவள் பருதிசேய் — சூரியகுமாரனுகிய சுக்கிரீவன், தொலைத்து—கொன்று, ஏழைபோமிடம்—சீதைசென்றவிடம்.

91 எருவைவேந்து—சம்பாதியாகியகழுகரசன், உளம் கசிந்து—மனமிளகி, முன்னம்—முன்பு, கதிர்உலகு—சூரிய மண்டிலம், தயாவோடும்—அன்பொடும்.

92 சிறைகருகி—இறகுகள்கருகுதலையடைந்து, மையல்—மயக்கம், பையுள்—துன்பம், எவ்வுழி—எவ்விடம், படர்ந்தனன்—சென்றனன், இவ்வுழி—இவ்விடம், அமர்ந்தேன்—தங்கினேன்.

93 பயந்தருள்சுபாரிசன்—பெற்றசுபாரிசன்என்பவன், ஊன்—இறைச்சி, அளிப்பான் — கொடுப்பதற்கு, வான் படர்ந்து—ஆகாயத்திற்பறந்துசென்று, மேவுதலும்-அடைதலும், ஊன்படர்ந்தவேல்—இறைச்சிதங்கப்பெற்ற வேற்படை, ஓரணங்கு—ஒருபெண், கனன்று—கோபித்து.

94 பொருந்தவெளவலும்-நன்ருகப்பற்றிப்பிடித்தலும், புரந்தருள்க — காப்பாற்றுக, உய்ந்தனள் — பிழைத்தனள்,

செப்பல்—கூறல், பரிந்துகேட்டனன்-விரும்பிக்கேட்டேன், பார்வைக்குத்தோன்றினள்—கண்களுக்குப்புலப்பட்டனள்.

95 நிசாரர்—வேடர், மன்னரி—நிலைபெற்று, நின்சிறை உன்னுடையஇறகுகள், முளைத்திடும்—தோன்றிடும், பன்னி னுன்— கூறினேன், சிறகர்—இறகுகள், பண்டு—பழமை, நன்கிலரீன்—நன்ருக, துதித்தான்—தோத்திரம் புரிந்தான்.

96 ஓதி—மொழிந்து, வீந்த-இறந்துபட்ட, நீர் உகுத்து —நீர்க்கடனுக்காக நீரைச்சொரிந்து, கூர்தரும் — மி கு ம், இன்னுரைகழறி — இனியமொழிகளைமொழிந்து, ஏதம் — குற் றம், எருவைவேந்து—சம்பாதியென்னுமரயன்.

97 துன்றுவார்சிறை — நெருங்கியநீண்ட இறகுகள். ஏகலும்—செல்லலும், துவன்றி—நெருங்கி, பேருவகை— பெருமகிழ்ச்சி, மாருதி—காற்றின்மகன், (அநுமன்) கடக்குக —தாண்டுக, இவர்தல்—ஏறுதல். கோட்புலி—வலியபுலி.

98 அணவு—நெருங்கு, மகபதி—இந்திரன், நீருள்— கடலுள், மைந்நாகம்—மைந்நாகம் எனப்பெயரியபருவதம். என்னுழை—என்னிடம், தங்கியேகுக—இளைப்பாறிச்செல்க, தடவந்து—தடவி.

99 கலுழனில் — கருடனைப்போல, மாருதியை—அநு மனை, தடுப்ப—தடைப்படுத்த, போகு—சென்று, நிழல்— சாயை, பறித்து—பிடுங்கி, குதித்தான்—பாய்ந்தான்.

100 கன்னிமூதெயில்-அழிவற்றபழையமதில், மின்னு —மின்னல், கொடிறு—கன்னம், தாக்கி-அறைந்து, அங்கை யிற்கனி—உள்ளங்கைநெல்லிக்கனி.

101 வடிம்பு—ஓரப்பகுதி, மாசு—அழுக்கு, மருங்கு— பக்கல், வாண்முகம்—ஒளியுடையமுகம், நன்னுதல்—நல்ல நெற்றி, உணர்ந்தான்—நன்குதெளிந்தான்.

102 அன்னகாலை—அநுமன்பார்வையிட்ட போழ்து, மறுத்த—உடன்படாதுமறுத்தலைச்செய்த, மாட்சிமை—நற்குணச்செய்கையுடைமை, கங்குலின்—இரவின்கண், துயில்வுழி—உறங்குகையில், ஆழி—மோதிரம், வார்சிலைக்குரிசில்—இராமபிரான்.

103 தேங்கொள்—தேன்பொருந்திய, பொதுளும்—நிறையும் சோலைகள்யாவையும்—அசோகவனமுழுவதையும் சிதைப்ப—அழிப்ப, ஓங்கல்—மலை,

104 கயிலைமால்வரையெடுத்தோன் -கைலாயமலையினைப் பெயர்த்துத்தூக்கினவன் ஆகிய இராவணன், உயிர்குடித்து—உயிரினைப்பருகி, உடல்பிழிந்து—உடலைக்கசக்கி.

105 மீட்டும் — மீளவும், தொலைத்தலும் — அழித்தலும், எதிர்விடுப்ப—எதிராகச்செலுத்த, சேட்டிளங்களிறு—அழகியஇளையயானை, அழல்—அக்கினி.

106 மறம்—வலிமை, இராவணி—இந்திரசித்து, அமர்க்கு—சண்டைக்கு, விரிஞ்சன்வெம்படை — பிரமாத்திரம், வீக்கி—கட்டி, அயில்—வேல்.

107 முனிவுற்று—கோபித்து, கிளையோடும்—சுற்றத்தோடும், அறுப்பான்—களையும்படி, வெஞ்சினம்—சூளுறவு வில்லி — இராமபிரான், விடாய்எனில் — விடாமற்போவாயேல்என்றால், உடல்துணியா—உடலினைவெட்டி, பகழி—பாணம், வழங்கும்—அளிப்பான்.

108 கொன்று—கொலைசெய்து, கோறல்—கொலைபுரிதல், வென்றியின்று-வெற்றித்தன்மைஇல்லை, வெண்துகில்-வெள்ளியநிறமுடையஆடை, மன்ற — நன்றாக, வல்லை—விரைவு, விடுக்க—விடுவிப்பீர்களாக.

109 அன்னவாறு — அந்தவிதம், ஆரழல் — மிக்க நெருப்பு, கடிநகர்— காவல்கொண்டஇலங்காபுரி, மூட்டி— மூளும்படிச்செய்து, பணிந்து—வணங்கி, சூளாமணி—தலையிற்சூடும்அணி, கடல்தாய்-கடலினைத்தாண்டி, பெரியோன் —அநுமன்.

110 வாலிமைந்தன்-சிற்றரசனாகியஅங்கதன், மாதினை சீதையை, அகவும்-ஆடும், நீலமால்வரையனையநெடியவன்-இராமபிரான், சாலி—அருந்ததி, கற்பின்தையல்—கற்புத் தன்மைபூண்டொழுகும் சீதாபிராட்டியார்.

111 பரிவு—அன்பு, வேறுஇருந்து—தனியாகஇருந்து, முகிழ்ந்து—கூம்பி (குவிந்து) வழங்கிய—கொடுத்த, சுடர் மணி—சூளாமணி, கண்மணி — கண்ணிற் கருமணியாகிய பார்வை, குளிர்ப்ப—குளிர்ச்சியடைய.

112 ஒற்றைஆழியந் தடந்தேர்ஊர்பவன்—ஒருசக்கரத் தினையுடைய பெரியதேரினில் செல்பவனாகிய சூரியன், குறுகலர்—பகைஞர், எற்றுதெண்திரை— வீசுகின்றதெளிவுற்ற அலைகள், சுருட்டும்-மடங்கும், இறுத்தான்-வந்துதங்கினான்.

22-வது, அத்தியாயம் முற்றும். ஆக திருவிருத்தம் 970

## 23-வது, இராவண வதை யத்தியாயம்.

1 அள்ளல் — குழம்புபோலும்சேறு (முகத்தல்) அலவன்—ஆண்ஞெண்டு, ஆடும்—விளையாடும், கள்—தேன், தூர்க்கும்—நிறைக்கும், கடல்—தென்கடல், வள்ளல் — இராமபிரான், தானை—நால்வகைப்படைகள், இறுத்தல்— தங்கியிருத்தல், வல்அரக்கன்-வலியஅரக்கனாகியஇராவணன் துணைவர்—தம்பிமார்கள் அமைச்சர்களுமாம், மதிநூல்— நுண்மதியைத்தரும்நூல்கள், தேர்ந்தான் — ஆராய்ந்தான் புன்னை—புன்னைப்பூ (பொருளாகுபெயர்) அம் அசைநிலை.

2 அன்னகாலை — அந்தச்சமயத்தில், கன்னிக்கற்பு— அழிவில்லாத கற்புத்தன்மை. கமலத்தடங்கண்— செந்தாமரைமலர்போலும் பரந்தகண்கள், சானகி—சனகன் மகளாகியசீதாபிராட்டியார் (தத்திதாந்தநாமம்) இன்னே விடுதல்நெறி — இப்பொழுதே சிறையினின்றும் நீக்குதல் முறைமை, இலங்கைவேந்தன் — இலங்காதிபனாகிய இராவணன், முனிந்துரைப்ப—கோபித்துச் சிலசொற்களை நிந்தையாகப்பேச, இராமன்உழையின் மேவினான் — இராமனிடத்துப் போய்ச்சேர்ந்தான், அன்ன—சுட்டடியாகப்பிறந்த பெயரெச்சம், விபீடணன்-சத்துருக்களுக்குவிசேடமாகப்பயத்தையுண்டுபண்ணுகின்றவன், இராமன்—யாவர்உள்ளத்தையும் பற்றுமாறு செய்பவன்.

3 கல்லும்—அகலிகையாகிய கருங்கல்லும், மல்ஆர்— மல்போரில்பூரிக்கின்ற, மதிநூல்துறைபோம்-அறிவுநூலின் வழியிலே பழகிய, மாருதி—வாயுகுமாரனாகிய அநுமார். இலங்கை நகர்க்கிறைநீ—விபீடணனாகிய நீ இலங்காபுரிக்குத் தலைவனாகுவை, எல்லோன்-சூரியன், இருளதுருவும்-இருளை தொடர்கின்ற (ஓட்டுகின்ற) மாமவுலி — பெரியமகுடம், சூட்டினான்—தரிப்பித்தான்.

4 வருணன்பழிச்சி—வருணனைத்துதித்து, தருப்பசயனம்—தருப்பைப்புல்லாலாகிய படுக்கை, (புல்லாணி) புல்லணை எனவிக்காலத்துப் பெயர் வழங்குகின்றது, போதந்திலன்ஆக வாராதொழிய, வெகுண்டு—கோபித்து, வரி— கட்டப்பட்ட, ஏழ்புணரி—எழுகடல்கள், போதந்திலன்— இறந்தகாலஎதிர்மறை வினைமுற்று, புகைந்த — புகைந்தன, (முற்று)

5 கரைகொன்றுஇரங்கு — கரையைஅழித்து முழங்கு (கின்ற) வெருவி—அஞ்சி, காகுத்தன்-இராமபிரான், விரை

—மணம் (வாசனை) வேலை—கடல், செரு—போர் (யுத்தம்) செம்மல்நளன் — செம்மலாகியநளன், செம்மல்—பெருமையாற்சிறந்தவன், இறுத்தான்—தங்கினான், ஏக்கறவு—விரும்பிய பொருளைப் பெறுமையால்வருங்கவலை. நளன்—வானர வீரருள் ஒருவனாகுவன், இவன், தன்னால்இடப்பட்டஎப்பொருளும் நீரின்கண் மிதக்கும்படியான வரத்தினைச் சிவபெருமானிடத்திலே பெற்றுக்கொண்டவன் ஆதலின், இவனால் அணை கட்டப்பட்டது.

6 சுகசாரணர் — சுகசாரணர் என்னும்பெயர் பூண்ட ஒற்றர், கரியோன்—கருநிறமுடையஇராமபிரான், உய்ப்ப—கொண்டுவந்துவிட, ஒறுத்தல்—தண்டித்தல், கறுத்த —கோபித்த, விடுத்தி — விடுவிப்பாய், ஒற்றர்ஆவார் — பகை நண்பு நொதுமல் என்னும் இம்மூவகையோர் மாட்டும் வேற்றுமை தோன்றாமல் ஒன்றியிருந்து அங்கே நிகழ்வனவற்றை அறியவல்லவர், ஒன்றுதல் — ஒற்றுமைப்படுதல். கட்டுரைத்தல்—உறுதியாக மொழிதல்.

7 வாரிதி—கடல். (வாரிநிதியென்றது வாரிதியெனமரீஇயிற்று) கடைக்கண்சிவந்தோன்—இராமமூர்த்தி, நிருகுசினத்த—மாறுபட்டகோபத்தினையுடைய, வாள்அரக்கன்—வாளாயுதந்தாங்கியஇராவணன், கோபுரம்இவர—கோபுரத்தின் மேல்ஏற, செலவுஅகற்றும் — போதலைத்தடுக்கும், கடைக்கண் என்பது புறங்கடை என்பதுபோலப் பின் முன்னாக மாறிநின்ற ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடராகிய இலக்கணப்போலி:

8 வீடணன் — விபீடணன், வெள்ளிப் பொருப்பையெடுத்தபுயன்—திருக்கைலாச மலையை யெடுத்த புயங்களையுடைய இராவணன், போர்வள்ளல் - போர்புரியும் இராமபிரான், இரவிகாதலன்—சுக்கிரீவன், கள்ளக்கொடியஅரக்கன்-கபடத்தையுடைய கொடியோனாகிய இராவணன், செரு—போர், அடிதாழ்தல்—திருவடிகளில் வீழ்ந்துவணங்கல்.

9 விலங்கல்—மலை, இகல்—மாறுபாடு, அலங்கல்—மலர்மாலை. வாலதியில்பிணித்தோன் — வாலிலுற்கட்டினவன் ஆகிய வாலியென்பவன், அங்கதன்-சத்துருக்களுயுடைய அங்கத்தைச் சேதிப்பவன். ஐ. கொல்—அசைநிலைகள்.

10 இலங்கைநகர்எரித்தகவி—அநுமான், வீக்க-கட்ட, இழிவு — அவமானம், கன்றிக்கடிய — கோபித்து விலக்க. கானம்—காடு, அம்சாரியை, ஒலித்து—மறைந்து, பொன்றியதோ— இறந்துபாடுற்றதோ ? உய்ந்தது — பிழைத்தது, யாண்டு — ஏழாம்வேற்றுமைப்பொருள் உணர நின்ற இடைச்சொல், இழிவின்என்புழி — ஐந்தனுருபு ஏதுப் பொருளது,

11 பொற்பிற்கரசை — அழகிற்கரசியாகியசீதாபிராட்டியாரை, மறுத்து—தடுத்து. கோறீர்—கொல்லுங்கள், வந்தோர்ஆவி — வந்தவர்தம்உயிர்கள், அறமாய்த்து — முற்ற அழித்து, உழை—இடம், கல்பாடுஅழித்த — மலையின்பெருமையினைஅழித்த, அரக்கர் — விளி. (அரக்கர்களே!) கட்டுரைத்தான்—கூறினன்.

12 போத்து — விலங்கின் ஆண், ஏல்வை — சமயம் (பொழுது) கங்கைக்கிறைவன் — இராமமூர்த்தி (கங்கைநாடன் எனவும்அழைக்கப்பெறுவன்) துனைவு—விரைவு. கடல்தானை—சேனைசமுத்திரம், வெங்கண்—தறுகண், (அஞ்சாத்தன்மை) மங்குல்—மேகம், உயர்இஞ்சி—உயர்ந்தமதில் (வினைத்தொகை) அன்னஎன்பது அன என இடைக்குறை சிவபெருமானுடைய திருவருளினால் ஆகாய கங்கையைப் பூமிக்கண் கொணர்ந்த பகீரதன்றன் வழித்தோன்றலாகலின் இராமமூர்த்தியைக் கங்கைக்கிறைவன் என்றார்.

13 கவிவெள்ளம்—வானரவெள்ளம், புரிசைப் புறத்தின் இறுத்து — மதிலின்புறத்திலேதங்கி, திறல்மள்ளர் —

வலிமையையுடைய சேனுவீரர்கள், பொருவெம்சிலைக்கைப் பெரியோன்—இராமபிரான், ஏற்ருர்—எதிர்த்தனர்.

14 கம்புஆர்களிறு—கட்டுத்தறியில்கட்டப்பட்டயானை பிரசங்கன் — ஓர்வீரன் (இவன்அரக்கர்இனத்தவன்) ஒன்று வெற்பு—ஒருமலை, எறிந்து—வீசி, மாருதி — மருத்துவின் புதல்வனுகிய அநுமான், சம்புமாலி — ஒரு அரக்கவீரன், வெம்பா—வருந்தி (செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம்)

15 ஒன்ருர்வணங்கும் நளன்—பகைவர்கள் வணங்கும் பேராற்றலுடைய நளனென்பவன் (இராமபிரானுடைய தளகர்த்தன்) வெம்போர்—கொடியயுத்தம், பிரதபனன்—அரக்கன், உயிர்வீய—ஆவிதொலைய, கெசன் கேசனென நீண்டது. காய்ந்து—கொன்று, பொன்னுட்டுமாதர்—சுவர்க்கத்திலுள்ளமகளிர், நலம்—இன்பம், கொண்டு—மூன்ருவதன் சொல்லுருபு.

16 நுங்க—முறிய, மித்திராக்கன் அரக்கரில்ஒருவன், மன்னற்கிளையோன் — இலக்குமணன், வாளி — பாணம், விருபாக்கன்—ஓர் இராக்கதவீரன். தென்புலத்தார்—பிதிரர்கள், மித்திரக்கனன் என்பது மித்திராக்கன் என்ருயிற்று, விருபாட்சன்—வேற்றுமையான கண்களையுடையவன், பிதிரராவார்—படைப்புக் காலத்து அயனுற் படைக்கப் பட்டதோர் கடவுட்சாதி, அவர்க்கிடம் தென்றிசையாகலின் தென் புலத்தார் என்ருர். புலம்—இடம்.

17 வெயில்கான்று—வெயிலைப்பரப்பி. இருளைசீத்து—இருளினைப்போக்கி, வெங்கதிர்ச்செல்வன் மைந்தன்—சூரியகுமாரனுகியசுக்கிரீவன், வச்சிரமுட்டி, பிரகத்தன், இவர்கள் அரக்கர்கள், வாகைகொண்டான் — வெற்றிகொண்டான், தோமரம்—கைவேல், துயிலாமை—அழியாமை.

18 இராமபிரானால் கொல்லப்பட்ட அரக்கர்கள், அக்கினிகேது, இரச்மிகேது, சுதக்கன், எச்சகோபன், முதலானோராவர், கங்கைநாடன்—இராமமூர்த்தி, கங்கைசூழ்ந்த நாடன், கங்கையையுடைய நாடன் எனவிரியும்.

19 வயம்மீளி—வெற்றிபொருந்தியவீரன், கடுஞ்சினம்—மிக்ககோபம், அடல்கூர்—வலிமிகுந்த, அசனிப்பிரபன்—இராவணனைச்சார்ந்த இராக்கதவீரன், துமிந்தன் — இராமபிரானைச் சார்ந்தவன், வெய்யமடல் — கொடியவன்மை, சினத்த—பண்படியாகப்பிறந்த குறிப்பு வினைப்பெயரெச்சம் மீளி துமிந்தன் —இருபெயரொட்டுப்பண்புத்தொகை.

20 எரிதும்மி—அக்கினிநிறைந்து, நூழிலாட்டும் — கொலைசெய்யும், ஆழிவெய்யோன்—சூரியன், நூழிலாட்டுதல்—கொன்றுகுவித்தல், ஆழி—சினையாகுபெயர். இரத்தத்திறாற்சிவந்ததாகலின்செவ்வானுற்ற குடபாலுக்குக்களத்தையுவமித்தார்.

21 கங்குல் -- இரவு, நிருதர்க்கிறைகாதல்மைந்தன்—இராவணன்றன்புதல்வனாகிய இந்திரசித்து, கணைமாரி—அம்புமழை, சீறிஆர்த்தான் — கோபங்கொண்டு முழங்கினான். சிங்கப்போத்து—ஆண்சிங்கம், விலக்கி—தடுத்து.

22 மான்தேர் — குதிரைகள் பூட்டப்பட்ட தேர், மீன்தோய்படலம் — நட்சத்திரங்கள் தங்காநின்றபரப்பு, சான்றோர்—தவநிறைச்செல்வர், தனி வில் கைத்தலைவர் — ஒப்பற்றவில்லைத்தரித்த இராமபிரான், பகுவாய்— பிளந்த வாய், உந்தி—செலுத்தி. சான்றோர் — வினையாலணையும் பெயர். கல்வியறிவு ஒழுக்கங்களால்நிறைந்தவர் என்பது பொருள். இந்திரசித்து—இந்திரனைச்செயித்தவன், இவன் தன்னுடைய தந்தையாகிய இராவணன் ஒரு காலத்தில் இந்திரனோடு அமர்புரிந்து, அவனைச் சிறையிட்டபோது அவ்விந்

திரனைப் போரிற்புறங்கண்டு வென்று தன்றந்தையினைச் சிறையினின்றும் மீட்டானாதலின் இப்பெயர் பெற்றனன்.

23 பனைக்கை—பனைமரம்போன்ற துதிக்கை, சிலம்பி நூல் — சிலந்தியின்வாய்நூல், சிமிழ்ப்புண்டு — கட்டுண்டு, இகல்—பகைமை, பொங்கும்—மிகும், அழல்வாய்—அக்கினியைவீசுகின்றவாய், கிடந்தால் என்பது கிடந்தெனத் திரிந்துநின்றது, வென்றி-பண்புப்பெயர்.

24 வெய்யவன்காதலன் — சூரியகுமாரனாகிய சுக்கிரீவன், செய்யதாமரைக்கணான்-செவந்ததாமரைமலர்போலும் கண்களையுடைய இராமமூர்த்தி, ஐயிருதலைவர் — பத்துவீரர்கள், கவர்க—பற்றுக, செய்ய — குறிப்புப்பெயரெச்சம், ஏ. அசை கவர்க என்னும் வியங்கோளீறு தொக்கது.

25 தூண்டிய—ஏவப்பட்ட, தேண்டினர்——தேடினவர்களாகி, தாதைபால்—இராவணனாகிய தந்தையினிடத்து மீண்டனன்—மீண்டவனாகி; தேண்டினர். மீண்டனன் இவ்விரண்டும் முற்றெச்சங்கள்.

26 ஒற்றர்—ஏவலாளர், அவர்செய்தி—இராமபிரான் முதலானோர் தம்நிலை, காட்டு- (முன்னிலையேவல்) காண்பிப்பாய், புலம்பல்—வாய்விட்டரற்றல், சனகராசன் வேள்வியின்பொருட்டு, உழுதபொழுது அவ்வுழுப்படைச்சாலினின்றும் தோன்றினமையின் பிராட்டியைச் சீதைஎன்றார், சீதை படைச்சால்.

27 திரிசடை—வீடணன்மகள், (நற்குணவதி) அரில் தப—ஐயங்கெட (சந்தேகமின்றி) உணர்ந்தனள்—தெளிந்தனள், அழுங்கல்—அழற்க (அழாதே) மருமலர்ச்சோலை—அசோகவனம், அரில் — குற்றம், ஈண்டுச் சந்தேகத்தின் மேற்று. அழுங்கல்—எதிர்மறைவியங்கோள், புன்மையோர் கீழ்மக்கள்.

28 முகம்ஒளிஇழந்திலர் — முகத்தினின்றும் ஒளி நீங்கப்பெற்றிலர், செப்பும்எல்லையின் — கூறுகின்றபொழுது, களி—களிப்பு, சிறைக்கலுழன்—இறகுகளையுடைய கருடன், துளைஎயிற்றுஅரவு—துளைபொருந்தியபற்களையுடைய நாகங்கள், தொடர்ச்சிவிட்டது—பற்றுவிட்டது.

29 முடிமுதல்சிரம்வரை — தலைமுதல்தாள்கள்வரை, (முடிவு) தழும்பு—வடு (மாசு) தீர்ந்து—நீங்கி, உயர்கோள் — இராகுவென்னும்கிரகம், குமரர்உய்ந்துஎழ — இராமமூர்த்தி முதலியவர்கள் பிழைத்துஎழ, தோள்வலியால் அமிழ்துஎடுத்ததோன்றல்-முன்னொருகாலத்தில் புயவன்மையினால் சுவர்க்கத்தினின்றும் அமிருதத்தினையெடுத்து வந்த பெருமையினையுடைய கருடன், நீவிஏகினான்—தடவிவிட்டுச் சென்றனன். தோள்வலியால் அமிழ்தெடுத்தது கத்துரு:-வென்பவள் 'இந்திரனுடைய குதிரை கரிது' என்றியம்ப, விநதை 'வெள்ளை' என்றாள், பின்பு கத்துரு தன்புதல்வர் செய்த வுபாயத்தினால் விநதையைத் தனக்கடிமையாக்க, விநதையின் புதல்வனாகிய கருடன் தாயினுடைய அடிமையினை நீக்குவான் வேண்டி, தான்போகின்ற வழியில் பன்னிரண்டு யோசனை பரப்புள்ள ஒருயானையையும், அத்துணைப் பரப்புள்ள ஒருயாமையையும் தன்கால் நகங்களினால் எடுத்துக்கொண்டு ஓராலமரத்திலே தங்கிற்று. அப்பொழுது அதன் பருத்த கிளையானது யாரும் வியப்படையும்படி முறிந்து விழுந்தது. கருடன் முறிந்ததாகிய நூறியோசனை பரந்த அந்தக்கிளையைக் கவ்விக்கொண்டு மேலே செல்லுகையில் அதன்கணிருந்த வாலகில்லியரை மெல்ல மெல்ல அகற்றி விட்டுச் சுவர்க்கத்திற்சென்று அமிருதத்தை யெடுத்துவந்து தாயர்களுக்குக் கொடுத்துச் சிறையினை மீட்டது.

30 முருகுஉறழ்செவ்வியோர் - முருகக்கடவுளையொத்த அழகினையுடையவர். மொய்ம்பு — வலிமை, பரிதிசேய்— சூரியகுமாரனான சுக்கிரீவன், உரும்—இடியேறு, முருகுஎன்னும் பண்பு பண்பிமேனின்றது. ஏ. அசை.

31 கிளர்ந்ததானை—விளங்காநின்றசேனை, புகைநிறக் கண்ணன்—அரக்கவீரரில்ஒருவன், செருமலைய—போர்புரிய, தரையின்எற்றினான்— பூமியின்கண்மோதினான், புகைநிறக் கண்ணன் என்பது விளிக்கப்பட்டுப் போக வென்பதைக் கொண்டு முடிந்தது.

32 கச்சை—யானைகழுத்திலிடுகயிறு. வச்சிரத்துஎயிற் றவன்—வச்சிரப்பல்லன், மலைய—போர்புரிய, நச்சுவாள் —நஞ்சுபூசிய வாட்படை, நாண்மலர்செச்சை — புதியமலர் மாலை, முடித்தலை—மகுடந்தாங்கியதலை

33 அகம்பனன் — அரக்கவீரரிலொருவன், உடைந்து— தோற்றுப்போய், பார்—பூமி, அகடு—வயிறு, இருள்பருகி —இருளினையுண்டு, ஆர்கலி—கடல், அருக்கன்—சூரியன், இராவணற் குரைத்ததென்றது அவன்படைகளின் தோல் வியை.

34 எரிகவிழ்த்து — அக்கினியைப்பொழிந்துகொண்டு, நிருதர்—இராக்கதர், வெம்கூற்று—கொடியஇயமன், குருதி உக—இரத்தம்கக்குமாறு, வீழ்த்தினான் (வீழஎன்பதன்மரூ உவாகிய ஏ.) வீழ்பகுதி அசைநிலை.

35 ஆடல்வேல்நிகும்பன் — வெற்றியைத் தருகின்ற வேலேந்திய நிகும்பன், இராவணி — இந்திரசித்து, நராந்த கன், மகோதரன், தேவாந்தகன் இவர்கள் இராக்கதவீரர் களாவர் குறிப்பு:— திரிசிரன்—முத்தலையன், அதிகாயன்— பருத்தகாயமுள்ளவன், இராவணி—இராவணன்றன் புதல் வன், நராந்தகன்—நரர்களுக்கு இயமன். மகோதரன்—பெரு வயிறன், தேவாந்தகன்—தேவர்களுக்கு இயமன், இவர் களுள், மகோதரன் ஒழிந்த ஏனையவர் இராவணன் புதல்வ ரவர், தாசரதி பார்த்தி, யென்றாற்போல இராவணி யென லாயது. தத்திதாந்தநாமம்.

36 எண்இலர்—எண்ணற்றவர். வாங்கியவில்லினர்—வளைத்தவில்லையுடையவர்கள், வீங்கியதோளினர்— பருத்த தோளினர், வெகுண்டநெஞ்சினர்—கோபித்தமனமுடையவர் அளப்புஅரும்படை— அளவுசெய்தற்கரியபடைகள், பாங்கி னில்ஏக—பக்கங்களில்வர. எண்ணிலர்படையொடு ஏக என முடியும், ஏ. அசை. ஏக என்பது வருகின்ற செய்யுளில் எய் தினன் என்பதனோடு முடியும். இதுவும் குளகம்.

37 ஆற்றலர் — பகைவர், மாழ்குற — மயங்க, கண் புதைத்துஅஞ்ச— கண்களைமூடிக்கொண்டுவெருவ. கொல்சி னத்து ஏற்றுரிமுரசம் — கொல்லுகின்றகோபத்தினையுடைய இடபத்தினது தோலினாற் செய்யப்பட்ட முரசக்கூட்டம், ஆர்ப்புஎழ—முழக்கம்எழ, ஆற்றல்சால் — வலிமைமிகுந்த, ஆற்றலர் — பண்படியாகப்பிறந்தபெயர், ஆற்றல் — பகுதி (வலிமை) தவழ்ந்து தவழ வென்பதன்றிரிபு, உம்மை உயர் சிறப்பு.

38 கொய்யுளைசுவல்பரி—கொய்யப்பட்ட தலையாட்ட மென்னும் அணியணிந்த பிடரியினையுடைய குதிரை, வையம் —தேர், அடுகணை-கொல்லும்பாணம். வெய்யனை—கொடி யவனாகிய இராவணனை, எய்—எய்வாயாக, பூட்டிய—இறந்த காலப்பெயரெச்சம்.

39 கரும்தடம்கண்ணிபங்கன் — கரியபரந்தகண்களையு டைய உமாதேவியாராகிய சிவபெருமான், காண்பான்பொ ருந்தினன்—காணும்பொருட்டு உன்னைவந்தடைந்தனன். ஒரு கால்—ஒருதரம், இரப்ப—வேண்ட, அரக்கன்—இராவணன், எறுழ்வலிஅநுமன் — மிக்கவன்மைவாய்ந்த ஆஞ்சநேயர், இரும்தடம்கிரி—பெரியபரந்தமலை, அசனி—இடியேறு, குத் துக—வியங்கோள்வினைமுற்று. வீழ்ந்தாலென்ன என்பது வீழ்ந்தென்ன எனத்திரிந்தது.

40 புடைப்ப—மோத, அறிவுஅழிந்து—அறிவுகெட்டு, ஒல்லைவந்துஎய்தி — விரைவில்வந்துபொருந்த, ஆற்றல்அம் கவியினை-வலிமையுடையஅழகியஅநுமாரை, வியப்ப—புகழ, கறைகெழுவேலோய்—இரத்தக் கறைவிளங்கும் வேலாயுதத் தினையுடையவனே, கல்செய்தோள் – மலைபோல் செய்யப் பட்டதோள்கள், ஆர்த்தான் — இராவணன்முழங்கினன், எய்திவினையெச்சத்திரிபு.

41 குருதிபொழிதர—இரத்தம்பெருக, அநுமன்அயர ....ஆஞ்சநேயர்மூர்ச்சிக்க, புலிப்போத்து—ஆண்புலி, பரி கொள்தேர்கடவி.— குதிரைகள் பூட்டப்பட்ட தேரினைச் செலுத்தி, கனல்பகழி—அக்கினியம்பு, கவிகுலத்தலைவரை— வானரப்படைத்தலைவரை, துரந்து—வெருளுறவிரட்டி, சேய் உறழ்—முருகப்பெருமானையொத்த, எதிர்புகுந்தான்-எதிரே சென்றான், குறுகலர்—எதிர்மறைவினையாலணையும்பெயர்.

42 அல்லிஅம் கமலக்கடவுள், பிரமதேவர், அஞ்சன வண்ணன்—நீலநிறக்கடவுளாகியதிருமால், கொல்சினஅடல் ஏற்றுஅண்ணல்—கொல்லுங்கோபத்தினையுடைய வலிமையு முடைய இடபவாகனமுடையசிவபெருமான், குறுகலர் — பகைவர், வில்லினால்—வில்வன்மையினால், வெலற்கு—வெல் வதற்கு, வார்கழல்—நீண்டவீரக்கழல், மார்பகம்—மார்பு, குறுகலர் — எதிர்மறை வினையாலணையும்பெயர், குறுகு— பகுதி, அல்—எதிர்மறையிடைநிலை, அர் பலர்பால்விகுதி, உக ரக்கேடு.

43 இளங்கோளரி-இளமையானசிங்கம், எடுப்புஅரிது ஆகி—எடுத்தல்முடியாததாகி, திருவிலி —இராவணன், குருதி சிந்திட—உதிரம்சிந்தும்படி, வரிசிலைஇளவல்— இலக்குவன், மணிநிறவண்ணன் — இராமன், பின்னர் இராமமூர்த்தியி னாலே தன் ஐசுவரியத்தினையெல்லாம் இழத்தல் ஒருதலையாத லின் இராவணனைத் திருவிலியென்றார்.

44 அவ்வேலை—அச்சமயத்தில், அயர்ச்சி — சோர்வு, ஐயன் — இராமபிரான், ஐயசெங்கமலக்காடு — அழகியசெந் தாமரைக்காடு, கால்களும், கைகளும், கண்களும், முதலிய அவயவங்கள் தாமரைமலரையொத்திருத்தலின் தாமரைக் காடென்றார்.

45 வையம்ஏத்துஎடுக்கும்– உலகத்துள்ளார் துதிக்கும், அமர்மலைந்தான் — போர்செய்தான், கொண்டல் — மேகம், இவரா — இவர்ந்து (ஏறி) செய்யாவென்னும்வாய்பாட்டு வினையெச்சம், பூத்தால் என்பது பூத்தெனத்திரிந்தது, தொழுதனன்—முற்றெச்சம். கடுப்பு—வேகம். கலினம்—கடி வாளம், கழை—மூங்கில், வயவர்—வெற்றிவீரர், வீற்றுவீற் றுகமறிதர—வேறுவேறாகஇறக்க, வரிசிலைகுனித்தலும்—கட் டமைந்தவில்லினைவளைத்தலும், அரக்கன்வெகுண்டு—இராவ ணன் கோபித்து, கூற்றும்மெய்பனிப்ப — இயமனும்உடல் நடுங்க, ஆர்த்தான்—முழங்கினான்.

46 மாருதிமருமம்—அநுமானுடையமார்பகம், வடிக் கணை—கூரியஅம்புகள், கார்முகம்விநோதன் — விற்றொழி லினையே பொழுதுபோக்கும் விளையாட்டாகவுடையவன், (சீராமன்) நிருதர்கோன்—இராவணன், பகழியால்துணித்து அம்புகளால்அறுத்து, தார்புனைமவுலி — மலர்மாலையணிந்த முடிகள், தள்ளி – வீழ்த்தி,

47 கூந்தல்மான்—குதிரை, கொடும்சிலை—வளைவாகிய வில், அடும்கணைப்புட்டில் — கொல்லும்அம்புஅருத்தூணி, (கூடு)காந்துஎரிகவிழ்க்கும்—சுடுகின்றதீயைச்சொரியும், கடி தின்—விரைவுக்குறிப்பு, ஆவி—உயிர், உய்தியேல்உய்தி— வாழ்வையேல்வாழ்வாய், விளிதி—இறப்பாய், ஏவல்வினை முற்று. போகெனவிடுத்தான்—செல்வாயாகவென அனுப்பி னான், (சீராமன்)

48 வெள்ளியம்பொருப்பு....கைலாயமலை. நாணம்சுமக்கலன் ஆகி-வெட்கத்தினைபொறுக்கமாட்டாதவனாகி, வெய்து உயிர்த்து — சுடுமூச்சுவிட்டு, பள்ளநீர்வேலி — ஆழமாகிய நீரரண், பரிவு — துன்பம், எள்ளரும்மதுகை — இகழ்ச்சியில்லாவலிமை, அள் இலைசூலம்திரித்து—பகைவரின் ஊனை யள்ளுகின்ற இலைவடிவாகிய சூலப்படையினைச் சுழற்றி, மானுடர் — இராமஇலக்குமணர் முதலானோர், உம்மை—உயர்வுசிறப்பு, கும்பகன்னன்—குடம்போலும் காதுகளையுடையவன், சுமக்கலன்—எதிர்மறை வினைமுற்று.

49 இமைப்பில்—இமைப்பொழுதில், செருக்களம் —போர்செய்யும்இடம், மலர்கதிர்பரிதிசேய்-பரந்தகிரணத்தையுடைய சூரியகுமாரனாகிய சுக்கிரீவன், மெய்த்துயர்தீர்ந்து—உடல்துன்பம் நீங்கி, சுக்கிரீவன் கும்பகர்ணனுடைய மூக்கொடும், காதுகளையும் பறித்துக்கொண்டு மீண்டமை கூறப்பட்டது.

50 திருகுவெட்சீற்றம்—மாறுபட்ட கொடும்கோபம், மடங்கல்ஏறு—ஆண்சிங்கம், அனையான்—போன்றவனாகிய கும்பகர்ணன், ஏற்றவர்... எதிர்த்தவர். கொடுமரம்குழைத்து வில்லினைவளைத்து, வீற்றுவீற்றாய் — வேறுவேறாய், நீள் சென்னி—நீண்டதலை.

51 தடிந்தமை— கொன்றமை, வல்அரக்கன் -- இராவணன், வெம்கனல்சிகைகதுவி—கொடிய அக்கினிச் சுவாலை பற்றி, துளிப்புயல்—துளித்தலையுடையமேகங்கள், துனைவு —விரைவு, அறைதலும்— ஆஞ்ஞாபித்தலும் (ஆணையிடலும்) அடும்களம்—கொலைக்களம்.

52 பொருப்புஉறழ் தடம்தோள் — மலையினையொத்த பெரியதோள்கள், செகுத்தான்—கொன்றான், உருத்துவந்து உடற்றும்—கோபங்கொண்டு வந்துபோர்புரியும், ஒறுத்தான் தொலைத்தான் நராந்தன், தேவாந்தகன்—மக்களுக்கு அந்தத்

தைச்செய்பவன் தேவர்கட்குமுடிபு செய்பவன் என்பது பொருள், பருப்பதம்—மலை.

53 மாருதி — வாயுவின்குமாரன் (அநுமன்) திரிசிரா—முத்தலையினையுடையவன், துமித்தான் — வெட்டினன், மலர்அயன் கணை — பூவிலிருக்கின்ற பிரமதேவன் பாணம், நேரலர்கடந்த—பகைவரைவென்ற, அமரர்— இறவாதவர் (அமுதமுண்டமையால்) அகம்கை—அங்கையெனவாயது.

54 கறங்குதெள்திரைநீர்— ஒலிக்கின்றதெளிந்த அலைகளையுடையகடல், கதம்சினம்—பற்றியவெகுளி, சினவி — கோபித்து, இந்திரசித்தன் — இந்திரனைச் செயித்தவன், செறிந்தகூர்இருள்வாய்—மிகமிகச்செறிந்த இருட்காலத்தில் திசைமுகன்பகழி—பிரமாத்திரம் (பிரமபாணம்)மறம்கொள் போர்இளவல் — அஞ்சாத்தின்மை பொருந்திய போர் வீரனாகிய இலக்குவன்.

55 வரிசிலைக்கல்வி உருஎடுத்தனையவாள்எயிற்று அரக்கன்—கட்டப்பட்ட வில்வித்தையே உருவெடுத்தாற்போன்ற ஒளிபொருந்தியபற்களையுடைய இந்திரசித்தன். பொங்குபேர் உவகை — மிகப்பெருங்களிப்பு, நிருதர்புங்கவன் — அரக்கர்கட்கு இறைவனாகிய விபீடணன், யாரும்—அனைவரும் (எல்லாரும்)

56 ஐயகேள்— ஐயனேகேட்பாயாக, வெள்ளிவரை— கைலாயமலை, நாப்பண்—நடுவில், இனிதுஅமரும் மைஅறு மருத்துவரை—இனிதாகஇருக்கின்ற குற்றமில்லாத சஞ்சீவி மலை, அதகம்—மருந்து, அம்மலையின்கண் மெய்புகுகருவி மாற்றுறும் மருந்து, வெட்டுண்ட மெய் பொருந்துறும் மருந்து, வெட்டப்பட்டதழும்புமறைக்கப்பெறும்மருந்து, மாண்டவுயிரை மீள்விக்கும் மருந்து என்பன உள்ளனவாம்

57 அநுமன்பாய்ந்து அம்மருந்துகளிவையெனக் காண்கிலனாய் அம்மலையினையே பெயர்த்துக்கொண்டு வந்துய்ப்ப,

இராமன் இலக்குமணன் முதலினோரனைவரும் உறங்கிவிழிப்பவரைப்போன்று போர்க்களத்தினின்று எழுந்தனர். காய்சினம் — காயக்கூடியகோபம், இரவிசேய்— சுக்கிரீவன். தீமடுத்தார்—நெருப்பிட்டுக்கொளுத்தினர்.

58 அன்னதுகேட்டு—அதனைக்கேட்டு. நிருதர்கோன்—இராவணன், அழையா—அழைத்து (செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம்) மின்நகுசுடர்வேல்தலைவர் — இராமனுடைய படைத்தலைவர், கல்நவில்திரள்தோள்—மலையினையொத்த திரண்டபுயங்கள், குரக்குச்சேனைகனைகடல்— (உருவகம்) வானரசைனியங்களாகிய சமுத்திரம், கப்பணம்—ஒருவகைப்போர்ப்படை, கூற்றும்அஞ்சுற — இயமனும் அஞ்சுமாறு.

59 அங்கதன்—வாலியின்புதல்வன், அமர்உலகு—வீரசொர்க்கம், மறலி—இயமன், இப்பாடலில், அகம்பனன், பிரசங்கன், சுரோணிதக்கண்ணன், மயூபாக்கன் முதலானோர் இறந்துபட்டமை கூறப்படுகின்றது அங்கதன், துவிதன், திறல்மயிந்தன் என்பவர் இராமன் பக்கங்கலிலுள்ளவர். சுரோணிதக்கண்ணன்— சுரோணிதம்போன்ற செவந்த கண்களையுடையவன்.

60 நள்இருள் — செறிந்தஇருள், நாகுஇளம்பிறை—மிக்கஇளமையாகிய பிறைச்சந்திரன், கொள்ளைவண்டு — மிகுந்தவண்டுகள், வான்மகளிர்—சுவர்க்கலோக தேவமாதர், இப்பாடல் கும்பன், நிகும்பன், மகராட்சன் முதலிய இராவணனுடைய வீரர்கள் மாண்டமைபற்றி யியம்புகின்றது. (மகராட்சன்) மகரக்கண்ணன் — மகரமீன் போன்ற கண்களையுடைய அரக்கனை.

61 ஈங்கு இவை — இவ்விடத்துநிகழ்ந்த நிகழ்ச்சிகள், அரக்கன்—இராவணன், விடுப்ப—ஏவ, மாயாசீதை—மாயையினால் தோற்றுவிக்கப்பெற்ற சீதாபிராட்டியார் (உண்மை

யானசிதையன்று) விறல்—வலிமை, தடிந்து — கொன்று, பருவரல் — துன்பம், திருமறுமார்பன் — திருமகள்மறுத்த மார்பினையுடையவன் ஈண்டு இராமபிரானையுணர்த்திற்றும். மாருதி —அநுமன், பாங்கு—பக்கம், நிகும்பலை—ஆபிசார யாகம்போன்றதொன்று.

62 இராவணி — இராவணன்மகன்இந்திரசித்து, ஆய போழ்து—அந்தச்சமயத்தில், ஐய—சுவாமீ. அழுங்கிடேல்— வருந்தாதே, வகுத்தனன்தடிந்து—வகுத்துக்கொன்று (வகுத் தனன்—உண்டாக்கினன்) மகம்செய்வான் — யாகஞ் செய்வ வதற்கு. மேய (மேவிய) தொடங்கிய, முற்றுறின் — முடிந் தால், அரிது— அருமையுடைத்து (முடியாது) தீயினைச்செ குப்பான்இளவலைவிடுத்தி— இந்திரசித்தினைக் கொல்லுமாறு தம்பியாகிய இலக்குவனையனுப்புவாய், தெளிந்து—தெரிந்து, வீடணன்உரைத்தான்—விபீடணன் கூறினான், அழுங்கிடேல் விடுத்தி என்பனமுன்னிலை யேவலொருமை வினைமுற்றுக்கள்.

63 கமலம்தடம்கணான் — செந்தாமரைமலர் போன்ற பரந்தகண்களையுடையனாகிய இராமபிரான், ஒல்லைபோகஎன —விரைவாகச் செல்வாயாகஎன, இவர்ந்து—ஏறி, அரக்கர் கோன்இளவல்—இராவணனுடையதம்பியாகிய விபீடணன், கனன்று—கோபித்து, அரன்—சிவபெருமான், முப்புரத்தின் திரிபுரத்தினைப்போல, நிகும்பலை, ஓர்சிறந்தஇடமாம், இள வல் என்னும் விளிப்பெயர் போக வென்னும் வியங்கோண் வினைமுற்றுக்கொண்டது.

64 அருமறைத்தக்கன் — பிரமனுடைய மானசபுத்திர னும், நவப்பிரமாக்களுள் ஒருவனுமாவன், (இவன் நிரீச்சுர வாத சாங்கியம்பற்றி வேள்விவேட்டவன் கணங்கள் வீரபத் திரால் ஏவப்பட்ட சிவகணங்கள், அழித்தென — அழித்தாற் போல, அடல்சினத்து அரக்கன் — வலிமையும் கோபமும் உடைய இராக்கதனாகிய இந்திரசித்தன் இமைகரிந்து—கண் ணிமைகருகி, பரூஉமான் —சூரியனுடைய குதிரை (ஏழ்பரி

யென்றுபெயராம்) தடந்தேர்— (உரிச்சொற்றொடர்) பெரிய தேர், பாய்புலிபோத்துஎன-பாய்கின்ற ஆண்புலியைப்போல, அழித்தால்என என்பது அழித்தெனத்திரிந்துநின்றது.

65 அந்தரத்துஅமரர்—விண்ணிடத்தமர்ந்ததேவர்கள், இமைப்புஉருக்கண்கள் — மூடியறியாதகண்கள், துறந்தனர் அகல—விட்டுநீங்க, துறந்தனர்முற்றெச்சம், மந்தரம்—மந்தர மலை, கந்தடுகளிறு — கட்டுத்தறியை முறிக்கின்ற யானைகள், கான்படர—காட்டிற்செல்ல, இந்திரன்பகைஞன்— இந்திர சித்தன், நாண்எறிந்தான்—வில்நாணினைத்தெறித்தான் இடி தரசெயவெனெச்சம்.

66 களத்து எதிர் ஏற்ற—போர்க்களத்தின்கண் முன் வந்து எதிர்த்த ஓர்ஒருகவிகட்கு-ஒவ்வொருவானரகங்கட்கும் கணைகள்—அம்புகள், வல்விசை—அதிகவேகம், நேமியங்கிரி —சக்கரவாளகிரி, துனைவு—விரைவு, சில—சிலபாணங்கள் அளைத்தலைப்புகுதும்—வளையிலேநுழையும், அரவுஎன-பாம் புகள்போல, ஆகம்—உடம்பு, தளிப்புயல்ஏழும் — குளிர்ந்த ஏழுமேகங்களும், கடையுகம் — யுகமுடிவு, இறைக்கும் — பெய்கின்ற, ஏழுமேகங்களாவன:— புட்கலாவர்த்தம், சம் வர்த்தம், ஆவர்த்தம், துரோணம், காளமுகி. முதலியனவாம் சில பண்படியாகப் பிறந்த பலவின்பாற் படர்க்கைப் பெயர். புகுதும்—பெயரெச்சம்.

67 கூற்றும்மெய்பனிப்ப—உடல்வேறு உயிர்வேறாகப் பிரிக்கும் இயமனும் உடல்நடுங்க, அரக்கர்கோன்—இந்திர சித்து, வாள்அரக்கன்மருமம்— வாளாயுதத்தையுடைய அவ் விந்திரசித்தன் மார்பையும், மணிமுடி — இரத்தினங்கள் வைத்திழைக்கப்பட்ட மகுடம், காற்றுஉறழ்புரவி — வேகத் தினால் வாயுவினையும் ஒத்தகுதிரை, துணித்து — வெட்டி, ஊற்றிருந்து — சுரந்துபெருக்கெடுத்து, கவந்தம் — உடற் குறை—(முண்டம்) உறுகணை—மிக்கஅம்புகள் (உரிச்சொற் றொடர்,

68 இஃது அக்கினிமுகப்பாணத்தின் சிறப்புரைக் கின்றது. ஈருள்—ஈரல், புட்பகவூர்தி—புட்பகவூர்தியினையுடைய குபேரன், மாருதி—வாயுகுமாரனாகிய அநுமான், ஊர்தி—ஆகுபெயர் (தொழில்), மந்தரம்—மந்தரமலை, செந்தழற்கடவுள்—அக்னிதேவன்.

69 உருகெழுதோற்றம்— அஞ்சத்தக்ககாட்சி, மார்பகலத்து—மார்பினிடத்து, உடற்றுவெம்பகழி—வருத்துகின்ற கொடியஅம்பு, போழ்ந்து—பிளந்து, குருதிகான்றிடலும்—இரத்தத்தைக்கக்கவும், மார்புஅகலம்—மீமிசைமொழி, வரிசிலை—இந்திரசித்தனுடைய கட்டமைந்தவில், ஊர்தருபாகன்—இந்திரசித்துவினுடைய தேர்ஓட்டுபவன், சிதர்ந்தது—துண்டுதுண்டுகளாக உடைந்தது.

70 ஓர் இமை ஒடுங்கு முன்னர்—ஓர் இமைப்பொழுது கூடுமுன். பண்ணுறுத்து—அலங்கரித்து. ஒல்லையின் இவர்ந்து—விரைவாகஏறி, கவிகுலம்—வானரக்கூட்டம், பொன்ற—அழிய, கார்நிறத்துஅரக்கன்—இந்திரசித்தன், கவனவாம்புரவிகள்—வேகமுடன் தாவிச்செல்லுங் குதிரைகள். மறிய—மடிய. பாழிக்கதை—பெரியதண்டாயுதம். புடைத்தான்—மோதினான். அம்—சாரியை.

71 நரைவிடைஊர்ந்தகடவுள்—வெள்ளிய இடபத்தில் ஊர்ந்துசெல்லும் சிவபெருமான், திரைஏறி குருதிப்புனல்—அலைகளைவீசுகின்ற இரத்தவெள்ளம், நன்பகல்—நல்லனபுரியும்பகற்பொழுது, இருவரும்—இலக்குவனும் இந்திரசித்தனும், வெம்போர்—கொடியயுத்தம், கருங்கடல் சிவப்பவென்பது முரண்விளைவணி.

72 கந்துஅடுபுழைக்கை கடாம்களிறு—கட்டுத்தறியை முறிக்கின்ற துவாரம்பொருந்திய துதிக்கையினையும் மதத்தினையும் உடைய ஆண்களிறு, ஆடகப்பொருப்பு—மகாமேரு

மலை, சந்திரமவுலி—சந்திரனை தரித்த முடி, அந்தரத்துஅமரர் —சுவர்க்கஉலகிலுள்ளதேவர், குழைவுற—வளைய, வாங்கி— வளைத்து, இந்திரகணை—இந்திரனுடைய அம்பு, இராவணி —இந்திரசித்து, பொழியவாங்கி—அறுத்துவீழ்த்தினன் என முடிவுகாணற்பாலது, ஆல்—அசை

73 விண்ணவர்—தேவர், விஞ்சையர்—வித்தியாதரர், வியந்தனர்ஏத்த— வியந்து துதிக்கவும், கண்அகல்ஞாலம்— இடம்பரந்த மண்உலகு, கார்முகம்—வில், கல்வியின்துறை போம்அண்ணல் — இராமபிரான், இளவல் — தம்பியாகிய இலக்குமணன், பிழிகுறும்துளி—தேனினது சிறிய துளி, பிலிற்றும்—துளிக்கும், கமலக்கண்ணன்—இராகவன், வியந் தனர்—முற்றெச்சம். ஞாலம்—ஆகுபெயர், ஆல்—அசைநிலை

74 தூங்கு இசை மீழற்று திவவுயாழ் உயர்த்தோன்— இசையினை யிசைக்கின்ற முறுக்காணியாகிய வலிக்கட்டை யுடைய யாழினையுயர்த்திய இராவணன், துன்பவாரிதி — துயர்க்கடல், பாங்கு—பக்கம், நாற்படை—நான்குவிதசேனை, (யானை, குதிரை. தேர், காலாள் ஆயவை), வீங்குநீர்வேலி புவி—கடலாற்சூழப்பட்டபூமி. உளுக்க—நெளிவுற, வீங்கு நீர்—வினைத்தொகை.

75 ஆயிரம்நாவோன்—நாகராசன், (ஆதிசேடன்)மூல பலம்—மூலபலசேனை, வில்விளையாட்டுஅயர்ந்து வில்விளை யாடலைச்செய்து, கடிகைஓர்எழில்—ஒருயாமத்தில் (ஏழுநாழி கைகொண்டது) கனல்விழிபுலவு •நாறுஅழல்வாய்பேயும்— அக்கினியைப்பொழிகின்ற கண்களையும் புலால்மணங்கமழ் கின்ற சுடுகின்ற வாயையுடைய பேயும்.

76 உரவுநீர்தரங்கக்கடல்—உலாவுகின்ற வலிய நீரினை யுடைய அலைகள்வீசும்கடல், சிதைந்தமை — இறந்துபட்ட மையை, வாள்நுதல்— ஒளிபொருந்தியநெற்றி, புகைந்த— புகைந்தன, பணையா (செய்யாவென்னும் வாய்பாட்டுவினை

யெச்சம்) பணைத்து, அளந்த—அளாவின, வெருவி—பயந்து, என்ஆம்—(எவன்ஆகும்) என்பதன்மரூஉ யாதாய்முடியுமோ, புகைந்த—அஃறிணைப் பன்மை வினைமுற்று.

77 பொருப்புஉறழ்—மலையையொத்த, பெரும்பக்கன், மகோதரன், விரூபாக்கன், ஆயவர்கள் இராவணன் படை வீரர்கள், ஓடை—முகபடாம், எதிர்எழுந்தான் — எதிர்த்து எழுந்தான், (இராவணன்) எதிர் எதிர்த்துஎன்பதன்விகாரம்.

78 மூவகையுலகு — சுவர்க்கம், மத்தியம், பாதலம். என்பனவாம், முழவு—மத்தளம், மதிக்குடை — சந்திரவட்டக்குடை, தாவும்மான் – பாய்கின்றகுதிரை, வயங்கு—விளங்குகின்ற, கோஎடுத்து அருந்தும் குருதிவாள் — அரசர்களை எடுத்துஉண்ணும் இரத்தம்தோய்ந்த வாட்படை, செருக்களம்—போர்க்களம், ஒல்லே—விரைவு.

79 ஆயிரம்மறலி—ஆயிரம் எண்ணிக்கையுடைய இயமர்கள், புறங்கண்டு — வென்று, அமர்பெறுது அருசமம் வேட்டு — போரினைப்பெறுது அரியயுத்தத்தை விரும்பி, வாகைவேல்—வெற்றிவேல், காய்கதிர்பரிதிசிறுவன் — சுடுகின்றகிரணங்களையுடைய சூரியன் புதல்வனுகிய சுக்கிரீவன், புடைத்தல்—மோதல், வெகுண்டு—கோபித்து, தறுகண்—கொடியகண்கள், மறிதர—மாளும்படி, சென்னியைநெறித்தான்—தலையைஉடைத்தான்.

80 உலகுஎலாம்விழுங்கும்—உலகமுழுவதும் உண்ணுகின்ற, இலகுவான்விதிர்த்து-விளங்காநின்ற வாளைஅசைத்து வாலிதன்துணைவன்—சுக்கிரீவன், கொலைபழுத்து — கொலைமுதிர்ந்து, மற்றவன்—மகோதரன், தலைதுமித்து—தலையையறுத்து.

81 கங்கமும்—கழுகும், ஆர்க்கும்—ஒலிக்கும், துரந்து —துரத்தி, சிங்கஏறுஎன்ன—ஆண்சிங்கத்தைப்போல, அங்கதன்சினவிசென்று—அங்கதன் கோபங்கொண்டுபோய், துங்

கம்பால்வரை—உயர்வாகியபெரியமலை, ஆள்அரிபோத்து—ஆளுந்தன்மையுடைய ஆண்சிங்கம், ஆங்கு—அசை, இது வினையுவமம்.

82 தானைத்தலைவர் — சேனாதிபதிகள், உடுக்கணம்—நட்சத்திரக்கூட்டம், சிதற—உதிரவும், தேன்அவிழ்கமலப் பொகுட்டு இனிது உறைரும்தேவன் — தேன்ஒழுகா நின்ற தாமரைக்கொட்டையினிடத்து இனிமையாக வசிக்கின்ற பிரமதேவன், வல்அரக்கன்—இராவணன், பால்நிறச்சங்கம்—வெண்ணிறச் சங்குகள்.

83 பைஅரா — படத்தினையுடைய பாம்பு, மைதவழ் குடுமி—மேகங்கள் தவழ்கின்றசிகரங்கள், எய்என-முள்ளம் பன்றியைப்போல, காய்கணை—(வினைத்தொகை) சுடுகின்ற பாணங்கள், இரும்சிலைகுழைத்தான்—பெரியவில்லினைவளைத்தான்.

84 சினவி—கோபித்து வடவரை—மகாமேரு, திண்ணி தேர் — வலியதேர், வலவன்—தேர்ச்சாரதி, நீள்சென்னி—நீண்டதலை, பற்றலர்—பகைவர், கண்சிவப்பு ஆறுப்பணைப் புயம்—கண்களின் சிவப்புநீங்காத பனைத்ததோள்கள்.

85 பாடகம்தொடர்ச்சி — பாடகம்போலத் தொடர்புடைய, பழவினைச்சிமிழ்ப்பு—பழமையான வினைக்கட்டு, பசும் புயல்அனையான் — பசியமேக நிறம் போன்ற இராமபிரான், ஆடகம் — மாற்றுயர்ந்தபொன், அரணம் — அடைக்கலம், வெம்சினத்துஅரக்கர்கோன்-இராவணன், குரகதம்-குதிரை, பாடகம்—காலிற்றரிக்கும் சிலம்பணி.

86 கொடிஞ்சி—தேர்த்தட்டு, மறிதலும்—இறந்துபடலும், மடங்கலேறு — நரசிங்கம், எயிறுதின்று — பற்களைக் கடித்து, எரிகால்சுடர்அலைநெடுவேல் — தீயைக்கக்குகின்ற ஒளியினையுடைய இலைவடிவாகிய நீண்டவேலை, கடம்கவிழ்

கரடக்கரிநிகர் இளையோன்—மதத்தையூற்றுகின்ற சுவட்டினை யுடைய யானையினையொத்த இலட்சுமணன், துணித்தான்—அறுத்தான், ஆங்கு—அசை.

87 புயல்நிறம்விளர்ப்ப கருகியமேனி புலவுவாய் அரக்கர் கோன் — நீருண்டமேகத்தினது நிறமும் விளர்க்கும்படி கறுத்த உடலினையும் புலால் நாற்றம் கொண்டவாயினையும் உடைய இராவணனுனவன், பயிற்றி—பழக்கி, தொய்யில்—கோலம், மயன்—அசுரச்சிற்பி, அளப்புஇல்நாள்—அளவில்லாத காலம், சமைத்து—செய்து, மறை—மந்திரம், அயில் வேல், இளையோன்—இல்க்குவன், பிளந்து—பிளக்கப்பட்டு, பிளந்து செயப்பாட்டுவினையெச்சம் செய்வினையாக நின்றது.

88 கலினம்மான் — கடிவாளத்தினையுடைய குதிரை. வல்லரக்கன்—கொடியஇராவணன், கடி மதில் — காவலாகிய மதில்கள், தடம்தேர் – பெரியதேர், மலைஉறழ்தடம்தோள் மாருதி—மலைபோன்ற பரந்த தோள்களைகளையுடையவாயு குமாரனுகிய அநுமான், மருந்துமாமலை—சஞ்சீவியினுடைய பெரியமலை, அலகுஇல்சீர் — அளவில்லாத சிறப்புக்கள், ஐயன்—இலக்குவன், மற்று—அசைநிலை.

89 உற்றஉழி—(உயிர்க்குஊறு) உற்றஇடத்து, ஆவி—உயிர், உயிரைநிகர்பொருள் உண்டெனில் அன்றே-உயிரையொத்த வேறொருபொருள் உண்டாயிருந்தால் அல்லவா, கைம்மாறு—பிரதியுதவி, இவண்—இவ்விடம், வெற்றிவேல் அரக்கன்—இராவணன், மணித்தேர்-அழகியதேர், இவர்ந்து ஏறி, உற்றஉழிஎன்பது உற்றுழியெனத்தொகுத்தல்விகாரம்.

90 மலர்அயன்நடவும்எகினம்—பிரமதேவன் ஊர்ந்து செல்லும் அன்னப்பறவை, இரிய—ஓட, நேமியங்கிரி—சக்கரவாளமலை, அலகு—எண்ணிக்கை, விண்ணிடைப்பரந்து — ஆகாயத்தின்கண்பரவி, கவிக்குலம்—குரங்குக்கூட்டம், ஏற்றான்—எதிர்த்தான்.

91 வயிரப்புடையுடைக் குரிசில்—வச்சிராயுதத்தினை யுடைய தேவேந்திரன், கொடும்சமம்—கொடியபோர், சிலைத் தழும்பு—வில்லினது சுவடு, உடற்றல்—போர்புரிதல், அரிது என—அடாதுஎன, மாதலி—இந்திரன்றன் தேர்ப்பாகன், என்றலும்—என்றுகூறியாணையிடலும், ஒல்லையின்இழிந்து விரைவில் சுவர்க்கத்திலினின்றும் இறங்கி, கார்வயிறுஉடைக்கும்—மேகத்தினது வயிற்றைப்பிளக்கும், கூம்பு — சிகரம், (உச்சி) கார்முகக்குரிசில்—கோதண்டபாணியாகிய இராகவன் உதவுக என்றதின் ஈற்றுயிர்தொக்கது.

92 அந்தரம்—சுவர்க்கலோகம் (விண்ணுலகு) அமரர் —என்றுமிறவாதவர் (தேவர்), இவர்க — இத்தேரின்கண் எழுந்தருள்க, என—என்றுவிண்ணப்பிக்க, கடாஅக்களிறு அனையான் — மதமிக்ககளிற்று யானையைப்போன்றவனுகிய இராமபிரான், புழை—துவாரம், கந்து—கட்டுந்தூண், பரூஉத்தாள்—பெரியகால்கள், மந்தரத்துஇவரும்—மந்தரமலை மலையின்கண்ஏறும், தறுகண்—அஞ்சாத்தன்மை, அரிப் போத்து — ஆண்சிங்கம், இவர்ந்தான் — எழுந்தருளினுன், இவர்க என்பதன் ஈறுதொக்கது.

93 தேர்இவர்இறை-தேரில்ஏறியஇராமபிரான், வெம் சினத்துஅரக்கர்தம்கோ— கொடியகோபத்தினையுடைய இராவணன், மாதிரம்—திசை, தானவர்—அசுரர், கண்அகல் விசும்பு—இடமகன்றஆகாயம், வெருவொடும்தளர—அச்சத் தோடும்தளர்ச்சியடைய, இராப்பகல்—இரவும்பகலும், மலைந்தார்—சண்டைசெய்தனர்.

94 மைத்தகார்கமலம்காருபூத்துஅனைய — கரியமேகத் தின்கண்ணே தாமரைகாடு பூத்தாற்போன்ற நீல இரத்தினத் தினது நிறம்போன்ற, வில்குனித்து — வில்லினைவளைத்து, துமிப்ப—அறுக்க, அமர்உடற்ற — போரைச்செய்ய, கைத் தலம்விதிர்த்து — கைகளையசைத்து, ஆயிரக்கால்—ஆயிரம்

தடவை, அத்தவெற்பு — மறையும்மலை, இரவிதேர்மருள — சூரியனுடையதேரும்மயங்கவும், குவித்தார் - கூட்டமாக்கினர்,

95 இப்பாடலின் உவமைச்சிறப்புடையது. இராமனும் இராவணனும் புரியும்போரினுக்குவமை அப்போரேயன்றி வேறின்று என்பதனால் இருவரும் தன்னிகரில்லாத் தகைமையர் ஆவர், கனைகடல் — முழங்குங்கடல், பனிஇருவிசும்பு — குளிர்ச்சியுற்றஆகாயம். இருவரும் கருமைநிறம் வாய்ந்தவர் எனல் குறிப்பிடத்தக்கது,

96 வானவர்கள் — தேவர்கள், இரும்சிலை — பெரியவில, குழைத்து — வளைத்து, மன்றல்அம்கமலம் — மணம்பொருந்திய அழகிய தாமரைப்பூ. அயன்படைவிடுப்ப — பிரமபாணத்தினைவிட, மழவிடை — இளமையாகியஇடபம், கடவுள் — சிவபெருமான், உரம்பிளந்து — மார்பினைப்பிளந்து, ஆர் உயிர் (அருமையுயிர்) பெறுதற்கரியஅவன்உயிர் ஆர்உயிர் எனப்பெற்றது, பொன்றி — இறந்து, பொழிந்து - சொரிந்து, ஆர்த்தனர் அமரர் என்றசெய்யுள்.

97 ஆர்த்தனர் — ஆரவாரித்தனர், விஞ்சையர் — வித்தியாதரர், இயக்கர் — இயட்சர், அருமறை — அரிதற்கரிய பொருளினைத் தன்னகத்துடைய வேதங்கள், தூர்த்தனர் — நிறைத்தனர், மெய்ம்மையும்அறனும் - சத்தியமும், தருமமும் உயர்ந்த — உயர்வுற்றன, உடல்புழுங்கி — உடலானது புழுக்கமுற்று. பொய்ம்மைபோய்ஒளித்த — பொய்ம்மைச்செயல்களெல்லாம்சென்று மறைந்தன. விழுமறைஒழுக்கம் — மேம்பட்டவைதிகநடை, போர்த்தது — நிறைந்துமூடியது, திங்களோறும் — மாதந்தோறும், மும்மாரி — மூன்றுமழை.

98 தாமரைக்கண்ணன் — தாமரைபோலுஞ் செவந்த கண்களையுடைய திருமால், (ஈண்டு இராமனைக்குறித்தது) ஈம நற்கருமம்இயற்றுதி — இறுதிக்கடனாகிய செயல்களைச் செய்வாய், தேமலர்த்துளவோன் — தேன்பொருந்திய மல

ரினையுடைய துழாய்மாலையினைத்தரித்தஇராகவன், காமர்—அழகு, கதிர்முடி—ஒளிபொருந்திய கிரீடம், புனைக—சூடுவாயாக, அகரந்தொகுத்தல் விகாரம்.

99 ஒழுகுஒளிபரிதி—வீசுகின்றஒளியினையுடைய சூரியன். வெண்மதிக்கடவுள்—சந்திரன், விடணனுக்கு சூரியசந்திர உள்ளவளவும் இம்மாநிலமுள்ளவளவும், இராமசரிதை இந்நிலவுலகில் பயிலுநாள் அளவும் ஆணைசெலுத்திஇலங்காபுரியைப் புரக்கவென மகுடஞ்சூட்டினன். ஆகவே சிரஞ்சீவிகளில் இவனும் ஒருவனுவன் என்பதாம்.

100 வரைஉறழ்தடதோள் — மலைபோன்ற விசாலமாகிய புயங்கள், இருள்வயிறு ஆர்ந்தவெம்கதிர்க்கடவுள்—இருளைத்தன்வயிற்றிலே நிறைத்த சூடான ஒளியினையுடைய சூரியன், குருமணிகலன்கள்—நிறம்விளங்குகின்ற இரத்தினபரணங்கள், அளப்பஅறுநிதியம்—அளவற்றசெல்வம், வழங்கிப்போந்து — கொடுத்துவிட்டுச்சென்று, வள்ளல்—இராமபிரான், விடுத்தான்—அனுப்பினர்.

101 அரக்கன்அன்னதுகேளா — விபீடணர் அதனைக் கேட்டு, கன்னிக்கற்பின்அணங்கு—சீதாபிராட்டியார், களிபெருசோபனம் — மகிழத்தக்கமங்கலச்செயல், இருந்துழி—இருந்தஇடத்தின்கண், அம்சாரியை.

102 அருந்தவம்கற்பிற்குஅரசு-அருமையாகிய தவத்தினலே பெறப்படும் கற்பினுக்கரசியாகிய சீதாபிராட்டியார், அரும்சமத்தில் திருந்தலர்செகுத்து— அரிய போரின்கண் பகைவர்தமைக் கொன்று, நசை—விருப்பம், நினக்குப்பொருந்துழி-நினக்குப்பிடித்தமான இடத்துக்கு, ஏகு-செல்வாய், அணங்கு—சீதை, இளையவன்—இலக்குவன், பொங்குதழல் தருகஎன—விளங்குகின்ற மிக்கநெருப்பினை மூட்டுக என்றுரைக்க, வள்ளல்அருளினல் — இராமபிரான் ஆணையினல் (அநுமதியினல்) இரந்திடஇயற்றிஎரி—அருளினல் இயற்றிய எரி எனக்கூட்டுக.

103 அங்கியங்கடவுள் - தீக்கடவுள், அரக்கன் - இராக்கதனாகிய இராவணன், அளியன்புணர்த்தியமாயையை — எளியேன் உண்டுபண்ணியமாயாசீதையை, மங்கையென்று — உண்மைச் சீதையென்று கருதி, அந்தமாயை — அந்தமாயா சீதையானவள், அழிந்தது — கெட்டனள், இவள் — என்னிடமேதங்கியுள்ள உண்மைச்சீதையானவள், அவன் தீண்டில்—அவ்விராவணன் இவளைத்தொடுவானாகில், கற்பின் வெம்தழலால்—கற்பாகிய கொடியதீயினால், சாம்பர் ஆம்—பொடியாய்ப்போகுவன், அளியன் — தன்மையொருமைப் பெயர், மாயாவடிவினை மாயையென்றது உபசாரம், கற்பின் இதில் இன்தவிர்வழிவந்தசாரியை.

104 ஐயுறேல் — சந்தேகஞ்சிறிதும்படாதே, இந்த அணங்கு—இந்தப்பெண், புனிதன்—பிரமன், முக்கட்தேவன் —சிவபெருமான், புலமைஅரசனும் — அறிவின்மேம்பட்ட அரயனாகியதயரதனும், பூங்கழல்—பொலிவாகியதிருவடிகள் வெய்யவாள்—கொடியவாள். மேதக — மேன்மைதகும்படி கைக்கொள்—ஒருமொழி, தசரதன்—பத்துத்திக்கினும்செல்லும்தேரினையுடையவன்.

105 முனிவு — கோபம் (வெறுப்பு) உரிமைபூண்பதற்கு—அரசுரிமைச்செல்வத்தினை மேற்கொள்ளற்கு. அளித்தனன்— கொடுத்தேன், தயரதன்எழுவாய், என்றுன்பயனிலை அவ்வரம் செயப்படுபொருள்.

106 ஆள்வழக்குஅறநீண்டு—ஆடவர் உலாவல்இல்லாதவாறு நீட்சியுற்று, புலோமிசைகணவன் — தேவேந்திரன் தாளதாமரைக்கண்குரிசில் — இராமபிரான், தசமுகன் — இராவணன், மறிந்த — இறந்துபட்ட, கவிக்குலம் — குரங்குக் கூட்டம், உய்ந்திடும் — பிழைக்கும், நீள் இருந்தடக்கை-முழந்தாள் அளவும் நீண்டபெரியகைகள், நேர்ந்து—உடன்பட்டு.

107 விண்புலத்துஅமரர் - விண்ணுலகத்துத்தேவர்கள், மறைதலும் — காட்சியளித்து மறைந்ததும், கணையால்விங்திடும்—அம்புகளால்மாய்ந்த, உளங்களித்த—மனமகிழ்ந்தன, வாளரக்கன் — விபீடணன், இளையவன் — இலக்குமணன், இவர்ந்து—ஏறி, நளிகடல் — குளிர்ச்சிபொருந்திய பெரிய கடலின், சேதுவை—கரையை.

## 24-வது இராமன் சிவலிங்கப் பிரதிட்டை பண்ணினது

1 வரிசிலை—கட்டு அமைந்தவில் சினகரம்—கோயில் அணிபெறக்கோலி—அழகுறக்கட்டுவித்து, ஆதியும் முடிவும் அறிவுரு இலிங்கப்—முதலும் ஈறும் அறியமுடியாத சிவலிங்கம் (ஆதியுமந்தமுமில்லான்) தன்பெயரால் இனிது அமைத்து — இராமலிங்க மெனப்பிரதிட்டை பண்ணி தூதுளம் கனி வாய் அணங்கு—தூதுளம்பழம் போன்ற செவந்த உதடுகளையுடைய சீதாபிராட்டி, சூழ்ந்து—வலம் வந்து, மலர்தூய்—மலர்களைக் கொண்டு அருச்சனைபண்ணி.

2 அருவம்—வடிவிலது, உருவம் — வடிவுடையது அநாதி—முதலுமில்லாதது. ஒன்ருய் — ஒருபொருளாய் வேருய்—தனியாய், தெரிபவையாகி—காண்டற் குரியதாகி மறைப்பொருள் — வேதத்தினுட்பொருள், சகம் — உலகு இயக்குதல்—நடத்தல். இயங்காக்கரியது — நடத்தாத சான்று, கரியது — சான்றுடையது (அதுபகுதிப்பொருள் விகுதியுமாம்) துரியம்—தன்னையுஞ் சிவனையும் வேறெனக் காணும் துவிதபாவனை, துரியாதீதம் — அவ்விரண்டனையும் ஒன்ருகக்காணும் அத்துவித பாவனை.

3 நீற்று ஒளிபழுத்த—திருநீற்றுப்பிரகாச முதிர்ந்த போற்றி—காத்தருள்க, சிறுவனையளித்த — மார்க்கண்டேயனைக்காத்த, பாற்றினம் — பருந்துக் கூட்டம், மாற்றலர்—பகைஞர், வாள்நகை—ஒளிபொருந்திய புன்சிரிப்பு, திரிபுர

மெரித்த வரலாறு:— ஆதியிலே மயனென்பவனுல், சுவர்க்க மத்திய பாதலம் என்னும் மூன்றிடத்தும் முறையே பொன் இரும்பு வெள்ளியென்னும் மூன்று உலோகங்களால் மூன்று அரண் வகுக்கப்பட்டன, அவ் அரண்களிடத்தில் இருந்த அசுரர்கள் அவ்வரண்களோடு இச்சித்த இடத்திற்கு ஏகி அவ்விடங்களைப் பாழாக்கி வருவார்கள் அவ்வசுரர்கள் ஆற்றும் துன்பத்தைப்பொறுக்கலாற்ருத அமரர்கள் சிவபெருமானிடத்திற்சென்று முறையிட்டனர், அதற்கு அச்சிவ பெருமான் சூரியசந்திரர்களைச்சக்கரங்களாகவும் வேதங்களைக் குதிரைகளாகவும் பிரமனைச் சாரதியாகவும் பூமியினைத் தேராகவும் கொண்டு ஆரோகணித்து ஆதிசேடனுகிய நாணியையும் விட்டுணுவாகிய அம்பையும் மகாமேருவாகிய வில்லையும் கையிலேந்தி அமரர்நாற்புறமுஞ் சூழச்சென்று அத்தேவர்கள் தனித்தனியே தங்கள் ஆற்றலை நினைத்ததைத் திருவுளத்திலே நினைந்து தாமே தம்முடைய புன்முறுவலானே அத்திரிபுரத்தை எரித்தனர் என்பதாம்.

4 பைஅரவுஅணை—படத்தினையுடையபாம்பாகியபடுக்கை, அமர்ந்தபண்ணவன்-விரும்பியமர்ந்ததிருமால், முயங்கி—கூடி, ஐயன்—சாத்தா, இவனுக்கு அரிகரகுமரன் எனவும் நாமமுண்டு, "அரியலாற்றேவியில்லை ஐயன் ஐயாறனர்க்கே" என்பது அப்பர் அருண்மொழி, துவர்வாய் — பவழம் போலும்வாய், பொய் இகழ்ந்து உணரும் புண்ணியர்—நிலை நிலையாமையின் பாகுபாட்டினையுணர்ந்து மெய்யினையேவிரும்பியுபாசிக்கும் ஞானியர், சிவனடியார் என்பது பொருள்.

5 இதயம்—உள்ளம், இருதயம் இதயம் எனவாயது, புலியதள்—புலித்தோல், மன்றல் — வாசனை, கவுரி—உமாதேவியார், ஓர்பங்கு-ஒப்பற்ற இடப்பாகம், உயர்மழவிடை—உயர்ந்ததரும வடிவமாகிய என்றும் இளமையாகிய இடபம், உயர்த்த-கொடியாகஉயர்த்தின, குன்றவில்—மகமேருவாகியவில், கோதுஅறு—குற்றமற்ற, ஊடு—நடு.

6 குரவர்—தாய்தந்தைஆசான், கள்ளுநர் — களவாடுபவர், நறவம்-கள் (சுரா) இணங்குநர்—சேர்ந்தவர், பாதகர்—பாவிகள், திரையெறிநன்னீர் — அலைவீசுங்கடலாகியசேது தீர்த்தம், ஆடி—முழுகி, தெளிந்து—பாவநீங்கித்தெளிவுற்று இவ்விலிங்கம்—இராமலிங்கம், பதமலர்நீழல்வீற்றிருத்தல்-சிவகதிசேர்தல்.

7 அம்கண்மாஞாலம்—அழகிய இடமகன்றபெரிய பூமி, அழியாச்சேது—என்றுமழிவுறாத இவ்இராமசேது, அகன்றிடாது —நீங்காமல். வரம்புகன்று-வரத்தினைக்கூறிக்கொடுத்து வானரத்தலைவர்—சுக்கிரீவனும் அங்கதனும், சிங்கஏறுஅனையான்—இராகவன்.

8 இரவிசிறுவன்—சூரியகுமாரனாகிய சுக்கிரீவன், இற்கிழமை — இல்லத்திற்குரிமை, அயில்புரைநெடும்கண் —வேல்போலும்நீண்டகண்கள், உருமை—என்பவளும் சுக்கிரீவன்மனைவியாம், சானகி — சனகனுடையமகளாகிய சீதை, இறைஞ்சி—வணங்கி.

9 தமிழ்முனிமனையாள்—அகத்தியருடையமனைவியாகி உலோபாமுத்திரை, ஓதுகினும் — கூறினும், இமிழ்—ஒலி, கடல்அடைத்தது — சேதுபந்தனஞ்செய்தது, அமிழ்தினும் இனியாய் — அமிழ்தினும்இனியவளே, (விளி) சாலைகள்—அகத்தியருடைய ஆச்சிரமங்கள், பரத்துவன் — பாரத்துவாசன்.

10 பழுது — குற்றம், பரமன் — மேலானகுணங்களுடைய இராமபிரான், சென்றெய்த — அடைய, (ஒருசொன்னீர்மைத்து) உயர்தவமுனி—உயர்வாகியதவமுடையபாரத்துவாசமுனிவன், ஆசனம்—இருக்கை, உழையுறும்எவர்க்கும்—புடைசூழவந்தஅனைவருக்கும்.

11 முனியொடு — முனிவரிடத்தில், (உருபுமயக்கம்) வள்ளல்—இராமபிரான், மாருதி — வாயுகுமாரனாகிய அநு

மான், உரைக்குதி—சொல்வாய், மனோவேகத்தினும் சொல் வேகத்தினும் விட விரைவாகச்சென்று பரதனுக்கு அநுமான் இராமன்வரவினை அறிவுறுத்தினன்.

24-வது. இராமன் சிவலிங்கப்பிரதிட்டைபண்ணினது. முற்றும்

## 25-வது இராமன் முடிசூடின அத்தியாயம்

1 உள் உவந்து—மனமகிழ்ந்து. மான்மதம் — கஸ்தூரி குவவி—சேர்த்து. அகலம்—மார்பு. அகம்-மனம். வாள்திறம் —வாள்விமை. இளையவன் — சத்துருக்கன், நீல்நிறவண்ணன்—நீலநிறவண்ணமுடைய இராமபிரான் ஆங்கு—அவ்விடம்.

2 கார்வண்ணன்—நீர்உண்டகரியமேகம் போன்ற நிற முடைய இராமன். தாழ்ந்து—வணங்கி தாமரையோன்—பிரமன், மனத்தினில் அளித்த வசிட்டன்—மனத்தினால் உண்டுபண்ணப்பட்ட வசிட்ட முனிவன், குடம்கை—உள்ளங் கை, நெடியகண்ணி—நீண்ட கண்களையுடைய சீதாபிராட்டி யார், உட்குழைந்தார்— உள்ளங்குழைந்தார்.

3 செயிர்—குற்றம், சிலைத்தழும்பு—வில்அழுந்தியவடு நந்திக்கிராமம்—பாதுகைகள் இருந்த இடம் (ஊர்) மயிர் வினைமுடித்து — குடுமிகளைந்து, அணியா—அணிந்து, உயிர் நிகர் — உயிரைப்போன்ற, இரவிசேய் — சுக்கிரீவன், அரக்கர்கோன்—விபீடணன், இமைக்கும்-வீசும், அளகையர் கோன்— அளகேசனாகிய குபேரன்

4 அய்யன் — இராமபிரான், இளவல்—சத்துருக்கனன் கவிகை—குடை, பொய்அறும் அரக்கன்—பொய்நீங்கிய விபீ டணன், இரட்ட—வீச, சத்ருஞ்சயம்-தசரதனுடைய பட்டத் துயானை, மனுடரின்—மனிதரைப்போல, மையல்வாரணம் —மதம்பிடித்த ஆண்யானை (பெண்யானைகட்கு மதம்பிடி யாமை யுணர்க)

5 ஏர்குடியிருத்தல்-அழகு ஒருங்கிருத்தல், தொண்டை—ஆதொண்டங்கனி (கொவ்வைக்கனியுமாம்) புறங்கொடுத்தல்—பின்னிடல், சிவிகை—பல்லக்கு, பயில்தரும் உறையுள்—அந்தப்புரம், இராமன் புகுந்தான் எனமுடித்த

6 கங்கை முதலாம் நதிப்புனல்—கங்கை, யமுனை, சரசுவதி, கோதாவரி, துங்கபத்திரா, நருமதை, சிந்து, காவேரி, தாமிரபரணி, ஒரேழ்கனைகடல்—பாற் கடல், நன்னீர்க் கடல், உவர்க் கடல், நெய்க் கடல், கருப்பஞ்சாற்றுக் கடல், தயிர்க் கடல், சுராக்கடல் என்பனவாம், மங்கல முழவம்—மங்கல வாத்தியம், கறங்க—ஒலிக்க, நீர் ஆட்டி—மஞ்சனம் ஆட்டி. மடங்கல் அம்தவிசு—சிங்காசனம், அம்கலுழ்மேனி—அழகு ஒழுகுகின்ற மேனியினை யுடைய, அணங்கு—சீதாபிராட்டியார், அவிர்—விளங்கும், மணி முடிபுனைந்தான்—இரத்தின முடியினைச் சூட்டினன்.

(25 இராமன் முடிசூடின அத்தியாய முற்றும்)

## 26-வது அகத்தியன் இராவணன் மரபுரைத்தது

1 மரகதக்கொண்டல் — இராமபிரான் (உவமையாகு பெயர்) பரவுதல்—துதித்தல், அகத்தியன் முதலாமுனிவர் பாரத்துவான் புலத்தியன் ததீசி மரீசி அத்திரி கௌதமர் முதலினோர், வாழ்த்தலும்—வாழ்த்துதலைப்புரியவும், ஐயன்—இராமபிரான். பூசனைபுரிதல் — பூவினையெடுத்துப் பூசித்தல் பருகும்தமிழ்முனி — குடித்த அகத்திய முனிவார், ஈங்கிவை—இராவணன் மரபு முதலியன

2 இகல்—மாறுபாடு (வலிமை) விளக்கும் — உண்டு பண்ணும், கந்துஅடு-கட்டுத்தறியைமுறிக்கும், களப்படுத்தி—போர்க்களத்தில் வீழ்த்தி, அளித்தாய்—புரந்தாய், அகம் குழைந்து —மனங்கரைந்து.

3 வேரொடும் — அடியோடும், எள்ள அரும்— இகழ தற்குமுடியாத, திறல்—வலிமை, எவன்—காரணம்யாதோ? தெள்ள அரும்—தெளிதற்கரிய,சீர்த்தி—மிகுபுகழ், கொள்ளை வண்டு—மிகுதியானவண்டுகள்,, அறைதார்—ஒலிக்கும்மாலை.

4 குமரிவண்டு — இளமையானவண்டுகள், தாமரைக் கிழவன்—பிரமதேவன், திமிரம்-இருள், அமைவுடன்—மன வொருமைப்பாட்டுடன், அம்பகடு—அழகிய வயிறு, புனல் ஆட்டயர்ந்தனர்—நீர்விளையாடல் புரிந்தனர், ஆல்அசைநிலை,

5 ஆங்கவர்தம்மை — அவ்விடத்து அத்தேவமாதரை, கருப்பம்—சூல், வெரீ — அஞ்சி, ஈதுஉணர்ந்திடாது—புலத் தியன் கூறியசாபத்தினையறியாது, தன்தந்தைபால் — தன் தகப்பனுராகிய திரணவிந்துவென்பாளிடத்தில், ஈது—தான் கருவுற்றசெயலை.

6 திரணவிந்துவென்பான் தன் புதல்வியரைப்புலத்திய முனிவர்க்கு மணஞ்செய்து கொடுத்தான், விரை — மணம், புலத்தியற்கு விச்சிரவாவென்பவனைப் பெற்றுள், பரத்துவன் —பரத்துவாசன், வேட்டு-விரும்பிமணந்து, வயிச்சிரவணன் விச்சிரவாவின்புதல்வன், நோற்றனன்—தவம்புரிந்தான்,

7 தூற்றும்—தெளிக்கும். கங்கைவார்சடையோன்— சிவபெருமான், கோதறுமுனி — வயிச்சிரவணன், இயக்கர் —தேவகணங்களில் ஒருவகையர், இராக்கதரெனவும்படுவர், வேந்தன் ஆகுகஎனவரமளித்தான் இறைவன். பறந்து செல்விமானம்—வானவூர்தி. பரிவொடும் — ஆசையோடும் உறைந்திடும்—வாழ்க்கைபுரியும்.

8 தொன்னகர்—பழமையானநகர், தொன்றுதொட்டு —பழமைதொடங்கி. ஒன்றரும்—பொருந்துதற்கரிய, நன்று அறிமுனிவ — நல்லனஅனைத்தும் அறிந்த முனிவரே? நாள்மதி — பிறைச்சந்திரன், உளர்கொலோ — உள்ளார் களோ? காதையை—வரலாற்றினை.

9 கமலப்பொகுட்டின்முதல்வன் — பிரமதேவன், அன்னோர்—அவர், இயக்கர்—இராக்கதர் (அரக்கர்) கேதி பிரகேதியென்பவர்அரக்கர்கள்.

10 ஆலம் — ஆலகாலவிடம், கேதியென்பவன் காலனென்பவனுடன்பிறந்தபயையென்பவளை மணந்து மின்னுக்கேசன்என்பவனைப்பெற்றான், வேலையிடத்தில் — பாற்கடலிடத்து.

11 மருவார் — பகைவர், தரையாள்சந்தி — பூமியினையாளுகின்ற சந்தியென்னும்அரசன், இவ்வரசன்மகள் சாலகடங்கடையை மின்னுக்கேசன் மணந்தனன், முயங்கல்—கூடல், கருவுட்கொண்டு — சூல்கொண்டு, கவின்மந்தரம்—அழகியமந்தரமலை, கலந்தாள்—சேர்ந்தாள்.

12 மைதோய்—நீலநிறமேகங்கள்படிந்த, குடுமி—சிகரம், வயிறுவாய்த்து —பிள்ளையினைப்பெற்று, வெய்யகாமம் -கொடியகாமம். கனற்ற-சுடுதலைச்செய்ய, மின்னுகேசனும் சாலகடங்கடையென்பவளும் ஈன்ற பிள்ளையினைவிட்டு விட்டுத் தனித்துப்போயினர், தன்னந்தனியாகக்கிடந்த குழவி வருந்தியழுதலைப் பரமேசுவரன் கண்ணுற் கண்டனன். கலுழ்தல்—அழல்,

13 ஏயசிறுவன்—அங்ஙனந்தங்கிக்கிடந்த அம்மகவினை, தாயின்அளவின்—தாயினால் (வளர்க்கப்படும்) அளவுபோல, இன்றேவளர்க — இப்பொழுதே வளர்வதாகுக, ஆயஅரக்கன் — அப்பெற்றிவாய்ந்த அவ்வரக்கனுக்கு, வேய்மென்றோட்கவுரி — வேயுறுதோளியாகிய பார்வதிபிராட்டியார், விழைவின்—விருப்பினால்,

14 இராக்கதமகளிர் கருவுற்றவுடன் கருவினைப்பெறவும், பெற்றவன்றே தாய்மரிக்கவும், அங்ஙனம் ஈன்ற குழந்தை விரைவின்வளரவும், பார்வதிதேவியார் வரமருளினமை குறிக்கப்பெற்றுளது இச்செய்யுள். பரித்ததாய்—கருவினைத்தோற்றுவித்ததாய், பொன்றிட—இறக்க, இறை—சிவபெருமான்.

15 கச்சை—யானைகழுத்திடு கயிறு, யானையின்தோல் போர்த்தாடுங்கடவுள்—யானையின்தோலினை உரித்துப்போர்த்திக் கொண்டவனாகிய சிவபெருமான் (மாதங்காரி யென்னு நாமம் பெறுவர்.) சுகேசன் மின்னுக்கேசன் மகனுவன் எந்தை—சிவபெருமான், கிராமணிதன்மகளை சுகேசன் மணந்து கொண்டனன்.

16 உளைந்த—வருந்தின, தும்பி-வண்டு, சிறை-இறகு அலம்வரும் சுழலும், தேவவதி கிராமணியென்னும் இராக்கதன்மகள் சுகேசன் தலைவி இவ்விருவருக்கும் மாலியவான் சுமாலி மாலி என்பவர்கள் புதல்வராகத் தோன்றினர் வெருவரும்—அஞ்சும், கொடும்தழல் — பஞ்சாக்கினி தவம்கோலினர்—தவத்தினை வரம்புகொண்டு செய்தனர்.

17 மறைக்கிழவன்—வேதாவென்னும் பெயர் பூண்ட பிரமன், மகிழ்ந்தனன்—மகிழ்ந்து (முற்றெச்சம்) பற்றலர்—பகைவர், அருள்பாலி—கொடுப்பாயாக, கொற்றம்உற — வெற்றியுற, விச்சுவகன்மா—தேவதச்சன்

18 விண்ணகர் — அமராவதிபட்டினம் எழில்திகழும் —அழகுற்று விளங்கும், விழுத்தகுநல்நகரம்—சிறந்த நல்ல நகரம், ஈங்குஇயற்றுக — இவ்விடத்தில் உண்டாக்குக, கண்வழுக்குகதிர்—கண்ணொளியினை இழக்கின்ற ஒளி, உடலக்கண்ணன் — உடலிட முழுதுங்கண்களையுடைய இந்திரன், நண்ணா-வந்தடைய, முனம்-முன்பு (இடைக்குறை) அமர்திர்-அமருவீர்களாக, வாவும்பரி, வாம்பரியெனவாயிற்று, (பாய்ந்துசெல்லுங்குதிரைகள்.) புக்கார்—அடைந்தனர்.

19 கந்தருவகுலத்துதித்த நருமதையென்பவளிடத்து சுந்தரி கேதுமதி, வசுதையென்னு மூன்றுமகளிர்தோன்றினர் அம்மூவரையும் முறையே மாலியவான், சுமாலி, மாலியென்னு மூவரும் மணம்புரிந்துகொண்டனர், மைந்து — வலிமை, வதுவை—திருமணம்.

20 மாலியவானும் சுந்தரியுங்கூடி, வச்சிரமுட்டி, எச்சகோபன், உன்மத்தன், விரூபாக்கன், துயில்வோரைக்கடிவோன், மத்தன், துன்முகன், என்னும் புதல்வர்களையும், பெற்றனர். சீலம்உறுகேதுமதி—ஒழுக்கம்நிரம்பியகேதுமதியென்பவள், தெரிக்கல்உற்றும்—சொல்லல்உற்றும்.

21 கேதுமதியென்பவள் சுமாலியைக்கூடி, விகடன், பிரகத்தன், காலகார்முகன் பாசக்கன்னன், அகம்பனன், தண்டன், சங்கிருதி, புகைக்கண்ணன், பிரசங்கன், சுபாரிசன், என்னும் புதல்வர்களையும், கைகசி, கும்பீனசி, புட்போற்கடை, என்னும் புதல்வியர்களையும் பெற்றாள், பகர்அமுதம் உறழும் — புகழத்தக்க அமிர்தினையொக்கும், அன்று, ஏ. அசைகள்.

22 மாலியெனும் வலிய இராக்கதன்வசுதையொடுங் கூடி, நீலன், அனலன், அரன், சம்பாதி எனும் நான்கு புதல்வரை யீன்றனன், ஞாலமுழுதும் — உலகம்எல்லாம், கொடும்கோன்மை—கொடுங்கோலாட்சி.

23 விண்ணவர் — தேவர், வெவ்அரக்கர் — கொடிய இராக்கதர், ஆற்றுது—பொறுக்காமல், கயிலைமேவி—கயிலாயமலையினைவிரும்பியடைந்து, கதிர்க்கற்றை—கதிர்களின்றொகுதி, உறைக்கும் — துளிக்கும், தாழ்சடையோன் — தாழ்ந்த கபர்த்தமெனுஞ் சடையோனாகிய சிவபெருமான், கண்ணறையர் — வன்னெஞ்சர், களைகண் — பற்றுக்கோடு, கடிந்து—தொலைத்து, இனிது அளித்தி—இன்புறப்புரப்பாய், இரந்திடலும்—இரங்கிவேண்டலும், எமக்கு—எம்மை என வருபுமயக்கமாக்கலுமொன்று, அண்ணல்—அண்மைவிளி.

24 தூயநறுமலர் — தூய்மையான மணமுறுபூக்களை, சுகேசன்மைந்தர் சிவபூசகர்கள் எனக் குறிப்பிடப்படுகின்றது ஆயிரம் வெம்பிழைகள்—பலகொடியபிழைகள், கோறல்—கொல்லுதல், அடுப்பது—அடுத்தல், மாலைபணித்தனன்—

திருமாலிற்குக் கட்டளையிட்டேன், சென்மின்—செல்லுங்கள், குறையுரைப்ப—விண்ணப்பிக்க. அதற்குஇயைந்து-அதற்கு உடன்பட்டு.

25 புலோமிசை — இந்திராணி, கவ்வையொழிந்து—துன்பநீங்கி, வெவ்வினைத் தூதுவர்—கொடியதொழில்புரியும் ஒற்றர்கள், வெகுண்டு—கோபமுற்று, பவ்வம்—நுரை, பண்ணவர்—தேவர்.

26 இருந்தலர்—பகைவர்களாகிய அரக்கர்கள், செவித்தலை—செவிகளிடத்து, கரும்கடல் — பெருமை பொருந்திய திருப்பாற்கடல், முருங்குஎரி—அழிக்குந்தீ, மூரி—வலிமை, கலுழன்—கருடன், வருந்தலிர்—வருந்தாதீர்கள், வாள்அமர் அழுவம்—வாட்போர்புரியும்இடம்.

27 தோற்றமும் முடிவும்இல்லான்— (ஆதியும் அந்தமும்) பிறப்பும் இறப்பும் இல்லாதவனாகிய திருமால், சிறகு — சிறகர் என்பதுபோலி, கவிழ்தலும்—இறந்துபடவும், அஞ்சிஇரிய—பயந்துஓட்டமெடுப்ப. கூற்றுறழ்திகிரி—இயமனைப்போன்ற சுதரிசனமென்னுஞ் சக்கராயுதம், தலைகுறைத்திட்டான்—தலையினைவெட்டி வீழ்த்தினான்.

28 வெங்களத்தின்வீழ — கொடிய போர்க்களத்தின் கண்மடிய, ஐயன்—திருமால், தோன்றல் — மகாவிட்டுணு, நக்கான்—சிரித்தான்.

29 நக்கவாளரக்கன்-மாலியவான், செக்கர்-செவப்பு, செங்கேழ் — செவப்புநிறம், மொத்துண்டு — அடியுண்டு, ஒக்கல்-ஒத்தவர்களாகிய உறவினர், வெய்யஉலவை-கொடிவாயு. பாதலம் மருங்கு — பாதலவுலகு, மைக்கடல்—கரிய நிறமுடையகடல்.

30 பாசிழை — பசியஅணிகலன், பருமம்—ஓர்அணி, ஒளிறும்—ஒளிவிடும், கேகசிவதுவை—கேகசியென்பவளின்

திருமணம், இயக்கர்வேந்து — குபேரன், நோனான்— பொறுக்கலாற்றான்.

31 நஞ்சுஅயில்—விடந்தீற்றியவேல், கேட்டி—கேட் பாயாக விச்சிரவாவென்பவனை மணந்து வலியுறுமக்களைப் பெறுவாயாக என மாலியவான் தன்மகளாகிய கைகசியைப் பார்த்துச் சொல்ல அவ்வாறே வந்து தெய்வீகத் தன்மை வாய்ந்த அம்முனிவனைக்கண்டாள்.

32 நாணொடும் ஈண்டுபுக்கநங்கை—நாணமுடன் இவ் விடம் வந்துற்றபெண்ணே! வேணவா—வேட்கையொடுற்ற ஆசை, மாண்உடைமைந்தர் — மாட்சிமிக்க புதல்வர்கள், வயிறுவாய்த்திடல்—பிள்ளைகளைப்பெறல்.

33 திதலை—தேமல், பொம்மல்—பூரித்தல், வெருவச் செய்யும்—அஞ்சுறச்செய்யும், பெறுதி-பெறுவாய், நாளிலம் —நான்கு வகைநிலம்.

34 கன்னல்—கரும்பின்சாறு, கசப்ப-கசப்புற, களிந்த நிறைந்த, உயிர்க்கும்—பெற்றெடுக்கும், பெட்பு—விருப்பு, மன்னும்—தங்கும், ஆயுள்எய்தி—ஆயுளையடைந்து, உலப் பில்நாள்—அநேகநாட்கள்.

35 திருவிலி—திருஇல்லாதவனாகிய இராவணன். கரு வரை—கரியமலை, முன்னர் இராவணன், பின் கும்பகர்ணன், பின் சூர்ப்பநகை ஆகியவர்களைப் பெற்றாள்.

36 வீடணன்—விபீடணன், வியப்பொடும் — ஆச்சரியத் தோடும், அரிக்கண்ணாள்—செவ்வரி கருவரி பரந்த கண்களை யுடையவளாகிய கைகேசி என்பவள், அந்தமைந்தரை—அந் நால்வரையும், சேடு—அழகு, இயக்கர்கோன் — குபேரன், நீடுபெருந்தவங்கள்- பெருந்தவங்கள், நில்மின்-நிற்பீர்களாக

37 ஐந்துதழல் (ஐந்தழல்) பஞ்சாக்கினி, ஆயிரம்பரு வம்—ஆயிரம்ஆண்டுகள், மைந்துஉடைசென்னி— வலிமை

பொருந்தியதலே, பத்தாயிரம் ஆண்டுகள் தவம்புரிந்தனன், வெட்டும்ஏல்லை—அறுக்கும்போழ்து, செங்கமலப்புத்தேள் செந்தாமரைமலரில் வீற்றிருக்கும்பிரமதேவன்.

38 விஞ்சையர், அவுணர் சித்தர், உரகர், விண்ணவர் — வித்தியாதரர் அசுரர், சித்தர்கள், நாகர், தேவர், துஞ்சுதல்—இறந்துபடல், துனைவு—விரைவு, வெஞ்சமம்-கொடிய போர், கஞ்சம்—தாமரை, இரத்தல்—வேண்டல்.

39 வேண்டுவ—வேண்டியனவற்றை, தருமசிந்தை—தருமமேபுரியவேண்டுமென்னும் எண்ணம், எய்துநாள்—ஆயுள் நாள், உலவாது—வற்றாது, ஆவி—உயிர், பீடு—பெருமை, நல்கு (நல்குக) கொடுத்தருள்க, பிதாமகன்—பிரமதேவன், விண்ணோர்—தேவர், மாடுறு—பக்கத்தில் உற்ற, வழங்கல்—வழங்கற்க.

40 அரக்கன்நாவில் — கும்பகன்னன் நாவினிடத்து, வாணியை—சரசுவதிப்பிராட்டியாரை, ஏவி—அனுப்பி, நித்திரை—உறக்கம், மருண்டு—மயங்கி, தன்உலகு—தன்உலகமாகியசத்தியஉலகம்.

41 ஊழ்வினே—பழவினே, பாழி—பெருமை, வாழி—வாழ்வாயாக, (வியங்கோள்) பாதலவுலகிலுள்ள சுமாலியென்னும் அரக்கன் பேரன்மார் முறையிலுள்ள இராவணனியரைத் தழுவிக் கூறுகின்ருன், தழீஇ—தழுவி, வழங்கல்—கூறல், வாழிய என்பதின் ஈற்றுயிர் மெய்கெட்டது.

42 கொடியமதில்—கொடிகள்கட்டப்பெற்றமதில்கள், மூதூர்—பழமையாகிய இலங்கைநகர், மறுத்தல்—தடுத்தல், உடல்சினம்—வருத்துகின்றகோபம், பிரகத்தன்-இராக்கதன், உருத்து — கோபித்து, அடல்கெழும் அவுணர் — வலிமைமிகுந்த அசுரர்கள், எண்ணுது—கருதாமல், அன்னோர்மிடை தருதுறக்கம்—அவர்கள் நெருங்கி யுறைந்தசுவர்க்கவுலகு, விரகு—உபாயம், ஆங்கு—அசை, ஓகாரம் வினுப்பொருளது.

43 கோடி — கொள்வாய், மேதகு குபேரன்பால் — மேன்மைதங்கிய குபேரனிடத்து, இனிதினில்—இனிமையாகவே. வேண்டுக—கேட்பாயாக, இயம்பலோடும்—சொல்லவும், இயக்கர்கோன்—குபேரன்.

44 அளகைமாநகர்—அளகாபுரி (குபேரன்பட்டினம்) அமர்தி—இருப்பாய், தளைஅவிழ்—முறுக்குஅவிழ்ந்த, அலிங்கல்—மாலை, நல்கு—கொடுப்பாய், உவப்பொடும்அளித்து—மகிழ்வோடும்கொடுத்து, அரக்கன்-இராவணன், முடிகவித்து—முடியினைச்சூடி, உளம்மகிழ்தந்தை—உளம்மகிழத்தந்தையானவர், மகிழ் என்றும்முதனிலை ஈண்டு வினையெச்சப் பொருளில் வந்தது.

45 மின்றும்நாக்காலகேயன் — மின்னுகின்ற நாவினையுடைய காலகேயன் என்னுமரக்கன், விழைவொடும்—விருப்பத்தோடும், வதுவை ஆற்ற — மணம் புரிந்கொள்ளுமாறு, தயாவின்நல்கி—அன்புடன்அளித்து, மன்னியகானின்—நிலைநிலைபெற்ற காட்டின்கண், கன்னல் — கருப்பஞ்சாறு, அம்குதலை— அழகியமழலைமொழி, செவ்வாய்கன்னி — செவந்த வாயையுடைய மண்டோதரி.

46 மயனைக்கண்டு இராவணன் வினவியபோது மயன் என்பவன் தன்பெயரைக்கூறி, யான் ஏமை என்பவளைக்கூடி மாயாவி, துந்துமி என்னும் பிள்ளைகளையும், இப்பெண்ணையும் பெற்லனன் என்றனன். அம்புஅலைத்து-அம்பைவருத்தி.

47 மேயநீ-மேவிய நீ, மயன்வினவியபோது இராவணனவன் நான் விச்சிரவாவின் நற்புதல்வன் என்றுரைத்தனன், காய்எரி—சுடுகின்றநெருப்பு, பரிதிவேலும் — சூரியனைப்போன்ற வேலையும், பரிவுடன்—அன்புடன், மண்டோதரிதனை அக்கினி சான்ருக இராவணனுக்கு மணம்செய்து கொடுத்தான்.

48 முருக்குஇதழ் — முருக்கம் பூப்போன்றசெவ்விய உதடுகள், கன்னி—மண்டோதரி, அரக்கர்கோன் — இலங்கேசன், விரை—மணம், விரோசனன் புதல்விபெற்ற வச்சிரச்சுவாலைதனைக் கும்பகருணன் மணந்தான்.

49 ஆடல்வேல் — வெற்றிவேல், சயூடணன் புதல்வி சமையென்பவளை விபீடணன்மணந்து இல்லறம்நடத்தினன். பின்னர், இலங்கேசனுக்கும் மண்டோதரிக்கும் இராவணி யென்பவன் புதல்வனாகத் தோன்றினன்.

50 மேகம்போல் முழக்கஞ்செய்த குரலுடைமையினால் மேகநாதன் எனப்பெயர் சூட்டப்பெற்றான், எரியென—அக்னிபோல, மன்பதை—மக்கட்கூட்டம், வருத்தல்—துன்புறச்செயல், அளகைவேந்தன்—குபேரன்.

51 உன்னுடைத்துணைவன் — உன்னுடைய சகோதரனாகியகுபேரன். திங்கட்கண்ணிசேர்வரதன்—சிவபெருமான். ஏதம்இல்அன்புபூண்டான்—குற்றமில்லாத தோழமை மேற்கொண்டான், உலகுக்குஎல்லாம் — உலகில்மக்கட்கெல்லாம், தீதிழைத்தருளல்—துன்புறுத்தற்க.

52 வெம்சமம் — கொடியபோர், விரிதழல் — பெருநெருப்பு, நஞ்சுகொப்புளிக்கும் — நஞ்சினை வாரிவீசும். தடறுஉரீஇ—உறையினின்றும்நீக்கி, நாமவேலான்—அஞ்சத்தகும்வேலினையுடைய இராவணன், துஞ்சலில்விடையான்—என்றும் அழிவில்லாதவனாகிய சிவபெருமான், துணித்து—வெட்டி.

53 வீழ்த்து—கொன்று, காழ்த்த — வயிரங்கொண்ட, கதழ்சினம் — மாறுபட்டகோபம், சூழ்த்த—சுற்றிய, துனைவின்—விரைவின், அளகைமூதூர்—குபேரனுடைய அளகை யென்னும் பழையநகர், மருங்கு — நாற்புறம், வளைந்து கொண்டான்—முற்றுகையிட்டான்.

54 வாயிலோர் — வாயில்காப்பாளர், வாளரக்கர்கோமான்—இராவணன், சிதர்ந்து—துகளாகி, மாணிபத்திரன் — —குபேரனின்சேனுதிபதி, உடல் — மாறுபடும், ஆவியுலந்திட—உயிர்தொலேய, சுடர்செய்புட்பகவிமானம் — ஒளிவிடுகின்றபுட்பகமெனும் பெயரிய வானஊர்தி.

55 இருநிதி—சங்கநிதிபதுமநிதிஎன்பன, துயர்ஒழிந்து —துன்பநீங்கி, இமைப்பின்—ஒருநொடிப்பொழுதின், வெய்யோன் — கொடியவனுகிய இராவணன், பொருவருங்கிரி— உவமையில்லாதகயிலேமலே, தெருள்—தெளிவு.

56 இத்தலே — இவ்விடம், எந்தைஇறைவியோடு— பரமசிவன் பார்வதியுடன், மைத்தகுமிடறு—நீலகண்டம், நந்தி—அதிகாரநந்தி, நகுதலும்—சிரித்தலும், உருத்துவைதான்—கோபங்கொண்டுசபித்தான்.

57 தசக்கிரீவன்—பத்துத்தலேயன் (இராவணன்) எய்தினில்எடுப்ப — எளிதாகத்தூக்க, ஊன்ற — பதியவைக்க (அழுத்த) பையுள்-துன்பம், பழிச்சி-துதித்து, வெய்யோன் —இராவணன், சாமகானம்—சாமவேதஒலி, பாடலுற்ருன்—பாடினுன்.

53 இராவணன்—ஓயாமல்அழுபவன், ஏய்வுற—இசையும்படி, மாய்வறுவரம்—சாகாவரம், மீயுயர்—மேலேஉயர்வுற்ற, வெற்பின்மேவிட—மலேயினில்பொருந்திட.

59 வேதவதியென்பவள் குசத்துவசன் மகளாகும், அண்டர்—தேவர்கள், மறையோர்_வேதமோதும் அந்தணர் சாற்றினுர்—கூறினுர், ஆல்—அசை.

60 சொல்லருந்தந்தை — கூறற்கரியபெருந்தவத்துத் தந்தை, (பிதா)முனிவொடும்-தலேவனுகிய குசத்துவசனுடன், முடிந்தாள்—இறந்தனள், கல்லென்நீர்வேலே—கல்லென்னும் ஒலிக்கின்ற நீரையுடைய பாற்கடல், நெடியோன்— திருமால்.

61 வலிதின்பற்றும் — வலாற்காரமாகப் பிடிக்கும், குழலை—கூந்தலை, துணைக்கை — இரண்டுகைகள், கிளை— சுற்றப்பண்பினர், சாம்பர்—பொடி, பொன்றிட—அழிவுற, புரிவேன்—செய்வேன், கனல்—அக்கினி.

62 கோற்றொடி — சங்குவளையலையணிந்த வேதவதி. வீரன்-இராவணன், போற்றுஅருமருத்துவப் பேர்புரவலன் —துதித்தற்கரிய மருத்துவப் பெயரினையுடைய அரசன், சாலை—வேள்விச்சாலை, விண்ணோர் — தேவர், வெருவி— அஞ்சி, எழுதி—எழுவாயாக.

63 வெஞ்சினம்—கடுங்கோபம், ஒழிதி — நீக்குவாய், முனிவரர்—இருடிகள், எஞ்சல்இல்—குறைவு இல்லாத, உஞ்ச—உய்ந்த (பிழைத்த) மஞ்ஞை—மயில், அம்சிறை— அழகிய இறகுகள்.

64 இராவணன் என்பவன், காதி, மயன், துற்சந்தன் ஆயமன்னர்களை வென்று, தானை—சேனை, தாதுணம்புறவு— பருக்கைக் கற்களை உணவாகவருந்து புறாக்கள், ஆதவன்— சூரியன், தேய்க்கும்—உராயும்.

65 (அதுகாலை) அயோத்தியாள் மன்னவன் அனரன்ணி யன் என்பவனும், வேண்டிய—விரும்பிய, பொழிய — சொரிய இழிந்து—இறங்கி, நனியடிப்ப — மிகவும்அடித்தலைச்செய்ய, நினைவற்று—நினைக்கும் நினைவு இல்லாமல், அயர்தலும்— தளர்தலும்.

66 மடிதல் வயங்கோடல் — இறத்தலும், வெற்றி கொள்ளுதலும், எள்ளி — இகழ்ந்து, என்மரபில்—எனது வமிசத்தில், ஒருதோன்றல்-ஒருஅவதாரபுருடன், செகுத்திடு வான்—கொல்லுவான், ஒழிந்தான்—நீங்கினான்.

67 ஆற்றல் — வலிமை, கொடியோன் — அரக்கன், இசையில்மாமுனி — நாரதமுனிவன், முன்னம் முனம்— (இடைக்குறை) முன்னர், கூற்றின் நகர்—இயமனுடைய பட்டினம், ஏகும்வழி—செல்லுநெறி,

68 கூற்றோடும் — இயமனோடும், கூறினன் ஏக — மொழிந்துவிட்டுச்செல்ல, பனி—குளிர்ச்சி, அடல்கூர்தரு— வலிமைமிக்க, தென்னந்திசை—தெற்குத் திக்கு.

69 வாயு, சூரியன், நெருப்பு, இயமன் ஆயவர்களுக் குரியஅம்புகள் கூறப்பெற்றுள்ளன, கணை—அம்பு, திறன் மறலி—வலியஇயமன், தண்டம்—கதாயுதம்.

70 மலரோன் — பிரமதேவன், எய்தா — (எய்தி) அடைந்து, விடல்—விடாதே, மைக்கார் நிறம்—மிகக்கரிய வண்ணம், மறைந்து—வெளிப்படாது

71 பிலத்தில் — பாதலவுலகில், உரகர்—பாம்புகள், துரந்து—ஓட்டி, வாளமர்—வாட்சண்டை, கமலத்தயன்— தாமரையில்வந்தவனாகியபிரமன், இணை — உவமை, திங்கள் —மாதம்.

72 நீங்குழி—நீங்கின இடத்து, செருவினில்—போரில் ஏற்ப—எதிர்ப்ப, தேனு—காமதேனு, மைந்தரை—வருண னுடையபுதல்வர்களை, வன்புடைமாதர்—அழகியபெண்கள், பொருவரும்—உவமையில்லாத

73 இராவணி-இராவணனுடையபுதல்வன், எண்டோள் அந்தணன்—பிரமன், அடர்க்கும்செருவினில் — கொல்லும் போரின்கண், தெரிவுறுது — தெரியாதவாறு, ஒளித்து— மறைத்து, திரிதருதேரும் — மாயத்தேரும்.

74 வெருவரல்—அஞ்சல், கும்பீனசி-இராவணன்றன் மகள்போலும், புழுங்கி — வருந்தி, இரந்துரைப்ப — தாழ்

வுரைகூறிவேண்ட, அரக்கர்கோன்நட்டான்—இராவணனுடன் னவன்நட்புப்பூண்டனன்.

75 புலோமிசைக் கணவன்—இந்திரன், மாநகர்—அமராவதிபட்டினம், வீழியங்கனி—விழுதிப் பழம், போக்கு—போதல், நிவந்த—உயர்ந்த.

76 காவின்—பொழிலின்கண், இறுத்திடலும் — தங்கலும், பிள்ளைத் தென்றல்—இளந்தென்றற் காற்று, பிரிந்தார்—பிரிவுற்ற தலைவர், கதிர் பரப்பி—சந்திரிகையினைப் பரப்பிக்கொண்டு, வீழ்வோர்—விரும்புபவர், அள்ளி—வாரி.

77 திங்கட் கொழுந்து—இளஞ் சந்திரன், தணக்கும்—பிரியும், தரளவடம்—முத்தமாலை, மணக்கும்—வாசனை வீசும், வணக்கும்—வளையும்.

78 குடபால் — மேற்றிசையில், வடவாமுகம்—வடக்கின்கண் உள்ளநெருப்பு, வெதுப்ப—வெப்பமடையச் செய்ய, மம்மர்—மயக்கம், உடலும்—வருத்தும்.

79 மணு—அரைப்பட்டிகை, ஏர்—அழகு, இடுகுதல்—சுருங்கல், நுசுப்பு—இடை, கிண்கிணி — சிறு சதங்கை, புலம்ப—ஒலிப்ப, கருங்குழல்—கரிய கூந்தல்.

80 முறுவல்—நகை (சிரிப்பு), இளைஞர்—காளைப் பருவத்தினையுடைய ஆடவர், வேரொடும்-அடியோடும், கவர—பற்ற, பண்—இசை, பாகு—வெல்லப் பாகு.

81 காவி—நீலோற்பலம், குமிழ்—குமிழம்பூ, (மூக்கினுக்குவமிக்கப்படுவது) கடந்து—வென்று, (தாண்டி) அயில்—வேல், ஏவினை—அம்புகளை, ஒன்று அற-சிறிதும் இல்லாதபடி, மாவகிர்—மாவடுவின் பிளப்பு.

82 கைவளர்—பக்கத்தே வளரும், திருவநீள் புருவம்—அழகிய நீண்ட புருவம், மதன்—மன்மதன், சிலை—கரும்

பாகிய வில், இருள் பருகும் — இருளினைக் குடிக்கும், கண் படுப்ப—உறங்க, வாணுதல்—ஒள்ளியநெற்றி.

83 பொன்னசலம் — பொன்மலை, சுமந்து — தாங்கி. மின்னிடை—மின்னல்போன்ற, மருங்குல், மேகலை—இடுப்பின்கண் அணியும் அணி, இரங்க—ஒலிப்ப, அரம்பை—அரம்பை யென்னும் தேவமாதர்.

84 பைந்தளிர் மருட்டிய—பசிய மாந்தளிரும் மருளும் படிச்செய்த, பதத்துணை—இரு பாதங்கள், பிடித்து—பற்றிக் கொண்டு, செந்துவர் — செவந்த பவழம், உய்ந்திட — பிழைப்ப, புரக்கென—காப்பாற்றுக என்று.

85 நின்முன்னவன்—உன்னுடைய தமையன், நிதிக் கிழவன்—குபேரன், குபேரன் மகன் நளகூபரன் ஆம். வரித் தான் — வரைந்துகொண்டான், தகாது — பொருந்தாது, உருத்து—கோபித்து, கட்டுரை—உறுதி மொழி

86 கிளிக்கிளவி—கிளி மொழி, அருளில் தீயோன்—கருணையற்ற கொடியவன், அல்குல் பகர்வோர்—விலைமாதர், அறைந்து—மொழிந்து, வல்லை—விரைவு, வலிதின்—உடன் பாடின்றி வலாற்காரத்தின், புல்லி—கலந்து, துய்த்தான்—நுகர்ந்தான்.

87 அவன்—அப் பாதகனாகிய இராவணன், ஆரமுத மன்னாள்—அரம்பையென்னுமாது, நண்ணி—அடைந்து, ஈங் கிவை — இவ்விடம் நிகழ்ந்த தீச்செயல்கள், இயம்ப—மொழிய, தீங்கு செயின்—தீய செயலைப் புரிந்தால், தெறிக்க—வெடிக்க.

88 அய்ய கமலம்—அழகிய தாமரை, பொதியவிழ்ப்ப—கட்டுவிட, (முறுக்கவிழ) அரிமான்றேர்—பச்சைக் குதிரைகளையுடைய தேர், வெய்யவன்—சூரியன், வெந்திறலரக்கன்—இராவணன், மையிலமரர்—குற்றமில்லாத தேவர்கள்.

89 முகுந்தனுழை—திருமாலினிடத்து, இவைகூற—இராவணன் செய்யுங் கொடுமைகளை மொழிய, வீட்டியிடு காலம்—அழிவு செய்யும்போது, ஈண்டுறல்—இவ்விடம் வந்தடைதல், அந்தில்—(அவ்விடம்) அசை நிலையுமாம், அரும் சமர்—அரிய போர்.

90 தானை — சேனை, வெருக்கொடுமுரிய — அச்சத்துடன் சிதற, அழன்று—கோதித்து, நவை—குற்றம், கதை—தண்டாயுதம், படுத்திட்டான்—கொன்றான்.

91 பைம்பூண்—பசிய அணிகலன், கொள்ளை – மிகுதி பகழி—அம்புகள், குரீஇ — குருவிகள், மொய்த்தென்ன—நெருங்கினாற்போல, வெள்ளைமால் யானை—வெள்ளை நிறமுடைய பெரிய அயிராவத யானை, சிலை—வில்.

92 அட்டதிக்குப் பாலகராவார்—இந்திரன், வருணன், வாயு, கூற்றுவன், அங்கி குபேரன், நிருதி, உருத்திரன் (ஈசானன்) என்பவராம். மருத்துவத் தலைவர்—அச்சுவினித் தேவர்கள், வளைந்து—சூழ்ந்து, பூசல்—போர்.

93 தாப்புலி—வலிய புலி, சயந்தன்—இந்திரன் புதல்வன், யாப்புறுத்திடுதற்கு — கட்டுவதற்கு (பிணித்தற்கு) இகல்—வலிமை, பவுலோமன் வந்து—பவுலோமன் என்பவனவன் வந்து, ஒளிப்ப—மறைத்து வைக்க, பாப்பணைப் பள்ளியான்—பாம்புப் படுக்கையனாகிய திருமால்.

94 வச்சிரப்படை—வச்சிராயுதம், வெய்ய அரக்கர்—கொடிய இராக்கதர்கள், மறிய—இறந்துபட, அமரர்கோன்—தேவேந்திரன், நச்சரவுஅணியும் புத்தேள்—பாம்பாபரண சிவபெருமான், மாயை தன்னால்— மாயாவல்லபத்தினால், விச்சை—வித்தை, யாப்புறுத்து—பிணித்து.

95 வவ்வி—பற்றி, ஏற்ற—எதிர்த்த, அந்தமில்அமரர் —முடிவில்லாத்தேவர்கள், தொலைந்து-அழிந்து, தந்தைமுன் —இராவணன் முன், தானையங்கடலினோடும் — சேனைசமுத் திரத்துடன், இஞ்சி—மதில்கள்.

96 முன்னவன் —முதல்வனாகிய பிரமதேவன், முகமன் —உபசாரமொழி, விடுதி—விடுவாய், நிகும்பலைமகம்—நிகும் பலையென்னும் யாகம், பொன்றிடாவரம்—அழியா வரம், நல்கு—கொடுப்பாய்.

97 அவ்வரம்—சாவாவரம், மீட்டு—மீளும்படிச்செய்து, ஓதி—சொல்லிவிட்டு, செவ்வி—வனப்பு, நாமம்—பெயர், எவ் வெலாத்திசையும்— எல்லாத் திசைகளும் அயர்ச்சி தீர— தளர்வுதீர, வாணிதன்கேள்வன்-கலைமகள் தலைவனாகிய நான் முகக்கடவுள்.

93 ஆள்—வீரன், அகலிகை கௌதம முனிவர்பன்னி, நீளிரும்பாவம்—மிகப் பெரிய பாவம், நெடுந்துயர் உழந்தாய் —மிக்க துன்பத்தால் வருந்தினாய், ஈது— இப்பாவச் செயல், தீரும்—போகும், வேள்வியாற்றி—வேள்வி செய்துவிட்டு.

99 அருமுனிவன்-அகத்தியமுனிவன், இயம்பலுற்றான் கூறத்தொடங்கினான், தோற்றது — தோல்வியடைந்தது, விளம்புக—கூறுக, செப்பல்—கூறல்.

100 பொன்வரை—பொன்மலை, பொற்பு—அழகு. மன் னும்—நிலைபெறும், வாளமர்க்களம் — வாட்போர் செய்யு மிடம், அருச்சுனன்—கார்த்தவீரியார்ச்சுனன், காண்கலன்— காணப்பெறாதவன், (ஆகி)

101 நருமதையாறு—நருமதையென்னும் பெயருடைய நதி, மணற் குன்று —மணலாகிய மலை, அரனுடைப் பூசை— சிவபூசை, அமருமேல்வை—தங்கும்சமயம், வரநதி மேலான நருமதையாறு, தடுத்து—தடைசெய்து.

102 குடபுலம்—மேற்குப் பக்கம், அரக்கர் கோமான்—இராவணன், அடுதிறல்சுதன்—கொல்லும் ஆற்றல் படைத்த மேகநாதன் (இந்திரசித்து) கண்ணுல் அறிக என—கண்ணுல் பார்த்துவிட்டு வருக என்று, அருச்சுனப் போர்வீரியன்—கார்த்தவீரியார்ச்சுனன், நீராட்டயர — நீரில் விளையாடல் செய்ய, எதிர்ந்தது—எதிரேற்று வந்தது.

103 கோபமே வடிவுற்றவன் என்பார், சீற்றமும் தானும் வேறு தெரிகிலா அரக்கன் என்றுர். நீர் குடைந்து மூழ்கும்—நீரில் விளையாடி அமுங்கும், அஞ்சல்—பயப்படற்க, குருதி வெள்ளம்—இரத்தப் பெருக்கு, ஊற்றிருந்து—பெருக்கெடுத்து, உருத்து—கோபித்து.

104 எயிறு தின்று — பல்லைக் கடித்து, எற்ற — வீச, வெருவரல் — அஞ்சுதல், வரைவீழ்ந்ததென்ன—மலை சாய்ந்தாற்போல, விற்கிடை — வில்லினையவிழ்த்துக் கிடத்திய தூரம்.

105 விரைவின் யாப்புறுத்தி — விரைவில் கட்டுவித்து, தாழ்ந்து — வணங்கி, தன்னகர் — தன்னுடைய ஊரினை, ஆழ்ந்த நூல்—ஆழமான நுண்ணிய பொருளைத்தன்னகத்தே கொண்ட நூல்கள் (வேதங்கள்) போற்றி—வாழ்கவெனக் கூறி.

106 தளர்வு—சோர்வு, தன் கிளைப்பரப்பு—தன்சுற்றச் சூழல், அளிமுரல் — வண்டுகள் ஒலி, சிலபகல் — சில காலம், வேட்டு—விரும்பி, மாடம்—பெரிய வீடு.

107 வாளமர் வேட்டு — வாளை யெடுத்துச் செய்யும் போரினை விரும்பி, எங்குளன்—எவ்விடத்துள்ளான், ஆள் அரியேறு—வலிய ஆண் சிங்கம், அறைய—மொழிய, நீறணி கடவுள்—விபூதி தரித்த விமலனுகிய சிவபெருமான், வல்லையேல்—வலிமையுடையையாகில்.

108. தென்னங்கடலின் — தெற்குத்திக்கின்கணுள்ள கடலினிடத்து, இமைப்பின் — இமைப்பொழுதில், பின்போய் — பின்ஞகச்சென்று மறங்கொள்வாலி — அஞ்சாத்தன்மை கொண்ட வாலியானவன். குன்றஞன் றன்னே — இராவணனே வாகு—கைகள். குழைய-நசுக்குண்ண, தாவி-தாவிப்பாய்ந்து.

109 விடுத்து-விடுவித்து, நீயாரை — நீயாவன் ஆகுவை என்ன? கோட்டி — வளேத்து (சாய்த்து) நாண் — வெட்கம் வென்ற — வெற்றியுற்ற, கவ்வை — (அழுக்காறு) துயர் தோழன் — நட்பாளன், எரிகரி — அக்கினிச்சான்று.

110 ஓர் திங்கள் — ஒருமாதகாலம், ஆங்கண் — அந்தக் கிட்கிந்தாபுரி, வீங்குநீர்வேலே — மிக்க நீரினேயுடையகடல் சூழ்ந்து — சுற்றி தோயும் — படியும், இனிது இருந்தான் — கவலேயின்றித்தங்கிஞன்.

111 பாரினில் விசும்பினில் பாதலத்து — சுவர்க்கமத்திய பாதலவுலகின்கண், இணேயிலாத — உவமையில்லாத, மாருதி — அநுமன், இரவிசேய் — சுக்கிரீவன், மாழ்கி — மயங்கி, கார் வரை — கரியமலேகள் கழறுக — மொழிக.

112 கவிகுலக்கு — வானர குலத்திற்கு, கிடைபுரை — செந்நெட்டியொக்கும், வளிக்கு-வாயுதேவனுக்கு, இரவியை — சூரியனே, மாசறுகனி யென்று — குற்றமில்லாதபழம் என்று இராகுவவ்வுழி — இராகுவெனும் பாம்புபற்றுகின்றபோது பகவான் — இந்திரன்.

113 தாவ-பாய, நந்தல்-கேடு, கதுப்பின்மேல் — கன்னத்தினிடத்து, தாக்கல் — அடித்தல், வீந்தமை — இறந்தமை உலவை — காற்று எவ்வுயிரும் — எல்லாவுயிர்களும், நின்றிட இயற்ற-நிற்கும்படிச் செய்ய, இறுத்தான்-வந்துசேர்ந்தான்

114 கமலப் பொகுட்டுறைகடவுள் — பிரம தேவன், நீவலும் — தடவிக் கொடுத்தலும், காற்று இளம் சிறுவன் —

மாருதி, உய்ந்து—பிழைத்து, வச்சிரப்படையோன்-இந்திரன் அவன் அநுமன் என்று ஒரு பெயர் புனைய ஏனைய தேவர்கள் என்றும் பொன்றுவரமளித்தனர்.

115 காற்றுஇறை—வாயுபகவான், எஞ்சுமாறு—குறையுமாறு. அன்னவர்—அம்முனிவர்கள், செஞ்சவே—நேராகவே, சீறினர் சபித்தார் — கோபத்துடன் சபித்தார்கள், தனது வலி—தன்னுடைய திறமை.

116. கவிக்குல வேந்தன் பெயர் அரக்கரச்சு என்பதாம், அறனுடை—தருமமேவடிவுடைய, மகளிராம்தலம்—பெண்ணாகும் இடம். அணங்குரு—பெண் வடிவு, மகவான்—இந்திரன், இரவி—சூரியன், மணத்தலால்—கூடலால், இவ்விருவர் தமக்கும் முறையே வாலியும் சுக்கிரீவனும் சேயாயினர்.

117 தாமரைக் கிழவன்—பிரமன் தன்னுரு—பழைய அரக்கரச்சு என்னும் ஆண்வடிவு, கவிவேந்து—குரங்கரசு, ஏமுற—இன்புற, உயிருலந்திடலும்-இறந்துபோகவும், கவிக்கிறை — குரங்குகளுக்கரசன், நாமவேல் — அஞ்சிடத்தகும் வேற்படை, கவிப்ப—சூட, காமரு தடந்தோள்—அழகிய பெரிய தோள்கள், துரந்தனன்—வெருட்டினான்.

118 ஆங்கவன்—வாலி, அமைச்சராமாருதி-மந்திரியாகிய ஆஞ்சநேயர், தீங்குறுசாபம்—கொடிய வெகுளி மொழி உணராது—அறியாமல், ஆசிவழங்கி—ஆசிகள்கூறி, முனிவரோடு .... இருடிகளுடன், நீங்கருந்தவம் — மந்திரசித்தியுறு பெருந்தவம், குறுமுனி....அகத்திய முனிவர்.

26-வது அத்தியாய முற்றும். ஆக செய்யுள் 1221.

---

# 27-வது இராமன் வைகுந்தமடைந்தது

1 முகுந்தன் .... கூர்மாவதாரப் பெருமாள், மன்ற .... உறுதியாக, இழைத்தது .... ஆட்சி புரிந்தமை, எமக்கு இசைத்தி....எங்களுக்குச் சொல்லுவாய், துணைக் கை....இரு கைகள், வியாதன்....தன்னாசிரியனாகிய வியாச முனிவர், தயா ....(தயை) அன்பு.

2 அய்ய செங்கமலம்....அழகிய செந்தாமரை, ஆம்பல்-அல்லி, குடபாற்கடல் குளித்திடல்....மேலைக் கடலில் மூழ்கல் (சாயங்காலம்), செய்கடன்....செய்ய வேண்டிய மாலைக்கடன் ....(சந்தி), மொய்கதிர்....மிக்க கிரணங்கள், ஈசர் பழிச்சி.... இறைவனை வணங்குதலைச் செய்து,

3 பருமணி—பெரிய இரத்தினம், மவுலி—முடி, பருதி சேய்—சூரியன் புதல்வனாகிய சுக்கிரீவன், தகவு — தகுதி, இளவல்—தம்பி, மந்தரத் தலைவர்—அமைச்சர்கள், இமைக்கும்—ஒளிவிடும், அகமகிழ்வு — மனக்களிப்பு, சாற்றிய — கூறிய.

4 கோதறு வேத்தவை—ஒரு சிறிதும் குற்றமில்லாத அரச சபை, இணையறு—உவமையில்லாத, வாளரக்கன்—வாட்படையினையுடைய இராவணன், வவ்வினன்-பற்றினன், படைத்துணை—துணைப்படை, கூற்றுறழ் மொய்ம்பு—இயமனையொத்த ஆற்றல், பாடை....மொழி, (ஆரியச் சிதைவு) தற்பவ மொழியுமாம்.

5 தழீஇக்கொடு-கட்டியணைத்து, உயர்நிதியம்-கிடைத்தற்கரிய உயர்ந்த பொருள்கள், விலைவரம்பு — விலையின் எல்லை, பொற்றுகில்—பீதாம்பரம் (பொன்னுடை), காவலர் —உலகினைக் காவல் புரியும் அரசர்கள், விடைகொடுத்து—உத்தரவு செய்து.

6 நனந்தலையுலகம்—பெரிய பூமி, நம்பி—இராகவன், கனம்—மேகம், (பெருமை) உகுத்து—சொரிந்து, வாகைவேல்—வெற்றிவேற் படை, வனம்படிதடம்—நீர் நிறைந்த குளம், வயல்விளிம்புடுத்த — மருதநிலங்களை எல்லையாகக் கொண்ட, அணி—அழகு.

7 பரதன் சனகமகாராசனையும், இலக்குவன் கேகயமன்னனையும் வழிவிட்டனுப்பினர் என்பதுபுலப்படுக்கின்றூர் சேகு....அழகு (ஒளி) இளையோன்....சத்ருக்கனன், தத்தமபதி -தங்கள் தங்களுடையநகர், போகுஉயர்நெறி-நெடுந்தொலைவு மார்க்கம்.

8 அகல்....நீங்க, அங்கதன்....வாலியின்குமரன், குகன் ....கங்கைவேடன், வில்உமிழும்....ஒளியினைவீசும் விழுநிதி.... பெரும்பொருள், குப்பைகள் .... குவியல்கள் மலர்மகள்.... கொழுநன் .... இராமபிரான் (இலக்குமிநாயகன்)

9 தளைமலர் .... நெருங்கிய பூக்கள், குழை....காதணி தாரை....சுக்கிரீவன் மனைவி, மொய்கதிர்கலன் .... நெருங்கிய கதிர்ஒளிபரப்பும் ஆபரணங்கள், மதுமழை—தேன்மழை பிலிற்றும்—துளிக்கும், சிவிகை—பல்லக்கு, கடிது—விரைவு

10 புட்பகவிமானம்....வானவூர்தி, நிதிக்கோன்....குபேரன், திருமறுமார்பன்....இராமபிரான், நேர்ந்து—உடன்பட்டு நினைப்புழி—நினைத்தஇடத்து, அணைகு-வந்தடைவாய், விடுத்தலும்—செல்லவிடுத்தலும், உழை—இடம்.

11 நீள்வனம்-நெடியகாடு, பருந்து-ஒருவகைப்பறவை முற்றம்—வாயில், செருந்தி-ஒருவகைமரம், வாவி—தடாகம், பளிக்குத்திண்ணை — பளிங்காலாகிய மேடை, செய்குன்று—கட்டுமலை, மூரல்—பல், முகில் நீருண்டமேகம்.

12 கொம்புறை — கிளைகளில் வாழும், உகுத்த— உதிர்த்த, மணற்குன்றின்—மணலாகியமலையின்கண், அம்பரம்—ஆகாயம், துகள்—பொடி அம்தளிர்கள் — அழகிய இலைகள், பொற்பினை—அழகினை, படப்பை....தோட்டம்

13 பங்குனிப் பருவம்—பங்குனி மாதம், பராஅரை— பருத்த அடி, சாந்து—சந்தனம், உழக்க—வருத்த, வாவித் தலந்தோறும் — தடாகங்களிடந்தோறும், குயிற்குதலை — குயில் மொழி, வாசநீர் குடைந்து—நறுமண நீரில் மூழ்கி.

14 பட்டிகை — இடுப்பிலணியும் ஒருவகை யணி, பங்கயம்—தாமரை, இட்டிடை....சிறிய நுண்ணிய இடை, தைவர....தடவிவர, பெயர்ந்து .... நடந்து, கட்டழகுடைய காளை .... இராமபிரான், காமர் .... அழகு, கொய்து....கிள்ளி. வட்டிகை—எழுதுகோல்.

15 பெண்ணை .... பனை மரம், வள்ளலை....இராமனை, முனிந்து....கோபித்து, சேப்பூர—செவப்பினையடைய, துயல் வரும்—அசையும், நீவி-தடவி, முனியின்-வெறுப்பின், உய்யுமாறு—பிழைக்குமாறு, நகைமுகிழ்த்தனள்—சிரித்தனள்.

16 ஓசனித்தல்—சிறகடித்தல், பாலன்னம்-பால்போல் வெளுத்த நிறமுடைய அன்னப் பறவை, நாண் மலர்—அன்றலர்ந்த பூ. கோதை — மலர்மாலை, கொழுதி—கிண்டி, வேளை — மன்மதனை, இறுத்தது—தங்கிற்று, கூவ — அழைப்ப, மாங்குயில்--கருங் குயில்.

17 வண்ணக் கழுநீர் — நிறம் பொருந்திய செங்குவளை மலர், மலயச் சாந்தம் — பொதியமலைச் சந்தனம், மெய் யணிந்து — உடம்பிற் பூசி, தகைபாராட்டி—சிறப்பினை (அழகினை) எடுத்து மொழிந்து, செம்மாந்து—இறுமாந்து, இளி—ஒரு வகைப் பண், தும்பி—வண்டு.

18 நானம்—கத்தூரி, கான்வாய்—காட்டிடத்து, முருகு யிர்க்கும்—மணம் வீசும், கோதையொடு நம்பி—சீதையுடன் இராமன், பானல் — நீலோற்பலம், உண்கண்—மையுண்ட கண், கூத்தியர்—நடன மாதர்.

19 நறவு அருந்தி—தேனினைப்பருகி, குழங்கல்—மாலை யின்ஒருவகை, சுவல்—பிடர், செந்தார்-செவந்தகோடு, நந்தா விளக்கு—தூண்டாமணிவிளக்கு, மாந்தி—பருகி, நயப்புற் றுன்—விரும்புதலையடைந்தான்.

20 முறுவலிப்ப — சிரிப்ப, கைகுலைப்ப — கைதட்ட, இமையாக்கருங்கண்—மூடப்பெறாத கண்களையுடைய மயிற் றேகை, ஆல—கூத்தாட, வாடை-வடகாற்று, கடல்குடித்து —கடனீரைப்பருகி, பிலிற்றி—சிதறி.

21. முத்துவடம் — முத்துமாலை, போர்த்து — மூடி, நரந்தம்—வாசனை, துணர்—பூங்கொத்து, தாமம்-மலர்மாலை, வளியும்—காற்றும், இடைபோமா-நடுவில்பிளந்துபோகாத முயக்கு—கூட்டம், அணங்கு—சீதை.

22 பவளக்கோவை — பவழமாலை, துணர்—கொத்து, அரம்பை-வாழை, மேவுதுணைக்கு-பொருந்தியதன்பேடைப் பறவைக்கு, அருத்த — உண்பிக்க, கூதிர்காலம் — ஐப்பசி, கார்த்திகைமாதங்கள்சேர்ந்தகாலம், அடைந்தது-வந்துற்றது.

23 பிடி—பெண்யானை, மதர்—செழிப்பு, விளைசெறு-விளையும்வயல்நிலம், ஒதுங்கி—நடந்து, கயவாய் — பெரிய வாய், புதுநீர்—புதுவெள்ளம்,

24 கவைத்தாள் — பிளப்புண்டஅடிகள், அலவன்—நண்டு, கிளைத்த—தோண்டின, கழைக்கண்—கரும்பின்கணு, வெடித்த—தெறித்த, தூர்க்கும்—நிறையச்செய்யும், திண் டோட்செம்மல் — திண்ணிய தோள்களையுடைய இராம பிரான், உடற்றும்—வருத்தும்.

25 பனிதச்சுண்ணம்— பச்சைக்கர்ப்பூரப்பொடி, குவடு —மலை, துவக்குண்டல்—கட்டுண்டல், வடிக்கண்—கூரிய கண்கள், திதலை—தேமல், உகிர்—நகம், மஞ்சம்—இருக்கை

26 பூந்துகள் — பூவின்கணுள்ளபராகம், சாந்துஅகம் —சந்தனம் பூசிய மார்பு, கிழிய....பிளப்ப, சாடி....மோதி, ஏந்தல்....பெருமையிற் சிறந்தோனாகிய இராமன், வலம்புரி.... வலம்புரிச்சங்கு, சூல்....கருப்பம், வாணுதல்....(ஆகுபெயர்) சீதை

27 விளர்ப்பு—வெண்மை, வீங்க—பூரிப்ப (பெருக்க) துடி—உடுக்கை, மைஅவாம்-கருமையினைவிரும்பும், வயா— (வயவு) கருப்பமுற்ற மகளிர்க்குண்டாகிய நோய், மெலிந்து யங்க—வாடி வருந்த, கண்ணிற்றோன்ற — கண்களுக்குப் புலப்பட.

23 திருந்துஎழில் — தானே திருத்தமுற்ற எழுச்சி (வனப்பு) துசுப்பிறும் .... இடைமுரியும், சிலம்பு பம்ப .... சிலம்பு ஒலிப்ப, இளமுறுவல்....புன்னகை.

29 வணர் இருங் கூந்தல்....நெறிப்பினையுடைய கரிய பெரிய தலைமயிர், பைந்தொடி....பசிய வளையலை யணிந்த கைகளையுடைய சீதை, மோந்து .... முத்தமிட்டு, அந்தமில் உவகை....முடிவில்லா மகிழ்சசி, குறங்கு ....தொடை.

30 எருத்தங் கோட்டி .... (தலையினை) கழுத்தினை வளைத்து, முனிவர் தங்கள் பன்னியர்....இருடிகளுடைய பத்தினிமார்கள், மருங்கு நண்ணி .... அண்மையிற் சென்று, போந்திட வேண்டும்....வரல் வேண்டும், நேர்ந்து....உடன் பட்டு, புல்ல....தழுவ.

31 அத்த வெற்பு .... சூரியன் மறையும் மலை, உதய வெற்பு....தோன்றும் மலை, கத்திகை....தொகுதி, காம்புறழ்—மூங்கில் போன்ற, பொம்மல்....பூரிப்பு.

32 ஐயன் — இராமன், நங்கை — சீதாபிராட்டியார், திங்கட் கண்ணியோன்....சந்திரசேகரன், எண்ணலார்—பகைவர், உணங்கும்—வாடும், மடங்கலந் தவிசு—சிங்காசனம், மாகதர்—துதிப்பவர், ஒற்றர்—ஒற்றியறியுமவர்.

33 மாகதர்—உலகறிபெற்றி முற்றப்பெற்றவர். பத்திரன்றனை— பத்திரன் என்னும் பெயர்புனையப் பெற்றவனை. அறை—இராமபிரான் (அரசன்) யாரும்—எல்லாரும், அறைகுதி—கூறுவாய். பொற்பு—பொலிவு, விறல்-வெற்றி, துங்கம்—உயர்வு.

34 ஒன்று—விபரீதச்செயல்(ஒன்று). அரக்கன்வவ்விய—இராவணனால் பற்றப்பட்ட, பெய்வளை—கையில்போடப்பட்ட வளையலினையுடைய சீதை, மன்னினன் — பொருந்தினன், எந்தை—இராமபிரான், அன்னதுசரதம்—அங்ஙனங்கூறுவது உறுதி, உவளகம்—அந்தப்புரம்,

35 தொக்க — கூடின, ஒழியா(த) விலக்குதலைச்செய்யாத, தோம்உறும்மாந்தர்-குற்றமடைந்த மனிதர்கள், பதடி—பதர், பத்தினி-கற்புடைப்பெண், பொக்கம்—பொய்ம்மை, முனிவரர்சாலை—இருடிகளுடைய ஆச்சிரமம், மீள்க—திரும்புக,

36 இளையவன் — இலக்குவன், பொலந்தேர்—பொன்னாலாகிய இரதம், உறையுளின்—தங்கும் அந்தப்புரத்தினில் கற்பினுக்கரசை—கற்பினுக்கரசியாகிய சீதையை, தொழுது—வணங்கி, அற்புடன்—அன்புடன், இவர்ந்தாள்-ஏறினாள்.

37 கூரிருள் — மிக்கஇருள், கங்குல்—இரவு, நம்பி—இலக்குவன், அம்பி—ஓடம், நிறுவினன்—நிற்குமா செய்து, ஏமுறு—பாதுகாவலுடைய, எறிதிரை—அலைகள் வீசும்.

33 கருதரும் — எண்ணற்கரிய, அணித்து—அண்மையுடையது (சமீபம்) சிங்கஏறு—ஆண்சிங்கம், மங்கைகேள்-

தாயேகேட்பாயாக, வவ்வியநின்னை — பற்றப்பட்ட உன்னை மனையகம் — அரண்மனையில், ஞாலம்பழித்தது — உலகம் நிந்தனை செய்தது, ஆரியன் — இராமன் (பூசிக்க தக்கவன்) துறந்தனன்— நீக்கினன்.

39 வெய்துயிர்த்து — வெப்பமான மூச்சினைவிட்டு பொன்றினள்—இறந்தனள், அயர்ந்து—தளர்வுற்று, புலம்பொடும்-அழுகையுடன், நன்று-நல்லது, நம்கேள்வன்-நம்முடையநாயகன், நாப்புலர்ந்து-நாவானதுவாடி, ஆயன்கொன்ற -இடையன் வெட்டின, எழினலம்-தோற்றமும் அழகும்.

40 அஞ்சனவண்ணவோ-கரியநிறமுடையவரே, ஊழ் —பழவினை, துணை—பற்றுக்கொடு. விடுத்தமை—விட்டுப் போதல், புகல்வான்—கூறுவான்

41 மாமை—மான், துயருறல் — துன்பம்அடையற்க, மாட்சியை—மாண்புடைமையை, ஆழி—கடல் ஆரியன்— -அனைவராலும்கொண்டாடும் தன்மையன், யாரே-எவர்தாம் ஊற்றிருந்தொழுக—தாரை தாரையாகப் பெருகியோட,

42 மடமான்பிணை — இளையபெண்மான், அயரும்— தளர்வுற்றுச்சோரும், அலக்கண்—துன்பம், அன்னை (விளி) அன்னாய்! விதி—கடவுள்சங்கற்பம் (பழவினை) ஆகுமாறு —ஆவது, தேற்றி—தெளிவித்து, நலத்தகுசாலை— நன்மை வாய்ந்த ஆச்சிரமம், கையடை—அபயம் (அடைக்கலம்)

43 அண்ணலைஎண்ணி—நாயகனையேகருதி, நோற்று- விரதம்புரிந்து, சிலைக்கையிளையவன்-இலக்குவன், வாண்முகம் —ஒளிபொருந்தியமுகம், விளைத்தசெயல் — செய்தகாரியம் இறந்துபாடுறுவன்—செத்துப்போவேன்

44 அருந்ததிகணவன்—வசிட்டன, வந்தடைய—வந்து சேர, ஆயுள் – வயது, திருந்த—நன்றாக, உரைத்தி-கூறுவாய் பிறைஎயிறு-பிறைபோலவளைந்தபல், அவுணர்— அசுரர்கள்.

45 திகிரிப் படையினேன் .... சக்கராயுதத்தினையுடைய திருமால், ஒறுத்தலும்-தண்டித்தலும் (கொல்லுதலுமாம்), அளப்பில் நாள்....எண்ணில்லாத நாட்கள், மானிடன்....மக்கள் பிறப்பினன், படுதுயர் உழத்தி....பொருந்திய துன்பினை யநுபவிப்பாய், பையுள்....துன்பம், விடையுயர் கடவுள்.... காளை யெழுதிய கொடியினையுயர்த்திய சிவபெருமான்.

46 பன்றியாய்-வராகவுருவினையெடுத்து, பங்கயமலர்த் தாள்....செந்தாமரைபோன்றவடிகள், வார .... வந்துசொரிய, வெம்சாபம்....கொடிய கோப மொழி, ஒழிவதற்கு....விலகுவதற்கு, அரக்கர் பொன்றிட .... இராக்கதர்அழிதலையுற, பொருந்துதி....பொருந்துவாய்.

47 மைந்தரின்....புதல்வர்களுள், தன்னுரு....திருமால் வடிவம், நிகழ்த்துதல்....கூறல், கோங்கு இளமுலை....கோங்கரும்பினை யொத்த இளைய தனங்களையுடைய சீதாபிராட்டியார், தணந்தனன்...நீங்கினான்.

48 தரங்கம்....அலைகள், புலரி....விடியற் காலம், புரிந்தவை....செய்தன, அவையுறாது....அரசிருக்கை மண்டபத்தை யடையாது, எத்தலம்....எல்லாஉலகங்களும், உய்யாது .... பிழைக்காது.

49 இகந்து....கடந்து, மழையுறழ் தடக்கை .... மழை போல் வாரிவழங்கும் (கைம்மாறு கருதாது) பெரிய கைகள், பெற்றம்....பசு, மறையவர்....அந்தணர், விழைவு—விருப்பம், உணர்கலன்....அறியாதவன், துருவினன்....தேடினான்.

50 கனகலநகர்-கங்கையாற்றங்கரைக்கண் உள்ளநகர், தொடர....பின்பற்ற, சூரி....வலிமை, கோயில்....அரண்மனை, ஓர்பகல்போது....ஒருநாள்பகல்முழுதும், புகல்பவர்....வந்து வினவுபவர், ஓந்தி....பச்சோந்தி, வைது .. சாபங்கொடுத்து.

51 ஈர்வாள்புரை....அறுக்கும் வாளையொத்த, ஆழி கண்ணனல்லருளால்-சக்கராயுதமுடைய கண்ணபிரான் கிருபையால், துறக்கவீடு-சுவர்க்கபோகம், வேத்தவை-அரசவை, தோன்றல்....அரசே! ஓர்காதை....ஒருவரலாறு (சரித்திரம்) நிமி என்பவன் ஓர் மன்னவனும்.

52 தீர்க்க சத்திரம்-என்பது ஒருவகையாகம், ஏர்பெற அழகுவாய்ப்ப, புரிதி....செய்வாய், எச்சம்....யாகம், வேரியந் தொடையோய்....தேன்பொருந்திய அழகியமலர்மாலையை யுடையவனே, புரிவன்....செய்குவன், வேந்தன்....நிமியென்பவன், அருமகம் செயற்கரிய வேள்வி.

53 கடையினில் .... வாயிலினிடத்து அமர்தலும்.... வந்துதங்கலும், ஏத்துருமல் .... வழிபாடு புரியாமல், கண்படைபுரிய....உறங்க (துயில்கொள்ள) மறையுணர் முனிவரன்-வேதங்களையறிந்த வசிட்டமாமுனிவன், எவ்வெலாத்திசை....எல்லாத்திக்குகள், இறைவன்....நிமி என்பவன், சீறினன்....சீறுதலைச் செய்து. (முற்றெச்சம்)

54 ஆருயிர்உலந்தனர்....அரியஆவிமடியப் பெற்றனர் உடல்பொறை உடலாகியபாரம், அருமறைக்கிழவன்-பிரமதேவன், மகவு....பிள்ளை, சாற்றினன்....கூறி.

55 உருவம்....அழகு, புணர....சேர, (கூட) எல்லை.... சமயம், ஆங்குஏய்தி....அவ்விடம் வந்து, மறுத்தனள்.. தடுத்தனள், நிற்குறித்து....நின்னைஉத்தேசித்து, உய்ப்பன் செலுத்துவேன், மருமலிகுழலாள் .... நறுமணநிறைந்த கூந்தலையுயுடைய உருப்பசி.

56 அகத்தியன் றோன்ற .... அகத்தியமுனிவர்உதிப்ப வசிட்டனுடைய வேறுபெயர் மித்திரா வருணி என்பதாம், இலவு....செவ்விலவம்பூ, மானுடவேந்தன், நரேந்திரன், அமரர்—தேவர்கள், அமர்க....தங்குக.

57 பேணி....பாதுகாத்து. நிகர்அறுமுனிவரர்-உவமை யற்ற இருடிமார்கள். அரணி....தீக்கடைகோல், கமையுடைச் சனகன்....பொறுமையுடைய சனகன். ஐயன்.... இராமபிரான் இளையவன்....இலக்குவன் என்பவன்

58 பொருவருங்குரு .... உவமையற்ற வசிட்டனாகிய ஆசிரியர், முனியாது....சபியாது, அருவரைதோள்-ஏறற்கரிய பெரியமலையொத்த புயங்கள், யயாதிக்குச் சன்மிட்டைபால் புருருவும், தெய்வயானைபால் யதுவென்பனும் தோன்றினர்.

59 வீங்குதோள்வேந்து — பருத்தபுயங்களையுடைய யயாதி, சுக்கிரன்....அசுரகுரு (வெள்ளி) கிழவன்....கிழப்பருவமுடையவன் (வயோதிகன்) கிழவுருபரிக்க—கிழட்டுவடிவினைத்தாங்குக, வவ்வ—அப்பருவத்தினைமேற்கொள்ள.

60 ஆயிரம்பருவம்—ஆயிரம் வருடங்கள், இன்புற்று —நலனுகர்ந்து, ஏயநன்மைந்தன்—தந்தைக்கியைந்த நன்மகவாகியபூரு, இளமை—பாலப்பருவம், மாயிருஞாலம்—மிகப்பெரியபூமி, புரக்க—பரிபாலனம்புரிக, மவுலி—முடி.

61 வேத்தவை — அரசர்களிருக்கும் அரசிருக்கைமண்டம், (அத்தாணி) பொன்றல்—அழிதல், வென்றிவேற் குரிசில்—இராமபிரான், போந்தது—வந்துற்றது, நன்றறி முனிவர்—நல்லனநாடியுரைக்கும் இருடிகள், ஆசிநவின்று.... ஆசிகள்கூறி.

62 மொய்ம்பு—வலிமை, வேணி—சடை, ஒன்னார்— பகைஞர், இறை—சிவபெருமான், கும்பீனசி—ஒருபெண், இலவணன்—மதுவென்பவன் புதல்வன், பயந்தான்—பெற்றான், கடற்படை—சமுத்திரம் போன்றசேனை.

63 பாய்கதிர்ச்சூலம்— பரவிய ஒளியினையுடைய சூலாயுதம், வழங்கி—கொடுத்து, வயம்—வெற்றி, கயம்....ஆழம், அயங்கி—தளர்வுற்று, ஓர்பகல்—ஓர்நாள்.

64 அவன் இழைக்கும் — இலவணச்சுரன் செய்யும், தீவினை — கொடுஞ்செயல், செகுத்த—கொன்ற, இவண்—இவ்விடம், தீங்கறுமுனிவர் — பாவச்செயலினை யொழித்த தவசிகள், திறல்—வெற்றி, முடிகவித்து—முடிசூட்டி.

65 அவுணர்கோன் — இலவணச்சுரன், அறிவுறாது—அறிந்துகொள்ளாதவாறு, உவரி — கடல், ஒறுத்த—தண்டித்துக்கொன்ற. இக்கணை — இந்தஅம்பு, இவர்வொடும்—விரைவொடும், துணைவர் — இராமபிரான், உளுக்க—அசைக்க,

66 அதர்—வழி (நெறி) திங்கள்—மாதம், கழிப்பி—கழித்து, மாதவச்சாலை—ஆச்சிரமம், குறைவறுபூசை—நிறைவுற்றபூசனை. ஆற்ற—செய்ய, உவகை—களிப்பு.

67 மறம்—அஞ்சாத்தன்மை, வேட்டமாடலும்-வேட்டையாடலும், பிறங்குஎயிறு — விளங்குகின்ற பற்கள், பெட்டை—பெண், நிறம்கிளர்—உருவிளங்குகின்ற, புலியுரு—புலியின்வடிவம், நீத்தான்—விலக்கிக்கொண்டான்.

68 ஓர்தீமை—ஒப்பற்ற ஒருகொடுஞ்செயல், புரவல—அரசே! நலிதர—வருந்த, நாமவேல்இறை—அஞ்சத்தகும் வேலினையுடையமித்திரசகன், மலைவு—மாறுபாடு, மகம்—வேள்வி, வெந்தசை—கொடியமாமிசம், உணவு—சோறு, நேர்தல்—உடன்படல்.

69 மடைத்தொழிலாளன்....சமையற்காரன், அட்டு—சமைத்து, கூட்டி—சேர்த்து, உணர்கலாது — அறியாமல், உன்னரும்—கருதரும், அளித்தல்—கொடுத்தல், அரக்கனு—இராக்கதனுக, உறைக—வதிக, சபித்தான்-சாபங்கொடுத்தான்.

70 வெகுண்டு—சினந்து, மதயந்தி என்பவள் ஒருமுனிவன், பெய்தலும்—விடலும், மருவுற—பொருந்த, பன்னிரு

பருவம்—பன்னிரண்டாண்டுகள், எய்துகவென, (எய்தென) அடைவாய் ஆகஎன்று, இசைத்தான்—கூறினன்.

71 அடுசினம்—கொல்லுங்கோபம் அமர்ந்து — தங்கி தீத்தொழில்—கொடுஞ்செயல், கோகன்னம்— ஒருசிவதிருப் பதி, சாலை—ஆச்சிரமம், கங்குல்—இரவு, புலர்தல்....விடிதல், உயிர்த்தாள்—பெற்றாள்,

72 குசம் — தருப்பைப்புல், சீதைபெற்றபிள்ளைகட்கு குசன் இலவன் எனப்பெயராம், இளவல்—சத்ருக்கின்ன், உவகையின்—மகிழ்ச்சியின், பசுத்தஏழ்புரவி — பச்சைநிற முடைய ஏழுகுதிரைகள், தேரினன்—சூரியன்.

73 வைகல்—நாள், பெயர்வுழி — சென்றவிடத்து, நோக்கி—பார்த்து, சாற்றுதி—கூறுவாய், உம்குலம்—உம் முடைய சூரியகுலம், புவனச்சுவன், புதல்வன் மாந்தாதா என்பவன், பொன்னுலகு—தேவருலகம், பகர்தல்—கூறுதல்.

74 மண்ணுலகு — பூமண்டலம், வலி தொலைத்திடாத —வலிமையைப் போக்காத, விண்ணவர் கோன் — தேவேந் திரன், விளம்பல்—கூறல், நண்ணி—நெருங்கி, ஏற்றிடுதலும் எதிர்த்தலும், பணிப்ப—செலுத்த, முருக்கி—கொன்று.

75 நிறுவி — நிற்குமாச் செய்து, படர்ந்து—சென்று, மீள்தல்—திரும்பல், புரிசை—மதில், வெஞ்சினத் தவுணன் —இலவணச்சுரன், நெடுஞ் சமம்—பெரும்போர், புரிந்தான் —செய்தான்.

76 அகடு—நடு(வயிறு), கோட்டுத்தரு—கொம்புகளை யுடைய மரங்கள், அண்ணல்....சத்ருக்கனன், மெய்தளரா.... உடல் தளர்ந்து, இராகவன் இரகு குலத்திலுதித்தவன், ஆருயிர்வவ்வி....ஆருயிரைக் கொன்று (பற்றி), பின்னவன்.... பிரமன்.

77 சூரசேனனுடைன அன்றுமுதற் பெயருற்றதாம். நகருக்கு மதுரையெனப் பெயர் சூட்டப் பெற்றது. துளங்கல் ....அசைதல், அடிப்படுத்தி—கீழ்ப்படுத்தி, இராகவற்கிளூழ எழுந்தனன் .... தன் தமையனுகிய இராமனே வணங்கப் புறப்பட்டனன்.

73 சேனைக் கடல்....சேனு சமூத்திரம், புடைநடப்ப.... பக்கத்திற்சூழ்ந்து வர, தொழல்...வணங்கல், துனேவினில்.... விரைவினில், தழங்கு ஒலி....முழங்கும் ஓசை, ஆழி....சக்கரா யுதம், சரிதை .... வரலாறு, மைந்தர் .... குசன் இலவன் என்பவர்கள்.

78 சொரிதிறை .... கொடுக்கும் கப்பம், தொடி....வாகு வலயம், அரசு....அரசர்கள், வரிசிலை யுழவன்....கட்டமைந்த வில்லினையுடைய இராமபிரான், பணிந்து .... வணங்குதலைச் செய்து, இலவணனே .... இலவணுச்சூரனே, வென்றமை .... வெற்றி யுற்றமை.

80 கேளா....கேட்டு, திருவநீணகர் — அழகிய இந்த அயோத்தியாபுரி. வைகி—தங்கி, ஓங்கெயில்—உயரிய மதில் கள், ஏழ்பகல்—ஏழு நாட்கள், இளையவன்—சத்ருக்கினன், வளங்கூர் மதுரை—வளப்பமிக்க மதுராபுரி.

81 காவலர்—அரசர்கள், துஞ்சும்—உறங்கும், கொடி புனே வாயில்—கொடிகள் கட்டப்பட்ட திருமுன், மறை யோன்—அந்தணன், குழைந்து—வாடி, வடிவுடை காதலன் —அழகிய புதல்வன், இடையினில்—நடுவினில்.

82 வேதியன் — பிள்ளையைச் சாவக்கொடுத்த மறைய வன், வீணைமாமுனிவன்—நாரதன், கோது—குற்றம், தீது —பாவச்செயல், இசைப்பான்—கூறத் தொடங்குகின்றான்.

83 மருவும்....பொருந்தும், வாளா—சும்மா, பின்னவர் — நான்காம்வருணத்தவர், இவ்வுகம் — மூன்றாவதுயுகம்,

உஞற்றல்....புரிதல், இகந்திட்டு....கடந்து, ஆற்றுகின்றான்....செய்கின்றான், தெரியும்....ஆராயும், செப்பினான்....கூறினான்.

84 வள்ளல்....இராமபிரான், கடவுள்புட்பகம்....தெய்வீகத்தன்மை பொருந்திய புட்பகவிமானம், இவர்ந்து . ஏறி, தென்னம்பொருப்பு....தெற்குப் பகுதியிலுள்ள மலை, கமலவாவி....தாமரைத்தடாகம், அகன்கரை....பரந்தகரை, நீயார்....எத்தகையினையுடையாய்.

85 துறக்கம்....சுவர்க்கம், உறுவான்....அடையும்படி, பின்னோன் நாலாவதுவருணத்தவன், தடறு....உறையுள், வடிவாள்....கூரியவாளாயுதம், சென்னிதடிந்திடலும்....தலையினைவெட்டி வீழ்த்திடலும், வீய்ந்தமகன்....செத்துப்போன சிறுவன்.

86 விண்ணோர்....தேவர், நாமம்....அச்சம், ஒறுத்த....வெட்டின, உய்ந்தான்... பிழைத்தான், அருஞ் சிறுவன்....அருமையான பிராமணச் சிறுவன், சேருதி....செல்வாய்.

87 இயம்பி...கூறி, குன்றம் .... மலை, கோ....அரசன், இழிந்து....இறங்கி, கேழ்....நிறம், கலன்....அணிகலன், அளித்தனன்....கொடுத்தான்.

83 விளங்கும் .... பிரகாசிக்கும், கதிரோனில் .... சூரியனைப்போல, ஆரம்....மாலை, மலயப் பொருப்ப....(விளி) பொதிய மலையிலிருப்பவனே! அளித்தவன்....கொடுத்தவன், பவ்வம்....கடல், அழன்று....கொதித்து, கேட்டி....கேட்பாய், திருமாமுனிவன்....அகத்திய மாமுனிவன்.

89 இலகு....விளங்குகின்ற, திறம்பாத....மாறுபடாத, ஈரைம்பான்....நூறு, தடம்....தடாகம் (குளம்), மருண்டு....மயங்கி, கதிர்கால்....ஒளி வீசுகின்ற, மானம்....வானவூர்தி, நெடுவானகத்துள்....நீண்ட ஆகாயத்தின்கண்

90 ஆலும்....அசையும், குவளைப் பொருவும்—நீலோற் பல மலரையொக்கும், வளை....வளையல், ஒல்லையிழிந்து.... விரைவாக இறங்கி, ஓர் கடவுள்....ஒரு தேவன், உணங்கும் குணபம்—வாடிய பிணவுடல், அருந்திச் செல்லல்....உண்டு போதல், இழிதொழில்—தாழ்ந்தசெய்கை, புகல்....கூறுவாய்.

91 குடக்காய் .... குடம்போலும் காய், முடத்தெங்கு-வளைந்த தென்னை மரம், ஊழ்த்து....காம்புவிட்டு வீழ்ந்து, கொப்பளிக்கும்....சிதறும் (சிந்தும்), அடல் கோளரி....வலிய சிங்கம், சீற்றம்....கோபம், கார்முகம்....வில்.

92 தாமம்....மலர்மாலை, மவுலிபுனைந்திடல் .... முடி சூடல், அறிவின்வீக்கம் .... ஞானப் பெருக்கம், சுரதன் ....சுவேதன்றன்றம்பி, கவித்து....சூடப்பெற்று, படர்கான் ....பரந்த காடு, ஈரைஞ்ஞூறு....ஆயிரம்.

93 கமலப்புத்தேள் உலகு....சத்தியவுலகு, மிடையும் பசி....நெருங்கிய பசி, உழந்த....வருந்தின, உடலம் வீக்கி.... உடலைக் கட்டி, உற்றது....அடைந்தது, பிணித்தஞமலி.... கட்டப்பட்ட நாய், துய்த்தி....அநுபவிப்பாய்.

94 தவம் புரிந்த....தவத்தினைச் செய்த, எந்நாள்....எக் காலத்தில், ஒழியும்....நீங்கும், நல்கி....கொடுத்து, வெளிறில் கேள்வி .... வெள்ளையறிவில்லாத கேள்வி ஞானம், தீரும்.... போகும், அன்னோன்....அவன்.

95 சுடர் மணிப்பூண்....இரத்தின மாலை, துன்னுபாவம் ....நெருங்கிய பாவம், அருந்து குணபம்....தின்னும் பிணவுடலம், ஒளிப்ப....மறைய, மன்றல்....மணம், ஏத்தி....வாழ்த்தி, போயினன்....சென்றடைந்தான்.

96 அருவிலை பொற்கலம் .... பெறற்கரிய விலைமதிக்க முடியாத அணிகலன், ஐய! .... ஐயனே, ஆயது .... ஆகிய தன்மை, உரைத்தி .... கூறுவாய், நன்னர்க் கேள்வி .... நல்ல கேள்வியறிவு, ஒரு நூற்றுவர்....ஒரு நூறு பேர்கள்.

97 வருத்துதல்—துன்புறச் செய்தல், தண்டன்—தண்டிப்பவன், நாமம்....பெயர், சைவலம்—ஒரு மலை, விந்தவரை—விந்திய மலை, நடுவிலுற்ற—இடைப்பட்ட.

98 வியப்பு — அற்புதம் (விம்மிதம்), ஒளிறு — ஒளிவிடல், அந்த வுலகம்—மதுமா நகரம், வெள்ளிமகன்நாமம்—ஆசையென்பதாகும், கரந்திடல்—மறைந்திடல், கன்னி—ஆசையென்னு நங்கை, தந்தைக்கு....சுக்கிரனுக்கு.

99 மண்டு—மிகும், தண்டன்நகரம் — தண்டகாரணியமாயது (சாபத்தினல்,) விண்டு—நீங்கி, உறைதல்—தங்கல், அண்டர்ஊர்—தேவரூர் (நகரம்)

100 விள்ளுநர் — பகைஞர், மாதவன் — பெருந்தவமுடையவனாகிய அகத்தியன், கள்ளயின்று—தேனினைப்பருகி, கனலி—நெருங்கி, அள்ளல்—சேறு.

101 தாக்க — மோத, படிநிலம் — பூமியாகியபரப்பு, பசும்பொன்னாக—பசியபொன்மயமாக, அடிதொழ....பாதங்களில் வீழ்ந்துவணங்க, ஈண்டும்—நெருங்கும், அண்ணல்....இராமபிரான், வாள்முகம்—ஒளியினையுடையமுகம்.

102 ஏய்வுற — இசைய, இளையோன் —இலக்குவன், சரண்புகும்—அடைக்கலமாகப் புகும், நன்பொருளை—நலலதிரவியத்தை, வவ்வி—பற்றி, மகஞ்செய்தல்—வேள்விவேட்டல், விழுமிது—சிறப்புடையது, அன்றல்—அசைநிலை.

103 அயமகம்—அசுவமேதவேள்வி, எந்தை....எமது தந்தையார், தொலைந்த நற்காதை — தொலைந்துபோனநல்ல வரலாறு, வியல்—பரந்த, விருத்திரன் என்னும்வெய்யோன்—விருத்திராசுரன்.

104 சுடர்பெறி—அக்கினிப்பொறி, துரப்ப—துரத்த, வயிரவாளான்—இந்திரன், நேமியோற்கு — திருமாலுக்கு, அன்னேன்—விருத்திரன், வச்சிரத்தமர்வன் — நாரணனுகிய யான் வச்சிராயுதத்திற் றங்குவேன்.

105 தழல்உமிழ்—அக்கினியைக்கக்குகின்ற, ஆர்கலி—கடல், அகலத்து—மார்பிடத்து, ஓச்ச—செலுத்த, பாரில் வீழ்ந்து—பூமியில்விழுந்து, பிரமகத்தி—பிரமச்சாயை, தீர்ந்தனன்—விலகப்பெற்ருன், விண்ணேர்வேந்தன்—இந்திரன்.

106 வேந்தர்வேந்தன் — சக்கரவர்த்தி, வேட்டம் — வேட்டைத்தொழில், குன்றவில்குழகன் — சிவபெருமான், கோதை—பார்வதிதேவியார், சரவணம்-நாணற்காடு.

107 பைத்துஅன்ன—படத்தையொத்த, வரையென-மலைபோல, வீங்கும்—பருக்கும், மங்கையாகி—பெண்ணுகி, முருகு—மணம், கவுரி—பார்வதிப்பிராட்டியார்.

108 ஒருதிங்கள் புருடனுகவும், ஒருதிங்கள் மங்கையாகவும் இருக்கவென வரமீந்தாள், மகளுரு—பெண்வடிவு, ஏர்கெழு—அழகுவிளங்குகின்ற, சூழ்வர—சுற்றிவர.

109 செலவயர்கான்—செல்லுகின்றகாடு, நீள்வாவி.... நெடியகுளம், திங்கள்ஈன்றபுதன்-சந்திரனுக்கும் தாரைக்கும் பிறந்த மகனுகிய புதன், இருந்தவம்—பெரியதவம், (இளையாகிய பெண்ணினை) யாழோர் கூட்டப்புணர்ப்பு-காந்தருவப் புணர்ச்சி.

110 யாழோர்—கந்தருவர், முயங்கி—கூடி, வேந்து—அரசன், திங்கள்—மாதம், இயற்றினுன்—செய்தான்.

111 இறத்தலும்—கடத்தலும், புதனுக்குப் புதல்வனுயவன் புரூரவா என்பவனும். மன்னவர் இருவர்—இளனும், புரூரவாவும் ஆவர். மருத்துவமுனிவன்—ஓர் இருடி.

112 திங்கள்சூடும்வானவன்—சந்திரசேகரன், தீதற—குற்றமற, இயற்றுங்கால்—செய்தபோது, உருத்திரன்—சிவபெருமான், என்றும்—எக்காலத்தும், ஆண்உரு—ஆண்பால் வடிவம், அருத்தி—ஆசை, ஆண்டகை—ஆளுந்தன்மையான்.

113 இளனுயபோழ்து பெற்றபிள்ளையாகிய சயவிந்துவை சூரியகுலவரசனுகவும், பெண்ணுயபோழ்து பெற்ற பிள்ளையை (புரூரவாவை) சந்திரகுல அரசனுகவும் முடிசூட்டினன்.

114 களைகணுய்— பற்றுக்கோடாகி, கதி—நற்கதி, இவுளிமேதம்-அசுவமேதம் என்னும் யாகம். வல்லையென்ன—விரைவாக, இளவல்—தம்பி.

115 கோமதி — ஓர்புண்ணியநதி, பருதிமைந்தன்—சுக்கிரீவன், பூமகள் — இலக்குமிபிராட்டியார், பொன்னிற்செய்து—பொன்னினுலாகிய படிவம் செய்து, துளவமாயன்—இராமபிரான், பரிமகம்—அசுவமேதம்.

116 பருவமொன்று (ஒருபருவம்) ஓராண்டு, பொருவில்வான்மீகி....உவமையில்லாத வான்மீகியென்னும் பெயருடைய முனிவர், சானகிபுதல்வர்—இலவன், குசலன் ஆயவர், தலந்தொறும்—இடங்கடோறும், தெரிதல்....ஆய்தல்.

117 மரகதவண்ணன் — பச்சைநிறமுடைய இராமபிரான், வம்மின்கள்—வாருங்கள், தினந்தொறும் — நாள்தொறும், இயம்பி—கூறி, மாணுக்கர்—சீடர்.

118 தீம்பாடல்— இனிய இசையையுடைய செய்யுள், ஐயன்-அழகியோனுகிய இராமன், தந்திடுக-அழைத்துவருக, தந்திரி—யாழ், (இசை) மிடறு—கழுத்து (கண்டம்) உணர்கலாது—அறியமுடியாது, நந்தல்....கேடு, நயத்தல்செய்தார்....விரும்பினுர்கள்.

*119* கமலம்....தாமரைமலர், மையவாள்முகில்....கரிய வொளிபொருந்திய மேகம், மைந்தரை....மக்களை, மனதின் நோக்கி....மனத்திற்கருதி, மூன்றுரு .... மூவகையான வடிவம், ஒய்யென....விரைவாக, இறும்பூது....வியப்பு.

*120* தன்னுடைச்சரிதம்....தனது வரலாறு, எண்ணி-கருதி, பொன்னொருகோடி .... ஒருகோடியளவான பொன், (திரவியம்) புனத்திடை....காட்டின்கண், பாவம்....பாவச்செயல், நண்ணும்....வந்தடையும்.

*121* ஈண்டு....இவ்விடம், கொணர்ந்து....கொண்டுவந்து தீயூட்டியுண்ணும் மாதவர்....அக்கினிகாரியஞ்செய்து (வேள்வியிடைத்தீக்கடவுளுக்குண்பித்து) பின்னர்த்தான் உண்டலைச் செய்யும் பெருந்தவச் சிரேட்டர்கள், வெய்ய-விரும்பத்தக்க, ஏதம்....குற்றம், ஒன்றின்றி-சிறிதுமில்லாமல், சூள்....சபதம் தூதர்....தூதுவர் (ஒற்றர்)

*122* தீதுஎறிமுனிவர் — தீச்செயலையொழித்த இருடிகள், மேதகும் அவை—மேன்மைவாய்ந்தசபையில், ஞாலம்—உலகத்தவர் (ஆகுபெயர்) எய்தநோக்கி-அடையப்பார்த்து சிந்தையுற்றார்—மனத்தில் எண்ணினர்.

*123* பற்பலபாடை — பலவகைப்பட்ட மொழிகள், பரிவுகூர — துன்பமிக, கலுழும்—அழும், பிழைத்தாள்—தவறினாள், பொற்பு—அழகு, சிதைந்து—கெட்டு.

*124* முனிவ—(விளி)முனிவரே, உலகெலாம்—உலக மக்களனைவரும், வேண்டி—விரும்பி, சிலைவலான்—இராமபிரான், பாதம்—திருவடி, மலர்தலை ஞாலம்—விரிந்த இடத்தினையுடையபூமி, வழங்கலுற்றான்—கூறத்தொடங்கினான்.

*125* கடவுள்கற்பு—தெய்வக்கற்பு (அறக்கற்பு) முழவம்—மத்தளம், செய்யகழல்—செவந்ததிருவடிகள், திறம்

பேன்—மாறுபடேன், மல்லல்—வளம், வழியெனக்களித்தி —எனக்குநெறிகாட்டுவாய், விள்ள—பிளப்ப, மணியணை—இரத்தினஆசனம்.

126 தோற்றிய-புலப்பட்ட, தவிசு-இருக்கை(ஆசனம்) கோற்றொடி—சங்கவளையல், குடங்கை—அகங்கை (உள்ளங்கை) இரங்கிமாழ்க—அழுதுமயங்க, பாற்றினம்—பருந்தும் கழுகும், பரிவு—துன்பம், சீறி—வெகுண்டு.

127 இன்னே....இப்போழ்தே, போழ்ந்து....பிளந்து, பாவையை .... பாவைபோல்வாளாகிய சீதையை, அமைதியின்—சமயத்தில், அயன்....பிரமதேவன், கடிந்திடல்....பிளக்காதே.

128 தேம்கமழ்-வாசனைவீசும், ஓதி ...கூந்தல், வைகுந்தம்—திருமால்உலகு, புல்லல்ஒல்லாது....பொருந்தல் இசையாது, அறையும்....கூறும், போயினன்—சத்தியலோகம் (பிரமலோகம்) சென்றனன்.

129 ஏந்தலும்-இராமனும், உள்ளமாழ்கி-மனமயங்கி வழிநாள்—பிற்றைநாள் (மறுநாள்) கூந்தன்மா — அசுவம், (குதிரை), குலம்—ஒழுக்கம், நன்கின் விடை நல்கி — நல்ல முறையில் உத்தரவுகொடுத்து.

130 அளவறு மகங்கள்—எண்ணிக்கையில்லாத வேள்விகள், மூப்பு—கிழப்பருவம், கவுசலைமுதலதாயர்—கவுசலை கைகேயி சுமித்திரை முதலிய தாய்மார்கள், தயரதன் உழை —தயரதச்சக்ரவர்த்தியிருக்கும் சுவர்க்க உலகில்.

131 ஈமம்—சுடலையின்கண் உள்ள விறகு, பாய்வயப் புரவி —பாயும் வெற்றிபொருந்திய குதிரை, கார்க்கன்—ஒரு முனிவன், பழமறை—வேதம்.

132 வழுத்தி—துதித்து, முந்த—முற்பட, புகுந்தது—வந்தடைந்தது, அறைக—கூறுக. நந்தலில்—கேடில்லாத,

இசையில்—கீர்த்தியில், கின்னரன்—வித்தியாதரன், சிந்துவின்—சிந்துதேயத்தின்.

133 அடிப்படுத்தி-அடியின்கீழ்வணங்குமாறு செய்து, உறுதுயர்—மிக்கதுன்பம், துடைத்தி—போக்குவாய், பன்னருஞ்சிறப்பு—கூறுதற்கரிய மேன்மை, பகர்ந்தான்—கூறினன் பரதன் மைந்தர்—பரதனுடைய மைந்தர்.

134 ஆங்கண்—அவ்விடம், சிந்துதீரம்-சிந்துநதிக்கரை பாங்கர்—பக்கம், யாழோர்தம்மை—கின்னரர்களை, உய்த்து—செலுத்தி, விரைசெல்மான்—வேகமாகப்போகுங் குதிரை.

135 பாகு—பாகன் (யானையோட்டுபவன்), ஆகவம்—போர், ஏற்ற—எதிர்த்த, ஆகமுற்றும்—உடலிட முழுவதும், காலவெம்கணை—இயமபாணம்.

136 தக்கனை, தக்ககம் என்னும் நாட்டிலும், புட்கலனை—புட்கலாவர்த்த மென்னும் நாட்டிலும் முடிசூட்டி, அங்கு ஐயாண்டு வரைத்தங்கி அவர்களடிப்படுத்தினன், பூரியார்—இழிந்தவர், பொருந்தல்செல்லா—வந்தடையப்பெருத.

137 கழல்—வீரக்கழலாகியகாலிற்கட்டும்அணி, இந்திரதிருவன் — இந்திரச்செல்வம்போன்ற செல்வமுடையவன், போதந்து—வந்து, தந்திரர்—சேனைகள் (வீரர்கள்) மகிழ்ச்சிகூர்ந்து—மகிழ்ச்சிமிகுந்து, காகுத்தன்....இராமன்.

138 இலக்குவன் மைந்தன் அங்கதனும், அவற்குக் காராபததேயம் ஆட்சிக்குரித்தாம் எனவும், சித்திரக்கேது என்பவனுக்கு மல்லல்தேயம் சிறந்ததாம் என்றார்.

139 மகிழ்ச்சிகூர்ந்து—களிப்புமிக்கு, மன்றல்....மணம் ஓரைதன்னில்— முகூர்த்தத்தில், வால்வளை....வெள்ளியசங்கங்கள், இளையகோமான்....இலக்குவன், விழைவு....விருப்பம் அவ்வுழி....அவ்விடம், போமின்—செல்லுங்கள்.

140 அங்கதனுலாள்வது — அங்கதிநகரமாம், துங்கம்— உயர்வு, அமைத்து....உண்டுபண்ணி, தானை—சேனை, சிங்க ஏறு—ஆண்சிங்கம், வரிசிலை—கட்டமைந்தவில்.

141 சந்திரகேதுவினுளப்பெறுவது சந்திரகாந்தியாம் மைந்து—வலிமை, அமர்ந்து—தங்கி, அடிதொழுது—திருவடிகளைச்சேவித்து, வாவும்பரி—வாம்பரி.

142 சிலைத்தழும்பு — வில்லழுந்தியவடு, இனிதுஆற்ற இனிமையாகச்செய்ய, பூசுரர்க்கு — மறையவர்தமக்கு, இருநிதி — பெரும்பொருள், உரவுநீர்—கடல், வேலி—எல்லை, தருமம், தவம், மெய்ம்மை யாகியவை இராமன் ஆட்சியிற் றழைப்புற்றன.

143 மன்னியகாலன்—நிலைபெற்ற இயமன், மாதவருருவாய்—முனிவரர்வடிவாய். மணிமதில்—அழகியமதில், வரவு —வருகை, கொணர்தி—கொணடுவருக, முனிவனை—முனிவனுகிய காலனை, அவ்வுழியுய்த்தான்-அவ்விடம் செலுத்தினுன்

144 பூசனை—பூக்களைக்கொண்டு ஆற்றுவது, முகமன் உபசாரமொழி, வினையறுதவத்தோய்—இருவினையும் அற்ற தவச்செயலையுடையவனே! போந்தமை — ஈண்டடைந்தமை, விளம்பும் — கூறும், எனையர்—எத்தன்மையர், நேர்ந்து— உடன்பட்டு.

145 அலகு—எண், ஒறுத்தல்—தண்டித்தல், இலகு எயிற்றரவு—விளங்குகின்ற பற்களையுடைய ஆதிசேடனுகிய பாம்பு மேதினி—பூமி, வகுத்து—படைத்து.

146 அரக்கரை-இராக்கதரை, வேரொடும்-அடியோடும் களைய—ஒழிக்க, மன்றல்—மணம், தரசதன்மகவு—தாசரதி, வைகுந்தநகர் — விட்டுணுவுலகு, ஒன்றிடல்—பொருந்தல், வேண்டில்—விரும்பினுல், வருதி— வருவாய்.

147 உரைத்தலும் — இயமன் கூறலும், தனதுபேர் உலகு—இராமபிரான் முன்னையவுலகினில் வைகும்வைகுந்த நகர், உள்ளநேர்ந்து—திருவுள்ளம் இசைந்து, சாந்து—சந்தனம், நகர்க்கடை — நகரின்வாயில், சிலைத்தொழில் — விற்பயிற்சி, வெம்பசி—கொடும்பசி.

148 அழலெழ—தீயெழ, வெகுண்டு—கோபித்து, மாமுனிவன்—துருவாசன். கமழும்—வீசும், கனற்றுவன்—சபிப்பேன், இமிழ்கடல்—ஒலிக்குங்கடல், எரிப்பதின்— சுட்டுவிடுதலின், தமர்—சுற்றம், கடன்—கடப்பாடு, தாமரைக் கண்ணன்—இராமபிரான்.

149 உபநிடதம் — வேதசிரசு, தேர்ந்து—தெளிந்து, வந்தவாறு—வந்தவகை, காலன்மறைந்திட—இயமனவன் மறைய, ஆயிரம்பருவம்—ஆயிரமாண்டுகள், விரதம்பூண்டு—விரதத்தின்மேற்கொண்டு, அடிசில்—உணவு, இன்னமுது—இனியஉணவு.

150 முனிவரன்—துருவாசன், குழைந்து — இளகி, கலுழ்ந்தனன்—அழுது, வழுவுறுது—வழுவாமல், ஒறுக்கென —தண்டிக்க, துறத்தல் — நீங்கல்.

151 கண்மணி — கண்ணிற்கருமணி, ஆவி — உயிர், வேற்றுடலம்—தனித்துடலானது, உய்யுமோ— பிழைக்குமோ, ஓகாரம்—வினாப்பொருட்டு (எதிர்மறையுமாம்.) மூச்சவித்து-மூச்சினையொடுக்கி, உரையுணர்வு-பேச்சும்உணர்வும்

152 ஓர்கூறு—ஒருபகுதி (இலக்குவன் ஆயவடிவு) இறைஞ்சி—வழிபட்டு, விமானம் — ஆகாயவூர்தி, காமர் —அழகு, வண்ணம்—நிறம். பாலிற்பால்கலந்தென- அபேதநிலை. மருவினன்—பொருந்தினன்.

153 வெண்மதி—சந்திரன், தணந்திடினும்-நீங்கினும் உய்ந்திடேன் — பிழைக்கேன், அலக்கண்—துன்பம், ஐயன்—இராமபிரான், மவுலிகவித்து—முடிசூடி.

154 இம்மொழி அறையேல்—இந்த வார்த்தைகூருதே வனைக....சூடுக, எறிவாய்மை — பொய்யகன்ற மெய்ம்மை. இரவிகாதலன்—சூரியகுமாரனுகிய சுக்கிரீவன்.

155 முடங்கல்—நிருபம்,முழுவலிதுயின்ற தோளினை யோன்—சத்ருக்கினன், மிடைந்து....நெருங்கி, மணிமுடி.... இரத்தினகிரீடம்.

156 கொங்கு....நறுமணம், கொற்றவர் .... அரசர்கள், பங்கயத்திரு .... செந்தாமரைமலரிற்றங்கும் இலக்குமிபிராட் டியார், பகட்டெழில்....உயரியஅழகு.

157 கவின்....வனப்பு, புரிசை....மதில்கள், குசனை....குச னுக்கு, மிலேச்சி....சூடி, உத்தரகோசலநாட்டினை குசனுக்கும், தென்கோசலநாட்டினை இலவனுக்கும் எல்லாவுரிமைகளுடன் முடிசூட்டினுன் என்பதாம்.

158 விறல்....வெற்றி. அரக்கர்கோன் .... விபீடணன், எண்கின்வேந்தன்....சாம்பவான், அறைகழல் .... ஒலிக்கின்ற வீரக்கழல், உறைதிர்....தங்குங்கள், மறை-மந்திரம் (வேதம்) வேள்வித்தீ....யாகத்தீ.

159 கார் புறங்கொடுத்தல் .... மேகங்கள் முன்னிற்க மாட்டாமல் புறமுதுகிடல், கரும்பு....கருப்பஞ்சாறு, குதலை மழலைமொழி, மடவார்....மகளிர்கள், யாரும் .... எல்லாரும், மஞ்ஞை ...மயில், மருங்குசென்ருர்....சுற்றுப்பக்கங்களில் வந் தனர்,

160 பைம்பூண்....பசியகலன்கள், பாலர்....இளைஞர்கள் பரிந்து....வருந்தி, வியனகர்....அயோத்திமாநகர்.

161 நால்வகைத்தோற்றம் .... அண்டசம், சுவேதசம், உற்பிச்சம், சராயுசம், என்பன. சராசரம்....இயங்கியற்பொரு

ளும், நிலையியற்பொருளும், பரிந்து—விரும்பி, ஐம்படை, சார்ங்கம், கௌமோதகி கவுத்துவம், சங்கு, சக்கரம் ஆயவை.

162 வெற்றிச்சயமகள் — கொற்றவை (வீரலக்குமி) பட்டார்த்து — பட்டாடையைக்கட்டி, குசம் — தருப்பை, இளையகோ—சத்துருக்கனன், முருகு—மணம்.

163 தாப்புலி—வலியபுலி, நீப்பற-நீக்கமற, நாப்பண் —நடு, பாம்பணை—பாம்புப்படுக்கை சரை — சரையுநதி, கோப்பிரதானம் என்பது ஒரு புண்ணியத்துறை.

164 ஏற்க....ஏற்றுக்கொள்ள, கண்வழூக்குறல்....கண் கூச்செடுத்தல், சதுர்முகன்-நான்முகன், ஆங்கண்-அவ்விடம்.

165 எய்தி .... அடைந்து, அவ்வுடல் .... அந்தத்தேவவுடல், விண்ணவன்....கரியதேவனுகிய திருமால், நீரில்நீர்கலத்தல்....ஒன்றுதல் (அபேதமாதல்)

166 தரு — கற்பகவிருட்சம், மருமலர் — நறுமணம் பொருந்திய பூக்கள், தூவி — வாரியிறைத்து. முனிவரர்— தேவவிருடிகள், போற்றுமலரயன் — துதிக்கும்பிரமதேவன்

167 அற்பு...அன்பு (வலித்தல்) வைக....தங்க, அளிக்கென — படைப்பாயாக என, கற்பகநாடு .... சுவர்க்கவுலகு கடவுளர்....தேவர்கள், அமர்க....தங்குக.

168 ஆன்றபேரறிவு....நிறைந்த பெரியஅறிவு, தொக்கார்—கூடினர், மான்திகழ்விமானம் .... குதிரைகள்பூண்டு விளங்குகின்றஊர்தி, வைகினர்— தங்கினர்.

169 அயோத்தியையாண்ட இராமன் அருளால் புன்மரம்முதலிய வனைத்தும் பேசப்பெறுவனவாய் விமானத்தில் ஏறித்தேவவுருவுற்றுச் சுவர்க்கமெய்தினவாம்.

170 திருமகளாய சீதாபிராட்டியார் பாதவுலகினின்றும் திருமாலின் திருமார்பில் வந்துகுடிகொண்டனள்,

பூமி....பூமிதேவியார், கலுழன் — கருடன், துஞ்சா — ஓயப் பெருத, அமர்ந்து—விரும்பி.

171 வண்டு, ஞிமிறு, தேன், தும்பி என்பன வண்டு களின் நால்வகைப்பேதங்களாம், தேக்கெறிந்து—தெவிட்டி பொதியவிழ்க்கும்—முறுக்குநெகிழ்க்கும், முண்டகம்—தாம ரை, முனிவன்—பிரமன், மாநகரம்—வைகுந்தம்.

172 தோடு—இதழ், புலவு—புலால்மணம், புண்ணி யச்சேது—புண்ணியம்பொருந்திய இராமசேது, இலிங்க பூசை—சிவபூசனை, ஆற்றி—செய்து, வீட்டின்பம்—பேரின் பம், திருவமர்காதை—ஆக்கந்தரும் இராமன் வரலாறு.

173 வள்ளம்....கிண்ணம். வாலி....தடாகம், உழக்கிய ....கலக்கிய, கவட்டடி .... பிளந்தஅடி, அலவன்—ஞெண்டு, அளை....துவாரம், (வளை) உதிர்க்கும்....சொரியும், அளிக்கும் ....புரக்கும் (பரிபாலனம் புரியும்)

174 வாரிப்பெரும்புனல்-கடலின்பெருகியநீர், கொண் டல்....மேகம், வரையில்தவழ்தலும்-மலையின்கண்ஊர்தலும், வயக்கரி....வெற்றிபொருந்தியயானை, மின்பொதி....மின்னல் தங்கிய, கிழிந்து....பிளப்புண்டு, பொருப்பு....மலை,

175 சூல்முதிரா .... கருமுதிர்ந்து (நிறைந்து,) அகடு ளைந்து....வயிறுவருந்தி, முழை....குகை, வாலுளைகள்....சிங் கங்கள், சிலைக்கும்....கர்ச்சிக்கும், (குசன்மைந்தன் அதிதி) அதிதியின் மைந்தன் நிடதன் என்பவன், குருதி....உதிரம்.

176 பருமுகை....பெரியஅரும்பு, சுரும்பு-ஆண்வண்டு, தழும்பு....வடு. நிவந்த....உயர்ந்த, (நிடதன்மகன் நளனும்,) வாகைவேல்உழவன்....வெற்றிவேல்வீரன்.

177 துழனி....ஓசை, பால்வயிற்றிளங்காய் .... பால்கட் டினையுடைய இளமையானகாய், வளங்கூர்....வளப்பமிகுந்த நளனுடைய குமாரன் நபன் என்பவனும்.

178 சடைதாறு-சடைபோல்காய்த்தகுலை, வான்புகழ் ....சீரியபுகழ், தொழிந்து...சிதறி, மட்டு....தேன், தோன்றல் ....புதல்வன், இவன் புண்டரீகனும் இவன்புதல்வன் கேமதன்னுவா என்பவனும்.

179 துவைத்து....மிதித்து, மருப்பு-கொம்பு, விளிம்பு ....கரை, கட்டழகு....பேரழகு, கேமதன்னுவாமகன் தேவாநீகன், அவன் மகன் பீனகுவா என்பவன், ஒட்டலர்....பகைவர், நெய்த்தோர்—உதிரம், மடு .... பள்ளநீர்உடையது. ஒளிறு....ஒளிவிடும்.

180 குண்டலம்—காதணி, முளரி—தாமரை, கடிந்து ஓட்டி, பண்டருகிளவி—பண்ணினைப்போலும் இனியமொழி, கின்னரர்—யாழோர், பீனகுபுதல்வன்—சகச்சுவா என்னும் அரசனும், வழன்ற—தோலுரியப்பெற்ற.

181. வலைத்தலை—மீன் வலையினிடத்து, கன்று—இளமையுடையது, தாவ—பாய, தரங்கம்—அலை, சகச்சுவாவின் மைந்தன்—குத்திரவயோகன் ஆவன்.

182. கூத்தியர் — நாடகமகளிர், படப்பை—வயனிலம், மல்லல் — வளம், குத்திரவலோகன் மகன் தாராபிடன், இவன்மகன்சந்திரசிரசு வென்பவனுகுவன். தேத்துறைதெவ்வர்—தேயத்தின் வாழும் பகைஞர், வழுத்திடும்—துதிக்கும்.

183. வலந்தென்ன — கட்டினுற்போல, கூன்வளைவு இருல்—ஒருவகைமீன், பரதவர்—நெய்தனிலத்தவர், கவர —பிடிப்ப, பருமணி—பரியமுத்து, மாயிரும்செல்வம்—மிகப் பெரிய செல்வம், சேர்ப்பன்—நெய்தனிலத் தலைவன், சந்திரசிரசுவின் மகன் பானுசித்திரன் என்பவன், அறைகுவர் —கூறுவர் பெரியோர்.

184 இரலையேறு—ஆண்மான், அழ—வருந்த, தாக்கி-கொன்று, வெருவ—அஞ்ச, கரிமருப்பு-யானைத்தந்தம், மடங்

கல்—சிங்கம், உருகெழுசீற்றம்—கண்டார் அஞ்சும் கோபம், பானுசித்திரன்புதல்வன் சுதாவுவென்றும்சதாயுவாம். பார் —ஆகுபெயராய் உலக மக்களை யுணர்த்திற்று.

185. வியந்தோர்—சிறப்பித்தவர், இந்திரதிரு—இந்திர செல்வம், தனிபுரந்து—தனியாட்சி புரிந்து, அரம்பையர் —தேவ நடனமாதர், திளைத்திட—நுகர (அநுபவிக்க), பெட்பின்—விருப்பின், வீற்றிருப்பார்—இறுமாந்திருப்பர்.

27-வது அத்தியாயம் முற்றும். 1406.

## 28-வது சந்திரவமிசம் உரைத்த அத்தியாயம்.

1 எம்பிரான் — எமதுபெருமானாகிய சிவபெருமான், திங்கண்மரபு—சந்திரவமிசம், வெள்விடை—வெண்மைநிற முறு இடபம், உவந்திட—மனங்களிப்படைய.

2 சந்திரன்மகன் புதன், அவன்மைந்தன் புரூரவா என்பவனும், உயிர்த்தல்—ஈனுதல், வேனில்வேள்—வேனிற் காலத்திற்குரிய மன்மதன், நசை—விருப்பம்.

3 சிந்துரம் — செவப்புநிறம் (திலகம்) உருப்பசி— ஊர்வசியென்பவள், புரூரவாவென்பவன் ஊர்வசியினைக் கூடி ஆயுவென்பவனைப்பெற்றனன், அந்தம் இல் சீர்த்தி —முடிவில்லாத பெரும்புகழ், கந்து—கட்டுத்தறி.

4 ஆயுவென்னு அரசன் பிரபை யென்பவளைக்கூடி நகுடன் என்பவனைப்பெற்றான், சாயல்—மென்மை, மானம் வேல்—பெருமைபொருந்தியவேல், தனயன்—மகன்.

5 நரலை—ஒலி, நகுடன்யயாதி யென்பவனைப்பெற்றான் கடாமலை—யானை, உரி—தோல், சிவபெருமானுக்குமாதங்காரியென்னும் பெயர் குறிப்பிடத்தக்கது.

6 யயாதியென்னும் மன்னன் சுக்கிரன்மகள் தெய்வயானையென்பவளையும் விடபருவாவின்மகள் சன்மிட்டையையும் மணம்புரிந்தான், வெள்ளி—சுக்கிரன், நல்கிய—பெற்ற, வள்ளி—வல்லி, (கொடி) எள்ளரும்—இகழமுடியாத.

7 தெய்வானையிடத்து எதுவும் துருவசுவும் தோன்றினர், எவ்வெலாத்திசை — எல்லாத்திக்கிடமும், கவ்வை—ஒலி, மருட்டும்—மருளச்செய்யும், சிறுவர்—மகார்கள்,

8 சன்மிட்டையென்பவள் துருகு, மனு, பூருஆயபுதல்வரை யீன்றனர், திறல்—வெற்றி, கச்சை — யானைகழுத்திடுகயிறு. கவினரி—அழகுற்று, துவர்—பவழம், நச்சு—நஞ்சு (விடம்) நல்கிடும்—பெறும்.

9. தீர்ந்து—விட்டு, கொவ்வை-(ஆகுபெயர்)கோவைப் பழம், கொதித்து—மனங்கொதிப்புற்று (ஆத்திரம்), எவ்வம்—துன்பம், வன்கிழவுரு—வலிய கிழவடிவம்.

10. உருவம் — இளையவடிவம், வாங்கி — எடுத்துக்கொண்டு, தருதிர்—கொடுங்கள், நால்வர்—எது, துருவசு, துருகு, மனு என்பவர், இசைந்தனன்—இசைந்து (உடன்பட்டு)

11. பருவம் ஆயிரம்—ஆயிரம் ஆண்டுகள், இன்னலம்—சிற்றின்பம், உதவி—கொடுத்து, மருவு மூப்பினை—பொருந்திய கிழவடிவை, அம்மைந்தன்—அப்பூரு என்பவன் புரவு பூண்டிட—பரிபாலனம் புரிய, பொழிகதிர்—வீசுகின்ற ஒளி.

12. தென்னந்திக்கு — தென்றிசை, துருவசு என்பவனுக்குத் தெற்குத் திசை நாடும், தென்கிழக்கு (அக்னித்திக்கு) நாட்டினை எது என்பவனுக்கும், மேற்றிசையைத் துருகுவெனு மன்னனுக்கும் ஆள்கவெனக் கட்டளையிட்டான்.

13. கடகளிறு—மதயானை, கானைபோலும் மனுவென் பவனுக்கு வடபுலத்தைக் காக்கவென முடிசூட்டினான், கான் குறுகி—காட்டினை யடைந்து, உடலம்—உடல், உயர்கதி—மோட்சம்.

14. தரை — பூமி, எதுவினுடைய தனயர், சகத்திர சித்து, வண்குரோட்டன், நீலசீதன், இரகு என்னும் நால்வராம், இயம்புவர்—கூறுவர்.

15. மோட்டரா — ஆதிசேடனாகிய உயரிய பாம்பு, பரித்து—தாங்கி, தீட்டும்—எழுதும். சகத்திரசித்து என்பவன் சந்திரசேகரனை வழிபட்டுச் சதசித்து என்பவனைப் பெற்றான்.

16 வெண்கவிகை — 'வெண்கொற்றக்குடை, சதசித்தன்சிறுவன் கேகயன், அவன்புதல்வன் வேற்றருமன் ஆகும். அடல்—வெற்றி, செரு—போர், பருகி—குடித்து, ஒன்னார்—பகைஞர், தடறு—உறையுள்.

17 கன்னல் .. கரும்பு, மடமாதர்....இளமகளிர், மயல் கூரும்....மயக்கமிகும், (தருமநேத்திரன் என்பவன் தருமன் தநயன் ஆம்) பொன்னங்கிரி-மகாமேருமலை, வனப்பு-அழகு, அவன்சேய் கீர்த்தியெனுமன்னவனாம்.

18 திறை....கப்பம், ஓதை....ஓசை, குணில்....முரசடிக்கும் குறுந்தடி, மும்முரசு....போர்முரசு, மணமுரசு, கொடைமுரசு, அவிக்கும் .... அடக்கும் (கெடுக்கும்) கீர்த்தியருண் மைந்தன் சஞ்ஞக்கினன் என்பவனும்.

19 அன்னோன்....அவன், முன்னைப்பவம்—முற்பிறப்பு ஓர்புறவம்—ஒருகாடு, பாசுபதன்-பாசுபதவேடமுடையவன் (இறைவனுமாம்) பதத்துகள்—பாததூளி, தனிபுரத்தல்—ஏகசக்ராதிபத்யம் செய்தல், அவன்றன்புதல்வன் அயிட்டுமானும்.

20 கத்திகை — மலர்மாலை, அயிட்டுமான் மைந்தன் பத்திரசிரேணி அவன் மைந்தன் உத்தமனுகும், பயந்த — பெற்ற, தோன்றல்—பெருமையிற்சிறந்தோன்.

21 தென்வரை—பொதியமலை, சுவடு—தழும்பு, கல் நவின்று—மலையினையொத்து, அனகன் என்பவன் உத்தமன் மைந்தனும். அனகன் புதல்வன் இருதவீரியன்.

22 இருதவீரியன்மகன் கார்த்தவீரியன். அவற்குக் குமாரர் நூற்றுவராம். ஆர்த்து—கட்டி, அடர்த்த-நெருங்கி மடக்கின, காவலன்—அரசன், ஆல்—அசைநிலை.

23 திணிதோள் — திண்ணிய வலியபுயங்கள், பரித்தோர்—சுமந்தோர், துலங்கும்—விளங்கும், சயத்துவசன்—வெற்றிக்கொடியையுடையவன், ஆரம்—மாலை,

24 இவருள், சயத்துவசன் விட்டுணுபக்தன். சூரன், சூரசேனன், விட்டுணி, கிருட்டிணன், நால்வரும் சிவபக்தர்கள், மதிவகிர்க்கண்ணியான் — சந்திர சேகரன், (சிவபெருமான்) புனிதர்—தூய்மையாளர்.

25 திங்களங்குலம்—சந்திரன்மரபு (வமிசம்) கங்கைசூடி—கங்காநதியினைத்தரித்தவன் (கங்காதரன்) கருதாய்—நினைத்திலை, மங்குல்—மேகம், பழிச்சின் — துதித்தால்.

26 ஐயன்மீர்—தமையன்மார்களே! (சகோதரர்களே!) அணுகி—நெருங்கி, சிறந்தது — மேன்மையுடையது, தேர்குதும்—தெளிவோம், உரைத்திடல்—கூறல், கறங்கு—காற்றுடி, ஐம்புலன்கடிந்தவர்—ஐம்புலன்களையும் வென்றவர்.

27 பழிச்சினரேனும்-துதித்தாராயினும், களிறுரித்தவர் —யானைத்தோலைப்போர்த்தவர், மூவர்— பிரமவிட்டுணுருத்திரர், முத்தொழில்—படைப்பு, காப்பு, மறைப்பு, தேவதேவன்-மகாதேவன், எப்பொருளினும் —'எல்லாப்பொருள்களினும்.

28 விண்டு—திருமால், கூற்று—வகை, (கலை) முகுந்தனை—திருமாலினை, விண்ணவர்கோ—இந்திரன், பரவல்—வழிபடல், நான்மறையவர்—நான்குவேதங்களையுணர்ந்தவர் பசுபதி—சிவபெருமான், வழக்கு—முறை.

29 தேவர்கள் திருமாலையும், அசுரரும்அரக்கரும் வயிரவக்கடவுளையும், யாழினோரும் இயக்கரும் சந்திரனையும் வித்தியாதரர் சரசுவதியையும் வழிபடல் வேண்டுமாம். ஓவில் — ஓய்வில்லாத, வீவில்—அழிவில்லாத, வாணி—வாக்குதேவியாகிய கலைமகள்.

30 சாத்தியர் (சாத்தேயர்) சூரியனையும், உமாதேவியையும், கடவுள் தன்மைவாய்ந்த தவசிகள் சிவபெருமானையும் பிரமனையும், மனுக்கள் பார்வதிபிராட்டியையும், இல்லறத்தினர் மாயவனையும் வழிபடல்வேண்டும். தொடர்பு—சம்பந்தம்.

31 பிரமசாரி பிரமனையும், வைகானசர் சூரியனையும், துறவிகள் மகேசுவரனையும், பூதங்கள் அரனையும், சிவகணங்கள் (தேவகணங்கள்) விநாயகப்பெருமானையும் வழிபடல் வழக்காம். பற்று—அகங்கார மமகாரமாகியபற்று.

32 பிரமதேவன்முதல் மரங்கள் இறுதியாகவுள்ள அனைத்துயிர்கட்கும் உமாமகேசுவரனே முதற்கடவுளாகும், பிதற்றல்—உறுதியின்றியுரைத்தல், சினை—கிளை, தரு—மரம் அலகு—எண், கலவமாமயில் — உமாதேவியார் (கலவம்—கலாபம்?

33 இருள்எறிந்து—அறியாமையைப்போக்கி, மன்றல்—மணம், வழுத்துதல்—துதித்தல், கொன்றைசூடி—கொன்றைப்பூவை யணிந்த சிவபெருமான், பழிச்சியது—துதிபுரிந்தது. நண்ணினர்—சென்றடைந்தனர்.

34. அளித்திடல்—புரத்தல் (பரிபாலித்தல்), விதேகன் என்னும் அவுணன் பெரும்படையுடன் இவர்களுடன் போர் புரிந்தனன். உளங்கனன்று—மனங்கொதித்து, பொருகளம்—போர் செய்யுமிடம், கடற்படை—கடல்போற் பரந்த சேனை.

35. சூரன் உருத்திர பாணத்தையும், சூரசேனன் வருணாத்திரத்தையும், வீரவிட்டுணு பிரமாத்திரத்தையும், கிட்டிணன் வாயுவாத்திரத்தையும் விடுத்தனர். தொடுத்தல், வழங்கல், விடுத்தல், மொழிதல் என்பன ஈண்டு ஒரு பொருளவாம்.

36. வெங்கணை—கொடிய அம்புகள், விலக்கி-தடுத்து, சிலைகுழைத்தல்—வில்லை வளைத்தல், சயத்துவசன் என்னும் விட்டுணு பக்தன் விட்டுணுவினுடைய சக்ராயுதத்தினை அபிமந்திரித்து விட்டு அவ்வவுணன்றன் பெருந்தலையினை வெட்டி வீழ்த்தினன்.

37. வெய்யதானவன்—கொடிய அசுரன், களவேள்வி போர்க்களத்திற் செய்யப்படும் யாகம், முற்றிய—முடித்த, மையில்கோசிகன்—குற்றமற்ற விசுவாமித்திரன், மாலுளமகிழ—திருமால் திருவுளங்களிப்ப, எழுமையும் துடைத்தான்—எழுபிறப்பினையும் நீக்கி முத்தியெய்தினன்.

38 சூரன், சூரசேனன், விட்டுணு, கிட்டிணி ஆகிய நால்வருக்கும், அகத்தியர், வசிட்டர், அத்திரி, கவுதமர், ஆய முனிவர்கள் நால்வருக்கும் சிவபெருமான் திருவுளமகிழச் சிவயாகம் புரிவித்தனர். அவற்றால் அவர்கள் முத்தி வீடுற்றனர்.

39 கிட்டிணனுக்குப் பிறந்த புதல்வர் வசணன் முதல் நூற்றுவராவர், உயிர்த்தல் — பெறுதல், சேடன் பரித்தபார் —ஆதிசேடன் தாங்கினபூமி, அளித்தான்—முடிசூட்டிவழங்கினன்.

40 சயத்துவசன் மைந்தன் காலசங்கன் என்பவன் நூறு பிள்ளைகளைப் பெற்றனன். அவருள் வீதிகோத்திரன் என்பவன் பாலலோசனனாகிய சிவபெருமான் திருவருளால் அனந்தன் என்பவனைப்பெற்றான், பாலலோசனன்—நெற்றிக் கண்ணன்.

41 நனந்தலைப்புவி—பரந்தஇடத்தையுடைய பூமி. நளிகதிர் — செறிந்தகிரணங்கள், தினஞ்செய்வோன்—சூரியன், திகிரிஒன்றுஉருட்டி—ஏகசக்ராதிபத்தியம் செய்து, வான்மகளிர்—தேவமகளிர், கவர்ந்திடுதுர்ச்சயன்—பற்றுகின்ற துர்ச்சயன் என்பவன்.

42 கருப்புவெஞ்சிலை-கரும்பாகிய கொடியவில், அகற்றிய—நீக்கிய, விழிகவர்வனப்பு — கண்களைக்கவரும் அழகு, அருப்பு—அரும்பு, வாள்—ஒளி, தட—பெரிய,

43 வீக்கம் — பெருக்கம், அற்பு—அன்பு, அணைந்திடு நாள்—கலந்தநாள், வெற்பின்வீங்கிய—மலையினும்பெருத்த, யமுனை—யமுனையெனும் நதி.

44 அமிழ்துரு-அமிர்தின்வடிவு, சுணங்குஅரும்பிய—தேமல்பூத்த, மென்மெலஒதுங்குதல்—மெதுவாகநடத்தல், கவினி—அழகுற்று.

45 உணர்வுபோய்—உணர்ச்சியானதுசென்று, கலப்ப—கூட, அறிவழிந்து—ஞானம்கெட்டு, தொண்டன்—அடியவன், கேட்டி — கேட்பாய், இரந்து—யாசித்து.

46. கம்மியர் — கம்மத்தொழில் புரிபவர் (தட்டார்) கைசெயா—கைவேலைப்பாடு செய்யாத, பூண்சுமந்து—அணிகலன்களைத்தாங்கி, திருவே — இலக்குமியே! கோடியன்—(வளைக்கப்பெற்றவன்) கொள்ளப்பட்டவன், என்செய்வேன் —யாதுபுரிவேன்.

47 மதர்வைநோக்கி .... செழித்தகூரியவேல் போன்ற பார்வையுடையவள், இன்னகை-இனியசிரிப்பு, வாயில்-சந்து (வழி) புதுநறு—புதுத்தேன், வீழ்—விரும்பும், சுரும்பர்ததையும்—வண்டுகள் நெருங்கி மொய்க்கும்.

48 வண்ணம்—அழகு, மதியும்—மதிபோன்றமுகமும் வேள்—மன்மதன், இமைப்பற—மூடலின்றி, கடவுளர்—தேவர், அரசிளங்குமரன்—துர்ச்சயன்.

49 தேய்வை—சந்தனம், கோட்டி—பூசி, ஒளித்திட—மறைய, மருவி—கூடி, வண்டுருப்பூங்குழல் — சண்பக நாறும் அழகியகூந்தல், உரைக்க—கூறவும், நலம்—இன்பம்.

50 விசும்பிடை — ஆகாயத்தின்கண், விண்ணவர்—தேவர், அதிர்திரை—நடுக்கஞ்செய்யும்அலை, அணைதொறும் கூடுந்தோறும், பயக்கும்—கொடுக்கும், போகலேன்—நின்னை விட்டுப்போகமாட்டேன், புதுநலம்—புதிய இன்பம்.

51 வாள்—ஒளி, உழுவலன்பு-தொடர்ந்துபற்றிவரும் அன்பு, பலபகல்—பலநாட்கள், முழவு—முரசு, (மத்தளம்) கண்டுயிலாத—அடித்தல்ஓசைவிடாத.

52 வேனில்வேள்—மன்மதன், செப்பு—சிமிழ், கழை—மூங்கில், குடங்கை—உள்ளங்கை, குவளை—நீலோற்பல மலர், மடந்தை—பேரரசி, உவளகம் — அந்தப்புரத்திடம், மாதோ—அசைநிலை.

53. கற்பு—கற்புத்தன்மை, புகுதருகணவன் — வந்தடைந்த தலைவன், எற்பிரிந்து—என்னைவிட்டுநீங்கி, படர்ந்தனை—சென்றனை, வெற்பின்—மலையினைவிட, தடம்புயன்—பெரிய தோள்களையுடைய அரசன், வெள்கினன்—வெட்கமுற்றவன் (நாணமடைந்தவன்) மூரல்பூத்து—சிரித்து, அணங்கு—தெய்வம்.

54, ஊடுகின்றிலன்—நீர் செய்த வேலைகளைக் குறித்து யான் பிணங்கமாட்டேன், வெருவல்—அஞ்சற்க, உருப்பசி யென்னுந் தேவதாசியினைக்கூடிய பாவப்போக்கிற்குக் கண்ணுவ முனிவரைக்கண்டு பெருவேள்வி புரிகவென்ருள், நெஞ்சழிந்து—மனநொந்து.

55. அரங்கக்கூத்தியர்-(நாடகமகளிர்)ஊர்வசி, திளைப்ப—அனுபவிப்ப, விரிந்ததீவினை—பெருகியபாவம், துடைக்குவல்—போக்குவேன், பெருந்தவம்—பெரியநோன்பு, இரங்கும்—கூவும், இமயவெற்பு—இமயமலை.

56. கதிர்எறித்து — கிரணங்களைவீசி, மையெறிந்து—இருளினைப்போக்கி, பன்மணிகுயிற்றிய—நவரத்தினங்கள் வைத்திழைக்கப்பெற்ற, கய்யினேந்தி—கையில் எடுத்துக் கொண்டு, கனன்று—கோபித்து, நேர்ந்தான்—இணங்கினுன்.

57. தூமம்—புகை, துணிந்து—வெட்டி வீழ்த்தி, தமம்—மாலை, தளிர்இயல்—மாந்தளிர் போன்ற மென்மைத் தன்மை, மனம் வலித்தான்—மனத்தைச் செலுத்தினுன்.

58. சூழ்வரல்—சுற்றிவருதல். தீரம்—கரை, ஏமகூடம்—ஒருமலை, அமரர்நாடு—தேவருலகம், குமுதவாய்ச்சி—செவ்வல்லி மலர்போன்ற வாயினையுடையவள், உளங்கொதித்தான்—மனம்பதைப்புற்ருன்,

59 தேனளாயசொல்—தேன்கலந்தமொழி, வெள்குற நாணமுற, ஊரு—தொடை, மானதப்பெருவாவி—இமயமலையிலுள்ளமானசரோவர் என்னும் பெரியதடாகம், கண்டு—பார்த்து மகிழ்ந்தான்—களிப்புற்ருன்,

60 பிரமனும் இந்திரனும் புலமைத்தன்மைமேம்பட்ட வித்தியாதரனுக்குப் புகழ்ந்துதந்த, விலை மதிக்கமுடியாத அந்த அழகிய நவரத்தின மாலிகையை சிறப்பித்துக்கூறி உலகெலாம்புகழும் ஊர்வசியின் மார்பிலணிந்தான் துர்ச்சயன்.

61 வெண்மதிதலத்தினில்-வெள்ளியநிலாமுற்றத்தில் கொழுதி—கோதி, கொங்கு—மணம், தண்டலை—பொழில் (சோலை) மங்குல்—மேகம், மலைச்சாரல் — மலைப்பக்கம், நன்னலம்—நல்லஇன்பம், நுகர்ந்தான்— அநுபவித்தான்,

62 வார்—கச்சு (இரவிக்கை) மருவி-கூடி, தட்பினும் —தடுப்பினும், சோரும் — தளரும், துடியா — துடித்து, ஈரம்—குளிர்ச்சி, விள்ளாது—மொழியாது.

63 ஓர்நொடி — ஒருமாத்திரைப்போழ்து, மருமம்—மார்பு, ஊழிநாள்—பலகாலம், தயங்கி—வாடி, துணர்த்த—கொத்தாயுள்ள, புணர்ப்பு—உபாயம்.

64 கைதவம்தெறும் — பாவவினைகளைப் போக்கும் கலந்து—கூடி, பைதல்—துயர், பகர்ந்தவை-கூறப்பட்டவை செய்திடாமையால்—செயல்செய்யாமையால், தீய—தீய்ந்து போக, வைது—சாபங்கொடுத்து, மருண்டு—மயங்கி.

65 பெட்புஅற — ஆசையொழிய, வேற்றுரு—மாறு வேடம் வெம்கூத்தியர்—கொடியநாடகமகளிர் (பரத்தை) குணிக்கும்—எண்ணும் (கருதும்) கள்ளம்—கபடம், கணிப்பு —அளத்தல், நசை—விருப்பம், அருவிதூங்கும்—அருவிநீர் ஒழுகும். (அசையும்)

66 வளியருந்தி—காற்றினைப்புசித்து, பன்னிருபருவம் — பன்னீராண்டு, அளிகொள்நெஞ்சு — அருளுடையமனம், மருங்கு—பக்கம், துளிகொள்கண்ணினன் — வருந்துகின்ற நீர்வடிக்கும் கண்களையுடையவனாகி, துடைக்க—ஒழிக்குக, கண்ணி—மாலை, நடுங்கல் — நடுங்கற்க, நவில்வான்—கூறு வான்,

67 மாசுபூத்து — குற்றம்பொருந்தி, காசியல்லது — காசியென்னும் புண்ணியப்பதியல்லாமல், தேசிகன்—ஆசா

ரியன், தீதுஎறிந்த—பாவங்களையொழித்த, ஆசில்கேள்வி—குற்றமற்றகேள்விஞானம், பணிந்து—வணங்கி.

68 ஏக—செல்ல, ஓர்கழல்—ஓரடி, பெயர்த்திடுமுன்—வைக்குமுன்னர், கங்கைநீர்ப்படிந்து — கங்கைநீரில்மூழ்கி, வெண்ணீறுபூசுமேனியான்-சிவபெருமான், போற்றிசைத்து—துதித்து,

69 முத்திகண்படும் — முத்திசித்திக்கும், முழவுறழ்தோளான்—துர்ச்சயன், விமலனை—விசுவேசப்பெருமானை, இறைஞ்சி—வழிபட்டு, தத்துவம் — மெய்ப்பொருள், தவவனம்—தவம்புரிஆச்சிரமம், கழலிணை—திருவடிகளை.

70 தொழுதமன்னனை — வணங்கினதுர்ச்சயனாகியஅரசனை, துகள்—பாவம், பழுது—குற்றம், தடவந்து—தடவி, துவர்வாய்—பவளஇதழ்.

71, கருணையங்கடல்—கிருபாசமுத்திரம் (அருட்கடல்) இருநிலம் — பெரியபூமி, மாமகம் — பெருவேள்வி, ஆற்றுவித்து—செய்வித்து, அவன்சேய் — அந்தத்துர்ச்சயன் புதல்வன், மேவலர்—பகைஞர், சுப்பிரிதன் துர்ச்சயன் புதல்வன்

72 முழுவலி — நிறைந்தவன்மை, சூரோட்டுவென்னுமன்னன் மகன் துவசனியென்பவனும், வரிசிலையுழவன்—வில்வீரன், பன்னகம்—ஆதிசேடன், துன்னலர்—பகைவர், பொதுநீக்கியாளல்—ஏகாதிபத்தியமாக ஆட்சிபுரிதல்.

73 நச்சுஇலைகுடுமி-நஞ்சுபூசிய இலைவடிவாயுள்ளமுனை புலால்—ஊன், பசிப்பிணி — பசிநோய், செச்சை—வெட்சியாம், துவசனி புதல்வன் மூர்த்தியாம்,

74 மூர்த்திமைந்தன் விசங்குவா அவன் மைந்தன் சித்திரத்தேரனும், செரு—அமர், கலை—வித்தை, கதிர்த்த—விளங்குகின்ற, ஆல்—அசை.

75 திருவிருந்த திண்டோள்-வீரலக்குமி தங்கிய திண்ணிய தோள்கள், சித்திரத்தேவன் செல்வன் சசிவிந்து, அவன் மைந்தன் பிருதிவியச்சுவாம், உயர்நிலம்—உயர்ந்தவர், பைத்து—படமுடையது, பேசும்—புகழ்ந்து பேசுவர்

76 அவன்மைந்தன் பிருதுகன்மன், அவன்சேய் பார்க்கவன் இவன்புதல்வன் பிருதுவாம், ஆடல்வேல்—வெற்றிவேல், வாங்குவில்—வளைத்தவில், மவுலி—முடி.

77 பிருதுவின் புதல்வன் பிருதுசத்தமன், குடாது குணாது வடாது தெனாது—மேற்கின் கண்ணுள்ளது கிழக்கு வடக்கு தெற்கு, குப்பை—குவியல், வாய்ந்திடும்—வாய்க்கப்பெறும். முற்றும்—முழுதும், கடாமலை—மதகிரி,

78 நெற்றி—உச்சி, தோய்ந்து—படிந்து, செலவு—செல்கை, புரிசை—மதில், கோட்ட — தந்தங்களையுடைய மிடல்—வலிமை, திறல் — வெற்றி, பிருதுசத்தமன் மகன் உசனும், அவன்புதல்வன் சிதேடு என்பவன் ஆம்.

79. மற்றவன்—சிதேடு என்பவன், இவன் மகன் கவசன் இவன் புதல்வன் சாரவிருத்தன் இவன் மைந்தன் உறுவியனுவன், கொற்றவர் — அரசர், கவிகை—குடை, ஒன்று ஒற்றை யெனவாயது. குரைகழல்—ஒலிக்கும் வீரக்கழல்.

80. எஃகம் — வேல், ஞாட்பு—போர், பொன்னகர்க்கிறை—இந்திரன், புரவு—புரத்தல்(காத்தல்), விசும்பு-விண்ணுலகு, உறுவியன் மைந்தன் விதர்ப்பன் என்னும் பெயரினன், எந்நிலம் என்றது எதுகைநோக்கி என்னிலமாயது.

81. குழைந்த — இளகிய, வில்லுமிழும்— ஒளிவீசும், அளித்த—பெற்ற, இவ்விதர்ப்பன் சேய்களாவார்—கிருதன் கௌசிகன், உரோமபாதன் என்பவர்களாம், களைகண்— ஆதரவு(பற்றுக்கோடு) அடிப்படுத்தல்—தன்கீழ் அடங்கச்செயல்

82. மணக்கும்—கலக்கும், பிறங்குசீர்—விளங்குகின்ற புகழ்கள், உரோமபாதன் புதல்வன் பெப்புரு என்பவனும். இவன் மைந்தன் விருத்தியாவன், மறம்—வெற்றி, கறங்கு—ஒலி, கறங்குநீர்—கடல்.

83. கலை—ஆடை, வீங்கி—பருத்து, கை—பக்கம், காலும்—கக்கும் (வீசும்), சந்தன் என்பவன் விருத்தியின் மகனும். சந்தன் மைந்தன் விச்சுவசமன் ஆம்.

84 மடல்—இதழ், வயிரம்....வச்சிராயுதம், வெம்சமம் -கொடியபோர், மாந்தும்-குடிக்கும், சுமந்துஎன்பவன் விச்சுவசமன் புதல்வன் ஆம்.

85. எழு—கணையமரம், கழுது—பேய், ஆல—சுற்ற, ஒன்னலர்—பகைஞர், கடிந்த —தொலைத்த, நளனெனும் மூரிவேலான்—சுமந்துவின் சேயாம். மூரி—வன்மை (பெருமை.) ஓச்சும்—செலுத்தும்.

86 அல்லவை — பாவச்செயல்கள், கடிந்து — நீக்கி கல்லுறழ்—மலைபோன்ற, விதர்ப்பர்கோன்மகன் கௌசிகன் இவனுடையபுதல்வன் சேதியாவன் இவன்குமரன் சோதிட்டுமன், படைத்த—உண்டாக்கின,

87 புரக்கும் — காவல்புரியும், சோதிட்டுமன் மகன் வபுட்டுமான், இவன்புதல்வன் பிரமமேதியாவன். கூவ—கூச்சலிட, உழவன்—வீரபுருடன்.

88 அருட்கடன்—கருணைக்கடப்பாடு (கடமை) அன்னோன்—பிரமமேதி, இவன்குமாரன் சிதரன் என்பவனும், முருக்கு—புனமுருக்கம்பூ, மூரல்—பல், சிதரன் செல்வன் விகாதன் என்னும் நாமம் பூண்டவன், அன்றே—அசைநிலை.

89 இடங்கர் — பெண்முதலை, கரா — ஆண் முதலை, கிடங்கர்—அகழி (பள்ளத்தாக்கு), கிருதன் (விதப்பர்கோன் மகன்), இவன்மகன் குணியவன்ஆம். இவன் புதல்வன் விருட்டுணி என்னும் பெயர் பூண்டவனும். மாது ஓ அசை நிலைகள்.

90 மூழி—பூப்பெட்டி, தாக்கி—மோதுண்டு, விழுத் தழும்பு—சீரியவடு, நிருவிருத்தியென்பவன் விருட்டிணி மகனுகுவன், எழில்....அழகு, கிழியில்—ஆடையில் (சீலை), தீட்டும்—எழுதும் (வரையும்), ஆல்....அசை.

91 கரிமருப்பு — யானைத்தந்தம், (கருமருப்பு—கரிய கிளை), கைதை—தாழை, வெருவர—அஞ்ச, வரிவில்—கட்டமைந்த வில், நிருவிருத்தி மகன் தெசாருகன், இவன் புதல்வன் ஆரோகன் ஆம், இரவலர்—யாசகர், திறல்—வெற்றி.

92 மேனி-உடல், கணை மாரி-அம்பு மழை, ஆரோகன் மகன் சீமூதன்ஆம். இவன் சிறுவன் விகுதியென்னும் பெயருடையவன். மையல்—மத மயக்கம், வயம்—வெற்றி, சிறுவன்—புதல்வன்.

93 வெண்டலை—வெள்ளியமுனை, ஒன்னர்—பகைவர், காதம்—காததூரம், புலால்மணம்—புலால்நாற்றம், கமழும் —வீசும், வைவேல்—கூரியவேல், விகுதிமைந்தன் பலாச்சுவன் இவன்மைந்தன் நவாச்சுவன் ஆகும். எண்டிசை—எட்டுத்திக்கு.

94 மிடறு — கழுத்து. இருங்குயில்—கரியகுயில், அகவும்—கூவும், சூழ்தரும்—சுற்றிவரும், நவாச்சுவன் புதல்வன் தயரதனுகும், பகடு—யானை, தோன்றல்—புதல்வன்.

95 வாலரி—வெள்ளியஅரிசி, கமலம்—தாமரை, சாலி —செந்நெல், மல்லல்-வளப்பம், வயக்களிறு—வெற்றியானை தயரதன் தநயன் சகுனி இவன்புதல்வன் காந்தியென்பவன் ஆம்.

96 சோறு—மகரந்தப்பொடி, செம்பொன்ருகுமடல்—செவந்தபொன்போன்ற திரண்டஇதழ், சிந்தும்—சிதறும் சேர்ப்பன்—கடற்றுறைத்தலைவன். வீறு—பெருமை, காந்திமைந்தன் தேவரன் இவன்சேய் தேவரபக்கன்.

97 தொய்யில்—எழுதுகோல், அநங்கன் — உருவிலி (மன்மதன்) தேவரபக்கன் செல்வன் மதுஎன்பவன், இவன் மகன் குரவசன் ஆம், குலக்குறுமைந்தன் — குலத்திற்குரிய புதல்வன், என்பர்—என்றுபுகழ்ந்துரைப்பார்கள்,

98 மணிக்குடம்-இரத்தினகும்பம், வேட்ப—விரும்ப, துணைப்புயம் — இருதோள்கள், கணிப்பரும்—கருதற்கரிய, காளை — காளைபோல்வான் (மனுவாம்) இவன்மைந்தன் புருகுச்சன் ஆகும்.

99 விறற்புருகுச்சன் மகன் அஞ்சனும், நஞ்சு-நச்செனவலித்தல் விகாரம், குறுகலர்—பகைவர், செற்ற—அழித்த, எயிறு—பல்.

100 அஞ்சுவின் மைந்தன் சாத்துதன் ஆம். இவன் மைந்தர் விருட்டிணியும் அந்தகன்என்பவனும் ஆவர். அடையலார்—பகைவர், மஞ்சு—மேகம்.

101 மதுராபுரிக்கரசனுகிய விருட்டிணிதன் புதல்வர் மித்திரனும் சனியும் அனமித்திரனும் ஆவர், முத்து-முத்துமாலை, ஆல் அசை நிலை.

102 செம்மணி—மாணிக்கம், நூற் கடல் — பலகலையாகமங்கள், மித்திரன் என்போனின் மகன் நிக்கினன் ஆவன். இவனுடைய மைந்தர்கள் சத்திராசித்தனும் பிரசேனனும் ஆவர். நுவலரும்—கூற முடியாத.

103 கூற்றிருந்து ஆலும்—இயமன் தங்கியாடும், சனியெனு மன்னவன் மைந்தன் சத்தியகன் இவன்றன் மைந்தன் சாத்தகியாவன். இவனுக்குப் புதல்வன் சஞ்சயனும், குருசில் ஆடவரிற் சிறந்தவன், பாற்றினம்—கழுகும் பருந்தும்.

104 சஞ்சயன் மகன் குணி, இவன் மகன் உகந்தரனு கும், புணர்ந்திடும்—கூடும், தொய்யில்—எழுதுகோல், கலன் —அணிகலன், சேதகம்—சேறு, தழல்உமிழ்—அக்கினியைக் கக்கும், உரைக்குவர்—கூறுவர்.

105 கோதை—மாலை, திதலை-தேமல், அனமித்திரன் பிருக்கினி யென்பவனும். சிங்கஏறு—ஆண் சிங்கம், திகழ்— விளங்குகின்ற.

106 குதட்டும்—மெல்லும். பழங்கண்—துன்பம், பிருக் கினீ மைந்தர் சுவர்க்கன் சித்திரகன் என்பவராம், கழுந்து— வில்ல மூந்திய இடம், குறுத்தாட் பூதம்—குறுகிய தாளினை யுடைய பூதம், ஈருள்—ஈரல், குழைக்கும்—வளைக்கும், கல் செய்தோள்—மலைபோன்ற தோள்கள், ஏ அசைநிலை.

107 சுவர்க்கன் நன்மைந்தன் அக்குரூரன், இவனு டையசேய் தேவவானுகும். இவன்மகன் விச்சுவச்சேனன். இவன் புதல்வன் பிருதுவென்பவன், இவன்குமாரன் விப்பி ருதுவாம், ஓங்கெயில் — உயர்ந்தமதில், வாகைவேல் — வெற்றிவேல்.

108 அந்தகன் பெற்றபிள்ளைகள் குரூரன், புரந்தரன். பயமானன் என்பவர்களாம், நேரலர்-ஒன்ருதவர் (பகைஞர்) உயிர்த்தல்—ஈனுதல், மாதோ அசைகள்.

109 தாக்கும்—அடிக்கும், சியம்—சிங்கம், வெங்குரூ ரன்மைந்தன் விருட்டிணி, அவன்மைந்தன் உரோமமனும். அவன்புதல்வன் சாந்தன், அவன்சேய் விலோமகன், அன் னேன் புதல்வன் நபனுகும் அன்று ஏ அசைநிலைகள்.

110 சுடிகை—உச்சிக்கொண்டை, பார்-பூமி, கையுறை —முகமனுவழங்கும், வெய்யவன்-சூரியன், ஓட்டற—செலவு ஒழிய, நிவந்த—உயர்ந்த, (அவன்நபன்) இவன்மகன் அனு வென்பவனும், நிழற்றும்—நிழலைச்செய்யும், குப்பைகள் — குவியல்கள்,

111 உரும்—இடியேறு, உழுதிடும்-உராயும் (குத்தும்) அழுந்திடும்—பதியும், ஆரம்—சந்தனம், அலங்கும்—அசையும், அநுவின்மகன் ஆனகத்துந்துமியாவன்.

112 மதாணி—மார்பிலணியும் ஆபரணம் (பதக்கம்) இமைக்கும் — ஒளிவிடும், துந்துமியின் மக்கள் மூவராவர். ஆருகன், மித்திரன், எனும் இருஆண்களும் திரிமதி என்னும் பெண்ணுமாம், தரங்கம்—அலை, திருவும்—மக்கட்செல்வமும், கருங்கடல்—ஆழமானகடல்.

113 மித்திரன் கந்தருவ மகளைப்புணர்ந்துஐந்து புதல்வரைப்பெற்றான், திரிமதி என்பவளை இயக்கன் என்பவன் மணந்து கசேனன் வீரன், சுக்கிரீவன் போசன் ஆவாகன் என்பவர்களை ஈன்றான், கதிர்கொள்வாள்—ஒளிபொருந்திய வாளாயுதம்,

114 வலம்புரி -- வலம்புரிச்சங்கு, தரளம் — முத்து, பெடை—பெண், திரிதரும்-சுழற்றும், புனலுடன்—சோறுடன், அலங்கல் - மாலை, ஆருகன் புதல்வர்இருவர் அவர்கள் தேவகனும் உக்கிரசேனனுமாவர்.

115 புரசை—யானைகழுத்திலிடுககயிறு, அளப்பருநிதி-எல்லையில்லா (அளக்கமுடியாத) செல்வம், திரை—கப்பம் உரு—அச்சம், தேவகன்மக்கள் தேவவான்முதல் நால்வராவர் பெண்கள் தேவகிமுதலாக எழுமராம், துவர்வாய்—பவளம் போலும் உதடு.

116 ஓடை—முகபடாம், திறல்கூர்— வலிமைமிகுந்த உக்கிரசேனன் மைந்தர் கஞ்சனை முதலா ஓரெழுவராவர் சேடு—அழகு, ஆடகம்—நால்வகைப் பொன்னில் ஒருவகை.

117 அந்தகன்மைந்தன் பயமானன் என்னும் பேரழகினன்புதல்வன் விடூரதனுவன், தரைத்துகள்—பூமியின் கணுள்ள புழுதி, தாரை—மழைத்தாரை, புகறல்—கூறல்.

*118* விரிந்திடுவெகுளி – மிக்கசினம், தீயது—தீயினை யுடையது (அக்கினி) சுருவை — வேள்வியில் நெய் விடும்துடுப்பு (அகப்பை) நீப்பு—நீக்கம் (இடையீடின்றி) ஒழுக—சொரிய, பண்ணவர்—தேவர், களவேள்வி—போர்க் களயாகம்.

*119* பணிலம்—சங்கு, கான்றிடும்—சொரியும், நித்தி லம்—முத்து, புயல்—மேகம், உயவு-வருந்தும், உரீஇ—நீக்கி, விதிர்க்கும்—அசைக்கும், வயம்—வெற்றி. சமியென்பவன் சூரன் அளித்திடு புதல்வனும், புகழ்—பெருங்கீர்த்தி,

*120* அடை கிடத்தல்—குஞ்சு பொரித்தற்குச் சூடுண் டாகப் படுத்துக் கிடத்தல், எகினம்-அன்னப்புள், உணங்கும் —வருந்தும், ஆன்ற—நிறைந்த, சமிமகன் பிரதிகேத்திரன் இவன் மகன் போசனும், அடிப்படுத்தல்—தன்கீழ் அடங்கி நடக்குமாறு செயல்.

*121* ஆம்பல்—அல்லி (ஒருவகைக் குழல்), ஆய்கதிர்— அழகிய கிரணங்கள், தூம்பு—துவாரம், வாய் திறந்து— விரிந்து (மலர்ந்து), சுறவு—ஒரு வகை மீன், நறவு—தேன், சாயல்—மென்மை, போசன் மைந்தன் கிருதியாவன்.

*122* புளினம்—மணற்குன்று, நரை-வெண்மை, (நரை யுடையது நாரையாம்) குருகு—அன்னப் பறவை, திளைக்கும் —கலக்கும், கிருதி மைந்தன் கிருதவன்மாவாம்.

*123* கமலம்—தாமரை, மேதி—எருமை, செருத்தல்— மாட்டின் மடி, ஒழுகும்—சொரியும், மல்கு நீர்—நிறைநீர், போற்றிடும்—துதிக்கும் (பாராட்டும்), கிருதவன்மன் மகன் தெய்வகன் என்பவன் ஆவன்

*124* வெற்புறழ் — மலையினை யொத்த. ஈட்டம் — தொகுதி (கூட்டம்). பனைக்கை—பனைபோன்ற துதிக்கை, முரித்து-ஒடித்து, சாரல்-மலைப் பக்கம், தேவகன் இனிதருள் புதல்வன் சூரன் என்பவனும்.

*125* நவை—குற்றம், திசை திசை போக்கி—எல்லாத் திசைகளிலுஞ் செலுத்தி, நானிலம் — குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தலென்பன. தவலருஞ்சீர்த்தி — நீக்கற்கரிய பெரும் புகழ், தீற்றும்—பூசும், உவவுவெண்டிங்கள்—பூர்ணிமைசந்திரன் (நிறைமதி), சூரன் மைந்தன் கண்ண பிரானைப் பெற்ற வசுதேவன் என்பவனும்.

*126* தனிபுரந்து—தனியாட்சி புரிந்து, குதலை—மழலை மொழி.

23-வது சந்திரன் மரபுரைத்த வத்தியாயம் முற்றும், ஆகச் செய்யுள் 1532.

## 29-வது கண்ணன் அவதரித்தது

*1* தேவகன்என்போன் ஈன்ற ஏழுபெண்களையும் சூரன் மகன் வசுதேவன் என்பவன் மணந்துகொண்டனன், அலை முத்தம் —கடல்முத்து, வேட்டு—மணந்து.

*2* கஞ்சன் — கண்ணபிரானின்அம்மான், ஆவிகொண்டிடுவன்—உயிரைப்போக்கிடுவன், அந்தரவாணி — ஆகாசவாணி (அசரீரி) புரையும்—ஒக்கும், வவ்வ-பற்ற, கோவடும்—அரசைக்கொல்லும், வாளுறையுரீஇ — வாளினை யுறையினின்றும் நீங்கி.

*3* கோறல்—கொல்லுதல், வான்பழி—பெரும்பாவம், சீற்றந்தவிர்ந்து — சினம்நீங்கப்பெற்று, பங்கம் — குற்றம், பணிந்து—வணங்கி, கொங்கு—மணம், கோமகன்—அரசன், தோன்றும்—உதிக்கும்.

*4* இசைந்து— உடன்பட்டு, பிழி—தேன், செவ்வாய் அணங்கு—செவந்தஉதடுகளையுடைய தேவகி, வேலை—கடல் நோன்றாள்-வலியதாள்கள், இன்னல்—துன்பம், அழுங்கி—வருந்தி, இரும்சிறை—பெரியகாவற்கூடம்.

5 இருநிலமடந்தை — பூமிதேவி, கமலப்புத்தேள்— தாமரைமலரிலுறையுந்தேவனாகிய பிரமன், தீமை—கொடுமை, தாங்கரும்—பொறுக்கமுடியாத.

6 பரித்தல்ஒல்லாது—தாங்கஇசையாது, மேதகுமமரர் மேன்மைதங்கியதேவர்கள், சூழ—சுற்றிவர, பூதலமடந்தை —பூமிதேவி, சீதரன்—திருமால், வேதன்—பிரமதேவன்.

7 முருகு—மணம், இருநிலம்—பெரியபூமி, பொற்பு- அழகு, ஓருகுழையொருவன்—ஒற்றைக்காதணியுடைய பலராமன், உதித்தும்-அவதரிப்போம், அன்று ஏ அசைநிலைகள்

8 பகர்ந்து—அருளுரைகூறி (வெண்மயிர் பலராமனாகவும் கருமயிர் கண்ணன் ஆகவும் தோன்றினவென்பர்) ஒன்றுபேரன்பு—பொருந்தியபெரியஅன்பு.

9 ஒவில்—ஒழிவில்லாத, விரகு—உபாயம், தாவில்— கேடில்லாத, முறை முறை—வரன்முறை, சேர்த்தி—சேர்ப்பிப்பாய், தேவகி—வசுதேவன் மனைவி.

10 ஏழாங் கருப்பம்-ஏழாவது கரு, உயிர்க்கு முன்னர் —பெறுதற்கு முன், எடுத்துப் போய்—தூக்கிச் சென்று, துதிப்பு அரும்—போற்றற்கரிய. உரோகிணி வயிற்றில்— உரோகிணி தேவியாரது வயிற்றிலிடத்து, புதுக்கடி—புதுமணம், அமைத்தி—அமைப்பாய்.

11 இருட்பக்கம்-தேய்பிறைக்காலம், அட்டமி, நவமியென்பன எட்டா நாளும் ஒன்பதாம் நாளும் ஆயதிதிகளாம். வருவன்-வந்து சேர்வேன், உதித்தி-தோன்றுவாய், அன்று, ஏ அசை நிலை,

12 தாள் செறிவல்லி—தாளில் பூட்டப்பட்ட விலங்கு, துனைவு—விரைவு, ஆய்ப்பாடி-(ஆயர்பாடி) இடையர் சேரி, வளர்த்தி—வளரச் செய்வாய், வல் இரவில்— வலிய இராக்காலத்தில், கரம்—கை, யமுனை....யமுனையாறு, உய்ப்பான்— கொடுப்பான், (செலுத்துவான்)

13 செஞ்சவே — நேராகவே, மஞ்சு—மேகம், இற— ஒடிய, வயிரவாள் வேந்தன்-வச்சிராயுதம்தாங்கிய இந்திரன், இருத்தி—இருப்பாய்.

14 இவையனைத்தும்—இவ் வரலாறு முற்றும், மாழ்கி —மயங்கி, அனுக்கும் — வருத்தும், செவ்வாய் — செவந்த உதடுகள், சேர்த்தான்—கூட்டினான்,

15 வல்லியிற் கிமிழ்ப்புண்டு—விலங்காற் கட்டப்பட்டு, மொய் குழல்-நெருங்கிய கூந்தலினையுடைய தேவகி, குறைத் திட்டான் — வெட்டி வீழ்த்தினான், வயிறு வாய்த்தல்— ஈனுதல்.

16 இன்னனம்—இவ்விதம், கன்மிசை—கல்லின்மீது- எற்றி — வீசியெறிந்து, கடிந்தபின்னர் — போக்கியபிறகு, மணி—நாகரத்தினம், சேடன்—ஆதிசேடன், கருக்கொண் டாள்—சூல் உற்றனள்.

17 உயிர்க்குமுன்—பெற்றெடுக்குமுன், இறும்பூது— வியப்பு, பாலிறக் குழவி—பலராமன் (வெள்ளைப் பிள்ளை), புணர்ப்பு—தந்திரம், ஆனிரை — பசுக்கூட்டம், ஒளித்து— மறைத்து, மான்மருள் நோக்கு—மான்போன்ற கண்.

18 கங்குல் — கரியமேகம், பணை — மூங்கில் (கிளை விட்டுப் பணைத்திருத்தலின்), அடையார்....பகைஞர், இருட் பிழம்பு — இருட்டொகுதி, மேய்ந்து — இல்லையாம்படிச் செய்து, புகழ் நிலா....புகழாகிய நிலவு (உருவகம்), சிறுவனை ....பலராமனை (உரோகிணிதாய்)

19 காம்பு .... மூங்கில் (புள்ளாங்குழல்), கருமுகில் வண்ணன்....கண்ணபிரான், வழாமல்....வழுவாமல் (தவிரா மல்), தாவில்சீர்....கேடில்லாத புகழ், கண்ணன்பிறந்தவாரம் புதவாரம் எனச்சொல்லப்படுகிறது, பானாள்— நடுஇரவு,

செல்வன்—சிறுவன், சங்கு—பாஞ்சசன்னியம், நேமி—சுதரி சனம் என்னும் சக்கராயுதம், வாள்—கௌமேதகி.

20 இந்து—சந்திரன், கங்குல்மனைவி — கங்குலாகிய தலைவி (உருவகம்) செந்துவர்மருட்டும்-செவந்தபவழத்தினை யொக்கும் (மருளச்செய்யும்) பூத்த—தோன்றின.

21 திருமகள் — இலக்குமிபிராட்டியார், முகுந்தன்—மாயோன், (திருமால்) இருநிலமங்கை—பூமிதேவியார், எய்துதல்போன்றது—வந்தடைந்ததையொத்திருந்தது.

22 அநுமானம் — வழியளவை (தருக்கநூல்காண்க) நுண்மருங்குல் — நுண்ணிய இடை, கண்ணளவு—கண்ணாற் காணுமளவு (பிரத்தியட்சப்பிரமாணம்) காண்வரல்-காணப் படல், தோன்றிற்று—புலப்பட்டது.

23 உலகனைத்தினையும் உண்டோன் — உலகமுழுதும் உண்டபெருவாயன் (திருமால்) இச்செய்யுள் உடல்வெளுத் துள்ளதைச்சிறப்பிக்கின்றது, எழில் — அழகு, சுணங்கு அணிந்து—தேமல்படரப்பெற்று, பருத்தது — பெருத்தது (அன்றேஅசை)

24 அருப்பம்—அணுகியது, எவரும் — எந்நூலாரும், கருக்குழி—கருப்பையிடத்து, தீர்த்தகாரணம்—ஒழித்தகார ணம், உருப்பம்—துயரம், வறுமை—இலதாந்தன்மை, பதம் சேர்ந்தோர்—திருவடியடைந்தோர், ஐயம்—சந்தேகம்.

25 கோட்டம்—வளைவு, ஒல்கி—அசைந்து (சுருங்கி) கொடியிடை-கொடிபோன்றஇடுப்பு, நோனுமை-பொறுக்க முடியாமை, கறுத்தது—கருமையுற்றது.

26 கண்ணன் பிறந்தநாள் ஆவணி அமரபக்கத்து அட்டமிதிதி உரோகிணியாகும், புதன்வாரம் .... புதன்கிழமை, பானாள்—பாதியிரவு, உலகமீன்ற செல்வன் கண்ணன்.

27 இப்பாடல் வசுதேவன் திருமாலாகிய செல்வனை வணங்கினமை கூறுகின்றது. வசுதேவன் கண்களுக்குப் பஞ்சாயுதந்தாங்கிய திருமாலாகவே காணப்பட்டதாம். அமைய நோக்கி — பொருந்தப்பார்த்து, பொங்குபேரன்பு — மிகப் பெரியஅன்பு,

28 அறிவு–பொய்யறிவு, அரவணை—பாம்புப்படுக்கை, அஞ்சனக்கொண்டல்—கருமேகம், நேமியம்படை—சக்கராயுதம், கணம்–கூட்டம், கரந்து–ஒளித்து, (மறைத்து) புகலும் ––கூறுவான்.

29 அசோதை— இடையர்குலத்துதித்த நந்தகோபன் நாயகி, பரிவு—அன்பு, கொண்டுஏகி — எடுத்துக்கொண்டு சென்று, மனையினுய்த்து — வீட்டிற்கொண்டுபோய் விட்டு புரிகுழல்—பின்னியகூந்தல், அணங்கு — மாயை, ஈங்கு— இவ்விடம், அன்றே—அசைநிலை.

30 வல்லி—விலங்கு, நீங்கி—விலகி, இரங்கிமாழ்க— அழுதுமயங்க, மன்றலந்துளவினேன்.... கண்ணபிரான், கொள்ளா—கொண்டு, வாளாதிறப்ப....தாமாகவேதிறந்து கொள்ள, கன்றியநெஞ்சம்....ஒருமித்தமனம்.

31 தமரம்—ஒலி, திரை—அலை, எவ்வுலகுமின்றகுழவி —கண்ணன், குமரிவண்டு-இளமையானவண்டுகள், கரங்கள் கூப்பி....கைகளால்வணங்கி, அமைவரும்உவகை — பொருந்தியகளிப்பு, அருநெறி—செலற்கரியவழி.

32 ஆயிரம்சுடர்க்கும் .... ஆயிரம் சூரியர்களுக்கும், விள்ளா .... விலகியசையாத, பாய்திரை .... பரவியஅலைகள், பரிவு....அன்பு (துன்புமாம்) மாயிருஞாலம்போற்றும் பெற்றி நந்தகோன் பெற்றது,கண்ணபிரான்வளரப்பெற்றமையினால்.

33 பொறையுர்த்தல்—பிள்ளையினைப்பெறல், உறங்குழி....துயில்கின்றவிடத்து, உலகுபூத்தஇறைவனை—கண்ண

பிரானை, கறைகொள்வேற்கன்னி....மாயை, கைக்கொடு.... கையினுல்எடுத்துக்கொண்டு, விரைவில்போந்தான்—விரைவாகவந்தான்.

34 காந்து எரிமணி — மாணிக்கமணி, கடிமனை — காவல்பூண்டுள்ளஅரண்மனை, இளங்குழவி — மாயை, சாந்துஅணிகுழலாள் — மயிர்ச்சாந்து அணிந்த கூந்தலினையுடைய தேவகியானவள். முலையூட்டினுள் — பாலையுண்பித்தாள்.

35 பிணித்தது — பூட்டப்பெற்றது, செறிந்தன — பொருத்தப்பட்டன, அல்லல்—துன்பம், அழுங்குவார்—துயருறுவார், காசினி—பூமி, வேலை-கடல், அழுதது—அழுதாள் இன்—உவமவுருபு.

36 ஓதை-ஒலி, வாயிலோர்—வாயில்காவலர், தாழ்ந்து—வணங்கி, கழைசுளி—கட்டுத்தறியினைமுறிக்கின்ற, தங்கை-தேவகி, குழைந்திட-இளகிநைய, நிழல்உமிழ்—ஒளியினைக்கக்கும்.

37 கல்செய்தோளின்—மலைபோன்ற தோளினிடத்து, சீறடி—சிறியதாள்கள், அலமர—சுழல, காளிக்குக் கண்கள் மூன்றும்—முக்கண்ணியென்று பெயர், எண்டோள் — எட்டுக்கைகள் (இவள், மாலினுக்கிளைய நங்கையெனப் பெயர் பெறுவாள்)

38 இறுதி—முடிவு, காண்பான்—செய்யும்படி, புலிற்றுச் சிங்கம்—கண்ணன், பாங்கர்—பக்கம், வழிந்தது — தங்கிற்று (தங்கியுள்ளான்) முகடு-உச்சி, பொலிவுடன்—விளக்கமுடன், வீற்றிருந்தாள்—எழுந்தருளியிருந்தாள்.

39 செய்த்தலை—வயலினிடத்து, பைத்த — படத்தையுடைய, சீற்றம்—கோபம், பரிவின்வைகும் — துன்பமுடன் தங்கியிருக்கும், வல்லிநீக்கி — விலங்கினையவிழ்த்து, வேறிருந்து—தனியாகத்தங்கி.

40 தேறல்—தேன், நனைப்ப—நனையும்படி, ஆவியுண்பன் — உயிரைப்பருகுவன், உரை—அசரீரிமொழி, ஞாலத்துள்ளசிறுவரை—உலகிலுள்ள சின்னஞ்சிறுகுழந்தைகளை, கோறல்—கொல்லல், சால்புறும்—நல்லதாகும்.

41 தீதுரு—கொடுமையேவடிவு, பொருந்தநோக்கி—உற்றுப்பார்த்து, ஒல்லை—விரைவு, ஒறுத்திர் — கொன்று குவியுங்கள், கடிதினில்-விரைவாக, போய-சென்றன (ஆம்)

42 ஆயர்பாடி—நந்தகோபன்நகரம், என்பாள்-என்று சிறப்பிக்கப்படுவாள், குதலை—மழலைமொழி, உயிர்த்தாள்—ஈன்றனள், வீங்க....பூரிப்ப, குரவை....ஒருவகைக்கூத்து.

43 பைம்பூண்....பசியஅணிகலன், நந்தகோன் .... நந்தகோபன், அகிலமீன்றபிள்ளை.... கண்ணபிரான், பிறந்துழி....பிறந்தகாலத்தில், தள்ளருங்கருமம் .... நீக்கற்கு முடியாத செயல்கள், கிளைத்தலைவர்....சுற்றத்தலைவர்கள், வெள்ளணி—வெள்ளிய ஆபரணம்.

44. கொப்பளித்தல்—சிந்துதல், பேழ்வாய்—பிளந்த வாய், நாகமன்ன கஞ்சன்....பாம்புபோன்ற கொடியவனாகிய கஞ்சனென்னு மன்னன், கரங்கொடு....கைக்கொண்டு, சேறும்....செல்வோம், முல்லையாயர்....முல்லைநிலத்திற்குரிய இடையர்கள்.

45. கஞ்சனுக்கு வரிசை நல்குவான் வெண்டயிர்ச் சாடிகளும், வெண்ணெய்ப் பானைகளும், பணியார வண்டிகளும் கொண்டு மதுரைமா நகரினை நந்தகோன் நண்ணினான்.

46. இறை....கப்பம், வெய்தின் எய்தி....விரைவினிற் சென்று, கைதவம்....வஞ்சனை, தெறுதல்....போக்குதல், பைதல்....வருத்தம், தழீஇ....தழுவிக்கொண்டு, பன்னுவான்....சொல்வான்.

47. ஆண்பாலர்க்கு இடக்கண் துடித்தலாகாது. ஆகையினால் நந்தகோனே என்னிடக்கண் துடித்தது, (ஆடிற்று....

துடித்தது) தீதுபூத்த....தீமை தோன்றின. ஏதம்....குற்றம், பாணித்திடாது—காலந்தாழ்க்காது, போதி....செல்வாய், புகறலும்....கூறலும்.

48 நண்ணுமுன்....சென்றடையுமுன், சிந்து....கடல், வைப்பு-பூமி, ஆருயிர்வவ்விய பூதனை-பற்றிவிழுங்கிய பூதகியாகிய பேய், கொந்து....பூங்கொத்து, பொழில்....சோலை, கோகுலம்....ஆயர்பாடி, எய்தினாள்....வந்தடைந்தாள்.

49. வன்னவெம்முலை .... அழகிய கொடிய கொங்கை, தளரிடை—தளர்ந்த இடுப்பு, மின்னின்....மின்னலைப்போல, அன்னமென்ன—அன்னத்தினடையேபோல, விழியுயிர்—விழிகளினால் உயிரை, கூட்டுண—ஒருசேர விழுங்க

50 தெள்ளும்—தெளிந்த, நான்மறைதேடுஞ்சிறுவனை—கண்ணபிரானை, அள்ளியோந்தி—வாரியெடுத்து, கள்ளவஞ்சி—பூதனையென்பாள், வள்ளலுண்ண — கண்ணபிரான் பால்பருக. முலையூட்டினாள்—முலையினின்று வழியும் பாலையுண்பித்தாள்.

51 தோமுறும்—குற்றம்பொருந்திய, வருடி—பற்றித்தடவி, நகைமுகம்—சிரிக்குமுகம், ஆவியோடு — உயிருடன் உணங்குபேய்—வருத்துகின்ற பூதகி, ஊறல் — ஊறுவது, (பெருகுவது) அரோ—அசை.

52 ஊறுபாலோடு-சுரக்கின்றமுலைப்பாலுடன், அருந்தாமுனம்—அருந்துமுன்னம், வேறு—தனி, தன்னுரு—தன் வடிவம். கூப்பிடுதூரம்—ஒருஅளவு. நீறுசெய்து—புழுதியாக்கிவிட்டு, நிலத்துற—பூமியிற்பொருந்த, வீழ்ந்தனள்—வீழ்ந்துஇறந்தனள்,

53 வயிறுஎற்றி — வயிற்றில் அடித்துக்கொண்டு கரநெறித்து—கைகளைமுறித்துக்கொண்டு, அசோதைபோய்—அசோதையானவள் சென்று, வையமுண்டமகவு—உலகமுண்டவனாகிய கண்ணன், அரோ—அசை.

54 அவண்எய்தி — அவ்விடம் வந்து, நறுந்துழாய் மைந்தன்—கண்ணன், செய்தி—செயல் (செயற்கருஞ்செயல்) சிந்தை மாழ்கி—மனமயங்கி, தெளிந்து — ஒருவாறுதேறி அந்தம்—முடிவு, உவகையன்—களிப்பினன்.

55 சிரந்துணித்து—தலையினைவெட்டி, ஈமம்—சுடுகாட்டில், அரிந்தமன்—திருமாலின்அவதார புருடனாகிய கண்ணபிரான், முலையளித்திட்டதால் — பாலூட்டிய காரணத்தால், நாலிருகாதம் — எட்டுக்காததூரம், நரந்தம் — வாசனை (கத்தூரி)

56 ஐயன்—கண்ணன், ஆண்டுநிறைதல் — ஒருவருடமுடிதலும், தையலார்—மகளிர், சந்தி—தெருக்கள் கூடுமிடம் மிதிப்பியா—மிதிப்பித்து, மையில்-குற்றமில்லாத, ஆர்பதம் —உணவு, நெய்யிற்பாலில்—நெய்யினாலும் பாலினாலும்.

57 இப்பாடல் கண்ணன் திருவிளையாடல்செப்பும், பண்டி—வண்டி, தொட்டில் அணைதலும்—தொட்டிலிடத் துவந்துறலும், உதைத்திட—உந்திட, துகளாயது—பொடியாயிற்று,

58 சாகாடு என்பது சாடு என இடைக்குறையாயிற்று, (வண்டி) அயினிநீர்—கண்ணெச்சில்போக்க ஆர்த்திநீர், சேயனுன்—முருகனையொத்தவன், சுற்றுறு—சுழற்றி, காயும்—வருத்தும், வெய்விய—கொடிய, கண்ணெச்சில்—கண்ணேறு

59 வண்டுகள் நால்வகைய அவை—வண்டு, தேன், ஞிமிறு, சுரும்பு என்பன, வழங்கும் — மொய்த்துஒலிக்கும், தண்டாரிளவல்-கண்ணன், திரிணாவரக்கன் என்போன் சுழல் காற்றைப்போலப் பெருமானைத்தூக்கிக் கொண்டு சுழலும் போது நிலம்பிளப்புண்டுபோகக் கிழேதள்ளிக் கண்ணபிரான் அவனைக்கொன்றான்,

60 கொன்ற— கொல்லப்பட்ட, மெய்யின்—உடலில், குழவி — கண்ணன், தவழ—ஊர, கண்டோர்-பார்த்தவர்கள், ஓதி—கூந்தல், சென்றலைமந்தன்—ஊர்ந்துகொண்டிருக்கின்ற குழவியாகிய கண்ணன், அரற்றும்—அழுதலைச்செய்யும்.

61 ஆயர்குலக்குவிளக்கு — இடையர் குலத்துத்தீபம், காண—கண்டு (பார்த்து) முறுவல்கொட்டும் — சிரிக்கும், செங்கேழ்—செவந்தநிறம். உலகமனைத்தும்—உலகமுழுதும், தொழுதுவழுத்த....வணங்கிவாழ்த்த, காயா—காயாம்பூ, கரந்தான்—மறைந்தான்.

62 கரமும், காலும், கண்ணும், முகமும், கொப்பூழும் — செந்தாமரைபோல்வனவாம், கரியசெம்மல் — கரியநிறமுடைய கண்ணபிரான், ஐயமருங்குல்—அழகிய சிற்றிடை, குறங்கு—தொடை, வையம்—உலகம், உச்சி—தலை

63 ஆம்பல் — செவந்த அல்லி (குமுதம்) அகலம்—மார்பு, ஆயர்மனை—இடைச்சியர்வீடு, தவழ்ந்து — ஊர்ந்து, நந்தன்—நந்தகோபன், குறுத்தான்—சிறியஅடி, மகிழ்வித்து —மகிழும்படிச்செய்து.

64 மாசில்வசுதேவன் — குற்றமில்லாத வசுதேவன், அணுகி—நெருங்கி, வெள்ளைமேனியனுக்குப் பலராமன் எனவும், கரிய நிறமுடையோனுக்குக் கண்ணன் எனவும் மறையவர் பெயர் புனைந்தனராம். ஏசு—இழிவு, காசு—குற்றம்.

65 பூமியினை ஓரடியால் அளந்தும், வாரியுண்டும், தலைவியாகக்கூடியும் கடலிடத்து வராகவுருவில் எடுத்தும் செயல்புரிந்தவர் திருமால். அவரின் அவதாரபுருடன்என்பார் இங்ஙனங் கூறினர். நசை-விருப்பம், அடித்தாள்-அறைந்தாள்

66 நெடுநீர்வாவி- கடல், கடவுள்-வருணன் (திருமால்) செவ்வி—அழகு, பவளமலர்வாய் அன்னை—பவளம்போலும் மலர்ந்த வாயினையுடைய யசோதை. எவ்வெத்திசை—எல்லாத்திசைகளிலும், இறைவன்—கண்ணபிரான்.

67 தண்டாமரையாள் புணரும் தலைவன் — இலக்குமி நாயகனாகிய திருமால். பழிச்சும்போதில் — துதிக்கும்போழ்தின். விளர்ப்ப-வெள்ளைநிறமாக, அறிவை—இறைஞானத்தை. மறைத்தான்—மறையும்படிச்செய்தான்.

68 தெண்ணீர்க்கயத்துள் — தெளிந்த நீரையுடைய தடாகத்தின்கண், அண்ணல் அழுகை—கண்ணனுடைய அழுகையினை, குழிசி—பானை, எறிய—வீசிக்கடைய, மடவார்—இடைச்சியர்கள்.

69 சிறை—இறகு. தேமென்மலர்—தேன் பொருந்திய பூ, (மணமுமாம்) நகை—ஒளி, பொறை—சுமை (பாரம்) ஆற்ருது—தாங்காது, அம்மருங்குல்—அழகிய இடை, பூசல் — ஒலி, அலற — ஓசையுண்டாக, மத்து — தயிர் கடையுங் கருவி.

70 முன்கை—முழங்கை, கண்ணுடைக்கும் — சிதறச் செய்யும், குனிப்ப—கூத்தாட, உவக்கும் ஏல்வைதன்னில்—மகிழும் சமயத்தில், செயிர்—குற்றம், தீம்பால்—இனியபால். அன்று—ஏ, அசைநிலைகள்.

71 ஆற்ற—தணிப்ப, வலிதிற் பறித்து—வன்மையாக நீக்கி, குழிசியுடையா — பானையையுடைத்து, அயின்ருன்—அருந்தினன், ஐயன்—கண்ணன்.

72 தகர்த்து—உடைத்து, குற்ருயன் — சின்னஞ் சிறு இடையனாகிய கண்ணன், மீளா-மீண்டு (திரும்பி) வெகுளும் —கோபிப்பாள், வெருவி—அஞ்சி.

73 பூசை—பூனை, ஒளித்த—மறைத்து வைக்கப்பட்ட, ஏந்தி—தாங்கி, இனிதருந்தி — நன்ருகவுண்டு, ஆங்கெய்து மைந்தருக்கும் — அவ்விடம் வந்தடைந்த பிள்ளைகளுக்கும், வழங்கினன்—கொடுத்தான்.

74 மறை—வேதங்கள், மணிவண்ணன் — கண்ணன், அடிச்சுவடு—அடியின் அடையாளம், ஐயனை — கண்ணனை, உறுக்கி—பயமுறுத்தி, எத்தேவும்-எந்தத் தேவனும், நெடுந் தாம்பு—நீண்ட கயிறு, பிணித்தனள்—கட்டினாள்.

75 தனிபோகி — தனியாகச்சென்று, மருதினிடை— மருதமரத்தினிடத்து. மலைமுறிந்தாலென — மலைசாய்ந்தாற் போல, தரைகுழிய—பூமிபிளக்க, வீணைமுனி—நாரதமுனி, சாபம்போய்—வெகுளிதொலைந்து.

76 நிதிக்கிழவன் — குபேரன், உயிர்ச்சிறுவர்— நளகூபரனும், மணிக்கிரீவனும் (தோழர்). நேமியோன்— கண்ணபிரான், தம்பதி—தமதுபதியாகிய அளகாபுரி, முதுக் குறைவு-பேரறிவு, முதலை—மூலமானவனை, பிணிப்பவிழ்த்து கட்டவிழ்த்து.

77 தீமை—கொடுஞ்செயல், பலவந்துற்றதனால்—பல வந்தடைந்ததனால், நந்தகோன், உரோகிணி, யசோதை முதலிய மகளிருடனும் குழந்தைகளுடனும் பிருந்தாவனத் திற் சென்று தங்கினான்.

78 குடம்பொருவும்—குடத்தையொக்கும், செருத்தல் —மடு, குழக்கன்று—இளங்கன்று, இராமன் — பலராமன், அரில் — பிணக்கு, தளவம் — முல்லை, கானகம் — காடு, வழங்குறுநாளில்—நடக்குநாளில்.

79 குறுந்தாம்பு—சின்னஞ்சிறுகயிறு, கொடுங்கான்— கொடியகாடு, ஆண்டுறலும் — அவ்விடம்வந்துசேரவும், ஓரிமைப்பின்—ஒருஇமைப்பொழுதில், குணில்—குறுந்தடி, எறிந்தான் — வீசினான், ஆவியிழந்தான் — உயிர்நீங்கினான்,

80 நள்ளிருள் — நடுராத்திரி (இடையாமம்) காழ்— வயிரம், ஆயர்—இடையர், வேள் — மன்மதன், விறல் — வன்மை, சிற்றுயன் — சிற்றிடையனாகிய கண்ணன், கமலத் தடம்—தாமரைத்தடாகம்.

81 விரை — நறுமணம், வெவ்வாய்ப்புள் — கொடிய வாயினையுடையகொக்கு, மருதம் ஒடிய—மருதமரம்இற்றுப் போக, எரியின்—தீயினைப்போல, சுட—தீய்ப்ப, உமிழ்ந்து —கக்கி, குருகின்பகுவாய்—கொக்கின் பெரியவாய்.

82 அகல் வாயை—அகன்ற பெரிய வாயினை, வெற்பின் முழை — மலைக்குகை, கற்பாடு—மலையின் பெருமை, கிழியா —கிழித்து, ஆவி முடிய—உயிர் ஒழிய. முன்னையுரு—பழைய வடிவம்.

83 அருந்தும்—உண்ணும், ஓச்சி—விரட்டி, பொதுவர் — இடையர், பூவைநிறத்த சிற்றுயன் — கண்ணபிரான், செருந்தி—ஒரு வகை மரம், காளிந்தித் தீரம்....யமுனையாற் றங்கரை, துகில் — ஆடை, பொதிந்த—கட்டப்பட்ட, ஆற் றுணு—வழியில் உண்ணும் உணவு.

84 அன்னபோழ்தின்—அச்சமயத்தில், குழக்கன்று— இளங் கன்றுக்குட்டி, பொன்னங்கமலத் தரசிருக்கும்புத் தேள் — பிரமதேவன், கவர்ந்துகொடுபோக — பற்றிக் கொண்டு செல்ல, பன்னு மறைதேடருங் கடவுள்-கண்ணன், படர்தல்—செல்லுதல்.

85 இமில் — கொண்டை, தொறுவர் — இடையர், வள்ளல் காணுது — கண்ணன் காணப்பெருது, மலரோன் செய்தி—பிரமதேவன் செய்கை, தேறி—தெளிந்து, எள்ளல் —இகழல். (கண்ணன் இளங் கன்றுகளையும் இடைச் சிறு வர்களையும்போல மாயையினுல் ஆகி மகிழ்ந்தான்)

86 ஐயன் — அழகிய கண்ணன், ஆனிரை — பசுக் கூட்டம், செய்யகதிர் —செவந்தகிரணங்களையுடைய சூரியன், அத்தவரை — மறையும் மலை, மையின் மனை— யாதொரு பழுதுமில்லாத இல்லங்கள், மகிழ்தூங்கி — களிப்பு நிறைந்து.

87 ஓர் பருவம்—ஓராண்டு, இன்னணம் இறப்ப—இங்ஙனங் கடக்க, வேதன்—பிரமதேவன், கார் முகில்—கரிய மேகம், வழுத்தி—துதித்து, வவ்வுதல்—பற்றுதல், சோர்வற—தளர்வற, மிளிர் தொல்லுலகு—விளங்குகின்ற பழைய வுலகாகிய பிரமலோகம்.

88 ஒருகுழை யொருத்தன் — ஒற்றைக்காதணியினை யுடைய பலராமன், மாயன்—கண்ணன், பருகல்—குடித்தல், மேயாது—மேய்க்காமல், அரில்—பின்னிக்கொண்டிருத்தல், ஆனிரைகள்—பசுக்கள்.

89 கரன்என்னுமசுரன், கழுதை வடிவாகி விரைவினில் வர, இகல்—வலிமை, இராமன்—பலராமன், பழுஓடிய—எலும்புமுறிய, எறிந்தான்—வீசினன், விளிந்தான் — இறந்தான்.

90 ஆயர்குமரர்-இடையர்தஞ்சிறுவர்கள், கோதில்புனல்—குற்றமில்லாதநீர், அமரும்—தங்கும், விடம்-நஞ்சு, உயிர் மாய—ஆவிமடிய, புனைதல்—தரித்தல்.

91 அருள்நோக்கால்—அருட்பார்வையால், அறல்-நீர், ஒழிப்ப—நீக்க, துண்ணென—விரைவாக, தொறுவும்—பசுக்களும், அண்ணலை—கண்ணனை.

92 ஒழுகும்—சொரியும், படுகர்—மடு (பள்ளத்தாக்கு) கடு—நஞ்சு, எயிறு—பல், மேவி—பொருந்தி, காளியன்—காளியன் என்னும்பெரும்பாம்பு, பதித்து—மிதித்து, நடம் நவில—கூத்தாட, நனிநடுங்கி—மிகவும் நடுங்கி, அயர்வுற்றான்—தளர்ந்தான்.

93 விழைந்து— விரும்பி, கன்னியரவங்கள்—நாககன்னிகைகள், மீளிமை—வலிமை, குரிசில்-கண்ணபிரான், கமல மானும்—தாமரைமலரினையொக்கும், அருடங்கு — கருணை நிறைந்து, உய்வான்—பிழைக்கும்படி, ஏகுக—செல்க.

94 அன்னவைகள்—கானிலும், நதிக்கரையிலும் நிகழ்ந்த அற்புதங்கள், மைந்தனுழை — பிள்ளையினிடத்து, கங்குல்—இரவு, துன்னரிய—நெருங்கற்குமுடியாத, அழல் சுற்றியது—தீப்பிடித்துச்சூழ்ந்தது.

95 தந்தை—நந்தகோபன், வளைந்து-சுற்றி, வெந்தழல் கொடியதீ, வாரி—அள்ளி, அயின்றுன்—தின்றுன், கந்தடு கடாமலே — கஜேந்திராழ்வான், அழைக்க — ஆதிமூலமே யென்று கூப்பிடலைச்செய்ய.

96 பிரலம்பன்—ஓரசுரன், ஏய-பொருந்திய, இராமன் —பலராமன், தீயன்—கொடியவனுகிய பிரலம்பன், அவனை —பலராமனை, உயிர்சிதைந்தான்—உயிர்தொலைந்தான்.

97 நெடிபடுவனம்-சிள்வீடுகறங்குங்காடு, இருந்தழல்— பெருந்தீ, கடிது — விரைவு, விடநுகருமீசன் — ஆலகால விடத்தினையருந்திய பரமேசுரன்,

98 தளரும்—சோரும், புரந்து—பரிபாலித்து, மறை நாதன்—கண்ணபிரான், நெடுஞ்சினை—பெரியகிளை, வடதரு —ஆலமரம், இனிதிருந்தான்—தங்கினுன்.

99 விளர்ப்ப—வெண்மையடைய, தண்மதி—சந்திரன் தயங்கா — தயங்கி (விளங்கி) வெண்ணிலவு — வெள்ளிய சந்திரிகை. கால—சொரிய, ஆதவன்—சூரியன், கூதிர்—கூதிர் காலம் (ஐப்பசி, கார்த்திகை மாதங்கள்) பிரிவோர்— விலகுபவர்.

100 உத்தரிகம் — மேலாடை, முகிழ்ந்த—அரும்பின, நதியாவும்—யாறுகள் அனைத்தும், கணவர்ப்புணர — தலைவரைச்சேர, ஏகுமடவாரில் — செல்கின்ற மகளிரைப்போல, போத—வர.

101 மங்குல் — ஆகாயம் (விண்) சாலி — செஞ்சாலி (சம்பா) பைங்கழை—பசியமூங்கில் (கரும்புமாம்) வெடித்த

—தெறித்த, பருமுத்தம் — பெரியமுத்துக்கள், கவண்—பறவைகளை யோட்டுங் கருவி, எறிகல்-வீசுங்கல், சேணிடை—ஆகாயத்தில்

102 ஓர்புடை — ஒருபக்கர், உறைசிந்தா — மழைத் துளிகளைச்சிந்தி (சிதறி) உரறி—முழங்கி, அதிர்மேகம்—நடுங்குதலைச்செய்யும் முகில்கள், வாரி—கடல், முனி—அகத்தியன், மாழ்கி—மயங்கி, வேர்—வியர்வை, விளர்த்தென—வெளுத்தாற்போல.

103 வேனில்—சித்திரை முதல் நான்கு திங்கள்வரை சேர்ந்த காலம், ஈனம்—குற்றம், மணிக்குவை—முத்துக் குவியல், மைம்முகில்—கரிய மேகம், கான்—காடு, கடிது—விரைவு.

104 புதுக்கடி — புதியமணம், ஆர்வம் — அன்பு (ஆசை), அகற்ற—நீக்க, சோர்குழல் — அவிழ்ந்த கூந்தல், தோன்றுவனபோலும்—காணப்படலை யொக்கும்.

105 வயற்றலை — வயலினிடத்து, வளை செந்நெல் —படிந்த செந்நெல், விடர்—காமுகர், உண்ணுமது—உண்டல் (பருகல் அறவும்—மிகவும், சாய்த்ததனை—வணங்கினதை.

106 திங்குதலை நல்லார் — இனிய மழலைச்சொல்லை யுடைய பெண்கள், மீழற்றல்—மொழிதல், வீமாது—விரும்பாது (படியாது), இரியும் — ஓடும், ஆரம் — முத்து மாலை, வெருவுற்று — அஞ்சி, வெங்கரிகள் — கொடிய யானைகள், எய்தா—வந்தடையா.

107 தாது — மகரந்தப்பொடி, புல்ல — பொருந்த, அளி—வண்டு, தளையவிழ்ந்து—கட்டு விட்டு, நகையாது—சிரிக்காது, குவிந்த — கூம்பின, மழைநாள் — கார்காலம், போதரல் — வரல், ஒழிந்தமையால் — நீங்கினமையால், ஊடியது—பிணங்கியது.

108 தகைய — தன்மையையுடையன, தயங்குதல் — விளங்கல், மணிவண்ணன்—நீல மணிநிறத்தன் (கண்ணன்) மொய்த்த சினை—நெருங்கிய கிளைகள், வானவெளி—ஆகாய வெளி, மூடும் — மறைக்கும், கைத்தலம்—கைகளிடத்து, குழல்—புள்ளாங்குழல்.

109 ஒரு பதம்—ஒரு மொழி (வார்த்தை), ஊன்றி—பதித்து, முருகு—மணம், சிறிது கோட்டி-சிறிது வளைத்து, கருது துளை—கருதப்படும் துவாரம், இசை கனிந்திட—பண் முதிர்ச்சியுற, இசைத்தான்—பாடினன்.

110 பாம்பணை துறந்து—சர்ப்ப சயனம் விட்டு, இடையர்பாடி—ஆயர்பாடி எனுமூர், இகல்—பகை (மாறுபாடு), பரிவுகூர — அன்புமிக, தங்கியது—வந்து பொருந்திற்று.

111 பாறை—கல், விக்குறு — கட்டப்பட்ட, மணிக் கயிறு—அழகியகயிறு, வீசி—எறிந்து, கூறை-சேலை, மேகலை —ஆபரணம், குலைந்து—சிதைந்து, ஐயன்—கண்ணன், கான வலை—பண்ணாகியவலை, புக்கார்—சிக்கினார்கள்.

112 இலகல் — விளங்கல், உலவை — வற்றிப்போன (உலர்ந்த) மரம், குழைப்ப — தளிர்ப்ப, மென்றழை— மெல்லிய தளிர்கள், கடுக்கும்—ஒக்கும்.

113 செய்ய—செவந்த, பண்அமுதம் — இசையமுது, அமுது—அமிர்து (மிருத்யுவைப் போக்குவது) அமரர்மாதர் —தேவமகளிர், ஆயர்குலமங்கையரின்—இடைச்சியர்போல

114 புலவி—ஊடல், விளைவித்து-உண்டுபண்ணி, நனி புல்லும்—மிகத்தழுவும், கலவி—கூட்டம், ஆவிநிகர்-உயிரை யொத்த, காதலர் — தலைவர், இலவு — இலவம்பூ, உலை — உலைத்தீ, மெழுகின்—மெழுகினைப்போலவுருகி.

115 பட்டமரம் — காய்ந்துலர்ந்துவற்றியமரம், பகலோன்—பகலைச்செய்பவன் (சூரியன்) தண்கதிர்-சந்திரன் தொட்டகடல்—தோண்டபட்டகடல் (சாகரம்) கட்டழகு—பேரழகு, குரிசில்-கண்ணன், துளித்த-துளித்தலைச்செய்தன.

116 காந்தள்பூ, மகளிர் கைகளுக்குவமைகூறல் மரபு. பாந்தள்—அரவம்.• உரி—தோல், பாய—பரவ, இறப்ப—கடப்ப (நீங்க) தரிப்பிலர்—தாங்கிலார்.

117 வேய்ங்குழலிசைப்பது விடுத்து — புள்ளாங்குழல் ஊதுதலைநீக்கி, செருத்தல்—மடி, துரந்தான்—ஓட்டினன், மணப்ப—கலந்துகொள்ள, அம்மை — அழகு, பூங்கழல்—திருவடி, நனிநோற்றார்—மிகவிரதம் பூண்டார்.

118 ஐங்கணைக்குரிசில் — அஞ்சம்புகளையுடைய மன்மதன், கேள்வன்—நாயகன், தணந்தவர்—பிரிந்தவர், பூந்துகள்—பூவிலுள்ள மகரந்தப்பொடிகள், வெம்மை—வெப்பம் திங்களின்—சந்திரனைப்போல, திரிந்து—மாறுபட்டு, பம்பல்—தோன்றல் (உதிப்பு)

119 பொழிதரல்—சொரிதரல், படாம்—ஆடை (வத்திரம்) போர்த்து — மூடி, வெம்மையிற்றணந்து—வெப்பந் தவிர்ந்து, தகளி—அகல், எறியும்—அக்கினி.

120 இடைந்து—பின்னிட்டு, பாண்டில்— கண்ணாடி, (ஆதர்சம்) மனை—வீடு, ஈசன்—சிவபெருமான், கனற்கணல் —அக்கினிக்கண்ணால், செற்றார்—கொன்றார், என்பதுகருதி என்பதனையெண்ணி, மாரன்—மன்மதன்.

121 பொடிப்ப—சிலிர்ப்ப, மையல்—மயக்கம், தீம்——இனிமை, திரித்தல்—யாறுபடச்செய்தல், மாதர்க்கு—மகளிர்க்கு, எய்தியபனி—அடைந்தகுளிர்ச்சியாகியபனி, கொழுநற் தலைவர், அன்று ஏ அசைநிலைகள்.

122 ஈட்டிய—தொகுத்த (கூட்டிய) கூற்றம்-இயமன், மூட்டிய — மூள்வித்த, வாட்டிய வாட்டம் — வாடும்படிச் செய்தசோர்வு, நீர—தொலைய, மாற்றார்—பகைவர், மோடு உயர்ச்சி, முடிக்கும்—தொலைக்கும், (அழிக்கும்)

123 ஏந்தெழில்—தாங்கியஅழகு, அலங்கல்—மாலை, அருப்பு—அரும்பு, (வலித்தல்விகாரம்) உலம்—திரண்டகல், பனிக்குறும்பு—பனியாகியபகை,

124 பற்றலர் — பகைவர், (திரிபுராதிகள்) புரம்—திரிபுரம், நகைத்திடும்—சிரிக்கும். பவளக்குன்று — பவள மலைபோலும்சிவபிரான், வலக்கண்-சூரியனாகியகண், அழற்சி —அழலுதல், (வெப்பம்) மதிக்கண்—இடக்கண்ணாகியசந்திரன், வேவ—வெந்துபட, பொழிந்திடல்—சொரிதல்.

125 வானதி–கங்கையாறு, பூத்து-தோன்றி, வயங்கும் -விளங்கும், கணை—பாணம், மழுங்கி—மழுங்குதலைச்செய்து பானுமண்டலம்—சூரியமண்டலம், செவ்வி—அழகு, மழுங்கிற்று—குறைவுற்றது, ஆடி—கண்ணாடி.

126 வாமம்—அழகு, காழ்—வயிரம், ஊட்ட — உண்பிக்க, தூமம்—புகை, தோயல்—படிதல், துதைந்து-நெருங்கி காமருமுகம்—அழகியமுகம், அணைதல்—சேர்தல்.

127 கனலி—நெருப்பு. சிந்தும்—சிதறும், ஆற்றுது—பொறுக்கலாற்றுது, வையம்ஒரேழும்— ஏழுலகமும், உய்ய அரிது(உய்வரிது) பிழைக்கமுடியாது.

128 பரித்த — தாங்கின, பார்மகளை — பூமிதேவியை, பதுமம்-தாமரைப்பூ, புல்லினன்-கூடினன், சீறி-கோபித்து, இமையவேந்து-இமாசலவரசன், ஒண்டொடி—ஒளிபொருந்திய வளையல், கருக்கினன்—கருகச்செய்தனன்.

*129* ஆர்ந்த—நிறைந்த, கமலப்போது—தாமரைமலர், கலைமதி—சந்திரன், தீய்த்த—கருகச்செய்த (சுட்ட) செவ்வி—வனப்பு, இன்னு—துன்பம், " முற்பகற் செய்யிற் பிற்பகல் விளையும் " என்னும் வாக்கியங் கருதத்தக்கதாம்.

*130* இன்ன—இத்தன்மைய, இரும்பனி—பெரும்பனி, கன்னல்—கரும்பு, கழை—மூங்கில், எண்டோளன்னை (எண்டோளி) கொற்றவை, ஆற்றிய—செய்த, பின்னல்—மாறி மாறிக்கிடத்தல், திரைகள்—அலைகள்.

*131* விரைகமழ் — நறுமணம்வீசும், தூசு — ஆடை, மருங்கு-பக்கம், மலரின்மேய பறவைகள்—வண்டுக்கூட்டம், மொய்த்து — கூடி. பெட்பொடும்—விருப்பமுடன், இனிது புக்கார்—நன்றுற அடைந்தனர்.

*132* கறை—களங்கம், கதிர்—ஒளி, சுறவம்-ஒருவகை மீன், குழை—காதணி, சுடருமிழ்ந்து—ஒளியினைச்சொரிந்து, ஓட்ட—துரத்த, வெறி—மணம், துவர்—பவழம்போலும் பொடி, இமிர்ந்து—அப்பி, சிறையளி—வண்டு, ஓச்சி—வெருட்டி.

*133* கைவல்லோர்— ஆற்றலுடையவர், எழுதொணு—வரையமுடியாத, தூவி—இறகு, தோய்தல் — நீராடல், பூவை—காயா, பூந்துழாய்அலங்கற்றேளான்-கண்ணபிரான், கோவியர்தூசு—இடையர் சிறுமியர் தம்ஆடைகள்

*134* உள்ளமுந்துகிலும் — மனமும் ஆடையும், வவ்வி பற்றி, கள்ள—மறைக்கப்பட்ட, வெம்சேலை—விரும்பத்தக்க கூறைகள், நல்குக (நல்க) — கொடுக்க, காயாமேனிவள்ளல் — கரியநிறமுடையகண்ணன், வணங்கினோர் — வணக்கஞ் செய்தவர், அளிப்பன்—கொடுப்பேன், விண்டான்— உரைத்தான்,

135 பொத்தி— மறைத்து, கோட்டி—தலைவளைத்து, இவர்ந்து—ஏறி, குவித்தல்—கும்பிடல், குடங்கை—அகங்கை வெருவொடும்நாணி — அச்சத்துடன்வெட்கி, படிகின்றோர் மூழ்குகின்றவர், மீட்டும்—மீளவும்.

136 தாமரைத்தலம்—தாமரைப்பூப்போன்றகொங்கை முகம் முதலியன, மூடி—மறைத்து, தூமம்—புகை, கூந்தனீலவாடை — (உருவகம்) கூந்தலாகியவத்திரம் (கூறை) பூமகள்கொழுநன்—கண்ணபிரான்.

137 ஐது—அழகு, எழில்—எழுச்சி, (தோற்றம்) மாதரை—மகளிரை (பெரியபூமியிலுள்ளவரை) தூர்த்தசேலை—நிரப்பினகூறை, இரப்ப—பலமுறைஇரந்துகேட்ப, மாயன்—கண்ணன், வண்டுகில்—வளவியஆடைகள்.

138 ஆவி—நீராவி, அஞ்சனம்—மை, தீட்டி—எழுதி (பூசி), புலர்த்தி—உலரவைத்து, கோவை — முத்துவடம், தேய்வை—சந்தனம், காவி—நீலோற்பலம், கோலம்—வடிவம் (உருவம்) கொண்டார்—மேற்கொண்டுள்ளார்.

139 கதலி—வாழை, கோற்றொடி—சங்கவளையல்கள், ஆர்ப்ப—ஒலிப்ப, ஊற்றிருத்தல்—பெருக்கெடுத்தல், கால—சொரிய, உறைப்ப—சிந்த, மாயன் —கண்ணபிரான், வீற்றுவீற்றுரு—தனித்தனிவடிவம், மேவினன்—கூடினன்,

140 இன்னணம்—இங்ஙனம் (இவ்விதம்) போகம்—நுகர்வு (இன்பம்) மாந்தி—நுகர்ந்து, கைசெய்து — அலங்கரித்து, தழங்கு—ஒலித்தல். திறல்—வெற்றி, தொறுவினம்—பசுக்கூட்டம், காக்கும்—பாதுகாக்கும்.

141 அழி கொடும்பசி—வருத்துகின்ற கொடியபசித்தீநொந்தேம்—வருந்தினேம், ஐய—ஐயனே! ஊணளித்தி—உணவினைக்கொடுப்பாய். குழை—தளிர், கொண்டல்-மேகம் போற் கரிய கண்ணன், அவி—அவிர்ப்பாகம், கேண்மின்—கேளுங்கள், மகம்—வேள்வி.

142 மறையோர்-வேதியர், சாலே—வேள்விசெய்யுமிடம் சீற—கோபிக்க. ஞானக்குன்று — கண்ணபிரான். கொணர்ந்தனர் — கொண்டுவந்து, அளிப்ப — கொடுப்ப, ஐயன்— கண்ணன், உவந்து—மகிழ்ந்து,

143 அருமகப்புருடன் — செயற்கரும் வேள்விக்குரிய தலேவன், அயின்ற—தின்ற, ஒன்றுநூருய் — அனந்தமாய், மாதர்—மகளிர், கேள்வர்—நாயகர், தெரிவருமுத்தி—தெளிதற்கரியமுத்தி, வீற்றிருந்தார்—எழுந்தருளியிருந்தார்.

144 அரக்கு—செவ்வரக்கு, தீற்றி—பூசி, இந்திராணி —இந்திரன்மனேவி, திருத்துயில்மார்பன்—இலக்குமிவதியும் மார்பினேயுடைய திருமால் (உபேந்திரன்) பண்ணிகாரம்— பணிகாரங்கள், வேண்டுவ—விரும்பப்படுமவற்றை.

145 ஐய (அய்யா) —தந்தையே! துணிந்தது—உறுதி கொண்டது, செய்யதாமரைக்கண்மாயன்—புண்டரீகாட்சன் (கண்ணன்) செப்பலும்—கூறலும், புலோமிசைமணுளன்— இந்திரன், வெய்யதீவினே—கொடியபாவம்

146 கோவர்த்தனகிரி — ஒருமலே, செயிர் — குற்றம், விண்ணிற்றே—இந்திரன், செய்யாதொழிவீர்-செய்யாதிருங்கள், உள்ளுயிராகியஐயன்—கண்ணன்.

147 ஆயர்க்கொருதிலகன் — இடையர்கட்கு ஒப்பற்ற திலகம்போன்றவனுகிய நந்தகோபன், குவை—குவியல், அடிசில்—உணவு, வெளிமூட—வெளியிடம்மறைப்புண்ண, மணிவண்ணன்—கண்ணன், தனிமகிழ—தனியேகளிப்படைய.

148 கவின்எய்தி—அழகடைந்து, தயிர் உணவு பண்ணிகாரம் முதலிய அனேத்தும் கண்ணபிரான் அள்ளிஉண்ணலே இந்திரன் உணர்ந்து கண்சிவந்துஏழுமேகங்களேயும் பொழியுமாறுவிடுத்தான், சிவவா—சிவந்து, வெகுளா — வெகுண்டு.

149 வற்ற—வரண்டுபோக, முகந்து—குடித்து, தாரை—மழைத்துளி, நீள்கரம் — நீண்டதுதிக்கை, வாராவுமிழ்தலும்—வந்துசொரிதலும், துயராது—துன்பமடையாதவாறு, பெயராது—விட்டுநீங்காமல், பிடித்தான்—தாங்கினான்.

150 அதிர்மழை — நடுங்குதலைச்செய்யுமழை, வரை—மலை, கவியா—கவித்து, நிரைகாப்ப — பசுக்களைக்காக்க, பார்மேல்—பூமியினிடத்து, மகவான்—இந்திரன். பனிவான்புனல்—பனிநீர், கோவிந்தன்—பசுக்களைப் பாலனம்பண்ணுபவன், செப்பி—கூறி.

151 ஒழுகுறுநாள் — நடக்குங்காலம். ஈராறுதிதி—துவாதசி (பன்னிரண்டாநாள்) வவ்வா-பற்றி (வவ்வி) நந்தற்கொடு— நந்தகோபனைக்கொண்டு, வருணனுழை—வருணனிடத்து, கையின் விடுத்து—கையினின்றும் விடுதலைசெய்து.

152 அண்டர்—இடையர், நயப்புற்று—விரும்பி, கந்து கட்டுத்தறி, காட்டி — காண்பித்து, வெந்தீவினை—கொடிய பாவச்செயல், மீட்டும்—மீளவும்.

153 நனை—தளிர், கொழுதி—கோதி (கிண்டி) களியா—களித்து, காமா—காமனே! ஒழியாமல்—ஓயாமல், அரற்றும்—கூவும், கடிகான் — மணம்வீசும் சோலை, மாதவிசு—பெரிய இருக்கை, பொன்னங்கொடி—இலக்குமிபிராட்டியார் கொழுநன்—கண்ணன்.

154 கஞ்சம்—தாமரை, மஞ்சு—மேகம், அடவி—காடு, வளிதைவர — காற்றுத்தடவ, விஞ்சும்—மேம்படும், உயர்வேய்—உயர்ந்தமூங்கில், முதல்துணியா—அடியினைவெட்டி.

155 ஓராண்டு—ஒருவருடம், அடையா—அடைத்து, திகழ்—விளங்கும், விரல்—விரலளவு, குழல்-புள்ளாங்குழல் எனும் ஒரு இசைக்கருவி.

156 இதுமுதலாகிய பாடல்—குழலியலைப்பற்றிக் கூறு கின்றது, புரையற்றிட—குற்றநீங்க, முறைபோக்கி—ஒழுங்காகச்செலுத்தி.

157 திருநாவுடை ஆயன்—கண்ணன், உன்னி—கருதி, உரி—உரிக்கயிற்றில், தடவு—பானை, ஏந்தி—தாங்கி, கருமாமுகில்—கண்ணன்.

158 எழில் — எழுச்சி, தவிர — நீங்க, ஏழிசை—ஏழுவகையான இசை, அமிழ்தம்—அமிழ்தத்தினையொத்துளது. பெருக்குளடுத்து — வெள்ளமெடுத்து, இசைத்தான்—இசையினை இசைத்தான்.

159 திருவேயன்னூர்— இலக்குமிபிராட்டியினை யொத்தவர்கள் (மகளிர்) வேயிசை — குழலினோசை, கேளா—கேட்டு, முருகார்சந்தச்சேறு — நறுமண நிறைந்த சந்தனக் குழம்பு, பொம்மல்—பூரிப்பு, இறும்—ஒடியும்,

160 தூசு—துகில் (ஆடை) மாயை—மயக்கம், எய்தா—எய்தி, பாணர்—பாடுமவர், அண்ணல் — கண்ணபிரான், மெச்சி—மிகவும்வியந்து, கவலுற்றார்—கவலையடைந்தனர்.

161 வேயால்—மூங்கிலாற் செய்த புள்ளாங்குழலோசையினால். ஆ—பசுக்கள், மீட்கும்—மீளச்செய்யும், தேயாநிற்கும்—தேய்ந்திருக்கும், செயல்—காரியம், எண்ணரிதாகும் வடிவு—எண்ணமுடியாதாகும் உருவம்.

162 மாதவி— குருக்கத்தி, புளினம் — மணற்குன்று, தாது—மகரந்தப்பொடி, வெற்பின்-மலையின்கண், வேதமும் — மறைகளும், கண்டறியாதோன் — காணப்பெறுதவன், வெளிநின்று—புலப்பட்டு, கோபியர்—ஆய்ச்சியர்.

163 இனிது ஆடி — இன்பமுறநடித்து, கன்னவில் — மலையொத்த, புயல்வண்ணன்—கண்ணபிரான், அன்னநிகர்க்

கும் — அன்னப்புள்ளினை யொக்கும். இராதை யென்பவளை மன்னரி ஓரிமைப்பொழுதில் பூஞ்சோலையில் கண்ணன் மணந் தான்

164 அய்யன் ஒளிப்ப—கண்ணபிரான்மறைய, அழிப்ப — அழிந்துபோமாறு, மாரி — மழை, தூங்க — அசைய, மையல்—மயக்கம், வனமெங்கும்—காட்டிடமுழுதும், எய்தி னர் (முற்றெச்சம்) எய்தி, உயிர்த்து-பெருமூச்செறிந்து.

165 பூதனை—ஓர்பேய்மகள், கொன்றை—கொன்றைக் காயாலாகிய குழல், உழல்கிற்பார்—நடிப்பினைப் புரிவர், ஏத மில்கோலம்—குற்றமில்லாத வடிவம், குருந்தின் இவர் கிற் பார்—குருந்தமரத்தின் மீது ஏறுதலைச் செய்வார்.

166 இழைத்தவை — செய்தவைகள், அந்நல்லார் — அழகிய அந்தக்கோவியர்கள். செல்நெறி—சென்றவழி, வையம்—உலகம், மலர்வைப்பும்—மலர்போன்ற அடிவைத்த சுவடும், இராதையடிச்சுவடும்—இராதையினுடைய தாள் வடுவும்.

167 அவர்—கண்ணனும் இராதையும், பதக்குறி— அடிச்சுவடு, கண்ணனுடைய கால்களில் சங்குசக்கர ரேகை யுள்ளனவாம், காணு—கண்டு, இவள்தன்னை—இராதையை, எடுத்தனன் ஆம்—தூக்கிக்கொண்டு சென்றனன் ஆகும்.

168 ஏடவிழ் நாள்மலர் — இதழ்விரிந்த அன்றலர்ந்த பூக்கள், உக்க—கழற்றின (கழலவிட்ட) ஊடல்திருத்தி— புலவுநீக்கி, இதம்பல—இனியமொழிகள், உவப்பு—மகிழ்வு, இவ்வழி—இவ்விடம், குழைந்தார்—இளகினர்.

169 ஆயிடை—அவ்விடம், அணித்து—சமீபம் (அண்மை) அயல்—பக்கம். சேயரி—செவ்வரி (இரேகை) நிறைத்திட—கண்ணீர்ததும்ப, நின்றதிறம்—நின்றநிலை. ஏயி னர்—பொருந்தினர், நின்றுழி—நின்ற இடம்.

170 எய்தும்—அடையும், ஐயன்—கண்ணன், அறைந்திடுக—கூறுக. நய்யும்—இளகும், நாணி—வெட்கி, உரைப்பாள்—கூறுவாள்.

171 முயங்கி—கூடி. வெட்புளர் — விருப்புடையவர், வவ்விய கள்வன் — பற்றிக்கொண்டு சென்ற திருடனாகிய கண்ணன், என்னையும்—எளியேனையும், தனிதுறந்தனன்—தனித்துவிட்டுச் சென்றனன்.

172 கன்றுகாமவனல்-வருத்துகின்றகாமத்தீ, கனற்ற—சுட, வேள்கணை—மன்மதபாணங்கள், வருத்த—துன்புறுத்தலால், மெலிந்து-தளர்வுற்று, பொன்றினார்-அழிவுற்றனர், அயர்ந்தார்—தளர்வுற்றனர்.

173. மிலேச்சும்—சூடும், ஓதி — கூந்தல், கையறவு—செயலறல், சோர்தல்கண்டு-தளர்வினைப்பார்த்து, தோகையர்—மயிலைப்போல்வார், வேரி—தேன், வெளிநின்றான்—புலப்பட்டான்.

174 பருதி-சூரியன், மலர்பங்கயம்-விரிந்ததாமரைப்பூ, உரவுநீர்—கடல், வரவு—வருகை, மாமயில்—கரியஆண்மயில் கரியமால்—கண்ணன்.

175 கதிர்கள்—கிரணங்கள், பாய—பரவலால், மணற்குன்று — மணலாகிய மலை, சண்பகம் — வண்டுவீழா மரம், பெண்ணை—பனைமரம், நன்மடவார்—நல்ல இளமங்கையர்.

176 புலவி — ஊடல், பணிந்திடும் — வணங்குவான், கலவி—கூடல், தீட்டும்—எழுதுவான், முகமன் — இனிய உவகை மொழி, திவவு—முறுக்காணி, வருடும்-தடவுவான்

177 தடம்—தடாகம் (குளம்) ஆடும்—மூழ்குவன், குரவைக்கூத்து — ஒருவகை நடனம், வண்டற்பாவை—மகளிர் மணலாற் செய்யும் பெண்வடிவம், அணிந்திட—சூட, தெரிதரும் — தெரிந்தெடுப்பான், சிலம்பு எதிர்கூவும் — மலைக்கு எதிர்நின்று கூவுவன்.

173 கங்குல்....இரவு, மேயும்....பருகியொழிக்கும், துன்னிடுங்காறும்....வரும்வரையிலும், தொறுவர்-பசுமேய்ப்பவர் (இடையர்) முழவு....மத்தளம், பன்னரும்....கூறற்கரிய, சிறப்பு....மேம்பாடு, எய்தினன்....வந்தடைந்தான்.

179 அமர்ந்துறையும்....விரும்பித்தங்கும், தெய்வநீர்ப்பெருக்கம்-தெய்வீகத் தன்மை பொருந்திய தீர்த்த வெள்ளம் சரச்சொதிதீரம்....சரசுவதியாற்றங்கரை. மையணிமிடற்றுப் புத்தேள்....நீலகண்டனாகிய சிவபெருமான்.

180 இளம்பிறைக்கண்ணியண்ணல் — சந்திரசேகரப்பெருமான், எழிலி—மேகம், கருனை—பொரிக்கறி, சுதை—வெண்மை, பெய்யா — பெய்து, ஆனெய் — பசுவினெய், அளத்தற்கரிய—எண்ணில்லாத, ஊட்டினன்-உண்பித்தான்

181 நீறு—திருநீறு (விபூதி) நெற்றியங்கண்ணின் எந்தை — நுதல்விழிநாட்டத்திறையவன் சாறு — விழா ஏறுஇவர்ந்து ஐயன் எய்த-சிவபெருமான். இடபவாகனத்தில் எழுந்தருளிவர, தம்முன் — தமையனாகியபலராமன், அடியிறைஞ்சி—அடிகளைவணங்கி.

182 கண்துயில்புரியும் — உறங்குதலைச்செய்யும், அரவம்—பாம்பு, காணா—கண்டு, தாளிற்றுக்க—தாள்களினால் (கால்கள்) உதைக்க, உருவம் நீங்க—வடிவம்போக (ஒழிய) மங்குல்வாய் — அவ்விரவின்கண், முன்னைவடிவு — பழைய உருவம்.

183 வெம்சாபம்—கொடியவெகுளிமொழி, கூர்எயிறு—கூரியபல், குரிசில்—குரிசிலே, தீண்டப்பெற்ற—தொடப்பெற்ற, ஏர்கெழுமுருவம்—அழகியவடிவம்.

184 வழிநாள் — மறுநாள், (பிற்றைநாள்) தமர்—சுற்றத்தினர், வீறு—பெருமை, புலரி — பொழுதுபுலர்ந்த

விடியற்காலம், துணர் — பூங்கொத்து, விழ்ந்து—விரும்பி. நாகுஇளவண்டு—மிக்க இளமையான வண்டுகள், தேறல்—தேன்.

185 பொருதிரை—கரைகளைமோதுகின்றநீர்அலைகள் சரிகமபதநி—ஏழிசை, மணிவாய் — செவந்தவாய், குரன் முதலிய ஏழுபண்கள்—குரல், துத்தம் உழை விளரி, கைக்கிளை தாரம் முதலியனவாம்.

186 ஓதை—ஒலி. கொம்பர்—கொம்பு, சோர—தளர வால்வளை—சங்கவளையல்கள், ஆர்ப்ப—ஒலிப்ப, செல்வனை —கண்ணனை, வளைந்துகொண்டார்—சுற்றிக்கொண்டனர்.

187 சங்கசூடன் என்பவன் ஓரசுரன், தியன—தீச் செயல்கள் (கொடிய தொழில்கள்) தாமரைச்செங்கண்மாயன் —புண்டரீகாட்சன் (கண்ணபிரான்) குருதிகக்க—உதிரம் சொரியுமாறு, மாய்த்து—கொன்று, மணியை—இரத்தினத்தை, முன்னவன்—பலராமன்.

188 விதிர்த்து—அசைத்து. நசை—விருப்பம், பொறி வரி—புள்ளியும் கீற்றும், அனைவரும்—எல்லாரும், மொய்த்தார்—நெருங்கினார்கள்.

189 சுருதி—பண், மிடறு—கழுத்து, இரங்கும்—ஒலிக்கும், கானம்—இசை, ஆர்த்தல்-ஆரவாரித்தல், தரளம் —முத்துவடம், அண்டர்தம்மகளிர்—இடைச்சியர்கள், காமநாடகம்—மன்மதன்கூத்து.

190 ஓவியம்—சித்திரம், பேரெழிலுருவம்—பெருமை வாய்ந்த அழகியவடிவம், இன்புற்று—நலந்துய்த்து. சேவினதுருவாய் — காளைவடிவமாய், மேவுகோடு — பொருந்திய கொம்புகள், இறுத்து-ஒடித்து, வேற்றுடம்பு-தனிஉடலம்.

191 செகுத்த—கொன்ற, கஞ்சற்குஓதி — மாமனாகிய கஞ்சமகாராசனுக்குக் கூறி, யாழ்முனி-நாரதன், என்போன்-

எனப்படுவோன், உரோகிணிசெம்மல்—பலராமன், காவல—'அரசே' முன்செற்ற—முன்கோபித்து வாளோச்சின.

192 ஓரிருவர்—ஒப்பற்றஇருவராகிய கண்ணனும் பலராமனும், அஞ்சி—பயந்து. உய்த்தான்—செலுத்திவிட்டான், நவிறல்—கூறுதல், வெகுளிபொங்க—கோபம்மிக, மைத்துனன்றன்னை—வசுதேவனை, தடறுரீஇ—உறையினின்றுநீக்கி.

193 வளி—காற்று, மிழற்றல்—இசைத்தல், மகதியாழோன்—நாரதமுனிவன், அளி—(அன்பு) கருணை, கோறல்—கொலைபுரிதல், தகாது—கூடாது, கஞ்சனே நீ கண்ணனையும் பலராமனையும் கோறற்குச் சூட்சிபுரிக என்றான், நாடுதி ஆராய்வாய்.

194 வெளிற்றறிவு — உள்ளீடில்லாத வெள்ளையறிவு, கேசியென்பவனைக் குதிரை வடிவாகச்சென்று கண்ணனைக் கொன்றுவருவாய் என்றான் கஞ்சன், தொலைத்தி—தொலைப்பாய் (அழிப்பாய்) வளைத்தலை—புற்றிடம்.

195 ஓங்குமலை-உயர்ந்தமலை, போகி-சென்று, மாயன்முன் — கண்ணன்முன்பு, அதிர்ந்துசெல்ல — அசைந்துவர, அலகை—பூதனை, அவன் — அந்தகேசியென்னும் அசுரன், குலவுற—நன்றாய்உலாவ, குடித்திட்டான்—அழித்திட்டான்.

196 கள்ளுநர்—வஞ்சகர், குழக்கன்று—இளங்கன்று, ஐயன்—கண்ணன், மயன்மகன் வியோமனும் இடைச்சிறுவர் வடிவாய் வந்து வஞ்சத்தன்மையாய்ப் பிடிக்கவந்தான் (புணர்ப்பு—உபாயம்)

197 கன்றின் — கன்றினைப்போல, சிற்றாயர்தம்மை—இடைச்சிறுவர்களை. கைதவம்—வஞ்சகம், முழை—குகை, மை—மேகம், பாறை—கல், அடைத்தல்—மூடல், பைதல்—துன்பம், உயிர்ப்படுத்திட்டான்—உயிரைப்போக்கினான்,

198 விரற்றலை — விரலின்முனை, தாக்கி—உதைத்து, நீள்முழை—பெரியகுகை, தோழரை—நண்பர்களை, ஒல்லை—விரைவு, படி—பூமி, பாடி—ஆயர்பாடி.

199 அஞ்சனக்கொண்டல்— கரியமேகம்போன்ற கண்ணன், அணுகி—நெருங்கி, கடிந்து-கொன்று, உஞ்சிட (உய்ந்திட) கடைத்தேற, அளித்தி—காப்பாற்றுவாய், ஆசிகூறி—ஆசீர்வாதஞ்செய்து, விஞ்சையர்—வித்தியாதரர்.

200 கேசியையும், வியோமனையும்தொலைத்தலைகேட்டுக் கஞ்சன் மாசுறுமனத்தன்ஆகி, மரகதவண்ணனையும் பலராமனையும் கொல்லும் சூழ்ச்சிசெய்தான். தேசு—ஒளி, ஏசு—குற்றம், பல்கால்—பலதடவை.

201 ஆண்அடுசீற்றம் — ஆண்மையொடு கொல்லும் கோபம், துப்பு—வலிமை, சேணுடர்—தேவர், கோணகம்—வலியபாம்பு, இதனை—பின்வருவதை.

202 மூசி—நெருங்கி, அரற்றும்—முரலும், ஒருகுழையொருவன்—பலராமன், மல்—போர், ஓடை—முகபடாம், கரடம் — மதம்பாய்சுவடு, ஒறுத்திர்—கொல்லுங்கள், நால்வாய்—தொங்குகின்றவாய், பொருப்பு—கொம்பு.

203 அவனி—பூமி, யாதவர்—யதுகுலத்திற்றோன்றியவர், குடுமி—சிகரம், சிலைமதம்—வில்செருக்கு, செய்யா—செய்து, கழறல்—கூறல்.

204 தறுகண்— அஞ்சாத்தன்மை, குஞ்சரம்—யானை, உடற்றும்—போர்புரியும், இராமனும்—பலராமனும், வலியர்—வன்மையுடையவர், ஒல்லை—விரைவு, நந்தகோன்—ஆயர்குலத்தலைவன், ஈண்டுய்க்க—இவ்விடம்கொண்டுவருக.

205 கொய்யுளை— கொய்யப்பட்ட தலையாட்டமெனும் அணி, புரவி—குதிரை, எய்யெனும் — செலுத்துஎன்னும், கமலக்காடு—தாமரைவனம், பூத்தென—புட்பித்தாற்போல,

பிறங்கும்—விளங்கும், வெள்ளைமேனிஅமலன் —வெள்ளிய உடலையுடைய பலராமன்.

206 (அக்குரூரன் என்பவன் பலராமனையும் கண்ணனையும் கண்டு திருவடிகளைவணங்கி வந்தமை யுரைத்தனன்) அளவளாய்—கலந்து, முகமன்—உபசாரமொழி, புல்லி—தழுவி, போந்தமை—வந்ததன்மை.

207 போகியதொடங்கினர்— செல்லல்உற்றனர், ஓங்கும்—உயர்வுற்றிருக்கும், விரைசெலல்-விரைவாகப்போதல், கழித்தபின்னை—நீங்கியபிறகு.

208 அலம்வந்து—சுற்றி, ஐயன்—பலராமன், கஞ்சன் ஆவி—கஞ்சனுடையஉயிர், இவண்வருவல்—இவ்விடம்வந்து சேருவேன், உழுவலன்பு — தொடர்ந்துபற்றிவரும் அன்பு, விள்ளாது — மொழியாது, தழுவினான் — புல்லுதலைச்செய்தான்.

209 தண்புனல் — குளிர்ந்தநீர், படியும்—மூழ்கும், திசைகள்எட்டின் — எட்டுத்திக்குகளிடத்தும், ஆரியன் — பூசிக்கதக்கவனாகியகண்ணன், கண்ணுற்று—பார்த்து, அற்புதநீரன்—ஞானத்தன்மையன், ஈர்மலர்—குளிர்ச்சிபொருந்திய பூக்கள்.

210 நால்வரும்—பலராமன், கண்ணபிரான். நந்தகோன், அக்குரூரன் ஆகிய நால்வரும். பெட்பு—விருப்பம், கன்னி — அழிவில்லாதது, புரிசை—மதில், கவின்—அழகு, அணித்தாய்—அணிமையாகி, மேவ—பொருந்த, மன்னிய—நிலைத்த.

211 மன்னுழை— அரசனிடத்து, வருதும்—வருகின்றேம், வேத்தவை—அரசசபை, துன்னியஅனைத்தும்-நெருங்கியசெயல்முழுதும், கடிநகர்—காவல்நகரமாகியமதுரை.

212 கூன்பிறை—வளைந்தசந்திரன் (பிறைமதி) வான் தொடர்மாடம் — ஆகாயத்தினையளாவும் மாளிகை, காண்பான்—காணும்படி, ஊன் — மாமிசம், நேமியொருவன்—கண்ணபிரான், தொறுவரும்-இடையர்களும், தேன்படுதார் — மலர்மாலை.

213 பாசிலை — பசியஇலை, படிமம் — (பிரதிமம்) வடிவம், தேசு—ஒளி, செல்வத்திருநகர்—வளம்பொருந்தியமதுரைமாநகர், சுற்றும்—சுழலும், தூசு—ஆடை, தூய்துஆக்குவோன்—வண்ணான், எதிர்தலும்—எதிர்ப்படலும்.

214 விழுமியதுகில் — மேலான விலையுயர்ந்த ஆடை, ஈதி—கொடுப்பாய், தழை — தளிர், புனைந்திட — தரிக்க, தகைந்து — தடுத்து, பிழை—தவறு, அவன்றலைபிடுங்கி—அவன் சுமக்கும் சுமையினைப்பறித்து, ஒருகோடி — ஒருகோடிபொன்,

215 விலைவரம்பு — விலையின்எல்லை, வெண்டுகில் — வெள்ளியஆடை, மருங்குல்வீக்கி — இடுப்பில்கட்டி, கலைவலார்—கலைகளில்வல்லவர், (கலை-நூல்ஆடை) அணிவோன் அணிசெய்வோன், செம்மாந்து (களித்து) இறுமாந்து,

216 புதியதேறல் — புதியதேன், அருத்தி—அருந்துமாறுசெய்து, சுரும்பு—ஆண்வண்டு, முதுக்குறைவு—பேரறிவு, விதிக்கும் — பழவினைக்கும், ஐயன் — கண்ணபிரான், வீட்டின்பம்—முத்தியின்பம் (பேரின்பம்.)

217 ஐயிருகாதம்—பத்துக்காதம், நாறி—வீசி, சந்து—சந்தனம், புலவு—புலால்நாற்றம், வெறி—மணம், கூனி—வளைந்தமுதுகினையுடையாள், அளித்தலோடும் — கொடுக்கவும், செய்யசாந்து—செஞ்சந்தனம், மாயோன்—கரியவன்.

218 புறவடி—மேலடி (அடியின்மேற்புறம்), அணரி முகவாய், ஏந்தி—தாங்கி, வாங்கலும்-வளைத்தலும், (கூனும்

கண்களும் மூன்றும்) வான்மகளிர்—தேவமாதர், தாங்கரும் படிவம்—சுமத்தற்கரியஉருவம்' தாக்கணங்கு—இலக்குமி.

219 இடுகிடை—நுண்ணிடை, நாணி—வெட்கி, கவற்றும் — கவலுறச்செய்யும், நம்பி—கண்ணபிரானே, (விளி) என்மனையின் — எனதுவீட்டிற்கு, விழைவின்—விருப்பமுடன், மேவுவன்—பொருந்துவேன்,

220 மன்னியசிலை — நிலைபெற்றவில், வெம்போர்—கொடியசண்டை (அமர்) ஏற்றலும்—எதிர்த்தலும், கமலக்கண்ணன்—கண்ணபிரான், ஆவி—உயிர், கூற்றுக்கு — இயமனுக்கு, அவணகன்று—அவ்விடம்விட்டுநீங்கி.

221 இறுத்த—தங்கின, பூங்கா—பூஞ்சோலை, உமிழும் —வீசும், பைம்பூண்—பசியஆபரணம், செயிர்ப்பு—கோபம், புதைய — நன்றாகக்கேட்ப, கேளா — கேட்டு, உயிர்த்து—மூச்சுவிட்டு, இருளழியுங்காறும்—பொழுது விடியுமளவும், வெருட்சி—மயக்கத்துடன்கூடிய அச்சம்.

222 அத்தவெற்பு — சூரியன்மறையும்மலை, உதய வெற்பு—தோன்றுமலை, முகிழ்—அரும்பு, கவரி—சாமரை, வித்தகவயவர்—ஆற்றல்படைத்தவீரர்கள்.

223 மதுகை—வலிமை, அமர்அழுவம் — போர்செய்யும்பரப்பு, புறமுதுகு—பின்னிடல், மீளா—திரும்பாத, முழுவலி—நிறைந்தவன்மை, துயின்ற—தங்கிய, மற்றொழில்—போர்ச்செய்கை, தவிசு—இருக்கை, கவின்பெற—அழகுதக.

224 உலம்-திரண்டகல், கஞ்சனுடையபோர்த்தலைவர் முட்டிகன், சாணூரன், சலன், கூடன், கவுசலன், முதலானோராவர், துகள்—புழுதி, இறைத்து—வாரிவீசி, பொலங்கிரி—பொன்மலை, அவை—சபை.

225 ஈண்டுதருகஎன—இவ்விடம் கொண்டுவருகஎன்று நவில—கூற, சிந்தையின்—மனத்தினைவிட, சிறுவர்—இடை

யர்சிறுமகார்கள், போந்து — வந்து, இந்திரதிருவன்—கந்சன், கண்ணால்—கண்குறிப்பால்.

226 உவர்நீர் — கடல், கடைத்தலை — வாயிலிடத்து, தூண்டி—செலுத்தி (பத்திரன் குவலாயா பீடமெனும்யானையினைச் செலுத்தினான்.

227 கோலி—வளைத்து, கோடு — தந்தம், கரந்தும்—மறைந்தும், மறிந்தும்—மடங்கியும், வெருவி—அஞ்சி, மத்தகம்—தலைப்பகுதி, வலித்திட்டான்—கட்டினான்.

228 வாளுகிர்—கூரியநகம், இரணியன்—இரணியகசிபு என்பவன், மருமம்—மார்பு, போழ்ந்த—பிளந்த, கோளரி—நாரசிங்கம், தாக்கி—அடித்து, நிலத்திடை — பூமியின்கண், ஓர்கோட்டை—ஒருகொம்பை, தடக்கை—பெரியகை, பிடுங்கினான்—பறித்தான்.

229 சென்னி—தலை, தெறித்திட—சிதறுண்ண, செய்த்தோர்—உதிரம், சேப்ப—செவப்படைய, கோடுதன்னை — கொம்பினை, நறை—வாசனை, வேத்தவை — கஞ்சனிருக்கும் அரசசபை, அலங்கல்—மலர்மாலை,

230 தொட்டு-தோண்டி, மல்லல்-வளப்பம், வெள்ளி வெற்பு — கயிலாயமலை, (பலராமன் ஆடை நீலநிறமுடையதாம், முகில்—மேகம், பற்றலர்—பகைவர்.

231 அற்றம்—அச்சம், உருத்து—கோபித்து, வல்லிரேல்—வன்மையுடையிராகில், வருதிர்—வாருங்கள், தோள் கொட்டி—தோள்களைத் தட்டி, கனன்று—கொதித்து.

232 மைந்தரிருவரும்—கண்ணனும் பலராமனும், குன்றொடுகுன்றம்—மலையொடுமலை, சமம்....சண்டை, புரிவதே செய்வதே, விதிர்ப்ப....அசைப்ப, பூசல்....சண்டை,

233 பொருப்பு—மலை, தூசு — கோபியர்கட்டியசேலை கள், கொண்டல் — மேகவண்ணனுகியகண்ணன், (கொண் டல்—மேகம், ஆகுபெயர்) அலாயுதன் — கலப்பையினைப் படையாகவுடைய பலராமன்,

234 கண்ணன், கவுசலன், கூடன் என்பவரைக்கொன்ற னன். பலராமன் சலனைக்கொன்றிட்டான், இணை—உவமை, கொல்லிய—கொல்லும்படி,

235 மன்னவர்எவரும்—அரசர்அனைவரும், குமரர்தம் மை—பலராமனையுங் கண்ணனையும், கன்னி — கோபித்த லைச்செய்து, கண்ணிணை—இருகண்களும், சேப்ப — செவப் புற, சொல்வான்—கூறுவான்.

236 நந்தனை— நந்தகோபனை, வல்லிபெய்க—விலங்கி டுக, நண்புகூர்ந்த—நட்புமிகுந்த, சிறை—காவற்கூடம், தேவ கிதலைவன்—வசுதேவன், உய்ந்திடாது—பிழைக்கவொண்ணு தவாறு, மைந்து—வலிமை.

237 எரியெழ—தீயுண்டாக, விழித்து—பார்த்து, வயி ரத்தோளான்—கண்ணன் — குன்றின்மேல்—மலைமீது, சிங் கக்குருளை—சிங்கக்குட்டி, குப்புறறுன்—குதித்தான்.

238 உரிவை—தோல், கேடகம் — பரிசை, தடறு — உறையுள், எயிறுதின்று—பல்லைக்கடித்து, சேடு — அழகு, அஞ்சல்—அஞ்சற்க, பெயர்த்து—தூக்கிவைத்து. (நடந்து) சாரிகை—இடசாரி வலசாரியாகப்போவது.

239 விலக்கி—தடுத்து, எறுழ்வலி-மிக்கவலிமை, கலு ழன்—கருடன், சிறையொடுக்கி-இறகுகளைமடக்கிக்கொண்டு, கறை—நஞ்சு, பாந்தள்—பாம்பு, கவ்வியது — விழுங்கியது, அவனிவேந்தை—பூமியினையாளும்கஞ்சனை.

240 இன்னும்—இன்னமும், காணு—பார்க்கமுடியாத, கண்டும்—பார்த்தும், தீண்டப்பெற்றும்—தொடப்பெற்றும், உலத்தலால் —சென்றுவிட்டதால், கஞ்சன் என்னும் மாமன் கண்ணனுருப்பெற்றுத் தேவருலகுசென்றிட்டான்.

241 கம்பம் — கட்டுத்தறி, ஒன்னலர் — பகைவர், செகுக்கும்—கொல்லும், தம்பியர்—தம்பிமார்கள், விதிர்த்துச்செல்ல — அசைத்துவர, நம்பியை — கண்ணபிரானை, நகைத்து—சிரித்து, வெம்கோட்டால்—கொடியதந்தத்தினுல்

242 வானோர்—தேவர்கள், புரந்தரன்—இந்திரன், கமலப்புத்தேள்-பிரமன், தாள்பணிந்து-திருவடிகளில் விழுந்து வணங்கி, ஏத்தல்உற்றார்—துதிக்கலாயினர், ஈமம்—சுடுகாடு, நன்கினில்—முறையினில்.

243 தந்தையைத்தாயினேடும்—வசுதேவனை தேவகியுடன், தனை—விலங்கு. பலராமனும்கண்ணனும் வணங்கித் துதிப்ப, தழுவி—புல்லி (அணைத்து) அந்தமிலுவகை—முடிவில்லாத மகிழ்ச்சி, அகம்—மனம்,

244 வெற்றி—சயம், உக்கிரசேனனுக்குமதுராபுரியினை யாள முடிசூட்டினன், புலம்புறல்—அழுகையடைதல் (தனிமையடைதலுமாம்) பணிந்து—வணங்கி, வலங்கெழுதிகிரி—வெற்றிபொருந்திய சக்கராயுதம்.

245 இறைவன்—அரசன், புனைந்தபின்னர்—சூட்டின பிறகு. சிதைவு—அழிவு, வசுதேவனை அமைச்சனுக சிறப்புடன் அமைத்திட்டான்.

29 வது கண்ணன் அவதரித்தது முற்றும்.

ஆகசெய்யுள் 1777.

---

## 30-வது கண்ணன் மணம் புரிந்தது.

1 இன்னணம்புரிந்தபின்னர்—இவ்விதம் கஞ்சன்வதம் முடிந்தபிறகு, கன்னல்வில்-கரும்புவில், ஒளித்து-மறைத்து, காளை—கண்ணன், ஓர்பொருப்பு—ஒருமலை, நல்கி-கொடுத்து மகிழ்வுறு—மகிழ்வுற்று.

2 அளகைமேவும்இறை-குபேரன், சிறப்பு-மேம்பாடு அருள்செய்யா—கொடுத்து, நண்ணுகஎன்ன—அடைவாயாக என்று, விடையளித்து—உத்தரவுகொடுத்து, உந்து—வீசும், அண்ணல்—கண்ணபிரான்.

3 பலராமனுக்கும் கண்ணனுக்கும் கர்க்கனென்னு முனிவரன் பூணநூல் விழாச்செய்து முப்புரிநூல் அணிவித் தான். இதுமுதலாக இவ்விருவரும் மன்னர்வகையினைச் சார்ந் தோராயினர் என்பதாம்.

4 மாசு—குற்றம், வெள்ளைமேனிவள்ளல்-பலராமன், காசிமாநகர்—காசியெனும் பேர்பெற்ற புண்ணியப்பதி, சாந் திபன் என்பவன் தூய இருடியாவன். இவனிடத்து இவர்க ளிருவரும் அறுபத்துநான்குநாளில் அறுபத்துநான்கு கலை களையுங் கற்றனராம்.

5 மதலைமைந்தர்—இளமையான கண்ணனும் பலரா மனும் ஆயவர்கள், மாமுனி — சாந்திபன், வாரி — கடல், இறந்துபோன—செத்துப்போன, உய்ந்துவர-பிழைத்துவர, அளிப்பின் — கொடுத்தால், அதுகொல் — அந்தவுதவியே, விதலை—துன்பம்.

6 இடங்கர்—முதலை, குரு—ஆசாரியன், நீயளிக்கென கண்ணு நீயேகொணர்ந்து தருவாயாக வென்று, மடங்கல்— சிங்கம், வருணன்-கடலுக்கதிபன், பஞ்சசன்னியன்—ஓர்அவு ணன், கொணர்ந்தனன் தொலைக்கென — கொண்டுவந்தழிப் பாயாகஎன்று, நெஞ்சுகீறினன்—மார்பகத்தைப் பிளந்தான்

7 அணைந்து—சேர்ந்து, வைகிய—தங்கிய, மறலியூர்—எமபுரம், தாமரைச்செங்கண்மாயன்—கண்ணபிரான், ஊத—சங்கநாதம்செய்ய, மறலிகொண்டசிறுவன் — சாந்திபமுனிவன்மைந்தன், நல்கல்—கொடுத்தல்.

8 வள்ளல்—கண்ணபிரான், குருவினுக்கு — சாந்திபமுனியஆசாரியனுக்கு, நல்குறு—கொடுத்து, நிதி — திரவியங்கள், கொத்து—கொத்துக்கள், தண்டலை—சோலை(பொழில்) உடுத்த — சுற்றின, உயிரையொத்த — உயிரினைப் போன்ற.

9 அந்நகர்—அம்மதுரைப்பதி, அமர்—விருப்பம், மன்னிய—நிலைபெற்ற, நன்னயம்—நலம் (இன்பம்) இவை-பின் வருவனவற்றை, நவிலல்—கூறல்.

10 இன்னல்—துன்பம், உறுவகை—அடையாதவாறு, தேற்றி—தெளிவித்து, இமைப்பில் — ஓரிமைப்பொழுதில், துன்னுதிர்—அடையுங்கள், விடுத்தான்—அனுப்பினான்.

11 இருக்கை — ஆசனம் (இருப்பிடம்) நண்ணி — நெருங்கி, தேவகிமைந்தன்—கண்ணபிரான், வந்திடும் — வருகுவன், பேரெழில்—மிக்கஅழகு,

22ஒளிர்மாமதுரை — விளங்குகின்ற மதுராபுரி, அரி—இரேகை (செவ்வரி கருவரி) உருப்பசியன்னார்—ஊர்வசியென்னும் தேவநடனமாதினையொத்த மகளிர்கள், ஆடல்நயந்தவன்—கூத்தினைவிரும்பியவன், திகைத்தார்—மயங்கினார்கள்.

13 இரங்கும்—வருந்தும், ஓதியர்—கூந்தலுடையவர், மம்மர்—மயக்கம், வித்தகன்—கண்ணபிரான், அயல்-பக்கம், மேவி—பொருந்தி.

14 உலகமளந்தவன்—கிருட்டிணன் (கண்ணன்) உண்கண்—மையுண்டகண்கள், கலை—மேகலை, கை-பக்கம், நலன் —இன்பம்) நல்லில்—நன்மனை.

15 அகன்மனை—கூனியினுடையபெரியவீடு, அணங்கு —கூனி, முகிழ்—அரும்பு, மார்பிடை—மார்பின்கண், மூழ்க அழுந்த, துகிர்—பவழம், மெல்லணை — மென்மைத்தன்மை வாய்ந்த பூம்படுக்கை.

16 என்னை -- அடியவளை, இன்னணம் — இத்தன்மை, வாழ்வு—வாழ்க்கை, நேர்ந்திட்டு — உடன்பட்டு, நன்னர்மாடம்—நல்லமாடமாகியமாளிகை.

17 ஆர்வம்—அன்பு, அக்குரூரன் — மதுரைக்கரசன், ஈரமுற்று — மனக்கசிவுற்று, ஓர்குழையொருத்தன்—பலராமன், இயம்புவார்—கூறுவார்கள்.

18 தருமன்—பாண்டவரில்மூத்தவன், உரிமை—தாயபாகமாகியஉரிமை, ஓது—கூறுவாய், உழை—இடம், பொருவில்தூது—உவமையில்லாததூதுவர்.

19 அத்தினபுரம—குருகுலத்தவர் ஆட்சிபுரிந்தநகரம், வென்றி—வெற்றி, திருதராட்டிரன் பாண்டுவின்தமையன், (கண்ணில்லாதவன்) உரைசெய்யாவும்-கூறுவனஅனைத்தும்.

20 அறத்தின்மைந்தன் — தருமதேவதையின் புதல்வனாகிய தருமபுத்திரன், உறுத்தி—வற்புறுத்திக்கூறி, உளக்குறிப்பு—மனக்குறிப்பு, கூறினான் — வகைப்படுத்தியுரைத்தான்.

21 அண்ணல்—பெருமையிற்சிறந்தவன், உள்நிறைந்த —மனம்நிறைந்த, எண்ணி—கருதி, முற்றும் — முழுவதும், கழறினான்—கூறுதல்செய்தான்.

22 மின்னனார்— மின்னலையொத்தவர், அவையின்மேவுறு—சபையின்கண்அடைந்து, அன்னை—சராசந்தன்மனைவியார், வீழ்ந்து— வணங்கி, ஆழியான் — சக்கரமுடையவன், (கடல்போன்ற நிறமுடையவன்) குறைத்தமை-போக்கினமை.

23 அணங்கனையார்தமை—இலக்குமி போன்றவர்களை, அவர்தந்தைபால்— அப்பெண்களினுடையதந்தையிலிடத்து, தொழுது—வணங்கி, வெகுண்டு — கோபித்து, அழல்தூண்டிட—அக்கினிசிந்திட, நம்படை—நம்முடையசேனைகள்.

24 வென்றிகூர்தரு—வெற்றிமிக்க, சராசந்தன்—சரையென்பவளினால் சேர்க்கப்பட்டவன், இருபான்—இருபஃது, அக்குரோணி—ஓரளவு, இஞ்சி — மதில், கன்றுநெஞ்சம்—வருந்துமனம், யாதவர்—யதுகுலத்திலுதித்தவர்.

25 வண்டுளவோன்—வளவியதுளசியினை யணிந்த கண்ணபிரான், பொலம்—பொன், இருதேர் — இரண்டுஇரதங்கள், எதிர்போதலும்—எதிரேவரலும், ஐம்படை—பஞ்சாயுதம்,

26 நூறினர்—பொடியாக்கினர், குருதியாறு—இரத்த நதி, நுணுக்கினர்—துகளாக்கினர், சீறினர்—கோபித்தவர், தோளிணை—இரண்டுதோள்களையும், சிக்கயார்த்து-நன்றாகக் கட்டி, ஆறினர்—தணிந்தனர், மாநகர்—பெரியமதுராபுரி.

27 பதினேழ்முறை—பதினேழுதடவை, ஆடுஅமர்—வெற்றிப்போர், ஏற்றலும்—எதிர்த்தலும், வயவர்—வீரர், மறித்திட—இறக்க (சாவ) வெண்ணிணம்—வெள்ளியகொழுப்பு, துளவமால் — கண்ணன், கடைசேந்த — கடைகள் செவப்புற்றன.

28 கிரிவிரசம் — ஒருநகரம், புகுத — ஓடிஒளிக்க, துரந்து—ஓட்டி, தண்டாமரையாள்—இலக்குமி, கயவாய்—பெரியவாய், சூழ்கிடந்த—சுற்றிக்கிடந்த, மதுரைநகரினுக்கு போய்ச்சேர்ந்தான்.

29 கொம்மை—அழகு, குடக்காய்—குடம்போற்காய்த் தகாய், முடம்—வளைவு, கடுவன்—ஆண்குரங்கு, மந்தி—பெண்குரங்கு, ஏந்தல்—கண்ணபிரான், இசைதேர்மகதியாழ்

முனிவன்—பண்ணிசைதெளிந்த மகதியெனும் பெயருடைய யாழினையுடையநாரதன்.

30 செங்கனி—கொவ்வைப்பழம், தொறுவர்மகளிர்—இடைச்சியர், உடற்றும் — மாறுபாடுற்றுச்செய்யும், மான்றேர்—குதிரைபூண்டதேர், மலையின் — சண்டைசெய்தால், ஆற்ருன் — எதிர்த்துச் சண்டைபுரியு மாற்றலற்றவனுவன், முற்றினுன் —சூழ்ந்தான்.

31 வளைந்த — முற்றுகையிட்ட, துன்னி — நெருங்கி, கைப்படுத்தி—தன்னகப்படுத்தி, கொன்னே — வெறுமனே, (வாளா) ஈசன்—சிவபெருமான்.

32 கடலகடு— கடல்நடுவில், மயனெனும் அசுரசிற்பியால் பன்னிரண்டு யோசனைநீளமும் அகலமும்உடைய சூரியனுவன் காவல்புரிய மாடங்களும் வீதிகளும்உடைய ஒரு நகரம் அமைக்கப்பெற்றது. அந்நகருக்குத் துவரை யென்று பெயராம்.

33 இருநிதி—சங்கநிதியும், பதுமநிதியுமாம், சுதன்மை யென்பது மண்டபத்தின் பெயராம், ஐந்தருக்கள்—சந்தனம், அரிசந்தானம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம் என்பனவாம். சிந்தாமணி—நினைத்ததைக்கொடுப்பது.

34 இமையா—மூடாத, ஆல—ஆடுதலைப்புரிய, குமரி —இளையஅன்னப்பறவை, முகைஅவிழ்ந்த—அரும்புவிரிந்த, தமரத்திரை—ஒலியலைகள், குண்டுஅகழி—ஆழமாகியநீரரண் மதுரையினைப்பரிபாலனம்புரிய பலராமனை யமைத்தனன்.

35 சமர்க்கு—சண்டைக்கு ஆற்ருன்—எதிர்நிற்கமாட்டாதவன், கருந்துளவமாலோன்—கண்ணபிரான், இழிந்து—இறங்கி, முழை—குகை. கண்டுயிலல்—உறங்குதல், ஒளிப்ப—மறைய, நனிதொடர்ந்து—மிகவும்பின்பற்றி. துயிலுமரசன்—முசுகுந்தன்.

36 ஆலம் — ஆலகாலவிடம், அமிழ்தின்—அமிருதத்தினைப்போல, நுகர—அருந்தின, அண்ணல்—சிவபெருமான் விழிப்ப—நெற்றிவிழியால் விழித்தலைச்செய்ய, உடலிழந்த குரிசில்—அநங்கனாகிய மன்மதன், அவுணன் உயிர்—காலவயவனாகிய அசுரன்றன் உயிர், கனன்று — வெந்து, சாம்பர் ஆயினான் பொடியாய்த்தொலைந்தனன்.

37 பூந்தாது—பூவினுடைய மகரந்தப்பொடி பொறி வண்டு—புள்ளிக்களையுடையவண்டுகள், மாந்தாதாவின்மகன் —முசுகுந்தன், ஏந்தால்—கண்ணபிரானே, யோகத்துறங்கினேன்—யோகத்திலிருந்திட்டேன் சார்ந்தாய்—அடைந்தாய் தளராமுத்தி—பேரின்பநிலை.

33 தெவ்வூன்— பகைஞர்தசை, குதட்டி — மென்று, வெவ்வாய் — கொடியவாய், மறுமை—மறுபிறப்பு, ஒவ்வா மறையோர்-உவமையில்லாதவேதியர், வேதங்களும் விண்ணவரும் வணங்கித்துதிக்கும் சிவபெருமான் திருவடியினை அடைவாய் என்றான் கண்ணன்.

39 வயவாள்-வெற்றிவேல், ஈந்தருளி-கொடுத்து, குன்றம்—கோவர்த்தனகிரி, நிரை-பசுநிரை, முன்னோன்—தமையனாகியபலராமன், சார்போழ்து—அடைகின்ற சமயத்து.

40 உரும்— இடியேறு, உலப்பில் — குறைவில்லாத, செருவேற்று—அமரினுக்கெதிர்த்து, அதரினிடை-வழியின்கண், வளைப்ப—சுற்றிக்கொள்ள, செங்கட்கரியோன் .... கண்ணன், வெருவந்தோரின்....அஞ்சினவர்களைப்போல, பிரவருணகிரி....ஒருமலை, சூழ்போத....சுற்றிவர, தெறுதீ .... கொல்லுதலைச்செய்யும்நெருப்பு.

41 வழங்கற்கரிய .... செல்லுதற்குமுடியாத, சுவல் .... பிடர், குப்புற்று....பாய்ந்து, தகை....வனப்பு, துவாரகை.... துவாரகாபுரி, தம்முன்....தமையன், சென்றடைந்தான்.... போய்ச்சேர்ந்தான்.

42 சராசந்தன், கண்ணனும் பலராமனும் பிரவணமலையிற் செத்துப்போயினர் எனக்கருதிப் பலவளங்களுஞ் செறிந்த கிரிப்பிரச நகரினை யடைந்தான். மேதி—எருமை, உழக்கி—கலக்கி, பலவின்நிழல்—பலாமரத்தின்நிழலின்கண், பொழில்—சோலை.

43 கரைகொன்றுஇரங்கி—கரைகளையழித்துஒலிக்கும், மிடைந்த—நெருங்கின, விரைகொப்புளிக்கும் — நறுமணம் நாறும். ஆனத்தமென்பது ஒருநாடு. உரைசெய்—புகழ்செய்கின்ற, இரேவதன் என்னும் அரசன் மகளைப் பலராமன் மணந்துகொண்டனன்.

44 அலவன் கிளைத்தகுழி—நண்டுதோண்டினவளை, துணர்-பூங்கொத்து இடர்படுத்தல்—மேடாக்கல். செயிர்—குற்றம்—சீர்த்தி—மிகுபுகழ், விட்டுமகன், தன்புதல்வியைக் கண்ணனுக்குக் கொடுப்பதற் கிசைந்தனன்.

45. உருக்குமன் — உருக்குமணியின் அண்ணன், தடறு—உறை, கிள்ளைமொழி—கிளிபேசும் பேச்சு, அந்தாரகலம்—அழகிய மாலை புனைந்த மார்பு. ஆயன்-இடையனாகிய கண்ணபிரான், எந்தாய்—தந்தையே! தகாது — பொருந்தாது, மறுத்த—தடுத்த.

46 தமையன் — உருக்குமன், சாற்றி — மொழிந்து, இமையமீன்ற பூங்கொடி—பார்வதிப் பிராட்டியார், தலைக்கீடு-காரணம்(பற்றுக்கோடு) அமைவல்-பொருந்தல், ஆங்குற்று-அவ்விடம் வந்து, எனைக்கவரான்—என்னைப்பற்றிக்கொண்டு போகான்.

47 கைதை—தாழை, மகிழ்சிறந்து—மகிழ்ச்சி மிகுந்து, மிடல்—வலிமை, விரைமான்-வேகமாகச் செல்லுங் குதிரை.

கடவி—செலுத்தி, வான்றேடு—ஆகாயத்தைத் தொடுகின்ற பணைக்கொடியோன் - பனையெழுதியகொடியினையுடைய பலராமன்.

48. தரியார்—பகைவர், தகை—வனப்பு, விழைவின் விருப்பினால், மணமுடிப்பான் — மணத்தை முடிக்கும்படி, பரிவு – அன்பு, படர்ந்து இறுத்தார்—சென்று தங்கினார்கள்.

49. முழுதுலகளந்தோன்—கண்ணபிரான், கோநகர்—குண்டினபுரம், சோலைமருங்கு—சோலையின்பக்கம்-மகிழ்ந்து களித்து, இலவத்துவர்வாய் – செவ்விலவு போன்ற செவந்த உதடு, மின்னு—மின்னல், நகை—ஒளி, விளம்பினள்—கூறினாள்.

50 எண்டோட் முக்கட் கவுரி—எட்டுத் தோள்களையும் மூன்று கண்களையும் உடைய கவுரி, இறைஞ்ச—வழிபட, மேவுதற்கு—அடைவதற்கு, விடை—உத்தரவு, அளித்திர்—கொடுங்கள், தழீஇக்கொண்டு — பற்றிக்கொண்டு (புல்லி) வண்டார்கோதை—உருக்குமணி.

51 கண்டோருள்ளம்—பார்த்தவர்மனம், கதிர்—ஒளி, தண்டாமரையாள்—இலக்குமி, அளித்தி—கொடுப்பாய், பண்டோய்குதலை—இசையமைந்த குதலைமொழி, மாதவி—குருக்கத்தி, தனிநின்றாள்-தனித்து நின்றனள், போற்றி-துதித்து.

52 தண் அம் கமலம் — குளிர்ச்சிபொருந்திய அழகிய தாமரைப்பூ, குமுதம்—அல்லி, வண்ணம்—அழகு, கொம்பர் (போலி) கொம்பு—கிளை, வண்டுஆர் — வண்டுகள் நிறைந்த, மருங்கு அணைதல்—பக்கத்தே சேர்தல், உவகை — களிப்பு, இறும்பூது—வியப்பு (அற்புதம்).

53 பொன்னங்குடுமி நெடுவரை—மகாமேருகிரி, இமிர்தல்—இரீங்காரம் செய்தல், அம் கண் — அகன்ற இடம், சுடிகை — உச்சிக்கொண்டை, நாகர்உறையும் வியன்பதி—நாகருலகு, நின்றார்—நிற்கின்றவர், உறையும்—தங்கும்.

54 கைசெய்து—அலங்கரித்து, புனிறு — இளமை, கலன்சுமந்து — அணிகலன்களைத் தாங்கி, நுதல் — நெற்றி, ஈங்கு — இவ்விடம், தென்செய்வரிவண்டு—தென்றுவென ஒலி செய்யும் இரேகை பொருந்திய வண்டு, பூமாது — பூமகள் (இலட்சுமி).

55 வழங்கும்—நடமாடியொலிக்கும், பரவை—கடல், அருள்நோக்கம்—அருட்பார்வை, தீர்க்கும்—போக்கும், ஆவி —உயிர், வேனில்வேள்—மன்மதன், இறுத்தியது—தங்கும் படிச் செய்தது

56 ஆற்றல்—வன்மை, அலைவாய்-கடலிடம், மாற்றம் —மொழி, இமையா — இமைத்து (மூடி), கோற்றேன்— கொம்புத்தேன், உள்ளக்குறை—மனக்குறைவு, தழுவுதும்— புல்லுவோம்.

57 காந்தள் —காந்தட்பூ (ஆகுபெயர்) கனிந்த-முதிர்ந்த கள் ஒநர்—களவுபுரிபவர், அள்ளியள்ளி – வாரிவாரி, ஆகாது —கூடாது, பேரறிவு—பெரியஞானம்

58 வரிப்பந்து— வரிந்துபுனையப்பட்டபந்து, முகிழ்— அரும்பு, கழங்கு—மகளிர்விளையாடுங்கருவி, கயம்—தடம், குழு —கூட்டம், ஆடாது-விளையாடல்புரியாது, தீட்டுஓவியம் —எழுதும் சித்திரம், கழறுக—கூறுவாய், ஏ, அசைநிலை.

59 வளி—காற்று, இயங்காது — அசையாது, அற— மிகவும், மருங்கு—இடை, அந்தோ—இரக்கமொழி, தளவம் —முல்லை, தணவாது—நீங்காமல், நறவம்—தேன்.

60 கண்ணீர்-கள்ளாகியநீர் (கண்களினின்றும்வரும்நீர்) ஒருதாளில்——ஒருபாதத்தில், கதிரோன்—சூரியன், முயலா நிற்கும்—முயலுதலைச்செய்யும், செய்தவம்—நல்லநோன்பு,

61 வேற்றோர்மருந்து—பிறிதுஒருமருந்து (அவுடதம்) பிணி—நோய், பிழிந்த — வடிகட்டின, நலன் — இன்பம், இயைந்த—ஒன்றுபட்ட, சேர்தல்—கூடல்.

62 கொப்பளித்து—சிந்துதலைச்செய்து, துதைந்து—மூழ்கி (பூசி) மாதவியே — குருக்கத்தியே, புகல்—பற்றுக்கோடு, (அடைக்கலம்) துயராமல்—வருந்தாமல்.

63 கரிகள்—யானைகள், செரு—போர். ஐயம்—இதுவோ, அதுவோவென்று துணிவுறாமை, அநங்கன்—உருவில்லாதவன் (மன்மதன்,) வாளி-அம்பு, புதைத்தல்-மறைத்தல்.

64 வண்டினம் — வண்டுக்கூட்டம், சூழ்ந்து — சுற்றி பொதும்பர்—சோலை, புலம்பு—தனிமை, ஓசிதல்—ஒடிதல் வேய்—மூங்கில், கனிவாயமுதம்-வாயினூறல், எந்நாள்—எப்போழ்து. தரும்—தருவாள்.

65 கனை—ஒலி, (ஆரவாரம்) திரைக்கை—அலையாகிய கைகள், துனைவு—விரைவு, துகள்—பொடி (புழுதி) மறிப்ப—தடுப்ப, புந்தி—மனம், நிறை—நிறுத்தல், புலம்புற்றாள்—வருந்தினாள்.

66 விரகம்—காமநோய், புணை—தெப்பம், குழையும்—இளகும், சூழ்போந்தும்—சுற்றியும், மதிமுகம்—சந்திரன் போன்றமுகம். தெவிட்டி-தேக்கி, நகைபுரிந்தாள்-சிரித்தாள்

67 துன்பவிருள் — (உருவகம்) துன்பமாகிய இருள் (மயக்கம்) வயங்கும்—விளங்கும், கையறவு—செயலறல், தளிர்த்தல்,-தழைத்தல், செருந்தி-ஒருகைப்பூமரம், முருந்து-மயிலிறகினடி, பொருவும் - உவமானமாகும்.

68. ஒளிறுவடிவேல்—விட்டுவிட்டு ஒளிவீசும் கூரிய வேற்படை தேறல்—தேன். மான்றேரிரவி—பச்சைக்குதிரைப் பூட்டப்பெற்ற ஓராழித்தேரினை யுடையசூரியன், கான்—மணம், தருவும்—கற்பகத்தருவும், கடிதின்-விரைவில் ஏ—தேற்றம்.

69 பெற்றம்—காளை, முத்தலைவேல்—மூவிலைய சூலம் பெம்மான்—சிவபெருமான், தவம்புரிதல்-நோம்பு இயற்றல், புனிற்றுத்திங்கள் — இளஞ்சந்திரனே! கற்றை—தொகுதி இருத்தல்—ஒத்திருந்து அமைவது—கூடாது—பொருந்தாது.

70 கலை—மேகலையெனும் அணி, வடம்—முத்துமாலை, அயில்—கூர்மை, கைசெய்தேன்—அணிசெய்தேன், ஐயுற்று சந்தேகங்கொண்டு, மெலிவுறேல் — மெலிந்து இளைத்துப் போகாதே, வேய்மென்தோள் — மூங்கில்போலும், பசிய மெல்லியதோள்கள்.

71 கொலை — கொல்லுதற்றொழில். பயின்ற—பழகிய கோற்றேன்-கொம்பினில் விளைந்ததேன், பூத்த-உண்டாகிய குளன்—(போலி) தடாகம் தளவு—முல்லை, பொதிந்த—தங்கிய, கழுநீர்,—குவளை, தளவினை யொத்த பல்லும், குமுத மொத்தவுதடுகளும், கழுநீர்போன்றகண்களும் உடைமையின் இங்ஙனங் கூறினர்.

72 பரிவுற்று—வருந்தி, பசலை—தேமல், பணிமொழி பணிவைப்புலப்படுத்திய மொழி, பிரியேன் — நின்னைவிட்டு விலககில்லேன், உய்யேன்-தேறேன் (பிழையேன்) பெய்வளை -(அன்மொழித்தொகை) உருக்குமணித்தேவி, வெருவ — அஞ்ச.

73 குறுகார்—பகைஞர், முற்றுத — சுற்றிவளையாத, எயில்—மதில், மறுகு—வீதி, எதிர்ந்த-போரேற்றஎதிர்த்த வலிதொலைத்து — ஆற்றலைக்கெடுத்து, கறை — களங்கம், கழிந்திடல்,—நீங்கல், உருக்குமன்—உருக்குமணியின் உடன் பிறந்தோன்.

74 படையனைத்தும்—சேனைமுழுவதும், அலாயுதன்—பலராமன், உருமேறன்ன—இடியேற்றினையொத்த, பகழி—அம்பு' நூழில்ஆட்ட—கொன்றுகுவிப்ப, உலகுஅளந்த கரி யோன்—கண்ணபிரான், கல்—மலை, வீக்கி—கட்டி, பங்கி—குடுமி.

75 பலராமனும் உருக்குமணியும் உருக்குமன் ஆவியைத் தொலையற்கவெனவேண்டலின் கண்ணன் அவனை விடுத் தனன் ஆம். வள்ளல்—கண்ணபிரான், துவரை-துவாரகாபுரி.

76 மாசுபூத்த—குற்றம்பொருந்திய (உண்டான) மறம் கூர்—அஞ்சாத்தன்மை மிகுந்த, தேசுபூத்த—ஒளிதோன்றின திருநெடுமால் — கண்ணபிரான். செகுத்தல் — ஒழித்தல், அடையேன்—சென்றடையமாட்டேன், நாண் — அவமானம்.

77 தண்ணந்துளவோன் — கண்ணபிரான், ஐவர் — பாண்டவர்கள், கவ்ரவர்—துரியோதனுதியர்கள், இளைஞர்— சுற்றத்தினர், முடங்கல்—திருமுகவோலை.

78 நந்தகோபன் — இடையர்தலைவனுகிய வளர்த்த தந்தை, இயம் — வாத்தியம், கறங்க—ஒலிப்ப, வல்லோர்— சோதிடநூல் வல்லவர், சந்தம்—சந்தனம், சான்று—சாட்சி, மணம்புரிந்து—திருமணம்செய்து, நலன்—இன்பம்.

79 உருவம் — அழகு, ஒண்டாமரையினள்—ஒள்ளிய தாமரைமலரிலிருந்தவளாகிய இலக்குமி(உருக்குமணி)பருவக் கருமுகில் — பருமையாகிய கரியமுகில் போன்ற கண்ணன் மருவி—கூடி—பரிவு—அன்பு, கருவுற்றிட—சூல்கொள்ள.

80 நிலவு-சந்திரிகை, சான்றோர்-அறிவாளிநிறைந்தவர் ஈன்றுள்—பெற்றனள், மடமயில்—(ஆகுபெயர்) இளமை யான மயில்போலுஞ் சாயலையுடையவர், சிறுவனை-புதல்வனை

81 சம்பரன் என்றுயர்தானவன்—சம்பராசூரன், ஓத- கூற, வெம்புற-வாடுகின்ற, வெண்டிரை-வெள்ளிய அலைகள் சிந்துதல்—சிதறல், அள்ளி எறிந்தான்—வாரி வீசினுன்,

82 ஆர்கலி—சமுத்திரம், வீழ்பிள்ளையை—விழுந்த மகவினை, வாயிடையெய்த—வாயினிடத்து விழுங்கிய, வள் ளுறு—கூர்மையினையுடைய, வலைவாணன்-வலைஞர், வவ்வி- பிடித்து, உவந்து—களித்து.

83 பவ்வம்—கடல், வவ்வியமீனினை—பற்றிய அந்த மீனை, எவ்வம்—துன்பம், கொவ்வை-கோவைக்கனி, கொடி -கொடி போல்பவளாகிய சப்பரன் மனைவி.

84 மீனம் — மீன், ஆய்கதிர்வாளின் — அழகிய ஒளி பொருந்திய அரிவாளினுல், அகட்டின்—அம்மீனின் வயிற்றி னிடத்து, இளம்பிறை — இளஞ்சந்திரன், எடுத்தனள் (முற்றெச்சம்) எடுத்து, சிந்தைகளித்தாள் – மனமகிழ்ந்தாள்.

85 அச்சு—உயிர் — அகம்—மனம், குழைவெய்தி— இளகி, அருந்தி-பருகி, கண்ணெச்சில்-கண்ணேறு (திருட்டி) அகற்றி—போக்கி, எடுத்து—அன்புடன் தூக்கி.

86 விழைவு — விருப்பம், மழகதிர் – இளஞ்சூரியன், கோலம்—அழகு, எழுதருநான்மறை—எழுதாக்கிளவியெனப் படும் நான்கு வேதங்கள், குழை—காதணி, கண்ணி—கண் களையுடைய சம்பரன் மனைவி.

87 திங்கள் முடித்திடுதேவன்—சந்திரசேகரனுகிய பர மன், விழிக்கு—நெற்றிக்கண்ணினுக்கு, அங்கமிழந்திடுகாமன் — சாம்பராயின உருவிலியாகிய மன்மதன், இவன் அன்பன் —சாமன், தனியோதி—தனிமையாக்கூறி.

88 இறுநுண்ணிடை — ஒடியும் நுண்ணிய இடுப்பு, சேயுறழ்மைந்தனை-முருகனையொத்த மொய்ம்புடைய மகனை, தெருட்டி — தெருளுறச்செய்து, வேயுறுதோணலம்—கூடு மின்பம், மறுத்தான்—தடுத்துரைத்தான்.

89 வெண்பிறைமால் சந்திரன் என்பர். ஒறுத்தவை— தண்டித்தவை, வில்வேள்—மன்மதன், நெஞ்சுதெருட்டி— மனத்தைத் தெளியச்செய்து. நறை—மணம், நன்னலம் உண்டான்—இன்பம் நுகர்ந்தான்.

90 கருப்பு—கரும்பு (வலித்தல்) தும்பி – வண்டு, மலர் ஐந்து—அரவிந்தம், அசோகம், சூதம், நவமல்லிகை, நீலோற் பலம் என்பன, ஆவிதடிந்தனன்—கொன்றனன்,

91 இரதியுடன் பிரதியும்மனன் எனப்படுவோன் தென்றல் தேரின்மேலேறிக் கொண்டு கண்ணபிரானுடைய துவாரகையினையடைந்தனன், திரிதரல்—சுழலல், மன்னினன்—நிலைபெற அடைந்தனன், அன்றே—அசைகள்.

92 வண்டுவரை—பலவளங்களுஞ் செறிந்த துவாரகை நகர், மைந்தன்—பிரத்தியும்மனன், கண்டுருகி-பார்த்துமனங் கசிந்து, வழிந்து ஒழுக—பெருகித்ததும்பிச்சொரிய, அண்டர்பிரான்—கண்ணன், அறைதி—கூறுவாய், முன்னிகழ்ந்த—முன்னர் நடந்திட்ட, பகர்தல்—கூறுதல்.

93 மறைமுனிவன்—நாரதன். புல்லி—தழுவி. கறை—இரத்தக்கறை (களங்கம்) இரதியை—இரதியெனும் அம்மங்கையை, உறையுநகர்—துவாரகை, உலப்பில்லாத-சுருங்குதலில்லாத (பெருகிய) உவகைப்பெருக்கு—உவகைவெள்ளம்.

94 இருள்மேய்ந்து-இருளினைப்போக்கி, சுதிரோனைப் பணிந்து — சூரியனை வழிபட்டு, பொன்னீனும்-பொன்னினை யளிக்கும், சிமந்தகமாமணி — ஒருபெரிய மாணிக்கம், பார் மகள்—பூமிதேவி, கேள்வன் – நாயகன், இறைவன் — கண்ணன்.

95 சேடு—அழகு, மூரி—பெருமை, சத்திராசித்துவின் றம்பி பிரச்சேனன் ஆகுவன், துளங்கவீக்ப்—நடுங்குமாறு கட்டி, வேட்டம்—வேட்டை, கோளரி—வலியசிங்கம்.

96 வாம்புரவி—பாயுங்குதிரை, வீழ்த்தி — கொன்று போட்டு, மடங்கல்—சிங்கம், கவர்ந்து — பற்றிக்கொண்டு, திறல்—வலிமை, வாளரி—ஒளியினையுடையசிங்கம், பிளந்து கீறி, கதிர்மணி —சிமந்தகமணி, உறுபிலம்—பாதலம்.

97 வேல்— வேல்போன்றகண்கள், விரை — மணம், சாம்பவதி—சாம்பவானின்மகள், செங்கேழ்—செவந்தநிறம், எழில்மணி—சிமந்தகமணி,

93 இதனை—இச்செயலினை, உயிர்செகுத்து — உயிரினைப்போக்கி, கவர்ந்தான்—பற்றிக்கொண்டான், தாங்கரும் வெம்மொழி — பொறுக்கமுடியாத பழிச்சொல், துருவி—தேடி.

99 அதர்—வழி, பரியாவி—குதிரையின்உயிர், வீளிய—அழிய, நூறி—கெடுத்து, கடுங்கண் — அஞ்சாத்தன்மை, வாளரியின் தடம் —சிங்கமானதுசென்றவழி, வெஞ்சினம்—கடுங்கோபம், கரடித்தடம்—சாம்பவான்சென்றநெறி.

100 தடம்ஒற்றி—வழியினைப் பற்றி (அடையாளமாகக் கொண்டு) அயரும்—தளரும். பிலத்தூடு—துவாரத்தில் (நுழைவழி) நறவம்தூற்றும்—தேன் சிந்தும், மழைத்தடக்கை_மழைபோல் கைம்மாறுகருதாது வழங்கும் பெரியகை

101 நண்ணரிய-நெருங்கமுடியாத, ஆறிருநாள் காறும்-பன்னிரண்டுநாள் வரையும், அண்ணல்—கண்ணபிரான் நண்ணுறுக—அடையாதுபோக, எண்ணரிய—அளவிடமுடியாத, கொற்றவை—வீரமடந்தை (துர்க்காபரமேஸ்வரி)

102 நோற்புழி — விரதம்செய்கின்றஇடத்து, மால்—கண்ணபிரான், தூங்கிய — அசைகின்ற, துனைவு—விரைவு வாங்குதலும் — எடுத்தலும், மலைய—போர்புரிய, ஐயன்—கோவிந்தன், அமராற்றி—சண்டைசெய்து, வாகை-வெற்றி.

103 தாமரைக்கண் மாயோன் — புண்டரீகாட்சனாகிய திருமால், ஓகை—உவகை, வலஞ்செய்து — வலமாகவந்து, பணிந்தேத்தி—வணங்கித்துதித்து. பாகு—வெல்லப்பாகு, பரிவுகூர்ந்து—அன்புமிக்கு, நாகம் காளியன் என்னும் பாம்பு.

104 பெண்மணியாகிய சாம்பவதி யென்பவளுடன் சிமந்தகமணியையும் பெற்றுக்கொண்டு பிலத்துவாரம்

வழியாகவந்து உருக்குமணி முதலினோர் போற்ற, துவாரகை வந்துற்றனன். ஒல்குமிடை—துவளும் இடுப்பு.

105 உரவு—வலிமை, தேசு-ஒளி, மன்னவன்-அரசன் திருமால் — கண்ணன், நல்க — கொடுப்ப, காசு—குற்றம், வேத்தவை — அரசிருக்கைமண்டபம், பேசரிய—சொல்ல முடியாத, பிழை—தவறு, பேதுறவு—மயங்கல்.

106 பெரியோர்—காலம் சீலம் அறிவு என்னும் மூன்றனும் மூத்தபெரியார், பிழைசெய்தோர்-தவறுஇழைத்தவர் உய்தல்-கடைத்தேறல், ஓரின்—ஆராயின், மகட்கொடுத்தல் —மகளைத் திருமணஞ் செய்துதரல், தரியார் — பகைஞர். வேறுஇருந்து—தனித்திருந்து, கழறல்—வற்புறுத்தியுரைத்தல்.

107 கத்திகை—மலர்மாலை (தொகுப்பு) புறங்கொடுக்கும்—பின்னிடும், சத்தியபாமை-சத்திராசித்துவின் புதல்வி, தருவன்—தருதலைச் செய்வேன், கோடி—கொள்வாய்.

108 விம்ம—ஒலிக்க, குடவளை—குடம்போலுஞ் சங்கு, கணிதர்—சோதிடர், தேர்ந்து—தெளிந்து, தலிவரும்—நிறைந்த, வழங்கினன்—மணமுவந்து கொடுத்தான்.

109 கடல்—பாற்கடல், உளைந்து—வருந்தி, மணியின் —மணியினைப்போல, கற்றை—தொகுதி, திகிரி—சக்கரம், அண்ணல்—கண்ணன், மீட்டும்—மீளவும்.

110 ஞெமுங்க—அழுந்த, நத்தம்—இரவு, விள்ளாது —விலகாது, நறை—மணம், வித்தகன்—சதுரப்பாடுடைய கண்ணன், புகுந்தமை—வந்தடைந்த செயல்.

111 வலம்புரி—நந்தியாவர்த்தம், வேய்ந்த — சூடின, சுயோதனன் — துரியோதனன், வஞ்சம் — கபடம் (கரவு) மாழ்க—மயங்க, அரக்கறை—அரக்கினாற் செய்த மண்டபம், சலஞ்சலம்—வலம்புரிக்கும் மேம்பட்டது (சங்கின்ஒருவகை)

112 இராமன்—பலராமன், பொருவும்—ஒக்கும், திருமறுமார்பன்—கண்ணன், தழீஇயினன்—தழுவி, வழங்கலுற்றுன்—கூறினுன்.

113 பைத்த—படமுடைய, உறழும்—ஒக்கும், கோதையை—மகளை, நினக்குக்கூறி—உனக்களிப்பதாக வாக்குறுதி செய்து, வெய்ய—கொடிய, தகைமணி—சிமந்தகமணி, கவர்க—பற்றுக.

114 கங்குல்-இரவு, உறங்குழி—துயில்கின்ற இடத்து வைவாள்—கூரியவாள், தடறு—உறையுள், முடிதடிந்து—தலையினைவெட்டி, வவ்வி—கவர்ந்துகொண்டு.

115 கந்தடு—கட்டுத்தறியினை முறிக்கின்ற, புழை—துவாரம், சீற்றம்-கோபம், மாற்றம்-கொடுஞ்சொல், கேளா-கேட்டு, இரங்கி—அழுது, அந்தில் அசைநிலை.

116 எய்தி—அடைந்து, ஆம்பலங்குழல்—ஆம்பற்றண்டினுற்செய்த புள்ளாங்குழல், மரகதவண்ணன்—கண்ணன், கண்ணிணை—இருகண்களும், மாரி-மழை, (மேகம்) முகிழ்முலை—சத்தியபாமை, மொழியலுற்ருள்—விவரத்தை விளம்பினுள்.

117 எந்தையை—எமது பிதாவாகிய சத்திராசித்துவை மைந்து—வலிமை, தடிந்தான்—வெட்டி வீழ்த்தினுன், பனைக்கொடித்தோன்றல்-பலராமன், மான்றேர்-குதிரைகள் பூட்டிய இரதம்.

118 மழைநிறவண்ணன்—கண்ணன், அஞ்சி—மிகவும் பயந்து, அழல் அவிர்மணி—சோதிவிட்டு விளங்குஞ் சிமந்தகமணி, துன்பம் தழை—துன்பமிகுந்த, தாவில்-கேடில்லாத உழையர்-பக்கத்தவர்(அமைச்சர்)தேர்வுறுது-தெளியாதபடி.

119 பாங்கர்—பக்கம், வீழ—சாவ, பொலன்கழல்—பொன்னுற்செய்தவீரக்கழல், சேப்ப—செவப்புற, நோக்கி—பார்த்து, வலம்—வெற்றி, தூண்டி—செலுத்தி.

120 அவன்பாலின்மை—அவனிடத்து இல்லாமையை தம்முன் — பலராமன், வீய்ந்ததன் மாமன் — சத்திராசித்து ஈமம்—விறகு(சுடலை) நுசுப்பு—இடை, தேற்றி-தெளிவித்து வெந்துயரம்—கொடிய துன்பம், தீர்த்தான்—போக்கினான்.

121 கரந்தனன்-மறைத்துவைத்துள்ளான், ஒருகுழை-ஒருகாதணி, ஒருவன் — பலராமன், அரவவெங்கொடியினான்—துரியோதனன், விஞ்சை—வித்தை, உள்ளோர்—ஆற்றலுடையவர், வியப்புற—ஆச்சரியமுறும்படி, பயிற்றுவித்தார்—கற்பித்தார்.

122 கரியநிறமுடைய கண்ணனுக்குப்பயந்து கிருதவன்மாவும், அக்குரூரனும் கெடுதலில்லாத மிகுபுகழினையுடைய காசியம்பதியை அடைய பகைவர் சேனையனுகற்கு முடியாத துவாரகைநகர் மழைபெய்யாமையால் வரண்டுபோயிற்று.

123 மதிநூல்தேர்ச்சிக்கிழவர் — சோதிடர், பொழி புயல்—பொழிகின்றமேகம், புரப்போன் — பாலனப்புரியும் அரசன், சுவர்க்கன்—சுவர்க்க போகத்திலிருப்பவன், கூவி—அழைத்து, தன்மகள்தன்னையீந்தான்—தன்புதல்வியைமணந்துகொடுத்தான்.

124 காந்து இலிமுறுவல் — ஒளிவீசும்இனியபற்கள், வேந்தர்கோன்—சக்கரவர்த்தி, மேயவாற்றால்—பொருந்தியதனால், அவன்மகன் அக்குரூரன்வந்தால் மழைவரும் ஆகையினால் அவனைக் கண்ணபிரான் ஒற்றரால் அடைவித்தான்.

125 மைத்தகார்பொருவுமேனிவள்ளல் — கரியமேகத்தைப்போன்றகண்ணபிரான், சோதிக்கதிர்மணி — சிமந்தகமணி, வழங்கல்—கொடுத்தல், தாமவேலான்—அக்குரூரன், கோடி—கொள்வாய், ஈதி—ஈவாய் (கொடுப்பாய்)

126 குணபால்—கிழைத்திசை, கோலம்-அழகு, செய்தி—செய்கை, பரிவு--துன்பம், தீர—ஒழிய, ஓலை—முடங்கல், போக்கி-அனுப்பி, வல்லேயழைத்து-விரைவில்வரவழைத்து.

127 ஐவரும்—பாண்டவரும், ஏர்—அழகு, அன்பால் அன்பினால், புல்லி — தழுவி, ஓரொருபருவம் — ஒவ்வோர் ஆண்டு, பார்புகழ்—உலகத்தவர்புகழும்.

123 எயினர்—வேடுவர், பார்த்தன்—அருச்சுனன், அரசன்—தருமபுத்திரன், துருபதன்மகள்—திரௌபதி, உன்னி—மனத்திடைகருதி, கடவுள்தீர்த்தம் — தெய்வீகத்தன்மை பொருந்திய புண்ணியநீர், ஆடுதல்—முழுகல்.

129 உலூபி—நாககன்னிகை, போகமார்ந்து — இன்ப நுகர்ந்து, வெற்றிமைந்தன்—அராவான்என்னும்புதல்வன், தமிழ்தெரிமதுரை — முத்தமிழையும் ஆராயும்தென்மதுரை.

130 பாண்டியன்மகள் சித்திராங்கதை யென்பவள், ஆம் காணு—கண்டு, மத்தர் — பித்தர், விசயன் — அருச்சுனன், நெஞ்சம்மருளலும்—மனமயங்கலும், கொம்பை — கொம்பு போல்வாளாகிய சித்திராங்கதையை, முறுவல்-பல், வித்தகச்சிலைவல்லான்—அருச்சுனன்,

131 துப்பு—பவழம், தொண்டை—கொவ்வைக்கனி, வெப்பிரவாகுவென்பவன் அருச்சுனனுக்குத்தோன்றியபுதல்வனுகுவன், மைப்புயல்—கரியமேகம், மருவினுன் — வந்தடைந்தான்.

132 முக்கோற்பகவன்—(சந்நியாசி) துறவி, ஒருகுழையொருவன்—பலராமன், ஒப்பில்திருவினை-உவமையில்லாத இலக்குமிபோன்றவளை, அன்னோர்க்கு — அருச்சுனனுகிய துறவிக்கு, ஏவல்—பணி, கருமுகில்—கண்ணன், விழவு—திருநாள்.

133 தடந்தோளான்—பெரியதோள்களையுடையஅருச்சுனன், தழும்பு—வடு, யாரைநீ—எத்தகையினையுடையாய்நீ, விளம்புக—கூறுக, வெய்தாய்—விருப்பமுடன், குமரியாட—குமரிதீர்த்தத்தில்முழுக, குறுகியவிசயன் — வந்துற்றஅருச்சுனன் யான்,

*134* எருத்தம் கழுத்து, கோட்டி....வளைத்து. படர் முலை....சுபத்திரை (ஆகுபெயர்) பூண்-அணிகலன். தோளான் ....அருச்சுனன், பற்ற....பிடிக்க, அவ்வுழி....அவ்விடம்.

*135* ஆறறிபுலவர் .... ஆறங்கங்களையு முணர்ந்த அந்தணர், நன்கு....நன்மை, நாறும்....மணம்வீசும், பிலிற்றும்.... துளிக்கும், சாறு....விழா, ஈசன்—சிவபெருமான், சார்ந்தான் ....அடைந்தான்.

*136* கோற்றொடி.... கங்கவளையலைத்தரித்தசுபத்திரை. தூண்ட....செலுத்த, கடி....காவல், கடிந்து....விலக்கி, அடுதிறல்....கொல்லும்வெற்றி, ஆளரி....சிங்கம், விம்ம....ஒலிப்ப இந்திரப்பிரத்தம்....ஒருநகர்.

*137* புலரி....விடியற்காலை, ஐயன்....கண்ணன், நண்ணி நெருங்கி, உலம்....திரண்டகல், வேட்ப....விரும்ப, கலவம்.... தோகை, முடிப்பித்தான்—முற்றுவித்தான்.

*138* இப்பாடல்வரிசைவழங்கினமை கூறுகின்றது, கச்சம்....ஒருபேரெண், வெள்ளம் கணக்கறுசெம்பொன்— எண்ணிக்கையற்ற நல்ல பொன், நல்கி....கொடுத்து, மீயுயர் மாடம்-மிகமேலேயுயர்ந்த மாளிகை.

*139* எரிமணி .... இரத்தினம், செங்கேழ் .... செவந்த நிறம், விசயன்....விசேடமானவெற்றியுடையவன், வேட்டம்....வேட்டை, அமைந்து....பொருந்தி.

*140* சூல்முதிர்ந்து....கருநிறைவுற்று, வயா.... மகளிர் கருவுற்றஞான்று உண்டாகும்பிணி, பூந்தகடு .... பூவிதழ், விளரி....ஒருவகைப்பண், சுரும்பு...ஆண்வண்டு, தாது....மகரந்தப்பொடி, நீவும்... தடவும், துணர்....கொத்து, பொங்கர் சோலை.

*141* சூரியன் ஈன்ற மகள் யமுனையாறுஎன்ப, துஞ்சும் துயில்கொள்ளும், முயங்குதல்....கூடல், ஒண்டொடி....ஒள்ளியவளையணிந்த பெண் (ஆகுபெயர்)

*142* சுணங்கு...தேமல், வீங்கும்-பருக்கும், கொம்மை —அழகு, தீம்சொல்....இனியமொழி. நோக்கி-பார்த்து, அற —நீங்க, பேரியாழ்-ஓரிசைக்கருவி, தருதி–தருவாய், காளிங்தி —எழுவாய், என்ருள்....பயனிலே.

*143* இப்பாட்டுமுதல் யாழினியல் இயம்பப்பெறுகின்றது, கொன்றை....கொன்றைக்காய், கோடு....கொம்பு, மன்றமுருக்கு .. கலியாணமுருங்கைமரம், கொன்றை, கருங்காலி, முருக்கு, தணக்கு, குமிழ் இம்மரங்கள் பத்தருக்கும் தண்டுக்குமாகும்.

*144* தந்திரி....யாழினுறுப்பு, விக்கல்....கட்டல், விரவி ....கலந்து, பொருவு....உவமை, உரைநூல்வல்லோர்....இசைநூலில் வல்ல சான்ருேர், இசைத்தல்....கூறல்.

*145* குரல்–கதிர், அவியல்–புழுக்கல், பிணியா....கட்டி, திவவு....முறுக்காணி, பெட்பு....விருப்பு, யாழ்மரபு....யாழின் இயல், எடுத்து....சிறப்பித்து.

*146* வழு .... குற்றம், எழுவாய்....முதல், ஈறு....அடி, எறிதல்....தெறித்துவீசுதல், இப்பாடல் யாழ்வாசிக்கு முறை விளக்கப் பெறுகின்றது, உந்தல், உறழ்தல், வார்தல், ஒழுகல் எறிதல், தொடல் இவைநரம்புகளை வீசும்முறையாகும்.

*147* வருடல், உருட்டல், திருகிடல், தெருட்டல், தள்ளல், எழுப்பல் என்பன நரம்புகளைப்பற்றிச்செய்யும் செய்கைகள், விரல்சேடன்....பாம்புவிரல் (நடுவிரல)

*148* நண்ணுமிவைகள் .... பொருந்திய இவைகள், புரிந்திடல்....செய்தல், தானம்....இடம், நனிதிருத்தல் .... நன்ருக மிகவும் திருத்தியமைப்பது, பட்டடை, பரிவட்டணை இவை இசைக்காக வைத்தமைப்பது.

*149* ஆராய்தல், தைவரல் முதலியன யாழினிசை யெழுப்பும் வகைகள் என்பர். ஊழ்....முறை, தைவரல்....தட

வல், அறிந்து—ஓசை போம் வகை தெரிந்து, செலவு—ஒலி போம்வகை, சில—சிலவகை, ஆல்—அசைநிலை,

150 எற்றுநரம்பு — தெறிக்குநரம்பு, குற்றம் — பண்ணில்வருங்குற்றம், இயற்றல்—உண்டாக்கல், யாழ்முனிவன் நாரதமுனிவன், இசைமரபு—ஒருஇசைநூல், முதுக்குறைவு —பேரறிவு, கட்டுரைத்தார் - உறுதிப்படுத்தினர், மேலோர் —சான்றோர்.

151 தாரம் என்னும் இசையில் உழையும், உழையிற் குரலும், குரலில்இளியும், இளியில்துத்தமும், துத்தத்தில் விளரியும், விளரிதனில்கைக்கிளையும், கைக்கிளையில்தாரமும் பிறந்திடும், ஓரும்—ஆராயும், சிறந்து—மேம்பட்டு.

152 ஆண்இசை குரல், தாரம் கைக்கிளை என்பன, பெண்இசை இளி, துத்தம், விளரிஎன்பன. அலி, உழை என்னும் இசையாம், குரல்துத்தம் நான்குநான்கு, மாத்திரையும், விளரி, கைக்கிளை மும்மூன்றுமாத்திரையும், உழைதாரம், இவ்விரண்டு மாத்திரையும்பெறும்.

153 ஏழிசைபிறக்குமிடம் கூறுகின்றது. தலையில்உழையும், மார்பில்இளியும், நெற்றியில்விளரியும், மிடற்றில்குரலும், நாவினில் துத்தமும், அண்ணந்தனில்கைக்கிளையும், மூக்கினில்தாரமும் உதிக்கும், நெடில்ஏழும் ஏழிசைக்கு முரியன.

154 குரல்இசைக்குத்தலைவன் பிரமனும், துத்தத்திற்குச் சிவபெருமானும், கைக்கிளைக்குப் பாரத்துவாசனும், உழைக்கு அரியும், இளிக்குச் செவ்வாயும், விளரிக்குப் பார்க்கவனும் தாரத்திற்குச் சுகனும் ஆவர்.

155 சங்கு, குயில், கார், மயில், யானை, குதிரை, அன்னம், காடை, இவற்றின் ஓசைகள் முறையே குரல், துத்தம் கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் இவற்றின்இசையாம், விஞ்சை—வித்தை.

*156* பரவும்— அனைவராலும்போற்றப்படும், (பாலை.) செம்பாலை, படுபாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை இவற்றிற்கு எட்டும் இருபத்திரண்டும் பன்னிரண்டும், இருபத்தாறும் பண்களாம்.

*157* கொடிப்பாலை, விளரிப்பாலை, செம்பாலை இவற்றிற்குப் பன்னிரண்டும் ஐந்தும், பதினெட்டும் ஆகப்பண்கள் நூற்றுமூன்ருகும், உளரும்—பாடும் (இசைக்கும்) வயங்கும் விளங்கும், நூல்வல்லோர்—இசைப்பெரும்புலவர்.

*153* பாலையாழ், குறிஞ்சியாழ், மருதயாழ், செவ்வழி யாழ், இவற்றிற்குரிய பண்களை இசைநூலிற் காண்க. ஏலும் —இயையும், இயைந்து—பொருந்தி, உறழின்—பெருக்கின் நுவலும்—கூறும், பண்—பண்களாம்,

*159* புரிநரம்பு—முருக்கிணையுடையநரம்பு, புகலும் — கூறும். நான்காநரம்பு—நட்பு, ஐந்தாநரம்பு-சுற்றம், ஆறும் மூன்றும்—பகையாம், யாழ்மரபு—யாழ்நூல்.

*160* இயம்பிய—வகுத்துரைத்த, கன்னல்—கருப்பஞ் சாறு, வழாமல்—தவிராமல், (வழுவாமல்) காமர்—அழகு, அவாய் (அவாவி) விரும்பி. காளி — யமுனையாகியபெண், துடங்கினுள் (தொடங்கினுள்)—துவங்கச்செய்தாள்.

*161* முளிசினை—காய்ந்துளர்ந்தகிளை, தருக்கள்—மரங் கள், பசுமை—பசியதன்மை, அரும்பு — பூவரும்புகள், களி யொடும்—களிப்புடன், ஆசைநோய்—காமப்பிணி, கவற்ற— கவலுறச்செய்ய, மாழாந்து—மயங்கி, வாயில்—சந்து, பார்த் தன்—அருச்சுனன்.

*162* எண்ணம்—நினைவு, கலுழ்ந்து-கலங்கி, இடைந்த —வருந்தின தடவந்து — தடவி, வீக்கினுர் — கட்டினுர், என்று—என்று, அசதியாடி—பரிகாசஞ்செய்து, ஆண்டு— அவ்விடம், அறைந்தான்—கூறினுன்.

163 கமலவீடு....பதுமாசனம், தாக்கணங்கு–இலக்குமி மாதவி....குருக்கத்தி, கனியநின்று .... முதிரப்பெற்று. பேரியாழ்....ஓரிசைக்கருவி, பண்வலை....பண்ணாகியவலை, ஆருயிர் அருமையாகியஉயிர், படுத்தாள்....சிக்கவைத்தாள்.

164 பவளவாய்–செவந்தவாய், காத்து–காவல்செய்து, அலகு....எண், ஐய....ஐயனே! பெண்களின்கண்வலைப்பட்டது அறிவின்மைத்தன்மைப்பட்டது என்றுகூறினான், ஏழைமை....அறிவின்மை, நிரைத்த....வரிசைப்பட்ட, கொப்பளிக்கும்....வீசும்

165 காவி....நீலோற்பலமலர், கருவிளமலர் .... காக்கணம்பூ, மருட்டும்....மருளச்செய்யும், ஓவியர் .... சிற்பிகள், வனப்பும்....அழகும், மேவ....பொருந்த, விளம்பலை — கூறமாட்டாய்.

166 நெஞ்சம்....மார்பகம், வாளுகிர் ... ஒள்ளியகூரியநகம். போழ்ந்த....பிளந்த. மானுடமடங்கல்–நரசிங்கம், நுண்நூல்....நுண்ணியநூல், சிமிழ்ப்புண்ட....கட்டப்பட்ட, காளமாமுகில்....கரியமேகவண்ணனாகிய கண்ணன்.

167 அறல்....கருமணல், தேற்றுமாறு....தெளியுமாறு, செருவினில்–போரில். நிறம்–மார்பு, இரும்புண்–பெரியபுண், வென்றி....வெற்றி, செயல்—செய்கை.

168 காழ்—வயிரம், சாந்து—சந்தனம், கேழ்கிளர்—நிறம்விளங்குகின்ற. மணிவடம்—முத்தமாலை, மாழை—மாவடு, வள்ளல்—கண்ணபிரான், கோட்படல்—சிக்கிக்கொள்ளல், ஊழ்வினை — பழவினை, உப்புறம்—கீழ்ப்படச்செயல், காணவல்லார்—வெற்றியுறச்செய்வார்.

169 நிறை— நெஞ்சைநிறுத்தல், ஊக்கம் — உள்ளக்கிளர்ச்சி, பொறை—பொறையுடைமை, புனித—தூயவனே (கண்ணனே!) சிறை—அணை, தீட்டிய — எழுதிய, அறைகடல்—ஒலிக்குங்கடல், கரைகொன்று—கரையையழித்து,

170 இப்பாடல் இயலிடம் வினவல் என்னுந்துறை, மதுக்குடம்—தேன்குடம், வீழ்—விருப்பம் படியும்—போய் வீழும், புணரியோ....கடலோ, பொற்பு ...அழகு, ஆர்ந்த—நிறைந்த, குலம்—கூட்டம், உமிழும்....சொரியும், ஒழிக்கும்—நீக்கும்.

171 இயலும் இடமும், இதுவெனச் சுட்டுகின்றது. இப்பாடல், முறுவல்-பற்கள், எழில்-அழகு (எழுச்சியுமாம்) இதழ்—உதடு, வீற்றிருத்தல் — தங்கிக்கிடத்தல், கமம்—நிறைவு, மேய (மேவிய) பொருந்திய, கா—சோலை.

172 புயலுறங்கும்-மேகம்படியும், பளிக்கறை—பளிங்கறை, (பளிங்குமண்டபம்) தடங்கணாள்—பெரியகண்களை யுடையவள், மீளும்காறும் — திரும்பிவரும்வரை, அளிக்கு—கருணைக்கு, ஒருபுணரி—ஒப்பற்றஒருகடல்.

173 அண்டகோடி — கோடிஎண்ணிக்கையுடைய பிரமாண்ட முதலிய உலகங்கள், மொண்டுகொண்டு—முகந்து, முகந்து, தண்டலைமருங்கு-சோலையினிடத்து, தனி—தனிமை, விளையாடுங்கொல்லோ-விளையாடுவாளோ, உளர்தல்-ஆரவாரித்தல்.

174 மெழுகி—பூசி, குலிகம்—சாதிலிங்கம், செப்பு—சிமிழ், திருமறுமார்பன்—கண்ணன், செய்யஆரணங்கு—செவ்வந்தநல்லபெண், இவளே—இவளேயாம்.

175 புகாது—நுழையாது, வன்கணர் — கொடியவர், யாருளர்—ஒருவருமிலர், போக்கு-போதல், நெஞ்சம்-மனம் ஒருவழி—ஒருநெறி, போதந்து—வந்து, ஏக்குறல்—ஆசையாற்சூழ்தல், வாக்கினால்—மொழிகளால்.

176 வைகும்—தங்கும், புறங்கொடுக்கும்—தோற்றுப் போகும், இரங்கும்-இசைக்கும், மயிலனாள்—மயில்போன்ற சாயலினையுடையாள், மருங்கு - பக்கம், காளை-காளைபோல் வாளுகிய கண்ணன், திண்ணியன்-திண்மைவாய்ந்தவன்.

177 அஞ்சனம்எழுதி-மைதீட்டி, நஞ்சு-விடம், உள்ள நடுங்கிய — மனநடுக்கமுற்ற, நம்பிஆவி — கண்ணன்உயிர், துஞ்சுதல்—உறங்கல், சுணங்கு—தேமல், அலர்ந்த—விரிந்த, வஞ்சி—வஞ்சிக்கொடி, மருங்குல்—இடை.

178 கண்ணன்அடிகளில் சங்கு, மீனம், சக்கரம், தாமரை, குலிசம் இவற்றின் இரேகைகள்உண்டாம், தோய்ந்த—படிந்த, பரிவு—அன்பு, எளிதின் — எளிமையாக, பொங்கு இளமுலையினளை—தலைவியை, புனத்திடை-பொழிலின்கண்.

179 இளமுறுவல்—புன்சிரிப்பு, அளித்த — கருணை புரிந்த (காவல்செய்த) வல்லி — வல்லிக்கொடிபோல்வாள், அக்கா—அச்சோலை, வரந்தர—வரங்கொடுப்ப, வதிந்தது—தங்கியது, இணர்—பூங்கொத்து, பொதும்பர்—சோலை.

180 பருதி— சூரியன், பொழிமது — சொரியுந்தேன், புயல்வரவு—மேகத்தின்வருகை, தழைசிறை—தழைந்தஇறகுகள், மஞ்ஞை—மயில், தளரும்—சோரும், நிழல்உமிழ்—சந்திரிகையைச்சொரியும், நின்றது—நிலைபெற்றுளது.

181 குமிழ்-குமிழம்பூ (மூக்கினுக்குவமிப்பது) அருத்தி ஆசை, மாந்த—அருந்த, புலவு—புலால்நாற்றம், இமிழ்திரை ஒலிக்கும்பாற்கடல், புலவரோ—தேவரோ!

182 பிழி-தேன் (பிழிந்தெடுக்கப்படுதலின்) தூற்றும் தெரிக்கும், பருமம்—ஒருவகையாபரணம், ஆற்ருது—சமானமாகாது, உடைந்து—வருந்தி, திங்களஞ்செல்வன்_சந்திரன், விளர்ப்பது—வெளுத்துப்போவது.

183 சிந்தூரம்—செவப்புநிறமுடையது, சேயிழை—செவந்த அணிகலன்கள், செல்வி—சூளி, போற்றி— துதித்து (பாராட்டி) மந்தரப் பொருப்பு—மந்தரமலை, தடந்தேர்—பெரியதேர், ஏற்றி—ஏற்றிக்கொண்டு, விண்—சுவர்க்கவுலகு,

184 பரவை—கடல், ஞாலமேழும் — ஏழுலகமும், தருமனை—தருமபுத்திரனை, தாழ்ந்து—வணங்கி, விரிகதிர்—விரிந்தஒளி, கவிழ்க்கும்—கவிழச்செய்யும், வெண்டுகில்—வெள்ளியஆடை, மரு—மணம்.

185 கத்திகை—மாலையின் ஒருவகை, உலூபி, சித்ராங்கனை, சுபத்திரை இவர்கள் மனைவிமார்களாம் (சுபத்திரை — கண்ணன் தங்கை) காளியென்பவள் பேரியாழ் இசைக்கும் நங்கை, வித்தகம்—சதுரப்பாடு.

186 வலம்புரி-உலமாகமுறுக்கியிருப்பது, முரசுயர்த்த தோன்றல்—தருமபுத்திரன், கலம் — அணிகலன், வீங்கும்—பெருக்கும், காளிதன்னை—காளியை, நலம்படும்ஓரை—நல்லமுகூர்த்தம், நன்மணம்—திருமணச்சடங்கு, முடிப்பித்தான்—செய்வித்தான்.

187 பூண்ட—மேற்கொண்ட வரிவில் — கட்டமைந்த வில், தூணி—அம்புப்புட்டில், அழற்கிறை — தீக்கடவுள், வழங்க—கொடுக்க, சேண்—ஆகாயம்.

188 மைத்துனத்தோழர் — காளியின் உடன்பிறந்தோர், துய்த்து—அனுபவித்து, இருதிங்கள்—இரண்டுமாதங்கள், ஆங்குவைகி—அவ்விடத்தே தங்கி, செய்த்தலை—வயலிடத்து, துவரை—துவாரகாபுரி.

189 அன்னமேவிய — அன்னப்புள்தங்கிய, கழனி—வயனிலங்கள் (மருதநிலம்) அவந்தியாளுமரசன்மகார்கள், விந்தன், அநுவிந்தன், மித்திரவிந்தை என்பவர்கள், பன்னகக்கொடி — அரவமெழுதியகொடி, மன்னர்கோன் — இராசாதிராசன்.

190 தவிசு—ஆசனம் (இருக்கை) உறுநசை — பெருவிருப்பு, மால் — காமமயக்கம், வேனிலான் — மன்மதன், வாளி—அம்பு, விள்ளரிது—சொல்லமுடியாது.

191 மானவேல்....பெரியவேற்படை, வதுவை-மணம், சேய் .. குமரன், அடங்க....ஒருசேர, அமர்த்து .... போரினை யேற்று, முடங்கல்....திருமுகஓலை, போக்கினர்....உய்த்தனர், மொய்த்து—நெருங்கி, அவண்—அவ்விடம்.

192 பொதுவொழித்து — பிறர்க்குரிமை யிலாதவாறு செய்து, புரக்கும் — காக்கும், அதிர் — நடுக்கம், எதுகுலத் தொருதீபம்—கண்ணன், சயம்வரம்—சுயம்வரம்.

193 இறும்—ஒடியும், பணைத்து—பருத்து, கொம்மை அழகு, மறு — குற்றம், அணி—ஆபரணம், கைசெயா— (கை செய்து)அலங்கரித்து, வதுவைமண்டபம்—கலியாணமண்டபம், சேர்த்திஞர்—சேர்ப்பித்தார்கள்.

194 முருகுயிர்த்து-மணம்வீசி, நறவுகால்-தேன்துளிக்கும், தன்னோக்கு—தன்பார்வை, பாசிழைக்கொடி—மித்திர விந்தை, அரசவெள்ளப்—வெள்ளமெனும் எண்ணிக்கையுறு மன்னர்கள், அஞ்ச—பயப்பட, அஞ்சனவண்ணன்—கரியஞகிய கண்ணபிரான், ஏற்றினன்— (முற்றெச்சம்) ஏற்றிக் கொண்டு.

195 ஏகல்ஏகல் (அடுக்கு)செல்லற்க செல்லற்க, நாக வெங்கொடியோன்—துரியோதனன், ஆகம்எங்கணும்—உடலிடமுற்றும், வணக்குரு—வளைத்து, ஓகை-(உவகை)மகிழ்வு மருவிஞன்—வந்துற்ருன்,

196 எதுகுலத்துறுமன்னர் — யாதவர்கள் (இடையர் களுக்குக்கூறுவது மரபு) உவப்புற — மகிழ, பதலை—ஒரு முகப்பறை, வெதிர்—மூங்கிலாகிய புள்ளாங்குழல் வதுவை யாற்றி—மணம்புரிந்து புல்லிஞன்—தழுவிஞன்.

197 குரவம் — ஒருவகைமரம் (குராமரம்) ஏந்தி— தாங்கி, நக்கினசித்து — கவுசலதேயமன்னன், எழில்பூத்த —அழகு நிறைந்த சத்தியை — அம்மன்னன் மகளாம், மகிழ்ந்தளித்தான்—உவந்துகொடுத்தான்.

198 கொடியை — கொடிபோல்பவளாகிய சத்தியை நுனை—முனை, கோடு—கொம்புகள் (ஏறு) ஏற்றை—காளை மனம்வலித்தான்—மனவுறுதிகொண்டான்.

199 கொங்கு—மணம், கொம்பர்—கிளை, விடை-காளை தழீஇயினர்—தழுவி, கொள்க—கொள்வார்களாக உணர்த்தினன்—உணர்த்தி (அறிவுறுத்தி)

200 அவிர்—விளங்கும், மார்பம்—மார்பு, இறுத்தார்—வந்துதங்கினார்கள், 'புணர்வான் — திருமணம் செய்துகொள்ளும்படி, தாங்கி—தரித்து.

201 ஞாலம்—உலகு, காலனார்—இயமர்கள் (காலன்) கடுங்கணை—கொடிய அம்பு, துரக்கும்-செலுத்தும், தாலம்—உலகம், விசயன்—அருச்சுனன், தரங்கம்வேலை—திருப்பாற் கடல், விரைவின்—வேகமாக.

202 காழ்—வயிரம், முகில்—மேகம், அகவும்—ஆடும் கவுசலத்திறைவன்—நக்கினசித்து, இருங்கூந்தல் — பெரிய கூந்தல், வதுவைமண்டபம் சயம்வரமண்டபம் (பந்தர்) கொணர்ந்தார்—கொண்டுவந்தார்கள்.

203 விளங்குஇழை—விளங்கும் அணிகலன் தாங்கிய சத்தியைதனை, தாளம்-முத்து, முனிந்து-சினந்து, ஏழுவிடை ஏழுகாளைகள், மாய்ந்தனர் — இறந்துபட்டனர், வெரீஇ—பயந்து, புறங்கொடுத்தார்—புறமுதுகிட்டுப்போயினர்.

204 செங்கண்ஏறு — செவந்தகண்களையுடைய கொல் லேறு, தழுவுதல்—பற்றுதல், நெஞ்சழிந்திடல்—மனமுடைதல், மங்குல்—மேகம், மேனியன்—கண்ணன், ஓர்விடை—ஒப்பற்ற ஒருகாளை, நடந்தான்—நடத்தலைச்செய்தான்.

205 தன்உரு — தன்னுடைய வடிவம், அழுந்துற—தாழ்வுற, வீழ்த்தலும்—கீழேதள்ளலும், திங்கட்கொழுந்து

இளஞ்சந்திரனாகியபிறை, கொணர்ந்த — கொண்டுவந்த, பொன்மாலை—பொன்மயமாகிய தாரினை, திருமாலுக்கு— கண்ணனுக்கு.

206 அன்னகாண்டலும்— அச்செயலினைப்பார்த்தலும் அலங்குஇலைவேல்—விளங்கியசையும் இலைவடிவாகச்செய்யப் பெற்ற வேலாயுதம், சுயோதனன் — துரியோதனன், கார் முகம்— வில், ஒப்பவர் — உவமானமாகவுடையவர்.

207 ஏற்ற—எதிர்த்த. எறுழ்வலி — மிக்கவன்மை, பொருவு—ஒப்பு, கூற்றும் — இயமனும், அஞ்சுற — அச்ச மடைய, குழைத்து — வளைத்து, பாற்றினம் — பருந்தும் கழுகும், பகழிகள்— அம்புகள், ஊற்றிருந்து-பெருக்கெடுத்து.

208 பாம்பணை—சர்ப்பப்படுக்கை, பங்கயம்—தாமரை ஆற்றுது — பொறுக்கமுடியாது, எத்தலத்துறுமன்னரும்— எல்லாநாட்டுஅரசர்களும், இறைஞ்சி—வழிபட்டு, பகல்படு கங்குல்—சூரியன் மறைந்த இரவு, மாநகர்—பெரியபதி.

209 நாமவேல்—அஞ்சத்தகும்வேற்படை, உரவோன் வலியோனாகியவன், கருந்துழாய்முகில் — கண்ணன், உறை தரும் — தங்கும், நீரோடும்—தண்ணீருடன்.

210 அரங்கக்கூத்தியர்—நடனமாதர், கடாம்—மதம், பொரும் - போர்புரியும்பொலிதேர்—விளங்குகின்றதேர்கள், நன்னிதியம்—நற்பொருள்கள், நரந்தம்நாவி-கத்தூரிமிருகம், பரிந்து—விரும்பி.

211 ஆர்வம்—அன்பு (ஆசை), ஏழ்பகல் — ஏழுநாள், அமர்ந்து—விரும்பித்தங்கி, கார்நிறத்தினேன் — கரியவண் ணத்தினையுடையகண்ணன், கடிமதில்-காவலையுடையமதில்.

212 குழவிமதி—இளஞ்சந்திரன், குடுமி—சிகரம், சுத கீர்த்தி— கேகயநாட்டுமன்னன்மனைவி, விழைவு—விருப்பம், மின்னு—மின்னல், கழை—மூங்கில்(குழல்) ஆனின்கணம்— பசுநிரை, குவித்த-ஒன்றுசேர்த்த, (பத்திரைகண்ணனைவிரும் பினுன்)

213 தன்னது (தனது) உயிரின் — உயிரினைப்பார்க்கி லும், சந்தாத்தன் பத்திரையின் தமையன், பொன்னங்குடுமி — பொன்மயமாகியசிகரம், தனிப்போந்து—தனியே வந்து, மன்னும்—நிலைபெற்ற, மாமனுழை — மாமனாகியவசுதேவ னிடத்து.

214 பாதம்வணங்கி — திருவடிகளில்வீழ்ந்துவணங்கி, வசுதேவன்தங்கை சுதகீர்த்தியாவள், உவப்பு—மகிழ்ச்சி, அளிப்பான்—கொடுப்பதற்கு, குறுகினேன்—வந்துற்றேன், அடல்கூர்—வலிமைமிக்க, அவைநேர்ந்தான் — அவற்றிற்கு உடன்பட்டான்.

215 தான்உயிர்த்த — தான்பெற்றெடுத்த, கழறி — இடித்துரைத்து, தானை—சேனை, மருகன் — சந்தாத்தன், மைந்தர்—பலராமனும் கண்ணனும்.

216 அடைந்த—வந்துசேர்ந்த, சிறப்புஅளித்து-முறை யொடும்வரிசைநல்கி, குடங்கை — அகங்கை (உள்ளங்கை) மதர்—செழிப்பு, மடங்கல்—சிங்கம்.

217 மணிச்செப்பு — மணிகள்வைத்திழைக்கப்பட்ட சிமிழ், வடிவேற்கண்ணி—பத்திரை, நளிகடல்—பெரியகடல் சூழ்கிடந்த—சுற்றிலுமுள்ள, கன்னிப்புரிசை—அழிவில்லாத மதில், ஆர்ப்ப—ஆரவாரஞ்செய்ய.

218 மோட்டு எருமை — உயர்ந்த எருமைமாடுகள், கறிக்கும்—மெல்லும், உணா—உணவு, குதட்டி—மென்று, விரைகமழுநீர்—நறுமணம்வீசுங்குவளை. மத்திரநாட்டுமன்னன் விருசேனன் நற்றவத்தால் இலக்கணையைப் பெற்றனன்

219 ஒருகோல்-ஒற்றைச்செங்கோல், ஓச்சி—செலுத்தி சமயக்குறும்பு-சமயமாகிய பகையை, ஆணை (ஆஞ்ஞை) கட் டளை, துவர்—பவழம். காரெதிர்ந்த—கரியமேகத்தைப்போல (எதிர்த்த) கலவம்—தோகை, (கலாபம்)

220 பருகி — குடித்து, சுரும்பர்—வண்டுகள், பருவ முதிர்ச்சி—மங்கைப்பருவமுற்றநிலை, நோக்கி·குறித்து, அவள் தந்தை—இலக்கணையின்தந்தையாகிய விருசேனன் என்பவன், மதிநூல்—அறிவுநூல், தவறு—பிழை.

221 விண்ணின்—ஆகாயத்தின்கண், ஓர்கயலை—ஒருமச்சயந்திரத்தை, திகிரி—சக்கரம், நிழல்—சாயல், விடுகணை—விட்ட அம்பு, எய்து....செலுத்தி, வீழ்த்தோர் — அறுத்தவர், நங்கை-இலக்கணையென்பவள். அறைவித்து—அடித்து,

222 ஓலைப்பொருள் — திருமுகவோலையின் விடயம், செவியுறல்—கேட்டல், கடலின்—கடலினைப்போல, எழா.... ....எழுந்து, குன்றம்—மலை, வேலை—கடல், புவி—பூமி, மத்திரன்...மத்திரநாடாளும்மன்னவன், நகரம்...பதி.

223 வழுவாது....தவிராது, அந்தமறும்-முடிவில்லாத, வான்சிறப்பு--பெரியசிறப்பு, நந்தாவிளக்கு-தூண்டாவிளக்கனைய இலக்கணை, இருநிலம்-பெரியபூமி, மாடந்தனில்-சுயம்வரமண்டபத்தில், கொணர்ந்தார்—கொண்டுவந்தனர்

224 இலக்கு—குறி, ஏந்தற்கு—தாங்கற்கு, அம்பு—பாணம், கோட்டி—பூசி, செம்மாந்து—இறுமாந்து, தனிவனப்பு வாய்ந்த—ஒப்பற்ற தனியழகு பொருந்திய.

225 தண்ணங் கமலம்—குளிர்ச்சி பொருந்திய அழகிய தாமரைப்பூ, தயங்கும்—விளங்கும், வள்ளை—வள்ளைக்கொடி (இதுகாதுகளுக்குவமிக்கப்படும்) எடுத்து—தாங்கி, அகன்று—விலகி, உயிர்த்தார்—மூச்சுவிட்டனர்.

226 தரியார்—பகைவர், எரிதவழ—அக்கினிபற்ற (தீப்பற்ற) வாங்கல்—வளைத்தல், மருவும்—பொருந்தும், தடக்கைமலர்—பெரியகைகளாகியமலர், கன்றி—சிவந்து.

227 உலம்—திரண்டகல், வெய்துயிர்த்தான்—தீமூச்சுவிட்டான், எளிதின்—எளிமையாக. கழியவாங்கி—மிகவும் நன்றாக வளைத்து, புலர்ந்து—வாடி.

223 கண்புதைப்ப—கண்களை மூடிக்கொள்ள, நடவும் — செலுத்தும், வீக்கம் — பெருக்கம், கல்—ஒலிக்குறிப்பு, மகுடம்—முடி, தெறிப்ப—சிதறுண்ண.

229 வில்லிற்கொருவன் விசயன்என்பது உலகர் பழமொழியாம், மண்-பூமி, விசும்பு-விண்ணுலகு, பாதலம்—நாகருலகு, கறங்கும்—சுழலும், இவர்ந்து—ஏறி, பொதுங்க-அற்றுவீழ, ஊழின்வீழ்ந்திலது — பழவினையால்வீழாதாயிற்று.

230 கோபாலன் — பசுக்களைப்பாலனம்புரிந்த கண்ணபிரான், குனித்தல்-வளைத்தல், வாங்கியது-வளைத்தது, வெங்கோல்—கொடியஅம்பு, காணார்—காணாதவராகி, நிலத்தின்.... பூமியில் (விழுந்த,) செயல்—செயலினை, கண்டார்—பலரும் பார்த்தனர்.

231 விண்ணோர் — தேவர், மலர்மாரி — மலர்மழை, வெள்கினார்—வெட்கமுற்றனர், கமலமனைதுறந்தாள்—இலக்குமியாகிய இலக்கணை, புலம்ப-ஒலிப்ப, புனைந்தாள்-சூடினாள்.

232 அலற-ஒலிப்ப, துவைப்ப—ஒலிப்ப, கடலின்—கடலினைப்போல, குரவை-குரவைக்கூத்து, கலிப்ப-சத்திக்க, விரைகொப்பளிக்கும்—வாசனைவீசும், பசுந்துளவோன்—கண்ணபிரான், விளரி — ஒருவகைப்பண், வேட்டு — விரும்பி மணந்து, காம்பு....மூங்கில்,

233 தீம்பால்—இனியபால், கிள்ளை—கிளி (திரிசொல்) காம்பால் — புள்ளாங்குழலால், காயா — காயாம்பூ, (பூவைப்பூ) பாம்பார்கொடியோன்—துரியோதனன், பணியருளி—உத்தரவிட்டு, ஏம்பால்புரியும்—களிப்பினைச்செய்யும்

234 மூசா—மொய்க்காத, மலர்கோதை....மலர்மாலை, சிறப்பு—வரிசை, விடை—உத்தரவு, கரும்பு—கருப்பஞ்சாறு, கோற்றேன்-கொம்புத்தேன், கனி—கொவ்வைக்கனி, கலந்த —ஒன்றுபட்ட, முருந்து-மயிலிறகின்னடி.

235 புயல்போல்—மேகம்போல், மதமாரி—மதமழை, அயிராவணம் (அயிராவதம்) நான்மருப்பி யானை, அமரர்க்கிறைவன்—தேவர்கட்குத் தலைவனாகிய இந்திரன், தும்மிய-நெருங்கிய (நிறைந்த), எயில் — மதில்கள், எய்தினன் — அடைந்தான்.

236 எய்தா முன்—வந்தடைவதற்குள், பிழி—தேன், தூற்றும் — தெளிக்கும், வந்தவை — வந்துற்ற செயலினை, வை—கூர்மை, வயிரப் படை—வச்சிராயுதம்.

237 திருமார்ப—திருவினை மார்பிலுடையவனே! குழை—காதணி, குருமாமணி—நிறம் விளங்குகின்ற மாணிக்கம், வெண்குடை — வெண்கொற்றக் குடை, வவ்வி—பறித்துக் கொண்டு, நடந்தனன்—சென்றனன்

238 என்னுமுன்—என்று சொல்லு முன்னர், இரும்பறவைக்கரசை — கருடனை, முன்னு — முன்னி, (கருதி) முகில் வண்ணன் — கண்ணன், சிறைவிட்டு — இறகுகளைவிட்டுக் கொண்டு, போன்ம் (போலும்) ஒக்கும்.

239 உவணம்—கருடன், பிடரில்-கழுத்தில், கந்து—கட்டுத்தறி, கரிகொன்ற — குவலயாபீடமெனும் யானையினைக் கொன்ற, அண்ணல்—கண்ணன், இவர்ந்தனன்—ஏறினான்.

240 கள்ளூறு—தேன்சுரக்கும், ஊர்தி — வாகனம். பொலியா—பொலிந்து. வெள்ளானை—அயிராவதம், விண்ணவர்கோன்—இந்திரன், நள்ளார்—பகைவர், புரம்—நகர், வாயிலின்—வாயிலினிடத்து.

241 பிலத்திடை—குகையின்வழி, வரை—மலை, கதை—தண்டு, எரி—அக்கினி, நேமீ—சக்கராயுதம், எற்றி—வீசி, முனிந்தனன்—கோபித்தான்.

242 கண்ணபிரான் நீரரணினைக்கெடுத்துக் கொல்லுகின்ற (படைகள்) சேனைகள் சூழ்ந்துள்ள அரணங்கள்கெட

கொடியபாணங்களை விடலாற் மதில்களிடத்து நெருப்புப் பொறி சிதறப் போர்ச்சங்கம் நாதஞ்செய்தது.

243 வரைகொன்று — பறக்கும் மலைகளின் இறகுகளை யரிந்து, வலன்—வெற்றி, உம்பர்பிரான்-கண்ணன், முரனுவி முடித்து—முரனெனுமசுரன்றன் உயிரைப்போக்கி, சிரம்விழ —தலைகள் இற்றுவிழ, வடிக்கணை—கூரியஅம்புகள்.

244 உருமுக்குரல் — இடிபோன்றகுரலோசை, நரகாசுரன்ஏறிச்செல்லும்யானைக்கு ஐந்துமுகங்கள் உண்டுஎன்பர். பொருப்புஉறழும்—மலையையொக்கும், தூய்-தூவி (விடுத்து) வெகுளா-வெகுண்டு (கோபித்து) ஆல்-அசைநிலை.

245 நண்ணும்—எதிர்வந்தடையும், பண்ணும்—அலங்கரிக்கும், வாலதி—வால், துணிய—வெட்ட, திகிரிப்படை—சக்கராயுதம், கட்டது—பறித்தது.

246 சேணுறை-விண்ணுலகில்தங்கும், ஏத்த-துதித்து வாழ்த்த, நீணிலமடந்தை—பூமிதேவி, கவர்ந்த — பற்றின, மகரகுண்டலம் — மகரமீன்வடிவிற் செய்யப்பட்ட குண்டலமெனுமணி, வாள்—ஒளி, அளித்து—கொடுத்து.

247. காய்சினத்துஅவுணன்—நரகாசுரன், இருஞ்சிறை —பெரிய காவற்கூடம், மாயிருஞாலம்—மிகப்பெரிய பூமி, அலர்ந்த—விரிந்த, கலை—ஆடை.

248. நிதிக்குவை—திரவியக்குவியல் (தொகுதி), கடவுட்புரவி—தெய்வீகத்தன்மையுடைய குதிரை, கொடிஞ்சி-தேர்த்தட்டு, பொன்செய் நன்புலவர்—தட்டார், மதிவடிப்பு — சந்திரன் கலைவிளிம்பு (ஓரம்), கடிமதில் — காவலையுடையமதில்கள்

249 தழும்பு—வடு, நிவந்து—உயர்ந்து, இருள்விழுங்கும்—இருளைப் பருகும், வள்ளுகிர்—கூரியநகங்கள், தணிவு அருங்கற்பு — நிறைந்த சீரியகற்பு, விசும்பின் அதிதியை—விண்ணுலகத்திலிருக்கும் அதிதியென்பவளை, ஆய் — அழகு

250. அடிவணங்குமைந்தன்—கண்ணன், சுடர்த்தொடி ஒளிபொருந்திய வளையல், எஞ்ஞான்றும்—எந்நாளும் (எக்காலமும்), அகன்றிடாத—நீங்காத, தெய்வவாசம் - தெய்வத் தன்மையுடைய மணம், அளித்தனள்—கொடுத்து.

251. பொன்னெயில்—பொன்னினாலாகிய மதில்கள், கடிமணம்—நன்மணம், தன்றுரு—தனது வடிவம், உருவாய் —வடிவாகி, அவர்தங்களை—அப்பெண்களை, பிரிந்திடாது— நீங்காமல், அருநலம்—அரியஇன்பம்.

252. ஆலம்—ஆலகாலவிடம், அமுது-தேவாமிருதம், வெங்கூற்று—கொடிய இயமன், வல்லை—வலிமையுடையை, மதர்க்கும் — செழிக்கும் (உருக்குமணிதேவியுடன் கண்ணபிரான் மகுடமும் நற்குலமும் இல்லாத என்னை ஏன் மணந்தனை யென்றான்).

253. உள்ளநடுங்கி-மனநடுக்குற்று, சவி-ஒளி, பொன்றினள்—இறந்துபட்டவள், கையறவு—செயலறல், ஐயன்— கண்ணன், துன்றும்—நெருங்கும். துடையா—துடைத்து. வருந்துஅற....வருந்துதல் (துன்புறல்) நீங்க, வாசநீர்— பனிநீர்.

254. அநங்கநூல்—காமக்கலை, உரையிடும்—பொருள் செய்யும், உளம் சிறிதுணர்ந்து—மனத்தெளிந்து, நோக்கி— பார்த்து (மெய்ம்மைக்கட்மெய்யனே! பரவெளிக்கட் பரவெளியே!) அறிந்திடா-இன்ன தன்மையன் என்றறியப்பெறாத, மையல்—மயக்கம்.

255 அவள்—உருக்குமணி, குறங்கு—தொடை, எழுதருமறை—வேதங்கள், ஆலிலை—ஆலினது பத்திரம், அன்பர் உளம் — அடியவர்மனம், நாரணன்—நாராயணமூர்த்தி மன்றல்—மணம், துறந்து—விட்டுநீங்கி, மன்னவர்மனை— அரசர்மாளிகை.

30-வது அத்தியாயம் முற்றும். ஆக செய்புள் 2032.

## 31-வது கண்ணன் சிவதீக்கைபெற்று நோற்றுச்சாம்பனைப் பெற்ற அத்தியாயம்.

---

1. ஒள்ளிழை — ஒளிபொருந்திய அணிகலன்கள், உருக்குமணியென்பவள் பிரத்யும்மனன் முதல் பத்துப்பிள்ளைகளைப்பெற்றனள் சத்தியபாமையும் பானுவை முதலாப் பதின்மரையும் யீன்றனள்

2 தளிரியல் — தளிர்போன்ற மென்மைத்தன்மை, காளியென்பவள் சுதனைமுதல் பதின்மரையும் மித்திரவிந்தையென்பவள் மிருகனைமுதலாப் பதின்மரையும் பெற்றனர், மீளி—வலி.

3 வேனில்வேள்—காமன், சத்தியையென்பவள் பானு முதலாப்பதின்மரையும், பத்திரை யென்பவள் சங்கரசித்தன் முதல் பத்துப்பிள்ளைகளையும் பெற்றனர்.

4 பானல்—நீலோற்பலம், கடந்த—வென்ற, இலக்கணையென்பவள் கோபன்முதல் பதின்மரையும் பதினாறுயிரத்தொருநூற்றுவரும் தனித்தனிப்பப்பத்துப் பிள்ளைகளையும் பெற்றனர், வயிறுவாய்த்தனர்—பெற்றனர்.

5 விரைகுழல்-மணம் பொருந்திய கூந்தல், சாம்பவதியென்பவள் மைந்தன் இன்றிப்பெருமூச்செறிந்து கண்ணனை வணங்கி அழுதுரைத்தனள், தரைக்கு—பூமிக்கு, பொறை—சுமை, மகவுயிர்த்திருக்கும் தெரிவையர் .... பிள்ளைகளைப் பெற்றிருக்கும்பெண்கள், மலடு— வரடு. ஏச—இகழ்ந்து நிந்திப்ப, தகாது—பொருந்தாது.

6 புரந்து—பாதுகாத்து, ஓர்தையல்—ஒருபெண், கலுழும்—அழும், மின்னிடை-மின்னல்போலும் இடுப்பு. தேற்றி-தெளிவித்து, மெலிந்திடேல்—மெலியாதே "கண்ணன் ஓர் நாள் உபமன்யு என்னும் முனிவர்தாள் வணங்கி, இதனைக் கூறுவான்.

7 புண்டரம் — திரிபுண்டரம் (குழைத்துப் பூசுவது) தவளம்—வெண்மை, பூதி—திருநீறு. கண்டிகை—உருத்திராக்கவடம், புனைந்து — தரித்து, முனிவ! முனிவரே! கார் மிடறு—கரியகண்டம், அண்டர்—தேவர், அரும்பெறல்.... பெறுதற்கரிய.

8 அரில்—பிணக்கு, நோற்று-தவமியற்றி, வெண்டிங்கள் வனைந்திடும் அந்தணன்—சந்திரசேகரனாகிய சிவபெருமான், பிருகுவின்பிள்ளை வெள்ளியென்பவனும், அரிய—அருமையானவை, செஞ்சடைக் கடவுள் — சிவபெருமான். இழைத்து—செய்து.

9 மறிபுனல் — மடங்கிச்செல்லும்நீர், இப்பாடல் தீட்சைநெறிப்புகன்றது. கண்ணனை உபமன்யுமுனிவர் மீனைப்போலப்பார்த்து யாமைபோல மனத்திற்கருதி, பறவைபோல பரிசஞ்செய்து நிந்தையில்லா நின்மலமொழி (மந்திரம்) சொல்லிப் பாசநீக்கி அஞ்செழுத்து மந்திரத்தையுபதேசித்தனர்.

10 புண்டரம் மூன்று—திரிபுண்டரம், பொலிந்திட—விளங்கிட உறழும்-ஒக்கும், வண்டுளவோன் — கண்ணன், வயங்குற—விளங்கிட மாயவனாகிய கண்ணனைத் தூயவனாகிய தொண்டனாக்கினான் எனல் நோக்கற்பாலது,

11 முனிவரன்—உபமன்னியமுனிவன், யார்க்கும்—எத்திறத்தாருக்கும், நண்ணரும் — அடைதற்கரிய, விரதம்—நோன்பு, நானிலம்—பூமண்டலம், வலஞ் செய்து—வலமாக வந்து. கண்ணுதல் தன்னை—நெற்றிவிழிக்கடவுளை.

12. வார்சடை—நீண்டசடை, சீரை—மரவுரி, கருத்து —திருவுள்ளக் கருத்து, ஏர்குடியிருத்தல்—அழகுமிக்கிருத்தல், கவுரி—பார்வதிப் பிராட்டியார்.

13. கண்ணன்முன் இந்திராதி தேவர்களும், பிரமனும் கந்தக் கடவுளும் விநாயகப் பெருமானும் நந்தி முதலிய சிவ கணங்களும் சுற்றிவரத் தன்முன் எழுந்தருளிய சிவபெருமானைக்கண்டனன், புழை—துவாரம், வேழம்-யானை, போத—வர, மௌலி—முடி.

14. பருதியேய்க்கும்—சூரியனையொக்கும். சேண்தவழ்—ஆகாயத்திற் செல்லும், மாண்டகுபன்றி—மாட்சிமைதங்கிய வராகவுரு, கிண்டு—அகழ்ந்து, கண்ணுறுத-காணப்பெற்றிலாத, பொற்றாள்—அழகிய திருவடி.

15. தொழும், அழும், விழும், எழும், இறைஞ்சும் என்பன செய்யுமென்முற்றும். தொழுவான், அழுவான், விழுவான். எழுவான், வணங்குவான் என்னும் பொருள. ஒற்றி—சேர்த்து, குளிர—குளிர்ச்சியுண்டாக, ஈர்ம்மை—குளிர்ச்சி.

16. அடுத்தடுத்து—மேலும் மேலும், ஆய்துளவு—அழகியதிருத்துழாய், நீவி—தடவிக்கொடுத்து, விழைந்தது—விரும்பினது. என் (எவன்) யாது, கடுத்திகழ் மிடற்றோன்—விடம் விளங்கும் கண்டனாகிய இறைவன், விடற்கரும் அன்பு—நீங்காநேசம், சிறுவன்—புதல்வன்.

17 மழகதிர்—இளமையாகியகிரணங்கள், விழைவு—விருப்பம், கேட்டவெல்லாம் — வேண்டிக் கேட்டனவனைத்தும், அளித்தோம் — அருளினோம், குழவிவெண்டிங்கள் — இளஞ்சந்திரன், மிலைச்சிய—சூடின, தாண்மலர்—திருவடிகளாகியமலர், தாழ்ந்தான்—வணங்கினான்.

18 எழுக என—எழுவாயாக என்றுகூற, வண்ணம்—அழகு. தொலைவு இலா—அழிவில்லாத, அணங்கு—அச்சம், அண்ணல்—சிவபெருமான், பிழி — தேன், கணங்கள்—சிவகணங்கள்.

19 விஞ்சை—வித்தை, உரகர்—நாகர் அயில்விழி—வேல் போன்ற கண்கள், அமர்ந்திடும் சூழல்—தங்கியிருக்கும் பக்கம், சேர்ந்தான்—வந்து அடைந்தான்.

20 முருகு—மணம், மைம் முகில்—கரிய மேகம், பண்ணவன்—கண்ணன், பைங்கூந்தல்—தழைத்த கூந்தல், ஒரு பகல்—ஒரு நாள், உவப்பொடும்—களிப்போடும்.

21 கலுழன் — கருடன், அண்ணல்புரிசை — பெரிய சீரிய மதில்கள், அவுணர்சூழ்ந்திருப்ப—அசுரர்கள் சுற்றியிருப்ப, ஆவிமாட்டி — உயிரைமாளும்படிச்செய்து, புண்ணிய நகரம்—துவாரகாபுரி.

22 புயல்—மேகம், பொலிவு—விளக்கம், தாழ்ந்து—வணங்கி, வயம்—வெற்றி, வதிந்தான் — அமர்ந்துளான். (கயிலையின் வதிந்தான் என்று நாரதன் கூறினன்)

23 இருஞ்சிறை — பெரிய இறகுகள், இமைப்பின்—ஓரிமைப் பொழுதில் (நொடி) அரும்பு — முல்லையரும்பு, செவ்வாய்—செவந்த உதடுகள், மருந்து—அமிருதம், வருத்தம் யாவும்-தாங்கள் இல்லாத துயரம் முழுவதும், புனையும்-சூடும்.

24 கேட்டலோடும்—கேள்வியுற்றதும். இளமுறுவல்-புன்சிரிப்பு, கோங்கு—கோங்கிலவு, ஆகுபெயராய் அரும்பினுக்காயது, கலுழன்மேற்கொண்டு — கருடன்மேலேறிக்கொண்டு, ஓங்கும்—உயரும், மாநகரம்—பெரிய பட்டினம்.

25 ஏம்பல் — களிப்புறல், அரையசைத்த—இடுப்பிற் கட்டிய, சாம்பவதியெனும் பெண், சாம்பவன் முதல் பத்துப் பிள்ளைகளைப் பெற்றனள், தகவு—தகுதி.

26 மனைவியர்—பத்தினிமார்கள், பரிவினீன்ற—அன்புடன்பெற்ற, மாந்தி—பருகி, இந்திரதிரு — இந்திரபோகம்

(செல்வம்) இன்புறல்—நலனுறல், அறிவைமூடும் — நல்ல ஞானத்தைமறைக்கும், மாயைசெற்ற-மாயையின்வலியைத் தொலைத்த.

31-வது அத்தியாயம் முற்றிற்று. ஆக திருவிருத்தம் 2058

---

## 32-வது கண்ணன் சிவபூசை பண்ணினது.

1 வந்தமார்க்கண்டன்— துவாரகைபுரிக்குவந்தடைந்த மார்க்கண்டேய முனிவரன், அந்தம்—முடிவு, அந்தணர்க்கு-மறையவர்கட்கு, சந்தநீர்—திருமஞ்சனம், செந்திருமார்பன்—திருமகளைமார்பின்கண்ணுடைய கண்ணபிரான்.

2 தீங்கற-கொடுமை நீங்க, சிவலிங்கபூசை-சிவபூசனை-பாங்கினில்—பக்கலில், பழிப்பு—நிந்தனை, பிரமம்—பெரிய பொருள், உயர்ந்தார்—மேம்பட்டவர், யாவனை—எப்பொருளாயுள்ளானை, இயம்புக—கூறுக.

3 அறியார்-உண்மை உணராதவர், முனிவரன்-மார்க்கண்டேயன், குன்றினால்—கோவர்த்தனகிரியினால், முறுவல்கோட்டி—சிரித்து, கமலத்தோன் — பிரமன், மகிழ்வின் — மகிழ்ச்சியால் பொன்றிடாப் பொருள்—அழியாப் பொருள்.

4 முதலும் நடுவும் ஈறும் இல்லாமல் ஏகமாய்ப், பேரொளியாய் உள்ளது பிரமம், அப்பிரமமே சந்திரசேகர மூர்த்தி, வேதங்களும் அவனையின்னும் நன்கறியமுடியாதென்றால் அறியாமையினையுடைய மனிதர்களா அவன் றன்மையறிய முடியும்.

5 இலிங்கவடிவே சிவபெருமானுகும், அவ்விலிங்கவடிவேயானுகுவன், அவ்விலிங்கமே சந்திரனைக் குறுங்கண்ணியாகத்தரித்தவன், (உரு. அரு. உருவுரு ஆயமூவடிவுகள்) எனப் புலன்களைவென்ற புண்ணிய முனிவர் புகல்வர் என்பதாம், போக்கிடா—செலுத்தாத.

6 அண்டம்—உலகு, அறைந்து—அடிபட்டு, சிந்த-சித றுண்ண, கரத்தால் — தெளிந்த அலைகளாகிய கைகளால், எற்றும்—வீசும், கடலின்—பாற்கடல் நடுவில், சேடன்-ஆதி சேடன், முண்டகம்—தாமரை, முடி—தலை, யோகு—யோகம்.

7 புள்ளுவீழ்ந்து—வண்டுகள் விரும்பி, வெள்ளி மண் டபம்—கயிலாயம், மேய — (மேவிய) விரும்பியிருக்கின்ற. விளங்கிழை கொழுநன்-உமாமகேசுரன், பள்ளநீர்நாப்பண்— கடல் நடுவில், வள்ளல்—பெருமையுடையவன், செருக்கு— கர்வம்.

8 அயின்றும் — உண்டும், ஈன்றும் — தோற்றியும், ஓரடிப்படுத்தும் — ஒருஅடியினால் அளந்தும், காத்தும்— அளித்தும், அண்ணல் — பெருமையுடையவன், பின்னர், மலரயன் உலகினைப்படைத்து அளித்து அழிக்கின்றவன் யானே எனக் கூறினானாக.

9 கமலத்தோனும்—பிரமனும், ஏற்றிகலும் எல்லை— எதிர்த்துப் போர்புரியும்போழ்து, புன்றொழில் — சிறு செயல், புன்மை—இழிதகைமை, தீர்த்து—போக்கி, சுடர்— ஒளி, விரிதழல்—பெருந்தீ. பிழம்பு—வடிவு (தம்பம்) ஓரி லிங்கம் — ஒப்பற்ற இலிங்கோற்பவமூர்த்தி, நின்றது— தோன்றிற்று.

10 மண்டும்—நெருங்கும், வயங்கும்—விளங்கும், பிரம விட்டுணுக்கள் தங்கள்தங்கள் வன்மையால் அடிமுடிகண்ட வரே பெரியவராவர் எனச் சூளுறவுசெய்துகொண்டு பிரமன் அன்னவடிவெடுத்து முடிதேடலாயினன் எகினம்— அன்னப்புள்.

11 அகல்வாய்—பெரியவாய், கோடு — தந்தம் (பல்) மண்முழுது அகழ்ந்து—மண்ணைத்தோண்டி, தாயிற்சிறந்த தயாபரன் தாட்டுணை (அடிகளை) காணாமல் மீளவந்து வணங்கித் துதித்தேன் யான் (கண்ணன்)

12 முடிவிலாப் பொருள் — அந்தமிலா ஆனந்தப் பொருள், அளப்பில் காலம்—எண்ணற்ற வருடங்கள், மெய் தளர்ந்து—உடல் தளர்வுற்று, ஒடிவறும் அன்பு-முரிதலற்ற அன்பு, உவப்பொடும் — மகிழ்வுடன், துதித்தல்—தோத் தரித்தல்.

13 தவிசு—ஆசனம், அண்ணல்—பிரமன், அருமறை முடிவு — உபநிடதம் (வேத சிரசு) கண்ணுதற்சாமி—சிவ பெருமான், தேளித்து—தேன்போலத் தித்தித்து, உவகை பொங்க—களிப்பு மிக, ஈங்கிவை—பின்வருவனவற்றை.

14 முச்சுடர்—சோமன் சூரியன் அக்கினி என்பன, புயம்—தோள், சேவடி — செவந்த பாதங்கள், கச்சை—யானை கழுத்திடு கயிறு, போர்த்து—மறைத்து, கனலும்—அக்கினியை வீசும், முத்தலை—மும்முனை, அயில்வேல்-சூலம்.

15. தோன்றியசுடரை—அங்குக் காணப்பட்ட சோதி யானவனை, சராசரம் — இயங்கியற்பொருள், இயங்காப் பொருள், தந்தை தன்னை—பிதாவை, இறைஞ்சலும்—வழி படலும், புல்லி—தழுவி, ஆன்ற—நிறைந்த, அறையலுற்றான் —கூறத் தொடங்கினான்.

16 சிவபெருமான் இடத்தோளில்—பிரமனும், வலப் புறத்தில் அரியும் உண்டானவராம், மைந்தர்—புதல்வர், மன்னும் — நிலைபெறும், வருந்தலீர் — வருத்தமுறாதீர்கள். அன்னையும் பிதாவுமாய அந்தணன்—தாயும் தந்தையுமாகிய அறவாழியந்தணன்.

17 குன்றவில்—மகாமேருவாகிய வில், குடந்தம்பட்டு —வழிபட்டு, கமல பாதம்—திருவடித் தாமரைகளை, தலை மேற் சேர்த்தி—சிரமேற்றாங்கி, நீங்குதல்—விலகல், பேரன்—மகன் வயிற்றோன்றினவன், பிற்றை எமக்கு என்பது பிற் றெமக்கு என வாயது, இறைவன்—சர்வேசுவரன்.

13 மைந்தர் — பிரமவிட்டுணுக்களாகிய புதல்வர், விழைந்து கேட்ட—விரும்பிக்கேட்ட, அளித்தல்செய்தோம் கொடுத்தோம், வேதன்—பிரமன், சிறுவன்—பிள்ளை, அவதரிக்கும் — தோன்றும், மணிமிடற்றெந்தை—நீலகண்டன், அந்தமுமுதலும் இலிங்கம் — 'ஆதியுமந்தமுமாகி வரும் பெருஞ்சோதி'

19 அன்றுதொட்டு-அற்றைநாள்முதல், இன்றுகாறும் —இற்றைநாள்வரையும், பூசனையாற்றுகிற்போம் — பூசனை புரிகின்றோம், நான்முகன்றந்தை—நாரணன், மன்ற—உறுதியாக, பிறவிநோய்க்கு-பிறவிப்பெரும்பிணிக்கு, நன்றறிமுனிவன்—மார்க்கண்டன்.

20 துயில்வர—அசைய, தயங்கும்—விளங்கும், திண்டோள்—திண்ணியவலியபுயங்கள், மறைகடேரு மண்ணல்—மார்க்கண்டன், உண்மகிழ்ந்து—மனமகிழ்ச்சியுற்று, ஈசன் பாதம்—சிவன்சேவடி.

32-வது அத்தியாயம் முற்றிற்று ஆகச்செய்யுள் 2078.

---

## 33-வது கண்ணன் பூமி பாரந்தீர்த்தது.

1 போசகடம் என்பது ஓர்ஊர் (தேயமுமாம்) உருக்குமன்புதல்வி—சாருமதியாவள், ஆசில்சயம்—குற்றமற்றசயம் வரம், அறைதலும்—அறிவித்தலும், ஆசை—அவா.

2 பீடு—பெருமை, சூடார்—பகைஞர், கடந்த-வெற்றியுற்ற, கேடில்விழுச்சீர் — அழிவில்லாதசீரியபுகழ், மாடம் உடுத்த—மாளிகைகள்சூழ்ந்த.

3 மன்னர்உறையும்—அரசர்கள்வந்துதங்கும், தன்னினர்—தனக்கொப்பு, பொன்னங்கொடி — பொற்கொடிபோல்பவள், இவன்—உருக்குமன், விழைதல்—விரும்பல்.

4 தடந்தேர்—பெரியதேர், போர்—சண்டை, வீரன்—வீரச்செயலுடையவன், விரைமலர்காரோதி—நறுமணமலர் களைத்தரித்தகரிய கூந்தலினையுடையாள்.

5 மணவினை — திருமணச்சடங்கு, கற்புடை—கற்புத் தன்மையினையுடைய, அணியிழை—அழகிய அணிகலன்களை யுடையாள் (அன்மொழித்தொகை) இணை—ஒப்பு.

6 அலங்கல் — தும்பைமாலை (வாகை) வடிவேல்—கூரியவேல், உலங்கெழுதோளாற்கு — திரண்டகற்போல் விளங்கும் தோள்களையுடையவனுக்கு, வேட்ப—மணப்ப, தலம்—பூதலம் (பூமி) தமர்—உறவினர்.

7 ஒருமகள்—ஏகபுத்திரி, அரத்தம் — செவப்பு, என் போன்—எனப்படுபவன், விருப்பொடு—ஆசையொடு, வேட்ட பின்—மணந்தபின், வெள்ளை நிறத்துப் பொருப்பு·பலராமன் சூதுபோர்—சூதாடலாகிய போர்.

8 ஓர்குழை—ஒற்றைக்காதணி, உருக்குமன்றன்னொடு —உருக்குமனுடன், ஆர்வம்—அன்பு, அயர்வுழி—செய்கின்ற விடத்து, பெலபத்திரன்—பலராமன், தோற்றல்—தோல்வி யுறல், எள்ளி—இகழ்ச்சிசெய்து.

9 சிரித்த—சிரித்தலைச்செய்த, சென்னி—தலை, பலகை —சூதாடுபலகை, உரப்பி—கனைத்து. ஆருயிர் உண்ணு—அரிய உயிரையுண்டு, பரித்த - பரிந்துவந்த, பல்லுதிர்த்திட்டான் —பற்களைத் தகர்த்தனன்.

10 அருமணம்முற்றும் — அரியதிருமணம் முடிந்த, துளவப்புயல் (குறிப்பு) கண்ணபிரான், அணவும்—பொருந் தும் (நெருங்கும்) மருவ — பொருந்த கூர்ந்திருந்தான்—மிக்கிருந்தான்.

11 கிளைஞரும்—சுற்றத்தினரும், பொற்புடன்—அழகு டன், மன்னுதோள்—நிலைத்தகைகள். துன்ன அரும்—நெருங் கற்குமுடியாத, கயிலை—கைலை யென்னும் வெள்ளியங்கிரி.

12 கண்ணி—முடிமேற் சூடப்படும் மாலை, செஞ்சடை—கபர்த்தமென்னும் செவந்த சடைகள், பண்ணவன்—சிவ பெருமான், பரவி—துதித்து, ஞாலம்—மண்ணுலகு, அமர்—போர், எந்தை—எமது பிதா, செய்வான்—செய்யும்படி.

13 எறுழ்வலி — மிக்க வன்மை, குன்றவில்அந்தணன் —மகா மேருகிரியை வில்லாகவுடைய பரமேசுரன், குறு நகை—புன்னகை, கோட்டி—செய்து, வெட்டிட — வெட்டி வீழ்த்திட, மலைதி—போர்புரிவாய், மன்ற — உறுதியாக, ஆல்—அசை.

14 செரு—போர், உளம் மகிழ்ந்து-மனக்களிப் புற்று, அன்னவன் — அம்மாறுடன், என்னுழை — என்னிடம், அடைவது—வந்துபொருவது, துவசம் — கொடி, வீழ் போது—அற்றுக் கீழே விழுகின்ற காலத்து, சார்ந்தனன்—அடைந்தான்.

15 வாணாசுரன் பெற்ற பெண் உசை யென்பவள், கள் — தேன், அவள் அநிருத்தனை கனவினில் கண்டு, (மைந்தாள்) கண்ணுறு—கண்ணுற்று.

16 காளை—(உவமையாகு பெயர்) காளைபோல்வானாகிய அநிருத்தன், கவின்—அழகு, அந்தோ-ஐயோ! உண்டது—அருந்தியது, நமரங்காள் — நம்மவர்களே! உய்யேன் —தேறேன், மதுவருந்தி—தேனினைக் குடித்து, குழைந்து—இளகி.

17 கொழுதி—கிண்டி, இனம்—கூட்டம், சில்லோதி—சிவவாகிய கூந்தல், கொம்பர் (கொம்பு) கிளை, பழுது—குற்றம், தூரிகை—எழுதுகோல், மன்னர்—அரசர், முழவு—மத்தளம், எழுதி—வரைந்து, இனைந்து—வருந்தி.

18 செந்தார் — செவந்தகோடு, காம நோய்—விரகம், திறல்வேற் காளை—அநிருத்தன், புல்லினலல்லாது—தழுவினலன்றி, அகலாது — நீங்காது, நொய்தின் — எளிமையாக, கவர்ந்து வந்தார்—பற்றிக்கொண்டு வந்தனர்.

19 அருகுய்த்த — சமீபமாகச் செலுத்தின, வீங்கும்— மிகும், நலம் — இன்பம், நந்தா விளக்கு—தூண்டா மணி விளக்கு, நண்ணுங்காலே—அடைந்தபோது

20 அதனையோரா—உசையும் அநுருத்தனும் கலந்திருப்பதை அறிந்து, வலங்கெழும் மைந்தன்—வெற்றி விளங்கிய அனுருத்தன், வாளமர்—வாட்போர், ஏற்று—எதிர்த்து, பொலங்கொடி — பொற்கொடி போல்பவளாகிய உசை, புலம்பி—அழுது.

21 தேரா — தேர்ந்து, யாழ்முனி — மகதி யாழினையுடைய நாரதன், வாங்கு வில்—வளைந்த வில், மணி நிற வண்ணற்கு—கண்ணபிரானுக்கு, கச்சம்—ஓரெண்.

22 தழும்பு—வடு, மூதூர் — சோணையெனும் பழைய வூர், முற்றுதல்—வளைத்தல். வாணாசுரன் கூபகண்ணன் முதலிய மறவர்புடைசூழவந்து சண்டைசெய்தான். கடாவி — செலுத்தி, வண்ணம்—அழகு.

23 வெய்யகூற்று — கொடியஇயமன், தெழித்து — கனைத்து (உரப்பி) வெள்ளைமேனியோன்-பலராமன், ஆற்றல் —வலி, ஓர்பகழி—ஓர் அம்பு.

24 அம்துகிலின்றி—ஆடையில்லாமல் (நிர்வாணமாகி) புகுதல்—அடைதல், முகுந்தன்—கண்ணன், படையொழிந்திருப்ப—படைகளைவிடாதிருக்க, இவர்ந்து—ஏறி, ஏற்றான் —எதிர்த்தான்.

25 கொடும்சிறை—வளைவுற்றஇறகுகள், பொதிந்து— மூடி, மருமம்—மார்பு, வெய்து—கொடிது, தூண்ட — செலுத்த, அடங்கலர்—பகைஞர், ஆழி—சக்கரம்.

26 எரிகவிழ்க்கும்—அக்கினியைவீசும், கணிச்சி—மழு, ஞாலமுண்டோய்—பூமியினை யுண்டவனே, செருக்கு—இறு

மாப்பு. (கர்வம்) மலையும்—போர்புரியும் ஒழித்து அறுத்தி—நீக்கி ஏனையவற்றினை வெட்டுவாய், பருதி—சக்கரம்.

27 அரிந்த—வெட்டின, ஆடுஅமர்—கொல்லும்போர் இரண்டுகன்றினுக்கிரங்கு மேர்ராவென இறைவன், இருவரையும் போரைவிலக்கியுறவு செய்தான், காலும்-வீசும், அன்பர்—அடியவர் (கண்ணனும் வாணனும்)

28 தொண்டரை—அவ்விருவரை, நறுந்துழாய்—நல்ல துளவம், நாமம்—அச்சம், நீற்றுஒளி—திருநீற்றின்பிரகாசர், வரம்அளித்து—வரங்களைக் கொடுத்து.

29 ஆடகம்—ஒருவகைப்பொன், வாணன் தன்மகள் உசையினை அநிருத்தனுக்குக் கொடுத்துக் கோடிக்கணக்கான பொன்னையுங்கொடுத்து கண்ணனடி போற்ற அவற்றினை யேற்றுக்கொண்டு துவாரகையினை அடைந்தான்.

30 குண்டு—ஆழம், குஞ்சரம்—யானை, குழக்கன்று—இளமையானகுட்டி, உலகங்காப்போன்—ஓரரசன், திண்டிறல்கை—மிக்கவலிமையுடையகைகள், அவ்வுருதிரிந்து—அவ்வோந்திவடிவுமாறி, அண்டர்கோன்—இந்திரன்.

31 யாரைநீ—நீயார்? நிருபன்—அரசன், அளப்பில்பெற்றம் — எண்ணற்றபசுக்கள், மறையோர் — அந்தணர், சேதா—செம்மையானபசு, ஊர்வயின்-நகரினிடத்து, உணர்கலாது—அறியாது, ஆர்வம்—அன்பு, அளித்திட்டேன் — கொடுத்தேன்.

32 ஆய—அத்தன்மைய, பாவந்தன்னால் — தீச்செயலால், ஓந்தியாயமர்ந்தேன்—ஓந்தியாகப்போயினேன், சேயதாமரை — செந்தாமரை, தீண்டப்பெற்றதால் — பரிசிக்கப்பெற்றதால், வினைகள்தீர்ந்து — பாவங்கள்விலகி, விண்ணவன்—தேவன், வானநாடு—சுவர்க்கம்.

33 ஒருவன் — பலராமன், ஒல்லை—விரைவு, வாருணி —கள், ஆட— ஆடலைப்புரிய (நீராட) அழைத்தல் — கூப்பி டல், இழுத்தான்—பற்றியிழுத்தலைச் செய்தான்

34 வெருவொடும்—அச்சத்தோடும், வலித்திடேல்— கட்டியிழுக்காதே, விடுதி—விடுவாய், பரிவொடு—அன்புடன், பாதம்போற்ற—அடிதொழ, வாங்காது-விடாது, தொழுநை —யமுநை, கருத்துழி—எண்ணப்படி, ஒழுகிற்று—நடந்தது.

35 ஆயர்பாவையர்—கோவியர், தோய்தல்—மூழ்கல், நீல்நிறத்துகில்—நீலவண்ணமுடையஆடை, வேனில்வேள்— கருநிறமுடையவன், அளித்தது—கொடுத்தது,

36 பாவடி — பரவியஅடி, பருமம் — யானைகழுத்திடு கயிறு, பவுண்டரவாசுதேவன் என்பவன் பஞ்சாயுதமேந்தி ஏவருமயங்க, மார்பில்மறுவொன்றுதீட்டி (மருள—மயங்க)

87 எந்திரக்கருடனில்ஏறி கொடியொன்றுயர்த்தி காசி மன்னனுடன் நட்புரிமைகொண்டு யானே திருமால்என்னக் கூறி போருக்குவருகவெனக் கண்ணனுக்குத் தூதுவிட்டனன் (நட்டு -- நட்புபூண்டு)

33 மாற்றம்—மொழிகளை, மாதவன்—கண்ணபிரான், கலுழன்ஊர்ந்து—கருடவூர்தியில்ஊர்ந்து, மேதகுமவுலி— மேன்மைபொருந்தியமுடி, நேமிப்படை—சக்கராயுதம்.

39 பண்ணமை—அலங்கரிக்கப்பட்ட, அண்ணல்—கண் ணன், இறந்தஆற்றால்—இறந்தபடியினால், கண்ணனதுருவம் — திருமாலின்வடிவம் (சாரூபம்) சுவேதத்தீவின்கண் தேவர் வணங்கித்துதிப்ப வீற்றிருந்து இன்பநுகர்ந்தான்.

40 கூற்று — இயமன், உரும்—இடி, பெயர்க்கும் — பிடுங்கும், ஊழி—யுகாந்தம், அமரின்—போரின், வேந்தை— அரசை, தடிந்து — வெட்டிக்கொன்று, முற்று — முடித்து, புக்கான்....போய்ச்சேர்ந்தான்.

41 வாரணவாசி—காசியம்பதி, செகுப்பான் — கொல் லும்படி, பரன் — பரமேசுரன், மரணம் — இறக்கும்படிச் செய்யும்செய்கை. (ஆபிசாரவேள்வி)

42 அழல்உமிழ்-தீயினைக்கக்கும், பேழ்வாய்—பிளந்த வாய், பூதமொன்று—ஒருபூதம், மழவிடை — இளமையான காளை, அடியார்மேல் — தொண்டரிடத்து, தூண்டில்— செலுத்தினல், ஆவிதுய்க்கும்—உயிரையருந்தும், நிகழ்த்தி னன்—நிகழ்த்தி (முற்றெச்சம்).

43 குறுத்தாள்-குறுகியஅடிகள், கோறி-கொல்வாய், கடிதின்-விரைவின், அண்ணல்—கண்ணன், ஏல்வை-சமயம், முன்னின்றது—முன்நிற்கின்றது.

44 வாள்எயிறு—ஒள்ளியபற்கள், நெஞ்சழிய — மன மடிய, நேமிவிடுத்தலும்—சக்கரத்தைச்செலுத்தலும், வேந்த —அரசே, சிவன்சேவடிக்கன்புசெய்யும் தொண்டரிடத்து என்னை விடுத்தது எதன்பொருட்டுஎன்று அவன்உயிரைப் போக்கியது.

45 வான்படர்ந்து—ஆகாயவழியாகச்சென்று, கோறல் —கொல்லுதல், ஒளிறுநேமி—பிரகாசம்பொருந்தியசக்கரம், ஒல்லைமீண்டு—விரைந்துதிரும்பி.

46 பலராமன் வெந்துவிதன் என்னும் வானரவீரனைப் போரில் தலையினைவெட்டி கருமுகில்வண்ணனைக் காண்பான் கடிதினில் துவரையினை அடைந்தான்.

47 பழம்தழும்பு — பழையவடு, சுயோதனன் — துரி யோதனன், துவர்ப்ப—துவர்த்தலையடைய, கயல்கண்ணி— மீன்போற்பிறழுங் கண்களையுடையவள்.

48 காம்பு-அடுதோளி — மூங்கிலைவென்ற தோள்களை யுடையவள், செவ்வி—அழகு, மாழ்கி—மயங்கி, நள்ளிருள்- நடுஇரவு, தனிச்சென்றெய்தி... தனித்துச்சென்று, யாழோர் கூட்டம் — கந்தருவப்புணர்ச்சி, கரந்தனன்—மறைந்து.

49 வெம்பி—வாடி, ஆடல்—வெற்றி, காங்கயன்—வீடுமன் தூண்டி—செலுத்தி, புலிவளைந்தென்ன—புலியினை வளைத்துக்கொண்டாற்போல, கணைமாரி—அம்புமழை.

50 வெம்பகழி—கொடிய அம்புகள், பிறைமுகக்கணை—அர்த்தசந்திரபாணம், துணித்து-துண்டு துண்டாகச் செய்து, தூணி—அம்புப்புட்டில், எறும்—வன்மை.

51 ஆடுஅமர்க்கு—வெற்றிப்போர்க்கு, ஓசை — புகழ், சாம்பன்—கண்ணன் புதல்வன், கூடலர்—பகைஞர், மாய்த்தான் — அழித்தான், பீடு — பெருமை, பாசம் — கயிறு.

52 யாப்புறுத்து—கட்டி, வன்சிறை — வலியகாவற்கூடம், வெகுளலும் — கோபித்தலும், ஒழிதி — ஒழிவாய், மீட்குவன்—மீட்டு வருவேன்.

53 பானிறப் படிவத்தண்ணல்—பால்போல் வெளுத்த மேனியனாகிய பலராமன், தானை —படை (சேனை), மேவி—பொருந்தி (தங்கி), விடுக்கிலீரேல்—விடுக்காமற் போனால், ஊனம் — இழுக்கு, மற்று — அசை நிலை, உக்கிரசேனன்—தூதுவன்.

54 அரவுயிர்த்திட்ட — அரவம் எழுதிய கொடியினையுயர்த்திய, மன்னவர்க்கு-துரியோதனனுக்கு, மறுத்தமை—முடியாதென்றமை, கன்னரி — அழிவின்மை, மூதூர் —அத்தினபுரி.

55 அலத்தினல்—கலப்பையினல், வாங்கல் — இழுத்தல், கவிகை — குடை, தத்துற — துன்புற, வெளவும் —பற்றும், வித்தகன்—பலராமன், விரை—மணம்.

56 உள்ளமுவந்திட — மனங்களிப்ப, முருகவிழ்தாரினன்—நறுமணம் வீசும் மாலையினையுடையவனுக்கு, சான்று—சாட்சி, நல்கி — கொடுத்து, அளப்பரும் — எண்ணற்ற, சிறப்பு செய்ய — வரிசைகள்செய்ய, பரிவுறும்—அன்புறும்.

57 எண்ணிரண்டாயிரம் — பதினாறாயிரம், இன்புற— நலனுற, நண்ணுதல்—அடைதல், கண்ணுற நோக்க—கண்களால் நன்றாகப் பார்க்க, கடல் வண்ணன்—கரிய கண்ணன், வதிதல்—பொருந்தியிருத்தல்.

58 இறும்பூது — வியப்பு, புனத்துழாய் மார்பன் — கண்ணன், போற்றுறு — போற்றி, கனைத்து — ஒலித்து, கற்பக அடவி—கற்பகக் காடு, நறைகமழ்—வாசனை வீசும்.

59 திருந்தலர் — பகைவர், தீதுற — துன்பமடைய, யாவரும்—அனைவரும், வல்லி—விலங்கு, புரந்தருள்வாய்—காப்பாற்றுவாய், தூது போக்கினார்-தூதுவரையனுப்பினார்.

60 சொன்ன யாவையும் — மொழிந்த அனைத்தும், மாதவன்—கண்ணன், நாதம் — ஒலி (இசை), நன்மகம்—இராசசூய வேள்வி, செப்பினான்—கூறினான்.

61 ஓலை — திருமுகம், காண்க — காண்பானாக, வல் விரைந்து—மிக விரைந்து, புரிகுவன்—செய்வேன், உரிமை —சம்பந்தம் (கிழமை), கிளை—சுற்றம்.

62 பொறித்திடும் — வரைந்த, முடங்கல்—நிருபம், ஏடு—இதழ், வணங்க—வழிபட, குன்றனான்—மலைபோன்றவன், குளித்திட்டான்—மூழ்கினான், அரோ—அசை.

63 ஆறு அறி அமைச்சர்—சிக்கை, கற்பம் முதலிய ஆறங்கங்களையும் அறிந்த மந்திரிகள், வேறிருந்து—தனியே இருந்து, ஊறு — துன்பம், மிடைய — நெருங்க, ஒக்கல்—சுற்றம், இந்திரப்பிரத்தம் — மயனால் நிருமாணிக்கப்பட்ட தருமன் நகரம்.

64 திறல் .. ஆற்றல், தம்பிமாரொடும்....வீமன் அருச்சுனன் நகுலன் சகாதேவன் ஆயவரொடும், கருமுகில்தனை.... கண்ணனை, பூசனை....பூசைகள், ஆற்றி .... செய்து அளவாளாய்....கலந்து.

65 ஆற்றரும்—செயற்கரிய, ஆற்றுவான் — செய்யும்படி, புரிசை — மதில்கள், கிரிவிரசம்—சராசந்தன் வாழும் பட்டினம், மாற்றலர்—பகைவர், செகுத்தல் — கொன்று வென்றிடல்.

66 இசைத்தலும்—கூறலும், வாங்கு வில்—வளைந்த காண்டீபமெனும் வில், விசயன்—அருச்சுனன் வல்லே—விரைவாக, ஆங்கு—அவ்விடம், விடுத்தி—விடுப்பாய், அரும்பகை முடிப்பேம்—அரிய பகையினை யொழிப்பேம், பூங்கழல் அரசன்—அழகிய வீரக்கழலினைத் தரித்த தருமபுத்திரன்.

67 கடகரி—மதம்பொழியும்யானை, கடிதின்ஏகி-விரைவிற்சென்று, கோநகர்—கிரிவிரசநகர், முடிகெழுவேந்தன்—சராசந்தன், மொய்யமர்—நெருங்கியபோர். அடையலர்பரவும் — பகைவர்பணிந்துபோற்றும், அறிந்து — ஆராய்ந்துணர்ந்து.

68 அந்தணர்—மறையவர், சிறியன்-ஆண்டிலிளைஞன், நந்தகோன்சிறுவன் — நந்தகோபன்புதல்வனாகிய கண்ணன், பல்கால்—பல தடவை, தோற்றவன் — தோல்வியுற்றவன், நாமம்—அச்சம், கந்து—கட்டுத்தறி, எதிர்ப்படுக—எதிர்க்க

69 களத்தின்—போர்புரியுமிடத்தின்கண், பொருவது போர்புரிவது, சீறி—கோபித்து, புயவலி—தோள்வலி, மூவைந்துவைகல் — பதினைந்துநாள், கங்குலும் — இரவும், உடன்று—மாறுபட்டு, பூசல்—சண்டை.

70 காண—பார்க்க, மண்ணமை—மார்ச்சனையமைந்த, முழவு—மத்தளம், மணி—நீலமணி, நேரேகிழித்தலும்—நேராகப் பிளத்தலும், நாடி—ஆய்ந்து, பாரின்வீழ்த்தான்—பூமியிற்றள்ளினன்.

71 தாப்புலி — வலியவேங்கை, குறங்கு— தொடை, பற்றி—பிடித்து, இருகூறு-இருபிளப்பு (பகுதி) பாப்பணை-

பாம்புப் படுக்கை, குருசில்-கண்ணன், கிழித்து-இருகூறாக்கி, உயிர்படுத்திட்டான்—உயிரைப்போக்கினான்.

72 சராசந்தன் புதல்வனுக்குமுடிசூட்டி, அவன்சிறையிலிட்ட மன்னரை விடுவித்து அரசர்களோடும் அவ்வேந்தன் பெற்ற பிள்ளைகளோடும் அழகிய பெரியதேரில் ஏறி இந்திரப்பிரத்த நகரத்தையடைந்தான் கண்ணன்.

73 அறைகழல்—ஒலிக்கின்ற வீரக் கழல், அவனி—பூமி, வேந்தன்—தருமபுத்திரன், அவையினில்—சபையினிடத்து, திறை—கப்பம், மறை பயில்—வேதங்களிற் கூறப்பட்ட.

74 ஆடவர்—வீரர், நோன்றாள்—வலிய அடிகள், வழுதியர்—பாண்டியர்கள், நீடு இரும்புவி—நெடிய பெரிய பூமி, வேந்தர் யாவரும்—அரசர்கள் எல்லாரும்

75 எல்படு பருதி—ஒளி வீசும் சூரியன், வீடுமன்—பாட்டனாகிய வீடுமன், முற்பட—முதலாவதாக, புரிவது—செய்வது, ஓத—கேட்ப, நிவந்த—உயர்ந்த, ஆற்றுக—செய்க, மல்—(வளம்) போர், தோளான் — தோள்களையுடைய தருமன்.

76 ஆற்றிய பூசை—முதலாவதாகச் செய்த பூசை, சீறி—வெகுண்டு, ஏற்றினம்—பசுநிரைகள், இடையன் நீ—நீ இடையர் குலத்தினைச் சேர்ந்தவன், மறாதது-மறுக்காதது, தீஞ்சொல்—தீயும்படிச் செய்யும் கடுஞ் சொல்.

77 முடி—தலை, தோன்ற—பிறப்ப, எடுப்ப—தொட்டுத் தூக்க, இன்னோன்—இவன், திரிந்து—மாறி, ஈன்றவள்—தாயானவள், வெஞ்சொல் — வைவு, இசைத்த—கூறிய, தகவொடும்—தகுதியொடும், பொறுத்தேன் — பொறுத்துக் கொண்டேன்.

78 தாருகன் — தேர்ச்சாரதி, நடவும் — செலுத்தும், அறைகூவல்—அழைத்தல், கார்முகம்-வில், வாங்கி-வளைத்து வடவை—வடவாமுகாக்கினி, சேரலர்—பகைவர், சேதிபன் —சேதி நாட்டரசனாகிய சிசுபாலன்.

79 தகையன்—தன்மையன், ஏற்றுரி முரசம்—காளைத் தோலாலாகிய போர்முரசம், ஆர்ப்ப — ஒலிப்ப, அசனி— இடியேறு, கனைகடல் — ஒலிக்குங்கடல், கொடுங்கணை — கொடிய அம்புகள், தூவினான்—வாரியிறைத்தான். (இவன் சிசுபாலன்)

80 கடலந்தானை -- சமுத்திரம் போன்றசேனை, நூழி லாட்டி—கொன்றுகுவித்து, பிழம்பு—தொகுதி, தூண்டி— செலுத்தி, சென்னிதன்னை—முடியினை.

81 முற்பவம்—முன்னைப்பிறவி, பிற்பவம்—பின்னைப் பிறப்பு, அற்புடன்—அன்புடன், சோதிவெற்பு — ஒளிமலை, மலரடி—மலர்போன்றஅடிகளில், மேவிற்று-பொருந்திற்று அன்று ஏ அசைநிலைகள்.

82 விரைமலர் — நறுமணமலர் (களை) தூவி—அருச் சித்து, ஆர்ப்ப—ஆரவாரஞ்செய்ய, வேய்இசைக்கும் — புள் ளாங்குழலைவாசிக்கும், துயல்வரும்—அசையும், நல்வேள்வி — இராசசூயயாகம், முற்ற—நிறைவுற

83 பகழி—பாணம், வந்தெய்தி—வந்தடைந்து, சாலு வன்—ஓரசுரன், அணைந்து—வந்துற்று, செருக்களம்-போர்க் களம், உழக்கி-கலக்கி, வெகுண்டு-கோபமுற்று, கொணர்தி கொண்டுவருவாய்.

84 தாருகன்-கண்ணன்தேர்செலுத்துபவன், இவர்ந்து —ஏறி, அடல்ஆழி—வெற்றியுற்றசக்கரம், ஆர்கலி—கடல், நடுவண்—மத்தி (யில்) சவுடம்—தேர் (விமானம்) அடற் கரும்—கொல்லமுடியாத, வெய்தின்—விரைவினில்.

85 பாண்டவர் சகாயன் — பாண்டுவின் புதல்வர்கட்குதவிபுரியும்கண்ணன், பணைப்புயம் — பருத்ததோள்கள், எறிந்து—வீசி, நக்கான்—சிரித்தான், மாண்டகுவரிவில்—மாட்சிமைப்பட்ட கட்டமைந்தவில், அவுணர் கோன்—இராக்கதர்மன்னன் (சாலுவன்) கன்னப்படை-சக்கராயுதம்தொலைத்திட்டான்—அழித்தான்.

86 மல்—மற்போர், மாய்த்த—கொன்ற, வில்லினால்—விற்போரினால், வெலற்கு அரிது — வெல்லுதல் கூடாது, கல்லினால்—மலையினால், கலவை—சந்தனம், அல்லல்கூர்—துன்பமிக்க, அமைத்தல்—உண்டாக்கல்.

87 ஆற்றல்சால் — வலிமை மிகுந்த, மானவேல் — பெருமையமைந்த வேல், மாழ்குற — மயங்க, தானவன் (அசுரன்) சாலுவன், தடிந்திட்டான்—வெட்டினான், அசோ—அசை நிலை, நேமியோன்—கண்ணபிரான்.

88 மாயனும்—மாயையினையே செய்யும் கண்ணபிரானும், (உம்மை உயர்வு சிறப்பு) சவுடம்—விமானம், இற்று—ஒடிந்து, வடவை—வடக்கின் கண் உள்ள அக்கினி, ஆய்கதிர்—அழகிய ஒளி, அழன்று—கொதித்து.

89 தொலைவில் சாலுவன் — அழிவில்லா வன்மையானகிய சாலுவன், இயங்குமானம்—யாண்டுஞ் செல்லும் விமானம், ஈண்டிய கிளை—நெருங்கிய (கூடிய) சுற்றம், இமைப்பு—இமைப்பொழுது, சிந்துற—சிதறுமாறு செய்து, மீண்டது—திரும்பிற்று.

90 மாதவன்—கண்ணன், செகுத்து — கொன்றிட்டு, போதரு நெறி—வருகின்ற வழி, பூசல்—ஒலி, பசுந் தொடை—வளம்அமைந்த மாலை, காதி—கோபித்து, சிலையுமிழ் கணைகள் — வில்லினின்று சொரியப்படும் அம்புகள், தூவினான்—வாரியிறைத்தான்.

91 தரையில்—பூமியினிடத்து, வீழ்தர-கீழே விழுந்து மடிய, கார்முகில்—கரிய மேகம் போலும் கண்ணன், கதை—

கதாயுதம், கலினம்—கடிவாளம், மாட்டினன்—மாறுமாறு செய்தான்.

92 வம்பவிழ்—வாசனைவீசுகின்ற, அலங்கல்—மாலை, விடூரதன்—தந்த வக்கிரன் தம்பியாவன், சமரின் — போரின் கண், கம்பம் — கட்டுத்தறி, கார்முகம்—வில், அவன்றலை — விடூரதன்தலை. அறுத்துவிழ்த்தினன் — துண்டாடித் தொலைத்தான்.

93 சங்கொடு சக்கரம்-பாஞ்சன்னியமும் சுதர்சனமும், தரித்த கொண்டல்-தாங்கிய கொண்டல் போலும் கண்ணன், முகத்தை — முகமாகிய சந்திரனை, ஆம்பல் — வெள்ளாம் பலும் சேதாம்பலும், பொங்கர்—சோலை, துவரை—நகரம்.

94 பூண்ட — மேற்கொண்ட, வெஞ்சமர் — கொடும் போர், வரிவில்—கட்டமைத்தவில், மான்றேர்தூண்டுவன்—குதிரைகள்பூட்டப்பட்டதேரினைச்செலுத்துவன் (பார்த்தசாரதியாவேன்) தூய்து—தூய்மையுடையது (புனிதமாவது)

95 போதருநெறி—செல்லுகின்றவழி, சூதமுனிவரன்—வியாசர்மாணவராகியசூதன் என்னும்நாமமுடைய இருடி, மாதவர் — பெருநோன்புடையவர், ஓதும்எல்வை — புராணச் சொற்பொழிவாற்றிக் கொண்டிருக்கும்பொழுது, தீதுறுவெகுளித்தீ—சாபமாகியஅக்கினியால் (சுடுசொல்லால்) ஏதம்—துன்பம், பிரமகத்தி—பிராமணனைக்கொன்றபாவம்.

96 பற்றியபாவம்—பிரமகத்தி, பணியால்—கட்டளையினால், அவன்—சூதன், சூதனுய் வைத்து—சூதபுராணிகராகவே வைத்து, கங்கை முதல் குமரி வரையிலுள்ள தீர்த்தங்களைப் பலராமன் ஆடினுன் என்க.

97 கூற்றம் — இயமன், அந்தணராவி — மறையவர் உயிர்கள், வலன் என்பவனை பலராமன் கலப்பைப் படையில் வலிதிற் பற்றி விரைவில் கொன்றிட்டான்.

98 விடுமன்முதலாவுள்ளவேந்தர்—வீடுமன், கன்னன், துரியன், துரோணன் முதலானோர். ஆடமர் — வெற்றிப் போர், வீட்டி—கொன்று, ஈரொன்பானாள்-பதினெட்டுநாள், பீடுசால்—பெருமைநிறைந்த, மன்னர்மன்னன் — இராசாதி ராசன், அலாயுதன்—கலப்பையாயுதமுடையவனாகிய பலராமன், இமைப்பின்—இமைப்பொழுதின்கண்.

99 அரவுயர்க்கொடியோன்—சர்ப்பமெழுதிய கொடியினையுடையவனாகிய துரியோதனன், தகர்ந்திட—சிதறுண்டு போக, உரும் — இடியேறு, சீறி—கோபித்து, நோனாது—பொறுக்காது, எரியெழ-அக்கினியுண்டாக, உயர் வெகுளி—மிக்க கோபம், மாற்ற—தணிக்க, அவன்—பலராமன்.

100 பாரதம் முடித்து — பாரதப்போரினை முற்றுவித்து, புவியுறு பாரம்—பூமியின் சுமை, வார்முரசுயர்த்த—முரசு எழுதிய கொடியினை யுயர்த்திய, மவுலி முடி, நேரலர்—பகைவர்கள், பணிந்து போற்ற—வணங்கித் துதிக்க, ஆர் கலியுலகம் — கடலாற்சூழப்பட்ட பூமி, அவனடிப்படுத்தினான்—அவன்கீழ் ஆளும்படிச் செய்தான்.

101 அச்சுவமேதம்—அசுவமேத யாகம், இனிதினில்—இனிமையாக, ஆற்றுவித்து—முடித்து, முழவு-மத்தளம், பச்சைமால்—பச்சை நிறம் பொருந்திய கண்ணன், பரிவின் — அன்புடன், வீற்றிருந்தான் — எழுந்தருளியிருந்தான் அன்றே—அசை.

102 கண்ணனை—பார்த்தசாரதியை, விழைவிற் காண்பான்—விருப்பமுடன் காணும்படி, குசலமா முனிவன்—குசேல முனிவரன், தருப்பணம் உதவ—அவல் முதலியன கொடுப்ப, நசையின் — விருப்பின், நயத்தல் — விரும்புதல், வசை—நிந்தை, மலர்மகள்—இலக்குமிபிராட்டியார், விலக்கினாள்—தடுத்தாள்.

103 அளவளாய்—கலந்த அன்புடன் உரையாடி, அந்தணன்—குசேலமுனிவன், ஐயன்—கண்ணன், உளமகிழ்ந்து—மனம் மகிழ்ந்து, விடை நல்க—உத்தரவு கொடுக்க, ஒல்லே—விரைவு, தனர்வுறும் வினை—தீவினை, ஒன்றும்—சிறிதும், களைகண்—ஆதரவு (பற்று), கலுழ்ந்து—கலங்கி.

104 மதியங்கடு—சந்திர மண்டலம், ததைமலர் செல்வி—நெருங்கிய இதழ்களையுடைய மலரிற்றங்கும் இலக்குமி, தன் மனையாட்டி—சுசீலை, அளகைமூதூர் — குபேரன்பட்டினம், புரந்தருள்—பாதுகாவல் புரியும், இயக்கர் வேந்தன்—குபேரன், நிதி—சங்க நிதி, பதும நிதி, வளன்—வளப்பம்.

105 காண்டலும்—பார்த்தலும், அன்பு பூண்டிடும்—அன்பினையே மேற்கொளும், இந்திரதிருவன் — இந்திரச் செல்வமுடையவனுகி, மாண்டகுமறையோன்—மாட்சிமைப் பட்ட வேதங்களை யறிந்த குசேலன், மகிழ்ந்து—களித்து.

106 பருதியஞ் செல்வன்—சூரியன், பாரந்தள்—கேதுவாகிய பாம்பு. (கோள்) வாய்ப்படுத்துங் காலம் — பற்றி விழுங்குங் காலம் (கிரகண புண்ணிய காலம்) சிமந்தகமடு—ஓர்புண்ணியதீர்த்தம், நல்வேள்வி—நல்லயாகம்.

107 முருகுறழ்தோற்றம் — முருகனையொத்தமொய்ம்புடையகாட்சி, ஐவர்—பாண்டவர், கரும்புறழ் — கரும்பினையொத்த, அரிவையர்—பெண்கள், சாலை—ஆச்சிரமம்.

108 கலவமாமஞ்ஞை—தோகைகளையுடையநீல்மயில், தழீஇ—தழுவி, மோதலும்—முட்டுதலும், இலகு—விளங்குகின்ற, இறைஞ்சி—வணங்கி.

109 முகமன்—இன்னுரை (உபசாரமொழி) சிலபகல்—சிலநாள், வெளிறு — வெள்ளையறிவு, அவனி — பூமி, போனர்—சென்றார், நளிர்கடல்—குளிர்ச்சிபொருந்தியகடல்.

110 மூன்றுதிங்கள்—மூன்றுமாதங்கள், நண்ணுசீர்—அடைந்தபெரும்புகழ், நந்தகோன் — நந்தகோபன் என்னும் ஆயர்குலத்தலைவன், பாடி—ஆயர்பாடி, எண்ணருஞ்சிறப்பு — அளற்றவரிசைகள், பொலிவு— விளக்கம்.

111 இடங்கர்—முதலை, பட்ட—இறந்துபட்ட, குருமகன் — ஆசிரியரின்புதல்வன், தடங்கடல் — பெரியகடல், தந்தனை—அளித்தாய், தாவும்—தாண்டும் (பாயும்) மாட்டிய —மாள்வித்த, அடங்கலர்—பகைஞர், செகுத்த—கொன்ற, வேலோய் —வேற்படையுடைய கண்ணனே!

112 தேவகி — கண்ணன்தாய், (கஞ்சன்உடன் பிறந்தவள்) மாற்றம்—மொழி, மாவலிமுன்னர்—மாவலிச்சக்கரவர்த்தியின்முன்பு, மரீசி—ஒருமுனிவன், ஓவறுசாபம்—ஒழிவற்றவெகுளிமொழி, முன்னோர் — முன்பிறந்தவர் (தமையன்மார்) ஆவிநீத்தார்—உயிர்நீங்கப் பெற்றனர்.

113 நின்பால்மேவும்அறுவரும்-நின்னிடத்துவந்துற்ற ஆறுபிள்ளைகளையும், மாவலி — மாவலிச்சக்கரவர்த்தி, பைந்துளவோன் -பசியதுளவமாலையணிந்த கண்ணன், ஓங்கெழில் மிக்கஅழகு, தேவகிமுன்னர்—தேவகியின்முன்பு.

114 மைந்தரை—புதல்வரை, காண்டலோடும்—காண்டலும் (பார்த்தலும்), சிந்திட—சுரந்துபிலிற்ற, வெந்திறல் கொடியவலிமை, அணைத்த—தழுவிய, அந்தமில்சாபம் — முடிவில்லாதசாபமொழி, நீங்கி—விடப்பெற்று, அமரராய் தேவர்களாகி, விசும்பில்—விண்ணுலகில்.

115 சுருதி—காதுகளாற்கேட்கப்பெறுவது, துன்னார் —பகைவர், வெருவ—அஞ்ச, மிதுலை — மிதுலையென்னும் நகரின்கண், மருதுஇற-மருதமரமொடிய, தவழ்ந்த-ஊர்ந்த, மாதவர்—பெருந்தவச் சிரேட்டர்.

116 இருவரும்-சுவேதனும் வெகுலாச்சுவனும், இனிது வைகும், நன்ருகவதியும், விருந்துரைத்து — விருந்தினுக்குக் கூறி, ஐயன்—கண்ணன், தன் உருவம்—தன்னுடையவடிவம் மறைபவர் உருவை— அந்தணர்வடிவை, ஓர் காலையின்—ஒரு நாளில், பொருவரும்விருந்துண்டு — உவமையில்லாதவிருந்தினைப்புசித்து, உயர்கதி—பேரின்பவீடு.

33-வது அத்தியாயம் முற்றும். ஆகச்செய்யுள் 2194.

---

## 34 கண்ணன் வைகுந்தமடைந்தது

1 நான்குவேதம் — நான்குவேதங்களும், முனிவரர் — அந்தணர் (மறையவர்) உருவில் துன்னி — வடிவில்நெருங்கி, கண்ணனை—கண்ணபிரானை, ஏத்தி—துதித்து, துளவோன், —திருமாள், வேதன்—பிரமன், முக்கண்எம்பெருமான்-திரிநேத்திரதாரியாகியசிவபெருமான், அளியுளர் — கருணையுள்ளவர், எவர்கொல்—யாவரேயோ ? மாது ஓ அசைகள்.

2 என்னலும்—என்றுவினவுதலும், கண்ணன்என்னை —கண்ணனுகியஎன்னையும், முன்னவன்-முதல்வன், கருணைக்கெல்லாம்முதல்—அருளுக்கெல்லாம்மூலம், அரனும் — சிவபெருமானுகும், அன்னோன் — அவன், சாற்றுவன் — கூறுவேன், கேட்டிர்—கேளுங்கள், கருத்திடை — உள்ளக்கருத்தின்கண்.

3 சகுனியின் புதல்வன் விருக்கன்என்பவன் கொடிய விடத்தையொப்பவன் அந்தமும் ஆதியும் இல்லாத பரமேசுரனைப்பணிந்துதுதிப்ப பரமேசுரன்எழுந்தருளிவந்துநீவிரும்பிய வரத்தினைக் கேட்பாய் என்ன முந்தியார் சிரத்தைத் தீண்டினேனே அவன்றன் ஆவி தொலைதல்வேண்டும் எனக் கேட்டனன்.

4 அளித்தோம் — கொடுத்தோம், பொன்றினுய் — அழிவுற்றனை, என்னில்—என்னுல், சரதம்—உறுதி, குன்ற

வில்லவன் — மகாமேருவில்லையுடையவன், கூற்றின் வெங் கூற்றம் — இயமனுக்கும் இயமனாகியவன், அவுணன் — விருக்கன், மயக்கி—மயக்கமுறுமாறு செய்து, பேதித்தேன் —பேதமையுறச் செய்தேன்.

5 மத்தம்—ஊமத்தைப் பூ, அறுகு—அறுகம்பல், சூடி —அணிந்து, தொடர்ந்திடுவது—பின்பற்றிப் போதல், நின் முடி—நினது தலை, மணிமுடி—அழகிய தலை, சிதர்ந்து— பொடியாகி, வீழ்ந்தான்—இறந்துபட்டான்.

6 அவன் மாய—அவுணன் அழிய, வீங்கிய கருணை— பேரருள், வலஞ் செய்து (பிரதக்கிணம்) வலமாக வந்து, துறுமலர்—பல செறிந்த பூக்கள், தூவி — வாரி யருச்சனை புரிந்து, பணிந்து — வணங்கி, விடை நல்கி—உத்தரவு கொடுத்து.

7 அடியவர்க்கு—தன்னடி போற்றும் பற்றுடைய வர்க்கு, எளியன் — மிகவும் எளிமையுடையான், மாதுமை பங்கன்—உமையொரு பாகமுடையவன், மற்றும்—வேறும், உண்டோ—இல்லை, ஏதமற்று—குற்றமின்றி, அவன் பொற் றாள்—அச் சிவபெருமான் திருவடிகள், தீதறு மறைகள்— பாவங்களைப் போக்கும் வேதங்கள்.

8 மறைவலாளன் — வேத நூலில் வல்ல அந்தண ளன், ஒன்றொழி பத்து—ஒன்பது, பிறந்துழி—பிறந்த அப் போதே, வீய—இறப்ப, கன்றிய — வருந்திய, மன்றல்— வாசனை, மணிநகர்—அழகிய நகரமாகிய துவாரகை.

9 மனை — இல்லக்கிழத்தி (மனைவி), இழைத்திலேம் —செய்தோமில்லை, செங்கோல் முறைமை—செங்கோலாட்சி முறை, காத்திடாமல் — காவல் புரியாமல், ஈனமது—ஒழுங் கின்மை, எய்தியது — வந்துற்றது, குறுகினன் — சென்று, முறையிட்டான்-முறை கூறிக்கொண்டான் (வழக்கிட்டான்).

10 யாதவர்—யதுகுலத்தவர், காக்கலொண்ணுது—காக்க முடியாது—எண்ணினர் இருப்ப — எண்ணிக்கொண்டிருப்ப வர் இருக்கட்டும், எழுகடல்—நன்னீர், நெய், பால், தயிர், மது, உவர், கருப்பஞ்சாறு ஆயவை, வில்லாண்மை—வில் வன்மை, மறையோன்முன்னர் — ஓலமிட்டுக் கொண்டிருக் கின்ற அந்தணன்முன்பு, வெஞ்சிலை — கொடியகாண்டீபம் நகைத்து — சிரித்து.

11 ஏத்துமுனிவ—துதிக்கின்றமுனிவரே! தூயநற் கருப்பம் — தூய்மையான நல்லகரு. (சூல்) உயிர்ப்புழி— பெற்ற இடத்து, துஞ்சுஞ்சேய்-இறக்கும் பிள்ளை, நினையல்— எண்ணற்க, சினவல் — வெகுளல், வெம்பாசம் — கொடிய இயமபாசம், வீக்கி—கட்டி, கூற்றம் போதந்து — இயமன் வந்து, அழிக்கொணுது—அழிக்கமுடியாது.

இரங்கிய—அழுதுகொண்டிருந்த, நன்மனை—நல்ல இல் லக்கிழத்தி, துன்றுஇரும் கூந்தல் — நெருங்கியகரியதலை மயிர், அகடு—வயிறு, நொந்தாள்—வருந்தினள், உயிர்த்திடு வள்—பெறுவாள், இயம்பினுன்-நயம்பட உரைத்திட்டான்.

13. வரிவில் லேந்தி—கட்டமைந்த வில்லினைத்தாங்கி, நறவு—தேன், பொறையுயிர்த்தல்—பிள்ளைப்பெறல், சாலை —கருவறை, பொதிந்து—மூடி, காவா—காத்து, அறைகழல் —ஒலிக்கின்றவீரக்கழல், துயிலின்றி—உறக்கமின்றி,

14 (வாயு,நெருப்பு,இயமன் இவர்களும் முன்வருவதற் கஞ்ச) கொடுமரம்—வில், குழையவாங்கி—நன்ருகவளைத்து, ஏற்றிய—நாணேற்றிட்ட, தோற்றம்—காணப்பெறல், (உரு வுடனீற்றல்) அற்றது—அழிந்தது, ஊழின்சூழ்ச்சி-பழவினை யின்பெற்றி (தந்திரம்)

15. ஈன்றசேய்—பெற்றெடுத்த குழந்தை, ஆவியின்றி —உயிரின்றி, உடலம்—சரீரம், ஆன்ற—நிறைந்த, விம்மி—

விம்மலுற்று, வில்லுக்கொருவன்விசயன் என்னும்சொல் வினையுடைய நீ காத்தது மிகவுநன்றுஎன்று கோதித்துக் கூறினான் மறையவன்.

16. சீறி—சீற்றங்கொண்டு, வாரிதி—(வாரிநிதி)கடல், பாதலம் ஏழும்—பாதல முதலிய ஏழுலகமும், எய்தி-அடைந்து, திசைமுகனுலகு — நான்முகனுலகமாகிய சத்தியவுலகு. காண்கலாது—காணப்பெறாது, இனைந்து—வருந்தி.

17. இழுக்கிற்று-தவறிப்போயிற்று. ஆவிவாழ்கலேன் உயிர்வாழமாட்டேன், எரியின்வீழ்ந்து துஞ்சுவேன்—தீயில் விழுந்து மடிவேன், துணிதலும்—உறுதிகொள்ளலும், கண்ணன்எய்தி—கண்ணபிரான் அங்கடைந்து, நெஞ்சழிந்து—மனம்நைந்து, நையேல்—வருந்தற்க, நிகர்—ஒப்பு (ஒளி) மஞ்சன் — பிள்ளை, சேறும் — செல்வோம் (உளப்பாட்டுத் தன்மைப்பன்மை)

18 இருவரும் — கண்ணனும்அருச்சுனனும், நேமி வெற்பு—சக்கரவாளகிரி, பொம்மல்—செறிவு, நெறி—வழி, மயங்குற்றவாறு—பேதித்ததன்மை, விரிகதிர்கவிழ்க்கும்—விரிந்தகதிர்களைச்சொரியும் (வீசும்) ஆழி—சக்கரம்.

19 பாய்கதிர்—பரவியகதிர்கள் (கிரணம்) இரவிகோடி —கோடிசூரியர்கள், பருதி—சக்கரம், குப்பை — தொகுதி சுடிகை—உச்சிக்கொண்டை, அரவணைப்புறம்-பாம்புப்படுக்கையின்கண், துஞ்சும்—அறிதுயில்கொள்ளும், மரகதக்குன்றம்—மரகதமலைபோலுந்திருமால்.

20 காண்டலும் — பார்த்தலும், கருந்துழாய் — கருந்துளசி, பாண்டவன் — அருச்சுனன், பதமலர் — திருவடித் தாமரை, திருமணி — கவுத்துவமணி, ஆண்டகை — புருடோத்தமன், வந்தவாறு—வந்தடைந்தசெய்தி.

21 மறை—வேதங்கள், செந்நா—செவ்வியநா, மகிழ்வின் ஈன்ற சிறுவர்—களிப்புடன் பெற்ற பிள்ளைகள், அறைதலும்—விண்ணப்பித்தலும், ஐயிருவரையும்—பத்துப் பேர்களையும் (பிள்ளைகளை), நல்கி—கொடுத்து, நாரணன்—கடலிற்படுத்துறங்குபவன்.

22 தகவுடன் — தகுதியுடன், காண்பது — காண்டல் (பார்ப்பது), தலைக்கீடு —'காரணம், புகர்....குற்றம், புதல்வரைக் கொணர்ந்தேன் .... புதல்வரைக்கொண்டு வந்தேன், நீவிர் .... நீங்களிருவரும், நிகரறு புவியின்பாரம் .... உவமையற்ற பூமியின் சுமை, யுக முடிவு....துவாபரயுகவிறுதி, புகுதுக....வந்தடைக.

. 23 மணியெழு .... மாணிக்கத்தூண், பணி....பாம்பு, பரமன்....மகாவிட்டுணு, விடைகொண்டு....உத்தரவு பெற்று, அரும்பெறல் குமரர் .... பெறற்கரியபிள்ளைகள், பிணியுறு மறையோன் .... பிள்ளையிறந்த சோக நோயுற்ற அந்தணன், பெட்பு....விருப்பு, அன்று, ஏ.....அசைநிலைகள்.

24 தீம்சொல் .... இனியமொழி, கொம்மை .... அழகு, போகமாந்தி—இன்பந்துய்த்து, மண்மகள் — பூதேவி, எவ்வுலகும்—எல்லாவுலகங்களும், ஏத்த—துதிக்க.

25 பிருகுமுதலாவுள்ள முனிவர்—பிருகு, அத்திரி, கௌதமன் முதலிய இருடிகள், குருகு-பகாசுரன் (கொக்கு), வெற்றிக் கொண்டல்....கண்ணபிரான், வெய்து....கொடுமை, கலியுகம் .... பொல்லாத யுகம், எண்ணி....கருதி, வெருவு.... அச்சம், வெய்துயிர்த்து...பெருமூச்சு விட்டு.

26 ஐய! ஐயனே (தலைவனே!), தலைமயங்க .... மாறுபட, அணைந்தது .... வந்துற்றது, மறந்தும் .... மறந்தேயும், மருவுவது .... பொருந்தியிருப்பது, ஒல்லாது .... இசையாது, ஈன்ற தாயின் .... பெற்ற தாயினைவிட, உள்ளந்தெருட்டி.... மனந் தெளியச் செய்து.

27 சீர்கெழு யுகங்கள் .... சிறப்புடன் விளங்கும் முன்னைய யுகங்கள், கிருத, திரேத, துவாபர யுகங்கள், பலபகல் ....பல காலம், சார்வருமுத்தி .... பேரின்ப வீடு, கலியுதக மதனில்....கலியுகத்தின்கண், ஓர் கணம் .... ஒரு சிறு பொழுது முத்தியிலுறுவர் .... முக்தியினையடைவர், என்றால்....என்று பேசப்படுகின்றபொழுது, கலிக்கு இணை .... கலியுகத்திற்குச் சமானம், பகர்வது....கூறுவது.

28 திங்கள் அம் கண்ணிப் புத்தேள் .... சந்திரசேகரக் கடவுள், சேவடிக் கமலம்....திருவடித் தாமரை, கொங்கவிழ் மலர்....நறுமணம் வீசும் பூக்கள், குளிர்தரு புனல்....குளிர்ச்சியுற்ற நல்ல தீர்த்தம், தங்கும் .... அருள் தங்கும், அஞ்செழுத்து....பஞ்சாட்சரம், வெண்ணீறு....திருநீறு, உடைவது ....பின்னிட்டு வருந்துவது, வெளிற்றறிவு....வெள்ளையறிவு.

29 ஆணவமலத்தையாதி மலம்....ஆணவம், கன்மம், மாயை என்பன, என் செயும் .... யாது புரியும், புரிவது .... செய்வது, கமலத் தேவை....பிரமனை, ஈன்றோன்....தோற்றுவித்தவன், அன்புளது....பத்திமை பூண்டொழுகல்.

30 கமல வீட்டிலிறை....பிரமன், முன்னவன்....முதல்வன், உய்ம்மின்கள்....கடைத்தேறுங்கள், மறையோர்...முனிவரர்கள், வணங்கி....பணிந்து.

31 தலைக்கீடு....காரணம், கிளைகள்—சுற்றங்கள், வாளமர்—வாட்போர், புகர்அறு-குற்றம்நீங்கிய, புண்ணியமூர்த்தி—புண்ணியவடிவினன், தூயவைகுண்டம்—நிர்மலமாயுள்ள திருமால்உலகு, நண்ணினான்—அடைந்தான்,

32 மணி .... நாகரத்தினம், பாயல்....படுக்கை, சேய் இதழ்க்கமலம் .... செவந்த இதழ்களையுடையதாமரை, திருமகள்....இலக்குமி மாயிருஞாலமடந்தை....பூமிதேவி, வானவர்....தேவர், போற்றிசைப்ப....துதிப்ப, சுருட்டும் .... மடங்கிச்செல்லும்.

33 கண்ணன்மரபு....யாதவர்மரபு, வச்சிரனை - வச்சிரன் என்பவனை, தருமன் இந்திரப்பிரத்தநகருக்கு முடிசூட்டியும், பரிசித்துமன்னனை அத்தினபுரிக்கு அரசனுக்கியும் தம்பி மாரும் திரௌபதியும் உடன்வர வீடுற்றனன் ஆம்.

34 வச்சிரன்மகன் பிரதிவாகு, அவன்மகன் சுவாகு, அவன்மகன் உக்கிரசேனன், அவன்மகன் அருட்சதசேனன் என்பவன் ஆகும். தொண்டர்....அடியவர், திங்கள்நன்மரபு—சந்திரவமிசம்.

35 இன்னநற்காதை .... கண்ணன்வைகுந்த மடைந்த வரலாறு, புகன்றவர்....கூறினவர், பயந்து—பெற்று, தங்கிளை தம்சுற்றம், புரந்தரன்....இந்திரன், புவி... பூமி, அளப்புஇல் நாள்....எண்ணற்றகாலம், பன்னகமணிந்த....சர்ப்பாபரணந் தரித்த, பதநிழல்....திருவடிநிழல், உறைகுவர்....தங்குவர்.

34_வது அத்தியாயம் முற்றும் ஆகச்செய்யுள் 2229

## 35-வது யுகதன்மமுரைத்தது

1 தகை பெறும் யுகங்கள் .... தகுதி பெற்ற நான்கு யுகங்கள், நடந்திடும்....நிகழப் பெறும், வகைபட ... விவரம் பொருந்த (பகுதிபகுதியாக), உரைத்தி....உரைத்தருளுவாய், விசும்பு....விண்ணுலகு, புரந்தரன் .... இந்திரன், ஆமை உரு உறும் அண்ணல்....கூர்மாவதாரமுற்ற பெருமாள்.

2 விற்றொழில் விசயன் .... வில் வித்தையில் வல்ல, அருச்சுனன், வியாதமா முனிவன் .... வியாசர், முன்னம்.... முன்பு ஒரு நாள், சொற்றவாறு .... சொன்னபடி, எகினம்.... அன்னப்புள், பாகன் .... பிரமன், கற்பம் .... பிரம கற்பம், முன்னை யுகம்....முதலாவது யுகம்.

3 முந்தைய யுகம்....முதலாவதுயுகம் (கி)ரேதா யுகம், பிரமன் .... பெரியவன், முக்கட் தேவன் .... சிவபெருமன்,

சிந்தை செய்திருப்பர் .... சிந்தித்துக் கொண்டேயிருப்பர், தருமம் நான்கு கால்களுடன் நடக்கும், கானம் .... காடு, வெற்பு .... மலை, நகரம் .... பட்டணம், ஐயுறுது....சந்தேகங் கொள்ளாது, மகளிர்....மனைவிமார்கள்.

4 நினைந்தவை யாவும்-எண்ணிய அனைத்தும், அங்கை நெல்லியின்.... உள்ளங்கை நெல்லிக் கனிபோல, நனந்தலை.... பெரிய இடம், விண்ணோர் நாடு....தேவருலகம், களிகூர.... மகிழ்ச்சி மிக, யான் எனது ...அகங்காரம மகாரங்கள்), அகப் பற்று, புறப்பற்று, ஆங்காரம் ... முனைப்பு (செருக்கு), மலம் —பாசம் (அழுக்கு).

5 இரண்டாம் யுகம் — திரேதா யுகம், தெளிந்து— ஆராய்ந்தறிந்து, குப்பை—குவியல் (தொகுதி) விழுங்கி— தொலைத்து, இந்தயுகத்திலிரில் சூரியதேவனையே கண்கண்ட தெய்வம் என்றுரைப்பார்.

6 முன்பயில்....முன்னையுகத்திலிகழ்ந்த (பழகிய) முதுக் குறைவு....பேரறிவு, தோன்றுமன்பதை .... பிறந்தமக்கட்கூட் டம், நினைத்தவைமருவில்செய்ய....எண்ணியவைகூட, அணை தலின் .... வந்தடைதலின், பொன்பயில் தருக்கள்யாவும் .... பொன்னுலகத்தில்உண்டாகும் மரங்களனைத்தும் (சுவர்க்கம்)

7 வியன்கிளை....பெரியகிளை, விழுத்தகு....மேம்பட்ட, போகமாந்தி....நலன்களைத் துய்த்து (அநுபவித்து,) பண்ண வர்....தேவர், நயம்....நன்மை, (தருமதேவதை மூன்றுகால் களைக்கொண்டு நடக்கும்) வேள்வி....யாகம், முக்கட்பரமனை முன்னுகிற்பார் .... மூன்றுகண்களையுடைய சிவபெருமானைத் தியானிப்பார்கள்.

8 மானிலம் (மாநிலம்) பெரியவுலகம், ஒளிக்கும் .... மறைத்தலைச்செய்யும், யாக்கை....உடல், மாக்கள்....விலங்கி னம், சேரும்....வந்தடையும், முன்ன....நினைக்க, (கருத) எவை யும்—எல்லாமும்.

9 கைபுனைந்து — கைகளால்அலங்கரித்து. இயற்று— செய்யப்பெறாத, நைபடுகனி-முதிர்ந்துசுவையுறும்பழங்கள், நல்க—கொடுப்ப (உதவ) பை—படம், மைபடுவிசும்பு .... மேகக்கூட்டங்களையுடைய ஆகாயம் (விண்.)

10 காமம் வெகுளி மயக்கம் இவைமுக்குற்றங்களாகும் கவற்ற—கவலுறச்செய்ய. இகல்—பகை (மாறுபாடு) மலைதல் சண்டையிடல், நல்குரவு—வறுமைப்பிணி, உழப்பர்—வருந்துவர். மாது ஓ என்பன அசைகள்.

11 தட்பம்—குளிர்ச்சி, வெம்மை—வெப்பம், மானம் மானமுடைமை. கொடை — கொடுப்பது, உலோபம் — கொடாமை, இல்லம்—மனை, தூசு—ஆடை, பழிப்பு-நிந்தை வியப்புடன்உஞற்றி—வியக்கும்படிமுயன்று உண்டாக்கி, மெலிவு ...மெலிதல், வாழ்வர்....வாழ்க்கையுறுவர்.

12 கருவி—தொகுதி மாமேகம்—கரியநீருண்டமேகம், ஈண்டி—நெருங்கி, பொருவரும்—உவமையில்லாத, பகடு—காளைகளைப் பூட்டி, அம்தீங்கனி — அழகிய இனிய பழம் அரில்—பிணக்கம், அளிக்கும்—கொடுக்கும், அன்று ஓ அசை.

13 கான்படுபசுக்கள் — காட்டின்கண்வாழும் ஆவினங்கள். கனைகதிர்—நெருங்கிய கிரணங்களுடைய சூரியன், வான்படர்மாடம்—விண்ணளவுஞ் சென்ற மாளிகை—மாந்தர் மக்கள், துற்றிய நசையால் — நெருங்கிய விருப்பினால், ஏன்று எதிர்த்து இகல்உற-பகைமைதோன்ற, யாவும்போன-அனைத்தும் போயினவாம்.

14 பிருது – பிருது வெனும்மெயரிய அரசன், பெட்பு-விருப்பம். இனிது அளித்த....நன்றாகப் புரந்த, பண்டை.... பழைய நிலை ஒருவர்வாழ்வு-ஒருவருடைய வாழ்க்கைநலன், வவ்வி....பற்றிக் கொண்டு, வெம்பூசல்....கொடிய போர்.

15 தேசு....ஒளி, வேதன்....பிரமதேவன், வருணம்.... சாதி, ஆச்சிரம்....நிலை, (நால் வகை வருணம், நால் வகையாச் சிரமம்) ஓசை—புகழ், மகம்—வேள்வி, உவப்பு—மகிழ்வு.

16 துவாபார யுகத்திற்குரிய அறத்தின் கடவுள் இரு பாத முற நடக்கும், பாவ புண்ணியங்கள் சமமாக நிகழும், விண்டுத்தெய்வம் — நாரணக் கடவுள், அவனி—பூமி, நன் மகம்—நல்ல வேள்வி.

17 ஆசை—அவா, உலோபம் .... பற்றுள்ளமுடைமை, (கஞ்சத்தன்மை) சமம்....போர், மாசு....குற்றம், தத்துவம்.... உண்மைப் பொருள், மயங்கல் .... மயங்குதல் (அறியாமை யுறல்) தேசுடை வியாதன் .... ஞானப் பொருளறிந்த வியாச முனிவரன் வேதங்களை நான்கதாகப் பகுத்துள்ளார், ஏசு.... இழிவு, இயற்றினன்—வகுத்தனன்.

18 புன்மை — அற்பத்தன்மை, சொற்றனம் .... கூறி னோம், கலியுகத்தின் தெய்வம் மகேசுவரன் ஆகும். தருமம் ஒரு காலில் நடக்கும். குவால்....குவியல் (தொகுதி,) கொடுப் பது—வள்ளலாக வழங்கல், கருமம்....காரியம்.

19. வெளிறு....வெண்மை, தடிபவர்....அழிப்பர், சான் றோர்....அறிவுநிறைந்தவர், கடும்பசி....கொடியபசி, வறத்தல் ....வரண்டுபோதல், அளியார்—கொடார், ஒளித்தல்....மறைத் தல், உறுபொருள்....மிக்கபொருள், கவர்வர்....பற்றுவர்.

20 ஒழுக்கம் .... சீலம், அளி .... கருணை, வெந்துப்பு.... கொடிய வன்மை, இழுக்குவர்....தவறுவர், இரு பிறப்பாளர் (துவிசர்) பார்ப்பார், விழுத்தகு மறைகள் — சிறந்த வேதங் கள். ஓதார் .... ஓதமாட்டார்கள், அருமகம் .... செயற்கரும் வேள்வி, விழையார் .... விரும்பார், அழுக்குடை மனிதர் .... மாசுடைய மாந்தர்கள்.

21 நெறியினர் — சன்மார்க்கத்தினர், கல்தோய் கலிங்கம் — காவிக்கல் நனைத்தஆடை, நிலவ — விளங்க, வெண்பல் — வெள்ளிய பற்கள், பின்னவர் — நான்காம் வருணத்தவர், காலே—அதி காலே, படிந்து—மூழ்கி, எள்ளி —இகழ்ந்து, மறையினை—வேதங்களை, கற்பர்—ஓதுவர்.

22 ஆறறிமறையோர் — ஆறங்கங்களையும் நான்கு வேதங்களையும் உணர்ந்தவர், அழுங்க—அழுதிரங்க, அவர் தம்மோடுண்டு—அம் மாதர்களோடு உணவு அருந்தி, வீறு— பெருமை, விஞ்சை—வித்தை, வீழ்வர்-வீழ்ந்து வருந்துவர்.

23 மலிந்திடும்—நிறையும், நோவ — மிகவும் வருந்த, கடிவர்—விலக்குவர், புல்லர்—இழிஞர், திருவர் — செல்வ முடையவர், நீதியோர் — நெறிமுறை தவிராதவர், வறிஞர் —வறுமையுடையர்.

24 ஓதார் — ஓதுதலைச் செய்யார், நிந்தனை—பழிப்பு, ஓர்ந்து—ஆராய்ந்து, வழுத்தார் — வணங்குதலைச் செய்யார், இசைத்த — கூறின, சாபம் — வெகுண்டுரைக்கும் உரை, தீவினை—கொடியசெயல், இரவுரவ நரகு—இரவுரவம் என் னும் கொடிய நிரயம்.

25 கொடுவரி—வேங்கை (புலி) கமம்சூல் — நிறைந்த கரு, கொண்டல்—மேகம், சோனை—விடாமழை, கடுவளி— பெருங்காற்று, விடலருந்துன்பம் — விடுதற்கரிய துயரம், உழப்பர்—வருந்துவர், வறந்த—வறண்டுபோன.

26 வெங்கலியின்—கொடியகலியுகத்தின்கண், இமைப் போது—இமைக்கும் நொடிப்பொழுது, உள்ளத்து—மனத் தின்கண், தழலிடை—தீயின்கண், அளப்புஇல்நாள் — எண் ணற்றகாலம், நின்று—நிலைத்து, உன்னரும்—கருதமுடியாத, உறங்கினோர் — யோகநித்திரையிலுள்ளோர், அருமுத்தி—

அரிய நிலைபேறுகியமோட்சம், மருவி வீற்றிருத்தல் — பொருந்தியிருத்தல்.

27 எற்றுநீர்வேலை — கடல், ஈன்றருள் — படைத்த, எகினப்பாகன் - அன்னவாகனமுடையபிரமதேவன், பொற்ற தாமரையின்கேள்வன் — சூரியமூர்த்தி, பூமகள்கொழுநன் — இலக்குமி காந்தனாகியதிருமால். இவர்கள் முதல்மூன்றுயுகத்தின் கடவுளராம், கலிக்குக் கடவுள் — செஞ்சடைவானவனாகிய சிவபெருமான்.

28 செய்தி — செயல்கள், முறையின் ஓதி — நெறியின்படிகூறி, குன்றவிற்குழகன் — மகமேருவில்லினை யுடைய மகாதேவன், கண்டனை — கண்டுதரிசித்தனை, நன்றறிவோர் — நல்லன ஆய்ந்தறிந்தவர், நற்றவர் — நல்லியதவவொழுக்கினர்.

29 விசயன் — விசேடமானவெற்றியினையுடையஅருச்சுனன், வியாதன் என்போன் — வியாசன்என்று சிறப்பித்தோதப்பெற்றவன், கழிமலம் — மிக்க மலம், மாய்வுறின் — இறந்துபடின், உலவா — அழியாத, பெட்பு — விருப்பு.

35-வது அத்தியாயம் முற்றும். ஆகச்செய்யுள் 2253

---

## 36-வது காசிச் சிறப்புரைத்தது

1 கதிர் — செந்நெற் கதிர்கள், கழனி — வயனிலம், முதுமறை — பழைய வேதம், முனிவன் — நாரதன், ததை மலர் — நெருங்கிய பூக்கள், தரு — கற்பக மரம், பண்ணவன் — தேவேந்திரன், மதமலை — கசேந்திராழ்வான், மூலம் — ஆதி மூலம்.

2 சயிமினி — ஒரு முனிவன், விச்சுவேசன் — விசுவநாதப் பெருமான், மயர்வு — மயக்கம், சாங்கியம் யோகம் —

ஒரு நெறி (யோக மார்க்கம்), தியானம்-எண்ணல், மந்திரம்—மனுக்கள் (நினைப்பவனைக் காப்பது), இந்திய மடக்கல்—இந்திரிய மடக்குதல்.

3 மற்றும் — வேருகவும், பூங்கழல் — திருவடி, புகறலும்—கூறலும், தீங்கு எறி—தீயவினைகளைப் போக்குகின்ற, வேண்டில் — விரும்பினுல், சேர்தலே — போயடைதலே, உயர்ந்தது—மேன்மையுடையது.

4 இன்னவாறு — இப்படி, சிற்றுதரக் கன்னி—சிறிய வயிற்றினையுடைய உமாதேவியார், முன்னவன் — சிவபெருமான், மொழிந்தவாறு — கூறியபடி, பன்னினன் — பகர்ந்தான், கடவுள் காசி—தெய்வத்தன்மையுடைய காசியம்பதி.

5 மறுத்தவர் — தடுத்தவர், தணப்பு—நீக்கம். வெந்துயர்—கொடியதுன்பம், எய்திஞேர்—அடைந்தவர், இறைவன்போல—சிவனுருப் போல, நந்தலில்உருவம்-கேடில்லாத வடிவம், பேரின்பம்—முத்தி, நண்ணுவார்—அடைவார்.

6 கொல்ல— விழுங்குதலைச்செய்ய, தவளை — கொல்லப்பட்டதவளையானது, குவளையங்களம்—கருமையானநீலகண்டம், ஆய் — ஆகி, அப்பாந்தளை — அந்தப்பாம்பினை, அணிந்தது—தரித்தது, நவை —குற்றம், பிறிது — வேறு, உண்டோ—உளதோ ?

7 கடவுள்தீர்த்தம்-தெய்வீகத்தீர்த்தம், முத்திவைப்பு—முத்திக்குறையுள், உமையோடீசன் — உமாமகேசுரன், கங்கை—கங்காதீர்த்தம், பிறவிநோய்க்கு — பிறவிப்பிணிக்கு மருந்து—அவுடதம், ஆல்—அசைநிலை.

8 உளம்மகிழ்ச்சி — மனக்களிப்பு, இனிதின்ஓதி—நன்றாகக்கூறி, வினை —நல்வினை தீவினைகள், தகவு—தகுதிப்பாடு, ஓங்காரேசன்—பிரணவ உருவினனுகிய பரமேசுரன்.

9 ஏல்வை—சமயம் (காலம்) தாளிணை— இருதிருவடிகள். வழுத்துதல்—வணங்கல், திங்கள் அம்கண்ணி—சந்திரனாகிய அழகிய தலைமேற்சூடும்மாலை, புங்கவன்—பரமேசுரன், போற்ற—துதித்தலைச்செய்ய, என்னு—என்றுரைத்து.

10 மேவிய—பொருந்திய, இலிங்கந்தன்னை—சதாசிவமூர்த்தியை, (கிருத்திவாசேசன்என்பது திருப்பெயர்.) கிளப்பன்—கூறுவேன், அருத்தி—ஆசை, அடர்—நெருங்கிவருத்திய, கயாசுரன்—யானையசுரன், போர்த்தல்-மூடிக்கோடல்,

11 சென்மம்—பிறப்பு, புரிந்திடல்—இயற்றல், நேயம்—அன்பு, எய்தினோர்—அடைந்தவர், குரைகழல் — ஒலிக்கின்றவீரக்கழல், ஓய்வரும்—ஒழிவில்லாத.

12 மாணுக்கர்—சீடர்கள், மறைதெரி — வேதந்தெளிகின்ற, துன்றி—நெருங்கி, வானவர்—தேவர், ஒன்றிய—பொருந்திய, உவகை—மகிழ்ச்சி, காதை—வரலாறு. தெளிதர—தெளிய, உரைக்கலுற்ருன்—கூறத்தொடங்கினுன்.

13 மடங்கல் — சிங்கம், வெருவி — அஞ்சி, மாழ்கி — மயங்கி, வலம்செயா — வலஞ்செய்து, எறும்வலி — மிக்க வன்மை, பற்றி—பிடித்து, உகிர் — நகம், நெஞ்சம்பிளந்து — மார்பினைவகிர்ந்து, உயிர்குடித்தது — உயிரைப்போக்கிற்று

14 தேசுடைமழு — ஒளிபொருந்திய பரசு , சிறந்த—மேம்பட்ட, வாசவன் — இந்திரன், மழவிடை — இளமைபொருந்தியகாளை, உயர்த்தோன்-கொடியினையுயர்த்தினவன், ஆசறு—குற்றமற்ற, வெற்பு—மலை.

15 புனைந்திடும்— தரிக்கும், சங்குகன்னன் என்பவன் பிசாசமோசதடாகத்தின் முறைப்படி தவம்புரிகின்ற காலத்து வெள்ளியபற்களையுடைய பேயானது அடைந்து

துதிக்கவும், சங்குகன்னன் நீயார் என்னச் சுழலுங்கண்களை யுடைய பேய் மொழியும்.

16 முற்பவம்—முன்னைப்பிறப்பு, ஒரு முனி — ஒரு இருடியாவேன், முதுக்குறைவு—பேரறிவு, பொற்பு-வனப்பு, குவித்து — சேகரித்து, அறம்செய்யாமல்—தருமச் செயல் ஒன்றுஞ் செய்யாமல், அற்பு—அன்பு (வலித்தல்).

17 இவ்வுரு—இவ்வடிவு, ஒழியும் வண்ணம்—நீங்கும் படி, அவ்வியர் அவித்த—தீநெறிசெலாது புலன்களைவென்ற அந்தணன்—சங்குகன்னன், கவ்வைநீர்—ஒலிக்கின்றநீர், வாவி —தடாகத்துள், கழியும்—நீங்கும், தோய—மூழ்க, தீர்ந்தது — விலகிற்று.

18 அறுகு — அறுகம்புல், கடுக்கை—கொன்றைப்பூ, தூற்றும்—சிந்தும் (தெளிக்கும்) மழுமான்—பரசும்மானும், ஏந்தி—தாங்கி, நாப்பண்—நடு, மேவிற்று—பொருந்தியது.

19 ஆங்கு—அவ்விடம், அது நோக்கி—அப்பேய் அடைந்த நிலையினைக் கருதி, இலிங்கம் — சதாசிவவுருவம், தோன்ற-புலப்பட, தீங்கற—பாவச்செயல்போக, மேலோன் — சங்குகன்னன், அதனுழை—அச்சிவலிங்கத்தினிடத்து.

20 மருவருங்காசி—பொருந்தற்கரிய காசியெனும்பதி, பூதி—திருநீறு, பூத்த — நிறைவுற்ற, பாசுபதர் — பாசுபத வேடத்தர், சேவடி—செம்மையாகிய அடிகள்.

21 தெளிந்து — மயக்கமறத்தெளிவுற்று, அஞ்செழுத்து-பஞ்சாட்சரமனு, ஓத—உபதேசம் புரிய, சிற்பரமாகி-ஞானவடிவுற்று, புனிதமாகி-தூயநிலையாகி, வீங்குபேரன்பு—மிகப்பெரிய அன்பு, அதின்மேவினர்—அதில் தங்கினர்.

22 பேரொளி — பெருஞ்சோதி, ஆரியன்—போற்றத் தக்கவன், அருமறை முனிவர் — அரியவேதங்களை யறிந்த

இருடிகள், கார்—கரிய நீருண்டமேகம், கதிர்மணி-ஒளிவீசும் இரத்தினங்கள், முகடு—உச்சி, ஆலயம்—திருக்கோயில்.

23. தண்ணறுந்துளவத்தாரோன் — திருமால், கண்டிகை — அக்கவடம், எறிக்கும்—வீசும், தூயநீறு—வெண்ணீறு, பண்ணவர் பழிச்சும்— தேவர்கள் துதிக்கும், பூணு—பூண்டு, இருந்தவம்—பெரியதவவிரதம்.

24 நோன்மை—உறுதிப்பாடு, கரியுரி—யானைத்தோல், கண்ணுதல்சாமி—நெற்றிக்கண்ணையுடைய இறைவன், திருமறுமார்பன்—திருமால், அருள்புரிந்து—கருணைப் பாலித்து எழுதி—எழுவாய் (எழும்புக) அறையல்—கூறுதல்.

25 உன்னை—திருமாலாகிய நின்னை, யானுகப்பாவித்து—சிவனுகப் பாவனைசெய்து, உவப்பொடும்-மகிழ்வுடன், எனும் வரம் — என்னும் வரத்தினை, பாரதம்பகர்ந்த மேலோன்—பாரத இதிகாசத்தினைக்கூறிய வியாசன், தோய்ந்து-நீராடி, அவண்உறைந்தான்—அக்காசியம் பதியினிற்றங்கினுன்.

26 மையறு—குற்றந்தீர்ந்த, இனிதின்—நன்மையாக, முக்கட்டையல் — முக்கண்ணியாகிய உமை, தாழ்ந்து — வணங்கி, ஐயம் ஏற்றுண்டு-பிச்சைஎடுத்து அருந்தி, அமர்ந்து —விரும்பி.

27 பலி—பிச்சை, வழங்குநர்—போடுபவர், சபிக்க—சாபங்கொடுக்க, உலகம்ஈன்ற அன்னை—அன்னபூரணித்தாய், கடிஞை—பிச்சைப் பாண்டம்.

28 அய்யமுண்டிருக்கும்வேலை — பிச்சையுணவருந்திக் கொண்டிருக்குங்காலம், வெகுளி—கோபம், மருவலை — வந்தடையாதே. அம்மையைப்பார்த்து குற்றமற்ற அட்டமியினும், சதுர்த்தசி திதியிலும் வந்து பணிதற்கு வரமருள்க என்று கேட்டனன்.

29 முருகவேள் — கந்தப்பெருமான், ஐங்கரன் — விநாயகப்பெருமான், நீங்காது—விலகாமல், அன்னை—உமா தேவியார், நேர்ந்து — உடன்பட்டு, அறைந்தவண்ணம் — கூறியபடி, தன்னிகரில்லாதோன் — தனக்குவமையில்லான். பணிந்தான்—வணங்கினன்.

30 தவலருந்தவம்—நீக்கற்கரிய நோன்பு, மார்க்கண் டன்—மிருகண்டுவின் புதல்வன், வெண்மதியம்—வெள்ளிய சந்திரன், மானும்—ஒக்கும், நவையறுமுலகம்—குற்றமற்ற பூமி, காக்கும்—பரிபாலனம்புரியும், நாமவேல்—அஞ்சத்தக்க வேல், பவம்அறுத்து — பிறவியினைக்களைந்து, மான்மியம் (மகாத்மியம்) சிறப்பு

31 ஆவினை-பசுவினை, எத்துணை-எவ்வளவு, அத்துணை —அவ்வளவு, வான்தரு—கற்பகத்தரு, முருந்தவெண்ணகை யார் — மயிலிறகின் அடியினையொத்த வெள்ளியபற்களை யுடைய போகமாதர்கள், கொம்மை—அழகு.

32 கருதரும்—எண்ணற்கரிய, கன்னியை-பெண்ணினை விதியின்—முறையின், ஈந்தோர்—கொடுத்தவர், உருவம்— அழகு, வாள்நுதல்—ஒளிபொருந்திய நெற்றி, உத்தரகுரு— வடக்கின்கண் உள்ள புண்ணிய பூமி, மாந்தி—நுகர்ந்து

33 புண்ணிய நன்னீர்—புனிதமாகிய தீர்த்தம், போகு நர்—செல்பவர், ஊர்தி—வாகனம், நவையதாகும்—குற்ற முடையதாகும், அண்ணல்—பெருமை

34 பொருப்பு — மலை, கவற்றி — கவலுறச்செய்து, கழைகொள்—மூங்கில்போன்ற, உலந்தோர்—இறந்துபட்ட வர், கமழும் — வீசும், கவின்—அழகு, அருப்பு— அரும்பு, (வலித்தல்) முகை, அமரர்நாடு—தேவஃருலகு.

35 கங்கையம்புனலில் — கங்கையாற்றுப்புதுநீரில், தோய்ந்தோர்—முழுகினவர்கள், வீய்ந்தோர்—இறந்துபட்ட

வர், ஆடினோர் — நீராடினவர்கள், மாகம்—மாகத்திங்கள். யமுனை—யமுனையாறு. பொலிவு—விளக்கம், அதன்சிறப்பு—அவ்யமுனையாற்றின்மேன்மை,

36 ஆன்ற—நிறைந்த, மூவுலகு—சுவர்க்கம் மத்தியம் பாதலம் என்பனவாம், கங்காதீர்த்தத்திற்கு மூன்றரைக் கோடி புண்ணியதீர்த்தங்களும் இணையாகாவாம்.

37 மனுமுதல் இறைவர் — மநுமுதலிய அரசர்கள், தோற்றம்—தோன்றிய வரலாறு, கதிரோன் மாட்சி-சூரியன் சிறப்பு, சுடர்மதிப்பதம்—ஒளிபொருந்திய சந்திரமண்டலம். மன்ற—நன்றாக, தருமன்—தருமபுத்திரன், மறைமுனி—வியாதன்.

36-வது அத்தியாயம் முற்றும்.

---

## 37-வது மநுமரபுரைத்தது

1 குடுமிவரை-சிகரங்களையுடையமகாமேருமலை, வெங்கூற்றைவென்றோன்—மார்க்கண்டன், அறைந்தபடி—கூறிய விதம், கழறுக—கூறுக, வயிரப்படை—வச்சிராயுதம், ஆமையுருஎடுத்தோய் — கூர்மவடிவம்தாங்கியோய்!

2 ஆலம்கரும்சேறு — ஆலகாலவிடம், அரவு — ஆதிசேடன், ஞாலம்—உலகம், சுவாயம்புமனுவின் புதல்வர்கள் உத்தானபாதன், பிரியவிரதன் என்பவர்கள். புரக்கும்—காப்பாற்றும், மறிதிரை—மடங்கிச்செல்லும்அலைகள்.

3 வாய்—முனை, வைவேல்—கூரியவேலாயுதம் 1 ஆக்கினீத்தான், 2 அக்கினி, 3 அவ்வியன், 4 வாகு, ஆகிய வேந்தர்களும், விரைசெய்மான் — வேகமாகச்செல்கின்றகுதிரை, அடல்வேந்தர் — வெற்றியரசர், கடல்அம்தானை — கடல்போன்றபெரியசேனைகள்.

4 ஒன்னூர்—பகைமன்னர், பறைந்த—மழுங்கிப்போன 1 வபுட்டுமான். 2 துதிமான், 3 மேதை, 4 மேதாதி ஆகிய வேந்தர்களும், கருங்கழல்கால்—வலியவீரக்கழலணிந்தகால், கன்னல்சிலைவேள்—கரும்புவில்லையுடையமன்மதன், கழறும் —கூறும்.

5 உரவு — வலிமை, நிலவுக்கவிகை — சந்திரவட்டக் குடை, நிகரில்-உவமையில்லாத, 1 சவனன், 2 சோதிட்டுமான் ஆயவரசர்களும், குவவு —திரட்சி, மாற்றரசர்—பகைமன்னர் திசை—நான்குதிக்குகள்.

6 சுடிகை—உச்சிக் கொண்டை, பணம்-படம், உடுத்த —சூழ்ந்துள்ள, பாய—பரவிய, திறல்—வெற்றி (வலிமை,) பிரியவிரதன்றன் புதல்வர்கள் ஆக்கினீத்தன்முதல் சோதிட்டு மான்வரை யுள்ளவர்களேயாம்.

7 வரை—மலை, விறல் — வெற்றி, அடல்—வலிமை, நிகழாவண்ணம்—செல்லாதபடி, அருத்தி—ஆசை, இகழ்ந்து —தாழ்வாகக்கருதி, முனிவர்—இருடிகள், (மேதையும், அக் கினியும், வாகுவும் அரசச்செல்வத்தினை விட்டுத் துறவி யாயினர்)

8 சம்புத்தீவிற்கு இறையாக ஆக்கினீத் தானையும், பிலக்கத்தீவிற்கரசனாக மேதாதியையும், சான்மலித் தீவி னுக்கு வபுட்டுமானை மன்னனாகவும் முடி சூட்டினான் என்ப தாம். கவித்தான்—சூட்டினான், நம்பும்—விரும்பும்.

9 அலகுஇல்கீர்த்தி — அளவற்ற பெருர்புகழ், சோதிட்டுமானை குசத்தீவினுக்கும், துதிமானைக் கிரவுஞ்சத் தீவினுக்கும், அவ்வியனை சாகத்தீவுக்கும் அரசனாக முடி புனைந்தான், மவுலி — மகுடம் (முடி), நிலவு — பரவுதல், இலகு....விளக்கம்.

10 சான்றோர் — அறிவான் நிறைந்த பெரியோர்கள். புட்கரத் தீவினுக்கரசனாகிய சவன் என்பவன் தாதகி மாவீரன் என்னும் தன் இரு புதல்வர்கட்கும் புட்கரத் தீவினை மாவிர வருடம், தாதகி வருடம் ஆகப் பிரித்தளித்தான், வருடம்— பெரும் பூமி.

11 தரியார்—சத்ருக்கள் (பகைவர்), அவ்வியன் என்ப வன் சலதன், குமாரன், சுகுமாரன், மணீசகன், சுகுமோதன், மதாதி, மாத்துருமன் ஆய பிள்ளைகளைப் பெற்றுச் சாகத் தீவினைப் பகுந்தளித்தான், வழங்கினான்—கொடுத்தான்.

12 துதிமான் என்பவன், மனோகரன், துந்துபி, பிரபை, கண்ணன், அந்தகாரன், நகூலன் ஆயவர்களைப் பெற்று அவர் கள் பெயரால் அன்றிற்பெயர்த்தீவினை முறையொடும் வருட மாக்கிப் பிரித்து ஆளச்செய்தனன்.

13 சோதிட்டுமான் என்பவன் உ.தபிதன், வேணுமான், கபிரன், திருதி, சுவயிரதன், பிரகாமன், இலம்போதரன், ஆகிய தன் மகார்கட்குக் குசத்தீவினைப் பிரித்தளித்தான். தூமம்—புகை, தாமம்—மாலை, நாமம்—பெயர்.

14 வைவேல் — கூரிய வேலாயுதம், வபுட்டுமான் என்ப வன் சுவேதன், அரிதன், சீமூதன், உலோயிதன், சுப்பிரபன், மானன், வயிற்றுதன் ஆயமைந்தர்களைப்பெற்று அவர் பெயரால் சான்மலித்தீவினை வருடமாக்கியாளவளித்தான்.

15 மேதாதியென்பவன், சிசிரன், சாந்தபையன், சுகோதயன், நந்தன் (அந்தன்) சிவன், கேமகன், கஞ்சன் ஆய சிறுவர்களைப்பெற்றுப் பிலக்கத் தீவினை அவரவர்பெயரால் வருடமென்னும் பெருநிலமாக்கியவர்கட்கு அளித்தனன், சிறுவர் —புதல்வர்கள், ஓதும்—சிறப்பித்துக் கூறும்.

16 ஆக்கினீத்தான்என்னும் அரசன் நாபி, கிம்புருடன் ஆயவர்களையும், மணிமவுலி—இரத்தினங்கள் வைத்திழைக்கப்

பெற்ற முடி, கன்னற்சிலை — கரும்பாகியவில், பொற்பு — அழகு, விறல்கூர், வெற்றிமிகுந்த.

17 அரி, குருசித்து, இரண்ணுவான் என்பவர்களையும், உடலும்—மாறுபடும், வடி—கூர்மை, வயம்-வெற்றி, தடறு —உறையுள், தரியலர் — பகைஞர், விழிசேக்கும்—கண்கள் செவக்கும்.

18 மங்கல நாண்—மங்கல சூத்திரம், இரமியன், இளா விருதன் என்னுமிருவரையும், தென்னம்புலம்—தென்றிசை (இயமன் உலகு), வாங்கும்—வளைக்கும், குடியேற்றி—குடி போமாறு செய்து, அன்றி—அல்லாமல்.

19 குடாது, குணது, தெனாது, வடாது — மேற்கு, கிழக்கு, தெற்கு, வடக்கு திசைக் கண்ணது என்பது பொருளாம். கேதுமான், பத்திராச்சுவன் என்பவர்களையும் பெற்றனன். (16 முதல் 19 பாடல் முடியவும் குளகமாம்.) பொன்னங் குன்று—மகாமேரு மலை, கைப்படுத்தும்—வசப் படுத்தும், விடாத சீர்த்தி—நீங்காப் பெரும் புகழ்.

20, இமயமலைக்குத் தென்பகுதியினை நாபிக்கும், கிம்புருடமன்னனுக்கு ஏமகூட வருடத்தினையும், அரியென்பவனுக்கு நயிடதப்பேர் வருடத்தினையும் அளித்தான். வட்டம் அணைக்கன்னி—வட்டமாகிய ஆசனத்திலமரும் திருமகள், விமலம்—தூய்மை, பிரியா—விட்டு நீங்காத, வியப்பு—விம்மிதம் (ஆச்சரியம்),

21, மேருமலைசூழ்ந்த இளாவிருத வருடத்தை யாள்கவென இளாவிருதனுக்கு முடிசூட்டினான். நீலமலை சூழ்ந்த வருடத்தை இரமியன் காக்கவென முடிசூடுவித்தான் ஆர்வம்—அன்பு (ஆசை), அம்பொன்மவுலி—அழகிய பொன்னாலாகிய கிரீடம்,

22. சுவேதவரை சூழ்ந்த வருடமாகிய பெருநிலப்பகுதியைப் பெரியோரேத்தும் இரண்ணுவான் என்பவனுக்கும் குருவெனுமரசற்கு, சிருங்ககிரிக்குப் பக்கமாகவுடைய நிலப்பரப்பையும் ஆளுமாறு ஆணைதந்து முடிசூட்டினான், ஆன்ற நிறைந்த.

23 மேருமலைக்குக் கிழக்குப்பகுதியாகிய வருடத்தைப் பத்திராச்சுவனுக்கும் அம்மலைக்கும் மேல்பகுதியாகிய வருடத்தைப் (கந்தமாதனவருடத்தை) கேதுமான் என்பவனுக்கும் கொடுத்தரசளித்து முடிசூட்டினான், அறைந்த—கூறின.

24 தான்பயந்த—தான்பெற்றெடுத்த, இகல்-வலிமை, ஒன்பதின்மர் — ஒன்பதுபேர்கள், குடங்கை—உள்ளங்கை, உறங்கும்—துயில்கொளும், முன்றில்-திருவாயில், மன்னன்—அரசன் (நிலைபெறச்செய்பவன்) தளராமுத்தி — பேரின்பம்.

25 இமயப்பொருப்பு — பனிமலை (இமாசலம்) தென்பாலாம்வருடம்-தெற்குப்பக்கமாகியபெருநிலம். நாபியெனுமன்னன் மேருஎன்பவளைக்கூடி, இடபம் என்பவனைப் பெற்றான். அவன் பரதன் முதல் நூறுபுதல்வர்களைப் பெற்றெடுத்தனன், அமையாவென்றி—பெருவெற்றி, நலம்—இன்பம்.

26 பறைந்த—சிதறின. பைம்பொன் — பசுமையான பொன், உரவு—வலிமை, வலயம்—மண்டிலம், ஒரு கோல் ஓச்சி — (ஏகாதிபத்தியஞ் செய்து) ஒரு செங்கோலைச் செலுத்தி, இனிது அளிக்கும்—இன்பமுறக்காக்கும், விரை கொப்பளித்தல்—வாசனைவீசுதல், முத்திவீடு—முத்தியாகிய வீடு.

27 கப்பு—பிளப்பு, நெருப்புவிட்டு எறிக்கும் — அக்கினியை கக்கிக்கொண்டு வீசும், கண்ணுதல்சாமி—நுதல்விழி நாட்டத்திறைவன், தப்பு—தவறு (பிழை) வாய்மை—

மெய்ம்மை, ஈன்றருள்—பெற்ற, பரதன் புதல்வன்—சுமதியென்பவனும், எப்புவனம்—எல்லாவுலகம், துப்பு—பவழம், வடு—தழும்பு.

28 மலையும்—போர்புரியும், மருமம்—மார்பகம், பருத்தாள் — பெரியகால்கள், கரி—யானை, சுமதியருள்மைந்தன் இந்திரத்துய்ம்மனன் என்பவனும், தெருண்டோர்—தெளிந்தவர், தீபம் — விளக்கம், கலை—அறுபான்நான்கு கலைகளாம், கதிர்—ஒளி.

29 குருதி—இரத்தம், உவட்டெடுத்து-பெருகி, அவன் — இந்திரத்துய்மன், இவன் புதல்வன் பரமேட்டியாகும், இவன்சேய்பிரதிகாரன் என்பவன், துப்பு—வலிமை, சென்னி பிடுங்கி — தலையைப்பறித்து, கரடம்—மதம் பாய்சுவடு பாகன்—செலுத்தும் வீரன், காளை—காளைபோல்வான்.

30 பிரதிகாரப்பெயர் மன்னன்மகன் பிரதிகர்த்தாவென்பவனும், வெளிறு — அறியாமை, அதுக்கி—மென்று, கவுள்—கன்னம், தூர்த்து—நிறைத்து, கனன்று — கனலும்படிச்செய்து, அளறு—சேறு, ஆட—மூழ்க, ஒளிறு — ஒளிவிட்டுவீசும், திரித்து—சுழற்றி, வாகைகொண்டு — வாகைப்பூச்சூடிக்கொண்டு.

31 விண்படர்கீர்த்தி — விண்ணுலகம்வரை சென்ற புகழ், பிரதிகர்த்தாவின் புதல்வ்ன் பவன் என்பவனும். கண்படாமுரசம்—துயிலாத முரசவாத்தியம், கண்படுப்ப—அடிபடாமற்கிடப்ப, கறையடி—உரல்போலும்அடி அமர்க்களம் —போர்செய்யுமிடம், விதிர்க்கும்—நடுக்குறச்செய்யும்.

32 பவன்றன்புதல்வன் பவோகிளிதன், பிரத்தாபன் என்னும் நாமம் பூண்டவன் பவோகிளீதன் புதல்வனும் பிதிர்—துளிகள், சாடலும்—குத்துதலும், பிதிர்—பொடி, திரள்மருப்பு — திரண்டகொம்பு, அந்தார் — அழகியமாலை,

33 பிரத்தாபன் என்பவனுடைய புதல்வன் துவட்டா ஆகும் அவன் மைந்தன் விரசன் இவன்சேய் அரன் என்பவனும் சுற்றும் நின்று இரப்ப — நாற்பக்கங்களிலும் நின்று ஒலிப்ப கற்றை-தொகுதி, ஒளித்திட—மறைய, துணைவிழி-இரண்டுகண்கள்.

34 திரைதாழ்—அலைகள்படியும், கூன்புறத்துவரிவளை-வளைந்தமுதுகினையுடைய கீற்றுக்களமைந்தசங்கு, நெய்தல்—கடலும் கடல் சார்ந்த இடம், சேர்ப்பன் — கடற்கரைத் தலைவன் இரசசித்து வென்பவனாகும்.

35 இளமுறுவல்—புன்சிரிப்பு, அமுதுகும்—அமிர்தத் திணைக்கக்கும், போந்து—பனைமரம், புரை—துவாரம், விருந்து-புதுமை, மடன்மா-மடலால்ஆகியகுதிரை, ஏறிடும்-ஊரும், இரசசித்துவின் புதல்வன் விச்சுவச் சோதியென்பவனும்.

36 ஆம்பி—காளான், நிலா முன்றில்—நிலா முற்றம், பூப்ப—தோன்ற பள்ள நீர்—கடல், எங்கணும்—எவ்விடத்தும், நள்ளார்புரங்கள் — பகைவர்ஊர்கள், பாழ்பட—பாழாய்ப் போக, துரக்கும்—விரட்டும், விச்சுவச் சோதியின் புதல்வன் சயத்திரதன் ஆவன், புள்—பறவைகள், புலவு—புலால் மணம்.

37 குலத்துதித்த—குலத்தினிடத்துத் தோன்றிய, எறி—வீசும், நன்று — நல்லன, சரிதமும் — வரலாறும், நவின்றேம்-கூறினேம், துன்றுபாவத் தொடர்-நெருங்கிய தீவினை பற்றும் செயலை, தொலையா—அழியாத, ஒன்றி—பொருந்தி, உலவா—கெடாத, உறுவர்—அடைகுவர்.

37-வது அத்தியாயம் முற்றும்.

ஆகச்செய்யுள் 2332.

## 38-வது மண்டல வளவை யுரைத்தது

1 பாயதெண்டிரை — பரந்த தெள்ளியஅலைகள், பரவை—கடல், புவி—பூமி, நல்லுலகு — நல்ல உலகங்கள், அனைத்தினையும் — எல்லாவற்றினையும், இசைக்க — கூறுக, பொன்னகர்க்கரசு — இந்திரன், மேயஅன்பு — பொருந்திய காதல், விளம்பும்—கூறுவான்.

2 கூர் இருள் — மிக்க இருள், துடைத்த—போக்கின, அருணம் — செவப்பு, பங்கயம் — தாமரை, அலர்த்தும்—விரியச்செய்யும், இரவி — சூரியன், செங்கதிர் — செவந்த ஒளி, எத்துணை எவ்வளவு தூரம், பரவை மாநிலம்—கடலாற்சூழுண்ட பூமி, மேலோர்—பூமியின் தத்துவம் உணர்ந்த பெரியோர்கள்

3 குவலயம்—பூமண்டலம், ஆதவன்மண்டலம்—சூரிய மண்டலம், அதுவரையும் புவருலோகமாம், அதன்மேற்றுருவமண்டலத்தும்வரைபொருந்துவது சுவருலோகமாம். மறைபொருள் துணிந்தோர் — வேதத்தின்பொருளையறுதியிட்டறிந்தவர்.

4 ஆங்கண்—அவ்விடம், ஆகவன், பிரவகன், உதவகன் சங்ககன், நிவகன், பராவகன், பரிவகன், ஆகியஏழுவாயுசக்கரங்களே தனித்தனி மேம்பட்டு நிற்கும், வீங்கல்—பெருத்தல், ஓங்கல்—உயர்தல், தீங்கு—இடையூறு, (துன்பம்)

5 பார்—பூமி, நூறுயிரம்—இலக்கம், தரத்த—தகுதியுடைய, அரைத்தசாந்து — அரைக்கப்பட்டசந்தனம், மதிமண்டலம்—சந்திரமண்டலம், அத்துணை—அவ்வளவு, ஆல் அசைநிலை.

6 சந்திர மண்டலத்திற்குமேல் நூறுயிர யோசனை யுயர்ந்தது நட்சத்திர மண்டலம், நட்சத்திர மண்டலத்திற்குமேல் இரண்டு லட்சம் யோசனைக்குமேல் உயர்ந்திருப்பது கிரக மண்டலங்கள், கிரகம் — நவக்கோள்கள் என —என்று.

7 அதனின் ஓங்கும் — அதனின்மேல் உயரும், ஒரு லட்சம் யோசனைக் கப்பால் அறிவின் மேம்பட்ட ஏழ் முனிவர் மண்டலங்களாம். இம் மண்டலத்தின்மேல் நூறுயிரம் யோசனைக்கப்பால் உள்ளது துருவ மண்டலமாம்.

8 அலகில் — எண்ணிக்கையற்ற, தாரகை மண்டலம், கிரகமண்டலம் முழுதும் நிலைபெறும்படி நிறுத்துபவன் துருவன் ஆகும். இத் துருவன் இடத்தின்கண் பஞ்சாயுத பாணியாகிய திருமாலும் தருமமும் தங்கி யமரப் பெறுவர்கள், எறும்வலி — மிக்க வன்மை, இலகும் — விளங்கும்.

9 சூரியமண்டலத்தகலம் — ஒன்பதினுயிரம்யோசனை, சந்திரமண்டலத்தகலம் — 27 ஆயிரம்யோசனை, குலவு—விளங்கும், கோதுஇல் — குற்றமற்ற, நிலவுகால் — சந்திரிகையினைக் கக்குகின்ற, உலைவு — வாட்டம்.

10 மருவு — பொருந்தும், சாயை — நிழல், இராகுமண்டலம், மற்று — அசை, இராகுமண்டலத்தினிறம்-கருமையுடையது, கற்றுணர்ந்தோர் — அறிவுநூல்களை நன்காய்ந்தறிந்தவர்கள்.

11 சந்திரமண்டலத்தின் 16-ல் ஒருபங்கு சுக்கிரமண்டலமாம், அந்தில் — அவ்விடம், ஒழிய — குறைய (நீங்க), தயங்கும் — விளங்கும், நந்தல் — கேடு, வியாழமண்டலம் — பிருகற்பதிமண்டலமாம்.

12 குவலயம்தரு — பூமிதந்த, கோது — குற்றம், செவ்வாய்மண்டலம், தவல் அருந்திறல் — நீக்கற்கரிய ஆற்றல், சனியின் மண்டலவளவும் செவ்வாய்மண்டலமும் ஓரளவாம்.

13 வான்படர்ந்திடு — ஆகாயத்திற்செல்கின்ற, சனியின் மண்டலத்தளவில் நான்கிலிலொருகூறு புதன்மண்டலத்தளவாம், நகை — ஒளி, வான்மீன் — நட்சத்திரம், மேவிய — பொருந்திய, ஆன்ற-நிறைந்த, குறைந்தவும்-குறைவுற்றவும்.

14 சனி, வியாழன், செவ்வாய் இக் கோள்கள் மந்த சாரியர் ஆவர். சாரியர் — செல்பவர் (நடப்பவர்) மற்றை நால்வர் — புதன், வெள்ளி, கதிர், சந்திரன் இவர்கள். விரைவின் உந்தும்—விரைவினில் செலுத்தும், உலவுவர்— உலாவுவார்கள்.

15 மதி செலும்—சந்திரன் சஞ்சரிப்பான், மேலிட்டு— மேலாக, செலவயரும்—செல்லும், அதன்மேற் புதன் செல் லும், மோட்டுவார் கதிர்—உயர்ந்த நீண்ட கிரணம், சுக்கிரன் நடக்கும்; புதன் கிரகத்திற்குமேல்.

16 அறைந்த — கூறப்பட்ட, வெள்ளி — சுக்கிரன் அங்காரகன்—செவ்வாய், உயர்அந்தணன்—வியாழன் (குரு) அவன்மேற்சனிமெல்மெல நடக்கும் அவனுக்குமேல் சப்த இருடிமார்கள் உலவுவர். சிறந்த—மேம்பட்ட.

17 துருவன் என்பவன் அவ்வேழ் முனிவரின்மேல் உறைகுவன், இரவி வானவன் — சூரியதேவன், ஏழ்பரி— ஏழுகுதிரைகள், தடந்தேர்ப்பரப்புஒன்பதினாயிரம் யோ சனைத்தாம், இரட்டி—இருமடங்கு.

13 பருதிதேர்—சூரியனுடைய இரதம் நிலவு—நிலை பெறுகின்ற, நேமி—சக்கரம், ஆறுயோசனைத்தாம் தொலைவு —அழிவு, சுழலும்-சுற்றும், காலசக்கரம்-காலமாகிய சக்கரம்.

19 வாம்பரி — வாவும்பரி பாய்ந்துசெல்லுங்குதிரை கள், பச்சை—பச்சைநிறமுடையது, பதிந்திடும் — பூட்டப் பெற்ற, உச்சப்-மேல், வைச்ச—வைத்த, மானசோத்திரவரை —மானசோத்திரமெனும் பெயருடைய மலை.

20 வேதச்சந்தசுஓரேழும் சூரியன்தேரினில் பூட்டிய குதிரைகளாம் விசித்த — கட்டின, ஈரறுபருதி— பன்னிரு சூரியர், ஏதம்—குற்றம், மூவுலகு-சுவர்க்கம், மத்தியம், பாத

லம் என்பனவாம், விளக்குவர்—விளக்கஞ் செய்வர், ஆதி மூர்த்தியா மூவர்—பிரம விட்டுணு உருத்திரன் என்பவர், உரு—வடிவம்.

38-வது அத்தியாயம் முற்றும். ஆகச் செய்யுள்.

---

## 39-வது ஆதவர்ச் சிறப்புரைத்தது

1 நாமம்—பெயர், ஒழுக்கு — செலவு, விரை செய்—விரைந்து செல்லும்படிச் செய்யப்பட்ட, விளம்புதல்—கூறுதல், முனி—நாரத முனிவன், தரை—பூமி, அளந்தமால்—ஓரடியால் அளந்த திருமால், தகவு—தகுதி.

2 திங்கள்—மாதம், ஊழ்—முறை, சூரியர் பன்னிருவராவர் :—தாதா, அரியமா, மித்திரன், வருணன், சக்கரன், விவச்சுவான், பூடா, பர்ச்சன்னியன், அஞ்சன், பகன், தொட்டா (துவட்டா) விட்டுணு என்பவர்களாம், களங்கம்—குற்றம், துகள் – பழுது, உளம்—மனம், உதிப்பார்—தோன்றுவர்.

3 பன்னிரு முனிவரும், பன்னிரு சூரியர்களையும் பன்னிரு மாதத்தும் ஒரொருவராகத் துதிப்பார், அவராவார்: புலத்தியன், புலகன், அத்திரி, வசிட்டன், அங்கிரா, பிருகு, பாரத்துவாசன், கவுதமன், காசிபன், கிருது, சமதக்கினி, கவுசிகன் என்பவர்களாம், தொன்மறை-பழைய வேதங்கள்.

4 கிராமணியார்—தலைவர், (சதக்கிருத்து, இரவுதசன், சுவாகு, கிருதன், சுரதன், வருணன், சுசேனன், சேனசித்து, அரக்கன், அரிட்டநேமி, இரசசித்து, சத்தியசித்து,) தேர்க்கயிறு — தேர் வடம், மதிதொறும்—மாதந்தோறும், ஒருவரும்—நீங்கற்கரிய, பற்றி—பிடித்து.

5 கேதி, பிரகேதி, பவுருடேயன், இரதன், சற்பன், வியாக்கிரன், தனன், ஆதன், வித்தியுத்து, திவாகரன், பிரம

தேவன், எக்கிநோபேதன் இவர்கள் சூரியர் தேர்முன் ஒவ்வொரு மாதத்தில் ஒவ்வொருவராயுலவும் வாள்அரக்கராம்.

6 பரிப்பார்—சுமப்பவர், வாசுகி, கங்கணுளன். தட்சகன், சரப்புங்கவன், ஏலாபத்திரன், சங்கபாலன்) அயிராபதன், தனஞ்செயன், பற்மன், கார்க்கோடகன், கம்பளன், நச்சுவரதன், இரவி தேர்—சூரியனுடைய தேர், ஏசில்—குற்றமற்ற, தேசு—ஒளி, மூள் எயிறு—கூரிய பல், அழல் வாய்—அக்கினியைக் கக்கும் வாய்.

7 மன்னும்—நிலைபெறும், தும்புரு, நாரதன், நஞ்சன், மகரன், விசுவர, சுசேனன், அசுசி, அருவாவசு, பராவசு, சித்திரசேனன், ஊரன், ஆயு, இப்பன்னிருவரும். இருது-இரண்டு மாதங்கொண்டது. இருதுவுக்கிருவராகப் பாட்டினைப் பாடுவார்கள். பாட்டயர்வார்—பாடுவார்கள்.

8 இருத்தலை, புருசிகத்தலை இவர்கள் மகளிர்கள், இட்டிடை—நுண்ணிடை, மட்டவிழ்—தேன்சிதறும், நறுந்தார்—நல்லமணமுடையமாலை, அற-நன்றாக, வடம்—மாலை, சுமந்த—தாங்கின.

9 யான் எனதென்னுஞ்செருக்கு — அகப்பற்று, புறப்பற்று ஆகிய இருவகைப்பற்று (அகங்காரமகாரம்) குறும்பு —பகை, அகற்றும்—நீக்கும், பானல்—நீலோற்பலம், பாசிழை—பசியஅணிகலன், பொலங்கொடி—பொற்கொடி. மடல் மடல்மா. (மேனகை சககன்னியை இவ்விரு மகளிரும்)

10 வண்டுவீழ் — வண்டுகள்விரும்பும், வணர்—நெறிப்பு, கெண்டை—மீன், இகலும்— மாறுபாடுறும், நெடுங்கண்—பரந்த நீண்ட கண்கள், (பிரமலோசனை அநுமலோசனை என்னும் பெண்களும்) ஏக்கறவு—ஆசையாற்றாழ்தல்,

11 கிருதாசி, விச்சுவாவசி, இருமாதரும், மதாணி—மார்பிலணியும் பதக்கம் கவின்—அழகு, மதர்—செழிப்பு,

மறலி—இயமன், பயிற்றி—பழக்குவித்து, அலைக்கும்—வருத்தும், கற்றிட—கற்றுக்கொள்வதற்கு, எழில்—எழுச்சி.

12 மணிவடம் — முத்துமாலை, மூரிவேள் — வலிய மன்மதன், தழுவுதல் — பற்றிப்பிடித்தல், தளிர் இயல்—தளிர்போன்றதன்மை. கழை — மூங்கில், (உருப்பசி, பூருவசித்து என்னு மிருநங்கைமார்களும்) வதனம்—முகம்.

13 திலோத்தமை, சிரேட்டை என்னும் மங்கைமாரும் அணு—நுண்டுகள், வரையின்—மலைபோல, ஆடகப்பொலம்—ஆடகமெனப் பெயரிய பொன், பொருவும்—உவமிக்கும், துடி—உடுக்கை, பணியரவு—படமுடைய பாம்பு.

14 ஓராறு பருவம்—இளவேனில், முதுவேனில், கார், கூதிர், முன்பனி, பின்பனியாயவைகள், ஆழியம் பொருப்பு -சக்கரவாளகிரி, வலங்கொடு திரியும்—வலமாகச்சுற்றிவரும், ஒவ்வோர் இருதுவுக்கிரு மகளிராய்ச் சூரியன்முன் பாடியாடி குளிர்ச்சியுறச் செய்வர்.

15 இன்னணம் உரைத்தோர் — இங்ஙனம் இயம்பப் பட்டோர்கள், இசைந்து-இணங்கி (உடன்பட்டு) மன்னுயிர் அளித்து—உலகத்துயிர்களைப் பாதுகாத்து, மாற்றருந்தீவினை -கழுவாயாலும் மாற்றமுடியாத பாவச் செயல்கள், கடிந்தும்—போக்கியும், துளங்குதல்—அசைதல் (நடுங்கல்) குடுமி—சிகரம், போக்கயர்தல்—போதல்.

16 வானவர்—தேவர், பிதிர்க்கள்—தென்புலத்தவர், வயங்கும்—விளங்கும், வளர்ப்பதும் — வளர்வுறச் செய்வதும், முத்தேவர் — பிரமவிட்டுணு உருத்திரர், வேதத்தின் முடிவு—வேதாந்தம் (உபநிடதம்) வெறு வெளி—வெட்டை வெளி, சதாசிவன் — சிவலிங்க வடிவு, வெங்கதிரென—வெய்ய சூரிய தேவன் என்று, மறை விளம்பும்—வேதங்கள் மொழியும்.

39-வது அத்தியாயம் முற்றும். ஆகச் செய்யுள்

## 40-வது ஆதவர்கதிர்ச் சிறப்புரைத்தது

1 ஆதவன் கதிரில்—சூரியனுடைய கதிர்களில், சிறந்த—மேம்பட்டன சுசுமுணம், அரிகேசம் ஆகிய இரண்டு கதிர்களும் புதனுக்கு ஒளியினைத் தரும். விசுவைவிசம் எனும் கதிர் வெள்ளியை விளக்கும். அசுரம், கங்கியம் எனுங் கதிர்கள் மண்மகள்தனை விளக்கமுறச் செய்யும்.

2 வசுவெனுங்கதிர் வியாழத்தை விளக்கமுறச்செய்யும், மறு—களங்கம், சுவராட்டெனுங்கதிர் சனிதனை யொளியுற விளக்கும், இயம்பிய—கூறப்பட்ட, உடுக்கள்—நட்சத்திரங்கள், கவர்ந்து—பற்றியிழுத்து, மீட்டும்—மீளவும்.

3 வெய்யவன்—சூரியன் கதிர்கள் ஆயிரமாகும், கதிர்கள் நானூறு மழையினை பொழியச்செய்யும், முன்னூறு கதிர்கள் மழைவளஞ்சுரக்கச் செய்யும், பிறங்குஒளி—விளங்குகின்றஒளி, வையகம்—உலகம் (பூமண்டலம்) வயங்கு முன்னூறு கதிர்கள் அழகிய செந்தாமரைமலர் கருகப் பனித்துளித்துளிக்கச் செய்யும்.

4 மாசிமாதத்தில் வருணனும், பங்குனியில் பூடாவும் சித்திரையில் அஞ்சனும், வைகாசியில் தாதாவும், ஆனியில் இந்திரனும், ஆடியில் சவிதாவும், ஆவணியில் விச்சுவானும், புரட்டாதியில் பகனும், ஐப்பசியில் பருச்சனியும், கார்த்திகையில் தொட்டாவும், மார்கழியில் மித்திரனும், தையில் விட்டுணுவும் விளங்குவர்,

5 பகல்செய்வோர்—சூரியர்கள், மிசை—மேல் மலர்தலையுலகு—விரிந்த இடத்தினையுடைய உலகம், இருவிசும்பு—பெரியஆகாயம், குறும்புஎறிந்து — பகையை யொழித்து கான்று—கக்கி (சொரிந்து) பொலனெடுங்குடுமிவரை—மேரு

6 புங்கவர்—தேவர்கள், வருணனுக்கு ஐயாயிரமும், பூடாவுக்கு ஆறுயிரமும், அஞ்சனுக்கு ஏழாயிரமும், தாதாக்கு எண்ணாயிரமும் கதிர்களின் எண்ணிக்கை.

7 இந்திரனுக்கு ஒன்பதினாயிரமும், விவச்சுவானுக்குப் பதினாயிரமும், பகனுக்குப் பதினோராயிரமும், மித்திரனுக்கு ஏழாயிரமும் கதிர்களாகும் வழங்கினன் – கொடுத்து (முற்றெச்சம்.)

8 தோட்டாவுக்கு எண்ணாயிரமும், சவிதாவுக்கு ஒன்பதினாயிரமும், பர்ச்சனியனுக்குப் பதினாயிரமும், விட்டுணுவுக்குப் பதினோராயிரமும் கதிர்களாம். இவைகள் கீழ்த்திசையின்கண் நண்ணும், துனைவு — விரைவு, திரியும்—சுழன்று வரும்.

9 கொழுதி—கிண்டி, இளவேனில்—சித்திரை வைகாசி வெய்யோன்—சூரியன், இக்காலத்தில் சூரியன் நிறம் கபில நிறமாம், வேனில் — முதுவேனில், இக்காலத்தில் சூரியன் நிறம் பசும் பொன்னிறமாம், கார்காலம் வெண்மையாம், சுவேதம்—வெண்மை.

10 கூதிர் காலத்தில் சூரியன் நிறம் சாம்பல் நிறம், பனிக் காலத்தில் சூரியன் நிறம், தாம்பிரமாம். பின் பனிக் காலத்தில் உலோகிதமாம், மேலோர்—கலைஞர்கள், ஒதியகிரகம்—சூரியன் ஒழிந்தவை. சந்திரன், செவ்வாய், புதன் முதலாயின. ஏனைய எட்டுக் கிரகங்களுக்கும் சூரியனே ஒளி தருவான்.

11 சந்திரன் தேர்ச் சக்கரம் மூன்றும், சில்லி — சக்கரம், தேர்க் குதிரைகள் பத்தாம், இவற்றின் நிறம் குருந்த மலர் நிறமாம், சுசுமுனை யென்னுங் கதிர்களால் திங்கள் வளர்ச்சி யடையும், ஓர் கலை—ஒரு கூறு, மழுங்க—குறைய.

12 வெள்ளி—சுக்கிரன் இவன்றன் தேர்க்குதிரைகள் பத்தும் பூமியிற்றோன்றியன செவ்வாயின் தேர்க்குதிரைகள் எட்டாம், புதன்தேர்க்குதிரைகள் எட்டாம், வியாழன் தேர்க் குதிரைகள் எட்டாம் இவை பசும்பொன்னிறமாம்.

13 நீளிறக்கலிங்கம் — நீலநிறம்பொருந்திய ஆடை. இவன் தேர்க்குதிரைகள் 8 இவன்தேர் இரும்பினியன்றது இராகு கேதுக்களின் தேரிற் பூட்டிய குதிரைகள் அவ்வாறும் ஊனம்—குற்றம் (பழுது) காற்றெறுங்கயிறு—உருவகம் துருவன் இவர்களை இயக்குவானுர்.

40-வது அத்தியாயம் முற்றும்.

---

## 41-வது உலகநிலையுரைத்தது.

1 துருவமண்டலத்தின் மேல் இலகுவது மகலோகமாம். துருவமண்டலத்திற்கும் மகலோகத்திற்கும் ஒருகோடி யோசனையளவாம். அதன்மேல் சனலோகம். இஃது அதற்கு மேல் இரண்டுகோடியோசனையளவுடைத்தாகும்.

2 சனலோகத்தில் சதுர்முகன் முகத்திடைப் பிறந்த சனகன், சனந்தனன், சனுதனர், சனற்குமாரர் ஆகியோர். ஆங்குறைவர். சனலோகத்திற்குமேல் தவலோகம் மூன்று கோடியோசனை யுடையது, கருதுதல்—எண்ணங்கள்

3 இமைக்கும் — இமைத்தலைச்செய்யும், விழைவு—விருப்பம், கடவுளர்—தேவர், விண்ணவர்—விண்ணுலகத்தவர், தவலோகத்திற்குமேல் சத்தியவுலகம் இதற்குமேல் சத்தியவுலகின் எல்லை ஆறுகோடி யோசனைத்தாம்.

4 அச்சத்தியவுலகில் தாமரைமலரில் இருக்கும் பிரமன் ஆட்சிப்புரிகுவன், ஆயு—ஆயுள், வேதனுக்குரிய ஆயுள் எல்லையே அங்குறைவோருக்குமாம். எல்லை சொல்வதற்கில்லை. இவ்வுலகிற்குமேல் வைகுண்டவுலகாம், உவந்து—களித்து.

5 அவ்வுலகு—வைகுண்டவுலகு சகட்டுருள் — வண்டியின் சக்கரம், அலமரும்—சுழலும், இவ்வுலகினுக்கு மேலு

ளது சிவலோகம். இங்குச் சிவபெருமான் உமாசமேதராக சந்திர சேகரராக அமர்ந்திருப்பார், செவ்வி—அழகு.

6 ஐந்தவித்தல் — பஞ்சேந்திரியங்களையும் (ஐம்புலன், களையும்), வெல்லுதல், ஒடுக்கலுமாம், இலிங்கபூசனை—சிவ பூசனை, நல்யோகு – சிவயோகம், கணம்—சிவகணம், வந்தனை —வழிபாடு, மழவிடை—இளையகாளை (க்கொடி)

7 மேல்ஏழுலகாவன மகலோகம், சனலோகம், தவ லோகம் சுவர்க்கம் சத்தியலோகம் வைகுந்தவுலகு, சிவவுலகு ஆயவை கீழ்ஏழுலகமாவன மகாதலம், சுதலம், விதலம், நித லம் மகாதலம், தராதலம் பாதலம் என்பனவாம். சாலவும் —மிகவும்.

8 மகாதலம்—பொன்மையும், சுதலம் பவளவுருவும் நிதலம் வெண்மை நிறமும், நிதவம் கருமையும், ஆம் தரா தலம் பதுமராகமும் ஆகும் விதலத்தின் அயக்கிரீவன், மகா சம்பன், கம்பளவான் இவர்கள் தங்கியுறைவர்.

9 தலத்தினில் அரவங்கள் குடியிருக்கும் இரசாதலத் தில் கருடன் வாசுகி காலநேமி, கிலாதன், தாரகாதியர் முதலியவர் அமர்வர். தராதலத்தில் இரணியாக்கன் தக்ககன், விரோசனன் உறைகுவர்.

10 அளப்பருநிரயம் — எண்ணாற்றநரகங்கள் சேடன் ஆதிசேடன், கதிர்கள் — சூரியர்கள், காலாக்கினிருத்திரர் நாரசிங்கம் அங்குறைவர். மானுடமடங்கல் — நரசிங்கம் வெம்துப்பு—கொடியவன்மை.

41-வது அத்தியாய முற்றும்.

---

## 42-வது சம்புத்தீவின் சிறப்புரைத்தது.

1 நவையில் — குற்றமில்லாத, புவியின் அளவை— பூமியின் பரப்பளவு, பணிந்து—மிகவணங்கி, அவனி—பூமி உமிழ்ந்த—வெளிவிடுத்த, அளித்த—காப்பரற்றின.

2 ஏழ் தீவுகளாவன:— சம்பு, பிலக்கம், சான்மலி, குசம், கிரவுஞ்சம், சாகம், புட்கரம், என்பன. ஏழ்கடலாவன: உவர், கரும்பஞ்சாறு, மது, நெய், தயிர், பால், நன்னீர் என்பன, சுரை—மது (கள்) சீர்தணவு-சிறப்புப்பொருந்தல் பம்பு—பரத்தல், சூழ்ந்திடும்—சுற்றியிருக்கும்

3 நெடுந்தீவு — நீண்ட தீவுகள், வரைத்து—எல்லைப் படுத்து, ஐம்பான்கோடி-ஐம்பதுகோடி (யோசனை) தெரித்து — ஆராய்ந்தறிந்து, தரித்து — தாங்கி, சயிலம்—மலை, துலங்கும்—விளங்கும்.

4 மேருவின்—உயரம் எண்பத்துநாலாயிரம் யோசனை அடி. 16 ஆயிரம் யோசனை, மேல்பிரிவு 32 ஆயிரமாம், கீழ்ப் பரப்பு 16 ஆயிரம் யோசனைத்தாம். தேர்தல், ஓர்தல் ஆராய் தல் என்னும் பொருள, செப்புவர்-கூறுவர், ஆல்-அசைநிலை.

5 கமலம்—தாமரை, பொலங்கிரி—மேருமலை, வருடம் —நிலப்பரப்பு, தென்பால் நிடதவரை (நிடதமலை) அதன் தென்பால் ஏமகூடம், அதற்குந்தெற்கு இமயமலை.

6 புணரி—கடல், வடபக்கம் நீலகிரி, அதன் வடக்கு சுவேத மலை, அதன் வடக்கு சிருங்ககிரி, இவைகட்குமேல் பாலும் கீழ்பாலும் கடலிடமாம். மன்னுங்கோல்- நிலைபெற்ற அளவுகோல், தன்னேர்—தனக்கொப்பு.

7 மேருவின் தெற்கிலும் வடக்கிலும் அணித்தாயுள்ள நிடதவரை நீலவரைகளின் கீழ்மேல் நீளம் ஒவ்வொன்றிலக்

கம் யோசனையாகும். ஏமகூட மலைக்கும் இமயமலைக்கும் ஓரிலக்கத்திற்குப் பப்பத்து யோசனை குறைவாம்.

8 நீலவரைக்கும் வடபாலுள்ள சுவேதமலை நீலவரைக்குச்சொன்ன அளவைக்குப் பத்துயோசனை குறைவாம். சிருங்ககிரிக்கும் சுவேதமலையிற் பத்துயோசனை குறைவாம். உயரமும் அகலமும் இவற்றிற்கு ஈராயிரம் யோசனை யென்றுரைப்பார்கள்.

9 மேருவினுக்குத் தெற்கிலும் வடக்கிலும் உள்ளதும் கிழக்கும் குடக்கும் கடலை யெல்லையாகவுடையதும் நிடத நீலமெனும் மலைகளைத்தழுவி மிகவுயர்ந்திருப்பதும் மாலியவான்மலையும் கந்தமாதனமலையும் ஆகும்.

10 பாண்டியன் மகரக்கொடி எழுதியமலை மேருவாம் மாலியவான்மலையைத் தழுவிக் கீழ்பாலிருப்பது பத்திராச்சுவராங்கண்டம். கந்தமாதனமலைக்கு மேல்பாலுறுவது கேதுமாலமெனுங் கண்டமாம், பழுது—பயமிலது.

11 மாலியவான் எனும் மலைக்குக் கீழ்பால் சோமால் வரையும் ஏமகூடமும் நீலமும் நிடதமும் ஆகிய மலையினை நெருங்கிக்கிடக்கும் கந்தமாதனமலைக்கு மேற்கிலுள்ள நிடத மால் வரையும் பாயத்திரமும் நீலநிடதமலையை அடைந்து நிற்கும்

12 எண்பதினாயிரம் யோசனை யளவுடையதாய்க் கீழ்கடல் மேல்கடல்களை யெய்தி கண்கவர் வனப்புப் பொருந்திய கயிலைமலையும் கந்தமாதனகிரியும், பரதகண்டத்தினைப் பொருந்தித் தென்கடலை மிகச்சார்ந்து விளங்கும். கொழித்து—ஒதுக்கி, மகம்—வேள்வி.

13 திருசிருங்கம், சாருதி யெனப்படும் மலைகளிரண்டும் மேல்கடலும் கீழ்க்கடலும் தனியேமேவி, எண்பதினாயிரம் யோசனையவாகி, விண்ணுலகென விளங்கும் உத்தர குருவைத்தழுவி உயர்ந்து வடகடலையணித்தாகி மேவும்.

14 நிடதமலைக்கும் ஏமகூடமலைக்கும் நடுக்கண்டம் அரிவருடமாகும். ஏமகூடத்திற்கும் இமயத்திற்கும் கிம்புருட கண்டமாம். இமயத்தென்பால் பரதகண்டமாம். இடர்-துயர் கோது—குற்றம். நிகழ்த்தும்—கூறப்படும்,

15 மேருமலைக்கு வடபாலதாகிய நீலவரைக்கும்சுவேத மலைக்கும் சாரும்நடுஇரம்மியவருடமாம் சுவேதவரைக்கும் உவமையில்லா சிருங்ககிரிக்கும் நடு இரண்மியவருடம். சிருங்க மலைக்கு உத்தகுருவெனும் புண்ணிய பூமியாம்.

16 மேருவிற்கு வடபாலும் தென்பாலுமுள்ள கண்டங்கட்டுக் கூறப்பட்ட அளவை ஒரொன்று ஒன்பதினு யிரம்யோசனைத்தாம். மேருமலையினைச் சூழ்ந்த கண்டம் பேசின் இளாவிருதம் தங்கிய திசை நான்கும் ஒரொன்று ஒன்பதினுயிரம் யோசனையுடைத்தாம்.

17 கிழ்பால் உயர்ந்த மந்தரம், தென் பகுதியில் கந்தமாதனமாம். குடபால் விபுலமலை, வடபால் சுபா ரிச மலையாம். பாழிவரைகள்—பெரிய மலைகள், இளாவிருத கண்டத்துறையுஞ் சுடர்ப்பருதிசூழும் மலையின் கீழ்ப் பக்க லில் குற்றமற்ற கடப்பமர நிற்கும்.

18 மேருவின் வடபால் சிறந்த பொன்மயமாகிய கிளை களையுடைய ஆலமரம் நிற்கும். அம்மலையின் மேற்கில் அரசமரம் ஓங்கி நிற்கும், தெற்குப் பக்கப் பரப்பின்கண் பெரிய கிளைகளையுடையதும், மிகப் பெரிய கனிகளையுடையது மாகிய நாவல்மரம் நிற்கும், ஆர்வம்—அன்பு, சினை—கிளை, தென்னம்புலம்—தெற்குப் பக்க இடம்.

19 விசும்பின் முகடு—ஆகாயத்தின் உச்சி, பராஅரை—பருத்த அடி, வழிதேறல் — வழிந்து விழும் தேன்போலும் சாறு, கல்—ஒலிக் குறிப்பு, துனைவு—விரைவு, சூழ்போதந்து—சுற்றி, பொற்றிரை-பொன்போலும் அலை, பேர்யாற்றைச் சம்பு நதியெனப் புகல்வர்.

20 நன்னதி—சம்புநதி, உலந்த — காய்ந்த, மாற்று ஒப்பு — மாற்றும் உவமையும், சாம்பூநதம் — நால்வகைப் பொன்னிலொன்று, அமரர்—தேவர், தோற்று நீர் — உண்டாகிய தண்ணீர், அவண் உறைந்தோர் — அவ்விடம் தங்கினோர், தொழுநோய் — பெருநோய், மூப்பு—கிழத்தனம், ஆற்றல்— வலிமை, உவப்ப—மகிழ

21 மேருமலையின் கீழ்பால்உள்ள சோலைதனக்கு சயத்திரரதமெனப் பெயராம், சோர்வுறும் — தளர்வுறும், பார்புகழ் — பூமியிலுள்ளோர்கூறும் புகழ்ச்சி, தென்பாற் சோலை கந்தமாதன மெனவும், மேல்பாற் சோலை வயிப்பிராசம் எனவும் பெயராம்.

22 வடபுலத்தமரும் (மேருவின்வடக்கு) சோலை நந்தனவனமாம், அம்மலையின் கிழக்கிலுள்ள தடாகத்திற்கு அருணோதமெனவும், தெற்கின்கண் உள்ள வாவிக்குப் பத்திரமெனவும் நாமம் நவில்வர், உந்துதல் — தாவுதல், சந்தம்— அழகு.

23 அம்மலையின் குடபால் உள்ள வாவியை அசிதோதம் எனவும் வடபால் உள்ள குளத்தினை மானசவாவி யெனவும் கூறியழைப்பர், குழை—காதணி, மவ்வல்—முல்லைமலர், குழலார் ஆடும்—கூந்தலினையுடைய மகளிர் மூழ்கும்.

24 பானல் — நீலோற்பலமலர், பான்மதி—பால்போலும் வெள்ளியசந்திரன், மீனினம்—மீன்கூட்டம், மருள— மயங்க, ஆழி — சக்கரம், வெய்யவன்—சூரியன், பரி—குதிரை கான்அவிர்-மணம்வீசிவிளங்கும், பலகையின்-பலகைபோல, தேனிறால் — தேன்கூடு, உடைய — உடைபட்டு, தூங்கி— அசைந்து, இவ்வளம் உடையது, சிதாபமலையாம்

25 பளிக்கு—பளிங்கு (கண்ணாடி) வேழம்—களிற்றியானை, மாலொடும்—மயக்கத்துடன், மருப்புஇற—கொம்பு ஒடிய, பிடி—பெண்யானை, நோக்கி—பார்த்து—பால்புரை—

தீஞ்சொல்-பால்போலினியமொழி, இயக்கியர்-இயட்சமகளிர் இவ்வளமுடைய மலைக்குக் குமுத்துவான்மலையென்பது பெயர்.

26 அரி-உள்ளீடு பருக்கை, முழவு-மத்தளம், ததும்ப—ஒலிப்ப, தரளம்-முத்து கத்திகை—மாலை, மிடறு—கழுத்து, காமரம், சீகாமரமெனும் பண், கூத்து—நடனம், அயர்சாலை-நடிக்குமிடம், எழினி — திரை, முகில்—மேகம், இத்துணை வளமுடைய மலை குசரமால் மலையாம்.

27 பகல்கெட — சூரியவொளிமங்க, இமைக்கும் — ஒளிவிடும், வரன்றி—திரட்டிக்கொண்டு, தண்மைதீர்ந்து—குளிர்ச்சிநீங்கி, அலர்கதிர் — விரிந்தகிரணம், பிலிற்றும்—துளிக்கும், புலர்ந்திடாத—உலராத, சூரரமகளிர் — தீண்டி வருத்தும்தெய்வமகளிர், இச்சிறப்புடையது பொன்மலையாம் (கனகம்—பொன்)

28 குழித்த—குழியும்படிச்செய்த, நித்திலம்—முத்து, அரம்பை—வாழை, கூன்புறத்த—வளைந்தமுதுகினையுடைய, நயக்க—விரும்ப, அமலை—ஒலி, அவிப்ப — மறையும்படிச் செய்ய, விழ்தரும்—விரும்பும், (மேகமலைமிகவளமுடையது)

29 உழுவை—மான், விழ்ந்திடலும்-விழவும், வெருவி — அஞ்சி, பொறிப்பறழ் — புள்ளிகளையுடைய குட்டி, முழைஞ்சு—குகை, படர-செல்ல, இவ்வளமுடையது மாலிய வான் மலையாம், மல்லல்—வளனும்.

30 உளி—ஒருவகை யாயுதம், கேழல்—காட்டுப்பன்றி, உழுதிடும்—கிண்டிடும், இமைக்கும் — ஒளிவிடும், கவலை—ஒரு வகைக் கிழங்கு, கோட்படுத்தி—அகப்படுத்தி, ஆலும்—அசைந்து கூத்தாடும், கம்பலை—ஒலி, அரிமான்—சிங்கம், இச் சிறப்புடையது நீலவான் மலையாம்.

31 கொடிச்சியர் — வேட்டுவிச்சியர், உவலை — ஓலை, குறுநடை—சின்னஞ் சிறு நடை, கயமுனி—யானைக் கன்று,

சூழ்ந்தனர்—சுற்றி, ஆட்டயர்தல்—விளையாடல், இறங்கும் —இழிந்து செல்லும், இவ்வளம் உடையது மிருக்கிசவான் என்று மலையாம்.

32 இப்பாடல் விந்த மலையின் சிறப்புக் கூறுவது, வால்உளை—வெள்ளிய தலையாட்டமெனும்அணி (பிடரி மயிருமாம்), மடங்கல்—சிங்கம், எயினர்—வேடுவர், படர் தரும்—செல்லும், கல்லதர்—மலைவழி, கழை — மூங்கில், மருப்பு—தந்தம்.

33 மை—கருமை, மந்தி—பெண்குரங்கு, தீயென—நெருப்பு என்று, வெருவி—பயந்து, கைம்மலை—யானை, கரட நீர்க்கலுழி — மதநீராகியவெள்ளம், தவழும் — தவழ்ந்து செல்லும், இம்மலை மந்தர மலையாகும்.

34 உளைந்து — வருந்தி, ஓதையும்—ஒலியும், குழவி வெண்டிங்கள்-இளஞ்சந்திரன், இழியா-இழிந்து (இறங்கி) இழும்—ஒலிக்குறிப்பு, முழக்கு—ஒலி. முண்டகம்—தாமரை தெறிக்கும்-விரலால் தட்டும், சாந்தம்-சந்தனம் (நிடதமலை)

35 சூல்பிடி—கருவுற்றபெண்யானை, சாரல்—மலைப்பக்கம், குருதி—உதிரம், ஆடும்—விளையாடல்செயும், இம்மலை வேணுமான் என்பதாம்.

36 சாந்தம்—சந்தனமரம், தெவிட்டும் — தெவிட்டச் செய்யும் (தேக்கும்) விண்ணகம்—சுவர்க்கம், குழைத்து—தழைத்து, குளவு—இலை, அருத்தி—உண்பித்து, அரசுவா —அரசயானை, வழங்கும் — உலாவும், இம்மலைமுருசுகமாம்.

37 பொன்மலை — மேரு, கால்கொடு — கால்களைக் கொண்டு, நடந்தென—நடந்தாற்போல, திரியும் — உலவிச் சுற்றும், மைம்முகில்-கரிய மேகங்கள், மாதர்-காதல், தணிந்திடாது—நீங்காது. (சயிலவான்மலையாம்)

38 வெண்டோடு (வெண்மைத்தோடு) வெள்ளிய இதழ், பாசடை-பசிய இலை, கமலப்பள்ளி-தாமரைப்படுக்கை கண்படைகூர—துயில்மிக, ஆய்சிறை—அழகிய இறகுகள், அருணோதவாவியின்கீழ்பால், யோகியர், இயக்கர், உம்பர் ஆயவருறையும் ஆவதியாம்.

39 ஊற்றிருக்கும்-சுரக்கும் (பெருக்கெடுக்கும்) கலவி -கூட்டம், சங்கத்துணி—சங்கவளையலின் துண்டு, பிள்ளைமதி -இளஞ்சந்திரன், இணைத்து—பொருத்தி, அணிக-அணிந்து கொள்க மயக்கும்—மயங்குறச்செய்யும் (திரிகூடமலை)

40 அண்ணாந்து — உயர்ந்து, செம்மாந்த—இருமாப் புற்ற, வண்ணம்—அழகு, மதிமேல்—சந்திரனிடத்து, சாரல் —மலைப்பக்கம், விண்ணோர்தரு—கற்பகமரம் (பரங்கமெனும் மலை சிறந்ததாம்)

41 ஐம்பால்—கூந்தல், கறி—மிளகு, குவளை — நீபோற் பலமலர், தழூஉமுற்று—தழுவிக்கொண்டு, தாளப்புனையும்— முத்தமாலையினை யணியும், எழில்—வனப்பு (உசகமெனும் மலையின் சிறப்புக்கூறப்பட்டுள்ளது)

42 கிள்ளை—கிளி (திரிசொல்) அண்டர்மகளிர் (தேவ மகளிர்கள்) ஊழ்த்த செம்மல்—உதிர்த்த பழம்பூ, புலியின் பறழ்—புலிக்குட்டி, வெருவி—பயந்து, கண்புதைக்கும்—கண் மூடிக்கொள்ளும், கொண்டல்-மேகங்கள் (நிடதமலையாகும்).

43 ஆசினி — பலாவின் ஒருவகை, உகிர்—நகம் போழ்ந்து—வகிர்ந்து, அளித்து-கொடுத்து, சேர்தல்-அடை தல், பைத்த—படமுடைய, குறத்தியர்—வேட்டுவிச்சியர், உயங்கும்—வாடும் (பிராதகப்பேர்மலை)

44 பூநுதல்—அழகிய நெற்றி, வழங்கும் — உலாவும், அருவி—மலையருவி நீர், பரூஉத்தாள்-பெரிய அடி, தடக்கை

—பெரிய துதிக்கை, வாரி—அள்ளி, நாணுடு—வெட்கி, இம்மலை பஞ்சசையம் என்பதாம்.

45 கடாம்—மதநீர், நீந்துபு—நீந்துதலைச் செய்து, மென்மெலப் பெயரும்—மெதுவாக நடக்கும், பொற்பு—அழகு, தவழ—செல்ல, கற்பக நாடு—விண்ணுலகு, குழலுக்கு—கூந்தலுக்கு, ஊட்டிடும்—உண்பிக்கும், (கலிங்க மலையாகும்).

46 வரி—கோடு, இதண்—கிளிகடிவோர் தங்கும் பரண், அசைந்து—அசைவுற்று, கலவிப் பூசல்—கூடுதலில் உண்டாகும் ஒலி, (சண்டை) அரும்புவேர்—தோன்றுகின்ற வியர்வை நீர், புலர்த்தும்—உலர்த்தும், (வேணு மலையாம்).

47 காழ்—வயிரம், கோடு—கிளை (கொம்பு), கவை—பிளப்பு, பாழிவாய்—பெரிய அங்காந்த வாய், பொறி—புள்ளி, வெங்கதிர்—சூரியன், சண்பக நறுமலர் வண்டுபடாதனவாம். மாழை—மான், (குரவவான் மலையாம்)

48 கன்று(ள்)ளி—கன்றினை நினைந்து, விரை—மணம், கொடிச்சியர்—குறிஞ்சி நில மகளிர், ஓங்கும்—உயரும், பருமணி—பெரிய மாணிக்கம், (குமுத மலையாம்).

49 கோட்படுத்தல்—படுகுழியில் வீழ்த்துதல், கானவர்—காட்டு வாழ்க்கையர் (வேடுவர்), கலைந்து—கலையப் பெற்று. துளிமுகில்—துளித்தலைச் செய்யும் மேகம், வெளி—ஆகாயம், தினை காக்கும்-தினைப்புனத்தைக் காவல் புரியும், கம்பலை—ஓசை, (கேடில்லாச் சிரினையுடையது) சிந்துர மலையாம்,

50 தெங்கு—தென்னை, ஐவனம்—மலை நெல், வேய்—மூங்கில், துணர்—கொத்து, கறிக் கொடி—மிளகுக் கொடி, வயின் வயின்—இடந்தொறும், ஏத்தரும் வளம்—மட்டற்ற வளம். இம்மலை உதாரமலையென்பதாம்.

51 இருபுடையும் — இரண்டு பக்கங்களும், சுரும்பின் கடும்பு—வண்டுகளின் சுற்றம், வீழ்பிடி — விரும்பும் பெண் யானை, இனம்—கூட்டம், (ஏகசிருங்கமலை) இனிது அளித்து —நன்மையுறக் கொடுத்து.

52 முகிழ்த்திடும்—குவியும், வடவை—வடவா முகாக் கினி, மூட்டி — மூள்வித்து, முறச்செவி — முறம்போலும் காதுகள், புகைக்கனல்—புகையோடுகூடியநெருப்பு, நெகிழ்ந் திடவும்—இளகவும், உயர் அடுக்கல் — உயர்ந்த மலை, இரவு எரிமரம்—சோதிவிருட்சம், (இச்சிறப்பினதுசயிலமலையாம்).

53 துகிர் — பவழம், கவலை — ஒருவகைக் கிழங்கு, மிடைந்து—நெருங்கி, விருந்தினர்—புதியவர், தடங்கண்— விசாலமான கண்கள், நறுமலர் குற்று — நல்ல பூக்களைப் பறித்து, வருந்தற—வருந்துதல் நீங்க, உருள்பூந்தாரவன்— தேர்ச்சக்கரம் போலும் மலர் மாலையினையுடைய முருகப் பெருமான், (வளங்கெழுபசாச மலையாம்).

54 நீர் எறியும் — நீரினை வீசி எறியும், புழைக்கை— துவாரம் உடைய கை, கயமுனி—யானைக் கன்று, புனிறு— ஈன்றணிமையுடையது, மூன்றில் — வாயில், மருட்டும் — மயங்குறச் செய்யும், வெயில்—ஆதவன், செலவு—போக்கு, (வசுதார மலை).

55 தாவும்—பாயும், செறிந்து—நெருங்கி, குடபுலம்— மேற்குத்திசை, கங்குல் — இரவு, காழ்கொள — வயிரமுற, (உறுதி கொள), வெற்றுடல்—உயிரில்லாஉடல், மூச்ச வித்து—மூச்சினை யொடுக்கி, தகை—தகுதி, (விலாச மலை யாகும்).

56 குஞ்சரம்—யானை, துவைப்ப—மிதிக்க, தாக்கலும் —அடிக்கலும், முட்புறக் கனி—பலாப் பழம், சுடுபொனின்

—உருக்கிய பொன்போல், (தந்தியம் மலையாப்), கையகத்து—கையினிடத்துள்ள, இறடி—கருந்தினை.

57 கற்றை—தொகுதி, வேய்ந்த—மூடின, குற்ற—பறித்த, அனந்தர் (அனந்தல்) துயில், குறுவிழி—சிறியகண் கோடு-கிளை, மொய்ம்மலர்-நெருங்கியபூக்கள், பொலிந்திடும்—விளங்கும், திரிசிருங்கமலையின் வளங்கூறப்பட்டது.

58 வரன்றி — அரித்துக்கொண்டு, காழ்படும்அகில் முருடு—வயிரம் பொருந்திய அகில்கட்டைகள் துடியடி—உரல்போன்றகால், கவிழ்தலை—கவிழ்ந்ததலை, எண்கு-கரடி அடுபுலி—கொல்புலி, ஆல—ஆடிட, கண்படுக்கும்—உறங்கும். இச்சிறப்புடையது கயிலாயமலையாம்.

59 உணக்கும்—காயவைக்கும், பழிப்பு-நிந்தை, வாள் முகம் — ஒளிபொருந்தியமுகம், ஆம்பல் — அல்லிமலர், அளிக்குலம் — வண்டுக்கூட்டங்கள், வீழ்தரும்—விரும்பியமரும், தோம்அறு—குற்றமற்ற, இந்நிலையுடையது இமயமலையாம்.

60 சேயிதழ் — செவந்தஇதழ்கள், கருநெறி — கரியபுறவிதழ், அரக்குஆம்பல் — செவந்தஅல்லி, பிலிற்ற—துளிப்ப, நிவந்து—உயர்ந்து, மாபத்திரவாவியின் தென்பால் கண்கவர் வனப்பொடும் இருக்கப்பெறும்.

61 கோட்டுமுத்தம் — யானைத்தந்தத்திலுண்டாய முத்து, ஒப்ப—விரட்ட, எரிந்துவீழ்உடு—விண்வீழ்க்கொள்ளியாகிய எரிநக்ஷத்திரம், நகை—ஒளி, நுதல்-நெற்றி, கறை—களங்கம், கபிலக்குன்றம்.

62 கோழ்அரை — வழுவழுப்புடையஅடி, அகடு—நடு (வயிறுமாம்) ஏய்க்கும்—ஒக்கும், காம்பு — குடைக்காம்பு, பாழி—பெருமை இந்நல் வளமுடையது கந்தமாதன மலையாம் என்க.

63 பொருசினம்—பொருகின்ற கோபம், மடங்கலேறு —ஆண் சிங்கம், கிரிசரத்து எய்தி — கிரிசரத்தையடைந்து, கேழல் கிளைத்திடும்—பன்றி தோண்டிடும், குலிகம்—சாதி லிங்கம், தோய்ந்த—படிந்த, மாந்தி — குடித்து, கீண்டு—பிளந்து, வெள்கும் — வெட்கமுறும், கோடு—உச்சி. இம் மலை சுகந்த மலையாகும்.

64 தூங்கும்—அசையும், இறுல்—தேன் கூடு, இரிய—ஓட, முசுக்கலை—குரங்கு, தத்துதல்—தாவுதல், கவைகதிர்—பிளப்புறு கதிர், ஏனல்—தினை, (சிருங்கவான் மலை).

65 மேய்ந்து—தின்று, குதட்டி—மென்று, பொதுளும் —நெருங்கியிருக்கும், உழக்கி — கலக்கி, பிணர்—சுரசுரப்பு, ஆமான்—காட்டுப்பசு, திரள்—தொகுதி, குரா—ஒருவகை மரம், சூழ்கிடந்த—சுற்றியுள்ள (இது பாரிசமலையாம்.)

66. வரைநடந்து என்ன — மலைநடந்தாற் போன்ற, மால்யானை—மயக்கமுற்ற களிறு, வெருவச்சிலைக்கும்—அஞ்சுமாறு ஒலிக்கும், குருளை — குட்டி, படுத்திட—பிடிப்ப, இடார்—பொறி, நரந்தமான்—கத்தூரிமிருகம், (சுதகமாம் புண்ணிய மலையாம்),

67. நெடுங்கழை—நீண்ட மூங்கில், விடர்பிளில்—துளையில், கால்புகுந்து—காற்று நுழைந்து, இரைத்தல்—ஒலித்தல், குறிஞ்சி—குழிஞ்சிப்பண், ஆய்மயில்—அழகிய மயில், ஆலும்—ஆடும், (சுரசமாம் வான்பெருங்குன்றம்)

68. இதண் — பரண், சேக்கை—கூடு, குரீஇயினம்—குருவிக்கூட்டம், கடியும்-ஓட்டும், ஏய்க்கும்-ஒக்கும், வளம் —வளப்பம் (சிகுநாடமலை)

69. மாதர்—அழகு, பொரிமானும்—பொரியினையொக்கும், போது—பூ, வாய்திறந்து—வாயினையலர்த்தி, தாது—மகரந்தப்பொடி, பொறி—புள்ளி, சிறகர்—இறகு. கழிதுயில் —மிக்க உறக்கம், (சகடநீள் குன்றமாம் இம்மலையென்க.)

70 இப்பாடல் பிங்கலமலையின் சிறப்புரைக்கின்றது பொதியவிழ்த்த—கட்டுவிட்ட (நெகிழ்ந்த) கொன்றை—கடுக்கைமரம், போந்தை – பனைமரம்.

71 பொற்குழை — பொன்னுலாகிய காதணிகள் கொள்ளை—மிகுதி, அரற்றும்—ஒலிக்கும், கள் அவிழ்—தேன் துளிக்கும், சண்பகம்—வண்டுபடாமரமாம், இம்மலை சேண மலையாம்

72 அசோகு—ஒருவகைமரம் (சோகந்தவிர்ப்பது) கருமுகமந்திகள்—கருமையாகியமுகத்தினையிடைய பெண் குரங்குகள், வானவர் மகளிர்—தேவமாதர்கள், நிழலுரு—சாயல் பொருந்தி (அடைந்து) நீப்பு—நீக்கல், சேக்கை— படுக்கை (பத்திரவரை)

73 கறங்கு — காற்றாடி, கனல்—தீ — வால்உளை—வெள்ளியபிடரிமயிர், தொண்டகம் — குறிஞ்சிநிலப்பறை பிணா—பெண், இருந்துயில் — நல்லுறக்கம், துறந்தவர்—பற்றுவிட்டவர், வீழும்—விரும்பும் (மேகமலையாம்)

74 கல்லென்ன—மலையென்று, அமர்ந்திடும்—தங்கும், விழித்து, — உறக்கம் நீங்கி, கறையடி, — உல்போலும் கால்கள், பெயர்த்து, — இடம்விட்டு, எண்ணி — கருதி, கணவர்க்கு—தலைவர்க்கு, (பிஞ்சரக்குன்றமாம்)

75 உரல்முகம்—உரல்போன்ற முகம், பயம்பு—குழி, பிதிர்த்து — வெட்டி, தறுகண்—அஞ்சாத்தன்மை, கோட்படுப்ப — பிடிப்ப, தொட்டவான்கிடங்கும் — தோண்டின பெரிய அகழும், நெடும்பணை-நீண்டகிளை, வேங்கை-வேங்கை மரம், வீ—மலர், (புண்டரீகமால் வரை.)

76 கூன்-வளைவு, கொய்யுளை-கொய்யப்பட்டதலையாட்டமெனுமணி, ஏழ்பரி—ஏழுகுதிரைகள், பிணித்த—கட்டப்பட்ட, வான்றலை-ஆகாயத்திடத்து, ஓட்டற-ஓடுதல், ஒழிய,

தேன்மொழி — தேமொழியெனவாயிற்று, கான் — மணம், (இம்மலைகபிலோதமலையாம்)

77 முடம்—வளைவு, நெட்டிலை-நீண்டஇலை, ஊழ்த்து —உதிர்ந்து, கதலி—வாழை, ஒடிக்க — முறிந்துவிழும்படிச் செய்ய, கடுவன்—ஆண்குரங்கு, சுளைகள் — பலாச்சுளைகள் (பாண்டரவரையாம்)

78. சிறை—அணைக்கட்டு, நீள்மரத்து - நீண்டமாமரத்தில், பறிய விழ்தலும்—பிடுங்கிக்கொண்டு விழ்தலும், கானவர்—வேடுவர், குடில்—சிறுவீடு (கிட்டிண மலையாம்.)

79. கடவுள் புலவர்—தேவதச்சன், கைசெய்யா-கையினாற் செய்யப்பெறாத, மருங்குல் —இடை, அலம்வர—சுழல, வரையரமகளிர் — மலையரப்பெண்கள், குரவையாட்டு—குரவைக்கூத்து, வெண்கோடுத்து—புறமுதுகிட்டு (பாரியாத்திர மலையாம்)

80. மைம்முகில்—கரியமேகங்கள், தைவருதல்—தடவுதல், நெடுஞ்சிலைவெற்பன்—நீண்ட வில்லையுடைய மலைநாடன், சேடு—அழகு; பிரிதல்—நீங்குதல், பாடு—பெருமை, அமை—மூங்கில், இம்மலை குமுதமலையாம்.

81. பிறைவளர் மருப்பு—பிறைபோல் வளைந்த நீண்டகொம்பு, ஏனம்—பன்றி, போத்து—விலங்கினாண், தாக்க—மோத, சீயம்—சிங்கம், ஏற்று—எதிர்த்து, செரு—போர், ஆய்கதிர்—அழகிய கதிர்கள், மின்—மின்னல் (இலகுடமலையாம்.)

82. இரவலர்—ஏற்பவர் (யாசகர்), பருதிபோக்கு—சூரியன் செல்கை, பொன்னணி-பொன்னாபரணம், சொரியும் — இறைக்கும், சுட்டிடும் — நெருப்பிட்டுக் கொளுத்தும் இவ்வளமுடையது சாருதி மலையாம்.

83 பொற்றசும்பு—பொற் குடம், ஏய்க்கும்—ஒக்கும், பொற்பு—அழகு, உடுக்கணம்—நட்சத்திரக் கூட்டம், கலங்குபு — கலங்கி, பொன்குடுமி — பொன்மயமாகிய சிகரம், உயர்ந்த மதுமான் என்னும் குன்றமாம், 'இது'

84 பாவடி—பரந்த அடிகள், வழன்றிடும்—வழன்று போகும்படிச் செய்யும் புழுகு—ஒருவகைப்பூனை, முளவுமா—முள்ளம்பன்றி, விரியல்—விரித்தல், ஆயிரங்குடுமி நீள்மலையாகும், இம்மலை.

85 ஆவி—நீராவி, பருமம்-ஒருவகையணி, காம்புறழ்—மூங்கில்போன்ற, ஆம்பல்—செவ்வல்லிப்பூ, வாய்—அதரம், ஐங்கணை—ஐந்துபாணம், ஏம்பல்—இன்பம், இம்மலை, மணிவான்மலையாம்.

86 வலம்புரி — வலமாக முறுக்கினையுடையசங்கு, உயிர்த்த—ஈன்ற, அரற்றும்-ஒலிக்கும், கரு-சூல் (முட்டை) மணிவான் குன்றிறுக்குமேல் அசிதோதம் என்னும் தடாகம் பொருந்திய கிடக்கும். அன்றே—அசைநிலை

87 சுரும்புவீழ்ந்து — வண்டுகள் படிந்து. பனையுறழ் தடக்கை—பனைபோன்ற பெரியகை, ஏழிலைம்பாலை யென்பது ஒருவகைமரம், முருக்கி—ஒடித்து, சினக்கரி-கோபமுடைய யானை (சங்கநூசமெனும் பவனமலையாம்)

88 தமரம்—ஒலி, தாமம்—மாலை, கமழல் — வாசனைவீசல், தூய—தூய்மையான, மாநதி—பேரியாறு, அமரர் — தேவர்கள், (அங்கசமலை)

89 நறவு—தேன், நாகிளஞ்சுரும்பு — மிக இளமைவாய்ந்த வண்டு, பனைக்கைவேழம் — பனைபோலுங்கையினையுடையயானை தருஇடை-மரத்தின்கண், மல்லல்—வனப்பம் (நீலவெற்பும் நிடபம் என்னும் பெயர்பெறும்)

90 குழை—தளிர், குறுமக்கள்—சிறுவர், காந்தள்—காந்தட்பூ, புழையெயிறு-துவாரமுடைய பற்கள், பாந்தள்—பாம்பு, பொறி—புள்ளிகள், தோகை-கலாபம் மாகமெனும் பெயரிய மலையாமிது)

91 தாளதாமரை—தண்டுவையுடைய தாமரை மலர், தாக்கணங்கு—இலக்குமி, இடும் இதண்—பெரிய பரண், குரீஇயினம்—குருவிக் கூட்டம், ஓப்பும்—ஓட்டும், தீம்சொல்—இனிய மொழி, கேளலம்—கேட்கமாட்டோம், (நேமிமலை).

92 தோயின்-படியின், கப்பணம்-முள், (நெருஞ்சில்) பனித்திடும்—நடுங்கும், பம்ப—ஒலிப்ப, காமவல்லி—விருப்பத்தைத் தருங் கொடி, தவழும்—ஊர்ந்து செல்லும், (இம்மலை நீல வெற்பாம்).

93 ஐது — அழகு, அகன்ற—பரந்த, மை—மேகம், புழை—துவாரம், நால்வாய்—தொங்குகின்ற வாய், ஆடும்—விளையாடும், ஆரம் — சந்தனம், இந்நிலையினையுடையது கலாஞ்சனமெனப் பெயரிய மலையாம்.

94 திரள்—திரண்ட (பருத்த), சிந்த—சிதற, எற்றி—மோதி, அருவி கொண்டு—அருவிகளைக் கொண்டு, இறங்கும்—இழியும், (சுமேதமென்னும் மலையாம்).

95 வடவர் — வட நாட்டினர், சந்தம் — சந்தனம், கோட்டி—பூசி, தக்கவர்—வேலைக்காரர், பூண் — அணிகலன்கள், மடமயில் — இளமயில், ஆல — ஆட, புலவர்களால் வராகமென்று சிறப்பித்தோதப் பெறும் மலையுமுண்டாம்.

96 உக்கு—அற்று, நிலம்பக—பூமி பிளக்க, குடக்கனி—குடம்போலும் பருத்த பழம், இதழி—கொன்றை, இலங்கொளி—விளங்குகின்ற பிரகாசம் சிந்தும்—சிதறச் செய்யும் (புட்கரமெனும் பெயரிய மலையாம்).

97 மென்போதின் — மெல்லிய பூவின்மேல், ஊழ்த்த—உதிர்ந்த, மென்போதும் — மெல்லிய மலரும், பொருவும்—ஒக்கும், மலர்க்கை மீதில்—மலர்போன்ற கைகளின்மேல்,

ஏந்திய—தாங்கிய, பந்துபோன்ம் என்று—பந்தினை யொக்கும் என்று, மால் உழந்து — மயக்கத்தால் வருந்தி. (இம்மலை பிரசம் எனப் பெயரியதாம்).

98 பூங்கழை—அழகிய கரும்பு (மூங்கில்) உகுத்த—உதிர்த்த (சிந்திய) வெண்மருப்பு-வெள்ளியதந்தம் நேராய்-சமமாய், மாறும்—பரிமாறும் (விற்கும்) பூந்துகள்-மகரந்தப் பொடி (கபிலமலையாம்)

99 ஈர்ம்மலர் — ஈரமுற்றபூக்கள், பிலிற்ற — துளி துளிப்ப, ஐம்பால்-ஐந்துவகையினை யுடைய கூந்தல், அறை —பாறை, ஆற்ற—புலரச்செய்ய, இனமஞ்ஞை—இளமை யானமயில்கள் (மயூரவெற்பு—மயூரமலையாம்).

100 துறந்த—அரசுரிமையினைவிட்டு நீங்கின, நீத்த—கழித்த, சுடர்மணி—இரத்தினங்கள் கலன்கள்—அணிகலன்கள், யாவும்—அனைத்தும், விசும்பின்நாப்பண் — அகாயத்தின் நடுவில், கறங்குஎன—காற்றாடிபோல, உறங்கலர்—யோகியர்கள் (கபலவெற்பு ஒருமலையாம்).

101 இலகுதல்—விளங்குதல், தோய்ந்து — படிந்து, சேந்து—செவந்து, வரியளி—கீற்றுக்களையுடைய வண்டுகள் துதைந்து—நெருங்கி கமலம் விள்ளும்—தாமரை விரியும் மொய்யொளி கனகக்குன்றமும். ஆம்.

102 கானல்—கடற்கரைச்சோலை, கழங்கு—அம்மனை, குளிர்கதிர் — குளிர்ந்தகதிரினையுடைய, கமலம்மென்பூ—தாமரையாகிய மெல்லிய பூக்கள், எங்கணு—எவ்விடத்தும் மானதவாவி—மானசதடாகம், வடபுலத்தியங்கும்.

103 நாற்றிசைதோறும் — நான்குதிக்குகளிடத்தும், சொன்ன — கூறப்பட்ட, வீற்றுவீற்றுக — தனித்தனியாக, வெள்ளிடையதனில்—வெளியிடத்தின்கண் அமரரும், இயக்கரும், சித்தரும், வித்தியாதரரும் வாள்போன்ற கண்களையும் சங்கவளையல்தரித்தகைகளையுமுடைய மாதருடன் குலாவி இன்ப நுகர்வராம்.

42வது அத்தியாய முற்றும்.

---

## 43-வது மேருவின் சிறப்புரைத்து.

1 காசு—பொன், மேருவின் நடுவில் மனேவதியெனும் பெரிய நகரமொன்றுண்டாம். பதினாயிரம் யோசனை யளவினை யுடையதாம், பாசடை—பசிய இலை—புழைத்தாள்—துவாரம் பொருந்தியநாளம், மாசறு படிகக்கொடிபுரை மேனிமயில்—கலைமகள்.

2 அம்மனேவதிநகரின்கண் மலரயன், சனகன், சனந்தனன், சனுதனன், சனற்குமாரன் முதலாகிய தவச்சிரேட்டர்களும், காமம் வெகுளிமயக்கங்களைக் களைந்தவர்களும், மெய்ப்பொருளுணர்ந்த பெரியோர்களும், வேள்வியாற்றிய பெரியோர்களும் வீற்றிருப்பர்.

3 மனேவதிநகரின், மேற்றிசையில் வைகுந்த நகர் உள்ளது. ஆயிரங்கோடி சூரியர்களின் மொய்த்தகதிர்போன்றிலகுமுழுமணிகுயின்ற நெடுநிலைமாடங்களுடையது. அங்குப் பாம்பணையில் திருமாமகளொடும் திருமால் எழுந்தருளியிருப்பார்.

4 சூரியன்சேவடி பணிந்தவரும், அவன் சகச்சிரநாமம் நவின்றவர்களும் நல்லவேள்வி புரிந்தவர்களும் கங்கா தீர்த்தமாடினவரும் திருமாலுருவம் அடைந்து (சாரூபநிலை) அங்கு வீற்றிருப்பார்.

5 மனேவதி நகருக்குங்கீழ்பால் முச்சுடரும் பலகோடியாக மேலேயுயர்ந்து வந்தது. எனச் சுடர்பரப்பி வனப்பும் வளமுமிக்க அரசநகர் அசோவதி, யென்னுங் குற்றமற்ற பெயரொடும் விளங்கும்.

6 அவ்வசோவதி நகரில் விபூதி உருத்திராக்கந்தரித்தவரும் சிவராத்திரிவிரதம் முறைப்படி யநுட்டித்தவரும்

சாமவேதம்பயின்றவரும் காசியிலிறந்தவரும், பொறிபுலன் போக்காது தற்பரத்தடைந்தவரும் அங்கு வந்தடைவார்களாம்.

7 அந்நகர்தனில் அட்டதிக்குப்பாலகரும், நான்முகக்கடவுளும், நாரணக்கடவுளும், விரைமலர்ச்சேவடிபோற்ற, உமாதேவியார் பக்கத்திலமர முன்னைப் பழம்பொருட்கு முன்னாய் உரையுணர்வு கடந்த முக்கட்கடவுள் எழுந்தருளியிருப்பர்.

8 மனோவதிநகரின் கீழ்பால் விளங்கியிருப்பது அமராவதிபட்டினமாம் இஃது திருமகள் கடாட்சம் பெற்றிலகுவது அங்குச்சிந்தாமணியும், சங்கநிதி, பதுமநிதிகளும் காமதேனுவும் பஞ்சதருக்களும் அரம்பையர்களும் மேவப்பெற்றுளது,

9 அந்நகரில் அரசுவீற்றிருப்பவன் புலோமிசைமணாளனாகிய இந்திரனாகுவன். அங்கு உருப்பசி, திலோத்தமை, அரம்பை, மேனகையாயவர் நடனமாடுவர். தேவர்கள் பணிபுரிகுவர்.

10 அங்கு, போர்க்களத்திடை செஞ்சோற்றுக்கடன் கழித்த வீரர்களும், மடிந்தவர்களும், இல்லற துறவறத்தினின்றும் தவிராது ஒழுகியவர்களும், பத்தினிமார்களும், நாளும் நல்ல றஞ்செய்தொழுகினோரும் நண்ணியின்புறுவர்.

11 தென்கீழ்த்திசையில் தேசோவதியெனும் புண்ணிய நகராம், அந்நகராள்பவன் செந்தழற்கடவுளாம். இங்கு வேள்விபுரிந்தவரும், வேதமந்திரம் வளம்பினவரும், ஆட்டுக்கிடாய்வாகனனாகிய அக்கினிவடிவுற்றுத் திகழ்வராம்.

12 தென்றிசையில் சையமினிநகரமொன்றுண்டு அங்குக் கற்பின் மேம்பட்ட மகளிரும், மெய்ம்மை யுணர்ந்தவரும், என்பெழுந்தியங்கத் தவம் புரிந்தவரும் அந்நகரில் இன்புற எழுந்தருளியிருப்பர்.

13 தென்மேற்றிசையில் இரக்கோவதி யெனும் நகருண்டு. இதனை யாள்பவன் நிருதியாவன்று மேற்றிசையில் சபாவதியெனும் நகர் உளது, அந்நகராள்பவன் வருணனு வன். மகரகேதனனும், இவன் வானவரும், இயக்கரும் புகழ இருப்பன்.

14 வடமேற்றிசையில் கந்தவதியெனு நகரம். இதனை யாள்பவன் வாயு பகவான். வடதிசையில் கீர்த்திமதியெனு நகரினையாள்பவன் குபேரனும். இயக்கர்கோன் எனவும் பெயர் பெறுவான், அறங்கிளர் முனிவரும் இயக்கரும் துதி புரிவர் இவனை.

15 வடகீழ்த் திசையில் மசோவதியெனும் நன்னகரு ளது, பிறைச் சந்திரனையும் கங்கையையுந் தரித்த செஞ்சடை யும் முக்கண்ணுமுடைய ஈசானதேவர் பூதகணம் புடை சூழ்ந்து துதிப்ப சிங்காசனத்தில எழுந்தருளியிருப்பர்.

16 உயர்ந்த அண்ட முகட்டினின்று மான நீர் பெருக் கெடுத்தோடும் கங்கை, திங்கட்கண்ணியோன் திருமேனிமுழு தும் நனைத்து நீண்டோடி சத்தியவுலகின் அருவி நீர் போலச் சொரிந்துசீதை, சக்குசை, அளகநந்தை, பத்திரை யெனத் திரியும்.

17 அந்நதிகளில் சீதையெனு நதியானது மேருவின் கீழ்பால் பத்திராச்சுவகண்டத்தை வழிக்கொண்டு சென்று பாய்ந்து கீழ்பால் கடலை யடைந்திடும்.

18 அளகநந்தையெனும் நதியானது மேருவின் தென் பக்கத்தில் பரதகண்டத்திடைப்பரவி ஆயிரமுகவாகினியாய்க் கீழ்க்கடலையடையும்

19 சக்குசையெனுங் கங்கையானது மேருவின் மேல் பால் கந்தமாதன வருடத்திற்பாய்ந்து சுறவம் திமிங்கிலம் ஓட மேல் கடலிடையடையும்.

20 பத்திரையெனுங்கங்கை மேருவின் வடபாலில் உத்தரகுருவினை எய்தி பலமலை நிலைகுலையச்செய்து இருமருங்கிலுமுள்ள கரைகளைப் பெயர்த்துத் தரங்கங்கள் மலைகளைப் போலமடங்கும் வடகடலையடையுமாம்.

43–வது அத்தியாய முற்றும்.

## 44-வது நவகண்டத்துறைவோரியற்கை யுரைத்தது

1 கூறப்பட்ட பலகண்டத்துறையுநர், உணவு, ஆயுள் நிறம், இவற்றினைப்பற்றிக்கூறுவது, உரைத்தி—கூறுவாய், குறும்பு—பகை, உந்தி—கொப்பூழ்.

2 ஓசை—புகழ், (கேதுமாலகண்டத்துறையுநர்பற்றி யுரைப்பது) மாசு—குற்றம், ஆடவர் மகளிர் நிறம் நீலமாம் அவர்மேனி நீலோற்பலமலர் வாசனைவீசும், பலவினறுங் கனி உணவு. ஆயுள் பதினாயிரம் ஆண்டுகள்.

3 பண்ணவர்கள்–தேவர்கள், பத்திராச்சுவவருடத்தில் உறைபவர் (ஆடவரும் பெண்டிரும்) நிறம் வெண்மை. உணவு—தேவாமிருதம், பதினாயிரம் ஆண்டுகள், ஆயுள்.

4 தள்ளரும் — நீக்கற்கு அரிய, இரமியகவருடத்தில் வாழும் இருபாலாரும் வெள்ளியுலோகம்போன்ற நிறத்தினர் உணவு ஆலங்கனியாம். ஆயுள்பதினோராயிரத்தைஞ் நூறு வருடங்கள், ஆடவரும் மகளிரும் என்று மிளமையாம்.

5 இரண்மியவருடத்தில் வாழும் ஆண்களும் பெண்களும் பொன்னிறத்தர், உணவு இனிக்கும் எலுமிச்சங் கனியாம். பன்னீராயிரவருடம் ஆயுளாம், நரைதிரைமூப்பின்றி ஒரு பெற்றியாக வாழ்ந்திடுவர்.

6 குருவருடத்தினில் உறையுங் காளையரும் மகளிரும் மரகதநிறத்தராம், உணவு ஆவின்பாலாம், சதாசிவனைப் போற்றுபவர். ஆயுள் 12500 ஆண்டுகள்.

7 கிம்புருட வருடத்திலுறையும் மக்கள் நிறம் செம்பொன்நிறமாகும், ஆயுள்-ஒருபதினாயிரம் ஆண்டுகளாம் வாசனை வீசும் இறளியங்கனிகளே ஊணும். பிரமனை யேயுபாசிப்பவராவர். தேவரும் விரும்பும் அழகுகொடு இன்ப சுகத்தை யநுபவிப்பவர்.

8 அரிவருடத்தில் உறையும் ஆண்பெண்களும் நெருப்பிலிட்ட பொன்னிறமுடையவர். கருப்பஞ்சாறு உணவாகும் திருமாலை வழிபடுபவர் இளமையுடன் பதினாயிரம் ஆண்டுகள் வாழ்வார்.

9 ஏமகிரியினைச் சுற்றியுள்ள இளாவிருதகண்டத்தினர் செந்தாமரை மலர்போன்ற நிறமுடையவர், நாவற்பழச்சாறு உணவு, பதின்மூவாயிரமாண்டுகள் ஆயுள்.

10 பரதகண்டத்திலுறையும் மாந்தரும் மாதரும் பற்பலநிறமும், வடிவும், ஊணும் உடையவராம், ஆயுள் நூறுண்டுகளேயாம், மறை—வேதம்.

11 இருவினை—நல்வினை தீவினைகள், சிமிழிப்பு-கட்டு மருவினும்—பொருந்தினும், இவர்கள் கருவிலும், காளைப் பருவத்தின்முன்னும் (பரதகண்டத்தினர்) இறப்பர் பாறினும்—தொலையினும், கழியினும்—நீங்கினும்.

12 பாரதவருடம் ஒன்பதினாயிரம் யோசனைப்பரப்புடையது. ஏனைக்கண்டங்களை யெய்துமவர் அழகுமிக்கதிருவினராய் அமர்ந்து வாழ்குவர், இக்கண்டம்-இப்பரதகண்டம், ஆர்வம்-ஆசை (அன்பு) ஆற்றும்—செய்யும்.

13 பாரதவருடம் ஒன்றே கருமபூமியாம், இந் நிலத்தில் நல்வினையாற்றியோர் துறக்கத்திலும், தீவினைபுரிந்தோர் நரகத்திலும் சென்று இன்பதுன்பம் நுகர்வர்.

14 பாரதவருடத்தில், மலயம், சையம், சுத்திமான், இருக்கம், விந்தம், பாரியாத்திரம், மயேந்திரம் என ஏழுமலைகள் உண்டு என்றுரைப்பர்.

15 இந்திரத்தீவு, நாகத்தீவு, வாருணத்தீவு, திரவத்தீவு சவுமியத்தீவு, கபத்திமான் தீவு, பிரமான் றீவு, கசேட்டுமான் றீவு, பாரதப்போர்த்தீவு ஆக ஒன்பதாகும்.

16 வரைத்து — அளவுபடுத்தி, பாரதவருடம்—பரத கண்டத்திலுள்ளது, தரைக்கு—பூமிக்கு, நான்குவன்னத்தவர் —நான்குசாதியினர், நெறியின் — சாதிமுறைப்படி, வாழ்வார் —வாழ்க்கைபுரிவர்.

17 மேற்கில்—யவனரும், கிழக்கினில், வேடுவரும் வாழ்க்கை புரிவர், நடுவிடத்தில் மறையோர் மன்னர், வணிகர் நாலாம் வருணத்தவர் வாழ்க்கையுறுவர், தடுப்பு—தடை.

18 இப்பாடல் கங்கைமாநதியின் சிறப்புக்கூறப்பெறுகின்றது, பனைக்கைமால்யானை—யானையசுரன், போர்வை—மூடியிருப்பது (மேலாடை) படிந்து—தோய்ந்து.

19 இப்பாடல் சோணையாற்றின் சிறப்புக்கூறுகின்றது. கொழித்த—ஒதுக்கின, படர்சிறை — விரிந்த இறகுகள், தொகுதி—திரள், உய்க்கும்—செலுத்தும்.

20 தவழ் — ஊரும், எருத்தம் — கழுத்து, மூரி — பெருமை, பகல்கெட—சூரிய வெளி நீங்க, செய்ய—செவந்த, வரன்றி—அரித்துக் கொண்டு, வாரிதி—கடல், வாலுவாகினியாற்றின் சிறப்புச் செப்பப் பெறுகின்றது.

21 திறல்—வலிமை, மாய்ப்ப—கொல்ல, நரந்தமான் —கத்தூரி மிருகம், ஆர்க்கும் — ஒலிக்கும், செருந்தி—ஓர் வகைப் பூமரம், சாந்தம்—சந்தனம், புலவு—புலால் நாற்றம், இவ்வளம் மிக்கது கவுரியாறு எனப் பெயர் பெறும்.

22 வண்டுகளின் பேதங்கள், வண்டும், தேனும், ஞிமிறும், சுரும்பும் ஆம். ஆரம்—சந்தனம். குமிழி—நீர்க் குமிழி. போந்து—வந்து. இது வினைச்சை யாறும்.

23 இமிழ்—ஒலி, பூத்த—தோன்றின, சிற்றுதரம்—சிறு வயிறு, காழிமாமுகில்-திருஞானசம்பந்தப் பிள்ளையார், எதிர்போக்கி — எதிரேறச் செலுத்தி, தமிழ்க் குறும்பு — தமிழ்ப் பகை, வலம்புரி—வலம்புரிச் சங்கு, வைகையாறு.

24 சித்திர சபை—பஞ்ச சபைகளிலொன்று, நடம்புரி கடவுள்—கூத்தப்பிரான், (குற்றாமலையில் ஐந்தருவியுண்டு) திங்களின் அமிருதத் துளி, கங்கையின் துளி, தேன்றுளி, பொற்சுளை, முத்து ஆயவற்றொடு சித்திர நதி முழங்கும்.

25 தென்றலங்குழவி — சிறுதென்றற்காற்று, உயிர்த்த—பெற்ற, தென்மலை—பொதிய மலை, குறுமுனி—அகத்திய முனிவரர், புணரி—கடல், புனிதம்—தூய்மை, தாது—மகரந்தப் பொடி, பொருநை—தாமிரபரணி.

26 மண்ணமை—மார்சனையமைந்த, முழவு-மத்தளம், மணிநிற வண்ணன் — நீலமணிபோலும் நிறமுடைய கண்ணன், ஆயர்—இடையர், பெட்பு – விருப்பம், நங்கையர் உரு — மகளிர் வடிவு, புணரும்—கூறும், காளிந்தி—யமுனை.

27 மறுகாது—சுழலாது, திமிரி நிமிரப் பூசி, பரிவின் — அன்புடன், தோய — மூழ்க, விடலரும் — நீங்கற்கரிய, தெய்வ வாசம்—கடவுள் மணம்.

23 திங்களங் கண்ணிப்புத்தேள்-சந்திரசேகரன், கரையலைத்து—கரைகளை மோதிக் கரைத்து. தாணுவின்—இறைவனைப்போல. ஓசைபோய—புகழ்சென்ற. இன்றும் நருமதா பாண லிங்கம் என வழங்கப் பெறல் காண்க.

29 ஆழ்ந்து — ஆழமுடைத்தாகி, வாய்ந்து — வாயப் பெற்று, வெளிறு—வெண்மையறிவு. கேள்வி வல்லோர்—கேள்வி ஞானமுடைய கவிகள், தரங்கம்—அலை.

30 கந்து — கட்டுத் தறி, கார்அகில் — கருமை நிறம் பொருந்திய அகில் மரம், ஆரம்—சந்தனம், உந்து—வீசும், உவரி—உவரையுடையது (தாபி யென்னும் யாறு.)

31 ஆடுநர்—மூழ்குபவர், சீர்த்தி—மிகுபுகழ், பாவந் தீர—தீச்செயல்ஒழிய, ஒல்லே—விரைவு, குமரியென்றுரைக்கும் புண்ணியநதியும்ஆம்.

32 மட்டு—வாசனே, தானவர்—தேவர், இட்டிடை—சிறியஇடை, கிட்டிணவேணியென்னும் கடவுள்நதியாம், ஓங்கும்—உயரும்.

33 வள்ளம்—கிண்ணம், நீலப்போது—நீலோற்பலம், வெண்கோடு — வெள்ளியதந்தம், ஆற்ருல் — வகையால், உள்ளுநர்—எண்ணுபவர் (உருமைநதியாம்).

34 பவவு-பலாமரம், வீழ்த்தி-கீழேதள்ளி, கொள்ளே —தொகுதி, படப்பை-தோட்டம், வெள்ளம்-நீர்ப்பெருக்கு, இவ்வளமுற்றது வித்தையாரும்.

35 சூறை — கொள்ளே, இகலி—மாறுபட்டு, இறுத்தால்—தங்கினுல், பல்பொருள் — பலவகைப்பட்டபொருள், வேற்றரசு—பகைமன்னன், இந்நதி—வைதரணிநதியாம்.

36 இப்பாட்டு வந்தனேயென்னும் ஆற்றினேப்பற்றிக் கூறுகின்றது. சிந்தி—சிதறி. மோதி—முட்டி. தட—பெரிய, மடவியர்—இளமங்கையர்.

37 ஓர்பகல்—ஒருநாள், உளத்திடை—மனத்தின்கண் எண்ணல்—நினேத்தல், துறக்கம்—சுவர்க்கம், தீம்புனல்—இனியநீர், வார்திரை—நீண்டஅலேகள், மண்ணுவதியாரும் என்க.

38 சித்திரநதி — சித்திரயாறு, சிறப்பு — மேன்மை (புண்ணியம்) எத்தலம்—எந்தவிடம், தீர்க்கும்—போக்கும் சத்ருவென்னும்நதியாம்.

39 புரவிமாமகம் — அசுவமேத யாகம், எரிபுகுந்திறந் தோர்- தீப்பாய்ந்திறந்தவர் (சககமனம் செய்தவர்). திவலை— நீர்த்துளி, உய்க்கும்—செலுத்தும், திகழ்—விளங்கும். இவ் வளமுடையது விநதைநதியாம்.

40 பாலைநீள்குறிஞ்சி—பாலை நிலமும், மலை நிலமும், பலகை—கேடகம், வரிவில்—கட்டமைந்தவில், கடும்கொடும் பகழி—வேகமாகச் செல்லும் கொடிய அம்பு. வேலை-கடல், (மந்தகை நதியாம்).

41 வேதச்சுருதி யெனும் நதியின் சிறப்புச் செப்புகின் றது:— முடற்போந்து—வளைந்த பனைமரம், சூதம்-மாமரம், திரைக்கரம்—அலைகளாகிய கைகள், விருந்து அளிக்கும்— புதுமைப்பொருள் படைக்கும்.

42 மிடறு—கழுத்து, நிலவு — சந்திரிகை, வாடை— வடக்கினின்றும்வரும் காற்று, எறிந்து-வீசி, கொழுநன்-கண வன், உலவும்—திரியும், கடல்வாய்—கடலினிடத்து, (இரு டிசைநதியாம்).

43 தொடைவேய்ந்து—மலர்மாலை சூடி, நித்திலம்— முத்து, புளினம்—மணற்குன்று, பாயும்—தாவும், கயல்கண் —கயலாகிய விழிகள், கூத்தி — நடன மாது. (தோகை நதியாம்).

44 அரம்—அராவுங் கருவி, அளிகுடைந்து—வண்டுகள் கிண்டி, மிலைச்சுதல்—சூடுதல், பாவக்குறும்பு—பாவமாகிய மலை (பகை), மாற்றுதலால்—போக்குதலால், புத்தேள்— சிவபெருமான், தாமசிநதியின் சிறப்புக் கூறப்பெற்றுள்ளது.

45 குழை—தளிர், கோகி—அலகால் வகிர்ந்து, நம்பு —விருப்பம், அம்பி—தோணி (நாவாய்) பொன்னிப் பேர் யாறு—பொன்னியெனப் பெயர் பெற்ற காவிரிநதியாம்.

46 குடம்காய் — குடம்போற் பருத்த காய், முடத் தெங்கு—வளைந்த தென்னை, கவரி—கவரிமான், வயங்க—விளங்க, மொய்த்து—நெருங்கி, பழம்—நெற்று, கிழித்து—பிளந்துகொண்டு (ஓடும்). (விபாசை யென்னும் பெருநதியாம்)

47 சுவர்க்கவுலகையும் இந்திரனையும் தோற்றுவிப்பேன் என்று கோபித்தெழுந்த மாறில்லாத தவத்தினையுடைய விசுவாமித்திரனுடன் பிறந்த கவுசிகையாம் பேர்யாறுகூறப் படுகின்றது.

48 இப்பாடல், பயோட்டிணியாற்றின் சிறப்பினைக் கூறுவது. இது முருகனை யொத்திருப்பது எனச் சிறப்பிக்கப் பெற்றுளது. மை—குற்றம், செய்யது – சிவப்புநிறமுடையது, மொய்—வலிமை.

49 இஃது, துங்கபத்திரையெனும் யாற்றினைப்பற்றியது, நான்முகனை யொத்துள தென்பர். அமர்தல் மேவல் என்பன பொருந்துதல் என்னும் பொருள. பவம் துடைத்தல் -பிறவிப் பிணி யொழித்தல், முன்னுதல்—கருதுதல், பன்னரும்—கூறற்கரிய, படரும்—செல்லும்.

50 இது, பாகுதையாற்றைப்பற்றியது, பொறுது—தாங்கமுடியாமல், போக்கும்—நீண்டிருக்கும், அறுபதம்—வண்டுகள், புள்—பறவை, சாடி — அடித்துக்கொண்டு, கூத்தியர்—நடனமாதர், கவர்ந்து—பறித்துக்கொண்டு, கலை—நாடகக்கலை.

51 இதுசலாதலி நதியினைப்பற்றியது, முள்புறக்கனி-முள்ளைப்புறத்தேயுடைய பழம், கையரிக்கொண்டு—ஒருசேர அடித்துக்கொண்டு, மருங்கு—பக்கம், கோழ்—வழுவழுப்பு, அரம்பை — வாழை, வேர்பறியா — வேரினைப்பிடுங்கி உய்த்திடும்—செலுத்தும்.

52 சுசோபனைநதியினைப்பற்றியது, கடும்புனல்—வேகமாக ஓடும்நீர், இற—ஒடிய, கண்ணனில் — கண்ணபிரானைப் போல, புறவு-முல்லைநிலம் (காடுகள்) பொதுவியர்-இடைச்சியர், தோய்தல்—நீராடல், துகில்—ஆடை, குழிசி—பானை ஓசித்து—ஒடித்து.

53 மங்குல் — மேகம், கருப்புரக் கதலி — கருப்பூரம் எனப் பெயரிய வாழை, தமாலம்—பச்சிலை மரம், குங்குமம்-ஒரு வகை மரம், தழல்—அக்கினி, பொங்கு நீர் மருதம்—நீர்வளம் பொருந்திய மருத நிலம். புணரி—கடல், இஃது தோகை மாநதியாகும்.

54 கவை—பிளப்பு, வருடை—யாடு, தேறல்—தேன், கவிழ்த்திடல்—கவிழ்ந்து சொரிதல், யாவையும்—அனைத்தையும், எதிர்மடுத்தல்—எதிர்த்துக் கலத்தல். இது உலோகிதயாறும்.

55 மடங்கல்-சிங்கம், இராகவன்-இரகு குலத்துதித்தவனுகிய இராமபிரான், கவிகள்—வானரங்கள், தொக்கு—திரண்டு, துறக்கவீடு—முத்தி. (சரயுமா நதியாம்)

56 மருப்பு — கொம்பு, உறழ்—ஒத்த, ஆய்ச்சியர்—இடைச்சியர், குழிசிபெய்நறியபால் — பானையிலிட்ட நல்ல பால். உவரிக் கடலை பாற்கடலாக்கும் தெசானை யென்னும் பேர்யாறும்.

57 சிக்குரோததி நதியின் சிறப்புரைப்பது:— உந்தி—யாற்றுநீர்ச்சுழி (கொப்பூழ்), சங்கம்—வளையல் (சங்கு) நேமி—(சக்கரம்) சக்கரவாகப்பறவை, அம்பு — (பாணம்) நீர், தாங்கல்—சுமத்தல் (ஏந்தல்), கடவுள்மணி—கவுத்துவமணி, வினை—பாவவினை, மாயன்—திருமால், பொருவும்—ஒக்கும், சிந்து—சிதறும்.

58. வேத்திரவதிநதியின் மேன்மையுரைப்பது: எறிந்து —வீசி, கருங்கடல்—ஆழமும் அகலமும் உடைய சமுத்திரம், விருந்து—புதியராக வந்தடைந்தவர், அளியா — கொடுத்து (அளித்து).

59. உமிழும்—சொரியும் (கக்கும்), செழுந்துகிர்—நன்றாக விளைந்த செம்பவளம், தெள்ளுபன் மணியும்—தெளிந்த பலவகைப்பட்ட நவமணிகளும், கோடு-தந்தம், கணக்குஅற —கணக்கில்லாதவாறு, பொழிந்திடும் — சொரியும், வள்ளியோர்—கொடையாளிகள், நிலம்—மண்ணுலகில் வாழ்வார். (மந்தகாமினியாம்).

60 ஒழுகும்—ஓடும், ஆற்றினால்—தன்மையால், ஒருவழிப்படாது—ஒருநெறிப்படாமல், தட்டகற்சிறை—தடுக்கப்பட்ட கல்லணை, பந்தனம்—கட்டு, மட்டவிழ்மலரும்—நறுமணங்கமழும் மலரும், எறிதலால் — வீசலால், மாயைவிட்டு —மாயையினின்று நீங்கி, ஞானியின்—துறவிபோல, (விபாசி நதியாம்).

61 கோமதியாற்றின் வரலாறு : கமலம் — செந்தாமரை, சூதம்—மாமரம், கழுநீர்—நீலோற்பலம், வனப்பு— அழகு, பொலிவு—விளக்கம், அநங்கவேள்—உருவிலியாகிய மன்மதன்.

62 எகினம் — அன்னப் பறவை, அலம் — கலப்பை, துழனி—ஒலி, மலங்கு—மீனில் ஒரு வகை, ஓதை—சத்தம், புலம்பும்—ஒலிக்கும். பூதப் பாவை யென்பது ஓர் நதி.

63 எல்உறழ்மணி — சூரியனைப்போலப் பிரகாசிக்கும் மாணிக்கம், சந்தமென்றுணி — சந்தன மரக்கட்டை, கோட்டம்—வாசனை மரம், குலிகம் — சாதிலிங்கம். பன்னுசை யெனப் பேயரியது ஒரு பேரியாறும்.

64 படப்பை—தோட்டம் (கிழார்), திலகம்—மஞ்சாடி யென ஒரு மரம், இணர்—பூங்கொத்து. இதழி—கொன்றை, தமாலம்-பச்சிலை மரம், சந்திரப் பதாகை யென்பது ஓர்யாறு.

65 கதுப்பு — கூந்தல், அறல்—கருமணல், வார்ந்த— நீண்ட, கவின் —வனப்பு, மது—தேன், புனைந்திடல்-சூடுதல், விதிர்ப்பு — நடுக்கம், ஒல்கி — அசைந்து, புதுக்கடி — புது மணம், நயந்த — விரும்பின, பொருவும் — ஒக்கும். (குகு வெனு மாறும்.)

66 காவதம்—பத்துகல் அளவுடையது, கடி—மணம், தூவி--இறகு, சேரல் — பொருந்தல், துவர்இதழ்—பவழம் போலும் உதடு, பூவிலை மகளிர்—பொருட் பெண்டிர் (பரத்தையர்), புணரிதாழ்—கடலிற்படியும், அரித்திரோழ்பலை யென்பது (ஒரு நதி)

67 திரிசாமைநதியின் சிறப்புரைக்கின்றது:- கலங்கு நீர்மை—கலங்கியதன்மை, செவ்வன்—நேர்மை, ஒழுகிடா —செல்லாத, வரம்பு—எல்லை, இகந்து—நீங்கி, அருந்தும் — பருகும் (குடிக்கும்) போந்து—வந்து.

68 வானைமாநதியின்வளம்கூறப்படுகின்றது:- வெள்ளை வாரணம்-அயிராவதம், தொழுதனர்—தொழுது (வணங்கி) வரை பொருது — மலையினெடுமோதி, ஆயிரஞ்செங்கண் வள்ளல்—சகச்சிராட்சனெனப் பெயரினனாகிய இந்திரன்.

69 எண்ணருமகளிர் — மட்டற்றபெண்கள், நறுங்கலவை —நல்லமணமுள்ள சந்தனம், வண்ணம்—நிறம் (அழகு) வனைந்திடல்—சூடல், விடர்—காமுகர் பிரத்தினை என்னும் நதியினைப்பற்றியது.

70 ஒருவழிப்படராது -ஒருநெறியிற் செல்லாது, ஆழ்ந்திடும்—ஆழ்ந்துபோகும் (அமிழும்) வனைந்திடல்—சூடுதல், மான்மதம்—கத்தூரி, அரிவை—பெண் (வேதவதியாறும்)

71 இப்பாடலில், மண்டையூநதி, தேவிகை நதி, இரேபதியாறு, பலாகையாறு ஆயவை குறிக்கப்பெற்றுள. பற்றற—இருவகைப்பற்றும் ஒழிய, அகற்றும்—நீக்கும்.

72 உலகுளெல்லாம் — உலகப் பெருமக்களனைவரும், ஏத்தும்—துதிக்கும், அலகு—எண், அறைந்திலம்—கூறினோமில்லை, குலவும் — விளங்கும், ஆடினோர் — மூழ்கினோர், பேற்றை—கதியினை, மலைவு—ஐயம் (தெளிவின்மை). மாது ஓ அசைநிலைகள்.

73 அற்பு — அன்பு (வலித்தல்), அளப்பறுதேயம்—எண்ணற்ற நாடுகள், பற்பல பாடை—பலப்பல மொழிகள், மாக்கள் — மனிதர்கள், பயில்வர்—சஞ்சரிப்பார்கள், யுக பேதங்கள்-யுகங்களின் வேறுபாடு, இயற்றல் கூடும், செய்தல் கூடும். ஏனைய எட்டு வருட நிலங்களிலும் (எட்டுக் கண்டங்களிலும்) இவை நிகழாவாம்.

44-வது அத்தியாயம் முற்றும். ஆகச் செய்யுள்

---

## 45-வது வானவர் வாழ்க்கை யுரைத்தது.

1 பொன்அவிர்குடுமி-பொன்போல் விளங்கும் சிகரம், மதி—சந்திரன், கிளர்முடி — விளங்குகின்ற மகுடம், துவர் வாய்—பவளம் போலும் அதரம், கவுரி—பார்வதிப்பிராட்டியார்.

2 பொருப்பு—மலை, புயல்—மேகம், இயக்கர்கோன்—குபேரன், அயில் எயிறு—வேல்போற் கூரியபற்கள், அரவ கங்கணத்தோன் — சர்ப்பாபரணமணிந்தவனாகிய சிவபெருமான்.

3 கமலத்தவிசு (கமலாசனம்) தாமரையாகிய இருக்கை ஐம்படை—பஞ்சாயுதம், சினகரமதனுள் — திருக்கோயிலினுள், இமையவர்—தேவர்கள், வீற்றிருக்கும் எழுந்தருளியிருக்கும்.

4 ஒன்னலர்—பகைஞர், விதிர்ப்பினும்—அசைப்பினும் கூற்று — இயமன், புரிசைமதில், வசுதா வரை—வசுக்கள் உறையும்மலை, தத்தம்மனைவியர்—தத்தம்பெண்டிர்கள்.

5 நிவந்த—உயர்ந்த, பொலங்கிரி—பொன்மலை, வயிரவர்—வயிரவக்கடவுள், (அட்டவயிரவருமாம்) மலரயன்—மலரில் இருப்பவனாகிய பிரமன், வாணி—சரசுவதி.

6 ஈற்றுளைந்து-பெற்றுவருந்தி, கமம்-நிறைவு, சிலைக்கும்—ஒலிக்கும், ஏகசிருங்கமென்னும்மலையின்கண் சயிமினி போற்ற பவளமலைபோல் சிவபெருமான் பச்சை நிறமாகிய பார்வதியோடு எழுந்தருளுவர்.

7 சுமேதமலையில் ஒரு பெரிய மாளிகையொன்றுளது வையம் — உலகம், பொதிந்திட—மறைய (உள்ளடங்க) செப்பு—சிமிழ், சசி—இந்திராணி, மகவான்—இந்திரன்.

8 இராசமால்மலையில் பசியதளிர்போன்ற சிற்றடிகளையுடைய துர்க்காதேவி, பரம்பொருளைநினைந்து எழுந்தருளியிருப்பாள், அந்தமில்—முடிவில்லாத.

9 இந்திரகோபம்—தம்பலப்பூச்சி, அகழ்ந்து-தோண்டி பொன்னிறத்துகில் — பீதாம்பர ஆடை, கலுழன்—கருடன், தமனியம்—பொன், நந்தல்—கேடு, நண்ணி—அடைந்து.

10 திங்கட்கோடு—சந்திரனின் முனை, இறால் — தேன் கூடு, இழுமெனல்— ஒலிக் குறிப்பு, உழ—கிண்டலைச் செய்ய, விண்டு—பிளந்து, தூங்கும்—அசையும், சிருங்கமலையின்கண் திருமாலின் மார்பில் இருப்பதுபோல இலக்குமியெழுந்தருளியிருப்பாள்.

11 சகத்திர மலையில், எட்டு நகரங்களுள. அவற்றுள் வித்தியாதரர் உறைகுவர் கோங்கமரச் சூழலாகிய நந்தன வனத்துக் கோயிலில் பரமன் பரையொடுமிருப்பன்.

12 கடாம்—மதம், கண்படை—துயில், முழக்கு—ஒலி, பாந்தள்—பாம்பு, பாரியாத்திர மலையில் மூன்று கண்களையும் சூலப்படையும் தாங்கிய காளியுறைவள்.

13 வாக்கியது—வடித்தது, சுவாரிசமென்னுமலையின் கண், (தமிழ்—இனிமை), பச்சைக் கருப்பூரம்போலும் வெள்ளை மேனி விமலை வீற்றிருப்பாள்.

14 உரிஞ்ச — தேய, வானவருலகு — சுவர்க்கவுலகு. நிரயம்—நரகம். பாண்டவர் மலையில் நூறு நகரங்களுளவாம். அம் மலையில் வித்தியாதர மகளிர் இனி துறைவர். ஐம்புலக் குறும்பு எறிந்தோர்—ஐம்புலப் பகையினை வென்ற துறவிகள், வேனிலான்—மன்மதன்.

15 அஞ்சனம்—மை, அனிச்சம்—அனிச்சமலர், அளிய—மெல்லிய, பழிப்பு—நிந்தை, நஞ்சு—விடம், அளப்புஇல்—எல்லையற்ற, நகர்தொறும்—பட்டணங்களிடமெலாம்.

16 குமுத மலையில் உருத்திர கணங்களும், பிஞ்சர மலையில் சிவ கணங்களும், வீற்றிருக்கு நகரங்கள் மூவகையவாம். அவற்றுள் சிவனடியார் உறைகுவர். கபில மலையில் நந்தியெம்பெருமான் எழுந்தருளியிருப்பார்.

17 சாருதி மலையில் அழகிய கோயிலினுள், சூரிய தேவர்கள் உறைவர், வெண்கதிர்—சந்திரன், துகள்—புழுதி (தூசு), துடைக்கும்—போக்கும் (அழிக்கும்), உரோணி—உரோகணித் தேவியார், திளைப்ப—அநுபவிப்ப.

18 அஞ்சமால் வரையில் ஆயிரம் யோசனைப் பரப்பினதாகிய மேகங்கள் சூழும் கோயிலுள், நான்முகன் நாமகளோடும் இருப்பன், தென்பகுதியில் சனகாதியர் இருப்பர். பஞ்சசைலத்தின் மிக்க வலியுடைய அசுரர்கள் பயில்வார்கள்.

19 அருந்தவம் — செயற்கரிய நோன்பு, இயம்பும் — கூறப்படும், மன்னுவர் — நிலைபெற்றிருப்பர், அகன்றிடும்— செல்லும், முன்னி — கருதி, விரித்துரையாமல் — விரிவாக எடுத்துக் கூறுமல், தொகுத்து — திரட்டி, மொழிந்தனம்— கூறினும்.

45-வது அத்தியாயம் முற்றும். ஆகச்செய்யுள்.

---

## 46-வது பிலக்கமுதலான தீவுகளின் இயற்கையுரைத்தது.

1 நலம்—சுவை, புலோமிசை—இந்திராணி. அடுக்கு— வரம்பொடுபட்டமுறைமை, விளம்பிலல் — வேண்டிக் கோடல், உருஅமைந்த—வடிவம்தாங்கிய, கூன்—வளைவு.

2 நாவலந்தீவு—சம்புத்தீவு, உவரியங்கடல் — உப்புக் கடல், உடுத்து—சுற்றி, வரைத்திடும்—எல்லைப்படுத்தியிடும், (பிலக்கத்தீவு) வளைந்து—சுற்றி, விஞ்சை—வித்தை, நிகர்— உவமை, விழுமியோர்—மேலோர், குழுமி—கூடி, வீடடைவோர்—பற்றற்றவர்கள்.

3 கருங்குழல்—கருமைநிறம்பொருந்தியகூந்தல், மகதி யாழ்முனி—நாரதமுனிவர், பயிற்றும்-பழக்கும், பகலவன்— சூரியன், தண்கதிர்—குளிர்ந்தகிரணங்கள், சோமநீள்குன்று —சந்திரமலை.

4 கவிழ்தலையுளியம் — கவிழ்ந்தமுகமுடைய கரடி, அள்ளி—வாரி, தவலரும்—நீக்கற்கரிய, பிணவு—பெண்கரடி, அருத்தி—உண்பித்து, தணந்த—பிரிந்த, உவவுவெண்மதி— பூர்ணசந்திரன், உன்னிடும்—கருதியிடும் (துந்துபிமலை)

5 பிறைவடம்—பிறைபோலும்மாலை, தவழ்தல்—தத் துதல் (ஊர்தல்) களங்கம்—மறு, நானம்—கத்தூரி, உள்

ளுபு—கருதி, துடையா—துடைத்து. (இஃது இடபமால் வரையென்பது புலப்படுக்கின்றது).

6 கூந்தன்மா—கூந்தலினையுடையகுதிரைகள் சினை—கிளை, உதிரா—உதிர்ந்து, துனைவு—விரைவு (வேகம்) களிற்றினம்—யானைக்கூட்டம், வருந்தும்—துன்புறும்.

7 சந்திரகாந்தம் — சந்திரகிரணங்களைக்கண்டு நீர்சொரிவது, நெகிழா — இளகி, கொந்து—கொத்து, குழைத்து—தளிர்த்து,(பிராசநீள் மலையினைப்பற்றியது)

8 கடுஞ்சூல் மேதி — மிக்க கருப்பமுடைய எருமை. குதட்டி—மென்று தின்று, நெடுமூச்சு-பெருமூச்சு (உயிர்ப்பு) கொடிச்சியர்—வேட்டுவிச்சியர், விண்மகளிர்—தேவமாதர்.

9 மாவீழ்ஓதி—வண்டுகள் விரும்பி மொய்க்கும் கூந்தல், காவி—நீலோற்பலமலர், கள்ளொழுகும்—தேன்சொரியும், ஓவாது—ஒழியாது (விடாது) தாவாது—கெடாது.

10 ஆய—ஆகிய, அரந்தின்று—அரத்தினால் அராவப்பட்டு, மேய — பொருந்திய, மதர் — செழிப்பு, பாய பரவிய, பதி—பட்டினம் (நகரம்) நகர்-அமராவதிபட்டினம், உறழும்—ஒக்கும், துலங்கும்—விளங்கும்.

11 அன்னமால்வரை—அத்தன்மைத்தாகிய பெரியமலை போற்றினர் — போற்றி, புங்கவன் — பிரமதேவன். வதியும் — உறைகுவன், மன்னி—நிலைத்து, வகுத்து — வகுக்கப்பெற்று, ஐயாயிரம் பருவம்—ஐயாயிரம் ஆண்டுகள், கன்னல்—கரும்பின்சாறு.

12 ஏழ்நதிகளாவன, சுகருதை, அமிர்தை, விபாவை, சுவை அசந்தத்தை, கிலமை, திரிதிவை என்பனவாம், வயங்கும்—விளங்கும், எண்டரும்—மதிக்கத்தகும், வரையறை—எல்லை, அவ்வுழி—அவ்விடம், சோமன் தொழுது—சந்திரனை வணங்கி, மகம்—வேள்வி.

13 மறையவர்தம்மை ஆரியரெனவும், மன்னவரைக் குராரர் எனவும், வணிகரை விதிச்சியர் எனவும், பின்னவர் தம்மை பவ்வியர் எனவும் பிலகத்தீவினிலுரைக்கப் பெறுவர். அப்பிலக்கத்தீவினைக் கருப்பஞ்சாற்றுக் கடலும் நாற்புறமும் சூழ்ந்திருக்கும்.

14 சூழ்ந்து — சுற்றி, தடஞ்சினை — பெரியகிளைகள், வளன்—வளப்பம் (செழிப்பு) பகர்வதற்கு அரிய—கூறற்கு முடியாத, சான்மலித்தீவு எழில் (அழகினைக் கொடுக்கும்).

15 கண்படை—உறக்கம் (துயில்) காய்சின உழுவை —காய்ந்த வெகுளியினையுடைய களிற்றினை, புழைக்கை யால் — துளையுடைய துதிக்கையினால், வாரி — முகந் தள்ளி, அளியுடன்—அன்புடன், வெவ்விடாய் — கொடிய விடாயை.

16 பராஅரை—பருத்த அடிப்பாகம் மருண்டு-மயக்கங் கொண்டு, உடு—நட்சத்திரம், குருதிக்காந்தள்-செங்காந்தட்பூ தோகையர்—மயில்போன்ற சாயலினையுடையவர், மடமை— அறியாமை, எள்ளிய—இகழ்ந்த, தூமதி — தூய்மையான சந்திரன்.

17 வியன் சினை — பெரியகிளை, பிணித்து — கட்டி, ஆட்டயரும்—விளையாடும், எயிற்றியர் — வேட்டுவிச்சியர், நுடங்கும்—அசையும், அரவினம்—பாம்புகூட்டம் ஒளித் திடும்— மறையும்; துரோணமால்வரை யென்பது ஒருசிறிய மலை.

18 கைவளர் — பக்கத்திடத்தில்வளரும், வானயாறு —கங்கைநதி, தேசு-ஒளி, தெரிக்கலா ஆறு-தெளியமுடியாத தன்மை (நெறி) ஊசல்—ஊஞ்சல்.

19 குண்டு—ஆழம், ஊறும்—சுரக்கும், தேறல்—மது (தேன்) உமிழா—உமிழ்ந்து மீட்டும்—மீளவும், விண்டொ டர்குடுமி—ஆகாயம்வரை நீண்ட சிகரம்.

20 கொங்கு—வாசனை, கோல்தேன்—கொம்புத்தேன் திங்களங்குழவி — இளஞ்சந்திரன், சிதையா — சிதைத்து (கெட்டு) பங்கம்—சேறு, பாவடி—பரந்தஅடி, ஆயிரமுகத் தகங்கம்—ஆயிரமுகங்களையுடைய கங்கைமாநதி.

21 நிழன்றிடும்—நிழலைச்செய்யும், நீள்நிலம்—பெரிய பூமி, நீத்திடும் — விலக்கும், மின்மினி—ஒருவகைப்பூச்சி, அறுகால்—வண்டுகள், சுழன்றிடும்—சுற்றும்.

22 ஓரேழ் மலைகள் மேலே கூறப்பட்டவை. பாகு—வெல்லப் பாகு, சேகு — குற்றங்கள், உறையுளாய்—தங்குமிடமாகி, கமலச் செங்கணன்-திருமால், உலகு-வைகுந்தம், ஓகை—(உவகை) களிப்பு, உலகெலாம் — உலக மக்களை வரும், வியப்பு—ஆச்சரியம்.

23 ஏழ் நதிகளாவன: தோயம், சந்திரை, விமோசனி, நிவர்த்தி, நிதட்டினை, யோனி, சுக்கிலை என்பன. ஏய—பொருந்திய, இருங்கலை—பெரிய மான், கடவும்-செலுத்தும், சேய—செவந்த, உறுவார்—அடைபவர், ஐயாயிரம் வருடம் அங்குறைபவர்க்காயுள்.

24 ஆறறிபுலமை யந்தணர் — ஆறங்கங்களையுமுணர்ந்த மறையவர், இவர் கபிலரெனவும் மன்னரை அருணர் எனவும், வணிகரைப் பீதர் எனவும், பின்னவர் கிட்டினர் எனவும் கூறுவர், வீறு—பெருமை, இலவத்தீவின் அளவு மதுக்கடல் சுற்றிக்கிடக்கும்.

25 மதிப்பருமருமறை — மதித்தற்குமுடியாத பெருமையினையுடைய வேதங்கள், முதுக்குறைவு — பேரறிவு கதுப்பு—கூந்தல், உடைந்து — பின்னிட்டு, முனிந்திடும்—வெறுக்கும், வளங்கூர்குசத்தீவு — வளப்பமிக்ககுசமெனப் பெயரியதீவு.

26 கொங்குதேர்வாழ்க்கை-வாசனை யாராயும் வாழ்வு மங்குல்—மேகம், வதிந்திடும் — தங்கும், அயல்—பக்கம்,

கோலம்—வடிவு, ஊடி—பிணங்கி, கங்குல்—இரவு, இதழ்க் கதவம்—இதழாகியகதவு, அடைத்திடும்—மூடும்.

27 மைம்முகில் — கரியமேகங்கள், கைம்முகில்—கை, யிணையுடைய மேகம்போற்கரியயானை, இணைந்து—கலந்து, தகாது—கூடாது (பொருந்தாது) ஆடி—ஆடுதலைச்செய்து, மருங்குபுக்கு ஒளிக்கும்—பக்கத்திடத்திற்சென்று மறையும்.

28 துகிர்படு — பவழம்போல, வகிர்தல்—பிளத்தல், ஊடிய—பிணங்கிய, உதிர—சிதறிவிழவும், பற்ற—பிடிப்ப, தயங்குதல்—விளங்கல், அகின்முருடு—அகிற்கட்டை.

29 குரவு—குராவெனும் விருட்சம், பாவை—பாவை போலுங்காயினை, சந்தனம் அதனை மணம்புரிய, கோடல்—காந்தள், அலர — மலர, சேயுயர் கழை—மிக நீண்டுயர்ந்த மூங்கில், வெடித்துகுமுத்தம் — பிளந்து சொரிந்த முத்தம், வெண்பொரி—வெள்ளிய பொருள்.

30 தெளித்தல்—சிதறவிடல், பிறங்குதல்-விளங்குதல் பேதை—பெண், அணிவளை—அழகிய வளையல், தணிவருமல் லல்—குறைவில்லாத வளப்பம், (வித்துருமமெனமலையின் பெயராம்.

31 ஆசினி — பலாவின் ஒருவகை, தாக்க—அடிப்ப கமழும்—வாசனைவிசும், திசைதிசை-நான்குதிக்குகளிடத்தும் பாய—பரவிய, காலதம்—ஓரளவு எண். பசியதேன்—பைந் தேன், வவ்வி – பற்றி, அமிர்தம்—மிருத்துவைப் போக்குவது அளித்திடும்—கொடுக்கும் (புட்பவான் மலையாம்)

32 மணிவிளிம்பு உடுத்த — இரத்தினங்கள் ஓரத்தில் வைத்திழைக்கப்பட்ட, துகில்—ஆடை, துகள்—புழுதி, மணி வடம் — முத்துமாலை, கொய்பவர் — பறிப்பவர், நாணி—வெட்கமுற்று, ஒழிந்தகலும்—விட்டு விலகும்.

33 சுணங்கு — தேமல் (பசலை), மேகலை— ஒரு ஆபரணம் (இடுப்பிலணியப் பெறுவது) துன்னரி—நெருங்கி, எஞ்ஞான்றும்—எப்பொழுதும், துறக்கமாநகரம்-அமராவதி பட்டினம், கன்னரி—அழிவிலாதது (இது குசத்தீவு என்பதன் சிறப்புரைக்கின்றது)

34 ஏழ் நதிகளாவன:— பவித்திரை, அம்பை, மலை, சிவை, தூதபாவை, சம்மதை, வித்தியுத்து என்பனவாம். புணரி—கடல். அயனுலகு—சத்தியலோகம், தணப்பு—நீக்கம், பேரின்பம்—பேராவியற்கை.

35. அந்தணரைத் தூய திராவிடரெனவும், அரசரைச் சுட்டுமியர் எனவும், வணிகரைச் சிநேகர், பின்னவர் மாந்தேகர் எனவும் வழங்கப்பெறுவர், நந்தல்-கேடு, நோய்-பிணி இகந்து—கடந்து (நீங்கி) மடவியர்—இளமகளிர்.

36 அந்தக்குசத்தீவினை நெய்க்கடல் சூழ்ந்திருக்கும் கிரவுஞ்சத்தீவினையும் நெய்க்கடல் வளைந்திலகும் இந்தத்தீவினில் உற்பவித்தவர் ஐயாயிரம் ஆண்டுகள் வாழ்ந்திருப்பர்.

37 வீழி—ஒருவகைச்செடி, விடுப்ப—அனுப்ப, உகிர் —நகம், தோடு—இதழ், வரைந்த — தீட்டின (எழுதின) மாழை—மான், மகிணர் (மகிழ்நர்) தலைவர், கோழரையரம்பை—வழுவழுப்புடைய அடியினையுடையவாழை.

38 கோட்படுத்தல்—சிக்கவைத்தல், பளிக்கு-பளிங்குக் கண்ணுடி, கிடந்தது—தங்கியுள்ளது, சிறிகண் வார்வலை— சிறியகண்களையுடைய நீண்டவலை.

39 கங்குல்வாய்—இரவின்கண், வீழும்—விரும்பியிடும் ஏகுறும்—செல்லும், ஆய்கதிர் —அழகியகிரணம், திங்கள் வெண்மணிக்கல்—சந்திரகாந்தக்கல் சிகரிமலை.

40 இரலை—மான், செங்ரட்டு வாகுணம் — செவந்த உச்சிக்கொண்டையினையுடைய கோழி வைகறை—பொழுது

புலர்விடியல், கூன்பிறைக்கோடு—வளைந்தபிறைபோன்ற தந்தம், இரியும்—பயந்துஓடும்.

41 திவவு—முறுக்காணி, யாழ்—யாழ்ஓசை, செய்ய—செவந்த, வாரியகுழி-தோண்டியெடுக்கப்பட்டகுழி (பள்ளம்) இமைக்கும்—ஒளிவிடும், கிரவுஞ்சம் எனும்பறவைக்கு நிலாமுகியெனப்பெயர்.

42 தேங்கமழ் — மணம்வீசும், அதிர—சத்திக்க, உத்தராசங்கம்—ஒருவகையணி அமலே—சப்தம் அகவும்—கூவியழைக்கும், வாமனகமலேயின்வளம் கூறியவாறும்.

43. பைந்தொடி—பசிய வளையல், சுகிர்ந்த-வடிகட்டிக் கிழித்த, கோடல்—காந்தள், சிந்திய—சிதறப்பட்ட, ஊடினர்—பிணக்கங் கொண்டவர் (ஆகி) தோன்றும்-காட்சியளிக்கும்

44 பொன்னங்குன்று—மேருமலே, பொருவும்-ஒக்கும் பொருவில்—உவமையில்லாத, அன்றில் நாமத்தீவு—புட்கரத்தீவு, உறையும்—உறைவார்கள்.

45 ஏழ்பேரியாறுவன:— சந்திகை, புண்டரீகை, மனோசெவை, கவுரி, சாதி, முந்திராத்திரி, குமுத்துவதியென்பன. முக்கண்தே—மூன்று கண்களேயுடைய பரமன், வந்தனே—வழிபாடு, விரதம்—நோன்பு, வேள்வி—யாகம், வழாது—தவிராமல்.

46 இத்தீவில் நான்கு வருணத்தவரும், புட்கலர், புட்கரர், தன்னியர், ததிச்சியர் எனப்பெயரிட்டு வழங்கப் பெறுவர், நோய் நிரப்பு—பிணியும் வறுமையும், பொறை—பொறுமை.

47 கிரவுஞ்ச மெனுந்தீவினே தயிர்க்கடல் சூழ்ந்து நிற்கும், மதியை மானும்—சந்திரனேயொக்கும், இதற்கப்பால் சாகத்தீவுண்டாம். இங்குள்ளவர்கள் நரையும் திரையும்மூப்பின்றி வாழ்வார்கள்.

48 ஏட்டைவெம்பசி—வருத்துதலைச் செய்யும் கொடிய பசிநோய், அகழ்ந்து—அடியோடுபறித்து, குதட்ட—கடித்து மெல்ல, முத்தம்—முத்து, சேடு—அழகு.

49 செருந்தில்—செருந்தியென்பது ஒரு பூமரம், உளர் தல்—விரித்து அசைப்பது பேடைமஞ்ஞை — பெண்மயில், புல்லும்—கூடும்; வவ்வும்—பற்றும்.

50 வழை—சுரபுன்னை, தூங்கும்—அசையும், முசுக் கலை—குரக்கினம், தத்துதேன்—தாவிவீழும் மது, சந்தனப் படப்பை—சந்தனமரத் தோட்டம், தூய—பரிசுத்தமான.

51. உடைந்திடும்—பின்னிட்டுச் சிதறும், கொம்பர்—கொம்பு, அன்னார்-ஒத்தவர்களாகிய மகளிர், ஊடல்-புலவி, பிழைத்தது — தவறிற்று, உரைக்கென — கூறுகவென்ன, நாணி—வெட்கமுற்று, நக்கு—சிரித்து, கோடிய—வளைந்த, எள்ளும்—இகழும்.

52. பருமுகை—பெரிய அரும்பு, அவிழ்ந்து—மூறுக்கு விட்டு, ஏகும்—செல்லும், தூம்பு—துளை, கறிவளர்மால்—மிளகுக்கொடி வளரும் மலைப்பக்கம், சுற்றிபு-சுற்றி, காம்பு—மூங்கில், கவின்—வனப்பு.

53. அரையிருட்பொழுது-பாதியிராத்திரி (நள்ளிரவு), செலவயர்வு—போதல், இரவுளரிமரம் — சோதிவிருட்சம், வெருவி—பயந்து, செர்மணி—மாணிக்கம் (நாகரத்தினம்) கரையெறி காமம் — எல்லைகடந்த காமம், காழ்கொள — உறுதியுற.

54. கொய்யும்-பறிக்கும், குற்று—பிடுங்கி, வழங்கும்—செல்லும், எழில்—தோற்றம் (அழகுமாம்) இரேவதமலை யின் இயற்கை யியம்பப்பெறுகின்றது.

55. வினையறநோற்று-இருவினைப்பாசங்கள்முடிய விரதங்களைப் புரிந்து, மும்மலம் — ஆணவம், கன்மம், மாயை என்பன, கடிந்த—போக்கின, மேவுறும்—விரும்பியுறையும்,

56. ஏழ்நதிகள்:-வேணுகை, பெலினீ, சுகுமாரி, குமாரி இரேணுகை, கபர்த்தி, விக்குகை, என்பன, மாணுடைநதி—மாட்சியுடைய யாறுகள், யாணர்—புதுமையாளர்.

57. மாயர் எனவும் மகதர் எனவும், மானரசர், மந்தகர் எனவும் நான்கு வருணத்தவருக்கும் பெயராம். கதிரவனைத் தொழுது அவன் மண்டலத்தையடைவர் என்பதாம்.

58. சாகத்தீவினைப் பாற்கடல்சுற்றியிருக்கும். ஒலித்து—தழைத்து, நாப்பண் — நடுவிடம், பாற்கடல் மத்தியில் சுவேதத்தீவொன்றுள்ளது, மதியினைப் போன்றிடும்.

59. ஆங்குத் தோன்றினவர் வெள்ளை நிறத்தவராம். வீங்கு கேள்வியர்—பரந்த கேள்விஞானமுடையவர், வெகுளி—கோபம், செற்றவர்—நீக்கினவர், நீதி—நெறிமுறைமை.

60. அங்குத் தோன்றினவர் திருமாலின் சாருபம் எய்தினவர் ஆவர். பஞ்சாயுதபாணிகளாய் விளங்குவர். கங்குல் சீத்தல்—இருளினைப் போக்கல், மாது, ஓ, அசைநிலைகள்.

61 சுவேதத் தீவினில் வாழ்பவர். விபூதி உருத்திராக்கந் தரித்துத்திரிபுண்டரமாக நீறுசாத்தி சிவனடித் தொண்டராய் அந்தமில் இன்பமடைந்து இனிதிருப்பர்.

62. சுவேதத்தீவில் எண்ணற்கரிய (அளவிடமுடியாத) சீர்பெறு நகரமுளது. நாராயணன்புரம் என ஒரு நகரமுள்ளது; இற்றென—இன்ன தன்மைத்தென.

63. மீயுயர் மாடம்—மிகவும் மேலேயுயர்ந்த மாளிகை, சதுக்கம்—நான்கு தெருக்கள் கூடுமிடம், சந்தி—முச்சந்தி, தெற்றிகள்—திண்ணைகள், அலர்ந்தென விரிந்தாற்போல

64. முகடு—உச்சி, வேய்ந்த—பதிக்கப்பட்ட, சுடர்மணி—ஒளிவிடும் மாணிக்கங்கள், இரவி—சூரியன், கமலங்கள்—தாமரைகள், அளிக்குலம்—வண்டினம், ஆம்பல்—அல்லி.

65. உளரும்—தடவும், கானம்—இனிய இசை, ஒதை-இசை, அம்கலுழ் மேனிநல்லார்—அழகிய நிறமுடைய உடலினையுடைய குற்றமற்ற மகளிர்கள், ஊடிய—பிணக்கம் கொண்ட, அமிர்தமாரி—அமிருத மழை.

66. மணி வடம்—மாணிக்க மாலை, வீங்கி—பெருத்து, சுமக்கல்ஆற்ரு—தாங்கமுடியாத, மதுஉண்டாடி-சுராபானம் செய்து, கொழுநிழல்-நல்ல வெயில் ஒளிபடாத நிழல், வைகுவர்—தங்குவர்.

67. வெண்ணகை—வெள்ளிய பற்கள், கள்ளம்—களவுச் செயல், கழி—உப்பங்கழி, ஆடவர் கமலம்போழ்ந்து—ஆண்களுடைய மனத்தைப் பிளந்து, கூற்று—இயமன்.

68. இருநடம்—பெருங்கூத்து, மாழ்க—மயங்க, சேலம்—ஆடை, பொய்இடை — இடையில்லையென்று சொல்லும் படியானது, வீக்கி — கட்டி (உடுத்து), வைவேல் — கூரிய வேலாயுதம்.

69. உருப்பசி, அரம்பை, திலோத்தமை, மேனகை என்பவர் தேவதாசிகள், அரற்றி—ஒலித்து, பொருப்புறழ்—மலையினையொத்த, கருப்புரம் கமழும் — பச்சைக்கருப்பூரம் மணம் வீசும்.

70. அங்குள்ள மரம் கற்பகமாகவும், நதிகள் கங்கையாருகவும், பசுக்கள் காமதேனுவாகவும், மகளிர்கள் அரம்பைமாதர்போலவும் விளங்கும் என்றபடி.

71. கடையளந்தறிதல்—முடிவுபோக அறிவது, பாப்பணை—பாம்பாகிய படுக்கை, பூமி—பூதேவி, கமலை—இலக்

குமி பிராட்டியார், வருட-தடவுதலைச்செய்ய, திகிரிமாயோன் —சக்கரந்தரித்த திருமால், யோகினில்—அறிதுயிலாகிய யோகத்தில்.

72. கமலத்தோன்—பிரமன், உந்தியங்கமலம்—நாபித்தாமரை. மரகதமணிக்குன்று — பச்சைமலை, துளவினோன் நிலைபெறும் பிரமமாகிய நிருமலக் கடவுளாம்.

73. இமிழ்திரை—ஒலிக்கின்ற அலைகள், இரட்டியாகி —இரண்டு பங்குடையதாகி, பொழில்கள்—சோலைகள், புட்கரத்தீவு உயர்ந்து சுற்றியுளது. இருகூறு—இரண்டுபகுதி. மானசோத்திரம் மேம்பட்டு இருக்கும்.

74 அவ்விருகண்டங்களும் மாவீதகண்டமெனவும் தாதகிகண்டம் எனவும் பெயர்பெறும். அவ்வரை ஒரு லட்சம் பரப்பினை யுடையது உயரமும் மேற்பரப்புமாம். உம்பர்— மேலிடம், இம்பர்—இவ்விடம், மூவகைச்சுட்டுக்களும் இப் பாடலில் வந்துள்ள நயங்காண்க.

75 உயர்சினை — உயரியகிளை, பழுமரம் — ஆலமரம் பங்கயத்தோன்-- பிரமன். பவளமேனி முழுமுதல்—பரமேசுரன், முதுமறை — பழையவேதம், ஏத்தும்—துதித்தலைச் செய்யும், குழுமி—கூடி, குலவி—குலாவி, பருவம்—ஆண்டு.

76 ஒழிந்து—நீங்கி, அங்குறைபவர், இருவினைப்பாச முதலியனஅற்ற ஞானிகளாய், மும்மலமிலராய், இன்பத் துன்பமின்றித்தேவராய் வீற்றிருப்பார்கள்.

77 தெளியப்பட்ட புட்கரத்தீவினைச் சுத்தோதகக்கடலெனப்படும் நல்லதண்ணீர்க்கடல் சுற்றியிருககும், பொன்னிலம்—சுவர்க்கம், லோகாலோகச்சக்கரவாளகிரி சுற்றிருக்கும். இருட்பிழம்புமலியும் — இருளின் தொகுதி நிறைந்திருக்கப் பெறும்.

78 சக்கரவாளகிரிப் பரப்பு ஓரிலட்சம் யோசனைப் பரப்பாகும். எண்டிசைப்பாலர்—எட்டுத்திக்குகளையும், காப்பவர் இந்திராதிதேவர்கள், அண்டகடாகம்—அண்டப்பரப்பு மூடும்—மறையும், நண்ணும்-பொருந்தியிருக்கும், மிடைந்து—நெருங்கி

79 அளவுஇறத்தல்_எல்லைக்கடத்தல், கைத்தல நெல்லியங்கனி—உள்ளங்கைநெல்லிக்கனி, காண்டிர்—காணுங்கள், ஆவரணம்—மறைப்பு, பரிப்பர்—சுமப்பர், அனைத்தையும்—எல்லாவற்றையும்.

80 கடந்து—அப்பாற்சென்று, மகேசுரன்-பரமேசுரன் சிறந்து—மேம்பட்டு, திக்கு-திசை, எவ்வம்—துன்பம், மேருமுகடு—மேருமலையின்உச்சி, அன்னோன்—அவன், பவ்வம்—கடல், வரன்முறை—கிரமம், படைப்பன்-தோற்றுவித்தலைச் செய்வான்.

**46-வது அத்தியாயம் முற்றும்.**

---

## 47-வது மன்வந்தர முரைத்தது.

1 இறந்துபடும் மன்வந்தரங்களோடும் வருங்கால மன்வந்தரமும் அவற்றின் இயல்பும் துவாபரந்தோறும் வியாச முனிவரும் வகையும், பிறந்தறியாத் தனிப்பொருள்—பரம்பொருள், பேசுக—கூறுக, மகபதி-இந்திரன், அறையல்—கூறுதல்.

2 சுவாயம்புமனு, சுவாரோசிடன், உத்தமன், தாமசன் இரேவதன், சாக்குடன், என்னும் அறுவர் மனுக்கள் இறந்துபட்டபின்னர் இப்போது இனிதுவாழ்பவன் வைவச்சுதமனுவாகும்.

3 முதல் மனுவாகிய சுவாயம்பு மனுவின் காலத்தில், தேவதைகளும், இந்திரனும், சப்தஇருடிகளும், வழுவாமல் ஆட்சிபுரிந்தனர். சுவாரோசிடமனுவின் காலத்தில் தேவர்

களைப் பராதவர் எனவும் துடிதர் எனவும் பெயரிட்டு வழங்கினர். (வழுவாது என்பது வழாதெனத் திரிந்தது)

4 இரண்டாம் மனுவின் காலத்து, இந்திரனுக்கு விவச்சித்தன் என்றழைப்பர். ஏழ்முனிவரை, மூர்ச்சனியன், தம்பமுனி, பிராணன், தாந்தன், பிரீடதன், திமிரன் என அறுவராகக் கூறுவர். கோலம்—அழகு, சுடிகை—உச்சிக்கொண்டை.

5 இரண்டாம் மனுவின்மைந்தன்நற்சயித்திரன், கிம்புருடன், பழிப்பு-நிந்தை, வசை, உத்தமன் என்னுமனுவின் காலத்தில் இந்திரன்றன் பெயர், சுசாநதியாம் இராசனூ, ஊர்த்துவாகு, மன்னு, சுதபன், சவனன், மகன், சுக்கிரன் என ஏழ் முனிவர் பெயராம்.

6. அம்மனுவின் காலத்தில், சுதாமர், சத்தியர், சிவர், பிரமார்த்தனர், வசவர்த்திகள் என்று ஐந்து பகுதியாகி பன்னிருவராயிருப்பர். நான்காமனுவின் பெயர் தாமசனும். இந்திரனுக்கு சவி யென்று பெயராம்.

7 விண்ணவர்கள் சத்தியர், சுரர், மருவியர், சுதையர் எனப் பெயர்பூண்டு நான்கு பகுதியாய், இருபானெழுவராகி இடமகன்றவானிடத்துத் தங்குவர். தாமன், பிருது, காவியன், சயித்திரன், இதன், அதனிகன், வான் என ஏழ்முனிவராவர்.

8 ஐந்தாம் மனுவின் பெயர் இரேவதனும். இந்திரன் பெயர் சுகனுகும். அமிர்தர், நிரதர், வைகுண்டர், சுமேதர், என நான்குகொத்தாய்த் தேவர் சுவர்க்கத்தில் இருபத்தெண்மராய் மிகவாழ்வார்.

9 இரணியரோமன், தேவார்த்தி, ஊர்த்தவாகு, வியன், சுதமன், காமர், மாமுனீ என ஏழ்முனிவர் பெயராம். ஆறுவது மனுவின் பெயர், சாக்குடனும். இந்திரன் நாமம் மனோசவன் என்பதாம். உலகம்—உயர்ந்தோர்.

10 ஆர்த்தியர், பிரபாசர், பவியர், பிரதானர், மாறு பாவர், இலேக்கியர் என ஆறு பகுதியாய்ப் பத்தொன்பான் பெயராய் வானோர் புகழ வுறைகுவர் ஏழ்முனிவராவர்,

சுமேதன், விரிசன், விட்டுமான், உத்தமன், மது அத்திரி சயிட்டுணு என ஏழ் முனிவர் ஆவர்.

11 சுவாரோசிடன் முதலாக இரேவதமனு வீருக வுள்ள நால்வரும். மழையுறமும் — மேகத்தையொக்கும், சுவாயம்பு மனுவின் மதலையாய்ப் பிரியவிரதன் குலத்திற் றோன்றினவராம்.

12 ஏழாவது மனு வைவச்சுதனும், மகவான்—இந்திரன், பொன்னுலகு புரக்கும் புரந்தரன் ஆகும். ஆதித்தியர், வசுக்கள், உருத்திரர், மருத்துவர் என்று ஒரு நால்வகையராவர்.

13 அன்னோர்கள் — அவர்கள், தேவர்கள் முப்பத்து மூவராவர், வசிட்டன், அத்திரி, சமதக்கினி, கோதமன். பாரத்துவாச முனிவன், காசிபன், கவுசிகன் என்போராவர்.

14 மாதவர் —பெரிய தவமுடையவர், சுவாயம்பு மனுவின் மன்வந்தரமதனில், ஆகூதியென்பவளிடத்தில் கடல் வண்ணனாகிய திருமால் சசிகேசன் எனத் தோன்றினன் விழைவு—விருப்பம்.

15 சுவரோசிட மனுவந்தரமதனில் குயில் என்பவளிடத்தில் அஞ்சன வண்ணனாகிய மாயவன் துடிதப் பேரினோடும் தோன்றினான்.

16 உத்தமன் எனு மனுவந்தரத்தில் புயல் வண்ணன் சத்தியை யென்பவளிடத்தில் சத்தியனென வந்தவதரித்தான் இகல்—பகை, அவுணர்—அசுரர்.

17 தாமச மன்வந்தரன் காலத்தில், துயில்பெரியோன் —துயில் கொளும் திருமால், உன்னல்-கருதுதல், அரியேறு —ஆண்சிங்கம், அரியாக—மாநுடமடங்கலாக.

18 இரேவத மனுவந்தரத்தில் திருமால் சம்பூதியின் மகவாக சம்பூதரெனுந் தேவரொடும் சம்பூதன் என்று கூறத் தோன்றினன், ஏண்—அழகு, பொலிவு—விளக்கம்.

19 சாக்குடன் எனுமனுவின் காலத்தின், இகுண்டை யென்பவளிடத்தில் வைகுண்டன் என்னு நாமத்துடன் தோன்றினன். தொகை—தொகுதி, அன்று, ஏ—அசைநிலை கள்.

20 வைச்சுதமன் வந்தரம்தனில் உலகெலாஞ் செழித்து வாழ, அதிதிக்கொரு மகனாகித் திருமாலானவர் அழகிய வாமனவதாரமாகிப் பகைவனாகிய மாவலியைச் செற்றான், பச்சைப்புயல்—நீலமேகம்,

21 உவமையில்லாத எட்டாவது மனுவைச் சாவன்னி யென்று கூறுவர், இந்திரனுக்கு மாவலியென்று பெயராம். தேவர்கள், சுதபர், அமிதர், முக்கியர் ஆக மூவகைக் கொத் தாகி, வகைக்கு இருபதாய் ஆக அறுபது பெயராய் விண் ணின் கண் வாழ்வார்கள்.

22 கீர்த்திமான், காவலன், இராமன், கிருபன், அச்சு வத்தாமன், வியாதன், மிருகசிருங்கன் என்னும் பெயருறும் ஏழ்முனிவராகி வாழ்க்கைபுரிவர். ஒன்பதாவது மனுவின் பெயர் சாவனன் என்பதாம். இந்திரன் நாமம், அற்புதன் என்பதாம்.

23 மரீசி, கற்பன், சுதகமர் என மூவகையராய் வகைக் கிருபத்திரண்டு பேர்களாக, மேலுலகினில் வாழ்வார். சவனன், துதிமான், அவ்வியன், வசுமேதா, திதி, சோதிட்டு மான், சத்தியன் என ஏழ் முனிவர் மாதவராய்ப் பெரிதும் வாழ்வார்.

24 பழிப்பறும்—நிந்தையற்ற, பத்தாமனுவின் பெயர் பிரமசாவனன். இந்திரன் நாமம்—சாந்தியென்பர். சுகர், மனோவிருத்தர் எனவிரு வகைத்தாய் நூறு பிரிவாய் விண்ணகத்திற் சார்வர். நான்கு வேதங்களும், ஆறங்கங்களும், இதிகாசங்களும் புராணமும் ஆயவைகள் கூறு நிற்கும்.

25 விட்டுமான், சுபிர்தி, சத்தி, மூர்த்தி, நரபாகன், போசன், சத்தியகேது, ஆயவர் எழு முனிவராம். பதினொன்றும் மனுவின் பெயர் தருமசாவினியன், இந்திரன் பெயர் விரிடன் என்பதாம்.

26 தேவர்கள், விகங்கமர் காமகோபர், நிர்வாணருசிகர் என மூன்று தொகுதியாய், கொத்து ஒன்று முப்பதின்மராய் விளங்குவர். எழு முனிவர்கள், நிச்சான், அக்கினிதேசன், வபுட்டுமன், விட்டிணிதி, ஆருணி, விட்டுமான், அனகன் என்பவர்களாம்.

27 பன்னிரண்டா மனு ஈசன் புதல்வனாகிய சாவன்னியென்பவனும். இந்திரன் பெயர் மிருதுதாமனும். தேவர்கள், அரிதர், உரோசிதர், தமோனிசர், உரோசிதர், சுகன்மர், சுராபர் என ஐந்துகொத்தாய்ப் பத்து வகையாக வாழ்ந்து அரம்பை மாதர்களுடன் கூடியின்புறுவர்.

28 ஏழ் முனிவர்கள்:—தவசி, சுத்தன், தபோமூர்த்தி, துதி, தபோதிருதி, தபோதனன், பொதி என்பவர்களாம். பதின்மூன்று மனுவின் பேர் உரோச்சியனும். இந்திரன் நாமம் திவோற்பதியாம். மறை பகர்ந்தது—வேதங் கூறிற்று.

29 தேவர்கள், சுத்திரர், சுதர்மர், சுதன்மர் என மூன்று கொத்தாய்ப்பின் முப்பத்து மூன்று பகுதியாய் நண்ணுவர் ஏழ் முனிவர், நிருமோகன், தத்துவங்கண்டோன், பிரமகம்பன், நிருச்சுகன், திதிமான், நவ்வேயன், சுதபன் என்பவர்களாம், கலந்து வாழ்வார்—ஒற்றித்து வாழ்வார்.

30 14-வது மனுவின் நாமம் பவுமியனும், இந்திரன் சுசியென்பதாம். விண்ணவர்:—சாக்குடர், பவித்தர், கனிட்டர், பிராசிரவாசர், விருத்தர் என ஐந்து தொகுதியாய் வாழ்வர். எழு முனிவரர்:—அக்கினிவாகு, சுசி, சுக்கிரன், மரகதன், ஆக்கினீத்தான், உத்தன், அதிதன் என்பவர்கள்.

31 கூறப்பட்ட பதினான்கு மனுவும் இறந்தபடின் பிரமதேவனுக்கு ஒரு பகற் பொழுதாம். அப் பிரமனுக்கு, எல்லைப்படுத்தின, பகலும் இரவும்போல ஆயிரம் சதுர யுகம் மருவுவன், வாசுதேவன், ஆதிசேடன், பிரத்தும்மினன், பிராமி எனத்துளவோற்குச் சதுர வியூகராவர் அம் மெய்ப் பொருளை வியாதனென விளம்புவர். (ஆல்—அசைநிலை.)

47-வது அத்தியாயம் முற்றும்.

---

# 48-வது வியாதர் வரலாறுரைத்தது

1 வைவச்சுதமனுவின் காலத்தில் முதற்றுவாபரத்தில் சுவாயம்பூமனு வியாதனாகவும் ஏனைய துவாபரத்தில் பிரசாபதி வியாதனாகவும், 3-வது துவாபரத்தில் உசனும் வியாதனாகவும், நான்காந்துவாபரத்தினில் அந்தண வியாதனாகவும், ஐந்தாவது துவாபரத்தினில் ஆதவன் வியாதனாகவும், ஆறுவது துவாபரத்தினில் மிருத்யு வியாதனாகவும், 7-வது துவாபரத்தில் இந்திரன் வியாதனாகவும், 8-வது யுகந்தனில், வசிட்டன் அவ்வியாதனாகவும், 9-வது யுகத்தினில் அச்சுதன் வியாதனாகவும், 10-வது யுகத்தினில் திரிதாமன் நல்வியாதனாகவும், 11-வது யுகத்தில் விடவன்நல்வியாதனாகவும், 12-ல் சததேசன் வியாதனாகவும், 13-ல் தருமனல் வியாதனாகவும், 14-ல் தரக்குவென்பவன் வியாதனாகவும், 15-ல் திரியாருணி வியாதனாகவும், 16-ல் தனஞ்சயன் முது

மறை வியாதனாகவும், 17-ல் கேமகன் வியாதனாகவும், 18-ல் உருதுஞ்சயன் வியாதனாகவும், 19-ல் பரத்துவாசன் புகழ்வியாதனாகவும், 20-ல் கோதமன் வியாதன் ஆகவும் உரைப்பர்.

6 21-ல் வாச்சுவான் வியாதனாகவும், 22-ல் சூட்டுமாயணன் வியாதனாகவும், 23-ல் திரணவிந்து வியாதனாகவும், 24-ல் வான்மீகி நல்வியாதனாகவும், 25-ல் சத்தி வியாதனாகவும், 26-ல் தகைபெறுபராசர வியாதனாகவும், 27-ல் சாதுகன்னன் வியாதனாகவும், 28-ல் துவாபரமதனில் குற்றமற்ற வியாதனே வியாதனும்.

8 பொன்வரை—பொன்மலை, புரிசடையந்தணன்-சிவபெருமான், பன்னரும்மறையை—கூறமுடியாத வேதங்களை, நான்குகூறுக-நான்குபகுதியாக, பகுத்தனன்-திரட்டினன், உபநிடதம்—வேதசிரசு, கன்னல் நல்மொழியாள்—உமாதேவியம்மையார், பங்கன்—வாம பாகத்திலுடையவன். எல்லாக் கடவுட்குங் கடவுளாங் கடவுள்—தேவதேவன் மகாதேவன் என்பதாம்.

9 (1) சுராதன், (2) தமனன், (3) சுகோத்திரன், (4) கங்கணன், (5) உலோகாகி, (6) யோகி, (7) இந்திரன், (8) சைதிட்டு, (9) அவ்வியன், (10) ததீவரதன், (11) விடபன், (12) பிருகு, (13) உக்கிரதபன், (14) அத்திரி, (15) வாலி, (16) கோதமன், (17) வேதசிரீடபன், (18) கோகன்னன் (என்பவர்களும்).

10 (19) குகாவாசான், (20) சிகண்டி, (21) சடாமாலியன், (22) அட்டகாசன், (23) தாருகன், (24) இலாங்கலி, (25) சுவேதன், (26) சயிட்டுணு, (27) சோமதன்மன், (28) குலீசன் என இருபான் எண்மர் உளராவர். இவர்கள் இறையருளால் வேதங்களை விரிப்பார்.

11 இந்த இருபத்தெண்மருள் ஒவ்வொருவருக்கும் மாணாக்கர் நால்வராவர். துன்னரும்—நெருங்க முடியாத

யான் கலியுகத்தில் வேதப் பொருள் உரைப்பேன். கரியோன்-கூர்மாவதாரப் பெருமாள், சூதன்—சூதபுராணிகன்.

12 விழுப் பொருள் — சீரிய பொருள், ஊழ்முறை—வரிசைப்படி, தீங்குதலை—இனிய மழலை மொழி, பயந்து—பெற்று, கனைகழல்—ஒலிக்கின்ற வீரக்கழல்.

48-வது அத்தியாயம் முற்றும்.
பூருவ காண்டம் முற்றுப் பெற்றது.



# கூர்மபுராணம்
# உத்தரகாண்டம்.
## அரும்பதவுரை
## கடவுள் வாழ்த்து—கடவுளை வாழ்த்துதல்

---

### விநாயக வணக்கம்.

1 விழைவொடு — விருப்பமோடு, தந்தை—சிவபெருமான், மிலைத்த—சூடின, முழுமதி-பூரணசந்திரன், முரித்து-ஒடித்து, உள்ளத்தறி—மனமாகிய கட்டுமரம், துவக்குண்டு-கட்டப்பட்டு, செய்யமலர்—செந்தாமரைப்பூ.

### சிவபெருமான் வணக்கம்.

2 தெய்வமடந்தையர் — சுவர்க்க உலகப்பெண்கள், ஏர்கெழுமகளிர்-அழகுமிக்கு விளங்குகின்ற பெண்கள். பணுமணி—படமும் இரத்தினமும், நாகமடந்தையர்-நாகலோகக் கன்னியர்கள், குழைய—இளக, வாங்கும்—வளைக்கும்

### சிவசக்தி வணக்கம்.

3 திங்கள்மாமணி—சந்திரக் காந்தக்கல் (முத்துமாம்) தெய்வநன்னீர் — தேவதீர்த்தம், திவலைமாந்தி—நீர்த்துளிகளைப் பருகி, அழகுபூத்து—அழகு நிறைந்து, கொங்கு கொப்புளிக்கும்—வாசனைவீசும், பொன்னங்கொடி—பொற்கொடி (சுவர்ணலதை) இயமவல்லி-பார்வதிப்பிராட்டியார், செய்யபதம் — செவந்த திருவடிகள்.

முருகப்பெருமான் வணக்கம்

4 தாருகன் உடலம்போழ்ந்து — தாருகாசுரனுடைய உடலினைப் பிளந்து (வெட்டி) தடி—ஊன், ஈருள்—ஈரல் குதட்டி-மென்று, விழுங்கி—உள்ளே செலுத்தி, மாறுப்பசி- நீங்காப்பசி, சுடர்வேல்—ஒளிவீசும் ஞானவேல், எந்தை —திருமுருகப்பெருமான், பொன்னடி—அழகிய திருவடி.

## முதலாவது வெதிரிகாச்சிரமத்தில் மகேசன் தோன்றினது

1 எருக்கங்கண்ணி-எருக்கம் பூவாலாகிய மாலை, எவன்- எத்தன்மையன், ஞானம் — உண்மையறிவு, அறைதி—கூறு வாய்-பவம்-பிறவிநோய்—விள்ளுட-கூறும், பாரா-பார்த்து சாற்றினர்—விண்ணப்பித்தனர்.

2 சாற்றியமுனிவர் — சவுனகாதியர்கள், தவத்துறை போய சூதன்-தவநெறிமுற்றியசூத புராணிகர், ஆற்றருந் தவம்-செயற்கரிய நோன்பு, சாலை-ஆச்சிரமம் செய்ய-செவந்த

3 நற்றவமுனிவன் — வியாதன், எந்தாய் — எமது பிதாவே! வயிரவாட்படை — வச்சிராயுதம், செயிர் அற — குற்றங்கள் நீங்க, தெரிவித்தவண்ணம் — தெளிவித்தபடி, பயில்வுற—பயிற்சிபெற.

4 ஆய்மலர்-அழகியபூ, கொன்றைவேணியந்தணன்— கொன்றைமாலையினை சடையிற்சூடிய சிவபெருமான், செற்ற —வலிதொலைத்த, சனகனை முதலாம், முனிவர்—கனகர் சனந் தனர், சனுதனர், சனற்குமாரர் ஆகியோர், இருள் எறிஞானம் —சிவஞானபேதம்.

5 இருந்தவம்—பெரியதவம், வெய்ய—விரும்பத்தக்க, வெதிரி — இலந்தை மரம், அன்பு பூண்டு — பக்தி மேற் கொண்டு, அருந்தவம்—அரிய நோன்பு, செய்காலை—செய்யும் போழ்து.

6 போந்த—வந்தருளிய, வேள்வி—யாகம், ஆய்ந்த—ஆராய்ந்த, அறைதிர்—கூறுங்கள், பூந்துழாய் முடியோன்—நாரணக் கடவுள், காந்துளரி யூட்டி-அக்கினி காரியம் செய்து.

7 அருந்தவ ஞானபாதம், (சரியா பாதம், கிரியா பாதம், யோக பாதம்) நான்காம் பாதமாம், வானவர்—தேவர்கள், நேமி—சதரிசனம் எனப் பெயரிய சக்கராயுதம், கருங்கடல் — ஆழமும் அகலமுமுடைய கடல், தோன்ற—கண்களுக்குப் புலனாக.

8 சேகு—குற்றங்கள், நரன் எனும் முனிவன் குறுமதி தரித்த விரிசடையும் முக்கண்களும், புலித் தோலாடையும்; உடைய பவழ நிறம் போன்ற தனி நாயகனாக நிற்றலையுங் கண்டனர். (எ-று)

9 உவகை பொங்கி—களிப்பு மிகுந்து, தேண்டிய நிதியம் — தேடப்பட்ட பொருள்கள், மாண்டகுமுனிவர்—நற்குண நற்செயலுடைய இருடிகள், இவர்-நரநாராயணமூர்த்திகள்.

10 குடந்தம்பட்டு — வழிபாடு செய்து, கூப்பி — கை குவித்து, மன்ற — உறுதியாக, கேட்பான் — கேட்கும்படி, மனோவாக்கு—மனமும்வாக்கும், இருஞானம்-பெரியஅறிவுப் பொருள்.

11 பங்கயத்தவிசு — தாமரையாசனம், பண்ணவன்—பிரமதேவன், அரன் — உருத்திரன், எம்மை—எங்களை, ஈன்றும்—தோற்றுவித்தும் புங்கவ—மகாதேவனே, புகறி-கூறு.

12 மதர்நெடுங்கண்ணி — செழித்த நீண்டகண்களை யுடையவராகிய பார்வதிப்பிராட்டியார் சிற்பொருள்-ஞானப் பொருள், ஏல்வை — சமயம், பையரா — படமுடையபாம்பு தவிசு—இருக்கை, அணைந்தது—வந்தடைந்தது.

13 சேட்டிளம் பருதி—அழகிய இளம்சூரியன், மோடு-உயர்ச்சி, சிங்கப்பொன்தாள் தவிசு—சிங்காசனம், கொடி—பார்வதியம்மையார், நாட்டம் — கண்கள்.

14 இருந்தபின்-ஆசனத்திலமர்ந்தபின்னர், முகுந்தன்-திருமால், தீட்சை ஐவகைய அவையாவன நோக்கு (சட்சு) பரிசம், (தீண்டல்) வாக்கு (வாசகம்) பாவனை, அவுத்திரி என்பனவாம், விரிந்த—அதிகப்பட்ட, பாசம்-மும்மலமாகிய பாசங்கள், நீக்கி—வலிகெடுத்து, மெய்ப்பொருள்—ஞானப் பொருள்,

முதலாவது அத்தியாயம் முற்றும்.

---

## 2-வது சாங்கியயோகம்.

1 இயக்கர் (யட்சர்) எண்ணுதற்கரியது — நினைத்தற்கும் முடியாதது, உணர்ந்தோர் — அறிவினால் அறிந்தோர் யார்க்கும் — எத்திறத்தார்க்கும், வெம்பிறவி—கொடிய பிறவிப்பிணி, நவை—குற்றம், புண்ணியர்—நல்வினையாளர், நெஞ்சம்புலப்பட-மனத்திற்கிசைய, புகலொணாது-கூறமுடியாது.

2 கமழும்—மணம்வீசப்பெறும், அண்டரும்—தேவர்களும், தேரு—தெளியமுடியாத, தொண்டர்—அடியவர்கள், நன்கிற்சொல்வம்—நன்மையுண்டாகக்கூறுவோம்.

3 சொச்சம்—மாசின்மை, சூக்குமம்—நுட்பம், நிச்சம்—நித்யம், தமம்—அஞ்ஞானவகையில்ஒன்றும், கேவலம்—முத்தி, எச்சம் — குறைவு, ஒன்று — ஏகமாகியபொருள், மேலோர்—ஞானிகள்.

4 அந்தரியாமி — உள்நின்றுநடத்துபவன், அவ்வியத்தம்—சூக்குமம் (சிருட்டிக்கப்படாதது) ஐந்துடைப்பிராணன் — பஞ்சகஞ்சுகியாகிய ஆன்மச, சுந்தரமறைகள் — அழகிய வேதங்கள்,

5 சிமிழ்ப்பு—கட்டுகை, உலப்பு இல்காலம் — வற்றுத் லில்லாதகாலம் (எல்லையற்ற காலம்) யாக்கை—கட்டப்பட்டது (உடல்) மருவிடும்—பொருந்தப்பெறும். பரித்திடும்—தாங்கும், பழிப்பு—நிந்தை, தரித்திட—தாங்க

6 இந்தியம்—பொறிகள், எஞ்சல்-குறைவு, சத்தமாதி வாக்காதி—ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள், செஞ்சவே—நேராகவே, மனாதி — அந்தக்காரணம் (உட்கருவி)

7 பிரகிருதி — மூலப்பகுதி, உழிதரும் — சுற்றும் (சுழலும்) புருடன் — புருடதத்துவம், சாலவிழைவுறும்—மிகவிரும்பும், ஆன்மா-உயிர்,சைதனியம்—அறிவு (கடவுள்)

8 சகம்-தோன்றி நின்று அழிவது (உலகம்) பயிறரும்-பழகிடும், உபாதி—தொல்லை, மயர்வு—மயக்கம், சன்மம்—பிறப்பு, மருவினும்—எடுத்தலும்

9 முத்தர்—விடுபட்டவர், விகாரம்-வேறுபாடு, தனிப் பொருள்-ஒப்பற்ற பொருள், அசலம்—அசைவிலது, மைத்த ஆணவம்—கரிய ஆணவமலவிருள்.

10 என்மேல் — என்னுடல், நோன்மை — வலிமை, நுவலுகின்ற—கூறுகின்ற, பான்மை—தன்மை, ஈனம்—குற்றம், (இழிவு) செயலது—செய்கையுடையது.

11 வியாபி—நிறைந்தது, கரியது—சான்றாகவுடையது, சுத்தவெளி—சுத்தமாகிய பரந்தவிடம், துரியம் — மேலான நிலை, பகுதி—பிரகிருதி. (விகாரமிலாதது)

12 கருவினெய்தி — கருப்பத்திலுற்று, போக்குவரவு புரிதல் அறியாமையினால் ஆவது, போக்கொடுவரவு—போதலும் வருதலும், வேறுஒன்றாய்—வேறாகித்தனியாகி.

13 நித்தியம்—என்றுமுளது (அழிவிலாதது) வியாபி-நிறைந்துளது, பரமம்—மேலான பொருள், சுயம்பிரகாசம்—தனியொளி, புருடன் ஆங்காரம்—தத்துவபேதங்கள்.

14 காரணம் — காரியத்திற்கு நியதமாய் முன்னிற்பது காரியம்-ஆக்கப்பாடு, சகத்திற்குஎல்லாம்-உலகனைத்திற்கும், தீது—குற்றம், பிரகிருதி—மூலப் பகுதி பிரதானமும் அவ் வியத்தமும் ஒன்றுபடலால் ஆன்மாத்தான் பரம் என்றல் தோன்றப்படமாட்டாது.

15 தேற—தெளிய, பின்னல்—மாறல், வெண்டிரை—வெள்ளிய அலைகள், குமிழி—மொக்குள், மன்னிய — நிலை பெற்ற, துன்னிய—நெருங்கிய, வல்லி—விலங்கு.

16 காம மாதி — காமம் வெகுளி, மயக்கம் (காமம் குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியமும் ஆம்) இயல்பது—இயல்பினையுடையது, பிறவி நோய்க்கு—பிறத்த லாகிய பிணிக்குக் காரணமாவது நல்வினை தீவினைகளாய பாவ புண்ணியங்களேயாம்.

17 மாயாச் சத்தியினால் அளவற்ற வேறுபாடு ஆன்மாக் களுக்குண்டு, நீர்நிரம்பிய இடங்களிற் காணப்படும் சந்திரனைப் போல, செலுத்தப்படும் உபாதியினால் பற்பலவடிங்கள் காணப்படும்.

18 காழ்—வயிரம், கழுமம் — பற்றுதல், ஏழ்பகல்—ஏழுநாள், அழுக்கு—மாசு, ஆன்மா, தத்துவாதிகளோடு பொருந்திநின்றாலும் அவற்றினியல் சாரப்பெறாது நிகழ்ந் திடும், அன்று ஏ அசைநிலைகள்.

18 வெளிற்றறிவு—வெள்ளையறிவு, எறிந்த — போக் கிய, தற்பரம்—சிவபரம்பொருள், கண்ணி—மாலை, அரவு என—பாம்புஎன்று, மருளும்—மயங்கும், (சர்ப்பப்பிராந்தி) களித்தபுல்லறிவினோர் — களிப்புற்ற அற்ப அறிஞர்கள், சக மாய்—தன்னுடையதாய்.

20 விகாரம் — வேறுபாடு, சித்தாய் — அறிவாகி, மாயையூடு-மாயாப்பிரபஞ்சத்தின்கண், சோதி-அருட்பெருஞ் சோதி, (சிவம்) புன்மையோர் — புல்லறிவோர், தகாத— பொருந்தாத.

21 பளிங்கு—கண்ணுடி, தொடுத்தது — தொடர்ந்து வந்ததிலே (பற்றியிருப்பது) மறை—வேதங்கள், அளவை— தருக்கஅளவை, நெஞ்சு—மனம், படுத்தியஉருவம்—பாவனை வடிவு, பாவிக்கின்—பாவனைபுரியின், பரமது—சிவமது.

22 தன்னுள்உலகமும், உலகினுள் தானும்ஆக வேறு பாடின்றிக் காண்பவனே பிரமத்தினிடத்தும் தானேயல்லா மல் வேறொன்றினையும் காண்கிலானுகுவன். அவனே முத்தனும்.

23 சிறந்தயோகியானவன், காமாதிகள் நீங்குவது என்று பூதங்கள் அசைவற ஒன்றினிடத்துத் தங்குவதென ஒன்ருகத்திரட்டி நோக்கும் ஆன்மா நித்தியம்எனவும் உலகு அநித்தியம் எனவும் தெளியப்பெற்றவன் எவனே அவனே யாம்.

24 கங்கையை முதலவாய புண்ணியநதிகள் கடலொடு கலந்தொன்ருமாறுபோல (நதிபதி) ஞானபாதமடைந்திடில் உயிர்களெல்லாம் கேடில்லாத பிரமத்தினிடத்தில் ஒன்ரு யடையும்.

25 பிரமம் ஒன்றே நித்தியப்பொருள். அலகைத்தேர் —பேய்த்தேர், பேதுற—அறியாமையுற, பிரபஞ்சம்—உலகு மருண்டுதோன்றும் — மயங்கிப்புலப்படும், தீதுறுமனத்தர் நல்லமனமில்லாதவர், வேறு—தனி, ஒக்கநோக்கும்—ஒரு சேர ஒன்ருகப் பார்க்கும்.

26 நிருமலம்—அழுக்கற்றது (தூய்மையானது) நித்தி யம்—என்றுமுள்ளது. (அழிவிலது) மம்மர்பூத்து—மயக்கங்

தோன்றி, அஞ்ஞானம்—அறியாமை, சடம்என்பதும் மாயை யென்பதும் பரியாயமாம், ஒருவிடும்—நீங்கும் (நீக்கும்)

27 இன்னணம்-இவ்விதம், இசைத்தோம்—கூறினோம், மாண்பு — மாட்சிமை, இவ்வியோகமானது — ஞானயோக காரணம் எனவும் ஞானகாரணம் எனவும் இருவகைத்து, பன்னல்—கூறல், துன்னல்—நெருங்கல்.

23 யோகியர்—யோகுபுரிபவர், தத்துவம் 36, 96 ஆகி யவைகள், அறிந்தோர் இவற்றின் கூறுபாடுகளையும் தன்னை யும் அறிந்தவர், சோகம் மோகம்—தளர்ந்தமயக்கம்.

29 அரும்பெறல்யோகம்-பெறற்கரியயோகம், நான்கு வகையோகங்கள்—அடயோகம், சிவயோகம், இராசயோகம், சிவராசயோகம் என்பனவுமாம். யோகசித்தி விரும்புமவர் முத்தியெய்தார், காமியர் எய்தார், நிட்காமியர் எய்துவர், பரம்பொருளாகிய என்னைப்பாவித்தோர் — சிவோகம் பாவனை பண்ணுமவர்.

30 உலகுஎல்லாம்—உலகமுழுதும், அலகு — எண், துடைத்தல் — அழித்தல், கரியது—சான்று, நிற்றல்—நிலை பெறல், முனிவரல்லார் காணுதல்செய்யார்.

31 கந்தம்—வாசனை, இரசம்—சுவை, உருவம்—வடிவு பரிசம்—தொடுதல், ஒலி—ஓசை, சிற்பரம்-ஞானம், பொற்பு —பொலிவு, அழகு. உருவம்—வடிவம்.

32 ஏடணை —தாரம், புத்திரம் வித்தம் ஆகியவை களால் வரும் துன்பம், பகைவர்க்கம்-அரிசட்வர்க்கம் என்பர் காமம்குரோதம் லோபம் மோகம் மதம் மாற்காரியங்களாம். முக்குற்றம்—காமம் வெகுளி மயக்கம், தடிந்து — நீக்கி, சிங்கல்—மாறுபாடு, முனிவர்—முற்றத்துறந்தவர்

33 மாயை—மயக்குதலைச் செய்வது, கடிந்த—நீங்கின, மாயையாஞ்சகம்—மாயாப் பிரபஞ்சம், ஒல்லாது-இயலாது, ஏயுற—பொருந்த, நடக்கும்—இயலா நிற்கும்.

34 தணப்பு—நீக்கம், சிமிழ்ப்பு—கட்டு, திகிரி-சக்கரம், பவம்—பிறப்பு, உன்னல்—கருதுதல், பிலந்து—மகிழ்ந்து, இனிது இருப்பன்—சிவயோகத்தில் உறைகுவன்.

35 பொருவு — உவமை, பொருந்திய — இசைந்த, அரில்கெட—பிணக்கம் நீங்க, மாண் ஆக்கர்—தனக்கும் ஆசிரியர்க்கும் மாட்சிமை யுண்டுபண்ணுமவர், மைந்தர்—புதல்வர், நன்கின் பரிவு — நன்றாகிய அன்பு, உரைக்க — (வியங்கோள்) கூறுக.

2-வது அத்தியாயம் முற்றிற்று

---

## 3-வது சம்பிரதாய முரைத்தது

1 அவ்வியத்தம்—மூலப் பிரகிருதி மாயை, பிரதானம் —பிரகிருதி, எவ்வம்—துன்பம், பிரமம்—பெரிய பொருள், நொவ்வு—நொய்ம்மை, சிப்பி—முத்துச் சிப்பி, மருண்டு—மயங்கி

2 இந்தியம்—பொறிகள், அந்தில்—அவ்விடம், ஆதாரம்—பற்றுக்கோடு, முந்தி—முற்பட்டு, தோற்றுவிக்கும்—உண்டுபண்ணும், பந்தம்—தளை (கட்டு) தொடர்ச்சி—தொடர்பு (சம்மந்தம்)

3 பின்னம் — வேறுபாடு, காட்சி முதலானவைகள் — காண்டல், கருதல், உவமானம், ஆகமம் என்பனவாம், விகற்பம் — வேறுபாடு, தற்பரம் — ஆன்மாவினுக்கு மேலாகிய சிவபெருமான், நவிலும்—கூறும்.

4 உள்—அகம், புறம்—வெளி, தரித்து—தாங்கி, உபநிடதம்—வேதத்தின் முடிவு, (வேதசிரசு) தெள்ளரிய—தெளிந்துகொள்ள முடியாத, எதிகள்—துறந்த முனிவர்.

5 விளம்புஅரிய—பேசமுடியாத, அநாதி—முதலில்லா லாதது, புருடன், பிரதானம் காலம் மூன்றும் அநாதியாம். ஒன்று—பொருந்தமாட்டா, என்றன் உருவம்—என்வடிவம்,

6. மகான் மான் என்பன இரண்டும் ஒருபொருளவாம், பெட்பு—விருப்பம், ஆய்ந்திட்டு—ஆராய்ந்து, ஒருவாது—நீக்கமுடியாது, பொசிக்கும்—அருந்துதலைச்செய்யும்.

7. விகாரம் — வேறுபடுத்துவது, பிரகிருதி — மூலப் பகுதி, மானில் ஆங்காரத்தோன்றும், மறைக்கும்-ஒளிக்கும். துவக்குண்டு — கட்டுண்டு, ஆங்காரம் — அந்தக்காரணத் திலொன்று.

8 சீவனும்—உயிரும், மனம்கரணம்—மனமும் கருவி களும், பவங்கள்தோன்றும்-பிறவிஉண்டாகும், சுகதுக்கம்—இன்பத்துன்பங்கள், பொசிக்கும்-நுகரும், சன்மம்-பிறப்பு, உழலும்—வருந்தும், மாது—ஓ அசைநிலைகள்.

9 காலதத்துவத்தின் இயல்புகூறுகின்றது, படைத்து-சிருட்டித்து, அளித்து-காத்து. துடைத்து-அழித்து. சொர்க் கம்—சுவர்க்கலோகம், கணிக்கொணாது — அளவிடற்கரிது.

10 பொறிகளிற் சிறந்தது மனம், மனத்திற் சிறந்தது ஆங்காரமாம், அதனின் மேம்பட்டது மானும் அதனின் உயர்ந்தது மூலப்பிரகிருதி அதனின் மேம்பட்டது ஆன்மா அதனின் மேம்பட்டது பிராணன் அதனிற் சிறந்தபரவெளி (பரமாகாயம்)

11 ஒளியினுக்கும் ஒளி—பேரொளி (பரஞ்சோதி) பராபரம்—மிகமிகமேலானபொருள், கடந்தவர் — மேம்பட் டவர். வரைத்திடும் — எல்லைப்படுத்தும், மருவாமல் — பொருந்தாமல், பொலங்கழல்—பொன்னடி, பிறவிப்பெருங் கடனீந்துவர் நீந்தார்—இறைவனடிசேராதர்.

சம்பிரதாய அத்தியாய முற்றிற்று.

## 4-வது பத்திமை யுரைத்தது

1 மகம்—வேள்வி, மையறுதானம் — குற்றமற்ற கொடை, புகைபடுதழல்—பஞ்சாக்கினி, தவநனிபுரிவோர்—மிகவுந்தவஞ் செய்பவர். பகரும்—சொல்லப்படும், எண்ணுர்—தியானஞ்செய்யாதவர்.

2 மதிவல்லோர்—அறிஞர்கள், எவனுழை—யாரிடம் அமர்வுற்றேம்-பொருந்திேனும், அன்னேன்-அத்தன்மையன் மலைவரும்—ஐயமில்லாத, யான் ஆம்—யானே ஆகுவன்.

3 இந்திரன் முதல வானோர் — முப்பத்து முக்கோடி தேவர், இருடிகள் — நாற்பத்தெண்ணுயிரவர், மனுவாதி அந்தமில் உயிர் யாவும்—எண்பத்து நான்கு நூறுயிர யோனி பேதங்கள், பரிவு—அன்பு, நந்தல்—கேடு, என்னிலை—என்னுடைய பரத்துவ நிலை, நாடும்—விரும்பும்.

4 அருமகம் — செயற்கரிய வேள்வி, நுகர்வோனும்—அவிசையருந்துபவனும், புவி-பூமி, நீர்கால்எரிஉயர்வானம்-பஞ்ச பூதங்கள், பசுபதி—ஆன்ம நாயகனுகிய சிவபெருமான்.

5 இறையவர் — எல்லாவுயிர்களிடத்துந் தங்குமவர், குவிகை—கைகூப்புதல், அடைதரும்—வந்து சேரும், பவமற—பிறவிப் பெரும் பிணி நீங்க, அருள் தெய்வம்—அருளுங் கடவுள்.

6 அலை கடல் நடு எய்தா—அலைகளையுடைய திருப்பாற் கடல் நடுவினையடைந்து. திருமாலும், பிரமனும், கலைகளை நன்குணர்ந்த இருடிகளும், தேவர்களும் தந்தம்நிலை கெடாதிருக்க நாடொறும் திருவடி வணங்கும் மார்க்கத்தினராவர்.

7 ஆறறிமறையோர் — ஆறங்கங்களை யுணர்ந்த அந்தணர், மாறு—பகை, வீறு—பெருமை, பொருள் செய்யும்—பொருளீட்டும், தொழின்—தொழுதால்.

8 மருவாத பின்னவர் — பொருந்தாத நான்காம் வருணத்தவர். இழி தொழில்—தாழ்ந்த செயல், பெட்பின்—ஆசையினால், தம்நிலை—தங்கட்குக் கூறிய விதி.

9 மூசல்—மொய்த்தல், முகை—அரும்பு, பாசடை—பசிய இலை, மிசை—மேல், பற்றுமது—பட்டதும் படாததும் ஆயநிலை, மாசு-தாஞ்செய்த குற்றங்கள், ஆசு—குற்றம்.

10 தத்தம் இதயம்—தங்கள் தங்களுடைய உள்ளம். பூசனை புரிகிற்போர்—சிவ பூசை புரிபவர், பன்னகம் அணை—பாம்புப் படுக்கை, பரமன் — திருமால், மெல்மலரோன் — மெல்லிய தாமரை மலர்மேல் இருக்கும் பிரமன்) அமரருலகு—தேவருலகம்.

11 மெல்லிலை—வெற்றிலை. உயர்வில்வம்—ஐவகைய, அவை விளா, நொச்சி, மாவிலிங்கை, கிளுவை கூவிளம் என்பன, புனல்—தீர்த்தம், மல்கிய—நிறைந்த, பெய்தோர்—போட்டவர், அல்லலது—பிறவிப்பெரும்பிணி.

12 மறையாவும் — வேதங்கள் முழுவதும், முனம்—(முன்னம்)முன்பு, இகல்—மாறுபாடு, குரு—அறியாமையினையொழித்து. அறிவுடைமையினையருள்பவன், அறம்—தருமம்.

13 இராசதகுணமாகும் என் ஒருகலை பிரமனாகி உலகினைப்படைக்கும், தராதலம்-பூமி, (சத்துவகுணசத்தி) பராவரும்—பரவும், அரி—திருமால், தனிகாக்கும்—தனியே காவல் புரியும்.

14 தாமசகுணமோ, உருத்திரனாகியழிக்கும், கண்ணுதல்—நெற்றிக்கண், ஏமுறும்—இன்பமுறும், மலரயன்—பிரமதேவன், காமனை — மன்மதனை, எரிசெய்யும்—நீறுக்கிடும்.

15 பத்தியின்—அன்பினால், வித்தகர்—ஆற்றலுடையவர், போகசித்தியின் — போகத்தால் வருஞ்சித்தியினால், பணிகிற்பார்—பணியும்பான்மையினர்.

16 அலர்கதிர்—சூரியன், அந்தண்மலர் — அழகிய குளிர்ந்த தாமரைமலர், உளமகிழ்ந்து-மனமகிழ்ச்சியடைந்து பவம்—உண்டாதல், உணர்கிற்போர்—அறிபவர்கள்

17 யோகி—யோகம்புரிபவன், சேகு—குற்றம், தெளி பொருள்—தெளிந்தபொருள், மாகம்—ஆகாயம், ஏகமது—ஒன்று, யான்—நான், அறிவீர்—அறிந்துகொள்ளுங்கள்.

18 மன்னிய—நிலைத்த, மகத்துவம்—பெருமை, துகள்—குற்றம், உன்னரிதாய்—கருதற்கு அருமையுடையதாய், உலைவு—வருத்தம், என்உரு—என்வடிவம்.

19 பரமானந்தம்—மேலான இன்பம், பொருவருநடம்—உவமையில்லாத பஞ்சகிருத்திய பரமானந்த தாண்டவம், புரிகுவன்—செய்வேன், உருகி—மனமிளகி, கண்டீர்—முன்னிலையசை.

20 தகவு—தகுதி, இப்பொருடனை—இந்தப்பொருளாகிய பரமவடிவினை, மாசு—குற்றம், இகல்—பகை, இருவினை—நல்வினை தீவினைகள், இயல்பாம்—முறைமையாம்.

4-வது அத்தியாயம் முற்றிற்று

## 5-வது விச்சுவரூபம்.

1 ஆனனம் அனந்தம் — முகங்கள் எண்ணில, படைபற்றும்—ஆயுதங்கள் பிடிக்கும், மெய்களும்—உடலங்களும் பையரவகங்கணம் — படம்பொருந்திய பாம்பாகியகங்கணம்

2 புனல்சூழ—நீர்சுற்ற, சுடர்கனலி-ஒளியினையுடையதீ புதைத்து — மூடி. மாகவெளி—ஆகாயவெளி, வயங்குதல் விளங்குதல், ஒளி—பிரகாசம்.

3 கருந்துளவு — கருமையாகிய துளசி, கஞ்சமலர்—தாமரைமலர், புரந்தரன்-இந்திரன், புங்கவர்—தேவர், வீழும்—விரும்பும். திருந்துமறை—திருந்திய வேதங்கள்.

4 நிற்பன நடப்பனகள் — தாவரசங்கமங்கள், பகிர் அண்டம்—பெரியபூமியின் பரப்பு, எல்கதிர் — சூரியகிரணம் அணு—மிகவும்நுணுகியது. உயிர்ப்பு—மூச்சுவிடுகை.

5 வெங்கதிர்—வெப்பமான கிரணங்கள, வெய்யவன் —சூரியன், ஊறி—சுரந்து, ஆய்—அழகு. சிவபெருமானுக்கு முக்கண்உள இப் பெருமானே விசுவரூபமெடுக்கின்றுழி முக் கண்ணிலேகூறப்பட்டுள்ளது. துரப்ப — ஓட்டெடுக்கும்படிச் செய்ய.

6 கொங்கு—மணம், கோலம்—அழகு கங்கைநதி —பகீரதனால் கொண்டுவரப்பட்டது சிந்த—சிதற, மங்குல் ஆகாயம் (மேகமுமாம்) உத்தரிகம்—மேலாடை.

7 அரி—உள்ளீடு பருக்கை கற்கள். நூபுரம்—சிலம்பு எயிற்றுக்கூற்று—கோரப்பற்களை யுடைய இயமன், கழல்— காலிற்றரிக்கப்படும் வீரக்கழல், சீற்றவரி—கொடுவரி, அதள் —தோல்

8 பெய்யும் — வீசும், மெய்யிலனல் — திருமேனியின் அக்கினி, எங்கணும்—எப்பக்கத்தும், முப்புரி—முறுக்கிய மூன்று புரியாகிய நூல், பரக்க—பரவ.

9 ஒளியி னொளி—பேரொளி, அருந்தும்-தியான வழி யாகப் பருகும், பிறவி தீர்த்திடும் அருமருந்தாய் — பிறவி யைப் போக்கும் தேவாமிருதமாகி, விண்ணவன் — மகா தேவன், நடம் புரிதல்—ஆனந்தக் கூத்து புரிதல். உளமகிழ்ந் தார்—மனக்களிப்படைந்தனர்.

10 அண்ணல்—சிவபெருமான், தயா—தயை (அன்பு), கண்மணி — கண்ணிற் கருமணி, குளிர்ப்ப — குளிர்ச்சியுற, எண்ணரு மறைகள்—அளவற்ற வேதங்கள், எந்தை—எமது தந்தை.

11 இன்னே — இப்பொழுதே, அருள் சுரத்தி — கருணையை பெருக்குவாய், கேடு—அழிவு, நின்னையே அன்றி—தேவரீரையே யல்லாமல், நிமலம்-தூய்மை, காண்கிலேன்—காணப்பெற்றிலேன்.

12 பரவைநாப்பண் — கடலின் நடு, குமிழி — நீரிற்றோன்றும் குமிழி, நாசம்—அழிவு, கண்ணகன் உலகம்—இடமகன்ற உலகம், தோன்றுதல் — புலப்படல்.

13 கணம் — ஒரு சிறு பொழுது, கற்பம்—பெருகிய கால அளவு, அற்புதம்—வியப்பு, சிற்பரம்—ஞானநிலையாகிய பொருள், தேவர்க்கும் தேவன் — மகாதேவன், மாயை — மாயா வல்லபம்.

14 பங்கயன் — பிரமன், முப்பகுதி — மூன்று பிரிவு, இருந்தனை — இருந்தாய், அளித்தனை — காத்தல் புரிந்தாய், ஓர்காலும் — ஒரு காலத்தும், அறியொணாது — அறிந்து கொள்ள முடியாமல்.

15 பரமானந்த நடம் — மேலாகிய இன்பக் கூத்து, அள்ளி அள்ளி—வாரி வாரி, தெண்ணருந்தேனே—தெளிந்த அரிய தேனாகியவனே! என்னு—என்று கூறி.

16 தாழும் — கீழே விழுந்து வணங்கும், வியக்கு ம்—மேம்படக் கூறும், காழ்படு மனம் — உறுதிகொண்ட உள்ளம், கலுழ—அழ, யோகிலிலுறங்கும்-யோகத்திலின்றிடும்.

17 இன்னபுரி—இத்தன்மையான செயல்களைச் செய்த, என்னுருவம்—என் வடிவம், பின்னம்—வேறுபாடு, தழுவ—புல்ல, மாயன் — திருமால், தலிக்கரந்தான் — தனியாக மறைத்தலைச் செய்தான் (மறைந்தனன் என்பதாம்).

18 கார்நிறமுகுந்தன்—கரியவண்ணமுடைய திருமால், கங்கைபுனைஎந்தை—கங்காதரனாகிய சிவபெருமான், அவன்

ஆடுதல்—அவ்விடத்தில் நடனம் புரிதல், பேரறிவு—மெய்ஞ் ஞானம், பிஞ்ஞகன்—ஒருவகைக்கூத்துடையான், வார்சடை—நீண்டசடைகள்,

19 ஆதாரம்—பற்று, யாரும்—எத்திறத்தவரும், உருவாகி — வடிவாகி, நிறைந்தபெரியோய் — பரிபூரணமாகிய பிறவாயாக்கைப் பெரியவரே! அரவிந்தம் — தாமரை, பான்மை—தன்மை (இயல்பு)

20 மறை—மந்திரம், தொண்டு—அடியவனுந்தன்மை, தொல்வீடு—முத்திப்பேறு, தண்டாது—தடைபடாது, மருவாது—பொருந்தாது, இயக்கும்—செலுத்தும், களைகண்ணது—பற்றுக்கோடானது,

21 சேணுடர் — தேவர்கள், சிந்தும்—வீசும், அரி—சிங்கரூபமெடுத்த நாரணன், அயன்—பிரமன், எங்குமுளன்—வியாபகன், காணுது—காணப்பெருமல், அருமாயம்—ஒருவராலும், அறியப்பெறமாட்டாத மாயை.

22 இருத்தி—இருப்பாய், அகிலங்கள்—எல்லாவுலகங்களும், அருக்கன்—சூரியன், சோமயாசி—இயமானன், கணியாது—எண்ணமுடியாது. (எட்டுக்கொள் இறைவடிவு குறிக்கப் பெற்றுள்ளமை காண்க.

23 இறைவன்—உருவமும், அருவமும், அருவுருவமும் ஆய மூவகைவடிவுமுடையன் ஆம், மரு—மணம், மறையும்—கரக்கும், வழுத்தும்அடியார்—தோத்தரிக்கும் தொண்டர்கள், போதவுரு—ஞானவடிவம், கருத்து-உள்ளக்கருத்து

24 ஓங்காரமாகி — பிரணவவடிவாகி, விபு—மேலான வடிவு, கரி—சான்று ஆங்காரம்—முனைப்பு (அகந்தை) அறவோர்—துறவிகள், பாங்கு—பக்கம்.

25 அயன்படைத்தலையும், அரன்அழித்தலையும் புரிகுவராம், மழு—பரசு, விரகு—உபாயம், இயலாது-இயங்காமல் தெரிப்பர்-விளங்குவர், ஓர்சிலை-ஒப்பற்றவில், திறல்-ஆற்றல்,

26 எரிதும்மும் — அக்கினிசெறியும், வெய்யமழு—கொடியபரசு, தூயபசு—மலமற்றஉயிர்கள், மாயை—மயக்கம், தீர—ஒழிய, முதலீறு—ஆதியந்தம்.

27 தவழ்கின்றது—ஊருகின்றது, வெளி— ஆகாயம், அயர்கின்றது—தளர்கின்றது, அறவோய் — தருமவடிவானவனே, எமையாடி—எங்களை யாளுதலைப்புரியாய்.

28 மலர்தலையுலகம்—விரிந்த இடத்தையுடைய உலகம், பொதிந்த-மூடின, மாணுருவம்-விச்சு வரூபம், கணிச்சி—மழுவாயுதம், மடங்கலாசனம்—சிங்காதனம், அலர்கதிர் நேமியோன்—விரிந்த கதிர்களையுடைய சக்கராயுதத்தன்.

29 தாழ்ந்து—பணிந்து, தூவி—அருச்சித்து, சூழ்ந்தனர் — வலம் வந்தனர், துணையடி — இரு திருவடிகள், தழைத்த—நிறைந்த, மறையோர்—அந்தணர், ஐயன்-பரமேசுவரன், அறையல்—கூறுதல்.

விச்சுவரூப அத்தியாய முற்றிற்று.

---

## 6-வது சிவசத்தியின் செயலுரைத்தது

1 அளித்தல்—காத்தல், ஒடுக்கல்—அழித்தல், அலகு—எண், இயற்றுவான்—இயற்றுபவன் (செயல்புரிபவன்) மலரயனாகிய பிரமனுக்கு கலைமுற்றும் அறிவுறுத்திப் படைக்குந் தொழிலினையும் கற்பித்தேன். ஆல்—அசைநிலை.

2 கடல்-திருப்பாற்கடல், உளைந்து—வருந்தி, பருதி—பூருவதிசையிற்றோன்றுஞ்சூரியன், இமைக்கும்—ஒளிவிடும், உடல்சினம்—மாறுபாடுற்ற கோபம், திகிரி—சக்கராயுதம், இடர்கெட—துன்பங்களொழிய, காக்குந்தலைமை—காத்தற்குரிய கருத்தா.

3 குறும்பு — கரையாகியவரம்பு, விடம் — ஆலகால விடம், புரக்கும்—காத்தலைச்செய்யும், உருத்திரன்—சங்கார கருத்தன், உற்றிடாமல்-அடையாமல், மாய்த்து—அழித்து.

4 செந்தழற்கடவுள் — அக்கினிதேவன், தென்புலத்த வர்—பிதிரர்கள், ஊட்டும்—உண்பிக்கும், அவி—அவிர்ப்பா கம், பரித்து—சுமந்து (தாங்கி) அந்தமில்—முடிவு இல்லாத, அடுதல்—சமைத்தல், அவையறுத்தல்—செமித்தல், பந்தம் —கட்டு, செயலது—செய்கையது.

5 ஆழ்கடற்கிறைவன்—வருணதேவன், பவனவேந்து —வாயுதேவன், குளிர்விக்கும்—குளிரச்செய்யும், பிறழாது —மாறுபாடுறாது, உலவி உலாவுதலுற்று, ஆகம்—உடல்.

6 இந்திரன்—கீழ்த்திசைக்கடவுள், மறலி — இயமன், கோறல்—கொல்லுதல், அமரர்உய்ய—தேவர்கள் பிழைக்க, தாவில்—கேடில்லாத, அருக்கன்—சூரியன், அந்தமினிதியம் —சங்கநிதிபதுமநிதிகள், அளகைவேந்து—குபேரன்.

7 பேழ்வாய்—பெரியவாய், பரித்தல்—காத்தல், உரு கெழுசூலம்—அஞ்சுதலைச் செய்யும் சூலப்படை, உலறுகுஞ்சி —வற்றியதலைமயிர், பூதபதி — பூதநாயகன், முருகவேள்— குமாரக்கடவுள், முதன்மை—தலைமைப்பதவி.

8 ஐங்கரன் — விநாயகக்கடவுள், சேடன் — ஆதி சேடன், புங்கவர்—தெய்வீகத்தன்மையராய தூயர். பூமகள் —திருமகள் (இலட்சுமி பிராட்டியார்), வாணி—சரசுவதிப் பிராட்டியார்.

9 வடவை—வடக்கின் கண்ணதாகிய அக்கினி, முகுந் தன்—திருமால், இயக்கர் சித்தர் கருடர் விண்ணவர் ஆயவர் கள் தேவகணங்களாம். காட்டை பராத்தம் என்பன சிறு காலம் பெருங்காலங்களையுணர்த்தும் எண்.

10 நால்வகைத் தோற்றம்—சராயுசம், உற்பிச்சம், சுவேதசம் அண்டசம் என்பன. சரம்—அசைவது, அசரம்—அசையாதது, பஞ்சபூதம்-மண், நீர், தீ, வளி, விண் என்பன மனம் முதற்கரணம்—மனம் புத்தி சித்தம் ஆங்காரம் ஆயவை.

11 சத்திகள்—ஆற்றல்கள், தீங்கில் காரியம்—குற்ற மற்ற செயல்கள், சேர்ந்து நின்று—ஒற்றித்திருந்து, என்னிலே—என்றன்மை, நிகழ்த்தல்—கூறுதல், பாங்குற—பண்புற, ஓர்ந்தோர்—உணர்ந்தவர், பவக்கடல்—பிறவிக்கடல்.

சிவசத்தி செயல் முற்றும்

## 7-வது விபூதியுரைத்தது.

1 கனையிருள்பாழி—மிக்க இருளாகிய சூனியம் கடந்து நின்ற—அப்பாற்பட்டு நின்ற, கடவுளரும்—தேவரும், பீரமம்—பெரியஞானப் பொருள், நித்தியம்—என்றுமுளது அழிவிலது, நிட்களம்—தூய்மையானது, தத்துவம்—மெய்ப்பொருள்.

2 பிரமர்கள் பலருளர் அவர்களுள் நான்குமுகங்களையுடையவனே மேலானவனும். மாயர்களுள் பலருள் நாரணனே மிகவுஞ் சிறந்தவனும். யோகியர்கள்பலராம் அவருள் சம்புவேயுயர்ந்தவனும் சத்திகளுள் அம்பிகையும், ஆதித்தியரில் விட்டுணுவும் சீரியர்களாம்.

3 சங்கரன்—நலந்தருபவன் (சங்கரிப்பவன்) உடுக்கள்—நட்சத்திரங்கள், பரித்தபுகழ்—தாங்கியபுகழ், கலுழன்—கருடப்பறவை, தரித்த—தாங்கிய, வில்லி—வில்லாளிகள்.

4 அயிராவணம்—ஈராயிரம் கொம்புகளையுடைய சிவபெருமான் ஊரும்யானை, பிரகலாதம்—இரணியகுமாரன், இருடிகள் — முனிவரர் (தேவமுனிவர்) வசிட்டன்—பிரம

விருடியெனப்படுவன், கணம் — தேவகணம், விநாயகன்— விக்கினேச்சுரன்.

5. விரதம் — நோன்பு, விச்சுவகன்மாவென்பவன் தேவசிற்பியாவன், கபிலன்—சித்தர்களில் மேம்பட்டவன், வெருவரும்நற்றொழில்—பிறர்கண்டு எவ்வாறு இயற்றமுடியும் என்று அஞ்சும்படியாயுள்ள நல்ல சிற்பத்தொழில்.

6 பொருபடை — போர்த்தொழில்புரியும் ஆயுதம், சாமம் — நால்வகைவேதங்களுள் ஒன்றும், பிரமவர்த்தம் என்பது வடக்கின்கண் உள்ள புண்ணியநாடு.

7 நதிகள் — யமுனை, சரசுவதி, கோதவரி, துங்கபத்திரை, காவேரி, கங்கை முதலிய புண்ணிய தீர்த்தமுடைய யாறுகள். பிரமவிஞ்சை — பிரமவித்தை, சிவஞானமும், ஆகாயமும் மேம்பட்டவையாம்.

8 எழுத்துக்களில் அகரம் முதன்மைத்தாம், தரு— தேவமரம், சுரபி—பசுக்கள், தேனு—காமதேனுவாம், கதி —மோட்சம், மன்னவன்— அரசன்.

9 பரமேச்சுரன் — மிகமேலான கடவுள் அரசமரம் மூவகை மூர்த்தியுருவாம் அரந்தை—துன்பம், குபேரனும், கடலும், நாரதனும், உயர்வுற்றவர்களாம்.

10 சர்ப்பம் — ஊர்ந்துசெல்லும் பாம்பு, வாசுகி, அனந்தன் அரியமான் வருணன் மகரமீன் இவர்கள் உயர்ந்தனர் என நூல்கள் நுவலாநிற்கும் செச்சை—ஒருவகைமலர்

11 சித்திரத்தேரவன் — மிகவும்மேலான கந்தருவன் மாமறை — பெருமையுறுவேதங்கள், அரிதுணரும்—அரியவற்றினையாராயும் யாகப் — வேள்வி.

12 எழில்-அழகு, வேனில்வேள்-மன்மதன், புனிதம்-தூய்மை, கூற்று—இயமன்றன் பிரதிநிதி. வெற்றி—சயம் காயத்திரி உயர்காயத்திரி யெனப்படும்.

13 இருது—பருவகாலம் திங்கள் — மாதம் வஞ்சகம் —பாதகம் சூதுபஞ்ச மாபாதகத்தின்கொடியது, வியாழன் —தேவகுரு, வெள்ளி—கவி (சுக்கிரன்) அசுரகுரு.

14 ஆன்மா—உயிர்கள், பொன்ற—அழிவுற, பிணிப் பான்—கட்டுபவன், துன்றுபிணி—நெருங்கியநோய், ஆன்ம பிணியாகிய பந்தம்.

15 அந்தக்கரணம் பஞ்சபூதம், அறிவுப்பொறி, தொழிற்பொறி ஐம்புலன்கள் மூலப்பிரகிருதி இவைகள் அறிவுறுத்தப் பெறுகின்றன புகலரிதாம் கூறமுடியாது.

16 தத்துவம்—உள்ளவை, சகத்தின்காரணம் உலக காரணம் ஊற்றமுறும் மறை — எல்லாப்பொருள்களேயும் தன்னகத்துடைய வேதங்கள்.

17 பிரதானம்—மேலானது பிரகிருதி — விகாரமிலா தது, மதிவல்லோர்—கலைஞானிகள் சாத்துவிதம் ஞானமென வும் தமத்தினை அஞ்ஞானமெனவும் அறைவராம்.

18 இருகுணமுந்தழுவியது இராசதமாம் உயிர்களைப் பிணித்து நிற்பது நல்வினையும் தீவினையும் ஆகிய இருவினை களாம் ஆர்த்திடுதாம்பு—கட்டப்பட்டகயிறு.

19 விச்சை—வித்தை, அறவும்—மிகவும், இதம்—இன் பம், வளைத்து—சுற்றி, திருந்துற—நன்ருக, பாசம்—பந்தம், அனைத்தினுக்கும் — எல்லாவற்றிற்கும், காரணம்—காரியத் திற்கு நியதமாய் முன்னிருப்பது.

20 விகாரம்—வேறுபாடு. காலம்—இறப்பு எதிர்வு நிகழ்வுகள், கட்டுவிப்போன் — சேர்ப்பவன் (இறைவன்) பாசம்—பந்தம். பசு — ஆன்மா பரமம் — பெரியபொருள் தேர்ந்தோர் — தெளிவுற்றவர், சீலம் ஆசாரம் உயர்வீடு— பிறவாநெறி.

## 8-வது பிரபஞ்சந் தோற்றமுரைத்தது.

1 மூலமாயை—காரணமாயை, கரு—சூல், அண்டம்—உலகு, முருகுவிரி—மணம்விரிந்த, செழும்தோட்டுமுண்டகம்—நல்லஇதழ்களையுடைய தாமரை.

2 அயன்—பிரமதேவன், சரம் அசரம் (சராசரம்) இயங்கியற்பொருளும் நிலையியற் பொருளும், ஈன்ற-பெற்ற, நிரைத்திடும்—முறைப்படுத்தும், மாயையினையுடையவன் மாயனுகுவன், அருத்தி—ஆசை, அறிவுள்ளோர்—தத்துவஞானிகள்.

3 பிறவிக்கடல் — பிறப்பெனப்படும் சமுத்திரம் (உருவகம்) முன்னைவினை—பழவினை, முதுக்குறைந்தோர்—பேரறிஞர், அளித்தவன் — காப்பவன், அகத்துள் மேவ—வீட்டின்கண் இருப்ப, விலைமாதர்—பரத்தையர்.

4 எஞ்ஞான்றும் — எப்பொழுதும், பரம்பொருள்—மேலானவன். விழைவு—விருப்பம், நோக்குநர் — அறிபவர் அன்னோர் — அவர்கள், தற்பரம் — முத்திநிலை, எழுதரிய மறை — வேதங்கள், துயிலாமல் — உறங்காமல், அலறி—ஓலமிட்டு.

5. சூக்குமம்—நுட்பம், சொல்லரிய — கூறமுடியாத சடங்கம்—ஆறங்கம் நிமலம்—தூய்மை, எட்டாத — காண்டற்குமுடியாத, தாக்கணங்கு—இலக்குமி.

6 அநாதி—ஆதியில்லாதது. சகல தத்துவம்—முப்பத்தாறுதத்துவங்கள் யாவும், மயமாகி-தன்மைத்தாகி, அமர்ந்து நின்ற—பொருந்தியுள்ள, தன்மாத்திரை—அவற்றினுக்குத் தாயாகவிருக்கும் காரண தன்மாத்திரைகள்.

7 அலகுஇறந்த ஆன்மா — எண்ணற்ற உயிர்கள், பிணித்தல்—கட்டுதல், கடந்து — வென்று, சத்தியோடும் வைகும் நிலவுபுகழ்க் கடவுள்—அம்மையப்பனுகிய பரமேசுவரன், நிகழ்த்திடுவர்—கூறுவர், விபு—மேலானவன்.

முற்றும்.

## 9-வது மாயாவிகாரம் உரைத்தது.

1 முழுமுதல்—பரமேசுரன், உன்னு—உன்னி (கருதி) உளமுருகா—மனங்கசிந்து, உரைகுழறி—மொழிதடுமாறி—பணியா—வணங்கி, மறைபுகலா—மந்திரங்களைக்கூறி, பைந் நாகணையுறைவோன்—ஆதிசேட சயனன் (திருமால்)

2 அரு — வடிவிலது, மலம்—பாசம், உரு, —வடிவு நரைமால் விடை—வெள்ளைநிறம் பொருந்திய பெரியஎருது, இவரும்—ஊர்ந்து செல்லும், தனிநாதன்—ஒப்பற்ற சிவபெருமான், முகிழ்நகை—புன்சிரிப்பு, செப்பும்—கூறியருளுவன்.

3 உலகம் யானலன்—என்னையன்றியுலகமில்லை, தயங்கும்—விளங்கும், புகல் — பற்றுக்கோடு, ஒழிதரின்—நீங்கிடின், சடம்—அறிவற்றது, பகர்தல்—கூறுதல், பரிக்கும்—தோற்றுவிக்கும் (சுமக்கும்)

4 உருவத்துறுசகம்—வடிவுற்றுக் கண்ணுக்குப் புலனுகும் உலகம், தக்கோர்—பெரியோர், விச்சுவ உருவம்-பெரிய வடிவம், பல—பன்மையாயது, ஒன்று—ஒருமையாயது, என்பதும்—என்றுசிறப்பித்து கூறப்படுவதும்.

5 இறைவன் ஒன்ருய் பலவாய், உளதாய், இலதாய் இருப்பவனும், அழிவுற்றிடுகாலும் — அழியுங்காலத்தும், பொன்ருது—அழியாது, புகாது—செல்லாது, புரிகிற்பன்—கிரியையினைச் செய்குவன்.

6 உரைப்பு அரிய—கூறமுடியாத, மூடும்—மறைக்கும் நிகரற்று-உவமையின்றி, ஒருசத்தி, பேதத்தையும் அபேதத் தையும் புரியாநிற்கும்.

7 ஒருசத்தி — முத்தியினையளிக்கும், தற்பரநிலையிது வென்கின்றது, மன்னியது-நிலைபெற்றிருப்பது, அலைவின்றி-அசைவில்லாமல், மன்னியிடும்—நிலைபெறும், என்னுருவம்—எனது வடிவம்.

8 காயம்—உடல், வாக்கு—உரை, படம்—ஆடை, ஏய உலகம்—பொருந்திய சகம், எய்தேன்—அடையேன், மறைந்தும்—வெளிப்படாமலும்.

9 அணு—மிகவுநுட்பமானது, அசலமாய்—மலையாகி துணிபொருள் — அறுதியிட்ட பொருள், சோதிமயம் — பிரகாசத்தன்மை, பிணி — பாசம், துயர்க்கடல் — துன்பக் கடல், கடந்த வென்ற.

10 பராபரம்—மிகவும் மேலான பொருள், பிறங்கும்-விளங்கும், இரண்மயம்—பொன்றன்மை, ஒளிர்தல்—பிரகாசித்தல், திரம்—நிலை, உறையாது—தங்காது.

11. ஏகஉருவாய் — ஒருவடிவாகி, ஓகை — மகிழ்ச்சி சோகம்—தளர்ச்சி, மோகம்—மயக்கம், தொல்முனிவர்—பழையநற்றவ இருடிகள், உளம்—நன்மனம்.

12 விழைகலாது—விரும்பாது, கருமம்—காரியங்கள், மயல்—மயக்கம், வயங்கு அறிவு—யாவற்றினையும் அறியும் மெய்ஞ்ஞானம், இயலும்—இயங்கும், பாறி—சிதறி, எனைக் கருதும்—என்னையுன்னும்.

13 உரை—வாக்கு, இறப்பவர்—கடந்தவர், யோகம் புரிபவர் — யோகஞ்செய்பவர், நாடரிதாம்—ஆராய்ந்தறிய

முடியாததாம், புனிதஞானம்—சிவஞானம், அற்பு — அன்பு தெருள்—தெளிவு, செப்பியிடல்—கூறல்.

மாயாவிகார அத்தியாயம் முற்றும்.

## 10-வது தத்துவ தரிசனம்.

1 ஆய்சுடர்—அழகியஒளி, பிழம்பு-திரண்டது, இலிங்கம் — அருவுருவாகிய சதாசிவம், கணித்திடும் — எண்ணும் பிரமம்—பெரியபொருள், புலன்கெட—அறிவுப் பொறிகளை வென்ற, நோற்ற-தவம்செய்த, புண்ணியப் புலவர்-சிவபுண்ணியம் புரிந்த அறிஞர்.

2 துஞ்சும்—உறங்கிடும், வரைகளின் — மலையின்கண் கான்—காடு, ஆடி—முழுகி, அவித்து—கெடுத்து, வெய்ய தழல்—கொடிய நெருப்பு, அன்பு — பத்தி, காண்குதல்—காண்டல்.

3 மது—கள், நுகர்ந்து—அருந்தி, அறிவிலோர், நுண்ணறிவில்லாதவர்கள். பிரபஞ்சம்-உலகம், சுத்தர்—தூய்மையாளர், தோய்ந்து-படிந்து, தத்துவம் அறிந்தோர்—மெய்ப்பொருள் உணர்ந்தோர், ஒன்ருய் ஏகமாய், தம்முள்—தம்மகத்துள், காண்பார்—அகக்கண்ணுல் காண்பவர் ஆவர்.

4 எண்ணுறும் — எள்ளினின்றும் தோன்றும், எங்கணும்-எவ்விடத்தும், நண்ணரும்—அடைய முடியாத, சிவன் முத்தர்—பிறப்பெடுத்தற்கேற்ற வினைகளினின்றும் விடுபட்ட உயிரினையுடைய சிவஞானிகள், விண்முதலாய பூதம்—ஐம்பெரும்பூதங்கள், திருட்டி — சிருட்டி (தோற்றமுறச் செய்தல்).

5 வேறு—தனி, உரைத்திடில்—கூறினுல், ஆற்றினுல் வகையினுல், ஐயம்—சந்தேகம், தெருள்உற — தெளிவுண்டாக, சிந்தையுள்—மனத்துள்.

6 கண்மலர்—கண்கள், இவை, சோமனும் சூரியனும், அக்கினியுமாம், நண்ணியபொருள்—பஞ்சபூதபரிணாமமாகிய பொருள்கள், துன்ன--நெருங்கி நோக்க, மாட்டா—முடியா வாம், பிரமத்தால் சுடர்களையறிதல் கூடும் சுடர்களால் அப் பிரமத்தையறியமுடியாது.

7 நித்தியம் — எப்பொழுதும் (நாடோறும்) தத்துவ வித்தாயுள்ளோர்—தத்துவமுணரும் நல்ல வித்தகர் உத்தம தியானம்-மேலான நிலையில்நினைப்பது, பத்திசெய்து—அன்பு செய்து, பாலில் பால்கலத்தல்—இரண்டறக் கலத்தல்.

8 பார்-பூமி, அழல்-அக்கினி, வான்—ஆகாயம், வளி-காற்று, யாரும்—எப்பொருளும், ஒன்றும்—ஏகமாம், பரமா காயம்—பரமவெளி, தேர்வர்—தெளிவர்.

9 வச்சிரப்படை—வச்சிராயுதம், செகுத்தல்—அழித் தல், என்றும் — எற்றைக்கும், தகுதி—தரம், நிச்சயம்— உறுதி, இச்சை—விருப்பம்.

10 இன்னணம்—இவ்விதம், தெளிந்து—தெளிவுற்று பன்னரு ஞானம் — கூறற்கரிய சிவஞானம் பரிவுகூர்ந்து — அன்பு மிக்கு, மன்னும் — நிலைபெறும், வாழ்மின்கள் — பேரானந்தத்தில் வாழுங்கள்.

11 விழிநீர் சோர — கண்களினின்றும் ஆனந்தக் கண் ணீர் வடிக்க, துன்றிய — நெருங்கிய, குச்சு—பாவாற்றி, மன்றல் — மணம், வணங்கியேத்தி — வழிபட்டு வாழ்த்தி (துதித்து), கனிச்சி—மழுவாயுதம், புகலல்—கூறல்.

தத்துவ தரிசனம் முற்றும்

---

## 11—வது யோகமுரைத்தது

1 கோங்கு இளமுகிழ்—கோங்கிலவின் இளமையான அரும்பு, உட்க—அஞ்சுதலையடைய, வீங்கிய — பெருத்த, வேற்றடங்கண்ணி—வேல்போன்ற பெரிய கண்களையுடைய உமாதேவியாம், சாங்கிய யோகம்—ஒரு வகையான யோகம், நீங்கரும் யோகம்—சிவயோகம்.

2 யோகந் தன்னால் ஞானம் வந்தெய்தும் — யோகப் பயிற்சியினால் அறிவு வந்துறும், ஞானமும் யோகமும் ஒன்றிய நிலையில் நின்று வழிபட்டவனுக்கு யான் (சிவபெருமான்) வேறல்லாதவனாகி ஒன்றாகுவன். மற்று—அசைநிலை.

3 சூனியம்—வெறுவெளி (ஒன்று மின்மை), சொரூபம்—வடிவம், மோனம்—வாய் பேசாமை, சிந்திப்பார்—தியானம் புரிபவர், முற்றுமானவர்—நிறைவுற்றவர், பாவ யோகமெனவும் மகா யோகமெனவும் இரண்டாம்.

4 உளத்திருத்தும்-உள்ளத்தின்கண் பதிக்கும், ஏனைத் தேவர்—செத்துப் பிறக்கின்ற தேவர்கள், சாற்றலாமே—கூறல்கூடாது, அஞ்செழுத்து—பஞ்சாட்சர மந்திரம், ஓர்ந்தோர்—உணர்ந்தவர், இமையவர்—தேவர்.

5 என்னருள் தன்னால் என்னை இதயத்தில் காணப் பெறல் வேண்டும், இவுளி மாமகம்—அசுவமேதயாகம், கன்முகடு—மலையுச்சி, உன்னரும்—நினைத்தற்கரிய, என்னிலை—சிவமாகிய என்றன்மை.

6 அட்டாங்கமாவன:—இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பனவாம். இவை யோகாங்கங்கள் எனப் பெறும்.

7 இயமமாவது :— கொல்லாமை, வாய்மை, கள்ளாமை, புலன்வழி மனம் போக்காமை, குறளை கூறுதிருத்

தல் ஆம். நியமமாவது:—வேதமோதித்தெளிதல், பெரிய தவம் புரிதல், பொறுக்கொணு மகிழ்ச்சி, பூசனை புரிதல், சவுசம் (தீட்டு) ஆகும்.

8 ஆசனம்—இருக்கையினிருத்தல், பத்மாசனம் சோத்திகாசனம் முதலாகப்பல்வகைப்படும், மருளற— மயக்கம் நீங்க, குறங்கு—தொடை, மேலோர்—யோகிகள்.

9 நூலோர்—யோக நூலாய்ந்தவர், இயம்பும்—கூறப்பெறும், உவகை — களிப்பு, நவையிலது—குற்றமிலாதது, வளி—வாயு, பிராண வாயுவை (தவல்—கேடு.) நிறுத்துவது — ஆயாயமாம், பிராணயாமம்.

10 சிறந்திடு செபத்துடன் பொருந்தல் சகற்பமெனப்படும், செபமின்றி பிராணயாமம் புரியின் கற்பமெனப்படும். ஓங்காரமாகிய பிரணவமனுவுடன் காயத்திரிமனுவினையும் கூட்டி மூச்சிழுத்துவிடுவதும் பிராணயாமமாம். பிறங்கிட—விளங்க, முக்கால்—மும்முறை.

11 இரேசகம், பூரகம், கும்பகமென மூவகையாக வளியினை விடுவதும், இழுப்பதும், நிறுத்துதலும், பிராணயாமம் எனக்கைவருந்தகையோர் சாற்றுவர்.

12 பிரத்தியாகாரமாவது—பொறிகளைப் புலன்வழிப் போக்கிடாது அடக்குவதாம், உயர்ந்தோர்—கற்றறிந்த பெரியோர், தாரணையினியலாவது, சித்தத்தினை உந்தியினிடத்தும் மனத்திலிடத்தும் பிரமரந்திரத்திடத்தும் வலிமையுற நிறுத்துதல் ஆம், மைந்து—வலிமை.

13 தியானமாவது:- மானும் மழுவுந்தரித்த திருக்கரங்களுடன் என்னைச்சகுணத்தில் உள்ளத்துவைத்துவழிபடல் ஆம், சமாதியாவது நிர்க்குணமாய் ஓரிடமின்றி மனுச்செபித்தலின்றிச் சிவமாகிய என்னைத் தெளிவுற எங்குங்காண்டல் ஆம்.

14 பன்னிருதடவை பிராணுயாமம் பழகுங்காலம் கூறி ஞல் மாறுபாடுறும் விடயங்களைத் திருப்பும் பிரத்தியாகார காலம் அது பன்னிருதடவை புரியுங்காலமாஞல் யோகமாட்சி பொருந்தியதாரணையின் காலமாம்.

15 தாரணை பன்னீரண்டு செய்திடும் காலம் கேடில் லாத சிறப்புப் பொருந்திய தியானகாலம், தியானம் பன்னீ ரண்டு புரியின் சமாதியின் காலமாம் ஆரணம்—வேதம், ஏர் பெற—அழகுற

16 புறங்காடு—சுடுகாடு, தொழுவம்—மாடுகள் கட்டு தல் புரியும் இடம், தொக்குழி-கூடுமிடம், பொருவு-உவமை புரிந்திடல்—பண்ணுதல், தீதாம்—தீச்செயலாகும்.

17 யோகுசெய்யு மிடங்களாவன:—புண்ணிய யாற்றங் கரை, மலைக்குகைகள், பலராலும் கொண்டாடப்படும் இடம், திருக்கோயில்களில் அமைக்கப்பெற்ற இடம் ஆயவைகளாம் முதுக்குறைவு—பேரறிவு, முறை—நேர்மை.

18 ஐங்கரன்—ஐந்துகைகளையுடைய விநாயகப் பெரு மான், யோகியரை, ஆசிரியரை, நினைந்து சோத்திகம் குக்கு டம் பதுமம் முதலிய உவமையில்லாத ஆசனங்களிலமர்ந்து.

19 மூக்கின் முனையினை இருகண்களும் மூடாதபடி, பார்த்து, வஞ்சப்புலன்களை வழியடைத்துச், சொல்லப்பட்ட ஞானத்தினை நிறைத்து சிவமாகிய என்னை யன்பினெடு மனத் தினில் எழுந்தருளுவித்து ஆசையினேடு பணிபுரிபவர்க ளுக்கு எண்மையனுவேன் யான்.

20 சென்னிமிசை—தலைமேல், பன்னிருவிரல்—பன்னி ரண்டங்குலம், மூலமதில்—மூலாதாரத்தினில், மன்ன—நிலை யுற, வயங்கி—விளங்கி, சித்திஞுரு—ஞானத்தின் வடிவு.

21 இலங்குகதிர்—விளங்குகின்ற சூரியன், துலங்கிடு மெனை—பிரகாசித்தலைச் செய்யுமெனை, குடிலைசொல்லுமொழி

பிரணவம் புலங்கொள — அறிவுகொள்ளுதலைப் புரிய, புற்கலன்—ஆன்மா, விபுவாதல்—பிரமமாதல்,

22 ஓதுகமலம்—சொல்லப்பட்ட மனத்தாமரையினில், தொம்பதத்துள் ஆதிமத்தி யாந்தரகிதமாகிய கருணையாகிய தற்பதமிருத்தல் சிவஞானமாம் என்றபடி, தீது ஒருவல்—பாவங்களைப் பாசங்களை விடல்.

23 பாசுபத யோகமாவது:—தத்துவங்களைப் பிரணவ மந்திரத்தினால் சுத்தி பண்ணி ஆன்ம வடிவினையும் சிவமாகிய என் வடிவினையும் பொருந்துமாறு வைத்து, மெய்ஞ் ஞானப் பெரும் புனலின் மூழ்கி, மேலான வெண் ணீறு தரித்தல் ஆம். தோய—கலப்புற, சுத்தி—தூய்மை, உத்தமம்—மேன்மை

24 ஆரியர்—ஆசாரியர், பிரமசரியம்—மகளிர் விழைச் சின்றி யிருப்பது, பொறை—பொறையுடைமை, வாய்மை, கொல்லாமை, நடுநிலைமை, வேத மொழிகளை யுண்மையென வுரைத்தல்.பொய்ம்மையில்லாத விரதம் (நோன்பு) ஆயவை, அங்கங்களாகும்.

25 இன்னவை 24-ம் பாடலில் கூறப்பட்டவை, மன்னி யிடும்—நிலைக்கும். உன்னி—கருதி, வேறு அற—ஒன்றாக, மறையுண்மை—வேத வாய்மை, பன்னியிடின்—கூறினால் மூற்றும்—நிறைவுறும்.

26 அருத்தி—ஆசை. அவ்வளவு—அத்துணை, பவ்வம் —கடல், பலிகொண்டு—பிச்சையேற்று, துவ்வுறல்-உண்டல் வீட்டுலகு தோய்வார் — வீட்டுலகு அடைவார்.

முற்றும்.

---

## 11-வது யோகம் உரைத்தது.

27. இழவு—இழத்தல். பேறு—பெறல் (பெறுவது) நிகராக—ஒப்பாக, விழைவு வெறுப்பு—வேண்டுதல் வேண்டாமை, துணிகுற்ற—உறுதிகொண்டுள்ள, பழுது—குற்றம் எனது அன்பர் பவமில்லார்—என்னுடைய பத்தர்கள் பிறவிப்பிணியிலராவர்.

28 வரற்பாலனவாகியவை வந்துறின் அவற்றினைப் பெற்று மகிழ்ந்து பெறற்கரியன வற்றின்மேல் மனஞ்சேறலை விடுத்து, அறியாமையாகிய மயக்கம் நீங்கப் பெற்று பற்றும் பகையும் அற்று ஊரிற்றங்குதலும் செய்யாத நற்றவர் என்னடியடைவர்.

29 நல்வினைகள்—புண்ணியச்செயல்கள், சிவனிடததில் அன்பில்லார் செய்யும் நற்செயல்கள் தீவினைப் பாலவாய் வந்துறும். அளவற்ற தீவினைபுரியினும் என்மேல் அன்புசெயின் அவை நல்வினைப்பாலவாய் வந்துறும் (ஆல்-அசைநிலை)

30 வெம்மை — வெப்பம், தண்மை—குளிர்ச்சி, சுக துக்கம்—இன்பதுன்பம், நினைந்தரியகன்மம் — எண்ணமுடியாதசெயல், செம்மை—நேர்மை, யான் — சிவனுகியயான், கருமமே—வினைகளே, தலைமைசெய்யும்—மேம்பட்டதாம்.

31 மனத்தினையிருத்தி — பொறிபுலன்வழிபோகாது மனத்தினை யொருமுகப்படுத்தி, உயர்கன்மம் — உயரிய செயல்கள், தன்னஅல—தன்னுடையன அல்ல (சிவச்செயலே என்று) மாய — ஒழிய, உன்னரிய — கருதமுடியாத, அதை—அவ்விருளை.

32 பெற்றம்இவர் — இடபத்தில் ஆரோகணித்தல், பேணுதல்—விரும்புதல், மற்றைத் தெய்வங்கள்—செத்துப் பிறக்கின்ற தேவர்கள், வழுத்தல் — துதித்தல், குற்றமுறு பேர்க்கதி—நரகங்கள், முற்றுணர்வினோர்—பேரறிஞர்கள்.

33 வானவர்கள்—தேவர்கள், வழுத்தியிடுபோழ்து—துதிக்கின்றசமயம் (காலம்) யான்என — சிவனுக, என்னி லுறுமுத்தி—சிவப்பேறு, தத்தம்உரு-தங்கள் தங்களுடைய தேவவடிவாகிய சகுணம், மோனம் — மௌனம், வாய் பேசாமை.

34 கறங்கு—காற்ருடி, திரிகின்றது — சுழல்கின்றது, கரு—சூல், பலபேதம்—பலவகை, செயலும் — ஆற்றலும், எற்ருெழுது—என்னை வணங்கி, அடைதிர்—எய்துவீர், மாது ஓ இவ்விரண்டும் அசைகள்.

35 சுற்றம் — உறவினம். (சுற்றியிருத்தலின்) விட்டு —பற்றுநீங்கி, தொக்கபுலன்—ஒருசேரவுள்ள ஐம்புலன் கள், எனை—சிவமாகிய என்னை, வழுத்தினர்—முற்றெச்சம் வழுத்தி, தக்கவர்—மேலோர், மிக்ககதி—வீடு.

36 கருமிகள் — கருமகாண்டிகள், ஏற்றுவர்—வரிப்பர் கற்ருேர் — உறுதிநூல்களைக்கற்றுணர்ந்தவர். ஆதவன்—சூரியன், தரு — மரக்கட்டை, கல் — கருங்கல் செங்கல், தெருள்—தெளிவு, மலர்சாத்தி—மலர்களைச்சொரிந்து.

37 கற்றுயரும்ஞானம் — கற்றதனுல் உயர்தஅறிவு விரத்தி—வயிராக்கியமுடன் பற்றுவிடல், பெட்பு—விருப்பம் சதருத்திரியம் ஓம் என்பன சிவபெருமானையடையும் பெரு மையுடைய மந்திரங்கள், தெற்றெனெ—தெளிவாக.

33 தத்தமவொழுக்கு — தங்கள் தங்களுக்கெனவிதிக் கப்பட்டசீலம், சார்ந்து —அடைந்து, ஒன்றுவர்—பொருந்தப் பெறுவர், விடுத்து—தாமாவே நீக்கி, பத்தியுளர் — அன் புடையவர், படர்கிற்பார்—செல்லுவார்.

39. இடை விட்டு—நடுவிலே செய்யாமல் இருந்துவிட்டு, உலந்தவர்—இறந்தவர், சோகம்-தளர்வு, துய்த்து—நுகர்ந்து வாகை—வெற்றிமாலை, மறையோர்மரபு—அந்தணர் குலம், முத்தியிடைசேர்வர்—வீட்டுலகினை அடைவர்.

40. ஓவறும்—ஓறிவற்ற, இடையூறு—துன்பம், மென் மெல-மெதுமெதுவாக, பாவமறும்-தீயவை ஒழியப்பெறும் தாவில்உயர்ஞானம்—கேடில்லாத சிவஞானம்.

41. புன்றொழில்—இழிந்தசெயல், நன்று அறிவு நல் லுணர்வு, மன்றல்—மணம், கமழும்—வீசும், மாலே—விட்டு ஞுவை. எனே—சிவமாகிய என்னே, ஒன்றென—ஏகமாக கதியின்உய்ப்பேமெம்—சிவகதியினிடத்துச் சேர்ப்போம்.

42. இயம்பும் இறையோனே—இங்ஙனம் உபதேசித் தருளிய சிவபெருமானே, முனிவோரும்—இருடிகளும். பதம்—திருவடி, நனிபோற்ற—மிகவுந்துதிக்க, குன்றவரி வெஞ்சிலே குழைத்தவன்—மகாமேருவில்லினே வளைத்தவன்

43. பையரவகங்கணம்-படமுடைய பாம்பாகிய கங்கண மெனுமணி, ஐய கமலம்—அழகிய திருவடித் தாமரை, அகத்திலுள்—மனத்திடத்து, முனிவோரை— முனிவரர்க்கு (உருபு மயக்கம்) வையகமளந்த முகில்—உலகமளந்த திரு மால்

44 மையணி மிடற்றிறை—நீலகண்டனுகிய சிவபெரு மான், ஒய்யென—விரைவாக மறையின் உண்மை—வேதங் களின் மெய்ம்மை, கையுறு நெல்லியின் கனி—உள்ளங்கை நெல்லிப் பழம், உயர்வியாதன்—தவவொழுக்கால் மேம்பட்ட வியாசன்.

45. மலர்தலேயுலகெலாம்...........அலர்முலே உலகமின் ற வளாகிய உமாதேவியம்மையார், பாகன்—பக்கத்திலுடைய சிவபெருமான், அறைந்த—உபதேசித்தருளிய, ஞானத்தை— ஞானப்பொருளே, உலேவு—வருத்தம்.

46 அன்னோன்—சங்கவர்த்தவன், இவன் மாணுக்கன் சத்திய விரதன். இவன் வழியில் புலகனும் கோதமனும் மாணுக்கராக வாய்த்தனர், தன்னிலே யுணர்தல் — ஆன்ம ஞானமுறல்.

47 அங்கிரா வென்பவன் பரத்துவாசனுக்கோத, குற்ற மில்லாத கபிலர் வைகிடவனுக்குரைத்தனர், சிங்கல்—ஐயம், என் தந்தை—பராசரன்.

48 எண்ணருந்தவம்-கணக்கற்ற அரியதவம், பராசரன் வான்மீகி முனிவனுக்கோதினன், மண்ணளந்தோன் — திருமால், மறுபவம்—மற்றைப்பிறப்பு, அருச்சுனன் — பாண்டு குமாரர் ஐவருள் ஒருவன்.

49 பண்டருதேமொழி—பண்ணிசை போன்ற தேன் போலினிய மொழியினையுடையபார்வதிப்பிராட்டியார், செவியிற்றுக்கலும்—செவியின்கண்படலும், விண்டன—விலகலாயின, வெவ்வினை—கொடியபாவங்கள், தொண்டர்—அடியவர்,

50 காதல்கூர்மெய்ப்புதல்வர்—அன்பு மிக்க மெய்மைப் புதல்வர்கள், கிளைஞர்—சுற்றத்தினர் மாதர்—மகளிர் (பெண்டிர்) மகிழ்ந்துரைத்த—களிப்புற்றுரைத்த, தீந்தேன்—இனிய தேன், நாதன்றனதுசீர்—சிவபெருமான் பெரும்புகழ்,

51 இறையழகை — சிவத்தின்வனப்பை, மணம் — வாசனை, எணணல்—நினைத்தல், ஓரைந்து—பஞ்சாக்கரமனு, நாதன்நாமம் நமச்சிவாய என்பதை யறிந்து கடைத்தேறுங்கள்.

52 கேட்டு — மனங்குளிரக் கேட்டலைச்செய்து உவகை மீதூர—களிப்புமிக, கண்ணீர்சோர—கண்ணினின்றும் நீர்சொரிய, பொன்றல்—அழிதல், ஒன்றல்-பொருந்தல், உவப்ப—களிப்பு.

53 திருவே—ஞானச் செல்வமே! பேரருள்—பெருங்கருணை, உய்ந்தேம் — பிழைத்தேம், யாழ்முனி — நாரதன், குலிசப் படையோன்—வச்சிராயுதந் தாங்கிய இந்திரன், பரிக்கும்—தாங்கும், நாகணையான்—பாம்புப் படுக்கையான்.

54 சிவ கீதை — சிவனைப் பற்றிய ஞானப் பொருள், புனிதம்—தூய்மை, துகள்—குற்றம், வினையினீங்கி — இரு வினைகளின் தொடர்பு விடுபட்டு, விபுவாகி-பெரும் பொருளாகி, கமல பாதம்—திருவடித் தாமரை.

யோகமுரைத்தது முற்றும்.

---

## 12-வது வியாசர் கருமமுரைத்தது

1 பழுத்த கேள்வி — முதிர்ந்த கேள்வி ஞானம், தெளிந்து—தெளிவுற்று, தனி பகர்ந்த வொழுக்கம்—தனித்துக் கூறிய மநு நெறி, அழற் கூட்டி—அக்கினி தேவனுக் குண்பித்து, மறையவர்கள் தன் புதல்வர்க்கு ஐயாண்டிலும் எட்டாண்டிலும் பூணூல் போடுக, போட்டால் வேதம் பயிலலாம்.

2 முன்னூல்—முப்புரி நூல், கருமம்—வினை (கிரியை) முஞ்சி—முஞ்சிப் புல்லாலாகிய கயிறு, தண்டம்—பலாசங் கோல், கொன்னே—வெறுமனே, வதனம்—முகம், கற்றோய் அறுவை—காவியாடை.

3 கலை—மானின் ஒருவகை, கற்று—கன்றினையுடைய பசு, புனைக—தரிக்க, உபவீதமாகிய முப்புரி நூலினை வலப் பக்கமாகப் புனைதல் வேண்டும். இடக்கை மேலாகத் தரித்தல் பிராசினுவீதம் என்பராம்.

4 முப்புரி நூலிடமிட்டு உயரிய கருமம் செய்தல். நூல்களிற் கூறப்பட்ட பிதிரர்கட்குச் சிரார்த்தாதிகள் கொடுக்குமிடமின்றி யாகாவாம், வலமாகத் தரித்து நற் கருமம் செய்தல் நெறிமுறையாம், குசை—தருப்பை, சிறப்பு-மேன்மைத் தரம்.

5 வில்லம்பலாசம்—வில்வமும் புரோசுமாம், விழுமிது —மேலானது, மகம்—வேள்வி மல்லல்—வளம், அடி

தொட்டு — பாதந்தொடங்கி நுதல்—நெற்றி புல்லும்—பொருந்தும், தோல் — மேல்பட்டை, வழன்றல்—சீவுதல், ஆகாது—கூடாது.

6 அழலுக்கு ஊட்டி — தீக்கடவுளுக்கு உண்பித்து காலையிலும், மாலையிலும, நடுப்பகலிலும் செலுத்தப்படும் அவற்றினைப்படைத்தல் முறையாகும். இழிந்தோர்-தாழ்வுற்றவர், இந்நெறி மறையவர் மன்னர் வணிகர்எனும் முத்திறத்தினர்க்காம்.

7 தெண்ணீர்—தெளிவுற்றநீர், தேவர்கட்கும், முனிவரர்க்கும், பிதிரர்க்கும் நீரிறைற்றர்ப்பணஞ் செய்தல்கடனும் தேன்பொருந்தியமலர்கொண்டு அம்மையப்பன்பாதங்களையர்ச்சித்துவணங்கிப் பின்பெரியோர்தாள் வணங்கல் இல்வாழ்வார் கடப்பாடாம்.

8 அபிவாதனம் — முன்னிலையில் வணங்கியுரைத்தல் தபுதல் இல்லா—அழிவில்லாத, ஞானந்தகுருரவன்-ஞானாசிரியன், நாளும்—நாடொறும், விபு—மேலானவன், பழிச்சல் துதித்தல், வேதியர்—அந்தணர், கபிலப்பசு—காராம்பசு, தொழுதல்—வணங்கல்.

9 மறையோர்—வேதியர், நன்மைகொல்லோ-நலமா? பீடை—துன்பம். நீதி-ஒழுங்காகிய நடுநிலை, ஆரோக்கியமோ—சுகமோ, என்க—என்று கூறுக.

10 ஓதுவித்தோர்-உபாத்தியாயர், குரவராவார் தந்தையும், அண்ணனும், அரசனும். அம்மானும், அம்மானுக்கம்மானும் தாய்தந்தைகளும், பாட்டனும், தன்வகையில் மூத்தவனும், தந்தையுடன் பிறந்த பெரிய தந்தையும் சிறிய தந்தையும் ஆகியவர்களாம்.

11 தாயாராகப்பாலார் :—தாயினைப் பெற்ற தாய், பாட்டி, சிற்றன்னை பேரன்னை, தந்தைகளைப் பெற்றவள்,

வளர்த்தவள். அத்தை, குரு பத்தினி, பேரரசி, தன்னைப் பெற்றவள்—ஆயவர்கள்.

*12* தாயார் பத்துப் பேரவர் ஆவர், முக்கரணம்—மனமும் வாக்கும், காயமும் ஆயவை, பிழைத்தோன்-தவறு செய்தவன், தசை — மாமிசம், தழல்—அக்கினி, உளரேயெனினும் — உள்ளவர் ஆனாலும், சூடார் — சூட்டிக் கொள்ளார்.

*13* தாயிற் சிறந்த தெய்வமில்லை தந்தைக்கு மேலான ஆசாரியன் இல்லை என்றால் இவர்களுடைய பாத பூசனை புரிபவர் சுவர்க்கவுலகில் சுரராய் வாழ்குவர்.

*14* இருமுது குரவர் அருள் பெறுமற் செய்யுங் கருமங்கள் பயன் தரமாட்டாவாம். கருத்தன் — அரசன், சமரில் ஆவி முடிந்தவர்--போரில் உயிர் போனவர், இந்திர திருவர்-இந்திரச் செல்வர், வானிடை—சுவர்க்க வுலகினிடத்து.

*15* நந்தல் – கேடு. நன்மகம்—நல்ல வேள்வி, வணங்கல் ஆகா—வணக்கம் புரிதல் கூடாவாம், எழுதல் வழக்காம், வேந்து-மன்னவன், இளையவனானாலும் அவன்றன் திருவடி வணங்கல் நெறியுடைத்தாம்.

*16* வேள்புரிபவன்—இளையனாயின் அவன்றன் நாமங் கூறியழைக்கலாகாது, ஏர்கெழும் அரசர்—அழகுடன் விளங்கும் மன்னவர், நாய்கர்—வணிகர், பின்னவர்—நாலாம் வருணத்தவர், பார்புகழ் மறையோர் — உலகோர் போற்றும் வேதியர்.

*17* பாழி—பெருமை, வாழியர் என்பது அல்லால்—வாழ்க என்று வாழ்த்துவதை யல்லாமல், ஏழையர்-வறிஞர், இரு பிறப்பாளர்—துவிசர் (வேதியர்), அங்கி—நெருப்பு, அதிதி—விருந்தினர், பண்டறிவுண்மையால் அறிந்து வந்தவரும் அஃதறியாமல் வந்தவரும் ஆகிய புதியவர்.

18 வித்தை—கல்வி, நிதி—பொருள், ஒத்துளோன்—ஒருசேரப் பெற்றவன், வித்தையானது—கருமத்திலும்மேம்பட்டது, ஆயுள்மேவினோர்—காலத்தான் மூத்தவர், சித்தி—சித்திக்கப் பெற்றது, சுற்றம்—கிளை (உறவு)

19 பொருள் படைத்தவன்—பொருள் தேடிவைத்துள்ளவன், வழிவிட்டு விலகிச் செல்லற்பாலர் மறையவர், மன்னர், பெண்டிர், வயோதிகர், குருடர், பிணியாளர் ஆயினோர், போதருகின்றோர்—செல்லுபவர், புலமைத்து—அறிவுடைமைத்து.

20 பிட்சாந்தேகி, பிட்சாம்பவதிநற்றேகி, பிட்சாந்தேகி நற்பவதி என்று மறையவரிடத்தும் மன்னரிடத்தும் வணிகரிடத்தும் கேட்டல் வேண்டுமெனல் வேதநெறியாம்.

21 எள்ளார்—இகழ்ச்சி செய்யாதவர், தன் வருணத்துள்ளார்—தன்சாதியினர், ஐயம் ஏற்றல்—பிட்சை எடுத்தல் தூயன — தூய்மையுடையன, தாயத்தார் — பங்காளிகள், தொழு குரவர்—தொழத்தகும் ஆசாரியர், இழிவு—தாழ்வு.

22 ஏற்புழி—எடுக்குமிடத்து, மற்றொன்றின்மனம்விடாமல்—வேறொன்றிலும்மனஞ் செல்லாதவாறு, பையென—மெதுவாக, பயிர்ப்பு—அருவருப்பு, ஒய்யென—விரைவாக, வடக்கு நோக்கியுண்டல் கூடாது.

23 உண்ணுநெறி கால் கை முகமெனும் ஐந்தும் ஈரம் புலரா முன்னம் உணவு அருந்துக என்பதாம். உண்ணுமுன்னரும் பின்னரும் ஆசமித்தல் வேண்டும். சிவன்றிருவடி சிந்தையில் வைத்தருந்துக.

முற்றும்

---

## 13-வது சுத்தாசமன முரைத்தது

1 உண்ணும்போதும், நீர் அருந்தும்போதும் துயின்று லும், உறங்கினாலும், நீராடினாலும், தெருவில் நடந்திடினும், ஆடையைக் கட்டினும், மகளிர்விழைச்சின்கண்ணும், வேத மோதினாலும் மலசலமோசனஞ் செய்தாலும் சுடுகாட்டினைப் பார்த்தாலும் கால்களைக்கழுவிநீர் உறிஞ்சுதலைச் செய்க.

2 சுருதிநூலோர்--வேதநூலோர், இழிகுலத்தினர்—தாழ்ந்த சாதியினர், பழுது—குற்றம், பகரின்—பேசினால், உடற்புண்ணீர்—சீழ், விதித்த—விதிக்கப்பெற்ற. ஆசமனம்—உழுந்தளவினதாக நீரினையுள்ளங்கையில் விடுத்து அக்கை யின் அடிவழியாக உறிஞ்சுதல்.

3 புனிதம்இல் ஆடை—அழுக்குவத்திரம், வனிதையர்—பெண்கள், வெந்நீர்—வெப்பமுடைய நீர், உறைப்புனல்—தங்கிகிடக்கும்நீர், ஆற்றுதல்—செய்தல், தீதுஆம்—கொடுஞ் செயலாகும், ஆல்—அசைநிலை

4 தூசு—புழுதி, உடுத்த சோமன்-கட்டியுள்ள ஆடை. தோய்ந்தில—கழுவப்பட்டில, மன்னிய—நிலைபெற்ற, நன்கு—நன்மை பொருந்த.

5 ஆசனம்—இருக்கை, படியினில்-பூமியில், கிடந்தும்—உறங்கிக்கிடந்தும் எண்டிசை—எட்டுதிக்குகள் மார்பின் நூல்—மார்பில்பூண்டிருக்கும் பூணநூல், களங்கம்—அழுக்கு விரவுநீர்—கலந்தநீர்.

6 பின்னவன்-நாலாம் வருணத்தவன், புனிதமில்லான்—தூய்மையில்லாதவன், பெட்பு—விருப்பம், கலங்கல்நீர்—தெளிவின்றியுள்ள கலங்கியதண்ணீர், வயங்கும்—விளங்கும் நன்னெறி—நல்லவழி.

7 இதயம்—இருதயம் (உள்ளம்) புனல்—ஆசமனம் மண்ணியநீர், நந்து—சங்கு, களம்—கண்டம் (கழுத்து) உந்து

நீர்—உரிஞ்சிய நீர், உவந்து—மகிழ்ந்து, புந்திகூர் பின்னோர் அறிவுமிக்க நாலாம் வருணத்தவர்,

8 பிரமதீர்த்தம் — மேலானதீர்த்தம், பொங்குற்ற—மிகுதியும் உற்ற, மூலம்—அடி, மாதவரும்—பெரிய தவமுடையரும், என்பர்—என்றுகூறுவர், மாது ஓ அசைநிலை,

9 தெண்ணீர் — தெளிந்தநீர், விரல்மூலம்—விரலடி, அப்பெயரது — தெய்வதீர்த்தம் முனிவர்தீர்த்தம் என்னும் நாமமுடையது, உள்ளங்கை—அகங்கை, சோமதீர்த்தம்—சந்திரதீர்த்தம், மதிவல்லோர்—அறிவுவன்மையுற்றவர்.

10 மும்முறை — மூன்றுதடவை, ஒற்றி — சேர்த்தி, அகுட்டம்-பெருவிரல், தர்ச்சினி—சுட்டுவிரல், பொருவுஅரிய—உவமையில்லாத, இருபுறமும்—இரண்டுபக்கங்களும்,

11 சிறுவிரல் — கடைசிவிரலாகிய சிறுவிரல், நீவி—தடவி, ஒற்றி—தொட்டு, குவியா—குவித்து, உரம்—மார்பு, நுனி—முனை. மொழிவர்—கூறுவர்.

12 அருந்துவதற்கு—பருகுவதற்கு, மும்மைத்தேவர்—பிரம விட்டுணு, உருத்திரர், அம்ம—வியப்பு (இடைச்சொல்) காளிந்தி—யமுனையாறு, மருத்துவர் — அச்சுவினிதேவர்கள், உவக்கும்—மகிழும்.

13 அங்கிவளி—நெருப்பும் காற்றும், தேவர்யாரும்—முப்பத்துமுக்கோடி தேவர்களும், புருடன்—புருடதத்துவம், நவையறு—குற்றந்தீர்ந்த, துவலை—நீர்த்துளி, மிச்சில்—எச்சில், இகழற்க—இகழ்ச்சி செய்யற்க

14 சோமபானம்—ஒருவகையான உண்ணும் திரவப் பொருளாம், சிதைவு—கேடு, அடைகாய்—தாம்பூலம், வதியுற்ற — தங்குதல்பொருந்தியுள்ள, இருந்தடத்தோள்—பெரிய விசாலமான தோள்.

15 தாம்பிரம் — செம்புஎனும்உலோகம், மேவில் — பொருந்தில், உண்கலம்—உண்ணும்பாத்திரம், தரையின் — பூமியின்கண், தண்புனல்—குளிர்ந்தநீர், புனிதம்—தூய்மை.

16 ஆறலைகள்வர்-வழிப்போவாரைமறித்துக்கொள்ளை புரிபவர், புவி—பூமி, வழக்கு—செல்லுதல், ஊறுதல்—சுரத்தல், கானத்து—காட்டிடத்து, வீறுயர்பொருள்—பெருமையோடு உயர்ந்த திரவியம், குறையுறு—குறைவுறமாட்டா.

17 முப்புரி-மூன்றுவடமாகவுள்ள பூணநூல், வலச்செவி —வலக்காது, மூலம்—மூலமந்திரம், பகலில் வடக்கு நோக்கியும், இரவில் தெற்குநோக்கியும் மலசலங்கழித்தல் வேண்டும்.

18 மலசலங்கழிக்கலாகா இடங்களாவன:- மரநிழலின் கண்ணும், நதியிடத்தும், சதுக்கத்திலும் (சந்திகள்—நாற் சந்திகள்) கிணறு, மலையுச்சி, தேர்ஓடும்வீதி, புற்று, சுடுகாடு, பசுபுற்றரை, விளைநிலம், கரியுமி உள்ள இடம்.

19 பசுவின்றொழுவம், உழுதபுழுதி, களர்நிலம், நந்தனவனம், நீர்த்துறை, திருக்கோயில்வழி, ஆகிய இடங்கள் ஆம். நடக்கும்போதும், காலிற்பாதக்குறடுதரித்தும் குடைபிடித்துக்கொண்டும், சூரியன் சந்திரன் நட்சத்திரங்களைப்பார்த்துக் கொண்டும் மலசலம் விடலாகாது.

20 நின்றுகொண்டும், பாழ்கோயிலிடத்தும், பெருங் குழியிலும், பசுக்களுக்குமுன்பிலும் ஆசாரியர்முன்பும் மலசலங் கழித்தோர் கொடிய நரகத்திடைப்பட்டு வருந்துவர்.

21 சௌசம்பண்ணற்கு ஆகாமண்களாவன கலங்கனிரையுடைய சேற்றுமண்ணும், கோயிலிடத்துமண்ணும், குளத்துமண், தீப்பற்றியெரித்த காட்டிடத்துமண், தூய நெறியினிடத்துமண் ஆயவைகள் கூடாவாம்.

